ல-ஆகாயத்திற் றோயாத சலத்திற்றோயுமுப்பு. இவைகள் போல,—அருதியாக வைத்திடும்-நித்தியமாய் நிச்சயிக்கப்படும்.

வாரிக்கொப்பு பதி, நீருக்கொப்பு பசு, லவணத்துக்கொப்பு பாசம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அநாதியாகிய முப்பொருள்களுட் சிவமுயி ரிரண்டும் நித்த வியாபகசித்தாதற் பொதுமையா னொக்குமாயினும், அவற்றுட் சிவம் அதிசூக்கும சித்தாதலின் ஆணவ அசத்து நிற்றலாற்றாது, உயிர் தூலசித்தாதலின் அதனெதிர் முனைந்து நிற்றலாற்று மென்பது. கடலு நீருந் தூயனவேயாகவுங் கடலின் மருவலாற்றாது கடனீரின் மருவிநிற்கு முப்புப்போலு மாகலான் ஆணவத்துக்கு வேறு காரண மில்லை யென்பதாம்.

இலவணமென்பத னிகரம் விகாரத்தாற் றொக்கது.

'சுத்தமெய்ஞ் ஞானமேனிச் சோதிபா லசத் தஞ்ஞான மொத்துறு' என்ற விதனுனே முன்னை யிருகூற்றையு மொருவாற்றானே வலியுறுத்தவாறு மாயிற்று.

தூலசித்தெனபது உயிரென்னும் பெயரானு மூவமையானும் பெறுதும்.

அற்றேல், சிவ மதிசூக்கும சித்தென்பதும் உயிர் தூலசித்தென்பதும் எற்றாற்பெறுது மென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இப்படி மலருமணமும்போலச் சரீரத்திலேதோன்றிநின்ற திகிறதுகா னல்லோ அந்தச் சிவமென்ற பரிணமவாதியை நோக்கிச் சரீரசம்பந்தம் பசுமுதலுக் கொழிந்து பதிமுதலுக் கில்லையென்று அருளிச்செய்கிறார்.

சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபா லசத்தஞ்ஞான மொத்துறு - நின்மலமாயிருக்கிற வுண்மைஞானமே திருமேனியாயுள்ள சிவசொரூபத்திலே அசத்தாகிய பாசஞ் ஜடமாகையாலே சென்று பொருந்தமாட்டாது.—குற்றமெல்லா முற்றிடு முயிரின்கண்ணே - இந்த அஞ்ஞானங்களாகிய பாசம் ஆன்மாவினிடத்திலே பொருந்திநிற்கும். இவனுக்கு இந்த அஞ்ஞானம் எந்தஅவதரத்திலே கூடினது என்ற பரிணமவாதியை நோக்கி யருளிச்செய்கிறார் —உத்துளபோதோவேறுஞ் சதசத்து மசத்துமெல்லாம் வைத்திடுமநாதியாக வாரிநீர்லவணம்போல - பதிமுதலுள்ளவன்றே அந்தப் பதிக்கு வேறாயிருக்கும் ஆன்மாவும் பாசமுமுண்டாகையாலே இவை மூன்று முதலும் அநாதியென்றே வேதாகமங்கள் சொல்லும். அதென்போல வென்னில்? ஆழமகலமுண்டாகிய கடலும் அதிற் றண்ணீரு மதி லுப்பும்போல.

இதற்குப் பிரமாணம் பரிணமவாதிமறுப்பு சங்கற்பநிராகரணம்., "பிறர்க்கெனிற்பிறரும் பிறர்க்காம்பொருளும் - பொருட்கமை கருவியு மதற்குபாதானமுஞ் - செய்கையுமொன்றாரைவகைத்தாகுடு-மாறுச்சைவர்கூறுமொன்றால்-நின்சித்தாந்தமவசித்தாந்தமென்" என்றும், சிவஞானபோதம், எ-சூ, ரு-வெ, மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத, லஞ்ஞான முள்ளமனைதல்காண்—மெய்ஞ்ஞானந்தானே யுளவன்றேதண்கடல்நீ

ருப்புப்போல், தானே யுளமுளவாய்த் தான்" என்னுமதுங் க ண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, அநாதியே சிவனுக்கு நின்மலமாயி ருக்கிற ஞானமே திருமேனி யாகையால் அவனிடத்தில் அஞ் ஞானமாயிருக்கிற பாசம் பொருந்தாதென்றும், அநாதியே யா ன்மாவினிடத்திலே பாசங்கள் பொருந்தி நிற்குமென்றும், சிவ னுள்ளவன்றே ஆன்மாக்களும் பாசங்களும் ஆக மூன்று முத லு மநாதியே நின்றமுறைமை சமுத்திரமும் அதிற் றண்ணீரும் உப்பும்போலும் என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

சுத்த மெஞ்ஞானமேனிச் சோதிபா லசத்தஞ்ஞான மொ த்தறு - அநாதியாகிய முப்பொருளுட் சிவமுயி ரிரண்டு நித்த வியாபக சித்தாதற் பொதுமையா னொக்குமாயினும், அவற்றுட் சிவ மதிசூக்கும சித்தாதலி னுண்டசத்து நிற்றலாற்றாது.—உ யிரின் கண்ணே குற்றமெல்லா முற்றிடும் - உயிர் தூல சித்தா தலி னதனெதிர் முனைத்து நிற்றலாற்றும்,— சத்துளபோதே வேறுஞ் சதசத்து மசத்துமெல்லா மாநாதியாக வைத்திடு ம்-சத்தாகிய அச்சிவமென் றுள்ளதன்றே வேறாகிய சதசத்தா கிய வுயிர்களு முள்ளவாக அவ்வுயிர்களை யசத்தாகிய பாசங் க ளநாதியாகப் பற்றி நிற்றல்,—வாரிநீர் லவணம்போலும்-கட லுநீருந் தூயனவே யாகவும் கடலின் மருவலாற்றாது கடனீரி ன்மருவிநிற்கு முப்புப்போலு மாகலா னுண்டைக்கு வேறுகா ரண மில்லை.

## மறைஞானதேசிகர் உரை.



ஆதலா லான்மா சுதந்தரனல்ல வென்றதூஉங் கர்த்தாவே சுதந்திர னென்பதூஉ முணர்த்து கின்றார்.

அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்றலானுங், குறிபெற்ற சித்துஞ்சத்துங் கூறுவ ருயிருக்கிச, னெறிநித்த முத்தசுத்த சித்தென நிற்பனென்றும், பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே. (ச)

(இ-ள்) அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்றலானுங் குறிபெற்ற சித்துஞ்சத்துங் கூறுவருயிர்க்கு ஆன்மாவுக்குக் கூறுவம் யாதென்னில்? ஒருத்தரறிவிக்கத் தான் பின் பதனையறிகையாலும், அஃதெக்காரணத்தாலென்னில்? சதசத்தென்னும் பெயருண்டாகையால் அறிவித்தபோது அறிகையா லறிவாயிற்று. அல்லாதபோ தறியாதிருத்தலா லறியாமை யாயிற்று. என்னவே அநித்தியமு நித்தியமு மென்று கூறியதாம். அழிவதாயிருக்கிற சடவஸ்துக்களைப்போல வழிந்து போகாம லெக்காலமு நித்தியமா யிருக்கையாலே நித்தியமென்று சொல்லப்படும், ஆன்மாவுடன் கூடிநின் றுன்மபோதமாகச் சீவித்த தத்துவங்களாகிய பசுபோத மழிந்து போகையா லநித்தியமென்று சொல்லப்படும். இந்தமுறைமையாயிருக்கு மான்மாவுக் கடையாள மறியாமலு மறிவு நித்தியமு மநித்தியமு மாகிய சதசத்தென்று சொல்லுவர்.

ஈச னெறிநித்த முத்த சுத்த சிவனுடைய நெறியாதெனில்? ஒருக்காலு மழிவில்லா தவனுமாய் அநாதியே மலமில்லா

சித்தென நிற்ப னென்றும் — தவனுமாய்ச் சுத்தனுமாய்ச் சிறப்பினை யுடையதாய்ச் சித்தென்னும்படி பெயரைப் பெற்று நிற்பன். அஃதன்றி

பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே. — அந்தச் சர்வஞ்ஞனானவ னான்மாக்க ளிடத்து வைத்த காருண்ணியத்தினாலே பின்பு ஞானாசாரியனை யதிட்டித்துக் கொண்டு சிவதீக்கையினா லான்மாக்களுக் குண்டாகிய வாணவாதி பாசங்களை விடுவித்து மோட்சத்தை யடைவிப்பன் எ-று.

இதற்குக் கிரணாகமத்தும் வாயவ்யத்து மறிக. (அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

கீழ்ச்சொன்ன மூன்று விருத்தத்தின் பொருளும் மேல் விருத்தத்திலே தொகுத் துரைக்கின்றது.

அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்றலானுங் குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிர்க்கு-ஆன்மாவானவன் சிவனறிவிக்க வறிகையினாலும் நாசமில்லாம னிற்கையாலு மாணவத்தா * னிரோதிக்கப்பட்ட சித்துரூபனும் நித்தியனுமென்று சொல்லுவ தான்மாவே யென்றறி.—ஈச னெறிநித்த முத்தசுத்த சித்தென நிற்பனென்றும்- சிவன நித்தியனு மநாதிமுத்த சுத்தசித்து ரூபனுமாக நிற்பனென வறிக. ஆகையா லான்மாக்களுக்குஞ் சிவனுக்கு மிவ்வாறு பேதமுண்டு.—பிறிவிப்பன் பெத்தமெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே- அநாதிமுத்தனாகிய சிவன் ஆன்மாக்களுக்குப் பந்தமாகிய வாணவ மாயை கருமங்களைத் தன்னுடைய சமவாயசத்தியினாலே நீக்கிடுவன், நீக்கவே ஆன்மாக்கள் சாதிமுத்தராவர்கள்.

இதனால் அசித்தானது அசத்தாகையால் சித்தாகிய சத்தின்முன் னில்லாததாகையால் சத்து சித்து ஸ்வரூபமாகிய சிவன் றனக் கன்னியமாக வொன்றை யறிவதுமில்லை. பிரபஞ்சஞ் ஜடமு மசத்துமாகையா லந்தப் பிரபஞ்ச மொன்றை யறிவதுமில்லை. † பரிசேஷாத் நித்தியமாகிய சிவத்தையு மநித்தியமாகிய ப்ரபஞ்சத்தையு மறிவ திவ்விரண்டுக்கும் ‡ பிரதக்கான வான்மாவென்று கூறியது.

தஉக்தம் ஶிவஜ்ஞாநபோதே — நாவிச் சித்ஸ தஸ்யாக்ஞா நவித்தத்ஸ உபஹந்யதே | ப்ரபஞ்சஶிவ யோர்வேத்தா யதாத்மாதயோர்ப்ருதக்.

அன்னிய மிலாமை யரற்கொன் றுணர் வின்று, மன்னியமி லாவசத்தைக் காண்பவனே,—லன்னியமாய்க், காணு மவன் முன் கதிர்முன் னிருள்போல, மாணுவசத்தின்மை மற்று.

* நிரோதித்தல்-தகைதல், † பரிசேஷாத்-ஒழிவினாலே, பிரதக் - வேறு.

ஸ்ரீமத் தகிவர்ணப்ர மாசாரிய வர்ய சைவ
பரிபாலக சிவாக்ரயோகி பண்ணின
சிவஞானசித்தி எழாஞ் சூத்திர
வியாக்கியானம் சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆன்மாச் சிவன்போற் சச்சிதானந்த ரூபியென்பது சாற்றுகின்றார்.

அறிவிக்க வறிதலானும் - இவன் சகலாவத்தையிலே கலாதி தத்துவங்களில் தத்துவ தேவதா பாரம்பரியமாய் வந்து ம

றைந்து நின்று அவைகளைச் செலுத்தி அவரவர் பருவ மருகமா கப் போதிக்க உணர்தலானும்.

உம்மையினாற் சுத்தாவத்தையிலே சாக்ஷாத் தீக்ஷா லக்ஷ ணைத் தனது சத்தியால் சிவன் முன்சொல் முறைமையில் முற் றும் மலமுத்த மலவாசனாமுத்தி சிவத்துவ வியத்திபண்ணி அ றிவிக்கத் திரும்பத் திரும்பச் சிவசத்திவிளக்கு விரும்பாதுவி ட்டு ஸ்வயம் பிரகாசமாய்ப் பதிமுதலிய சர்வபதார்த்தங்களைப் போக்கிய போத்திருத்துவத் தன்மைவிட்டு இடைவிடாது எ ப்போது முள்ளமைமாத்திர மாய்ப் பார்த்திருத்தலானும்,—

அழிவின்றி நிற்றலானும் - நித்திய சத்தியமாதலானும்,—

குறிபெற்றசித்துஞ் சத்துங் கூறுவருயிருக்கு-(ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே என்பதனால்) தன திலக்ஷ ணமாக அடைந்த சச்சிதானந்தரூப முயிருக்குப் பெரியோர் பேசுவர்,—

அறிவின்றிநிற்றலானும் என்றுபாடங் கொண்டால் குறிபெ ற்றவசத்துஞ்சத்து மென்று பாடங்கொண்டு சதசத் தான்மா வென்பதற்குக் காரணமாய்க் கேவலாவஸ்தையிலே பிரஞ்ஞா மோகமின்றி மூர்ச்சாமோகியா யிருத்தலானும்,—

குறிபெற்றவசத்துஞ் சத்துங் கூறுவர் உயிர்க்கு - தனது செயற்கை லக்ஷணமு மியற்கை லக்ஷணமுமாக வடைந்த பசுத் துவ சிவத்துவமு மான்மாவுக்குப் பெரியோர்படிப்பார்கள்,—

ஈசனொறி நித்தமுத்தசித்த சித்தெனநிற்பனன்றே-சித்தெ ன்பதனை நாலிடத்துங்கூட்டுக,—

பிறிவிப்பன்மலங்களெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே - முன் சொல்லிய பிரகாரம் மலமுத்தி சிவத்துவ வியத்திபண் ணுவன்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

தன்னறிவு நிகழ்ச்சிக்கு வியஞ்சகத்தையின்றி யமையாமை யால் உயிர் தூலசித்தென்பதூஉம், அவ்வுயிரின் கண்ணதாகிய மலத்தை நீங்கிபறிவிக்கும் வியஞ்சகப் பொருளாகலாற் சிவந் தனக்கொரு வியஞ்சகம் வேண்டாத அதிசூக்கும சித்தென்பதூஉட், இனிது விளங்கு மென்பதாம்.

இவ்வியல்பு கண்ணொளி ஞாயிற்றினொளிகளின் வைத்துக் கண்டுகொள்க.

சித்தியல்புபோற்சத்தியல்பினுள் வேற்றுமை காட்டுவார், அழிவின்றிநிற்றலாற் சத்தாங் கூறுவதென்றார்.

அறிவிக்கவறிதலானு மறிந்தபின் னழிவின்றி நிற்றலானு மென்றுரைக்க.

அறிந்தபின்னென்றது ஆற்றலான் வந்தது.

சுத்தசித்தென்புழியுஞ் சத்தென்பது கூட்டியுரைக்கப்படும்.

பிறிவிப்பன் மலங்களெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே என்றவிதனால் வருகின்ற சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்ததூஉமாயிற்று.

இவைமூன்று செய்யுளானும் முறையே உயிர்க்குச் சத்தசத்திரண்டினையு மறியுமுரிமை யுண்மையும் அதற்குக் காரணமும் அஃதாண்டுளதாமாறுந் தெரித்துணர்த்திப் பாரிசேடவளவையாற் பெறப்பட்ட மூன்றாங்கூற்றுப் பொருள் வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

அறிவு ஒன்றுமிருக்கும தொழிந்து இரண்டு பகுதியாயிருக்குமோ, எல்லாமொன்றென்ற பரிணமவாதியை நோக்கி; சிற்ற

றிவென்றும் பேரறிவென்றும் இரண்டாயிருக்குமென்று அருளிச்செய்கிறார்.

அறிவிக்கவறிதலானும்-ஒருவ றறிவிக்க அறியுமதொழிந்து தானாக வொன்றையு மறியாதிருக்கையாலும்,—அழிவின்றி நிற்றலானும் - ஒருகாலத்தினு மனித்தியமின்றி நித்தியமாய் நிலைபெற்று நிற்கையாலும்,—குறிபெற்றசித்தஞ் சத்துங் கூறுவதுயிருக்கு - குறிக்கப்பட்ட ஆணவமலத்தாலே அநாதியே பந்திக்கப்பட்ட வறிவென்றும் இப்படி மலசம்பந்தமா யிருக்கையாலே யசேதனமென்றும் ஆன்மாவுக்குச் சொல்லுவார்கள். பரமேஶ்வரனுடைய வுண்மையை விசாரிக்கில்?—ஈச னறிநித்த முத்த சுத்தசித்தென நிற்பனன்றே-பரமேஶ்வரன் அநாதியே நிற்கிற முறைமையழிபாததுமாய் மலரஹிதமுமாயிருக்கிற சுத்த ஞானமே தனக்குச்சொரூபமாய்நிற்பன். இதுவன்றியும்,—பிறிவிப்பன் மலங்களெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே-அநாதியே யான்மாக்களுக்குள்ள பாசபந்தங்களையெல்லா முன்சொன்ன முறைமையிலே கன்மம் புசித்துத் தொலைந்து மலபரிபாகம் வந்த பினபு தன்னுடைய காருண்ணியத்தினாலே விடுவியா நிற்பன்.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்க ளறிவிக்க வறிகையினாலும் அநாதியே பாச பந்தியாயிருக்கையினாலும் சிற்றறிவாயிருக்குமென்றும், பரமேஶ்வரன் அநாதியே மலரகிதனுமாய்ச் சிற்சொரூபனுமாய்ச் சர்வஞ்ஞனா யிருக்கையினாலே தனது காருண்ணியத்தினாலே ஆன்மாக்களுடைய பாசங்களை நீக்குவிப்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உயிருக் கறிவிக்க வறிதலானும் - உயிரினுக்குத் தன்னறிவு

நிகழ்ச்சிக்கு வறிவிக்க அறிதலாகிய வியஞ்சகத்தையின்றி யமை யாமையானும் — அழிவின்றி நிற்றலானும் - அறிந்தபின் னழி வின்றி நிற்றலானும், — குறிபெற்ற சித்துஞ்சத்துங் கூறுவது- துலசித் தென்பதூஉம் துலசத் தென்பதூஉங் கூறப்படும், — ஈ சனுயிர்க்கு மலங்களெல்லாம் பிறிவிப்ப னருளினாலே-முதல்வ னவ்வுயிரின் கண்ணதாகிய மலத்தை நீங்கியறிவிக்கும் வியஞ்ச கப் பொருளாகலான், — நெறிநித்த முத்த சுத்த சித்தென நிற் பனன்றே - சிவன்றனக் கொருவியஞ்சகம் வேண்டாத அதிரு க்கும சித்தென்பதூஉஞ் சத்தென்பதூஉ மினிதுவிளங்கு மென் பதாம்.

இவை மூன்று செய்யுளானு முறையேயுயிர்க்குச் சத்தசத் திரண்டினையு மறியு முரிமை யுண்மையு மதற்குக் காரணமு மஃ தாண்டுள தாமாறும் தெரித் துணர்த்திப் பாரிசேடவளவையா ற்பெறப்பட்ட மூன்றுங் கூற்றுப் பொருள் வலியுறுத்தப்பட் டது.

எ-ரு, க-உ-ந-அதிகரணங்கள் முடிந்தன.

☞ ஏழாஞ் சூத்திரம் முற்றிற்று.

"நனிநான்கு"

என்ற ஏழாஞ்சூத்திரம்

நான்கு

முடிந்தது.

பாயிரமுட்பட - உருஉ.

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்ஷம்.

## அ—சூ, ஞாஞுஞ்ஞான இலக்கணம்.



## மறைஞானதேசிகர் உரை



மேலெட்டாஞ் சூத்திர மென்னுதலிற்றோ வெனின்? முற்கூறிய பாசஞானம் போம்படிக்குப் பதிஞான மறிவிக்கு முறைமையினை யுணர்த்துத னுதலிற்று.

மேலித்தலைச் செய்யு ளென்னுதலிற்றோ வெனில்? இக்த ஆன்மாவுக்கு மயக்கததைத் தீர்த்துக் குருவா லுணர்த்தப்பட்டு முத்தியடையு முறைமை யுணர்த்துகின்றது.

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தேதங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கிநிற்பப், பின்னவனு மென்மகனீ யென்றவரிற்பிரித்துப் பெருமையொடுந் தானாகப் பேணுமாபோற், றுன்னியவைம் புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையு மறியாது துயருந்தொல்லுயிரை, மன்னுமருட் குருவாக வந்தவரினீக்கி மலமகற்றித் தானாக் கிமலரடிக்கீழ்வைப்பன். (க)

| | |
|---|---|
| இ-ள்.) மன்னவன்றன் மகன்வேடரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கிநிற்ப | ஓரவதரத்தி லிராசாவி னுடைய பிள்ளை யானவன் வேடரிடத்திலே நின்றுவளர்ந்து பின்பு தன்னுடைய பிதா வின்னாரென் றறியாமன் மயக்கத்தை யுற்றுநிற்க |

| | |
|---|---|
| பின்னவனுமென்மகனீ யென்றவரிற் பிரித்துப் பெருமையொடுந் தானாகப் பேணுமாபோல் | பின்பக்க ராசாவு மயக்கநீங்கி நீயென்னுடைய பிள்ளையா யிருக்கு மென்றவனுக்குப் பிறப்புணர்த்தி யந்தவேட்டுவச் சேரியினின்றும் விடுவித்துக் கொண்டு தனக்குண்டான வரிசையுடனே தானாகப் பார்க்குமுறைமைபோல, |
| துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருந்தொல்லுயிரை | நெருங்கிய பஞ்சேந்திரியமாகிற வேடர் சுழலிலே யகப்பட்டுத் தனக்கொரு கர்த்தாவுளனென்னு முணர்விழந்து மயக்கமுற்று வருந்துகிற வான்மாவை சிவன்றனது காருண்ணியத்தினாலே |
| மன்னு மருட் குருவாகி வந்து | ஞானத்தைப் பொருந்திய குருவை யதிட்டித்துக்கொண் டெழுந்தருளி வந்து. |
| அவரினீக்கி | அந்தவிந்திரிய மாகிய வேடரிடத்தினின்று விடுவித்து. |
| மலமகற்றித் தானாக்கிமலரடிக் கீழ்வைப்பன். | குருவினாற் செய்யப்பட்ட தீக்கையினாலே மலங்களைச் சோதித் ததன்வலியைக் கெடுத்துத் தன்னைப்போல வெண்குணத்தையுமுடையனாக்கித் தனது சீர்பாதத்தை யடைவியாநிற்பன் எ-று. |

சிவனென்பது - தோன்றாவெழுவாய்.

வைப்பன் - பயனிலை.

ஆன்மாவுஞ் சிவனிடத்திலே பாசங்களுமன்றி யிருந்து பின்பு பாசங்களோடேவந்து கூடினதோ வென்னில்? அப்படியன்று. இராசாவின மகன் பிறந்தனறே தன்னையு மின்னானென் றறியா மற் றய்தகப்பனு மின்னாரென் றறியாது வேடரிடத்திலே வளர்

ந்தாற்போல விந்தவான்மாவு மநாதியே தன்னையுஞ் சிவனையு மறியாதே பாசத்தோடே கூடிநிற்கின்ற தன்மைக்குச் சொன்னதாயிற்று. அந்த வேடர்கள் காமாதியாகிய வனத்திலே சஞ்சரித்துச் சத்தாதி விடயங்களாகிய நாயகனைக்கொண்டந்தக் கரணவழியேசென் முன்மாவை மயக்கஞ் செய்கையினு லேகதேசவுவமை கூறினாராயினும், முற்றுவமையாக்கி வந்ததுகொண்டுவாராதுமுடித்த லென்னுந் தந்திரவுத்தியாற் கூறியதெனவறிக.

துயருறுமென்பது துயருமென விகாரப்பட்டது.

தொல்லுயிரென்முர் அநாதியாக வருகையினுல்.

துணைவனையு மென்னு மும்மை யெதிரது தழீயவெச்சம் (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேலெட்டாஞ்சூத்திர முப்பத்தொன்பது விருத்தத்தினுலே சிவன் ஆன்மாக்களுடைய பாச * மோசனம்பண்ணும்படிக் கூறுகின்றது.

துன்னியவைம் புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையு மறியாது துயருந்தொல்லுயிரை மன்னுமருட் குருவாகி வந்தவரினீக்கி மலமகற்றித்தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன் - ஆன்மாவானவன் றன்னுடைய பொருளைப் பறிக்கும் வேடரைப்போல சப்தாதியான விஷயங்களை நெருங்கித் தன்னுடைய வறிவைக் கவர அதினுலே பிரமித்துத் தன்னுடைய ஸ்வரூபத்தையுந் தனக்கு † சுகிருத்தாகிய சிவனையுமறியாம லநாதியே இவ்வாறு துயரத்தைப் பொருந்திட மலபரிபாகத்தில் பூமியின்க ணுசாரிய மூர்த்தியை யதிட்டித்துவந்து நின் றந்த ஆசாரிய ரிடத்திலே கிருபையையும் பக்குவான்மாவி னிடத்திலே விநயத்தை

யுஞ் சிவனேயுண்டர்க்கி யந்தவாசாரியராலே யநுக்கிரகத்தைப் பண்ணி இந்திரியாதிகளை யான்மா தனக் கன்னியமாக வறிந்து பிரியும்படிசெய் தாணவ மலத்தையும் நீக்கிச் சிவன் ருனே யாக்கித் தம்முடைய பாதாரவிந்தத்தின் கீழேவைப்பன்.

தானுக்கியென்பது போதும், மலரடிக்கீழ் வைப்பனென்பது வேண்டாவென்னில்? அப்பொழுது சிவசமமேயாம். சிவனுட னந்நியமென்ப தில்லையாம். சிவனுட னந்நியமென்பதற்காகக் கூறவேண்டியது. அப்பொழுது சிவன் வேறறக் கலந்திருப்ப னென்பதுபோதும், பாதத்தின்கீழென்ப தேனென்னில்? § சர்வத : பாதமாகையால், பரிபூரணனுன சிவன் வியாபியும் ஆன்மா வியாப்பியமு மாகையால், முத்தியிலு மான்மா சிவனை வியாபியாதோ வென்னில்? ஆன்மா வியாபித் தறிந்ததெல்லா மசத்தாகையால் சிவ னொருக்காலும் வியாப்பியனல்ல வியாபகனே. ஆன்மா சர்வ வியாபியென்ப தெவ்வாறென்னில்? சர்வப் பிரபஞ்சத்தையும் வியாபித்தறியு மாகையினாலே சர்வவியாபியென்றது. சிவன் வியாபகனே! ஆன்மா சர்வாவஸ்தையிலும் சிவனுக்கு வியாப்பியனே! சிவனுக் ¶ கந்யமாகவே சிவாநந்தாநுபவத்தை யநுபவிக்க வுரித்தாகிய ஆன்மா சிவனுக் கந்ய பாவத்தையு மடைந்து கிஞ்சிஞ்ஞதையையு மடைந்து நின்றதெங்ஙன். சிவ னுசாரிய மூர்த்திமானுகி யெழுந்தருளி யநுக்கிரகித்த தெவ்வாறென்ன? இதற்குமேல் திட்டாந்தமாக.

மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கிநிற்பப் பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப் பெருமையொடுந் தானுகப் பேணுமாப்போல்- ராஜாவினுடையபிள்ளை வேடச்சேரியிற் பிறந்து வேடரிடத்தே வளர்ந்த பிதாவாகிய விராஜாவையு மறியாமல் தான் க்ஷத்திரியனென்கிறதையு மறியாமல் +கிராதபாவத்தையுந் தரித்திரத்தையும்

பொருந்தி மயங்கிநிற்க வவனுக்கு வேடனாயிருப்பதினும் ராஜா வாயிருப்ப ததிகமென்னு மறிவுண்டாகியபின் பிதாவாகிய விராஜா நீ யென்னுடைய பிள்ளையென் றிளவரசுப்பட்டங் கட்டினுற்போல வொக்கும்.

இதனாற் சிவ னாசாரியமூர்த்தியை யதிட்டித்துக்கொண்டுவந்து பக்குவான்மாக்களை நீ யிந்திரியமாகிய வேடரோடே கூடியிருந் துன்னுடைய ஸ்வரூபத்தை யறிகிறாயில்லையென்று போதிக்க வந்த அந்யனாகிற பக்குவான்மாவும் சப்தாதி விஷயேச்சைகளை விட்டுத் தத்பதவாச்சியமாகிய பரமசிவத்தை யடைவனென் றிதன்பொருள்.

* மோசனம் - விடுவித்தல், † சுகிருத்து - ஆப்தன், ‡ விநயம் - வணக்கம், § சர்வத - நாலுபக்கத்திலும், ¶ அந்நியபாவம் - வேறாயிருக்கை, + கிராதபாவம் - வேடதன்மை.

தது³க்தம் ஶிவஜ்ஞாநபோ³தே⁴ — ஸ்வபக்ஷா ஸம்ஸ்தம்
இந்த்³ரியவ்யாதை⁴ஸ் ஸம்வர்த்³தி⁴தோ போ³தி⁴த꞉ | [illegible]
தாநு [illegible] த்யக்த்வா [illegible]
[illegible] இதி.

தது³க்தம் தந்த்ரே — [illegible] ராஜாநுஜ
[illegible] | [illegible]
[illegible] | [illegible]
[illegible] இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

அவ்வள விவ்வளவா யாகமங்களின் ஞானபாதப் பொருள் போதித்துச் சிலகலப்புப் பகுப்பாய்ப் பொதுச்சிறப்பாக யோகபாத முதல் முப்பாதப் பொருள் போதிப்பதற்கு முயலுகின்றார்.

இராஜா நீ யென்று ராஜா ராஜபுத்திரனுக்கு ராஜகுலம் போதித்ததுபோலச் சிவன் குருக்குறி கொண்டு தீக்ஷைபண்ணித் தீக்ஷாங்கமாகுஞ் சித்தாந்த மஹாவாக்கியஞ் செப்பிச் சிவகுலம் போதித்துத் தியானிப்பித்துப் பசுத்துவம் பறித்துச் சிவத்துவங் கொடுத்துத் தானாக்கி.

இவ்விடத்துச் சொல்லிருந்தபடி பொருளுரைத்தால் சிவாத்துவைதி ஒரு பிரகாரத்தாற் சிவாவேசவாதி யிருவருஞ் சயிப்பார்கள் ஆதலால் கருதரன்போனிற்ப னென்று மேற்காட்டும்படிக்குத் தன்னைபோலாக்கி, மலரடிக்கீழ் வைப்பன்-மலரடியின் கீழே வைப்பன்.

இங்கு மிருந்தபடி பொருளுரைக்கிற் றடத்த லக்ஷணந் தாக்கும்.

இலக்ஷணையினால், அடி - சிவசத்தி என் றுரைக்கில் ஆன்மாவின் சடத்தன்மை விடாத வியாப்பியத்துவம் சங்கிராந்தவாதந் தான் சாரும்.

ஆதலால், மலரடியென்பது மலருமடி, மலராநின்றவடி, மலர்ந்தவடி என்றுவிரியும்.

வினைத்தொகை யாதலாற் றனது சத்திபோற் பிறப்பொருட் பிரமேய மாத்திரத்தில் அறிதற் றொழில் பண்ணி மலர்ந்த தற்பொருட் பிரமேயமாகிய எதிர்முக சிற்சத்தி மாத்திர

த்தி லறிதற் ஜெழில் பண்ணி, மலர்ந்த திரும்பியமுக சிற்சத்தி ரூபியாகச் செய்வன்.

மலரடி வியத்த சிற்சத்தி யென்று தாற்பரியம்.

சத்த ஸ்பரிச முத லைம்புலத்தை விஷயீகரிக்கு மைம்பொறியை ஐம்புலமென் றுருபெயராற் சொல்லியது.

சுழல் என்றது தன வழிக்கிழுச்கு மொருபால் துணைவன்.

சிவன் தனது வியாபகத்து ளடங்க வியாப்பியமாய் வைப்பனென்று சிலர் பொருளுரைத்தார்கள்.

அவர்கள் வியாப்பியனுனால் ஆன்மா சடமாவனென்றும் ஏன் செப்பா திருந்தார்கள்.

திரும்ப வியாப்பிய வியாபகலக்ஷணத்தால் வேற்றுமை வரும், ஐக்கியமேயில்லை என்பது ஏன அறியாதிருந்தார்கள். ஆதலால் ஒப்பு ஒரு சாதியைக்கியமே யக்கியத்துவம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேலைசூத்திரத்தாற் சாதித்துப்பெறுமுரிமை தனக்கே யுண்டென்பதுணர்ந்த வுயிர்க்கு, அப்பேறு தனக்கு வேண்டற்பால தென்பதூஉம் அதற்குச் சிறந்த சாதனமாவ திதுவென்பதூஉம் அதுவருவாயுமுணர்ந்தன்றிச் சாதனஞ்செய்தற்கு மனவெழுச்சி செல்லாமையின், மனவெழுச்சி சேறற்பொருட்டு அவற்றையுணர்த்துதற் செழுந்தது எட்டாஞ்சூத்திரம்.

உயிர் தன்னிலையிற் பிறழ்ந்து ஐம்பொறிகளுட்பட் டறிவிழந்து வருந்துமாற்றை, நித்தமுத்தசுத்த சித்தெனப்படுமவ் வீசன், குருவடிவங்கொண் டெழுந்தருளிவந்து, தவமுதிர்ச்சி நோக்கி யுணர்த்தி, மீட்டுத் தொன்னிலையிற் பிறழாது வைத்து வாழ்விப்பனென்பதாம்.

இங்ஙனம் வாழ்வித்தல் ஈசனுக்குக் கடப்பாடாத லினி து விளக்குவார், பிள்ளைமைப்பருவத்து மடமையால் வேடரு ட்பட்டுப் பரதந்திரனாய்த் தன்சாதிக்குரிய பெருந்தகைமையி ழந்து இழிதொழில் பயிற்றி வருந்தும் மன்னவகுமாரனுவா னொருவனுக்கு அவன்றந்தை செய்யுமுதவியை யெடுத்துக்காட் டிக் கூறினார்.

மும்மலச்சுழலிற்பட்டு வருந்துதல் காட்சிப்புலனாதல் செ ல்லாமையின், அதனையொழித்துக் காட்சிப்புலனா யெளிதின றியப்படுவதாகிய ஐம்பொறிச்சுழலிற் படுதலே யீண்டெடுத்துக் கூறினார்; தூலவருந்ததிநயம்பற்றிச் சோபானமுறைமையின் வைத்துணர்த்துதல் மரபாகலின்.

துணைவனையுமென்னு மும்மை தன்னையறியாமையேயன்றி யென இறந்தது தழீஇயது: சிறப்புமாம்.

மன்னுமருளொன்றது ஈண்டிறப்பி றவத்தின் மேற்று.

மூன்றுவது விரித்துரைக்க.

என்மகனீயென்றென உவமையுட் கூறுதலாற் பொருளினு ம் உணர்த்தியெனபது வருவித்துரைக்கப்பட்டது.

"தவத்தினுணர்த்த" என்றார் முதனூலாசிரியரும்.

இங்ஙன முறைத்தவாற்றான முதனூ லெட்டாஞ்சூத்திர ம்போல இச்செய்யுளும் நாற்கூற்றதாமாறு கண்டுகொள்க.

---

## திரம்பவழகியருளை வருமாறு.

---o---

மேல் ஞானத்தினையுணரு முறைமையினை யுணர்த்துத னுத லிற்று.

இப்படிப் பாசபந்தியாயுள்ள வான்மாக்களை யவரவர்கள் பக்குவத்திலே சிவன் ஆசாரியமூர்த்தமாக வெழுந்தருளி இர க்ஷிக்கிற முறைமை யருளிச்செய்கிறார்.

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தேதங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கிநிற்ப - இராஜாவினுடைய புத்திரன் வேடரிடத்திலேநின்று வளர்ந்து வேடருடைய வாதனையாலே தன்னுடைய பிதாவைத் தானறியாமல் மயங்கிநிற்ப அந்தப் பிள்ளையுடைய வறியாமை நீங்கின வவதரத்திலே,—பின்னவனு மென்மகனீ யென்றவரிற்பிரித்துப் பெருமையொடுந் தானாக்கிப் பேணுமாபோல் - இவனுக்கு பிரஞ்ஞை யுண்டானபின்பு அந்த இராஜாவும் என்னுடைய பிள்ளையாயிருக்கு நீ என்று அந்த வேடரிடத்தினின்றும் விடுவித்து பெருமையுடனே தானுசப்பார்த்து அந்தப் பிள்ளையை இரக்ஷிக்கிற முறைமைபோல,—துன்னியவைம்புலவேடர் சுழலிற்பட்டு - கன்மத்துக் கீடாக வான்மாவைப் பொருந்தப்பட்ட ஐந்து விஷயமாகிய வேடருடைய சுழலிலே யகப்பட்டுக்கொண்டு,— துணைவனையுமறியாது துயருந் தொல்லுயிரை - தனக்குப் பிராணனாய் நிற்கிற சிவனையு மறியாமல் அநாதியே துக்கப்படுகிற ஆன்மாவை,—மன்னுமருட் குருவாகி வந்தவரினீக்கி - அநாதியே யிவனிடத்திலேநிற்கிற ஞானந் தானே ஆசாரியமூர்த்தியாக வெழுந்தருளிவந்து அந்த ஐம்புல வேடரிடத்து நின்றும் விடுவித்து,—மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன் - அநாதியே யிவனுக்குண்டான மலங்களையும்போக்கிச் சிவசொரூபமாக்கித் தன்னுடைய சீர்பாத கமலத்தின்கீழே வைப்பன்.

இதனாற் சொல்லியது, கன்மத்துக்கீடாக அநாதியே பொருந்தப்பட்ட சத்தாதி விஷயங்களிலே மயங்கிச் சிவனையு மறியாமற் றுக்கத்தை யனுபவிக்கிற வான்மாவுக்கு அநாதியே யிவனிடத்திலே நிலைபெற்றுநிற்கிற ஞானந்தானே ஆசாரிய மூர்த்தியாக வெழுந்தருளிவந்து அந்தச் சத்தாதி விஷயங்களினின்றும் இவனை விடுவித்து அநாதியே இவனுக்குண்டான மல

ங்களையும் போக்கி சிவசொரூபமாக்கித் தன்னுடைய சீர்பாத கமலத்தின்கீழே வைப்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

மன்னவன்றன்மகன்-மன்னவன் குமாரனொருவன்,—வேடரிடத்தே தங்கிவளர்ந்து - பிள்ளைமைப் பருவத்து மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனாய் தன்ஜாதிக்குரிய பெருந்தகைமை யிழந் திழிதொழில் பயிற்றி வளர்ந்து,—அவனையறியாதுமயங்கி நிற்ப - அவ்வரசனையுந் தன்னையு மறியாது மயங்கி நிற்க,—பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்து - தந்தையாகிய அவ்வரசனு நீயென் மகனென் றறிவுறுத்தி யவ்வேடரினின்றும் பிரிப்பித்து,—பெருமையொடுந் தானாக்கிப் பேணுமாபோல்-பெருந் தகைமையோடுந் தானும்வண்ணஞ் செய்யுமாறு போல,—தொல்லுயிர் - நிலைபெற்ற வுயிர்,—துன்னிய வைம்புல வேடர்சுழலிற் பட்டு - த்ன்னிலையிற் பிறழ்ந்து நெருங்கிய வைம்பொறியிற்பட் டறிவிழந்து,—துணைவனையு மறியாது துயருறுட்-தன்னையுந் தலைவனையு மறியாது வருந்துமாற்றை,—மன்னுமருளின்-இறப்பி றவமுதிர்சிநோக்கி,—குருவாகி வந்து - நித்தமுத்த சுத்த சித்தெனப்படுமவ்வீசன் குருவடிவங் கொண்டெழுந்தருளிவந் துணர்த்தி,—அவரினீக்கி மலமகற்றி- பொறியினின்று நீங்குமாறு மலவலிமையைக் கெடுத்து,—தானாக்கி மலரடிக் கீழ்வைப்பன்-மீட்டுத் தொன்னிலையிற் பிறழாது வைத்து வாழ்விப்ப னென்பதாம்.

இங்ஙன முறைத்தவாற்றான் முதனூலெட்டாஞ்சூத்திரம் போல இச்செய்யுணாற் கூற்றதாமாறு கண்டுகொள்க.

## மறைஞானதேசிகர் உரை.



*முதற்சூத்திரமுதலேழாஞ்சூத்திர மீறாகப் பதிமுதலியமு ப்பொருளையும் பொதுவிதியா லுணர்த்தி; மேற் பதி மூவகைப் பட்ட வான்மாக்கட்குச் சத்திநிபாதாநுகுணமாகச் சாதார நிராதார தீக்கைசெய் தனுக்கிரகஞ்செய்யுமுறை தொகுத் துணர்த்துகின்றார்.*

உரைதருமிப் பசுவர்க்க முணரின்மூன்று முயருமிவிஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர், நிரையின்மல மலங்கன்ம மலங்கன்மமாயை நிற்குமுத லிருவர்க்கு நிராதாரமாகிக், கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபாதத்தாற் கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்மவொப்பிற், றரையிலாசான் மூர்த்தியா தாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபாதத்தால். (௨)

| | |
|---|---|
| (இ-ள்.) உரைதருமிப்பசுவர்க்க முணரின்மூன்றும் | வேதாகமங்களிற் கூறுவதாயுள்ள வான்மவர்க்கங்களை விசாரித் தறியின் மூவகையாம். அவர்யாரெனில்? |
| உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் | உத்தமரென் றேறிய விஞ்ஞானகலர் ப்ரளயாகலர் சகலரென மூவகையாம். |
| நிரையின் மலமலங்கன்ம மலங்கன்ம மாயை நிற்கும் | நிறவிரைப் பொருள் கோளாக வுடைவே விஞ்ஞானகலர் ஆன்மாக்களுடைய ஞானக் கிரியைகளைத் தடுக்குமதாகிய வாணவமல மொன்றையு முடையர்கள், பிரளயாகலர் |

மூலமலத்தினோடுங் கன்ம மலமாக விரண்டுடன் சம்பந்தரா யுள்ளார், சகலர் மலங் கன்ம மாயை யெனக் கூறிய மும்மலங்களுடனுங் கூடினவர்கள்.

முத விருவர்க்கும் நிராதாரமாகிக் கரையிலருட்பரன் றுவிதாசத்தி நிபாததாற் கழிப்பன் மலம்

முதற்கட் கூறிய விஞ்ஞானகலர் பிரளயாகல ராகிய விருவர்க்கும் எல்லையில்லாத கிருபா சமுத்திரமாகிய சிவன் முனேவந்து தீவிரந் தீவிரதரமாகியசத்திநிபாத மிரண்டினையும் பதிவித் தவலோகனம் பண்ணி யவர்களுக் குள்ளே நின்று பாசத்தினைச் சேதித் தவர்களறிவினை விளக்குவன், பிரளயா கலர்க்குச் சிவன் முனே தேவகுருவாய் வந்து மலகன்மங்களை யவலோகனத்தினுலே போக்கி யவர்களறிவை விளக்குவன், "முத்திதரு—நன்னெறி விஞ்ஞானகலர் நாடுமல மொன்றினையு, மனனிலையே யுண்ணின் றறுத்தருளிப்—பின்னையு,மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்,தேவாய்மலங் கன்மந்தீர்த்தருளி" எனனும் போற்றிப் பஃறொடையானு முணர்க.

சகலர்க்குக் கன்மவொப்பிற் றரையிலாசான்மூர்த்தி யாதாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபாதத்தால்.

சகலர்க்குச் சிவன் யாவனொரு வில்லியானவ னேரிலக்கைக்கட்டித் தூக்கி யசைவற நின்றகாலம்பார்த் தெய்யு மாறுபோலான்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களை தொலையொத்த காலம்பார்த்துப் பூமியின்கண் ணாசாரிய மூர்த்தியை யதிட்டித்துக் கொண்டு மந்தமாதியான நால்வகைச் சத்திநிபாதானுகுணமாகத் தீக்கையினைச் செய் தவரவர்கள் பாசத்தைச்சேதித் தவர்களறிவை விளக்கி யதிபக்குவரா யுள்ளவர்களை சுவாநந்தானு பூதி

விற்றிலாத் திருக்கும்படி முத்தியை யடைவிப்பன். மந்தபா கராயுள்ளவர்களை வித்தேசுரர் பதத்திலு மந்திரேசுரர் பதத்தி லு மூருத்திரர்க ளுடைய பதத்திலு மடைவிப்பன. எ-று.

சிவன் கழிப்பன்,
பரன் ஒழிப்பன்,
என விரண்டெழுவாயு மிரண்டு பயனிலையும்.
இதற்குச் சிந்திய விசுவத்து மறிக.
இது பொழிப்பு.

மேலகலம்.

அவையாவன?—

விஞ்ஞானகலத்தவ சித்தி யெக்காரணத்தா லெனில்? ஆசாரியனாலே தீக்கையிற் கலாதத்துவ மளவாகக் கன்மங்களைச் சோதிக்கப் படுகையாற் றான் மாயையினுடையவு மான்மாவு டையவும் வியாபாரங்களைப் பிரித்தறிகின்ற ஞானத்தினாலே தானந்த வாகாரயோக நிபானுதியிற்றான் மிகுந்த தபசினு டைய சித்தியினாலேதான் கன்மானுகுணமாகத் தனுவை யெடு த்துக் கன்மங்கள் புசித்துத் தொலைந்த காலத்திற்றான் வை ராக்கியத்தான் சன்னியாசானுட்டானத்தாற்றான் எல்லாக் கன்மங்களு நசிக்க வதற் காதீனமாயிருக்கிற மாயையு மின்றி யானவ மலமொன்றுஞ் சேட்டித்து நிற்கையினா லுண்டான வெயரென வறிக.

பிரளயாகல சித்தி யெக்காரணத்தா லென்னில்? ஆசாரி யனாற் றீக்கிதரான சகலர் பிரகிருதியையு மான்மாவையு முள் ளபடி யறிந்த ஞானத்தினாலே யந்தப் பிரகிருதியினின்று மு த்தனாய்ச் சிருட்டிகாலத்திற் பிராகிருத தேகத்தைபெடாமல் மாயேயமாகிய சரீரத்தைப் பொருந்தி யதிலுண்டான கன்மப லங்களை யந்தந்தப் புவனங்களிற் புசித்துத் தீர்கையாற் குண

தத்துவத்துக்கு மேலுண்டான் கன்மமு மாணவமு மாகவிர ண்டொடுங் கூடினவர்க ளாகையிற் லுண்டாகிய பெயரெனவறிக.

சகலத்துவ சித்திக்குக் காரணம் யாதெனில்? ஆணவ முதலிய மூன்று பாசத்துடனுங்கூடி யாணவத்தாற் றடுக்கப்பட்ட ஞானக்கிரியைகளை யுடையராய் மாயையினாலே மோகித்து நானாவிதமான கன்மங்களைப் புசித் ததனைப புசிக்கிற காலத்தி லாகாமியமேறி யதனைச் சஞ்சிதமாகக் கட்டுப்பட்டதனைப் புசித்துத் தொலைக்கை காரணமாகப் புரியட்டகரூபியாய்ப் பிராகிருதமான வடிவையெடுத ததிலுண்டான் போகங்களைப் புசிக்கிறவ ராகையா லுண்டாயபெயரென வறிக.

முற்கூறிய விஞ்ஞானகலர், அபக்குவர் பக்குவர் எனவிருவகையாம்.

அபக்குவமாவது – ஆமம். அஃதாவது. நென்முதலிய தானியங்கள்.

பக்குவமாவது புசிக்கப் படுவது. அஃதாவது, சோறுகறி முதலானவைகள்.

இத்தன்மைபோல ஆன்மாக்கள் சங்காரத்துக்குக் காரணமாகிய மலமும் பக்குவமெனவு மபக்குவமெனவு மிருவிதப்படும். ஆதலால் விஞ்ஞானகலர் பக்குவமல ரபக்குவமலரென விருவகையர்.

இதிற் பக்குவமலராவார் மலபரிபாக மிகுதியாலே சிவனாலே யனுக்கிரகம்பெற்றுச் சாயுச்சியத்தை யடையுமவர்.

அபக்குவ மலராவார் மலபரிபாகமாந்தியத்தாலே சிவனவர்களுடைய ஞானக்கிரியைகளை விளக்கி யனுக்கிரகஞ் செய்யப்பட்டிருக்கையினும் சுத்தாத்துவாவுக் கதிகாரிக ளாகையா லதிகாரமலத்தைப்பொருந்தி யிருப்பர்கள்.

இந்த அபரமுத்திபெற்றவர்கள் யாவரொனில்? உத்தமராகிய பிரணவர் சுதாக்கியர் சிவர் தீர்த்தர் காரணர் சுசீவர் சூக்ஷமர் காலர் தேசசர் அங்சு எனக்கூறிய அணுசதாசிவர் பதினமரு மதோமாயா புவனத்துள்ளார்க்குப் பக்குவம் வந்தவிடத் தனுக்கிரகஞ்செய்து சதாசிவதத்துவத்திற் போகங்களைப்புசித் தந்த மூர்த்தியைச்சூழச் சேவித்துக்கொண் டிருப்பர்கள். இவர்களுக்குப் போகத்தில் வைராக்கியம் பிறந்தாலப்பொழுது சிவன் பிரசன்னராகி மேலானபதத்தை யடைவர்கள்.

இனி மத்திமராகிய அட்டவித்தியேஸ்வரராவார் அநந்தர் சூக்குமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தி சீகண்டர் சிகண்டி. இவ்வெண்மரு மீசுரதத்துவத்திலிருக்கு மீசுரனைச் சூழ்ந்திருந்து மாயையிற் கீழுண்டாகிய சிருட்டியாதி கிருத்தியங்களைச் சிவன தேவலாற் செய்பவர்கள்.

இவர்களுக்குப் படைப்புமுதலிய தொழில்களைக்காரணத்தாலெனில்? சாந்தமூர்த்தியாயிருக்கிற சதாசிவ ரிவர்களெண்மரையுந் தமது சரீரத்தினின்றுந் தோற்றுவிக்கையா லுண்டானதெனவறிக.

ஆறு லிவர்களெண்மருந் தம்மி லொக்குமோ வெனில்? அநந்ததேவ நாயனாரைப்பற்ற மற்றவர்களுக் கெல்லா மொவ்வொருகலை யடவே குறைந்தகுறைந்து வருதலா லுத்தரோத்தர மொருவர்க்கொருவர் விசிட்டரென வறிக.

முந்தின வநந்ததேவ நாயனார்க்கு அதிகாரத்தில் வைராக்கியம் பிறந்தா லவரைச் சிவன சங்காரகாலத்திலே மோக்ஷத்தை யடைவிப்பன். அதன்பின் னவர்க்கடுத்த சூக்கும ரவ்வதிகாரத்தைப்பெற்றுக் கிருத்தியங்களை யவரைப்போலச் செய்வர். மற்றவர்களு மிவ்வா றடைவே யதிகாரத்தைப் பண்ணுவர்கள்.

எல்லார்க்கும் பிந்தின சீகண்டருடைய பதம் பாழ்கிடவாமற் சிவன் விஞ்ஞானகலரிற் பக்குவ முண்டானபேரி லொருவரை யடைவே யெண்மரிற் குறையாமற் கூட்டுவர்.

இதற்குப் பௌட்கரம், வாயவ்வியம், சுவச்சந்தம், இரத்தினத்திரயம், ரௌரவம், சர்வஞானோத்தரம், மதங்காகமத்து மறிக.

இனி யதமராகிய சத்தகோடி மகாமந்திரங்களின் மூன்றரைக்கோடி பெயரை மலபரிபாக மிகுதியாலே கீழுள்ள கிருத்தியங்களிலு மேலுள்ள போகத்திலும் வைராக்கியம் பிறந்து வெறுப்புண்டாகையால் விஞ்ஞானகலர் விஷயமாகவு மாயாகர்ப்பாதிகாரிகள் விஷயமாகவுஞ் சிவ னிரதிகரணமாகத் தீக்கைபண்ணுதற்குக் காரணமாகப்பண்ணி யவர்களை மகாப்பிரளயத்திலே முத்தியை யடைவிப்பன்.

மற்ற மூன்றரைக்கோடி பெயரையுஞ் சிவ னதோமாயையி லுதிக்குந் தூலகாரியங்களுக்குக் கர்த்தாவாக்கிச் சுத்தவித்தையி லுண்டான போகங்களைப் புசிப்பித்துத் திதிகாலத்திற் சகலர் நிமித்தமாக வாசாரியரை யதிட்டித்துக்கொண் டனுக்கிரகஞ் செய்யுங் கன்மத்துக்கான பூதமாக விருந்து மஹாப்பிரளயத்திலே முத்தியை யடைவிப்பன்.

அபக்குவரான விஞ்ஞான கேவலிகளாவா ரியாவரெனில்? ஆணவ மிகுதியா லளவற்ற வானமாக்கள் ஞானக்கிரியைகள் மிகவு மறைப்புண்டு மலபரிபாகம் வருமளவுஞ் சுத்தவித்தைக்குக் கீழாக மாயைக்கு மேலாக நடுவே நெடுங்காலங் கேவலத்தைப் பொருந்திக் கிடக்கையால் முத்தான்மாக்க ளெனப்பெறாமல் விஞ்ஞான கேவலிகளெனப் பெயர்பெற்றிருப்பர்கள். ஆதலால் விஞ்ஞானகலர் நால்வகையரென வறிக.

இதற்கு மிருகேந்த்ரத்துங் காமிகத்து மறிக.

இனிப் பிரளயாகலர் பக்குவமலர் அபக்குவமலரென வி ருவகையாம்.

பக்குமலர் யாவரெனின்? மலபரிபாக மிகுதியாலே சிலர் க் கெல்லாக் கன்மமும் பக்குவமா யுள்ளளவிற் சிவன் தீவிரத் தீவிரதரமென்னுஞ் சத்தியைப் பதித்து நிரதிகார தீக்கையாற் றிருக்கண்சாத்தி யவர்கள்பாசத்தைச் சேதித் தவர்கள் ஞானக்கிரியைகளைப் பிரகாசிப்பித்து மோட்சத்தை யடைவிப்பன்.

மற்ற வபக்குவரைக் கன்மாநுகுணமாகப் போகத்தைப் புசித்துத் தொலைக்கையின் பொருட்டுப் புரியட்டகத்தைப் புவனசதேகமாகிய யோனிகடோறும் பிறந்துழன்று திரிந்து மலகன்மங்கள் பரிபாகமானவாறே சிவன் சத்தியைப்பதித் தவர்களறிவைவிளக்கி மோட்சத்தை யடைவிப்பன்.

புரியட்டகத்துடனே கூடினவர்களுட் சிலரை யநந்த தேவனுயனுர் அப்பு தத்துவத்தி லமரேசராதியாகிய புவனத்தி லிருக்குங் குய்யாட்டகராகிய வெண்மர்க்குந் தேயுவி லரிச்சந்திராதி புவனத்தி லிருக்கும் அதிகுய்யாட்டகர்க்கும் வாயுவில் தெபையாதியாகிய குய்யாத் குய்யாட்டகர்க்கும் ஆகாயத்தில் வஸ்திரபதாதிபராகிய பவித்திராட்டகர்க்கும் அகங்காரத்தில் சகலண்டாதியாகிய தாணுவட்டகர்க்கு மாகப் புவனதிபர்கள் நாற்பதின்மரையு மிவர்களை யடைவே யதிபராக்கி யோசியாநிற்பன்.

முற்கூறினவர்களன்றிச் சேடித்துள்ளாருட் சிலர்செய்த கன்மத்தாலே ப்ரளயாகலரா யிருந்தார்களேயாயினு மவர்களுக்கு மலபரிபாகம் வாராதபடியாலே யநந்ததேவ நாயனுர் மாயாகர்ப்பாதி காரிகளாக கலாமத்தகத்தி லிருக்குங் ககேசுரர்முதலிய வெண்மரையுங் குணதத்துவத்தி லிருக்குங் குரகர் முதலிய வெண்மரையும் நூறு ருத்திரர்க்கு மதிட்டா

தாவாய்ச் சூக்கும ப்ரகிருதியி லிருக்கும் வீரபத்திரரும் குணதத்தவத்தி லிருக்கும் ஸ்ரீகண்ட பரமேசுரனதற்குக்கீழ்ப்பட்ட புவனங்களுக்கும் பிரமா முதலாயினோர்க்கும் பிரமாண்டத்தராகிய கபாலீசுரமுதலிய வுருத்திரர்க ளூற்றுவரு மாக நூற்றொருபத்தெண்மரையுங் கர்த்தராக யோசியாநிற்பன்.

ஆகப்பிரளயாகலர் மூவகையரெனவறிக.

இவர்கள் சிருட்டிகாலத்தி லதிகார பந்தத்தாலே கலாதிகளுடனே கூடிப் பந்தப்படினுங் கலாதிகளாற் சகலரைப்போல வசியரல்ல.

அஃதெதன்போலவென்னில்? பாம்பின் கண்டத்திலிருக்கிற விடமிருக்கினு மதனை வாதியாதவாறுபோல விவர்களு மதனுல் வாதையுறார்க ளெனவறிக.

இதற்குச் சித்தியவிசுவத்து மிருகேந்திரத்துங் கிரணத்து மறிக.

சகலராவார் யாவரெனில்?

தேவர்க ளிருடிகள் மானுடர்முதலாயினோ ரெனவறிக.

அவர்க ளதிபக்குவர் மந்தபக்குவர் அபக்குவரென மூவகையர்.

அதிபக்குவராகிய தேவர்கள் தானவர்கள் முதலாயினோரைச் சிவன் தீவிரமுதலிய நால்வகைச் சத்தியைப் பதித்துத் திவ்வியமான திருமேனியை யதிட்டித்துக் கொண்டவர்கள் பாசத்தைச் சேதித்தவர்கள் ஞானக்கிரியைகளை விளக்கித் திதிகால முடியுமளவுஞ் சுத்தாத்துவாவிற் போகங்களைப் புசித்திருந்து மகா சங்காரத்திலே மோட்சத்தை யடைவர்கள்.

தேவர்கள் முதலென்பதனால் எறும்பீறாக வெனவறிக.

சிவன மந்த மலபாகராயுள்ள வைநயிகர் முதலாயினோரை மந்த மந்ததரமென்று சொல்லப்பட்ட சத்தியைப் பதித் தாசா

ரியனை யதிட்டித்தவர்களுக் கநுகுணமான தீக்கையைச் செய்தவர்க ளவர்கள் யாதொரு பதத்திலே யிருந்து போகம் புசிக்க விரும்பினார்க ளந்ததந்தப் பதத்திலே யோசியாநிற்பன்.

மலபரிபாகம் வாராத வபக்குவரை யவர்களவர்கள் செய்த கன்மத்துக் கீடாகப் பௌணசரீரத்தை யெடுப்பித்துப் போகங்களைப் புசித்துத் தொலைந்தவாறே மலபரிபாகம் பிறப்பித்தாசாரியன் தீக்கையைப்பண்ணி மோட்சத்தை யடைவிப்பன்.

இதற்குக் காமிகத்திற் பத்தாநுக்கிரகபடலத்து ம்ருகேந்த்ரதநும் சூக்குமசுவாயம்புவத்தும் சிந்தியவிசுவத்து மறிக.

"இமையா ரிமைப்பவ ராகுஞ்சகல" னென்னுந் திருவாக்கிலும் ,'மும்மலங்கூடி முயங்கி மயங்குவோ, ரம்மைச் சகலத்தர் தேவரசுரர் நர,ரிம்மையின் வேதா வரிமிகு கீழுந்தத், தம்மிறை யொளிபுக்காரக்குச் சகலரே" எனவறிக.

இம்மூவரையுந் தொகுத்தறியிற் பதின்ம ரெனவறிக.

"விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரளயாகலர், தஞ்ஞான மூவருந் தங்குஞ் சகலத்து, ளஞ்ஞான மூவரு மாகப்பதின்மராம், விஞ்ஞான ராதியர் வேற்றுமைதானே." (உ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் மூவகை யான்மாக்களுக்குஞ் சிவ னநுக்கிரகம்பண்ணு முறைமை கூறுகின்றது.

உரைதருமிப் பசுவர்க் மூணரின்மூன்ரும் - கீழ்ச்சொல்லிப் போந்த ஆன்மாக்க ளறியுங்கால மூன்றுவர்க்கமாம். அவைகளாவன:—

உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - அதோமாயைக்கு மேலாயிருக்கும் விஞ்ஞான கலரொன்றும், மாயாமத்

திய வர்த்தியான பிரளயாகல ரென்றும், மாயாதோபாகவர்த்தியான சகலரொன்றும்.

விபுவாயிருக்கிற ஆன்மாக்களுக்கு மாயைகதேசித்துவஞ் சொல்லுகிறது * அநுசிதமென்னில்? உண்மை. மாயாகாரியங்களினாலே யேகதேசத்தை யடைகையினாற் கூடும்.

* அநுசிதம் - தகாதது

மாயைநீங்கி யாணவமொன்றேயான விஞ்ஞான கேவலர்க்கேகதேசத்துவ மெவ்வா றென்னில்? அதோமாயையி லுண்டான போகங்களெல்லாம் புசித்துச் சுத்தமாயா போகத்துக்குச் சிவாநுக்கிரக மில்லாதிருக்கையான் மாயாத்வய மத்தியே † யவஸ்தானஞ் சொல்லப்பட்டது.—

† அவஸ்தானம் - இருப்பு

[illegible]

நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயைநிற்கும்-நிரைநிரையே விஞ்ஞானகலர்க் காணவ மலமொன்றும், பிரளயாகலர்க் காணவமுங் கர்ம்மமும், சகலர்க் காணவமுங் கன்மமு மாயையும் பொருந்திநிற்கும்.

ஆகுதும், கன்மமானது மாயாகாரியமாகிய புத்திகருமம் பிரளயத்திலு மாயையே யதற் காதாரம். கனமத்துக்குக் காரணமு மாதாரமு மாயை யாதலால் பிரளயாகலர்க்கு மாயையில்லாமல் கனம மெப்படியிருக்கும். கன்மமில்லாமல் விஞ்ஞானகலர்க்கும் போகமெப்படி யுண்டாமென்னில்? இவ்விடத்துப் பிரளயாகலர்க்கு மாயை யில்லையென்றது. லக்ஷணையாக மாயை மாயேயமாகிய பிரகிருதியை விஞ்ஞான கலர்க்குக் கன்மதிஞலேயல்ல, போக மாணவ பரிபாகத்திஞலே.

இனிச் சகலர் பிரளயாகல ஞகிறத்துக்கும் விஞ்ஞானகலஞகிறத்துக்கும் ஏது‡குணுத்மகமாயிருக்கிற பிரகிருதி புருஷவிவேகத்தைப்பண்ணி பிரகிருதி விகாரத்தை நீங்கிநின் றுளளவன பிரளயாகலன்.

‡ குணுத்மகம் - குணவடிவு

பிரளயத்திலே கலை நீங்கப்பட்டவனும் பிரளயாகலனென்று பெயருண் டாகையால் பிரளயாகல ரிருவகைத்தாம்.

பிரகிருதி புருஷ விவேகத்தைப்பண்ணி பிரகிருதி நீங்கின மாத்திரத்திலே முத்தனென்ஞமல் பிரளயாகல னென்பானேனென்னில்? பிரகிருதிக்குமேல் மாயாகாரியங்களாய புவஞதாரஙகளான வைந்து தத்துவங்க ளிருக்குது, அந்தப் புவனஙகளிலே கனமங்களுமிருக்குது.

இதன்றி ஆன்மஞான § திரோதகமான வாணவ மிருக்குதாகலால் சிருட்டி காலத்திலும் அபக்குவ மலஞகிய பிராகிருதஞகாமல் பிரளயாகலஞகவே நிற்பன். இந்தப் பிரகிருதி புருஷ விவேகத்தைப் பண்ணினதுபோல மாயையையு மான்மாவையும் பிரிந்து நின்றறிந்த பிரளயாகலன் விஞ்ஞானகலஞவன. இவ்வாறறிந்த சகலனும் விஞ்ஞான கலஞவன.

§ திரோதகம் - மறைக்கிறது

இவ்வாறறிந்த சகலன் பிராகிருத தேகியாயிருக்கிற வர்த்த மான காலத்திலும் விஞ்ஞானகேவலனே! மாயையுங் கன்மமும் நீங்கினவுடனே முத்தனென்றது விஞ்ஞானகேவல னென்பா னேனென்னில்? ஆன்மஞான நிரோதகமான வாணவ மிருக்கை யா லெவ்வாறு முத்தனாவன். ஆணவமல பரிபாகத்தினாலே சி வானுக் கிரகத்தினாலே பககுவானு குணமாக ¶ பராபரமுத்திக ளையடைவன.

¶ பராபரம் - மேல்கீழ்

ததுக்தம் காமிகே — கர்மணா பத்யதே ஜீவோ
பத்த: ப்ரக்ருதிஜஸ்தத: । தமோஸிதஸ்வப்ரக்ரு
தேஸ்தம் மாயாரஹிதம் ஸ்ம்ருதம் ॥ விநாத்ர காரணம் கா
ர்யம் கதாசிந்நதிஷ்டதி । ததா தாஹகார்யே ஸம்ஹா
ரே மாயாயாம் கர்மணாம் ஸ்வயம் ॥ மாயாஹ்யேவ கலங்க
த்ருக்கர்த்ராஹ்யேவ கலஞ்ஜநா: । தத: கர்மவசாத்யோகே
மாயாயாமுத்ப்ரேதகல்பம் ॥ ப்ராக்ருதம் கார்யமேத்ரா:
க்தம் மாயாத்ரிபவமேவ ச । க்ஷயம் ஸகலோ விப்ரா
ப்ரக்ருதிஸ் ஸர்வஸ்ய ச ॥ விவேக உமா நா உக்த
ஸ்ராஷ்ட்ரா: ப்ரக்ருதிச்ரயா । மாயோதராதிமிஷ்க்ரதேவ
தஸ்ஸ்ராஸ்ப்ரஜயாகம: ॥ நஉக்த ஸத்வாயெஸ்ராஉ
த: கர்மஸமாப்ரய: । உமேநத்தநமேசதந்ரம்ஸ்வரே
வேணாவதிஷ்டதி ॥ கணதமேஷாய்வர் ஸவமெந ஸ
ஜீமேக்த மெஹாமாதுஸ்வகர்ணா । பஞ்சமாயாப் ஸரே
தாநி தக்ஷாநிகணரேஷர்நி ॥ வதர்மாநாந ப்ரக்ரு
த்யோவ்ய கமமேஷபிவம் விமேபக்ஷ । கணாந்த மாத்ர வி

ஜ்ஞாநாம் நகர்மணோரபி க்ஷய: || ஸகல: ப்ரளயேவிவே
கோபி யத்ஸ்வாதந்த்ர்யாயதி | மாயாமபி யதாவித்யா
ஸுப்தி யாநவர்ப்ரேஷாவித: || விஜ்ஞாநகேவலாஜீவா:
ஸவாணவமலகர்மஸஹித: | மாயாதீதா வர்த்தந்தேய
த்ரப்ரளயகேவலா: || தமோவோபி ஸர்வத்ரோத்தா
விஜ்ஞாநகமலஸம்பந்த்யா | மாயோர்த்வே வர்த்தமாநாபி
வோயம் விஜ்ஞாநகேவல: || மலமேகந்து வைதந்த்ரா
நாமுக்தி க்ரமந்தே | த்யாவ த்யம் ஸர்வத்ரோத்தா
வித்யாவிஜ்ஞாநகேவலஸ்து தி.

சகலன் பிரளயாகலனாகிறதற்கும் விஞ்ஞானகலனாகி றதற்கும் + ஏதுவந்தரம் தத்துவங்களுடைய பிரளயத்தி லே கலைநீங்குகையினால் ஸ்தூல சூக்குமதேக மிரண்டும் விடப் பட்டுப் பிரளயாகலனென்று பெயராவன் நிவிருத்திப் பிரதி ஷ்டாகலர் சர்வகன்மமு மேற்சொல்லுகிற வுபாயத்தினாலே நசிக்க வதனால் பிராகிருதமாயிருக்கிற தூலசூக்கும தேகமிரண் டும் விடப்பட்டு மேல் மிசிராத்துவாவிலே புசிப்பதான கன்ம த்தையுடையவன் பிரளயாகலனாவன்.

+ ஏதுவந்தரம் - வேறு ஏது

தீக்ஷையிலே கலாதத்துவபரியந்த சோதனையினாலே யாத ல் விவேகமாயாபுருஷத்தினாலேயாதல் யோகாப்பியாசத்தினா லே ன்மமுண்டானத்தை யெல்லாமறிந் தந்தக் கன்மாநுகு ணமான தேகங்களை யேககாலத்திலே யெடுத்த சர்வகன்மப லங்களையும் புசித்ததனாலேயாதல் பஞ்சீகரண பஞ்சகோசவி வேகஞான யுக்த் சந்நியாசத்திலே யாதல் சர்வகன்மங்களு

நசிக்க விந்தக்கன்மங்களுக்குக் காரணமு மாதாரமும் தத்துகு ணமாயிருக்கிற தநுவாதிகளுக் குபாதாந காரணமாயிருக்கிற மாயையுந்தநுவாதிகளுக் கேதுவாயிருக்கிற கன்மநீங்குகையினு லே தானும் நீங்க வாணவ மலமொன்றுமே சேஷிக்கையினு ல் விஞ்ஞான கேவலனுவன்.—

[illegible]

கனையிலருட்பரன் நிராதாரமாகி முதலிருவர்க்குந் தவி தாசத்திநி பாததான் மலங்கழிப்பன் - வரம்பிகந்த கருணை நிதியான சிவன் விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்கு ஸ்பரிசத்தி ஞலே மாயையும் மந்திரோபதேசததினலே கன்மத்தையும் - நீக்கவேண்டுவ தில்லை யாதலால் ஆதார தேகாதிக ளன்றி முதற்சொன்ன விஞ்ஞானகலர் பிரளயாகல ரிரண்டு வகையிற் பக்குவருக்குந் தனது சிற்சத்தி யபிவியத்தினலே அஞ்ஞானத் தை நீக்குவன். அதெவ்வா றெனனில்?

தீவ்ர சத்திநி பாதத்தையுடைய விஞ்ஞான கலரையும் பிரளயாகலரையும் பிரளயாதியிலும் பிரளயாந்தத்திலும் அநு க்கிரகம் பண்ணுவர், அவர்க ளப்பொழுதே சிவனுவர்கள். வி

ஞ்ஞான கேவலர்களிலே தீவ்ர சத்திநி பாதத்தை யுடைய வர்களை சிருட்டியாதியிலே அநுக்கிரகம் பண்ணி யதிகார மல மாத்திரம் நிறுத்தி சர்வஞ்ஞத்துவாதி × ஷாட்குண்ணியாபி வியத்தராகப் பண்ணி சுத்தாத்துவ புவநபதிகளாய் மந்தி ர மந்திரேசுர மந்திரமஹேஸ்வரர் அணுருத்திரர் அணுசதா சிவ ரென்னும்படிக்குச் சுத்த வித்தியாதி தத்துவங்களிலே மஹாபோகங்களைப் புசித்து ருத்திர மஹேஸ்வர சதாசிவ துல்லியரான அபரமுத்தரா யிருந்து பிரளயகாலத்திலே பர மமுத்தி யடையும்படி பண்ணுவர். விஞ்ஞானகலரில் தீவ்ரசத் திநிபாதம் வாராத பேர்கள் பழயபடி கேவலராயே யிருப்பர்.

× ஷாட்குண்ணியம் - ஆறுகுணம்

ப்ரளயாகலரிலும் தீவ்ரசத்திநி பாதத்தை யுடையவர்க ளை யநுக்கிரஹித்து அதிகார மலமாத்திரம் நிறுத்தி ஷாட்கு ண்ணியாதி குணாபி வியத்தியாகப் பண்ணி அசுத்த மாயா புவ நாதிகளாகிப் பிரளயகாலத்திலே பரமமுத்தி யடையும்படிச் செய்வர். இருவகையில் தீவ்ரசத்திநிபாதத்திலுலே பிரளயாதி யிலே அநுக்கிரஹிக்கப் பெற்றபேர் பிரளயாந்த பரியந்தம் நின் மல சுழுத்தியை யடைந்திருந்து சிருட்டிகாலத்திலே சுத்தா த்வ அசுத்தாத்வாக்களில் புவனபதி யாவர்கள். பிராகிருத கன்ம க்ஷயம்வாராமல் பிரளயத்திலே கலைகழன்று பிரளயாக லரென்று நின்றபேரிலே அபக்குவரானபேர் சிருஷ்டி காலத் திலே சகலரோ யாவர்கள்.

தத்ராத்யௌ ஶுத்தமார்க்கே — யாந்திஶேஷா ஶக்திஸம்பாத்
பின்னாஸ்ஸம்ஸாரமக்னா: ஸம்ஸாரிணோ வா ஸம்ஸரந்தி
ஸந்தானவாஸனயா யோநிஷு ||

தத்வப்ரகாசிகாயாம் — [illegible]

கரையிலருட்பரன் றரையிலாசான்மூர்த்தி யாதாரமாகித் தரித்துச் சகலர்க்குக் கன்ம வொப்பிற் சதுர்த்தா சத்திநி பாதத் தான்மலமொழிப்பன் - சகலர்க்கு ஸ்பரிசத்தினாலே மாயை யையும் மந்திரோபதேசத்தினாலே கன்மத்தையும் பாவனையினா லே ஆணவத்தையு மொழிக்க வேண்டுகையால் பூமியின்கண் ணாசாரிய லக்ஷணம் + லக்ஷிதமான தேகத்தை வேறற அதிட்டித்துக்கொண்டு நின்று சகலரிலே கன்ம சாம்யமு மாணவமல பரிபாகமு முற்ற விடத் துண்டாம் மந்தம் மந்ததரம் தீவ்ரம் தீவ்ரதரம் என்னும் நாலுவித சத்திநிபாதானுகுணமாகச் சகலர் சோதனையிலே தத்துவங்களையுங் கன்மங்களையும் மாயையையும் ஆணவமல சத்திகளையும் நீக்குவன்.

சத்திநி பாதத்துக்கு மலபரிபாகம் ஏதுவெனபது விஞ்ஞான கலர்க்கே யாதலால் சகலர்க்குக் கன்மவொப்பிலேயென் றிவ்விடத்துக் கூறப்பட்டதே யென்னில்? சகலர்க்குக் கன்ம சாம்யமே ஏதுவல்ல. சத்திநிபாதத்துக்கு மலபரிபாகமே ஏதுவென்பது மூவகையான்மாக்களுக்கும் ஒத்த சித்தமாகையாலும், விஞ்

ஞானகலர்க்குக் கன்மமில்லாம லிருக்கையினாலும் சகலர்க்கு விசேஷித்துக் கன்ம சாம்யமும் வேணுமென்ற தெனவறிக.

\+ லக்ஷித - குறிக்கப்பட்ட

÷ அநுக்த சித்தம் - சொல்லாமலேற்பட்டது.

தத்ர ஸூத்ரம் பௌஷ்கரே — ஸகலாநாஞ்ச ஸம்ஸ்க்ருத்ய ஸம்ஸ்காராணாம் । கர்மணாம் ஸ்யாத் ஸமத்வஞ்ச விசேஷதஸ்ததேவ ॥ தத்ர ஸ்யாத் தேஹ ஸம்பந்தே க்ரியாவசவ்ருத்தி தஸ்மிந் ।

சத்திநிபாதமாவது, ஆன்மஞானத்தைத் தடுக்கும் ஆணவசத்தி யதிகார நிவிருத்திக்குப் பக்குவம்வந்து நழுவின அவசரத்திலே முற்பிற்பாடற சகதேக பந்துவான சிவனுடைய சிற்சத்தியானது பதிந்து ஆன்மாவினுடைய நித்தியஞானக் கிரியையை யபிவியத்தியாக்குவது.

தத்ர ஸூத்ரம் — தத்பரிபாகஸ்ய பரிகாரஸ்ய நிவர்த்தந தத்சக்திரவ்யக்தா । வ்யக்தி ரூபா யாநந்தஞ்ச மஹேந்த்ரா ஸம்பந்நிவர்த்தி.

இந்த ஆணவமல பரிபாகாநுகுணமாகச் சிற்சத்தியானது அற்பம் பிரகாசிக்கிறபொழுது ஆணவ சத்தியு மற்பநீங்கும். அதிகம் பிரகாசிக்கிறபொழுது அதிக நீங்கும்.

சிற்சத்தி யபிவியத்தியானது ஆணவமல பரிபாகத்தை யபேக்ஷிக்கவும், ஆணவமல நிவிர்த்தியானது சிற்சத்திப் பிரகாசத்தை யபேக்ஷிக்கவும் வேண்டுகையில் * அந்யோந்யாஸ்ரய மென்னில்? அதல்ல. சூரியோதயமு மந்தகார நிவிர்த்தியும் முற்பிற்பாடற வேககாலத்திலே யானதுபோல சித்தபிவியத்தியு

மஞ்ஞாந நிவிர்த்தியும் ஏககாலமாகையால் அந்யோந்யாச்ரய தோஷமில்லை.

* அந்யோந்யா ச்ரயம்-ஒன்று மற்றொன்றைவேண்டுதல்

ததா2 சோக்தம் பௌஷ்கரே — ஸர்வே ஹ்யந்யோந்யஜந்யே ச ஸர்வம் ஸத்ஸதஸத்திச்யுதிஷு | யாவந்தி தாவந்தி ஹ்யேவந்து ஸ்வ ப்ரத்யவஸ்திதிரேயதா ||

சத்திநிபாதம் நாலென்றது, நிவிருத்திசத்தி பதிந்தபொழுது மந்தம். அப்பொழுது நித்தியா நித்திய விவேகத்தைபபண்ணி விஷயங்களிலே † விரக்திவரும்.

† விரக்தி - ஒழிவு

பிரதிஷ்டாசத்தி பதிந்தபொழுது மந்ததரம், அப்பொழுது முதலுண்டான விவேகமும் விரக்தியும் பிரதிஷ்டிதமாம். இவ்விடத்து தரப்புப்பிரத்தியம் நியூநத்திலே.

வித்தியாசத்தி பதிநதபொழுது சிவஞானம் பிரகாசம்; இது தீவ்ரசத்திநிபாதம்.

சாந்திசத்தி பதிந்தபொழுது தீவ்ரதரம், இவ்விடத்துத் தரப்புப் பிரத்தியம் அதிகத்திலே. நிர்விகார ஞானத்தினுலுபசாந்திவரும்.

இந்த சத்திகளுக்குச் சத்திமானுயிருக்கிற சிவனுடைய நாமமும் நிவிர்த்தீசன் பிரதிஷ்டேசன் வித்யேசன் சாந்தீசன் என்று வியவஹரிக்கப்படும். சத்திசிவனுக்கு ஆதாரதேக கரணதிளாகையா லிவ்விடத்துச் சத்திகள் ஸ்தானமென்றுஞ் சொல்லப் பெறும்.

ததா2 சோக்தம் ம்ருகே3ந்த்3ரே — நிவர்த்யதே'கி2லம் யஸ்யாம் யாஸ்யாம் வா நிவ்ருத்திகா | நிவ்ருத்திரிதி தத்ஸ்தா2நம் தஸ்யைவம் நிவ்ருத்திஷு || நிவ்ருத்தஸ்ய ப்ரதிஷ்டா2

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இவ்வாறு கன்ம சாம்யமு மலபரிபாகமுமான காலத்தி லே ஆன்மாவினுடைய ஞானதிருஷ்டியை விழிப்பிக்கிற ஈசுவர சத்தியானது பதியும். அது பதிந்தமாத்திரத்திலே யாணவமலத்தினாலே யான்மாவை விஷயோன்முகமாகப் பண்ணுவிக்கிற திரோதாந சத்தியானது மலத்தைச் செலுத்தாமல்விடும். அந்ததிரோதாநசத்தி நிவிருத்தியான மஹான்மாவுக்குத் துக்க ‡ சாகரமாகிற சம்சாரத்திலே §சடிதி வைராக்யமுண்டாம். கண்ணைப் பெற்றவன் காக்ஷியை யிச்சிக்குமாப்போல ஞான திருஷ்டியைப்பெற்ற ஆன்மா சிவனுடைய பாதாரவிந்த தரிசனத்திலே யிச்சையுண்டாய் எப்பொழுது தரிசிப்பேன்,எப்பொழுது பந்தத்திலே நின்றும் முத்தனாவேன், ஆரவனைத் தரிசிப்பிக்கிறவரொன்று புத்தியையுடையவனாய் இவ்வாறு சம்சாரத்திற் பயப்பட்டிருக்கிறவனை யாசாரிய மூர்த்திமானாகிய சிவன்சத்திநிபாதாநுகுணமாக வநுக்கிரகம்பண்ணுவன்.

‡ சாகரம் - சமுத்திரம்

§ சடிதி - சீக்கிரம்

சத்திநிபாதாநுகுணமான அநுக்கிரஹமாவது? மந்த சத்திநிபாதத்தை யுடையவனுக்கு நிவிர்த்திகலையி லுண்டான புண்ணிய பாபங்களைச் சோதித்துப் பிருதுவியாதி யாகாச பரியந்த

முண்டான தத்துவங்களைத் தரிசித்து நீங்கும்படி யுபதேசித்துப் பிரமாண்டோ ¶ பரிலோகங்களிலே + யோசிப்பது.

¶ உபரி - மேல்

+ யோசித்தல் - கூட்டுதல்

மந்ததர சத்திநிபாதத்தை யுடையவர்களுக்கு நிவிர்த்தி பிரதிஷ்டை யிரண்டுகலையில் புண்ய பாபங்களையுஞ் சோதித்துப் பிருதிவியாதி பிரகிருதி பரியந்த முண்டான தத்துவங்களைத் தரிசித்து நீங்கும்படி யுபதேசித்து புருஷோபரி தததுவங்களிலே பிரளயாகலனாக விருக்கும்படி யோசிப்பித்து.

தீவ்ரசத்திநி பாதத்தை யுடையவனை நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தியை மூன்றுகலைகளையுஞ் சோதித்து பிரதிவ்யாதி மாயாந்தந் தரிசித்து நீங்கும்படி யுபதேசித்து சுத்தவித்யாதி யபரமுத்தி ஸ்தாநமாகிய சுத்தாத்துவ ×வாசியாகப் பண்ணுவது.

தீவ்ரதர சத்திநிபாதத்தை யுடையவனைப் பஞ்சகலையுஞ்சோதித்து நாமரூபிதமும் நிராதாரமும் பிரத்தியக்ஷா ÷ கம்யமும் அநுமாநாகம்யமும் § ஷட்த்ரிம்சத் தத்வாதீதமுமாய் அகண்டாகார சச்சிதாநந் தாத்வய பரிபூர்ண பரமசிவத்திலே வேறறத் ததாகாரமாம்படி யோசிப்பது.

× வாசி - இருக்கிறவன்

÷ அகம்யம் - அறியக்கூடாதது

* ஷட்திரிம்சத் - முப்பத்தாறு.

𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍌𑌷𑍍𑌕𑌰𑍇 — 𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌮𑌲𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌵𑌿
𑌪𑌾𑌕𑍇 𑌸𑌹𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 । 𑌮𑌨𑍍𑌦𑌤𑍀𑌵𑍍𑌰𑌾𑌦𑌿 𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍁
𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑍀 ॥ 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌪𑌤𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈
𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌧𑌿𑌕𑌾 । 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌪𑌤𑌿𑌤𑌾 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌶𑌿𑌵

𑌤𑍍𑌰𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑍍𑌤𑌤𑌃 ‖ 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂
𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌸𑌾𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌦𑍇𑌹𑌦𑍋𑌷𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌂
𑌹𑌾𑌰𑌾𑌦𑍍𑌵𑌾𑌦𑌵𑌂𑌕𑌜𑌂 𑌯𑌾𑌵𑌤𑍍 ‖ 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇
𑌸𑌂 𑌜𑌾𑌤𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌦𑌂 𑌮𑌯𑍀𑌤𑌃 𑌕𑍃𑌤𑌾 । 𑌕𑌾𑌵𑌾 𑌦𑌸𑍍𑌸𑍁𑌖𑌿
𑌤𑌾𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑍀𑌤𑍍𑌯𑌸𑌂𑌜𑌾𑌯𑌤𑍇𑌽𑌤𑌿𑌤𑌃 ‖ 𑌵𑌨𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰
𑌤𑌾𑌪𑌤𑌾 𑌦𑌨𑍍𑌯𑌰𑌾𑌣𑌾𑌤𑍍𑌤𑌿 𑌵𑌿𑌸𑌰𑌃 ।
𑌦𑍇𑌹𑌿𑌕𑌾𑌦𑍀𑌨𑍍𑌤𑌰 — 𑌚𑍋𑌰𑍈𑌰𑌪𑌹𑍃𑌤𑍇 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑍇
𑌵𑍈 𑌚𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌨𑌵𑌜𑍀𑌵𑌿𑌤𑍇 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌶𑍋𑌕 𑌯𑍋𑌜𑍀
𑌤𑌾 𑌦𑍁𑌃𑌖𑌤𑌿𑌸𑌾𑌸𑌸𑍍𑌤𑍍𑌰 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌃 ‖ 𑌯𑌥𑌾𑌜𑌲𑌂 𑌜𑌲𑍇
𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑍀𑌰𑍇 𑌕𑍍𑌷𑍀𑌰𑌂 𑌵𑍃𑌤𑍇 𑌵𑍃𑌤𑌂 । 𑌕𑌵𑌿 𑌶𑍇𑌷𑌂
𑌵𑍇𑌤𑍍𑌤𑍁𑌦𑌾𑌤𑌾𑌤𑌾 𑌵𑌰𑌦𑌾𑌤𑍍𑌤𑌨𑍀𑌤𑌿 ‖

*வைராக்ய ஏதுபத்து. அவையாவன? வியாதி பீடையாலே வரும் ஜநக வைராக்கிய மொன்று,*

*தன்னுடைய தேஹ தோஷத்தைக் கண்டு வரும் தேஹவைராக்கிய மொன்று,*

*சகல ஐஶ்வரியங்களையுங் குறைவற வனுபவித்து இனிப் போதுமென்று வரும் ஐஸ்வரிய வைராக்கியமொன்று,*

*ஆதியாத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக தாபத்திரயங்களினாலே வரும் பிரபஞ்ச வைராக்கியமொன்று,*

*அர்த்தத்தைத் தேடுகிறதினாலு மிரக்ஷிக்கிறதினாலும் கள்ளர் கொண்டுபோகிறதினாலும் யாதொரு துக்க முண்டானதினாலும்வரும் திரவ்ய வைராக்கிய மொன்று,*

மாதா பிதா ஸ்திரீ புத்திரன் இஷ்டபந்து ஸ்நேகித ரிவர்களைப் பிரிந்த ததினாலே கூட்டமெல்லாம்பிரிந்த காலத்தில் துக்கத்துக் கேதுவென்று வரும் சங்க வைராக்கிய மொன்று,

காமுகனா யிருக்கிறவன் முன் மோகமாயிருக்கிற ஸ்திரீயினிடத்திலே குணத்திலே யாகிலும் தேஹத்திலே யாகிலும் வைராக்கிய ஏதுவான தொரு தோஷத்தைக் கண்டு விரகதிவரும் ஸ்திரீ வைராக்கிய மொன்று,

அன்னபானாதிக ளொருபொழு தில்லாதிருக்கிலும் தேகம் நில்லாது, எத்தனைநா ளொத்தனை வகையிலே புசித்தாலும் திருப்தியை யடையாதென்றுவரும் புசிப்பு வைராக்கிய மொன்று,

தானத்துக்குப் போய்த் தள்ளுண்டதினால் வரும் பிரதிக்கிரஹ வைராக்கியமொன்று,

தேஹத்திலே யாதொரு ஏதுவுமில்லாமல் பூர்வஜன்ம சிவபூஜா புண்யபலத்தினாலே தேஹாதியான சர்வ வஸ்துக்களினும் வரும் வைராக்கிய மொன்று,

ஆகப்பத்து.

இவற்றுள் நிரு ஏதுகமாக வருகிற வைராக்கிய முத்தமம். நின்ற வொன்பதும் மத்யமம்.

[illegible]

தேஷு । ஸ்நிஷ்டாதியஜ்ஞாநஸம்பந்நாஃ ஸர்வே வேதவி-
தஃ ॥ ஆசார்யஸ்ய காரணம் ஸந்நிதி உஷா விரஜ்ய-
தே । காருண்யாத் ஸ்திரஸ்த்வாகிலெவைராக்யகார-
ணம் ॥ ஸத்ராவைராக்யாதிஸ்ய ஸம்ஸார
விகாரணம் । ஸத்யஜ்ஞ்யதேஷஃவர்நியாஜ
நவாநயா ॥ ஸகாரஸ்ய வ்யாயெந ஸ்தாநீ வ
ந்யாதிதஸ்ஸக்ஷணாத் । அஸ்வரோராய ஊதா ஸெ
தாவைராக்யாபஜாயதே ॥ க்வசித்புத்ரஸூஹா
ஜீஹ்யா வைராக்யாபஹுதி । ஸுஶாஜாயதே க்ஷ
ஶீக்ரஃ வண்யம்வஸவாத் ॥ ஐதைவ தேஷு
யாவத்தாருபயா ஶிவஶாஸநேஜதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—— o ——

சகலனுக்குமாத்ரம் அனுக்கிரஹமென் றெண்ணவேண்டாம் மூவருக்கு முண்டென்னு முறைமை யுரைக்கின்றார்.

நிராதாரமாகி - நிரதிகரணருய்நின்று,—

துவிதா சத்தி நிபாதத்தால் தீவிர தீவிரதா சத்தி விழுக லாற் றீவிரதரத்தாற் பரமுத்தி, தீவிரத்தால் அபரமுத்தி.

தீவிரத்துள்ளும் மந்த மந்தகர சத்திநிபாத முண்டு.

அபரமுத்தி யனேகவிதமாதலால் நிரதிகரணனுக்கிரகஞ் சகலர்க்கு மேகதேசத்திற் சாற்றியதுண்டு,—

ஆசான் மூர்த்தி ஆகாரமாகித் தரித்து - சாதிகரணனாயி ருந்து,—

சதுர்த்தாசத்திநிபாதத்தால் - மந்ததராதியால்,—

மலங்கழிப்பன் - மலத்தை யொழிப்பன்.

ஒழிப்பனென்பதற்குப்பின் சிவத்துவாபிவியத்தியும் செய் வனென்பது செப்புக.

விஞ்ஞானகலரென்பது தலைக்குறையாதலால் விஞ்ஞா னகலரென நின்றது.

விஞ்ஞானத்தால் மாயாபுருஷவிவேகஞானத்தால் கலை முதல் முப்பது தத்துவத்தால் மூடப்பட்ட சூக்குமதேகமில் லை யாது சில பெயர்க் கவர்கள் விஞ்ஞானகலர்கள்.

பிரளயத்துக் கலைநீங்கினபெயர் பிரளயாகலர்.

ஆதலால், இருவர்க்கத் தக்கும் நிரதிகரணனுக்கிரகம்.

சிலபெயர் அனந்தாதி யணுசதாசிவாதிய ரிவர்களை விஞ்ஞா னகலர்களென்றும், அபர மந்த்ரேசுவரர்களாகிய ஸ்ரீகண்டா தியர்களைப் பிரளயாகல ரென்றும் பேசுவார்கள்; அவர்கள் மல மலகன்ம முத்தராய்ப் பதிபதார்த்தத்துள் அந்தர்ப் பவித்து மலமாத்திரகலுஷித விஞ்ஞானகலச்குறி. மலங் கன்மமாத்திர கலுஷித பிரளயாகலக்குறி, பிரியாது தரியாமையால் அப்படிப் பேசுதல் அறியாமையாலென வறிக.

பெரியோர் சிலவிடத் தப்படிப் படித்துப் பேசியதேது ? முன்னிருப்பைக் குறித்துக் கூறிய தெனக் குறித்தறிக.

பிரளயாகலர்க்குத் தேவகுருவா யனுக்கிரகம் பண்ணுவ ரென்று சிலர் பேசிய தேது? தேகமிலாப் பிரளயாகலர்க்குத் தேவகுருவாய்வந் தனுக்கிரகம் பண்ணுவ ரென்பது செய்திதெ ரியாது செப்பியது.

இருவர்க்கும் நிராதாரமாகி யெனுமாசிரியர் வசனத்துக்கும் சிவாகமத்துக்கும் விரோதச் சொல்லுமாம்.

ஆன்மதத்துவ மிருபத்திநான்கிற்கு மேல் பிரகிருதி முத்சராயிராகாதி கலாந்தமாகிய தத்துவங்களினிரஞ்சனர் தவிரச்சாஞ்சனரா யிருப்போர்கள் பிரளயாகலர்களென்று சிலர் பேசிய தேது? ஸ்ரீமத் காமிகாகமத்தில் ஏகதேசத்தில் அப்படியிருத்தலால், இசைத்தார்கள்.

அச்சகல விசேஷ பிரளயாகலரைக் குறித்து உருத்திர தேவர்களிற் றேவகுரு வென்பது கூடும், தேகமில்லாப் பிரளயாகலர்க்குத் தேவகுருவென்பது கூடாது; மற்றது பிரசித்தப் பொருள்.

விஞ்ஞானகலர்கள் பரிபக்குவ மலர்கள் அபரிபக்குவ மலர்கள் என்றிருவகையர்.

அந்த இருவகையருக்குட் பரிபக்குவ மலர்கள் சிவானுக்கிரகம்பெற்றுப் பதிபதார்த்தங்களாய் ஆதிமுத்த சிவன்களாயும் அணு சதாசிவர் அநந்தாதிகள் மந்திரர்கள புவனவாசிகள் எனனும் அபர முத்த சிவன்களாயும் போயிருப்பார்கள்.

அபரிபக்குவமலர்கள் மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக் கிழ் மலமாத்திர கலுஷிதர்களாய்ப் பசுபதார்த்தங்களா யிருப பார்கள்.

பிரளயாகலர் பரிபக்குவமலர் அபரிபக்குவ மலரென விருவகையர்.

அவவிருவகையருள் பரிபக்குவமலர்கள் சிவானுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாய் ஆதிமுதத சிவன்களாயும் ஸ்ரீகண்ட வீரபத்திரர் முதலிய அபரமந்திரேஸ்வரர்கள் புவனவாசிகளென்னும் அபரமுதத சிவங்களாயும் போயிருப்பார்களா.

அபரிபக்குவமலர்கள் சிருஷ்டிகாலத்திலே சகலராவார்கள்,

சகலர்கள் திரிபந்திகளென்றும் விஞ்ஞாநிகளினாலே கன்மசாசம்பந்த விஞ்ஞான கைவல்லியம் வருமளவும் துவிபந்திகளென்றும் இருவிதமாயிருப்பார்கள்.

அந்த விருவிதமாயிருக்குஞ் சகலர்கள் தூலதேகிகளென்றும், அப்பிராத்தவாகிய சரீரிகளென்றும், பிரநட்டவாகிய சரீரிகளென்று சொல்லப்படும் தூலவிதேகிகளாயும் இருப்பார்கள்.

திரும்ப அந்த நால்வகையோருந் தனித்தனிப் பரிபக்குவ மலர்களென்றும் அபரிபக்குவ மலர்களென்றும் எண்வகையர்.

அவ் வெண்வகையருள், பரிபக்குவ மலர்கள் என்னும் நால்வகையினரும் சிவானுக்ரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாய் ஆதிமுத்த சிவன்களாயும் நானுபத முத்தராயிருக்கும் அபரமுத்த சிவன்களாயும் போயிருப்பார்கள்.

அபரிபக்குவ மலர்களெனும் நால்வகையோரும் சம்சாரிகளாயிருப்பார்கள்.

ஆக மூவகையோரும் பன்னிருவகையரென்பது பார்த்தறிக.

சகலானுக்கிரகங் குருத்திருமெனி குறித்திருக்குஞ் சிவன் பண்ணுவது.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவற்றுட் 'குருவாகிவந் துணர்த்தி'என்ற முதற்கூற்றுப் பொருளை ஒன்பதுசெய்யுளான் வகுத்துக் கூறுவான் றொடங்கினார்.

எண்ணரிய வுயிர்களெல்லாம் பந்தவேறுபாட்டான் மூவகைப்படும். அவற்றுள் மும்மலங்களுமுடைய சகலவர்க்கத்திற்கு நால்வகைச் சத்திநிபாத முறைமையின்வைத்து அறிதுணர்

த்த வேண்டுதலின், அவ்வுயிர்கட்கே குருவாகி வந்துணர்த்தி யென மேற்கூறிய சாதாரதீக்கை செய்வது. ஒருமல மிருமலமுடைய மற்றை யிருவர்க்கத்திற்குந் தீவிரந் தீவிரதரமென்னும் இருவகைச் சத்திநிபாதத்தின் வைத்துணர்த்த வமையுமாதலின், சகலவர்க்கம்போற் குருவடிவின மறைந்து நின்று படர்க்கையா னுணர்த்தப்பட் டறிதுணர வேண்டாது அவ்விருதிறத்துயிர்கட்கும் முறையே உண்ணின்று முன்னின்று முணர்த்துவதாகிய நிராதாரதீக்கை செய்யப்படு மென்பதாம்.

இதனானே தீக்கை இருவகைத் தென்பதூஉம் அவ்விருவகைக்குமுரியா ரிவரென்பதூஉங் கூறப்பட்டன.

இனி இவ்விரண்டனுள் எண்டெடுத்துக்கொண்ட சாதாரதீக்கையிற் படும் பாகுபாடும் அவற்றதியல்பும் வகுத்துக் கூறுதற்கெழுந்தன வருஞ்செய்யுட்க ளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன்னே சொல்லப்பட்ட வான்மவர்க்க மூன்றுவகைப் பட் டிருக்குமென் றருளிச்செய்கிறார்.

உரைதருமிப் பசுவர்க்கமுணரின் மூன்றும்- இவ்வியாகமங்களிற் சொல்லப்பட்ட விந்த வான்மவர்க்கத்தை விசாரிக்கில் மூன்றுவகைப் பட்டிருக்கும். அவையாவன?—உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - மேலான விஞ்ஞானகலரொன்றும் ப்ரளயாகலரொன்றும் சகலரொன்றும் — நிரையின்மல மலங்கனம மலங்கன்மமாயை நிற்கும் - இந்த அடைவிலே விஞ்ஞானகலர்க்கு ஆணவமல மொன்றும் ப்ரளயாகலர்க்கு ஆணவமலமுங் கன்மமலமும் ஆக விரண்டும் சகலர்க்கு ஆணவமலமு மா

யாமலமுங் கன்மமலமும் ஆக மூன்றுமலமும்; இவை யநாதியே யுள்ளதாய் நிற்கும்.—முதலிருவர்க்கும் - முற்பட்ட விஞ்ஞான கலரிற் பிரளயாகலரிற் பக்குவராயுள்ள விரண்டுவகைக்கும்,— நிராதாரமாகிக் கரையிலருட் பரன்றுவிதா சத்தினிபாதத்தாற் கழிப்பன்மலம் - எல்லையில்லாத வனுக்கிரகத்தை யுடைய பரமேஸ்வரன் அவர்களுக்குப் பிராணனாய் நின்ற முறைமையிலே தீவ்ரம் தீவ்ரதரம் என்றுசொல்லப்பட்ட விரண்டு சத்தினிபாதத்தாலு மலங்களைப்போக்கி ஞானத்தைப் பிரகாசிப்பிப்பன்.— சகலர்க்கு - சகலரிற் பக்குவரா யுள்ளவர்களுக்கு,—கன்மவொப்பில்- புண்ணியபாவங்களிரண்டுந் தன்னிலேராமற் குறையாமல் இரண்டுமொத்த வவதரத்திலே,—தரையி லாசான்மூர்த்தி யாதாரமாகித் தரித்தொழிப்பன் மலம் - பூமியிலே ஆசாரியமூர்த்தியிலே யதிட்டித்துக்கொண்டு நின்று மலங்களைப்போக்கி ஞானத்தைப் பிரகாசிப்பிப்பன்.—சதுர்த்தா சத்தினி பாதத்தால்-மந்தம் மந்ததரம் தீவ்ரம் தீவிரதரம் என்று சொல்லப்பட்ட நாலுவகைச் சத்தினி பாதத்தாலும்.

இதற்குப் பிரமாணம். சிவஞானபோதம்-அ-சூ,ங-வெ" மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க், கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு, முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பரமேஸ்வரன் மூவகை யான்மவர்க்கத்தில் விஞ்ஞானகலர் பிரளயாகலரிற் பக்குவரா யுள்ளவர்களுக்கு நிராதாரமாய்நின்று தீவ்ரம் தீவ்ரதரம் என்கிற சத்தினிபாதத்தாலே மலங்களைப் போக்கி இரட்சிப்பனென்றும், சகலரில் பக்குவரா யுள்ளவர்களுக்குக் கன்மவொப்பில் பூமியிலே ஆசாரிய மூர்த்தியை யதிட்டித்துநின்று மந்தம் மந்ததரம் தீவ்

ரம் தீவ்ரதரம் என்கிற நாலுவகைச் சத்திநிபாதத்தாலும் இர
ட்சிப்ப னென்னுமுறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உரைதரு மிப்பசுவர்கம் - எண்ணிறப வுயிர்களெல்லாம்,—
உணரின் - உணருமிடத்து,—உயரும் விஞ்ஞானகலர் பிரளயாக
லர் சகலர்-உயர்ந்த விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் சகலரு
மென,—நிரையின்மல மலங்கன்ம மலங்கன்மமாயை - முறை
யே யாணவமலமு மதனோடு கன்மமலமு மவைகளோடுமாயா
மலமுமாக,— நிற்குமூன்றும் - இப்பந்த வேறுபாட்டான் மூவ
கைப்படும்.—சகலர்கருக் கன்மவொப்பில்-அவற்றுள் மும்மலங்
களுடைய சகலவர்க்கத்திற்கு இருவினை யொப்பின்கண்,—சது
ர்த்தா சத்திநிபாதத்தால்-நால்வகைச் சத்திநிபாதமுறைமையி
ன்வைத்துத் தெரித்துணர்த்த வேண்டுதலின்,—தரையிலாசா
னமூர்த்தி யாதாரமாகித் தரித்துமலமொழிப்பன்- இவ்வுலகின்
க ணவ்வுயிர்கட்கேகுருமூர்த்தியாதாரமா யதிட்டித்துநின்று
மல நீக்குவதாகிய சாதாரதீக்கைசெய்து,—முதலிருவர்க்கும்-ஒ
ருமலமிருமலமுடைய மற்றை யிருவர்க்கத்திற்கும்,—துவிதா
சத்திநிபாதத்தால் - தீவிரம் தீவிரதரமென்னு மிருவகைச் சத்
திநிபாதத்தின்வைத் துணர்த்தலையு மாதலின்,—கரையிலரு
ட்பரன் மலங்கழிப்ப னிராதாரமாகி - அளவிடுதற்கரிய கரு
ணைவடிவாகிய முதல்வன சகலவர்க்கம் போற் குருவடிவின் ம
றைந்து நின்று படர்க்கையா னுணர்த்தப்பட் டறிதுணர வேண்
டாது அவ்விருதிறத் துயிர்கட்கு மலநீக்குதற்கு முறையே யுண்
ணின்று முன்னின் றுணர்த்துவதாகிய நிராதாரதீட்சை செ
ய்யப்படும்.

இதனானே தீக்கை யிருவகைத் தென்பதூஉம் அவ்விருவகைக்குமுரியா ரிவரென்பதூங் கூறப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை.



இனிச் சகலர்க் காசாரியன் செய்யுந் தீக்கையாதி தொகுத் துணர்த்துகின்றார்.

பலவித மாசான்பாச மோசனந்தான்பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகமானதமு, மலகில்சா
த்திரம்யோக மவுத்திராதி யநேகமுள வவற்றினவுத்
திரியிரண்டாமறியி, னிலகுஞா னங்கிரியை யெனஞா
னமனத்தா லியற்றுவது கிரியையெழிற் குண்டமண்ட
லாதி, நிலவுவித்துச் செய்தல்கிரியா வதிதானின்று
நிர்ப்பீசம்பீச மெனவிரண்டாய் நிகழும். (க)

(இ-ள்.) பலவித மாசன் பாச மோசனந்தான்பண்ணும்படி. ஆசாரிய னான்மாக்களுக்குப் பாசத்தைச் சேதிக்கையின பொருட்டுச் செய்யுந்தீக்கை பலபிரகாரமா யிருக்கும். அஃதெவ்வாற்றா னெனின் சாதிபேதத்தாலு மலபாக தாரதன்மியத்தாலும் பலவாகக் கூறியது. அவையாவன?

நயனத் தருள் பரிசம் வாசகமானதமுமலகில்சாத்திர மியோகம். மீனானது சினையைப் பார்த்த மாத்திரத்திலே யதனைப் பேதித்துத் தன்னைப்போலாக்குமாறுபோ லாசாரிய னுண்மைப் பொருளிலே சித்தத்தை வைத்துத் திவ்வியமான நயனத்திருலே பார்த்தவனுக்குக் கட்டுப்பட்ட பந்தங்களைச் சோதிக்குமது நயன தீக்கை.

வாரணமானது போல வாசாரியன் றனது வலது கையிற் சிவ அத்தங் கற்பித்துச் சோதிரூப மாகத் தியானம்பண்ணி மாணவகன் றலைதொடங்கிச் சர்வாங்கமும் பரிசித்துப் பின்னாலே விடுவது பரிசதீக்கை.

ஆமையானதுபோல ஆசாரியன் றனது முதலாகிய வுண்மைப் பொருளிலே சித்தத்தை வைத்துப் பரமமான சோதியுடன் கூடித் தியானித்துச் சங்கிதா கிரியா விதிக்குச் செய்யுமாறுபோல மந்திரக் கிரியா பாவனைகளுடன் வழுவின்றி எல்லாதையு முள்ளபடி யறிந்து சோகம்பாவனை பண்ணி யிந்தவையிக்கியத்தினாலே மாணாக்கன் பாசத்தைச் சேதிப்பது மானத தீக்கை. மந்திரங்களை யந்தந்த வனனங்களுக் குடைய மாததிரைகளை யறிந் தேழுமற் குறையாம லுச்சரிக்குமது வாசக தீக்கை.

ஆசாரிய னாகமத்திற் சொன்னப்படி யோதியுணர்த்தி மாணாக்கனுக் கையந் திரிவின்றி யந்த வாகமத்தின் பொருளை யறிவிக்கை சாத்திர தீக்கை.

ஆசாரிய னடிசந்தான மார்க்கத்தினாலே மாணாக்கனுடைய விதய கமலத்திற் பிரவேசித் தவ்விதய கமலத்தி னடுவே விந்துரூபமான வானமாவைச் சுழுமுனை நாடியிற் பிரமரந்திரமளவாகக் கொண்டு சென்று சிவனிடத்தில் யோசிப்பித்து நிறுத்துவகை யோகதீக்கை; ஆகவறுவகை யெனவறிக.

| | |
|---|---|
| அவுத்திராதி யநேகமுள | ஓம சம்மந்தமாகிய அவுத்திரி யென்று சொல்லிய தீக்கையை விசாரிக்கி லேகதத்துவ திரிதத்துவ முதலாகிய தீக்கைபலவுமுளவென் றறிக. |

இந்தவிகற்பம் வருணபத்ததியிற்காண்க.

இத்தீக்கையினுக் கதிகாரி யாவரெனில்? தண்ணிய சாதியி

ஞூர்க்கு அவுத்திரி யாகாவையி னித்தீக்ஷைகளைக் கூறியதென வறிக.

இம்முறைமை காலோத்தரத்திற் காண்க.

"அன்னியர்க்கும் பாசமறுத்திடுக பார்வையினூற்-றன்னது கைவைத்துத் தலை" எனவுமறிக.

அவற்று ளவுத்திரி யிரண்டா மறியில்

அவைகளை விசாரித்தறியி லிரண்டுபிரகாரமாம். அவையாவன?

இலகுஞானங் கிரியை யென

அந்தவவுத்திரி, விளங்காநின்ற ஞானதீக்ஷையெனவும் கிரியாதீக்ஷை யெனவுமாம்.

ஞான மனத் தா லியற்றுவது

தீவிரந் தீவிரதரமென்னும் சத்திநிபாதத்தையுடைய மாணாக்கனுக் காசாரியர் கிரியாதீக்ஷையைப்போல மனோ வியாபாரத்தினாலே செய்து முடிப்பது.

முற்கூறிய ஞானதீக்ஷைக்குமிதற்கும் பேதம்யாதெனில்? சாமானிய விசேடமென விருவிதமாம்.

அவற்றுள் விஞ்ஞான தீக்ஷையென்று சாமிகத்துஞ் சிந்திய விசுவத்துங் கூறலைகயா லீண்டுக் கூறியதே விசிட்ட மெனவறிக; அதனைவிரிக்கிற் பெருகும்.

கிரியையெழிற் குண்ட மண்ட லாதி நிலவுவித்துச் செய்தல்

விதிவழி குண்ட மண்டலமிட்டு வடக்குமண்டபத்தைப் பதினாலுக்குப் பதினாலு குத்திரமேற்றி நூற்றுப் பத்தொன்பது பதமாக்கி நடுவொன்பது பதத்தில் மண்டலேசுர பூசைக்கு வேதிகையும் இதற்குமேற்குங் கிழக்கு மிட்டலிங்க பூசைக்கு வேதிகையுங் குண்டமும் குண்டத்துக்கு வடக்கே கும்பத்தினுக்கு வேதிகையும் அதற்குமேற்கே யாசாரிய ரபிடேகத்துக்குக் கும்பந்தாபிக்க வேதிகையும் அதற்குமேற்கே பஞ்சே

விதி பஞ்சக்தவக்குப் பல்லவம் வைக்கவும் ஆக வேதிகை யஞ்சுக்குங் குண்டத்தக்குப் பதம் (நுச) மற்றவிருபத் தேழிலாசாரிய ரிருக்கவுஞ் சீடனிருக்கவும் தாலீபாகம் பண்ணவும் பஞ்சகவ்யந் தாபிக்கவு மெனவறிக. இதனைச் சூழச் சஞ்சார பதமொன்று மதனைச் சூழ்ந்து கும்பமுதலிய கும்பந் தாபிக்கவு மெனவறிக.

கிரியாவதிதா னின்னு நிர்ப்பீச ம் பீசமென விர ண்டாகி நிகழும்.

அந்தக் கிரியாவதியை விசாரிக்கிற் சபீசம் நிர்ப்பீசம் சாதிகாரை நிரதிகாரை யென நால்வகையுந் தொகுத்தறிய மிடத்துச் சபீச திக்கை நிர்ப்பீசதீக்கையென விரண்டாக விளங்கா நிற்கும். எ-று.

இதற்கு வருணபத்ததியினும் அஞ்சுமானினு மறிக. (ந)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



இனி யாசாரியன் பக்குவான்மாக்களுடைய பாசவிமோசனம் பண்ணுவ தெவ்வாறென்னில்?

(பலவிதமாசான் பாசமோசனம்...தானிரண்டாகிநிகழும்) இது அந்வய மாக்குவது. ஆசான் பாசமோசனம் பண்ணும்படி பலவிதம். அவ்விதங்களாவன,—

நயனத்தருள்-* அவலோகனமானது ச்ருங்காரமென்றும் நிக்கிரகமென்றும் அநுக்கிரகமென்றும் மூன்று விதமாம்.

* அவலோகனம் - பார்வை,

அதிலே யாசாரியன் சிஷ்யனிடத்திலே பண்ணு மவலோகனம் கருடபாவனை கைவந்தவன் பாம்பினாலே கடிபட்டவனைப் பாம்பாகவுந் தான் கருடனாகவும் பாவித்துக் கருடனு

டைய கிரகாவலோகனம் பண்ணி விஷந் தீர்ந்தவாறே யவ னுடைய † ச்ராந்தி நிவிர்த்தி யர்த்தந் தான் சந்திரபாவனை யைப் பண்ணி யவனை யமிர்தகலையினாலே யபிஷேகம் பண்ணி னதாகக் கிருபாவலோகனம் பண்ணினதுபோல; சிற்பாவனா சித்தனான வாசாரியன் பாசநிவிர்த்தியர்த்தமாக நிக்கிரகாவ லோகனமும் ஆன்மாவினுடைய ‡ வாப்பியாய னார்த்தமாக அநுக்கிரகாவலோகனமும் பண்ணுவது சக்ஷுஷ தீக்ஷை.—

† சிராந்தி - இளைப்பு.

‡ ஆப்பியாயநம் - திருப்தி,

பரிசம் - ஆசாரிய தக்ஷிண அஸ்தத்திலே கந்தலேபனத் தைப் பண்ணிச் சிவனை யாசநமூர்த்தி மூலம் வித்தியாதேகம் பஞ்சப் பிரம ஷடங்க மூலமந்திரங்களினாலே புஷ்பங்கொ ண்டு பூஜித்துச் சிஷ்யனுடைய மஸ்தகத்திலே வைத்து, ஸ்பரி சவேதி ஸ்பரிசத்தில் தாம்பராதி லோகங்களினது களிம்பு நீங்கி ஸ்வர்ணமானதுபோல, சிஷ்யனுடைய பாசத்திரயம் நீ ங்கிச் சிவமாம்படி பண்ணுவது ஸ்பரிச தீக்ஷை.—

வாசகம்-வர்ணுப்ரமாநுகுணமாக பஞ்சாக்ஷரத்தை யுப தேசம் பண்ணுவது வாசகதீக்ஷை.—

மானதமும்-ஆசாரியன் றன்னுடைய ரேசகவாயுவினாலே புறப்பட்டு சிஷ்யனுடைய பூரகவாயுவினாலே இருதயத்திலே பிரவேசித்து சிஷ்ய சைதந்யத்தை தவாங்கி துவாதசாந்தமளா வாகக் கொண்டுபோய்த் தம்முடைய இருதயத்திலே சிவ சை தந்யத்துடனே கலந்து உப்பு மப்புங் கலந்து ஏகரசமானது போலப் பாவித்து சிஷ்ய சைதந்யத்தை சிஷ்யதேகத்திலே பிரதிஷ்டை பண்ணுகிறது மானச தீக்ஷை.—

அலகில்சாத்திரம் - முடிவற்ற சாஸ்திரார்த்தங்களை யெ ல்லாம் சங்கிரஹித்து பதிபசு பாசத்தினுடைய லக்ஷணங்களை

யுஞ் சிவ ஜீவர்களுடைய ஐக்கியத்தையும் சத் சம்பிரதாயமாகப் போதிப்பது சாஸ்திர தீக்ஷை.—

யோகம் - நிராதார சிவயோகத்தை யப்பியாசம் பண்ணுவிப்பது யோகதீக்ஷை.—

அவுத்திரி - ‡ஹோத சஹிதமாகப் பண்ணுந் தீக்ஷை அவுத்திரி —

‡ ஹோதசஹிதம் -ஓமத்தோடு கூடியது.

ஆதி யநேகமுள - கீழ்ச்சொன்ன தீக்ஷைக ளாதியாக வின்னு மநேக தீக்ஷையுண்டு —

அவற்றி லவுத்திரி யிரண்டாம்,—அவற்றுகளுக் குள்ளே அவுத்திரி தீக்ஷையானது இருவகைப்படும்.—

அறியில் - இரண்டையு மறியில்,—

இலகு ஞானங் கிரியையெனும் - பிரகாசத்தை யுடைய ஞான தீக்ஷையென்றும் கிரியா தீக்ஷையென்றும் சாஸ்திரங்கள் சொல்லும்,—

ஞான மனத்தாலியற்றுவது - மனதினாலே சிஷ்யனுடைய தேகத்தை பிரவேசித்து நாபி குண்டத்திலே சிவாக்கினி முகங்கண்டு இந்த ஓம பூர்வமாக ஷடத்துவ சுத்தியைப் பண்ணுவது ஞானதீக்ஷை —

கிரியைபெழிற் குண்டமண்டலாதி நிலவுவித்துச்செய்தல், சிற்ப ¶ கௌசல்யத்துடனே குண்டமண்டப வேதிகளைச் சமைத்து ஆகமோக்தமாகக் கலாசோதனையைப் பண்ணுவது,—

¶ கௌசல்யம் - சாமர்த்தியம்.

இன்னுங் கிரியாவதிதா னிர்ப்பீச சபீசமென விரண்டாகி நிகழும் - மேலுமந்தக் கிரியாவிதியானது நிர்ப்பீச தீக்ஷையென்றும் சபீச தீக்ஷையென்றும் இரண்டாகச் சொல்லப்படும்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சகலர்க் கனுக்கிரகங் குருத்திருமேனி குறித்திருக்குஞ் சிவன் பண்ணுவது பல ப்ரகாரமெனப் படிக்கின்றார்.

ஆசான் - குருக்குறி குறித்துக்கொள்ளுஞ் சிவன்,—பாசமோசனம் பண்ணும் படித்தான்-அனுக்கிரகஞ் செய்யும் பிரகாரம்,—பலவிதம் - வெகுபிரகாரம்.— நயனத தருள் - அத்துவா மார்க்கங் குறியாது குறித்து சுருக்கிப் பாசங்கழலப் பார்த்தல் சாக்ஷுஷியெனனுந் தீக்ஷை,— பரிசம்-அப்படிக் குறித்துச்சிவ அத்தம்வைத்தல் பரிசதீக்ஷை.— வாசகம்-அப்படிக் குறித்துப் பதினொரு மந்திரத்தோடு பஞ்சாக்ஷர முபதேசித்தல் வாசகதீக்ஷை,— மானதம்-அப்படிக்குறித்து யோகமார்க்கத்தில் சீஷனது இருதயம் பிரவேசித்துச் சிந்தித்தல் மானசதீக்ஷை,— அலகில்சாத்திரம் - அப்படிக் குறித்து ஆன்மப்பொருளைச் சுருக்கி யுபதேசித்தல் சாத்திரதீக்ஷை,— யோகம் - அப்படிக்குறித்து யோகமார்கத்தால் சீஷனது இருதய கமலத்தில் பிரவேசித்து நக்ஷத்திரம்போ லிருக்கின்ற சீவனைப் பாசம் பறித்து துவாத சாந்தத்திற் சிவனிடத்திலே யோசித்தல் யோகதீக்ஷை. இவ் வறுவகை தீக்ஷையும் அவுத்திரி தீக்ஷைக் கருக மல்லாத பெயர்க்குப் பண்ணுவ தெனவும் அவுத்திரிக் கங்க மெனவு மறிக.—அவுத்திரியாதி - அவுத்திரிப் பிரதானமா யிப்படித் தீக்ஷைகள்,— அநேகமுள - வெகுபேதமுண்டு,—அவற்றுள் அவுத்திரி இலகுஞானம் - விளங்கும் ஞானவுத்திரி என்றும்,— கிரியை-க்ரியாவுத்திரி என்றும்,— இரண்டுதிறமாம் - இருவகையாம். அவற்றுள்,— ஞானம் - ஞானதீக்ஷை. அது சத்தி சாம்பவி யென்றிருவகை. அதில் சத்தி - யோகதீக்ஷை, சாம்பவி - ஞானதீக்ஷை. அதில் சத்தி,—ம

னத்தர் வியற்றுவது - புறம்பேபோற் குண்டமண்டலாதி மன ச்சிறப்புச் சங்கற்பத்தாற் குறித்துப் பண்ணுவது. சாம்பவி - மனோதீத சிற்சத்தி மனச்சங்கற்ப பூர்வ சிற்சத்திக்கட் சிறப்பு ப்பார்வையாற் பாசம் முறைமையிற் பறியப் பார்த்துப்பண் ணுவது. கிரியாதீக்ஷை,—கிரியை எழிற்குண்ட மண்டலாதி நில வுவித்துச் செய்தல் கிரியாவதிதா னின்னும் நிர்ப்பீசஞ் சபீசமெ ன நின்று இரண்டாய் நிகழும் - விளங்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அவ்வுயிர்க் கண்ணதாகிய மலபரிபாகம் பலவகைப் படுத லின் அம்மலத்தைை மோசிக்குஞ் சாதாரதீக்கையு மதற்கேற்பத் திருநோக்க முதலியனவாகப் பலவேறுவகைப்படும். அவற்றுள் ஏனைத்தீக்கைகளெல்லாந் தனக்கங்கமாகவுடைத்தாய்ச் சிறந்த ஔத்திரி தீக்கையாவது, ஞானவதி கிரியாவதியென் றிருவகைப் படும். அவற்றுட் குண்டமண்டலம் அங்கி நெய் சுருக்குச் சுரு வமுதலிய வனைத்தும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு விதிப்ப படி யகத்தே யாகுதிமுதலிய கிரியை செய்வது ஞானவதி. அ வையனைத்தும் புறத்தே நிலவக்கொண்டு புறம்பே யக்கிரியை செய்வது கிரியாவதி யெனப்படும். இங்ஙன மிருவகைப்பட் ஔத்திரி தீக்கைதான் இன்னும் நிர்ப்பீசஞ் சபீசமென வெவ் வே றிருவகைப்படு மென்பதாம்.

கிரியையியற்றுவதென மாறுக.

ஔத்திராதி யென்றதனாற் சாம்பவதீக்கை முதலியனவு க் தழுவப்பட்டன.

நயனதீக்கை முதலிய ஆறும், சுதந்திரமாய்ச் செய்யப்ப

வெனவும் அவுத்திரிக் கங்கமாய்ச் செய்யட்படுவனவுமென் றி ருவகைப்படும்.

அவற்றுள் முன்னையவை ஔத்திரிக்குரிய ரல்லாதார்க்கு ச் செய்யப்படுவனவெனக் கொள்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

சிவன் ஆசாரிய மூர்த்தியை யதிட்டித்துக் கொண்டு நின் று சகலருடைய பாசத்தைப் போக்குகிற முறைமை பலபிரகா ரமா யிருக்குமென் றருளிச் செய்கிறார்.

பலவித மாசான் பாசமோசனம் பண்ணும்படி - சகலரு டைய பாசத்தைஆசாரியன் மோசனம் பண்ணும்படி பலபிரகா ரமாயிருக்கும். அவையாவன?— நயனத் தருள்பரிசம் வாசக மானதமூ மலகில் சாத்திர மியோக மவுத்திராதி யநேகமுள— தனது காருண்ணியத்தினாலே திருக்கண்சாத்தியும் ஸ்ரீபாதங்க ள் பரிசித்தும் உபதேசித்தும் தன்னைப்போல நின்மலனாகப் பா வித்து எண்ணிறந்த நூலுரைகாட்டியும் பொருளோடு கூட்டியு ம் குண்டமண்டல மிட்டுச் செய்யுந் தீட்சைமுதலாக அநேகமு ண்டு.—அவற்றி லவுத்திரி யிரண்டா மறியில் - அவையிற்றைவி சாரித்துப் பார்க்கில் அவுத்திரி யென்கிற தீட்சை இரண்டுவ கைப் பட்டிருக்கும் — இலகுஞானங் கிரியையெனும் - விளங் காநின்ற ஞானவதி யென்றும் கிரியாவதியென்றும் சொல்லும். அதெங்ஙனே யென்னில்,—ஞான மனத்தா லியற்றுவது - ஞா னவதியாவது ஆசாரியன் தன்னுடைய மனோ பாவகத்தினாலே மலங்களைப் போக்கி இவனுக்குப் பிராணனாய் நின்றசிவன் தன் னைப் பிரகாசிப்பித்து,—கிரியை யெழிற் குண்டமண்டலாதி நி லவுவித்துச் செய்தல்-கிரியாவதியாவது அழகிய குண்டமண்ட

லங்களை யிட்டு விளங்கச் செய்தல் —கிரியாவதிதா னின்னு நிர்ப்பீசம் ஸபீசமென விரண்டாகி நிகழும் - கிரியாவதியாவது இன்னமும் நிர்ப்பீசமென்றும் சபீசமென்றும் இரண்டாய் விளங்கா நிற்கும்.

இதனாற் சொல்லியது இவன் ஆசாரிய மூர்த்தியாக வெழுந்தருளிச் சகலர்க்குப் பாசமோசனம் பண்ணுகிறமுறைமை பலபிரகாரமாயிருக்குமென்றும் இவர்களுக்குச் சமயம் விசேட நிருவாணம் என்கிற தீட்சைகள் செய்யுமிடத்துக் கிரியாவதியாகவும் ஞானவதியாகவுஞ் செய்யலாமென்றும், கிரியாவதிதான மேலும் நிர்ப்பீசமென்றும் சபீசமென்றும் இரண்டுவகையாயிருக்கும் என்னுமுறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பலவிதம் - அவ்வுயிர்க் கண்ணதாய மலபரிபாகம் பலவிதப்படுதலின்,—ஆசான் பாசமோசனந்தான் பண்ணும்படி-அதற்கேற்ப ஆசாரியனும் அம்மலத்தை மோசிக்கும்படி செய்யுஞ் சாதார தீக்கையும்,— நயனத்து - திருநோக்கமும்,— அருள் பரிசம் - அருளுகின்ற பரிசமும்,—வாசகம் - வாக்கும்,— மானதமும் - பாவனையும்,—அலகில் சாத்திரம் - மிக்க நூல்களும்,—யோகம் - யோகமும்,— அவுத்திராதி யநேகமுள - அவுத்திரி முதலியனவு மாகப் பலவேறு வகைப்படும் —அவற்றினவுத்திரி - அவற்று ளேனைத்தீக்கைளெல்லாம் தனக் கங்கமாக வுடைத்தாய்ச் சிறந்த அவுத்திரி தீக்கையாவது,— இலகுஞானங் கிரியையென விரண்டுதிறனும் - விளங்கும் ஞானவதி கிரியாவதியென் றிரண்டு வகைப்படும்,—எழிற் குண்டமண்டலாதி மனத்தாற் கிரியை யியற்றுவது ஞானம் - அவற்று ளழகினை யு

டைய குண்டமண்டல மங்கி நெய் சுருக்கு சுருவமுதலியவை த்து மனத்தாற் கற்பித்துக் கொண்டு விதிப்படி யகத்தே யா குதிமுதலிய கிரியைசெய்வது ஞானவதி.—நிலவுவித்துச் செய்த ல் கிரியாவதி - அவையனைத்தும் புறத்தே நிலவக்கொண்டு புற ம்பே யக்கிரியை செய்வது கிரியாவதி யெனப்படும்,— தானின் னும் - இங்ஙன மிருவகைப்பட்ட அவுத்திரி தீக்கைதா னின்னு ம்,— நிர்பீசம் சபீசமென விரண்டாகி நிகழும் - நிர்பீசஞ் சபீ சமென வெவ்வே றிருவகைப்படும்.

---

## மறைஞானதேசிகர் உரை



மே னிறுத்த முறையானே நிரைநிறயைாக நிர்ப்பீ
சமு நிரதிகார லக்ஷணமு முணர்த்துகின்றார்.

பாலரொடு வாலீசர் விருத்தர்பணிமொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப்பண்ணுஞ்,
சீலமது நிர்ப்பீசஞ் சமயாசாரந் திகழ்சுத்தி சமயிபுத்
திரர்க்குநித்தத், தேலுமதி காரத்தை யியற்றித்தா
னு மெழினிரதி காரையென நின்றிரண்டாய்விளங்கு
ஞ், சாலநிகழ் தேகபா தத்திலேடு சத்தியநிரு வாண
மெனச் சாற்றுங்காலே. (ச)

(இ-ள்.)பாலரொடு வாலீசர் விருத்தர்பணி மொழியார் பலபோகத்தவர் வியாதி பட்டவ — மூன்று வயதுக்குமேற் பதினாறு வயதனவாகிய பாலர்க்கும், கன்ம முள்ளபடி யனுட்டிக்க மாட்டாது மிகவு மறிவில்லாத வர்களுக்கும்,எழுபது வயதுக்குமேற் பட்டவிருத்தர்க்கும்,மாதர்கும்,போகத்திலே மிகவும் விருப்பத்தை வைத்த விராசாக்களுக்கு

ர்க்குப் பண்ணு ம்,வியாதியினால் வருத்தமுறு மவர்களுக்கும்
ஞ் சீலமது நிர்ப் இவர்களுக் கெல்லாஞ் சரீராந்த மனுட்டிக்க
பீசம் த் தக்கதான கன்மங்களனைத்தையும் தீக்ஷா
காலத்திலே யாசாரியர் நிறைவேறினதாக
ச் செய்து முடிக்குந் தீக்ஷை நிர்ப்பீசம்.

சமயா சாரந் அக்காலத்தி லாசாரியன் குண்டத்தி லக்
திசஞ் சுத்தி கினியிலே நந்தியாதி சண்டேசு ராந்தமான
வெட்டுக்கணங்களையும் பூசித்துச் சுவாஹாந்
தமாகத் தர்ப்பண மந்திரதீபனங்களை யொவ்வொருக்கா லோ
மம்பண்ணிச் சமயாசார சோதனை நிமித்தமாக மூலத்தா லஞ்
ஞூறாஹுதிபண்ணிப் பூர்ணாஹுதி கொடுத்து முடித்து இவர்
கள் சமயபாசத்தை யிந்தயாகதேவதைக ளனைவரும் கரியாகச்
சமயாசார சுத்திசெய்வது. இதற்கு அதிகாரி யாவரெனில்?

சமயி புத்திரர் சமயா சாரத்துடன் கூடின சமயிக்கும்
க்கு புத்திரகனுக்கும் செய்வது. இவர்க ளெந்தக்
கிருத்தியத்தினாலே யேவப்படுவ ரெனில்?

நித்தத் தேனு "புனன்மூழ்கித் தர்ப்பித் தமலனடி பூசித்
மதிகாரத்தை யி தனலோம்பலாதி நித்தியம்" என்பதனுள் ச
யற்றி மயிக்குப் புனன்மூழ்கித் தர்ப்பணஞ்செய்து
தாதமார்க்கஞ் செய்வது. புத்திரக னதுவுஞ்
செய்து சிவபூசையு மக்கினிகாரிய முதலாயினவும் புத்திரமார்க்
கமுஞ்செய்வது. இவ்விருவரையு மிகக் கருமங்களுக் குரிமை
யாகக் கற்பித்தது

தானுமெழி னி அந்தத் தீக்கையுடைய சமயிக்குப் பூசா
றதிகாரை யென தியி லதிகார மில்லாத படியாலும் புத்திர
கனுக்குத் தீக்கைபிரதிட்டைமுதலிய கன்ம

ஞ் செய்தற் கதிகார மில்லத படியாலே யந்தத் தீக்கை நிரதி சார தீக்கையெனப் பெயர் பெறும்.

நின்றிரண்டா ய்விளங்குஞ் சா லநிகழ்தேகபாத த்திறேடு சத்தி ய நிர்வாண மெ னச் சாற்றுங்கா லே.

என்பதனை, சாற்றுங்காற் சாலநிகழ் தேகபாதத்திறேடுஞ் சத்திய நிருவாணமென நின்றிரண்டாய் விளங்கும் எனப்பொருள் கூட்டுக. அத்தீக்கையை விசாரித்துப் பார்த்துச் சொல்லு மிடத்துச் சத்திய நிருவாண தீக்கை யெனவு மசத்திய நிர்வாண தீக்கை யெனவு மிரண்டாக விளங்காநிற்கும் எ-று.

இவ்விரண்டினுக்கு மதிகாரி யாரெனில்.

தேகாதி பிரபஞ்சத்தைக் கான்றசோறெனக் கருதி மிகவும் விரத்தராகிய பக்குவர்க்குக் கட்டுப்பட்ட சஞ்சிதத்தையும் பிராரத்துவத்தையு மாகாமிய கன்மங்களையுந் தீக்கையிற் சோதனை பண்ணிக் கிரியை முடிந்தவாறே சரீரம் பாதமானவுடனே மோட்சத்தை யடைவது சத்திய நிருவாண தீக்கையெனப்பெறும்.

நிகழ்காலத்துப் பிராரத்த கன்மபோகம் புசிக்கையின் பொருட்டு வைத்து ஆசார மனுட்டிக்க மாட்டாத வாலீசர் முதலாயினோர்க்குத் தீக்கையிற் சுத்தியைப் பண்ணி யாகாமிய மேருதடடி த்யானபூசை முதலிய கன்மங்களைப் பண்ணி யெடுத்துச் சரீரத்துக் கமைத்த பிராரத்தகன்மம் புசித்துத் தொலைந்தவாறே சரீரபாதம் வந்து மோட்சத்தை யடைவது அசத்திய நிருவாண தீக்கை யெனப்பெறும்.

இதற்கு வருணபத்ததி, சைவ சன்னியாச தீபிகை, காலோத்தரம், சித்தாந்த சேகரத்து மறிக. (௪)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலிவ்விரண்டு தீக்ஷைகளுக்கும் அதிகாரிகளைக் கூறுகின்றது.

பாலர்-பத்துவயதளவும்,—ஒடு-அசை,— வாலீசர்-இருபத்தைஞ்சு வயதளவும்,—விருத்தர் எழுபத்தைந்து வயசுக்குமேல்,—பனிமொழியார்-ஸ்திரீஜனங்கள்,—பலபோகத்தவர்-¶அநியம் புபூட்சுக்கள்,—வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுஞ் சீலமது நிர்ப்பீசம்-தீர்க்க ரோகத்தை யுடையவர்களுக்குப் பண்ணும் தீக்ஷா விதியாவது பீசாக்ஷ ரகிதமாக மந்திரங்களினாலே ஓமமும் உபதேசமு மாகையால் இவர்களுக்குச் §சாம்பவ தீட்சை யுமில்லை ஆசாரி யபிஷேகமு மில்லை.—

[illegible]

சமயாசாரந் திகழ் சுத்தி-இந்த நிர்ப்பீசதீக்ஷையைப் பண்ணுகிறபேர்க்குச் சமயாசாரக் கிரியைக்கு ஏதுவா யிருக்கிற கர்ம பீசத்தையும் சுத்திபண்ணப் படுவது.—

சமயிபுத்திரர்க்கு நித்தத்தேனு மதிகாரத்தை யியற்றி-சமய ஜதீக்ஷையையுடைய சமயிக்கும் புத்திரனுக்கும் நைமித்திகத்தினாலே ஆசாரியனுக் கொப்ப அதிகார மில்லையாகையால் நித்

தியத்திலே அதிகாரத்தைக் கொடுத்து,—தானுமெழி னிரதிகா ரையென நின்றிரண்டாய் விளங்கும்-நிர்வாண தீட்சை யுடையவர்களுக்குத் தானும் நித்தியத்திலே சாதிகார மென்றும் நிரதிகார மென்று மிருவகைத்தாய்ச் சொல்லப்படும்.—சாலநிகழ் தேகபாதத்தினேடு சத்தியநிருவாண மெனச் சாற்றுங்காலே - இன்னுமந்த நிருவாணதீக்ஷா பேதங்கூறுங்கால நிகழ்காலத்துத் தேக‡பதனமா யப்பொழுதே பரமமுத்தியை யடையப்பண்ணுவது × சத்தியோ நிர்வாணமென்றும் சீவன் முத்தி+வியவதாநமாகப் பண்ணுவது அசத்தியோ நிர்வாணமென்று மிருவகைத்தாம்.

¶ அந்நியம் புபுக்ஷு-நியமமில்லாமல் சாப்பிடவிரும்புவன் § சாம்பவம் - சம்புவினது ‡ பதநம்-விழுகை, × சத்தியோ நிர்வாணம் - உடனேசுகம். + வியவதாநம்-மறைவு.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இருவகை தீக்ஷைக்கு மருசரை முறைமையி லிசைக்கின்றுராய் நிர்ப்பீசத்தருசரை நிகழ்த்துகின்றார்.

பாலர்-சத்திபாத லக்ஷணங்காண்பிக்குஞ் சாமர்த்தியமுடையராய்ச் சமயாசார மனுஷ்டிக்குஞ் சாமர்த்தியமிலராய் நிரம்ப ஓதி யுணராதவர்களாய்ப் பதினாறு வயதுட்பட்டவர்,—

ஓடு-அவர்களோடு,—

வாலீசர்-வாலிசர் வாலீசரென நீட்டியவாறு. சத்திபாதரின்னர்களாயும் ஓதி யுணராதார்,—

விருத்தர் - சத்திபாதரின்னர்களாய் ஓதியுணர்ந்தாலும் அனுஷ்டானத்தில் அசத்தரா யெழுபது வயதுக்கு மேற்பட்டார்,—

பனிமொழியார் - உள்ளபடி யோதியுணர்ந்து சமயச்செய்தி சாங்கமாயனுஷ்டிக்குஞ் சாமர்த்திய மில்லாதாராய்ச் சத்திபாத சின்னிகளாய்ச் சஞ்சரிக்கும் மகளிர்,—

பலபோகத்தவர் - சாததிர பாத்திரராய்ச் சத்திபாத சின்னந்தாக்கித் தூக்கவும் போகவாஞ்சை போக்கு மூக்கமில்லாதார்,—

வியாதிப்பட்டவர் - உரைத்தவை யெல்லா முடையராயினு மூரோகத்தர். இவர்கட்கு,—

பண்ணுஞ் சீலமது - செய்யுஞ் செயற்கையையுடைய தீக்ஷை,—

சமயாசாரந் திகழ்சுத்தி,—பீசச்சொற் சொல்லுஞ் சைவசங்கேதானுஷ்டானப் பொருளில் விளங்கும் நிர்சொற் சொல்லுஞ் சோதனைப்பொருள்,—

நிர்ப்பீசம்-தீக்ஷை.சாதகர் ஆசாரிபர் இருவர்க்குந் தகாதாதலால்,—

சமயி புத்திரர்க்கு - புத்திரரென்று நிருவாண தீக்ஷிதர்க்குப் பெயர் பேசுதலாற் சமயவிசேஷ சாதகாபிடேக நைமித்திகாதிகாரமில்லா நிருவாணிகளில் நித்திய கிருத்திய மாத்திரத்திற் சாமர்த்தியவான்கள் ஒருபிரகாரஞ் சாதிகாரிகளாகுனும் அவருள் நித்திய முற்றும் பண்ணுஞ் சாமர்த்தியமில்லாப் பாலர் முதற் சமயி விசேஷி சாதகாபிடேக நைமித்திகாதிகாரமில்லா நிருவாணிகட்கு.

நித்தத்தேலுமதிகாரத்தை யியற்றி - முழுகுதல், தர்ப்பித்தல், சபித்தல், குருக்குறிப்பேவல், பூசித்தல், ஓமித்தல், கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து தியானித்தல், சமாதித்தல், சாக்ஷாத்கரித்தல் முதலிய நித்தியகன்மத்திற் குருக்குறிப் பேவலால் நைமித்திக கன்மத்துஞ் சித்திற் காமியத்துஞ் சித்திற் சாமர்

த்த சமயிமுதலோர் பண்ணும் கிருத்தியத்தில் இயன்ற கிருத்தியத்தைப் பண்ணுவது, கூடாதிருந்தாற் குருக்குறிப் பேவல் மாத்திரம்பண்ண, அதுவும் கூடாதிருந்தாற் புத்திராதிகளாற் பொருள்கொடுத்து வேண்டிக் கொண்டாதல் பிறராற்முன் பேணைக் குருவைக் கொண்டு கற்பிக்கப் பண்ணி.—

தானும் - அந்த நிர்ப்பீசதீக்ஷையும்,—

எழிலிரதிகாரரையென நின்று - வடிவுறு நிர்ப்பீசை தீக்ஷையென்றிருந்தும்,—

இரண்டாய் விளங்கும் - ஏலுங்கிருத்தியம் ஏலாக்கிருத்தியம் குறித்துச் சகதிகாரரையாயு நிரதிகாரரையாயும் இருதலாற் சபீசையாயும் நிர்ப்பீசையாயும் இருவிதமாய் ஒருவகை சாற்றத்தோற்றும்,—

சாலநிகழ் தேகபாதத்திறேனுடு-பண்ணுமென்று கொகுத்தலால், பண்ணுங்காலே யெனப் பண்ணுக. சபீசதீக்ஷாயோக்கியர்க்குள் இயற்கையாற் சரீரவைராக்கிய முடையோர்க்கும், நிர்ப்பீச தீக்ஷாயோக்கியர்க்குள்ளும் வியாதி முதிர்ச்சி விருத்தத்தன்மை மிகுதி முதலியவற்ருற் சரீரவயிராக்கிய முடையோர்க்கும், சஞ்சரிக்கும் காயமுடன் முற்றுங் கழியப்பண்ணும் நிர்ப்பீச தீக்ஷைதானே,—

சத்தியோ நிர்வாண மெனசாற்றும் - முத்திவிரும்பினார்க்கு நயிஷ்டிக தீக்ஷையென்று நாட்டப்படுந் தீக்ஷை சத்தியோ முத்திப் பிரதமானுற் சத்தியோ நிர்வாண தீக்ஷையென்று பேர் பேசப்படும்.

சிலவிடத்திற் சித்தி விரும்பினார்க்குப் பவுதிகிதீக்ஷையென்று பார்க்கப்படுந் தீக்ஷை சத்தியோ புத்திப் பிரதமானுற் சத்தியோ போசதீக்ஷையென்றுபேர் சாற்றப்படும்.

விதேக விஞ்ஞானகலர்க்கும் விதேக ப்ரளயாகலர்க்குங் குருதேக தேகியல்லாச் சிவனால் நிர்ப்பீச தீக்ஷையாய்ப் பண்ணு முன சொல்லிய நிராதார தீக்ஷையென்னும் நிரதிகரண தீக்ஷையும் இவ்விருவகைப் பெயர்பெறுமென்பதறிக.

தேகபாதமில்லாமற் செய்யும் நிர்ப்பீசதீக்ஷையுஞ் சபீசதீக்ஷையும் அசத்தியோ நிர்வாணதீக்ஷ யென்பதறிக.

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

அவ்விரண்டனுள் நிர்ப்பீச தீக்கையாவது, மலபரிபாகமுடையவராயுந் தீக்கைப்பின் ஒருதலையான் வழுவின்றிச் செய்யக்கடவனவாய சமயாசாரங்களை அனுட்டிக்கும் ஆற்றலறிவிலராயினோர்க்கு, ஆசாரியனுவானதனையுணர்ந்து ஏனைக் கன்மங்களோடுகூடச் சமயாசாரத்தையும் ஆகுதியாற் சுத்திசெய் தொழித்து, நித்தியகன்ம மாத்திரையினை யென்றவா றனுட்டிக்குமதிகார முடையராகச் செய்வதாம். ஆயினும் சமயாசாரங்களைச் சுத்திசெய் தொழித்தமையின் நைமித்திகத்துங் காமியத்து மதிகாரங் கொடாமையான இது நிரதிகார தீக்கையெனப்படும். அத்தீக்கை மூன்றனுள் சமயமும் விசேடமு மொரோவொன்றேயாம். ஏனை நிருவாணதீக்கை தேகாந்தத்தின் முத்தியைப் பயக்கும் அசத்தியோ நிருவாணமெனவும், அப்பொழுதே முத்தியைப பயக்குஞ்சத்தியோ நிருவாணமெனவும், இருவகைபடு மென்பதாம்.

சமயாசார சுத்தியோடு செய்யப்படும் நிருவாண தீக்கையும் அதற் கங்கமாயுஞ் சுதந்தரமாயுஞ் செய்யப்படுஞ் சமயவிசேடங்களும் நிர்ப்பீச தீக்கையெனக் கொள.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—— o ——

மேல் நிர்ப்பீசதீக்ஷையின்னார்க்கென்றும், நிரதிகாரை அதிகாரையின் முறைமையும, சத்தியோ நிருவாணம் அசத்தியோ நிருவாணத்தின் முறைமையும், அருளிச்செய்கிறார்.

பாலரொடுவாலீசர் விருத்தர்பணிமொழியார் பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப்பண்ணுஞ் சீலமதநிர்ப்பீசம்-சிறு பிள்ளைகளுக்கும் அவர்களோடு அயோக்கியர்க்கும் வயோதிசர்க்கும் ஸ்த்ரீகளுக்கும் வெகுவிதமான புசிப்புகளை யிச்சித்தவர்களுக்கும் வாத பித்த சிலேத்தும முதலான வியாதிகளினாலே நுக்கப்படுகிறவர்களுக்கும் செய்கிற தீக்ஷையினுடைய முறைமை, பீசங்கூடாமலிருக்கிற தீட்சையாம்.—சமயாசாரந்திசழ் சுத்தி சமயிபுத்திரர்க்கு - சமயாசாரங்கள் விளங்காநின்ற சமய தீட்சையிலும் விசேஷ தீட்சையிலும் நின்றவர்களுக்கு,—நித்தத்தேனு மதிகாரத்தையியற்றி - பொருந்தப்பட்ட நித்தியமான வதிகாரத்தைக் கற்பிக்கிறது. அதுதானேதென்னில்?—தானுமெழில் நிரதிகாரையென நின்றிரண்டாய் விளங்கும் - அதுதானும் அழகிய நிரதிகாரையென்றும் இது வொழிந்த அதிகாரையென்றும் இரண்டாய் விளங்காநிற்கும். இன்னமும்,—சாலநிகழ் தேகபாதத்தினோடு சத்தியநிருவாணமெனச்சாற்றுங்காலே - மிகவும் விளங்காநின்ற நிருவாணமிரண்டு வகைப்பட்டிருக்கும். அதெங்ஙனேயென்னில்? தீட்சை செய்தவுடனே சரீரத்தைக் கமனமாக்கிறது சத்தியோது தேகாநிருவாணமென்றும், தீட்சை செய்தபின்பு சிலநாள் சரீரமிருந்தத்திலே முத்தியைக் கொடுக்கிறது அசத்தியோ நிருவாணமென்றுஞ் சொல்லப்படும்.

இதனாற் சொல்லியது, பாலராயுள்ளவர்கள் முதல் வியா தியத்த ரீருயுள்ளவர்களுக்குச் செய்கிறமுறைமை நிர்ப்பீச தீக்ஷை யென்றும், சமய தீட்சை யுடையவனுக்கும் விசேஷ தீட்சை யுடையவனுக்கும் அததற்குத்தக்க நித்திய கன்மங்களைக் கற்பிக்குமது நிரதிகாரை யென்றும், விளங்காநின்ற நிர்வாணமிரண்டு வகைப்பட் டிருக்குமென்றும், அவையாவது தீக்ஷை செய்தவுடனே சரீரத்தைக் கமனமாக்குகிறது சத்திய நிர்வாண மென்றும் தீக்ஷைசெய்த பின்பு சரீரம் சில நாளிருந்து தேகாந்தத்திலே முத்தியைக் கொடுக்கிறது அசத்தியோ நிருவாணமென்னு முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

நிற்பீசம் - அவ்விரண்டினுள் நிற்பீச தீக்கையாவது மலபரிபாக முடையவராயுக் தீக்கைப்பி னொருதலையான் வழுவின்றிச் செய்யக்கடவனவாய சமயாசாரங்களை யநுட்டிக்கு மாற்றலறிவிலராகிய,—பாலரொடுவாலீசர் விருத்தர் பனிமொழியார் பலபோகத்தவர் வியாதிப் பட்டவர்க்கு - பாலருடன் குமாரரும் முதியோரு மாதரும் பலபோகத்தினை யுடையவரு மிக்க நோயினை யுடையவருமாகிய விவர் முதலாயினோர்க்கு,—சமயாசாரந் திகழ்சுத்தி -ஆசாரியனுவா னதனையுணர்ந்து ஏனைக்கன்மங்களோடு கூடச் சமயாசாரத்தையு மாகுதியாற் சுத்திசெய்தொழித்து,—நித்தத்தேனு மதிகாரத்தையியற்றி - நித்தியகன்ம மாத்திரையி னேன்றவா றனுட்டிக்கு மதிகார முடையராகச் செய்வதாமாயினுஞ் சமயாசாரங்களைச் சுத்திசெய் தொழித்தமையின்,—எழினிரதிகாரையென நின்றுபண்ணுஞ் சீலம் - நைமித்திகத்துங் காமிகத்து மதிகாரங் கொடாமையா னிது அ

மூருபொருந்திய நிரதிகார தீக்கை யெனப்படும்.—அது - அத் தீக்கை மூன்றனுள்,—சமயிபுத்திரர்க்கு - சமயி புத்திரர்க்குச் செய்வதாகிய சமயமும் விசேடமும் ஒரோவொன்றே யாம்.—சாற்றுங்கால் - ஏனை நிருவாண தீக்கையைச் சொல்லுமிடத்து,—சாலநிகழ் தேகபாதத்திரோடு சத்திய நிருவாண மென விரண்டாய்விளங்கும் - மிக்கு நிகழ்கின்ற தேகாந்தத்தின் முத்தியைப் பயக்கு மசத்தியோ நிருவாணமெனவும், அப்பொழுதே முத்தியைப் பயக்கும் சத்தியோ நிர்வாணமெனவும் இருவகைப் படுமென்பதாம்.

சமயாசார சுத்தியோடு செய்யப்படு நிருவாண தீக்கையும், அதற் கங்கமாயும் சுதந்தரமாயும் செய்யப்படுஞ் சமய விசேடங்களும் நிற்பீச தீக்கையெனக் கொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேனிறுத்த முறையானே சபீச தீக்கையெனவும், அந்தச் சபீசஞ் சிவ தன்மணி லோகதன்மணியென விருவித மா மாறுமுறையே யுணர்த்து கின்றார்.

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல வுத்தமர்க்குச் செய்வதுயர் பிசமிவர் தம்மை,நீதியினா னித்திய நைமித்திக காமியத்தி னிறுத்திநிரம் பதிகார நிகழ்த்துவதுஞ்செய்து, சாதகா சாரியரு மாக்கிவீடு தருவிக்கு முலோகசிவ தருமிணியென்றிரண்டா, மாதலினா னதிகாரை யாஞ்சமயவிசேட நிருவாண மபிடேக மிவற்றடங்குமன்றே. (ரு)

(இ-ள்.) ஓதியுண ஆசாரியனிடத்திலே யாகமங்களை யோதி ர்க்கொழு யத னுண்மைப் பொருளை யறிந்து சமயாசா

க்கநெறியி ழுக்கா நல்லவுத் தமர்க்குச் செய் வ துயர்ப்சேம்

ரங்களை வழுவற வனுட்டியென் ருசாரியன் சண்டேசுரன் சன்னதியிற் கற்பித்தபடி நட வாநின்ற உத்தமராகிய மாணுக்கற்குச் செய் யுந் தீக்கை மேலான சுபீச மெனப் பெறும்.

இவர்தம்மை

இந்தத் தீக்கைபெற்ற சாதகனையு மாசா ரியனையு முத்தமாதிகாரிகளென்று சொல்லு மிருவரையும்,

நீதியி ஞ னித் திய நைமித்திக காமியத்தி னிறு த்தி

சாதகனை நித்தியகன்மங் காமிக கன்ம மாகிய விரண்டு முறைமையிற் செய்தற்கதி காரியாகக் கற்பித்து, ஆசாரியனை "புனன் மூழ்கித் தற்பித் தமலனடி பூசித் -தனலோ ம்பலாதி நித்தியம்" "பரமப்பிரதிட்டை தீக் கை பணுவ் - கருதிலிங்கா னைமித்தி கம்" "உரைத்தமலன் வா க்கை யுளங்கொளக்கற் பாற்கு-விரித்தலுனை மித்திகமாமே. "சி த்தியினைவேண்டியருச் சிக்கைசபம் பண்ணலென்-றெுத்தவிதங் காயகமென் ருேர்." இங்ஙனங் கூறிய நித்தியமுதலிய மூன்று கிருத்திய மாசாரியற்கும், நித்தியமுங் காமியமுமாகிய விரண் டுஞ் சாதகற்கும் இம்முறைமையாற் கற்பித்தது.

நிரம்ப திகார நிகழ்த்து வ துஞ் செய்து

. இம்மூன்று தொழிலையுஞ் செய்தற் கா சாரிய ருரித்தாதலாற் ருனு மனுட்டித்தற் சாசாரியராய் அதிகாரம்பெற்று மாணுக் கற்கு முபதேசம்பண்ணி நடக்கும்படி கற் பித்து,

சாதகாசாரிய ருமாக்கி

சாதகற்குச் சாத்திய மந்திரத்தையுங் கற் பித்துச் சாதகாபிடேகமும் பண்ணி யாசாரி யற்குச் சருவ வித்தியாபிடேகத்தையுஞ் செ ய்து,

வீடு தருவிக்கு முலோக சிவதன மணியென் றிரண்டாம்

அத்தீக்கை யபரமுத்தியைக் கொடுக்கு மூலக தன்மணி தீக்கையெனவும் பரமுத்தியைக் கொடுக்குஞ் சிவதன்மணியெனவு மிருவகைப்படும். அவையாவன,—

நிருவாண தீக்கையி லாசாரியன மாணுக்கற்குப் பாவ கன்மத்தையே சோதித்துப் புண்ணியத்தைச் சோதியாமல் வைத்துச் சிகாச் சேதமு மின்றிப் பதப்பிராப்தியாகிய புவனங்களிலே யோசனைசெய்யும் தீக்கை லோகதன்மணி. மோட்ச காயியாகிய மாணுக்கற் காசாரியன் புண்ணியபாவமாகிய விரண்டினையு நானாவிதமாயிருக்கிற சஞ்சித கன்மங்களையுஞ் சுத்திசெய்து விதிவழிச் செய்யப்பட்டுச் சிகா மந்திரத்தினு லேழுபிரகார மபிமந்திரிக்கப்பட்டதுமாய் ஞானசத்தி ரூபமா யிருக்கிற கத்திரிகையைக் கொண்டு பிரம ரந்திரத்துக்குமேலே பன்னிரண் டங்குலமுடைய சிகையில் சத்தி வியாபினி சமனை யுன்மனையெனக் கூறிய சத்திகள் நாலுக்கு மேற் சிவம் வியாபித்து நிற்கையா லடியி லெட்டங்குலம்விட் டான்மாக்களுக்கு மூலபாசமா யவர்கள் ஞானக்கிரியைகளைத் திரோதானஞ் செய்யுந் திரோதான சத்தி ஸ்வரூபமாயிருக்கிற மேல் நாலங்குல முடைய சிகையை யத்திரத்தாலே சேதிக்குமது சிவதன்மனி தீகை யெனப் பெறும்.

ஆனதினு லதிகாரையாம்

இச்சிறப்பினை யுடைத்தாகையினுலே சபீச தீக்கை சாதிகாரை யெனப்பெறும். மேலந்த விருவகையினை முடித்துணர்த்துகிறார்.

சமய விசேட நிருவாண மபிடேக மிவற்றடங்குமன்றே.

இங்ஙனங் கூறிய நிர்ப்பீச தீக்கையி லுண்டாகிய நிரதிகாரை சமய விசேடத்தி லடங்கும், சபீச தீக்கையி லுண்டாகிய சாதிகாரை நிருவாண தீக்கையு மபிடேகமு மடங்கும். எ-று.

சமயாசாரத்துடனே கூடி யனுட்டித்து வருகையாற் சபீ
சமெனமுர். இது வடமொழி.

நிற்பீசத்தைப் பற்றச் சபீசஞ் சிறப்புடைத்தாகையா லுப
ர்பீசமெனச் சிறப்பித்தார்.

ஆசாரியனுக்குஞ் சாதகர்க்கும் செய்தொழில் வேற்றுமை
யாதலால் நீதியெனச் சிறப்பித்தார்.

உலோகதன்மணி பராபரபோக வேதுவாதலாற் சிவதரு
மணியைத் தருமெனச் சிறப்பித்தார்.

இதற்கு வருணபத்ததி ஞான ரதநிருவலியிலுங் காலோ
த்தரத்துங் காமிகத்தும் வாதுளத்து மறிக. (ரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சபீச தீக்ஷாதிகாரிகளைக் கூறுகின்றது.

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்காநல்ல வுத்தமர்க்குச்
செய்வ துயர்பீசம் - கன்மகாண்ட சாஸ்திரங்களைப் படித்த தங்
ளுடைய பொருளை யறிந்து அந்தப்படியே வழுவாமல் அநுஷ்
டானங்களையும் பண்ணிவரு முத்தமர்க்குப் பண்ணுமது சபீச
தீக்ஷை.—

தீதியிலா னித்தியநைமித்திய காமியத்திலிறுத்தி நிரம்ப
திகார நிகழ்த்துவதுஞ்செய்து சாதகாசார்யருமாககி-அவர்கள
வர்க ளதிகாரானுகுணமாக நித்திய கன்மமாத்திரமாகவும் நித்
திய நைமித்திக கன்மமும் நித்திய நைமித்திக காமிய கன்மமு
ம்பண்ணும்படி ஸ்தாபித்து தீக்ஷை பிரதிஷ்டை பிராய்ச்சித்தா
தியான சர்வாதிகாரத்தையுங் கொடுத்து சாதகாசாரியாபி
ஷேகமும்பண்ணி.

சாதகாசாரிய னென்றது, நைஷ்டிகாசாரியனைப் போல அ
க்கினி காரியாதி கன்மங்களின்றி சர்வமும் ஞானத்திலே பண்

ஞாது அக்கினிகாரியாதி சர்வகன்மங்களையும் பண்ணும் பௌதி காசாரியனைச் சொன்னது.—

வீடுதருவிக்கு முலோகசிவதன்மணி யென்றிரண்டாம் - மோக்ஷத்தைக் கொடுக்கும் நிர்வாண தீக்ஷதானும் லோகதன் மணியென்றுஞ் சிவதன்மணியென்று மிருவகைத்தாம்.

உலோகதன்மணியாவது கிரகஸ்தனுக்கு பௌதிகாசாரியர் சிகாச்சேதமன்றியிற் பண்ணுந் தீக்ஷை.

சிவதன்மணியாவது ‡ நைஷ்டிகாசாரியன் நைஷ்டிகனு க்கு சிகாச்சேதத்துடனே பண்ணும்தீக்ஷை.

நைஷ்டிகாசாரியன் பௌதிகனுக்கு உலோக தன்மணி தீ க்ஷையும் பண்ணலாம்.

பௌதிகாசாரியன் நைஷ்டிகனுக்கு தீக்ஷை பண்ண லா காது.—

தது³க்தம் காலோத்தரே — த்³வயா நிர்வாணதீ³க்ஷா ஸா லௌகிகீ ஶிவத⁴ர்மிணீ ; ஶிவோத்³த⁴ம் விதா⁴நவத்⁴வ ஜ்ஞேயா ஸா லோகத⁴ர்மிணீ || ஶிவோத்³தே⁴ந ஸம்யுக்தா ஜ்ஞேயா ஸா ஶிவத⁴ர்மிணீ | தீ³க்ஷயா லோகத⁴ர்மிண்யா பௌ⁴திகாந் தீ³க்ஷயேத் கு³ரு꞉ || தயைவ ஶிவத⁴ர்மிண்யா நைஷ்டி²காந் தீ³க்ஷயேத் கு³ரு꞉ | நைஷ்டி²கோ நைஷ்டி²கம் சைவ க்³ருஹஸ்தா²ந் தீ³க்ஷயேத் க்வசித் || பௌ⁴திகஸ்து க்³ருஹஸ்தா²நாம் ஸ்வ நாநைஷ்டி²காம் தீ³க்ஷாம் ஸமாசரேத் .

ஆகலின் றலதிகாரையாஞ் சமயவிசேட நிருவாண மபி டேக மிவற்றடங்குமன்றே - சபீச தீக்ஷையானது அதிகாரத் துடனே கூடினதாகையால் சமய விசேஷ நிருவாண மாசாரி

டாபிஷேக மென்னும் நாலு தீக்ஷையு மவரவர் ஞானத்துக் கிடாகப் பண்ணபபடுவது. தீக்ஷையை யநேக பேதமாகச் சொல்லிப்போந் திவ்விடத்து நாலென்று சொல்லுவானேனென்னில்? அந்த தீக்ஷா பேதங்களெல்லா மிந்த நாலு தீக்ஷையிலே யந்தர்ப்பவிக்கு மென நிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

சபீசத் தருகரைச் சாற்றுகின்றார்.

ஓதியுணர்ந் தொழுகுநெறி யிழுக்கா நல்லவுத்தமர்க்கு-சபீச தீக்ஷை படிப்பிக்கப் பண்ணும் விசேஷ வித்தையாகிய சிவாகமங்களைப் படித்துப் பார்த்துப் பதார்த்தங்களைப் பகுத்தறிந்து அச்சமயாசார மார்க்க நடக்கை தப்பாதனுஷ்டிக்குஞ் சாமர்த்தியங் காண்பிக்குஞ் சாமானிய வித்தையாகிய தர்க்க சத்த வேத வேதாந்த மீமாம்ச புராண. முதலிய முற்று மற்றருகமா மிவைகளில் ஒவ்வொன்றைத் தான்படித்துப் பார்த்துப் பதார்த்தங்களைப் பகுத்தறிந்து அச்சமயாசாரமார்க்க நடக்கை தப்பா தனுட்டியாநின்று காண்பிக்குஞ் சாமர்த்திய முடையராய்ச் சத்துத்தமாதி காரிகளாகுஞ் சமயி விசேஷி நிருவாணி சாதகாசாரியர்களா மருகர்க்கு.—

செய்வது - பண்ணுவது,—

உயர்பீசம்-கலைகடை- குறைதலால் முக்கிய சபீசதீக்ஷ,—

இவர் தம்மை - இவ்வைவரையும்,—

நிதியினால் - அவரவர்க்கு அருகமாக,—

நித்திய நைமித்திய காமியத்தில் நிறுத்தி-சமயி விசேஷி நிருவாணி மூவரையும்; நீர்முழுகுதல், தர்ப்பித்தல், ஜபித்தல் பூசித்தல்ஓமித்தல் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நியானித்த

ல், சமாதித்தல், சாக்ஷாத்கரித்தல் முதலியஅவரவர்க் கருகமா ன கன்மங்களை விதிப்படி விழாதுசெய் நித்தியாதிகாரத்திற் பிரதானமாய் நிற்பித்துக் குருக் குறிப்பேவலாற் சிறிதியன்ற நைமித்திகாதிகாரத்திலும், சிகாச்சேதவானாகிய நிருவாணிகட் கு விசேஷித்த நைமித்திகத்தி லதிகார மூன்டென்று காமிக முதலிய சிவாகமஞ்செப்புதலாற் குரு கற்பனையாற் சகல நை மித்திகாதிகாரத்திலும் சிறிது விரும்பிற் குருகற்பனையாற் சிறிது காமியாதிகாரத்திலும் நிற்பித்துச் சாதகாபிஷேகம் பண்ணிச் சாதகனாகக் குறித்து அவனைச் சாதகாபிஷேகம் பண்ணிச் சா த்திய மந்திர ஜபபூசை யோக முதலிய காமியாதிகாரத்திற் பி ரதானமாய் நிற்பித்து, நித்தியாதி காரத்திலும் குருவாஞ்ஞை யினாற் சகல நைமித்திகாதி காரத்திலும் நிற்பித்து, ஆசாரியாபி ஷேகம் பண்ணி ஆசாரியனாகக் குறித்தவனை யாசாரியாபிஷே கம்பண்ணி தீக்ஷை பிரதிட்டை சிவாகமபோதன முதலிய நை மித்திகாதிகாரத்திற்பிரதானமாய்நிற்பித்து நித்தியாதி காரத்தி லும் பரார்த்தம் சிறிது ஸ்வார்த்தமாகவும் சிறிது காமியாதிகார த்திலும் நிற்பித்து,—

நிரம்பவதிகாரம் நிகழ்த்துவதுஞ் செய்து-நிர்ப்பீச தீக்ஷை போல் ஏலுமதிகார மாத்திரமாய் ஏலாவதிகாரக் குறையாய் இ யற்றுவிப்பதின்றி, இப்போது சொல்லிய நித்தியாதிகாரி காமி யாதிகாரி நைமித்திகாதிகாரி மூவர்க்கும் அவரவர்க் கருகமாய் நிறைய வதிகாரம் பண்ணுவது பண்ணுவித்து, அவர்க்குள் ளி ருவரை.—

சாதகா சாரியருமாக்கி - சாதகா சாரியர்களாலுஞ் சிகா ச்சேதமாத்திரஞ் செய்த நிருவாணியாலு மோரிருவர் முறையி ல் ஸ்வதந்திரர்களாயுங் குருவாஞ்ஞையினாலும் பண்ணப்பட்ட தனால்,—

வீடு தருவிக்கும் - மோக்ஷங்கொடுப்பிக்கும் மூவருள் ஆசாரியன் ஸ்வதந்திரமாய்ச் சர்வாதி காரியாதலாற் சர்வசம்பூரண சபீச சாதிகாரதீக்ஷாவானாதலா லவனுக்கே சாதிகார தீக்ஷையென்ப தியல்பினாற் செல்லும்.

திரும்ப அந்தச் சபீசதீக்ஷை,—

உலோகசிவதன்மிணி யென்றிரண்டாம் - உலோகதன்மிணிதீக்ஷை சிவதன்மிணி தீக்ஷையென் றிருவிதமாம்,—

ஆதலினால் - சொல்லிய நீதியினால், சபீசதீக்ஷா பேதமெல்லாம் நிர்ப்பீச தீக்ஷையில் நிரதிகாரையாய் முன் சொல்லிய சமய விசேஷ நிருவாண தீக்ஷைகளை நீக்கி —

அதிகாரையாம்-என்பது தலைகடை குறைதலாற் சாதிகார தீக்ஷையாம்.—

சமய விசேட நிருவாண மபிடேக மிவற் றடங்குமன்றே. அன்றே என்பதசை.

உலோக சிவதன்மிணி யென்ற விடத்துச் சிறிதிசையாதது விசேஷித்திசைப்பாம்.

முறைமையிற் சபீச தீக்ஷாபேத மாகுஞ் சிவதன்மிணி தீக்ஷை உலோகதன்மிணி தீக்ஷை யிரண்டிற்குள் சிவதன்மிணி தீக்ஷை பரையென் றுரைக்கும் நயிஷ்டிகி தீக்ஷை யென்றும் அபரையென் றுரைக்கும் பவுதிகி தீக்ஷை யென்று மிருவிதமாம்,—

அவற்றுள், பரம்பரையாயும் சாக்ஷாத்தாயும் பிரதிசபசர்வஞ்ஞதாதி சிவகுணமணைப்புற்ற முத்திமாத்திர காமிகராயுஞ் சாதக காரிய காமிய சிவதன்ம லோகதன்ம கன்மானுஷ்டான பலப்பற் றற்றவர்களாயும் அவரவர்க்கருகமாஞ் சாமானிய விசேஷ சரியை கிரியை ஜப சாலம்ப சிவயோக நிராலம்ப சிவயோக ஞான திரிபதார்த்த ஞான சிவத்துவ பசுத்துவ விவேக ஞானவான்களாயும், அந்தந்தச் சிவதன்மானுஷ்டான லிலர்க

ளாயுஞ் சிரீகண்டாதி சதாசிவாந்த சாலோக சாமீப சாரூப ச
மபலத் தியான சாத்திய சமபல மூர்த்தி சாயுச்சியங்களையு
ம் சதாசிவ தத்துவத்திற்குமேற் சத்தி சிவதத்துவ கலாபுவ
ன சாதார நிராதாரங்களிற் பரசிவ லோக சாமீப சாரூப சத்து
ச் சித்துச் சமபலதடஸ்த மூர்த்தி சாயுச்சியமுற்றுப் பெற்று மூ
ர்த்முத்தஸ்வரூப சாயுச்சியங்களையும் அவரவர்க்கருகமாய்ச் சா
ருதற்கருகர்களாயுமிருக்கும் சமயிபுத்திரர்கள் புத்திரவிசேஷ
நிரபிஷேக நிரதிகார நிருவாணிகள் சாபிஷேக சாதிகாராசாரி
யர்களிவர்கட்கு யோக்கிய மறிந்து சர்வசிவ புண்ணிய பசு பு
ண்ணிய பாவசஞ்சித கன்மசுத்தி மதியாகவும் அதில்லாதாகவும்
அஷ்டாங்குல மட்டு விட்டறுக்குஞ் சிகாச்சேத வதியாகவும் அ
தில்லாதாகவும் பண்ணுமது நயிஷ்டிகீ சிவதன் மிணி தீக்ஷை.

கூடவுதிக்குமாயேய மாகாமாயேய புத்திகுண வணிமாதி
குண குணஞ் சிற்றுப் பலமாகத்தான், அதிக பலமாகத் தா
ன், அதிக பலமாகவுதிக்குஞ் சரீர நிரவதிக சாதிசய சர்வ
ஞ்ஞதாதி சிவகுண மணைப்புற்ற போகபோகாந்த மோக்ஷ கா
மிகளாயும் மகாப்பிரளய பரியந்த மிந்தச் சரீரத்தைத் தானே
மரண மடாதபடி அதிமார்க்க மாந்திர சாத்திரப் பிரசித்த
விசேஷ சிவ தீர்த்த மருந்து மந்திர யோக முதலிய சிவதன்ம
விசேஷா னுஷ்டானத்தாற் சித்தி பண்ணிக் கொண்டு தாமிரு
க்குப் புவனமது விட்டு முட்டின்றி விரும்பிப்போம் புவனங்க
ட்கிணங்க வேடந்திரித்து வடிவு விரித்து மாயாவதி சரிக்கும்
சாமர்த்திய வாஞ்சா வான்களாயும் சரீரம் விட்டு விரும்பும்
வேறு சரீரம் பரித்து மகாமாயாவதி சரிப்பவிருப்பந் தரிப்பவ
ராயுங் காமிய சிவஞானத்தியான ஜப பூசா சேவாதி சகாமா
ராதனை அல்லதணுபக்ஷப் பிரமாதி நாற் சிவமூர்த்தி யான்மாரு
ட சம்புபக்ஷ பிரமாதி நாற்சிவமூர்த்தி சம்புபட்சமாத்ர சதா
சிவ மூர்த்தி யாகப் பஞ்ச பஞ்ச கலேசுவர மூர்த்திகளு

ள் அவரவர்க்கிஷ்ட பலார்க கலார்க கலேசுவரமூர்த்தி ஞா
னத் தியான ஜப பூஜாசேவாதி சகமாராதனை அல்லது அப்
படிச் சிந்திக்கப்படும் காலாக்கினியாதி அநாசிருதாந்த புவ
னேசுவர்களுள் அவரவர்க் கிஷ்டபலார்க புவனார்க புவனேசுவ
ர ஞானத் தியான ஜபபூசாசேவாதி சகாமாராதனை யென்கி
ன்ற அதிமார்க்க மாந்திர சாஸ்திரப் பிரசித்த சிவதன்மானுஷ்
டான வாஞ்சா வான்களாயு மிருக்குஞ் சாதகர்க்குத் தீக்ஷா
னந்தர மனுஷ்டிக்குஞ் சிவபுண்ணியத்துக் கொத்து மாறின்றிச்
சேரும் முன்செய்த சிவபுண்ணிய மாத்திரம் அந்தந்தச் சாதக
ரடையும் பலார்க கலார்கங்களாய் அந்தந்தக் கலாமரியாதி
யிற் சேஷித்து நிற்கச் சர்வ பசுபுண்ணிய பாவசஞ்சித கன்ம
சுத்தி மதியாகவும் துவாதசாங்குல மட்டுவிட் டிருக்குஞ் சிகா
ச்சேதவதியாகவும் புண்ணுமது பௌதிகசிவதன்மிணி தீக்ஷை.

மாயாவதிமட்டு முட்டும் பிரஞ்ஞாப் பெருக்குத் தனது த
னது வசதி அவதி சுருக்கும்பின் கூடவுதிக்குந்தான் சிற்றுப்பல
மாக அதிக பலமாக வதிக்கும் சாதிசய சர்வஞ்ஞதாதி சிவகு
ண மணப்புற்று மாயாமண்டலத் திருந்தாலும் சிறிதுபெரிதா
தப்பிரஞ்ஞாப்பெருக்குமாயோபரி அபரிமிதமாக விரிக்கும் மா
யேயபுத்தி அணிமாதிகுணமணப்புற்றும் அதுவன்றி வைதிகாத்
தியான்மிக சாத்திரப் பிரசித்த யாகாதி பசுத்தன்மந் தன் கோ
டிக்குளடக்கும் லௌகிக சாத்திரப் பிரசித்த தண்ணீர்பந்தர்
தடாகமுதலிய லோகதன்மந் தழுவியொழுகியும் லோகதன்ம
சிவதன்ம தலாகோடிகளுக்குட் சிறிதொருதலைபற்றி முன்சொ
ல்லிய அதிமார்க்க மாந்திர சாத்திரப்பிரசித்த சிவ தன்ம து
லாகோடி கொழுவி, அச் சிவதன்மானுஷ்டானத்தால் மகா
மாயாபூதி விரும்பில் தன்னோடு கூடவுதிக்கும் மகாமாயேய பு
த்திகுண அணிமாமுதலிய குணபலம் சிற்றுப் பலமாகத்தான்

அதிகபலமாக வுதிக்குஞ் சாதிசயா சர்வஞ்ஞதாதி குணமணைப் புற்று முதிக்கும் போகபோகாந்த மோக்ஷகாமிகளாயும், மகாபிரளய பரியந்தஞ் சிவதன்மிணி பவுதிகிதீக்ஷையில் சொல்லிய இருவகை முறைமையிற் சரீரந் தரித்துச் சரிப்ப விருப்பந் தரிப்பவராயும், சிவதன்மமணைப்புற்ற லோகதன்மம் உலோக தன்ம மணைப்புற்ற சிவதன்மம், இருதன்மானுஷ்டான சீலர்களாயுமிருக்கும் சாதகர்க்கு அந்தந்தச் சாதகர் பொருந்த விரும்பும் அந்தந்தப் பலார்க கலார்க்கங்களாய் அந்தந்தக் கலாமரியாதியிற் பசுபுண்ணியங்கள் சிவபுண்ணியங்கள் பரிசேஷித்துநிற்கப் பாவ கன்மங்கள் அந்தந்தக் கலாமரியாதியிற் பரிசேஷியாது பரிசுத்தியாக அப் பரிசுத்தி மதியாகவும் அந்தந்தச் சாதக்ருக்குட் சதாசிவதத்துவோபரி சத்திசிவதத்துவ போக காமிகட்குத் துவாத சாங்குலமட்டு விட்டமுக்குஞ் சிகாச்சேதவதியாகவும் பிருத்வி தத்துவாதி சதாசிவதத்துவாந்த போக காமிகட்குச் சிகாச்சேதவதியன்றியும் பரையாகவு மபரையாகவு பண்ணுமது உலோக தன்மிணி பவுதிகிதீக்ஷை.

ஸ்ரீமத கோர சிவாசாரியர் பத்ததிமுதற் சிறிதுபத்ததிகளிற் பவுதிகி சிவதன்மிணி தீக்ஷை பவுதிகிலோகதன்மிணி தீக்ஷை இரண்டிற்கும் இருதீக்ஷாபலார்க கலார்க்கங்களாய்ப் பசுபுண்ணிய சிவபுண்ணிய தன்ம கன்மங்கள் பரிசேஷித்து நிற்கக் பாவகன்மங்கள் மாத்திரம் பரிசேஷியாது பரிசுத்தியாகப் பஞ்சகலாசுத்தி யொருமிக்கப்பண்ணி விரும்பிய விரும்பிய புவனபோக போகாந்தத்துப் புநர்தீக்ஷாபேக்ஷை யுபேக்ஷித்துச் சாக்ஷாந்மோக்ஷம் சாரும்படிக்குச் சிவனிட்டது யோசனை செப்பியிருப்பது சிந்தித் தறிக.

நிர் தீக்ஷா பரீக்ஷை பண்ணியது நுண்ணியதுதானே, கிருஹஸ்தாசாரியர் விரக்தாசாரியர் என்று விசேஷியாம லாசாரி

யர்கட்கு நயிஷ்டிகதீக்ஷை யென்று முன்சமுசாயத்திற் சாற்றினீர்! அதுகாலோத்தராதியில் நயிஷ்டிகாசாரியர் நயிஷ்டிகர்க்கும் கிரகத்தர்களுந் தீக்ஷைபண்ணுக, பவுதிகாசாரியர் பவுதிசர்க்கு மாத்திரம் தீக்ஷைபண்ணுக வென்னும் பாடத்தாற் கிருகஸ்காசாரியர்க்கு நயிஷ்டிகதீக்ஷை நாட்டப்படாதென்று நாட்டப்பட்டது. நீ சொல்லிய துள்ளது, ஆசாரியர்கட்கு நயிஷ்டிகதீக்ஷை யென்னுஞ் சர்வஞ்ஞானோத்தர சாமானிய வசனத்தினாலும் நயிஷ்டிகாசாரியர் நயிஷ்டிகருக்கு மாத்திரம், கிருகத்தாசாரியர் நயிஷ்டிகர்க்கும் பவுதிகர்க்கும் பண்ணுக வென்னு மாகமாந்தர விசேஷவசனத்தாலும் நயிஷ்டிகதீக்ஷையினாலே தீக்ஷிதனாயிருக்கும் கிரகத்தனும் விரக்தனும் வர்ஜிக்கப்படாது வாஞ்சிக்கும் பிராரத்தகன்ம பலபோகவாஞ்சை மாத்திரத்தினாலேதான் மணிமந்திர மருந்து முதலிய சாதனமாத்திர சாத்தியகாயிக போகவாஞ்சை மாத்திரத்தினாலேயுந்தான் மலபரிபாகதாரதம்மியத்தால் நைஷ்டிகதீக்ஷா வைசித்திரிய மாத்திரத்தால் இங்கிருந்து வாஞ்சியாதிருக்கவும் சரீராந்தத்திற்முனேவரும் பராபர புத்தி யபரபுத்தி போகவாஞ்சை மாத்திரத்தினாலேயுந் தானசாதக சாத்திய பவுதிக தீட்சா பல புவன பதிபூதி வாஞ்சையில்லாமையாற் பவுதிகனன்று நயிஷ்டிகன்முனே யென்றுஞ் சோமசம்புவிருத்தி வசனத்தாலும், கிரகத்தாசாரியர்கட்கு நயிஷ்டிகதீக்ஷை நன்றாக நாட்டப்பட்டது.

நீரப்படிச் சொல்லில் பவுதிகாசாரியர் பவுதிகர்க்குத் தீக்ஷை பண்ணக் கடவர்க ளென்னும் வசனம் நிஷ்பலமாய் அப் பிரமாண்ணியத் தானமாய்ப் போகாதோ ? நீயப்படிப் போமென்று சொல்லியதெப்படி, போகாது. சபலமாகத் தானே சோமசம்பு பத்ததி வியாக்கியானத்திற் சுருக்கியுரைத்திருப்பது விரித்துரைப்பாம்.

முறைமையில் நிஷ்டை யென்று மோக்ஷத்திற்கும் சமாதிக்கும் விரத முதலியவற்றிற்கும் பெயராதலால், பாலியவயது தொடுத்து மரணாந்தம் விரதம் நியமித்துத் துறவிகளாயிருக்கும் நயிஷ்டிகப் பிரமசாரிக ளென்றும் கன்னிகா கல்யாண காலாவதி விரதம் நியமித்துத் துறவிகளாயிருக்கும் பவுதிகப் பிரம சாரிகளென்றும் இருவகையரராயிருப்பர். விரக்தாசாரியர்களும் கிரகத்தா சாரியர்களும் தனித்தனி சரீராந்தத்தில்வரும் மோக்ஷ விருப்பத்தினாலும் அவரவர்க்கிட்ட புவனபதி பூதி விருப்பத்தினாலும் அவ்விருப்பத்துக் கருகமாய்நயிட்டிகதீக்ஷை பவுதிகதீக்ஷை பண்ணுவித்துக்கொண்டு மூன்று பகுப்பார்களுக்கும் தனித்தனி அட்டாங்குல சிகாச்சேதமுடைய நயிட்டிகாசாரிகளென்றும் துவாதசாங்குல சிகாச்சேத முடைய பௌதிகாசாரிபர்களென்றும் இருவிதமாயிருப்பார்கள். ஆதலால், கிரகத்தாசாரியர்கள் நயிட்டிகா சாரியர்களாயும் பவுதிகா சாரியர்களாயும் குருத்துவம் பரிப்பார்களென்பது பக்ஷமாத்தாணி போற் பதித்து நாட்டினாலும் வசனங்கள் சபலங்கள் தானே! அஃதப்படியாகட்டும், ஸ்ரீகாமிகாமகத்தில் நாலாம் வருணத்தில் நயிட்டிகர்சட்கே நைமித்திக கன்மகர்த்திருத்துவ குருத்துவம்; கிரகத்தருக்கு நித்தியகாமிய கன்ம கர்த்திருத்துவ சமயிபுத்திர சாதகத்துவ மாத்திரம், குருத்துவமில்லை யென்று கூறியதேது? அது உள்ளது. ஆமர்த்தக மடம் முதல் மடகுரு மனக்குறிப்புப் பிரிப்பினால் மடப்பகுப்பாகமங்களிற் சிறிதாகமங்களிற் கூறியது.

காலோத்தராதியில்,—

க்ருஹஸ்தஸ்ஸர்வவர்ணேஷு பூஜ்யோகுருருதாகிருத:
நைஷ்டிகத்வதமோக்ஷேயா பௌதிகந்துவிசேஷத:
சதுர்ணமபிவர்ணாம்லிங்கிநாம்க்ருஹிணமபி
ஆசார்யத்துவம்சிவேநாஸ்மின்ஸித்தாந்தேப்ராதிபாதிகம்

என்று கூறுதலானும், கிரணுகமத்தில் பிராமணுசாரியர்மு தல் ஆசாரியர் நால்வர்க்கும் முறைமையில் நான்கு மூன்று இர ண்டு ஒரு வர்ணங்களிலே கல்யாணம் விதித்திருத்தலானும், சர் வாகமங்களும் அப்படிச் சாற்றுவாம். ஓராகமத்திற் றள்ளிய து கொண்டு தள்ளினுல் பிராமணனே குரு, மற்றை வருணத்தா ர் சாதகர் புத்திரர் சமயிகள் மாத்திரமா யிருப்பார்களென்றும். பிராமணன் பிராமணன் முதல் நால்வர்க்குங் குருவென்றும், அ ரசன் அரசன்முதல் மூவர்க்குங் குருவென்றும், வணிசன் வணி கன்முத லிருவர்கரும் குருவென்றும், சூத்திரன் சூத்திரர்க்குக் குருவென்றும் மேருதந்திரத்திலும் காமிகம் பாராக்கிமை முத லிய ஆகமங்களிலும் முறைமயில் நிஷேதித்தும் விதித்தும் இரு த்தலால் ஒருவசனத்தைப்பிடித்துப் பிராமணன் முனே குரு மற்றவ ரல்லரென்று பேசவேண்டும். அப்படியாகட்டு மென்று நீ சொல்லில் மற்றையர்களுங் குருவென்னும் அநேகாகமவசன ங்களுக்கும் அப்பிராமணியப் பிரசங்கம் வரும்.

பிராமணனில் பிரஞ்ஞாவான்க ளில்லாதிருந்தால் அரச ன் முதலோர்க் கரசன்குரு, அரசிற்பிரஞ்ஞாவான்க ளில்லா திருந்தால் வணிசன்முதலோர்க்கு வணிகன் குரு, வணிகரிற் பி ரஞ்ஞாவான்க ளில்லாதிருந்தால் சூத்திரர்க்குச் சூத்திரன் கு ருவென்னும் வசனங்களுக்குப் பிராமாண்ணியம் சொல்லலா மென்று நீ சொல்லில், நாலாம் வருணத்து நயிட்டிகரிற் பிர ஞ்ஞாவான்கள் இல்லாதிருந்தாற் கிரகத்தன் குருவென்னும் வ சனத்துக்கும் பிரமாண்ணியம் நாம் பேசுவோம். அப்படித் தான் சொலுமென்று நீ சொல்லில் அதுவுங்கூடாது. கிரகத்த ன் சர்வவர்ணங்களிலும் பூச்சியனுகிய குருவென்று கூறுதலா ல் நாலாம்வருணத்து நயிட்டிகர் பிரஞ்ஞாவான்களா யிருந்தா

னும் கிரகத்தரும் பிரஞ்ஞாவான்களா யிருந்தால், இருவகை யாருங் குருவென்று கூறுவோம்.

அப்படித்தானுகட்டு மென்று நீ சொல்லில்? அதுவுங் கூடாது. மந்தப்பிரஞ்ஞாவானுயிருந்தாலும் பிரவாக சந்ததிப் பிரசித்தப் பிரகூதிமானுயிருக்கின்ற குருபுத்திரனைத் தியாச்சியம்பண்ணலாகாதென்று சிவாகமஞ் செப்புதலால் ஒன்றுங் குறியாமற் பிரஞ்ஞாவான்களா யிருக்கிறசீஷர்களுதவியாக அவனே குருவென்று கூறுவோம். இப்போது சொல்லிவந்த வசனங்களாலே விரதிகளில் பிரமசாரியும் கிரகத்தனும் குரு, வானப்பிரத்தனுஞ் சந்நியாசியுங் குருவல்லரென்று கூறப்பட்டது.

ஸ்ரீ காமிகாகமத்தில் சன்னியாசிக்கும் குருத்துவமுண்டென்று கூறியதேது? உள்ளது. சாத்திர திட்சைமாத்திரத்திலென்று சமாதானம். சாட்சாத்கிருத சிவாதிபதார்த்த சித்த சிவயோகியாகில் சாம்பவ தீக்ஷைமாத்திரத்திலென்று சமாதானமாம்.

நாலாம் வருணத்தார்க்குப் பிரணவமாகாதென்று பிராமணர் முதலோர் பேசுவதேது? உள்ளது. குருத்துவம் விதித்திருத்தலாற் பிரணவ பூர்வப் பிராசாதமறியாதவன் குருவல்லனென்று கூறுதலானும், ஸ்ரீ மகுடாகமத்தில்

"நிர்வாணதீக்ஷிதே சூத்ரே
ப்ரணவஞ்ச நியோஜயேத்"

என் றிருத்தலாலும், காமிகத்திலு மப்படி யிருத்தலானும் பிரணவமாமென்று பேசுவோம்

சோமசம்பு பத்ததி முதற் பத்ததி கர்த்தாக்கள் நிஷேதியாதபடியினுலே விசிஷ்ட சமயி முதலானோர்க்கும் பிராமாண்ணியங்கொடுத்திருத்தலானும் ஆமென்பது சூசிக்கப்பட்டது.

பிரஞ்ஞையில்லாப் பிராமணர் சிலர் நாலாம் வருணத்திற் சந்நியாசி இல்லையென்று சாற்றுவார்கள், அது நயிட்டிகப் பிரம

சாரிக்குள் ளடக்கிப் பிராயச் சித்தாதி விதித்தலாலேயும், சிந்தி
ய விசுவசாதாக்கியத்தில் பிராமணர்முதற் பத்துச் சாதிக்கும்
பிரமசரியம் கிரகத்தம் வானப்பிரத்தம் சந்யாசமென்று நான்
காச் சிரமமு முண்டென்று விதித்தலால் சைவத்திற் பிரசி
த்தம்.

வைதிகத்தினும் ராமாயணத்தில் கிருதாயுகக் கிரமத்தில்
பிராமணர் முதல்நால்வர்க்கும் தபோமுக்கியஞ் சாற்றுவது
போலப் பிரமாண்ட புராணத்தில் கிருதயுகத்திற்குப் பிராமண
சந்நியாசி முக்கியன், திரேதாயுகத்திற்கு க்ஷத்திரிய சந்நி
யாசி முக்கியன், துவாபர யுகத்திற்கு வைசிய சந்நியாசி முக்
கியன், கலியுகத்திற்குச் சூத்திர சந்நியாசி முக்கியன் என்னும்
வசன முதல் வசனங்களால் பிரசித்தந்தானே.

சிகாச்சேத மில்லார்க்கு ஆசாரியாபிடேக மாகாதாதலால்
கிரகத்தரிலும் விரக்தரிலும் நயிட்டிகி தீட்சாவான்களால் நயி
ட்டிகாசாரியர்கள் உண்டென்று நாமுன் காட்டுதலால் அவ்விரு
வகை நால்வருணத்தும் நயிட்டிகாசாரியர்களே சாற்றியபரியா
தையில் சைவத்திற் சந்நியாசங் கொடுக்க வேண்டும். வைதிகத்
துக்குப்போலக் குருத்துவமில்லாத சந்நியாசங்கொடுப்பதின்று.

பஞ்சருஷி கோத்திரத்தில் சிவபிராமணர் சர்வாதிகாரிக
ளொன்று காமிகத்திற் சாற்றுதலால் அவர்களிடத்தில் சிவநிட
த்திற் போல நயிட்டிகாசாரியர் பவுதிகா சாரிய ரென்னும் பரி
யாலோசனை சந்நியாசாதி பரிக்கிரகம் பண்ணும் பொருட்டுப் ப
ண்ணுவதின்றென்று சமபுத்தி பண்ணுவதே சால்பு. அதையும், இ
னி யப்பால் நடப்போம்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனிச் சபீசமாவது, மலபரிபாகத்தோடு கூடக் கற்றறிவு மாற்றலும் மிக்குடையராயினார்க்கு, ஆசாரியனுவான் அஃதறிந்து சமயாசார கன்மமாத்திர நிறுத்தி ஏனையவற்றைச் சுத்திசெய் தொழித்து நித்திய கன்மமுதலிய மூன்றினும் பேரதிகார முடையராகச் செய்வதாம். ஆகலின் இது சாதிகார தீக்கையெனவும் பெயர் பெறும். இத்தீக்கைப் பேறுடையார் தீக்கை வேறுபாட்டாற் சாதகரு மாசாரியருமென் றிருதிறப்படுவர். இந்தச் சபீச தீக்கைதான் இல்லற முடையார்க்குத் திரோதான சுத்திரூப சிகாச்சேதமின்றிச் செய்வதாய உலகதருமிணியுந் துறவற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச்சேதத் தோடு செய்வதாகிய சிவதருமிணியுமென் றிருவகைப்படும். இவை முறையே பௌதிக தீக்கை நைட்டிக தீக்கை யெனவும் பரியாயப் பெயர் பெறும். சமய விசேட நிருவாண மபிடேக மென்னும் பேதமெல்லாம் நிர்ப்பீசஞ் சபீசமென்னும் இவ்விரண்டனு ளடங்கு மென்பதாம்.

சமயாசார சுத்தியின்றிச் செய்யும் நிருவாண தீக்கையும் அதற் கங்கமாய்ச் செய்யப்படுஞ் சமய விசேடங்களுஞ் சபீச தீக்கையெனக் கொள்க.

உத்தமத்தி லுத்தமனென்பார், நல்ல வுத்தமரென்றார்.

ஓதியுணர்தலும் ஒழுக்கநெறி யிழுக்காமையுமாகிய விரண்டுமுடையார் உத்தமத்தி லுத்தம ரென்பதூஉம், இரண்டுமில்லாதார் உத்தமத்தி லதமரென்பதூஉம் பெற்றாம்.

பெறவே, நிர்ப்பீசஞ் சபீசமென் றிருதிறப்படுஞ் சாதார தீக்கைக்குரியார் இவ்வாறு முத்திறப் படுவரென்பதாயிற்று.

இங்ஙனங் கூறிய வாற்றால் ஔத்திரியெனத் தொகையா னொன்றும், ஞானவதி கிரியாவதியென வகையா னிரண்டும், ஞானவதி நிர்ப்பீசஞ் சபீசம் கிரியாவதி நிர்ப்பீசஞ் சபீசமென விரியா னான்குமாயவாறு காண்க.

நிர்ப்பீசஞ் சபீசமென்னும் இவற்றின் விரியாகிய சமயவிசேட முதலியவற்றி னியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

இவை மூன்று செய்யுளானுஞ் சாதார தீக்ஷையின் வகையும் அவற்றியல்புகளுந் தொகுத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன் சொன்ன நிர்ப்பீச சபீசமென்ற விரண்டின் நிர்ப்பீசமருளிச்செய்து மேல் சபீச தீக்ஷையின் முறைமையும் உலோக தன்மணி சிவ தன்மணியின் முறைமையு மருளிச்செய்கிறார்.

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல உத்தமர்க்குச் செய்வ துயர்பீசம் - வேதாகம சாத்திரங்க ளெல்லாத்தையு மதிகரித்து அவையிற்றி லுண்டானவர் தங்களையு மறிந்து அந்தச் சாத்திரஞ் சொன்ன முறைமையில் ஒழுங்கு தப்பாமல் நடக்கிற உத்தமரி லுத்தமரா யுள்ளவர்களுக்குச் செய்வது மேலான சபீசதீக்ஷை,—இவர்தம்மை - இந்தவுத்தமர்தங்களை,—நீதியினால் நித்திய நைமித்திய காமியத்தி நிவுத்தி- அவரவர்க்குத் தக்க முறைமையாக நித்திய கன்மத்தையும் நைமித்திய கன்மத்தையும் காமியத்தையும் கற்பித்து நிவுத்தி,—நிரம்பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து - பராநுக்கிரக முதலான எல்லாவதிகாரத்தையுங் குறைவறக் கொடுத்து,—சாதகராசாரியருமாக்கி- நிருவிகற்ப சமாதி முதலானவையிற்றையுங் கற்பித்து ஆசாரியபிஷேகமுஞ் செய்து,—வீடுதருவிக்கும் - மோக்ஷத்தையுங்

கொடுப்பிக்கும். அது,—உலோகசிவ தன்மணியென் றிரண்டாம் - ஆசாரியன் இந்த வான்மாவை இவன் போகங்களுக்கு இச்சையான புவனங்களிலே யோசிப்பிக்கிறது உலோகதன்மணியென்றும் சிவனுடனே யோசிப்பிக்கிறது சிவதன்மணி யென்றும் இரண்டுவகைப்பட்டிருக்கும்.—ஆதலினு லதிகாரையாம்- இப்படிச் சொல்லிவந்த தீக்ஷைகளின் விசேஷங்களினுல் இவையெல்லா மதிகாரையாம்.—சமயவிசேஷ நிருவாண மபிடேகமிவற்றடங்குமன்றே - முன் சொல்லியந்த தீக்ஷைகளெல்லாம் சமயத்திலும் விசேஷத்திலும் நிருவாணத்திலும் அபிஷேகத்திலும் இந்த நாலு தீக்ஷயிலும் அடங்கும்.

'பாலரொடு வாலீசர்'என்ற திருவிருத்தத்தில் 'நிரதிகாரை யென நின்றிரண்டாய் விளங்கும்'என்ற பதத்துக்கு வியாக்யானம் 'இவற்றடங்குமன்றே' என்ற வளவும் வந்து முடிந்தது; இது அதிகாரை என்னுமதுங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது, வேதாகம சாஸ்திரங்களை ஓதியுணர்ந்து அந்தச் சாத்திரஞ் சொன்ன முறைமையினுலே நிற்கிற உள்ளத்தவர்களுக்குச் செய்வது சபீசதீக்ஷை யென்றும், இவர்களுக்கு முறைமையிலே நித்தியம் நைமித்தியங்களையும் கற்பிக்கிறது அதிகாரையாமென்றும்,இந்தத் தீக்ஷைகளெல்லாஞ் சமய விசேஷ நிருவாணம் அபிஷேகமென்கிற நாலிலு மடங்குமென்று முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

உயர்பீசம் - இனிச் சபீசமாவது,—ஓதியுணர்ந் தொழுக்க நெறி யொழுக்கநல்ல வுத்தமர்க்கு-மலபரிபாகத்தோடு கூடக் கற்றறிவு மொழுக்கவழியில் வழுவாது செய்யு மாற்றலு மிக்குடைய வுத்தமத்தி லுத்தம ராயினுர்க்கு நிறுத்தி,—செய்வது - ஆ

சாரியனுவா னஃதறிந்து சமயாசார கன்மமாத்திர நிறுத்தி யேனையவற்றைச் சுத்திசெய் தொழிந்து,—இவர்தம்மை நீதியி னுன் - இவரை முறைமையான்,—நித்திய நைமித்திய காமியத் தி னிரம்பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து - நித்திய நைமித்திய காமியமாகிய மூன்றினும் பேரதிகார முடையராகச் செய்வதா கலின்,—அதிகாரையாம் -இது சாதாரதீக்கையேனவும் பெயர் பெறும்.—சாதகாசாரியருமாக்கி வீடுதருவிக்கும் - இத்தீக்கை ப் பேறுடையார் தீக்கை வேறுபாட்டாற் சாதகரு மாசாரிய ருமென் றிருவகைப்படுவர்.—உலோக சிவதருமணியென் றிர ண்டாம் - இந்த சபீசதீக்கைதா னில்லற முடையார்க்குத் தி ரோதான சத்திரூப சிகாச் சேதமின்றிச் செய்வதாகிய வுல கதருமணியுந், துறவற முடையார்க்குத் திரோதான சத்திரூப சிகாச் சேதத்தோடு செய்வதாகிய சிவதருமணியுமென் றிருவ கைப்படும். இவைமுறையே பவுதிக தீக்கை, நயிட்டிக தீக்கை யெனவும் பரியாயப் பெயர்பெறும்.—ஆதலினுற் சமய விசேட நிருவாண மபிடேக மிவற்றடங்குமன்றே- இவ்வாறுதலிற் சம யவிசேட நிருவாணம் அபிடேகமென்னும் பேதமெல்லா நிற்பீச சபீசமென்னு மிவ்விரண்டி னடங்கும்.

சமயாசார சுத்தியின்றிச் செய்யு நிருவாண தீக்கையும் அ தற் கங்கமாய்ச் செய்யப்படும் சமய விசேடங்களும் சபீசதீக் கை யெனக்கொள்க.

ஓதியுணர்தலு மொழுக்கநெறி யிழுக்காமையுமாகிய விர ண்டையு முடையார் உத்தமத்தி னுத்தமர் எனவே இவ்விரண் டினி லொன்றிலாதார் உத்தமத்தில் மத்திமரெனவும் அவ்விர ண்டு மில்லாதார் உத்தமத்தி லதமரென் பதும்பெற்றும்.

இவை மூன்று செய்யுளானுஞ் சாதார தீக்கையின் வகையும் அவற்றியல்புகளுந் தொகுத்துக் கூறப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை

மேற் றீக்கை யிருவிதத் தொனரு னத்துவா சுத்திசெய்வ தூஉ மவ் வத்துவா வாறென்பதூஉ மதனது வியாப் தியின் முறைமையு முணர்த்துகின்றார்.

அழிவிலாக் கிரியையினு லாதல்சத்திமத்தா லாத லத்துவா சுத்தி பண்ணிமலமகற்றி, யொழிவிலாச் சிவ ம்பிரகா சித்தற்குஞான முதிப்பித்துற் பவந்துடைப்ப னரனொருமூவர்க்கும், வழுவிலா வழியாறு மந்திரங்க ள்பதங்கள் வன்னங்கள்புவனங்க டத்துவங்கள்கலைகள், கழிவிலா துரைத்தமுறை யொன்றினொன் றுவியாத்தி கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன்கண்ணும். (சு)

| | |
|---|---|
| (இ - ள்.) அழிவிலாக்கிரியையினு லாதல் | கேடில்லாத கிரியாவதியென்னுந் தீக்கையினுலே யாதல், |
| சத்திமத்தா லாதல் | அந்தரங்க வியாபாரத்தாற்செய்யு ஞான தீக்கையினுலே யாதல் அவரவர் சத்திபிபா தானுகுணமாக |
| அத்துவா சுத் திபண்ணி | தத்துவாத்துவா முதலான தெல்லாம் பாசபந்த மாகலா னவைகளைப் பஞ்சகலைக ளினு மடைத்துச் சுத்திசெய்து, இஃதாற் பல மியாதோவெனாறல்? |
| மலமகற்றி | ஆணவமுதலியன மூன்று பாசங்களைச் சேதிப்பதுஞ் செய்து. |
| ஒழிவிலாச் சிவம்பிரகாசித்த | அஞ்ஞான நீங்கவே யிவனைவிட்டு நீங்கா து, சிவஞான மிரண்டறத் தரிசனமாகையி |

திருஞான முதிப்பித்து — ன் பொருட்டுச் சர்வஞ்ஞத்துவாதி குணங்களைப் பிரகாசிப்பித்து,

உற்பவந்து டைப்பன் — மேற் றிரும்பிவந்து சனனமெடாதபடி செய்வன். அஃ தென்போலெனில்? நதியிற் ஜலம் சமுத்திரத்திலே பொருந்தி லத்தன்மையாய்த் திரும்பாத வாறுபோல விந்தவான்மாவு மசரீரியுமா யசலனுமாய் நிருமலனுமாய்ச் சர்வஞ்ஞத்துவாதி குணங்களை யுடையனுமா யாதி முத்த சிற்சத்தியிற் பேரானந்தத்தை யனுபவனுமாய்ச் சிவத்தை யடைந்திருப்பன்.

மகுடோத்தரம், ரௌரவமறிக.

அரனொருமூவர்க்கும் — இப்படி யெல்லாருடைய பாசங்களையும் அரிக்கையினுன், அரனென்னுந் திருநாமத்தையுடைய சிவன் முற்கூறிய நிராதார சாதார தீக்கை பேதத்தான மூவகைப்பட்ட வான்மாக்களுக்கு மனுக்கிரகஞ் செய்வன். அத்துவா சுத்தி செய்யுமிடத்து,

வழுவிலா வழிபாரும் — ஆன்மாக்களைப் பரகதி யடைவிப்பிக்கைக் காரணமாகக் குற்றமில்லாத மந்திராத்துவாமுதலிய மார்க்க மறுவிதப்படும். அவை யாவன?

மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கடத்துவங்கள் கலைகள் — அத்தரூபஞ் சத்தரூபமாகிய மந்திர பத வன்ன புவன தத்துவ கலைகளென்று சொல்லிய வாறத்துவாவும்,

கழிவிலா தொத்த முறையொன்றி னொன் — இங்ஙனங் கூறியவாறினு ளொன்றுங் குறையாமற் சொன்ன முறையிலே யொன்றிலே யொன்ருக வியாபித்திருக்கும். அஃதா

வியாத்தி — வது, மந்திர மக்கரங்களின் கூட்டமாகிய பதத்திலே வியாபித்திருக்கும், அப்பதம் வன்னத்திலே வியாபித்திருக்கும், அவ்வன்னம் புவனத்திலே வியாபித்திருக்கும், அப்புவனந் தத்துவத்திலே வியாபித்திருக்கும், அத்தத்துவம் கலைகளிலே வியாபித்திருக்கும்.

கருதுகலை சத்தியின்கண் சத்தி சிவன்கண்ணும் — இவ்வாறினுக்குஞ் சத்தியே துணைக்காரணமாகையாற் கலைகளதனை வியாபித்திருக்கும். அச்சத்தி சிவனுக்குச் சமவாயமாதலாற் சிவனிடத்திலே வியாபித்திருக்கும். எ-று.

கண்ணென்பதேழாமுருபு.

இதற்கு வருணபத்ததியும் ரௌரவமுமெனவறிக. (௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



க்ரியாதீக்ஷை யென்றும் ஞானதீக்ஷை யென்றும் சாம்பவதீக்ஷையென்றும் மூன்றுவிதமாகையால் இந்த மூன்றுவகை தீக்ஷாதிகாரிகள் மூவர்க்கு முத்திபேத முண்டோவென்னில்? பேதமில்லையென்பதும் கன்ய¶ மார்ச்சித்ததுக்குவழியீதென்பதும் மேற் கூறுகின்றது.

அரனொருமூவர்க்கு மழிவிலாக் கிரியையினாலாதல் சத்திமத்தாலாதலத்துவா சுத்திபண்ணி மலமகற்றி பொழிவிலாச் சிவம் பிரகாசிக்க ஞானமுதிப்பித் தூற்பவந் தனைப்பன் - பக்குவான்மாக்களுடைய பாசத்தை ஹரிக்கையினாலே அரனென்னு நாமத்தையுடைய சிவ ஞசாரிய மூர்த்தியை யதிஷ்டித்துநின்று கிரியாதீக்ஷாதிகாரிக்கும் ஞானதீக்ஷையிற் பேதம் சாம்பவதீக்ஷை யாகையால் ஞானதீக்ஷாதிகாரிக்கும் சாம்

பவ தீக்ஷாதிகாரிக்குமிந்த மூன்றுபேருக்கும் ஆகிலுமென்றது ×வியவஸ்தித விகற்பமாதலால் கிரியாதீக்ஷாதிகாரிக்குக் கன்ம*வைகல்யமில்லாத கிரியாதீக்ஷையினாலும் ஞானதீக்ஷாதிகாரிக்கும் சிற்சத்தி § சங்கிதமான மனோ பாவனையினாலே பண்ணும் ஞானதீக்ஷையினாலும் கேவல சிச்சக்திமாத்ரத்தினாலே பண்ணுஞ் சாம்பவ தீட்சையினாலும் அத்துவ சுத்தியைப் பண்ணி.

அத்துவசுத்தியாவது, ஷடத்துவாவிலும் சஞ்சிதமாயிருந்த கன்மங்களை யெல்லாம் நசிப்பித்தல், கன்மங்க ணசிக்கவே மாயையும் நீங்கும் ஆணவமலத்தினுடைய தடையையு மொழித்து நித்தியஞானாநந்த மயமானசிவ மான்மாவினிடத்திலே யபிவியத்தியாவதற்குமுன் னிராகாதி+கலுஷிதமா யிருக்கிற பசுஞானம்போக ஆன்மசுவரூபஞானத்தை பிரகாசிப்பித்து மேல் சநநங்களடாதபடிக்குச் சுத்தம் பண்ணுவன் பதியும்ஆன்மாவும்விபுவா யிருக்க அத்துவாவென்ற தாருக்கென்னில்? ஆன்மா மாயேத்தினாலே பந்திக்கப்பட்டு ஏகதேசத்தை யடைந்து கிஞ்சிஞ்ஞனாய் நின்று தீக்ஷாக் கிரமத்தினாலே யொவ்வொரு தத்துவங்களாக நீங்கி ஸ்வஸ்வரூபமான விபுத்துவத்தையும் சர்வஞ்ஞதையையும் பெற்றுச் சிவத்தை யடைகையினா லத்துவாவென்ற தொழிந்து தேசாத் தேசாந்தரத்தை யடைந்ததென்றதல்ல,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]

இதன்றியும் ஆன்மாவுக்குக் கன்ம மார்ஜிக்கிறத்துக்கு வழியென்பதாக,—

வழுவிலாவழியாறு மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கடத்தவங்கள் கலைகள் - தப்பறக் கன்மமானதென்று மார்க்கமாறாகும். அவை யாதோவென்னில்? மந்திரங்களை †யுதாத்தா ÷ நுதாத்த ‡ஸ்வரிதப் ○ பிரசயங்களுடனே தப்பாம லுச்சரித்தாற் புண்ணியமென்றும் தப்பினாற் பாவமென்றும் வியாகரணத்தை யறிந்து பதங்களைப் பிரித்ததனாற் புண்ணியமென்றும் அறியாதே பிரித்தாற் பாவமென்றும் வன்னங்களை ● ரஸ்வ ┼ தீர்க்கப் ⊥ புலுதம் வழுவாமலந்தந்த ஸ்தானங்களிலே யுச்சரித்தாற் புண்ணியமென்றும் அல்லது பாபமென்றும் புவன நாயகரைப் பண்ணின பூஜாதிகளினாலே புண்ணியமென்றும் தத்திரவியாபகார நிந்தாதிகளினாலே பாபமென்றும் ஞானேந்திரிய கன்மேந்திரியாந்தக்கரணங்களினாலே பராக்குப் பண்ணின வுபகாரத்தினாலும் விசிஷ்டத்திரவிய போக்கியத்தினாலும் புண்ணியமென்றும் பிறர்க்குப் பண்ணின அபகாரத்தினாலு நிஷித்த திரவிய போக்கியத்தினாலும் பாபமென்றும்

ப்ஞ்சகலாபி மானிகளான பஞ்ச சத்திகளுக்குப் டண்ணின பூசா பூசைகளினாலே புண்ணிய பாபமென்றும்,—

கழிவிலா துறைத்தமுறை யொன்றி லொன்று வியாத்தி கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன்கண்ணும் - ஒன்றையொன்று நீங்காத முறைமையாய்ச் சொல்லுகையால் மந்திரங்கள் வியாப்பியமும் பதங்கள வியாபகமும், பதங்கள் வியாப்பியமும் வன்னங்கள் வியாபகமும், வன்னங்கள் வியாப்பியமும் புவனங்கள் வியாபகமும், புவனங்கள் வியாப்பியமும் தத்துவங்கள் வியாபகமும், தத்துவங்கள் வியாப்பியமும்கலைகள் வியாபகமும், கலைகள் வியாப்பியமும் சத்திகள வியாபகமும், சத்திகள் வியாப்பியமுஞ் சிவன் வியாபகமு மாம்.—

இவ்வாறு சிவன்சர்வ வியாபி யாகையா லாறத்துவாக்களினாலே யேற்பட்ட கன்மங்களைக் கூட்டிப் புசிப்பிக்கிறவனும் புசியாதபடிக்கு தீக்ஷையினாலே யொழிக்கிறவனுஞ் சிவனேயாமென் றிதனபொருள்.

¶ ஆர்ஜிதம் - சம்பாதிக்கப் பட்டது, × வியவஸ்திதி-கட்டுப்பாடு * வைகல்யம்-குறைவு § சகிதம்-கூடினது ÷ கலுஷிதம்-கலங்கினது † உதாத்தம் - உரத்துச் சொல்லல் ÷ அநுதாத்தம்-மெள்ளச் சொல்லல் ‡ ஸ்வரிதம் - உச்சரிப்புப்பேதம் ○ பிரசயம் - கூட்டல், ● ரஸ்வம் - குறில் + தீர்க்கம்-நெடில் ⊥ புலுதம்-அளபெடை.

---

## ஞானப்பிரகாசருனா வருமாறு.

——o——

மேற்கிரியாவதி தீக்ஷையினாலேதான் சாம்பவி தீக்ஷை யோகி சாத்தி யென்று சாற்றும் ஞானவதி தீக்ஷையினாலேதா

ன் சடத்துவ சுத்திபண்ணி முத்திவியத்தி பண்ணும் பொருட்டு அறியுஞ் சடத்துவாக்கள் கீழ்மேற் செல்லும் கிரமத்திலே யொன்றினொன்று வியாத்தியை யுடையதாகி வியாப்பிய வியாபகங்களாய்ப் போய்த் தங்களை வியாபிக்குஞ் சிவசத்தியொடு கூடச் சர்வவியாபக சிவனுக்கு வியாப்பியங்களா யிருக்குமெனறு விளம்புகின்றார்.

மலமகற்றி என்பதனால் முத்தி செய் தீக்ஷாலக்ஷண சிவசத்தியாற் பாசமுத்தி சொல்லப்பட்டது,—

சிவம்பிரகாசிக்கும்ஞான முதிப்பித்தென்பதனால், வியத்தி செய்தீக்ஷாலக்ஷண சிவசத்தியாற் சிவசாக்ஷாத் காரோத்திரேக காரண தீக்ஷித சிவத்துவ லக்ஷண சிற்சத்தியினது விர்த்திரூப சர்வபதார்த்த கர்ப்ப சிவ சாக்ஷாத்கார சமுத்திரேக ரூப வியத்தி சொல்லப்பட்டது,—

உற்பவர்துடைப்ப னென்பதனால், மீளத்திரும்புதலில்லை யென்பது விளம்பப்பட்டது.

சிவனுக்குச் சிவசத்தி வியாப்ய மென்றது சிவசமவேதையாற்செலுத்தப்பட் டிருத்தலா லுபசாரம்.

மற்றவை வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அரன்.குருமூர்த்தியை யதிட்டித்துநின்று, மந்திரமுதலாறு வகைப்படு மத்துவாக்க ளொன்றினொன்றடங்க இறுதிக்கணின்றகலை திரோதான சத்தியினும் அது சிவத்தினு மடங்குமாறுணர்ந்து அவ்வாறடக்கி நிர்ப்பீசமெனத் தனித்தனி யிருவகைப் படுமென மேற்கூறிப்போந்த ஞானவதி கிரியாவதியென்னு மி

ரண்டனுளொருதீக்கையானே உத்தமத்திலுத்தமர்முதலிய வம்மூவர்க்கும் அறுவகை யத்துவாக்களையுஞ் சோதிக்குமுகத்தாற் பிறவிக்கேதுவாகிய மலத்தைக் கெடுத்துச் சிவம்பிரகாசித்தற் கேதுவாகிய ஞானத்தைக் கொடுக்குமென்பதாய்.

கிரியை ஆகுபெயர்.

ஔத்திரி யிரண்டுதிறனு மிலகுஞானங்கிரியையென முதற்கணெடுத்துச்கொண்டு முடிவின்கண் அழிவிலாக்கிரியை யினுலாதல் சத்திமத்தாலாதலென முடித்தமையின், இடைக்கட் கூறப்பட்டனவெல்லாம் இவ்விரண்டற்கும் பொதுவாமாறு காண்க.

சோமசம்புபத்ததி வருணபத்ததி முதலியவற்றினும் இவ்வாறே கூறப்பட்டன.

இதனானே ஆசிரியன் தீக்கை செய்யுமாறு தொகுத்துக் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

———o———

பரமேசுவரன் கிரியாவதியாலாதல் ஞானவதியாலாதல் அத்துவாக்களைச் சோதித்து ஆன்மாக்கள் மலங்களைப் போக்குகிற முறைமை மேலருளிச்செய்கிறார்.

அழிவிலாக்கிரியையினாலாதல் சத்திமத்தாலாதல்-அநாதியே நித்தியமாயுள்ள கிரியாவதியாலாதல் ஞானவதியா லாதல்,— அத்துவாசுத்திபண்ணி - அத்துவாக்களிலே யெல்லையற்ற ஜனனங்களுக்கு ஏதுவான கன்மங்களை யெல்லாம் சுத்திகரித்து,— மலமகற்றி - மலமாயாதி கன்மங்களைப் போக்கி,—ஒழிவிலாச் சிவம்பிரகாசிக்கு ஞானமுதிப்பித் தற்பவந்துடைப்ப னரனெ

ருமூவர்க்கும் - உயிர்க்குயிராய் அநாதியே இவனைவிட்டு நீங்காமல் நிற்கிற சிவப்பிரகாசத்தை யுண்டாக்குகிற பரஞானத்தையுந் தோற்றுவித்து ஜனனத்தையு மறுப்பன் பரமேஸ்வரன். மூன்றுவகைப்பட்டஆன்மாக்களுக்கும்,—வழுவிலாவழியாரும் - மலத்தைப் போக்குகைக்கு ஏதுவாயிருக்கிற குற்றமற்ற அத்துவாக்கள் ஆறுவகைப்பட்டிருக்கும். அவையாவன?—மந்திரங்கள்பதங்கள் வன்னங்கள்புவனங்கள் தத்துவங்கள் கலைகள் - மந்திரங்கள் பதங்கள் அக்கரங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் என்கிற விந்த ஆறினுண்மையும்,—கழிவிலாதுரைத்தமுறை - வழுவற வேதாகமங்கள் சொன்ன முறைமை,—ஒன்றிலொன்று வியாத்தி - இந்த ஆறு அத்துவாவும் தன்னில் ஒன்றிலே யொன்றாக வியாபித் திருக்கும். இவையே திடமாக நிற்குமென்று விசாரிக்கில்,—கருதுகலை சத்தியின்கண் - மற்றுள்ள அஞ்சத்துவாக்களுக்கும் நிற்கைக்கிடம் இதுவென்று கருதப்பட்ட கலைகள்,இந்தக் கலைகள் நிற்கைக் கிடமாயிருக்கும் சத்தி, இந்தச்சத்திக் கிடமேதென்னில்,—சத்திசிவன் கண்ணும் - இவையிதற்கெல்லாம் மேலான சத்தி பரமேஸ்வரனிடமாக நிற்கும்.

இதனாற் சொல்லியது ஆன்மாக்களுக்குப் பரமேஸ்வரன் அத்துவாக்களைச் சோதித்து மலத்தையும் போக்கி அநாதியே யுயிர்க்குயிராய் நிற்கிற தன்னைத் தரிசிப்பிக்கிற ஞானத்தையுந் தோற்றுவித்து இவர்கள் சனனத்தையு மறுப்பனென்றும், அத்துவாக்கள் ஆறுவகைப்பட் டிருக்குமென்றும், இவையொன்றிலேயொன்று வியாத்தியா யிருக்குமென்றும், இந்த அத்துவாக்கள் சத்தியிடமாக நிற்குமென்றும், இந்தச்சத்தி சிவனிடமாகநிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

அரன்-முதல்வன், குருமூர்த்தி யதிட்டித்துநின்று,—மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகளாறும் வழுவிலாவழி-மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலைகளென் றறுவகைப்படும் வழுவிலாத அத்துவாக்கள்,—கழிவிலாதுரைத்தமுறை யொன்றி னொன்று வியாத்தி- நீங்குதலின்றிச்சொல்லிய முறையே யொன்றினொன் றடங்க,—கருது கலை சத்தியின்கண் - இறுதிக்கணின்ற கருதுகின்றகலைத் திரோதான சத்தியினும்,— சத்திசிவன்கண்ணும் - அத்திரோதானசத்திசிவத்தினு மடங்குமாறுஉணர்ந்து அவ்வாறடக்கி,—அழிவிலாக் கிரியையினுலாதல் சத்திமதத்தாலாதல் - நிற்பீசம் சபீசமெனத் தனித்தனியிருவகைப்படுமென மேற்கூறிப்போந்த ஞானவதி கிரியாவதியென்னு மிரண்டனு ளொருதீக்கையானே,—ஒருமூவர்க்கு மத்துவா சுத்திபண்ணி மலமகற்றி- உத்தமத்திலுத்தமர்முதலிய வம்மூவர்க்கு மறுவகை யத்துவாக்களையுஞ் சோதிக்கு முகத்தாற் பிறவிக்கேதுவாகிய மலத்தைக் கெடுத்து,—ஒழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானமுதிப்பித்து - எவ்விடத்தும் வியாபகமாய் விளங்குகின்ற சிவம் பிரகாசித்தற்கேதுவாகிய ஞானத்தைக் கொடுத்து,—உற்பவம் தொடைப்பன் - பிறவியைபொழிப்பன்.

இதனானே ஆசாரியன் தீக்கைசெய்யுமாறு தொகுத்துக் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனம் வியாப்தியினது முறைமை தொகுத்துக் கூறிய தீக்கையின் மந்திர முதலிய வைந்தினையும் பஞ்ச கலை

சளில் வியாபித்து நிற்கு மதனைப் பிறித் தடைவே
மூன்று விருத்தத்தா லுணர்த்துகின்றார்.

மந்திரங்கண் முதலைந்துங் கலையைந்தின்வியாத்
தி மருவுமந் திரமிரண்டு பதங்களுலே, மந்தநிலை யெ
ழுத்தொன்று புவனநூற்றெட் டவனிதத் துவமொன்
று நிவிர்த்தியயன்றெய்வம், வந்திடுமந் திரமிரண்டு
பதங்கண்மூவேழ் வன்னங்க ளுலாறு புரமைம்பத்தா
று, தந்திடுந்தத் துவங்களிரு பத்துமூன்று தரும்பிர
திட்டாகலைமா லதிதெய்வந்தாளும்.                    (எ)

(இ-ள்.) மந்திரங்கண் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி — மந்திராத்துவா முதலிய வைந்தும் நிவிர்த்திமுதலிய கலைகளிலே வியாபித்து நிற்கும். அஃதாவது,

மருவு மந்திரமிரண்டு — சத்தியோசாதம் இதயம் ஆக மந்திரமிரண்டு.

பதங்களுலேழ் — பதாத்துவாவிற் பதங்கள்ஓம் நமோ நம வென்னும் பதமுதலாக மஹாதேவ என்னும் பதமீறாக விருபத்தெட்டு.

அந்த நிலையெழுத்தொன்று — அந்தமுறையே அக்கரம் க்ஷகாரமொன்று.

புவன நூற்றெட்டு — புவனங்கள் ௱அ. அவையாயன:—

பிரமாண்டத்துட்—காலாக்கினியாதி யுருத்திரபுவன
    மீறாகப் புவனம்                                    சுா
கபாலீசாதி திரிதேசாதிபதி யீறாகக் கீழ்த்திக்கி
    ற் புவனம்                                        கO

அக்கினி யுருத்திரராதியாக க்ஷயாந்தரீருக அ
க்கினிதிக்கிற் புவனம் க௦

யாமிய வுருத்திராதியாக அதன்ம ரீருக யமதிக்
கிற் புவனம் க௦

நிருதியாதி தௌஷ்ட்ரிகனீருக நிருதிதிக்கிற் புவ
னம் க௦

பௌலனாதி சுதாந்தருத்திர ரீருக வருணதிக்கிற் பு
வனம் க௦

சீக்கிரனாதியாக மேகவாகன னீருக வாயுதிக்கிற்
புவனம் க௦

நிதிசாரதியாகப் பிரகாச ருத்திரரீருகக் குபேர
திக்கிற் புவனம் க௦

வித்தியாதிப ராதியாக பலிப்பிரிய ரீருக வீசான
திககிற் புவனம் க௦

அண்டகடாகத்துக்குக் கீழாக மாயனாதி யந்தி
வச்சிர தெங்கட்டிரனீருகப் புவனம் க௦

அண்டகடாக வோட்டுக்குமேல் சம்புருத்திரா
தியாகத் திரிலோசன ரீருகப் புவனம் க௦

இவர்களுக்கு மேலாக வீரபத்திரர் பத்திரகாளி
புவனம் உ

ஆ புவனம் ... க௦அ

அவனிதத்துவ பிருதிவி தத்துவம் - க.
மொன்று இப்படி வியாபித்திருக்கும்
நிவர்த்தியயன் நிவிர்த்தி கலைக்கு அதிபதி பிரம்மா என
றெய்வம் வறிக

நிவிர்த்தியென்னுஞ் சொற்பொருள் தன்னிடத் தடைந்த
பக்குவர்களுக்குச் சங்கற்பங்களை விடுவித்துத் திருப்புவிக்கை
யா னிவிர்த்தியெனக் காரணத்தாற்பெயராயிற்று.

மேல்பிரதிட்டா கலையில் வியாபிக்கு முறையாவன?

| | |
|---|---|
| மந்திரங்கள் இரண்டு | வாமதேவம் சிரசு ஆகமந்திர மிரண்டு. |
| பதங்கள் மூவேழு | மகேசுர னென்னும் பதமுதலாக அரூபின் அரூபின் என்றபதமீறாகப் பதங்களிருபத்தொன்று. |
| வன்னங்களைந்து | ளகாரமுதல் டகாரமீறாக வெழுத்துகளிருபத்துநாலு. |

ஈண்டு ளகாரம் டகாரம் தம்பெயர் கிளத்தலால் மொழிக்கு முதலாகக் கூறியதெனவறிக.

| | |
|---|---|
| புரமைம்பத்தாறு | புவனங்களைம்பத்தாறு, அவையாவன? |

| | |
|---|---|
| அப்புதத்துவத்தில் அமரேசாதி லகுளீசுர ரீறுகப்புவனம் | அ |
| தேயுவில் அரிச்சந்திராதி வைரவ மீறுகப் புவனம் | அ |
| வாயுவில் இயக்ஷாதிப ராதியாக ஸ்மேசுர ரீறுகப் புவனம் | அ |
| ஆகாசத்தில் வத்திராபராதி தானவுருத்திர ரீறுகப் புவனம் | அ |
| தன்மாத்திரையில் சகலண்டம் துவிரண்டம் மாகோடம் மண்டலேசுரம் ஆசப்புவனம் | ரு |
| கன்மேந்திரியத்தில் காலசோமம் என்னும் புவனம் | க |
| ஞானேந்திரியத்தில் சங்குகன்ன மென்னும் புவனம் | க |
| மனத்தில் தாலேசுர மென்னும் புவனம் | க |
| ஆங்காரத்தில் தலேசுர மென்னும் புவனம் | க |
| ஆகப் புவனம் ... | அ |

புத்தியில் பைசாசமாதியாகப் பிரமமீறாகத் தே
வயோனிகளாகிய புவனம் அ
பிரதிகிருதி குணத்தில் அகிருதை முதல் சீகண்ட
புவன மீறாகப் புவனம் அ
ஆ புவனம் ருக

தந்திரிந் தத்து வங்களிருபத் து மூன்று — அப்பு தத்துவமுதற் பிரகிருதி யீறாகத் தத்துவங்கள் உங. தந்திரமென்பதனை பிரகிருதி மாதாவாகையால் தந்திரமெனப் பொருள் வருவிக்க.

தரும் பிரதிட் டாகலை — இவைகளெல்லாத்தையும் பிரதிட்டாகலை தன்னிடத்திலே யடக்கிக்கொண்டு பின்புண்டாக்கும்.

மாலதிதெய்வந்தானும். — இச்சிறப்பினை யுடைய பிரதிட்டா கலைக்கு மாயன் காரணேசுரனாதலால் எ-று.

பிரதிட்டை யென்னுஞ் சொற்பொருள் தன்னையடைந்த வான்மாக்கட்கு முன்சொன்ன சங்கற்ப விகற்பங்களை விசேடித்து நிலைநிறுத்தலாற் பிரதிட்டை யெனப் பெயர் காரணத்தாலாயிற்று. (எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் பஞ்ச கலையிலும் மந்திர பத வன்ன புவன தத்துவங்களிற்கு முறைமை கூறுகின்றது.

மந்திரங்கள் முதலைந்துங் கலைபந்தின் வியாத்தி-மந்திர பத வர்ண புவன தத்துவங்களைந்தும் நிவிர்த்தியாதி பஞ்ச கலைகளினாலே வியாபிக்கப்படும்.

மேல் வெளிப்பதம்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

ஆறத்துவாக்களுக்குள் மந்திரமுதலேந்துங் கலையைந்தின் வியாத்தியையுடைய தாதலினால், வியாபகமாயிருக்குங் கலைகளுக்கு வியாப்பியமென்றுஞ் சூசிப்பித்துச் சடத்துவாவில் மந்திரத்தட் பஞ்சப்பிரமங்களுக்குச் சங்காரக் கிரமம் சத்தியோஜாதாதி யீசானந்தம்.

நேத்திரம் விட்டுச் சடங்கங்களுக்குச் சங்காரக்கிரமம் இருதயாதி அத்திராந்தம்.

பதங்களுக்கு ஓமாத்தியோமாந்தம்.

வன்னங்களுக் குக்ஷகாராதி அகாராந்தம்.

புவனங்களுச்குக் காலாக்கினியாதி யநாசிருகாந்தம்.

தத்துவங்களுககுப் பிருதிவியாதி சிவதத்துவாந்தம்.

கலைகளுக்கு நிவிர்த்தியாதி சாந்தியதீதையந்தமென்று சிந்தித்துக்கொண்டு, சங்காரக் கிரமத்தில் மந்திரமுதலேந்துங் கலையைந்தினிற்கு முறைமை மூன்று திருவிருத்தத்தால் வகுத்துரைக்கின்றார்.

இது முதல்-௩-வது, செய்யுள்வரை வெளிப்படை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

இதனை ௩-வது செய்யுளுரையிற் காண்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன் சொல்லி வந்த அத்துவாக்களாறில் மந்திரமுதலான ஐந்தத்துவாவும் கலை யத்துவாவிலே வியாத்தியாயிருக்கிற முறைமை மே லருளிச் செய்கிறார்.

மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தில் வியாத்தி - மந்திரங்கள் முதலாக வெண்ணப்பட்ட ஐந்தத்துவாவும் கலைகளைந்திலும் வியாத்தமாயிருக்கும். அதெங்ஙனே யென்னில்?—மருவு மந்திரமிரண்டு பதங்களுலே முந்தநிலை யெழுத்தொன்று புவனநூற்றெட் டவனிதத்துவமொன்று நிவிர்தியயன்றெய்வம் - நிவிர்த்தி கலையிலே பொருநதப்பட்ட மந்திரமிரண்டும் பதங்களிருபத்தெட்டும் அதிலே நிலைபெற்று நிற்கும் அக்கரமொன்றும் புவனம் நூற்றெட்டும் பிருதுவி தத்துவமொன்றும் இதற்குத் தெய்வம் பிரம்மாவுமாகும்.—வந்திடு மந்திரமிரண்டு பதங்கள் மூவேழ் வன்னங்களுலாறு புரமைம்பத்தாறு தந்திடுந் தத்துவங்களிருபத்துமூனறு தரும்பிரதிட்டாகலை மாலதிதெய்வந்தானும் - பிரதிட்டாகலையிலே யிரண்டு மந்திரமும் இருபத்தொரு பதமும் இருபத்துநாலு அக்கரமும் ஐம்பத்தாறு புவனமும் இதற்குள்ள இருபத்துமூன்று தத்துவமு மாகப் பொருந்தும். இதற்குத் தெய்வம் விஷ்ணுவுமாம்.

இதனுற் சொல்லியது, மந்திரங்கள் முதலான ஐந்தத்துவாவும் கலைகளைந்திலும் வியாத்தமா யிருக்குமென்றும் நிவிர்த்திகலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தெட்டுப் பதமும் ஓரக்கரமும் நூற்றெட்டுப் புவனமும் பிருதுவி தத்துவமொன்றும் தெய்வம் பிரம்மாவுமாகப் பொருந்தி நிற்குமெனறும், பிரதிட்டா கலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தொரு பதமும் இருபத்து நாலு அக்கரமும் ஐம்பத்தாறு புவனமும் இருபத்துமூன்று தத்துவமும் தெய்வம் விஷ்ணுவும் ஆகப் பொருந்தி நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

மந்திரங்கண்முதலைந்துங் கலையைந்தில் வியாத்திமருவும்-அசுத்த மிச்சிரஞ் சுத்தமென மூவகை யத்துவாக்களு மந்திரங்கள் முதலாக வைக்கப்பட்டு ஒன்றிலொன்று வியாத்தியாய் முறையானே பஞ்சகலைகளு ளடங்குமா றெங்ஙன மெனின்?—நிவர்த்தி - அவற்று ணிவர்த்திகலையின்கண்,—அவனி தத்துவமொன்று - பிருதிவிதத்துவ மொன்றும்,—புவன நூற்றெட்டு-நூற்றெட்டுப் புவனங்களும்,—அந்தநிலை யெழுத்தொன்று-இறுதியாகிய வெழுத்தொன்றும்,—பதங்களுலேழ்-பதங்க ளிருபத்தெட்டும்,— மந்திரமிரண்டும் - மந்திரங்க ளிரண்டுமாக விவைகளி லொன்றிலொன்றாக வடங்குவன;—அயனதெய்வம் - அதற்குப்பிரம னதிதெய்வமாம்.— தரும்பிரதிட்டாகலை-சரப்பட்ட பிரதிட்டா கலைக்கண்,—தங்கிடும் தத்துவங்கள் இருபத்துமூன்று-தரப்பட்ட தத்துவங்க ளிருபத்துமூன்றும்,—புர மைம்பத்தாறு-புவன மைம்பத்தாறும்,— வன்னங்களுலாறு-வன்னங்களிருபத்தினாலும், —பதங்கண்மூவேழ்-பதங்க ளிருபத்தொனறும்,— வந்திடுமந்திரமிரண்டு-வாராநின்ற மந்திரமிரண்டுமாக விவைக ளொன்றிலொன்றாக வடங்குவன;—மா லதிதெய்வந்தானும் - அதற்குமால் அதிதெய்வமாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

——❦——

மேல் வித்தை சாந்திகலைகளை யுணர்த்துகின்றார்.

வித்தையின்மந் திரமிரண்டு பதநாலைந்து விரவுமெழுத் தேழுபுர மிருபத்தேழு, தத்துவமு மோரேழு தங்குமதிதெய்வந் தாவிலுருத் திரனாகுஞ் சாந்திதன்னி

ல், வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதினொன்று வ
ன்னமொரு மூன்றுபுரம் பதினெட்டாகு, முத்தமமா
ந் தத்துவமு மொருமூன்றாகு முணரிலதி தேவதையு
முயபரீசனுமே. (அ)

(இ-ள்.) விதனை — வித்தியாகலையில் அகோரஞ் சிகையாக
யின் மந்தி ரமிரண்டு — மந்திர மிரண்டு.

பதநாலைந்து — பதங்க ளிருபது. அவையாவன? வியாபி
ன்வியாபின்என்னும் பதமுதலாகத் தியான
காராயஅவென்னும் பதமீறாக வென்றறிக.

விரவுமெழுத் தேழு — ஞகார முதல் வகாரமீறாக வக்கரங்க
ளேழு

புரமிருபத்தே ழு — புவனங்க ளிருபத்தேழு. அவையாவன.

வாமாதி — புருட தத்துவத்தில்
ஏகவீராந்தபுவனம் — சு
இராகத்தில் பிரசண்டபதி யாகச் சிவாந்தமான புவனம் — ரு
நியதிமுதலிய தத்துவங்களிற் குரோதராதியாக சிகேத ருத்திராந்தமாக வொவ்வொன்றி லிருவராக வெண்ம ரிருப்பர்கள் — அ
மாயையில் மகாத்ததிமுத லங்குட்ட ருத்திராந்தமாகப் புவனம் — அ
ஆகப் புவனம் — உஎ

தத்துவமு மோரேழு — புருடதத்துவமுதல் மாயையீறாகத் தத்துவங்கள் — எ

தங்கு மதிதெய்வந் தாவிலுருத்திரனும் — இந்தக்கலையை யதிட்டித்துக் கொண்டெழுந்தருளி யிருக்குங் கேடில்லாதிருக்கிற வுருத்திர மூர்த்தியாகும்.

வித்தியா கலையென்பதன்பொருள் அத்தை யடைந்திருக்கி றவான்மாக்க ளறிவைப் பிரகாசிப்பிக்கையால் வித்தையெனப் பெற்றபெயர். மேற்சாந்தி கலை

சாந்திதன்னில் — சாந்திகலைக்கு மந்திரந் தற்புருடம் தவ
வைத்தன மந்தி — சம் ஆக உ.
ரமிரண்டு

பதங்கள் பதி — நித்தியயோகினேயென்னும் பதமுதல் வி
னொன்று — யோமவியாபினேயென்னும் பதமீருகப் பத
ம்பதினொன்று.

வன்னமொரு — ம-வ-க-எனவெழுத்து-ச.
மூன்று

புரம் பதினெ — சுத்தவித்தியா தத்துவத்தில் வாமைமுதல்
ட்டாகும் — மனோன்மனி புவனமீருகப்புவனம் கூ
ஈசுவரதத்துவத்தில் அநந்தேசுவரராதியாகச் சி
கண்டியீருகப்புவனம் அ
சாதாக்கியதத்துவத்தில் சாதாக்கிய புவனம் க
ஆகப் புவனம் சஅ

உத்தமமாந்த — உத்தமமாகிய சுத்தமாயையிற்றோற்
த்துவமூ மொரு — றிய சுத்தவித்தை யீசுரஞ்சாதாக்கியம்
மூன்றுரும் — ஆகத் தத்துவம் ந

உணரிலதிதே — இக்கலைக்குத் தேவதையைவிசாரிக்கி லீசு
வதையு முயரீச — வரமூர்த்தியதிட்டாதா-எ-று.
னுமே.

சாந்திகலைக்குப்பொருள் இந்தக்கலையை யடைந்திருக்கிற வான்மாக்களுக்கிராகத்துவேடமில்லாதபடியாலும் சங்கற்பித்த தன்வழிச் செல்லாமற் பரமமான சாந்திவருகையால்பெற்ற காரணப்பெயர். (அ

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

வித்தையில் இதவுமது.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

வெளிப்படை.

## சிவஞானயோகியருரை வருமாறு.

கூ-உரையிற் காண்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேல் வித்தைக்குஞ் சாந்திக்கும் அத்துவாக்கள் நின்ற முறைமை யருளிச்செய்கிறார்.

வித்தையின்மந்திரமிரண்டு பதநாலைந்து விரவுமெழுத்தேழு புரமிருபத்தேழு தத்துவமுமோரேழு தங்குமதிதெய்வங் காவிலுத்திரனாகும் - வித்தியாகலையிலே பொருந்தப்பட்ட இரண்டு மந்திரமும் இருபது பதமும் ஏழு அக்கரமும் இருபத்தேழு புவனமும் ஏழு தத்துவமும். இதற்குநிற்கு மதிதெய்வம் விட்டு நீங்காத உருத்திரனுமாகும்.—சாந்திதன்னில் வைத்தனமந்திர மிரண்டு பதங்கள்பதினொன்று வன்னமொரு மூன்று புரம்பதி னெட்டாகுமுத்தமமாந் தத்துவமு மொருமூன்றாகு முணரில திதெய்வ முயரீசனுமே - சாந்திகலைக்கு மந்திரமிரண்டும் பதினொருபதமும் மூன்று அக்கரமும் பதினெட்டுப் புவனமும் நன்

மைப் பதியினையுடைய தத்துவமூன்றும். விசாரித்துப்பார்க்கில் அதிதெய்வம் மேலான மஹேஸ்வரனுமாகும்.

இதனாற் சொல்லியது வித்தியாகலையிலே யிரண்டு மந்திர மும் இருபது பதமும் ஏழு அக்கரமும் இருபத்தேழு புவனமும் ஏழு தத்துவமும் அதிதெய்வம் உருத்திரனும் ஆகப் பொருந்தி நிற்குமென்றும், சாந்திகலையிலே இரண்டு மந்திரமும் பதினொரு பதமும் மூன்றக்கரமும் பதினெட்டுப் புவனமும் மூனறு தத்து வமும் அதிதெய்வ மஹேஸ்வரனு மாமென்னு முறைமையு மறி வித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

வித்தையின் - வித்தியாகலையினகண்,— தத்துவமோரே ழு - தத்துவமேழும்,— புரமிருபத்தேழு-புவனம்இருபத்தேழு ம்,— விரவுமெழுத்தேழு-விரவுகின்றவன்னமேழும்,—பதநாலை ந்து - பதங்களிருபதும்,— மந்திரமிரண்டு - மந்திரங்களிரண்டு மாக விவைகளொன்றினொன்றாக வடங்குவன,—தாவிலுருத்தி ர னதிதெய்வமாகும் - அதற்குமுடிவிலதாத உருத்திர னதிதெ ய்வமாம்,—சாந்திதன்னில் - சாந்திகலைக்கண்,— உத்தமமாந்த த்துவ முமொருமூன்றாகும் - உத்தமமாகிய தத்துவமூன்றும்,— புரம்பதினெட்டாகும் - புவனம்பதினெட்டும்,—வன்னமொரு மூன்றும் - வன்னங்கள்மூன்றும்,—பதங்கள்பதினொன்று - பத ங்கள்பதினொன்றும்,—மந்திரமிரண்டு - மந்திரங்களிரண்டு மா க விவைகளி னொன்றினொன்றாக வடங்குவன,—உணரிலுயரீச னதி தேவதையுமாகும் - உணருமிடத் ததற்கு மயேச்சுர னதி தெய்வமாம்.

## மறைஞானதேசிகர் உரை



*மேற் சாந்தியாதீதகலையி னடைவு முற்கூறிப்போந்த வற்றையு முடித்துக்காட்டுகின்றது.*

சாந்தியா தீதகலை தன்னின்மந்திரங்க டாமூன்று பதமொன்றக் கரங்கள்பதினாறு, வாய்ந்தபுர மூவைந் து தத்துவங்களிரண்டு மருவுமதி தேவதையு மன்னுச தாசிவமா, மேய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்றுப தங்க ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன்றாகு, மாய்ந்தபுர மிருநூற்றே டிருபத்துநாலா மறிதருதத் துவமுப்பத் தாறுகலையைந்தே. (க)

| | | |
|---|---|---|
| (இ-ள்) சாந்தியா தீதகலைதன்னின் மந்திரங்க டான்மூன்று | சாந்தியா தீதகலையில் வியாபித்திருக்கு மந்திரங்கள். ஈசானம் அத்திரம் மூலமந்திரம் | ஆக ௩. |
| பதமொன்று | ஓம் என்னும் பதம்-க. | |
| அக்கரங்கள் பதினாறு | அகாரமுதல் அஃ வரை | கசு. |
| வாய்ந்தபுர மூவைந்து | சத்தி தத்துவத்திலிருக்கும் நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியாதீதமெனக் கூறியபுவனம் | ரு. |

இச்சத்தி தத்துவம் நிரவயவ மாதலாற் புவனமிருக்குமென்றது கூடாதெனின்? ஈசுர தத்துவத்துக்கு மேல் சாதாக்கிய தத்துவம், சாந்தி புவனபரியந்த மிருக்குமென் றாகமமோதுகையால் சாந்தியாதீதகலை யிருக்குமென வறிக.

கீழுள்ள குணதத்துவ முதலாயின வற்றுக்கு மிவ்வாறுணர்ந்துகொள்க.

சிவதத்துவத்திற் புவனம் இந்திகை தீபிகை ரோசிகை மோசிகை ஊர்த்துவகாமினி வியாபினி வியோமரூபினி அனந்தை அநாதை அநாசிருதை ஆ கo

ஆ புவனம்-சரு.

| | |
|---|---|
| தத்துவங்களிரண்டு | சத்திதத்துவம் சிவதத்துவம் ஆ உ. |
| மருவு மதித்தேவதையு மனுசதாசிவமாம் | இந்தக்கலைக் கதிட்டாதா சதாசிவதேவநாயனார். |

இங்ஙன மோதியவற்றை முடித் துணர்த்துகின்றார்.

| | |
|---|---|
| ஏய்ந்த முறை | இப்படிப் பஞ்ச கலை வியாபித்து நின்ற முறை, |
| மந்திரங்கள் பதினொன்று பதங்க ளெண்பததொன் றக்கரங்களைம் பத்தொன் றுரு மாய்ந்தபுர மிருநூற்றே டிருபத்துநாலா மறிகரு தத்துவ முப்பத்தாறு கலைபைந்தே. | ஈசான முதலிய பதினொரு மந்திரம். மந்திரங்கள் பலவுண்டாயினு மவற்றுட் டலைமை யாதலா லிதனையே யோதினார். சிந்தாகமங்களில் மந்திரம் நேத்திரங்கூடிப் பன்னிரண் டென்றுஞ் சொல்லும். கண்ணில்லாதவன்போ லெனவறிக. |

ஓம் நமோ நமவென்னும் பதமுதலான வெண்பத்தொரு பதத்துக்கு அகார முதலாக வெழுத்து முன்னூற் றுருக வாக மங்களிற் கூறும். பஞ்சமுகங்களிற் றோற்றிய பதமந்திரங்க

னீசான முகத்திற் ரேற்றின வாகையா லவைகளைக்கூறு தினைவ
சளைச் சிறப்பித்தோதினார்.

சிறிதிடத்திலே பதத்தைத் தொண்ணூற்று நாலென்றும்
பதங்களுக் களவில்லை யென்றும், காலோத்திரத்திற் கூறியது
பெரும்பான்மை.

பிரதிலோமக் கிரமத்திலே க்ஷகார முதலாக வக்கரங்
கள் - ருக. இதனைச் சிறிதிடங்களில் லகார ளகாரங்களுக்குப்
பேதமில்லையென் றக்கரங்க ளைம்பதென்று சொல்லும்.

புவனங் காலாக்கினி முதல் - உஉச.

இதனை மதங்கமுதலிய வாகமத்திற் சுத்தாத்துவாவில்
புவனங்கண் முப்பத்து மூன்றெனவும், அசுத்தாத்துவாவி லிரு
நூற்று நாலென்று மாகப் புடைபுவனம்கூட விருநூற்று முப்
பதேழு எனக்கூறும். அப்புடை புவன மிதி லடங்குகையா
லதனைக் கூறிற்றிலர்.

தனித்தனியே காரியப்பாட்டை யுடைய பிருதிவி முதலிய
தத்துவ முப்பத்தாறு நிவிர்த்தி முதலிய கலைகளைந்து. எ-று.

அருவமான தெல்லாம் பூத சரீரத்தி லுருவத்தை யாசிர
யித்துக்கொண் டிருத்தலால் இக்கலைகளுக் கிதயதானம் அடை
யாளம். ஆகிருதி நிறம் குணம் அவத்தை நாடி வாயு இவைக
ளைக் கூறுமிடத்து விரியுமாதலாற் கூறிற்றிலர்.

இந்த மூன்று விருத்தத்திற்கும் வருணபத்ததியினும், கா
லோத்தரத்தும் சிந்தியத்துமென வறிக. (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

சாந்தியா தீதகலை
மேலிதுவு மது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு

—o—

பொருள் பதத் ததிகங்களிற் பிரசித்தம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அத்துவாக்கள் ஒன்றினொன்று வியாத்தியாய் முறையானே பஞ்சகலைகளு ளடங்குமாறு யாங்ஙனமெனின்? அசுத்தம் மிச்சிரஞ் சுத்தமென்னும் மூவகை யத்துவாக்களும் ஐவகைப்பட்டுப் பஞ்சகலைகளு ளடங்குமாறு சங்காரமுறையின் வைத்தெண்ணி யிவ்வாறு கண்டுகொள்க வென்பதாம்.

மந்திரமுதலியவற்றிற்குங் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையின் வியாப்பியமாதல் பற்றியாகலான், மேல் ஒன்றினொன்று வியாத்தியென்பதனோடு முரணாமையறிக.

சாந்தியாதீதகலை நீட்டும்வழி நீட்டல்.

இவைமூன்று செய்யுளானுந் தீக்கைசெய்தற்கண் அத்துவாக்க ளொன்றினொன்று வியாத்தியாதலின் அடங்குமாறு வகுத்துக் கூறப்பட்டது.

அற்றேல், இறைவனிங்ஙனங் குருமூர்த்தியை யதிட்டித்துநின்று செய்யுந் தீக்கையில் ஏனைமலசுத்திகளை யொழித்து அத்துவசுத்தியே மிகுத்துக் கூறியது என்னையென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யு ளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சாந்தியாதீத கலைக்கு அத்துவாக்கள் நின்றமுறைமையும் இந்த அத்துவாக்களுக்குத் தொகையு மருளிச் செய்கிறார்.

சாந்தியாதீதகலை தன்னில்மந்திரங்கள் தான்மூன்று பத மொன் றக்கரங்கள் பதினாறு வாய்ந்தபுர மூவைந்து தத்துவங் களிரண்டு மருவுமதிதேவதையு மன்னுசதா சிவராம் - சாந்தி யாதீத கலைக்கு மூன்றுமந்திரமும் ஒருபதமும் பதினாறு அக்கர ங்களும் வாய்ந்தபுவனங்கள் பதினைந்தும் இரண்டு தத்துவமும் இதற்குப் பொருந்தும் அதிதெய்வம் நிலைபெற்ற சதாசிவமா கும். (மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தில் வியாத்தி என் றபதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது.) மேலிந்த அத்துவாக்களுக்குத் தொகை யருளிச் செய்கிறார்.— ஏய்ந்தமுறை - இப்படி முன் சொன்ன வடைவே,—மந்திரங் கள்பதினொன்று பதங்களெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத் தொன்றாகு மாய்ந்தபுரமிருநூற்றோ டிருபத்துநாலா மறிதருத த்துவமுப்பத்தாறு கலையைந்தே - ஆக மந்திரங்கள் பதினொன் றும் பத மெண்பத் தொன்றும் அக்கரங்க ளைம்பத்தொன்றும் ஆராயப்பட்ட புவன மிருநூற்றிருபத் து நாலும் அறியப்பட்ட தத்துவ முப்பத்தாறும் கலை யைந்துமாம்.

இதனாற் சொல்லியது, சாந்திபா தீதகலைக்கு மூன்று மந் திரமும் ஒரு பதமும் பதினாறு அக்கரங்களும் பதினைந்து புவன மும் இரண்டுதத்துவமும் அதிதெய்வஞ் சதாசிவமும் பொருந்து மென்றும், ஆறு அத்துவாக்களுக்குத்தொகை மந்திரங்கள்-கக என்றும், பதங்கள் - அக - என்றும், அக்கரங்கள் - ருக - என் றும், புவனம் - உஉச-என்றும், தத்துவங்கள் - ௩௬-என்றும், கலைகள் - ரு - என்றும், ஆக ஆறத்துவாக்களுக்கும் வகை இப் படியென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சாந்தியாதீத கலைதன்னில் - சாந்தியாதீத கலைக்கண்.— தத்துவங்க ளிரண்டு - தத்துவங்க ளிரண்டும்,—வாய்ந்தபுர மூவைந்து - பொருந்திய புவனம் பதினைந்தும்,—அக்கரங்கள் டதி னாறு - வன்னங்கள் பதினாறும்,—பதமொன்று - பதமொன்று ம்,—மந்திரங்க டான்மூன்று - மந்திரங்கண் மூன்றுமாக வினைவ கவொன்றினொன்றாக வடங்குவன;—மன்னுசதாசிவரா மருவு மதிதேவதையுமாம் - அதற்கு நிலைபெற்ற சதாசிவர் பொருந்திய அதிதெய்வமாம்.—ஏய்ந்தமுறை - பொருந்திய விம்முறை யே,— கலையைந்து-நிவிர்த்திமுதற்கலைகளைந்தும்,—அறிதருதத் துவ முப்பத்தாறு - அறியப்பட்ட பிருதிவிதத்துவ முதலிய மு ப்பத்தாறும்,—ஆய்ந்தபுர மிருநூற்றிருபத்துநாலாம்- ஆரா யப்பட்ட காலாக்கினி புவனமுத லிருநூற்றிருபத்திநாலும்,— அக்கரங்க ளைம்பத்தொன்றாகும் - க்ஷகாரமுதலிய ஐம்பத்தொ ரு வன்னங்களும்,—பதங்கள் எண்பத்தொன்று - சிவாயநமோ நம முதலிய எண்பத்தொரு பதங்களும்,— மந்திரங்கள் பதி னொன்று - சத்தியோசாத மிருதய முதலிய பதினொருமந்திர ங்களுமாகச் சங்காரமுறையினவைத் தெண்ணி யிவ்வாறு கண் டுகொள்க வென்பதாம்.

மந்திரமுதலிய வற்றிற்குங் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையில் வியாப்பியமாதல்பற்றி யாதலான் மேலொன்றி னொன்று வியாத்தியென்பதனோடு முரணாமை யறிக.

இவை மூன்று செய்யுளானுந் தீக்கைசெய்தற்க ணத்துவா க்க ளொன்றினொன்று வியாத்திபாத லறிந் தடங்குமாறு வகு த்துக் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



மேற் சிவ ஞுசாரியனை யதிட்டித்துக்கொண் டநேக யோனியி லுண்டாய்க் கட்டுப்பட்டுப் புவனசு தேசத்துக்குக் காரணமாயிருக்கிற சஞ்சித கன்மங்களை மந்திர சாமர்த்திய த்திஞலே புசிப்பித்துத் தொலைத்துப் பிராரத்த கன்மம் புசித்துத் தொலைத் தாகாமிய மேருமனு மாணவம்புக் கும்படியையு முணர்த்துகிருர்.

மூன்று திறத் தணுக்கள்செய்யுங் கன்மங்கட்கு முன்னிலையா மூவிரண்டா மத்துவாவி, ஞன்றமுறை யவையருத்தி யறுத்துமலமுதிர்வித் தரும்பருவ மடைதலுமே யாசாஞகித், தோன்றிநுக ராதவகை முற்செய்கன்மத் துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவேசோதித், தேன்றவுடற் கன்மமனு பவத்திஞ லறுத்திங் கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தாலிடிப்பன். (க0)

(இ-ள்.) மூன்று திறத் தணுக்கள் செய்யுங் கன்மங்கட்கு — ஆன்மாக்கள் மனோ வாச்குக் காயமாகிய மூன்று திறத்திஞலே யனுபவ வேதுவாகச் செய்யும் வினைகட்குந் திறனும் வகையுங் கூறுபாடாகும்.

மூன்று திறத்தணுக்க ளென்பது, மூன்றும் வேற்றுமைத் தொகையென வறிக. இக்கருத் தறியாதார் மூன்றென்றது மெண்ணை விளக்க, விஞ்ஞானகலர் முதலியன மூன்றுபெய ரிடத்திஞ மேற்றிக் கூறுவர். அஃது தபசித்தாந்த மாதலால் கூடாதெனக் கொள்க.

முன்னிலையா மூவிரண்டா மத்துவாவின் — தனுகரணாதிகளுக்கு முன்னிலையான வத்துவா வாறினு மமைந்த கன்மங்களை

ஆன்றமுறை யவையருத்தி யறுத்து — அமைந் தமைந்த முறையிலே யந்தந்தக் கன்மங்களை யதுவதுவாகப் புசிப்பித்துத் தொலைந்தவாறே

மலமுதிர் வித்து — ஆணவ மலத்தைப் பக்குவமாக்குவது செய்து

அரும் பருவ மடைதலுமே — மாணுக்கற்குக் கிட்டுதற்கரிதாகிய மிக்க பக்குவ முண்டானவாறே

தேகாதி பிரபஞ்ச மெய்யென்று புத்திபண்ணினவன்றானே மீண் டதனையெல்லாம் பொய்யென்று மதித் திந்தச் சங்சார சமுத்திரத்தைக் கடப்பிப்பான் யாரோவென்று தேடு மறிவுண்டாகையா லரும்பருவமெனச் சிறப்பித்தார்.

ஆசாறுகி — சிவ ஞசாரியனை யதிட்டித்துக்கொண்டு வந்து பாசத்தைச் சேதம்பண்ணுவன். அஃதெங்ஙனமென்னில்?

தோன்றி நுக முற் சநநத்திற் புசித்துச் சேடித்தகராதவகை முற்செ ன்மம் புசித்துத் தொலையாதபடியாலேயகன்மத் துகள யநேக யோனிகடோறு மார்ச்சித்த கன்றாத்து மமந்தமாதலால், புசித்துத் தொலைக்கும்படி வாகீசுரி வாகீசுரரிடத்தி லோருடலிற்றானே பிறருக்குச் செய்த இம்சை சௌரிய முதலியனவற்றா லுண்டாகிய வசிதகன்மங்களையும் வாவி கூவ தடாகமுதலியனவற்றா லுண்டாகிய விக கன்மங்களையும் வேதத்தில்விதிவழி செய்யப்பட்ட வக்கினிட்டோமாதிகளாகிய விதாகிதகன்மங்களையு மொன்றொழியாமல் தீக்ஷானுகுணமாக

அங்கத்துவாத் தடக்கறவே சோதித்து — சோதிக்குமவ்விடத் தாறத்துவாயிலுண்டான பாச பந்தங்களைத் தொந்திப்பறச் சோதித்து

ஏன்றவுடற் கன்ம மனுபவத்தி லுலறுத்து — எடுத்த தேகத்துக் கமைந்த பிராரத்த கன்மத்தைப் புசிப்பித்துத் தொலைப்பிப்பது செய்து

இங்கினிச்செய் கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன். — இச்சைக்குமே லிவ்விடத்தேறின வாகாமியத்தைய மாணவமலத்தையும் ஞானாக்கினியாலே தகித்துப்போடுவன். எ-று.

சிவன் - எழுவாய்.

இடிப்பன் - பயனிலை. (௬௦)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—— ○ ——

மேல் சஞ்சித ஆகாமிய பிராரத்தங்களையு மாணவமலத்யு மொழிக்கு முறைமை கூறுகின்றது.

அணுக்கள் மூன்றுதிறத்துச்செய்யுங் கன்மங்கட்கு முன்னிலையா மூவிரண்டாமத்துவாவி லூன்றமுறையவை யருத்தியறுத்து - விபுவாயிருந்தும் சூக்குமதேகத்தளவிலே ஞானக்கிரியா வியாபாரமாகையா லணுவென்று பெயருடைய ஆன்மாக்கள் மனோவாக்குக் காயமென்னுந் திரிவித கரணங்களினாலே பண்ணும் புண்ணிய பாபங்கட்கு ஏதுவான வாறுவழியிற் பொருந்தின கன்மங்களைப் பக்குவ முறைமையிலே புசிப்பித் தந்தகன்மங்களை நசிப்பித்து,—

மலமுதிர்வித் தரும்பருவ மடைதலுமே யாசானாகித்தோன்றி-மலசத்திகளை நீங்கும்படிக்குப் பக்குவமாக்கி யுரிதாயிரு

க்கப்பட்ட மலபரிபாகம் பிறந்தவுடனே சிவ ஞாசாரிய மூர்த்தி யை யதிட்டித்துக்கொண்டு சாந்நித்தியம் பண்ணி,—

நுகராதவகை முற்செய்கன்மத் துகளறுத் தங்கத்துவாத் தொடக்கறவே சோதித்து - அத்துவாக்களிலே சஞ்சிதமாயிரு க்கிற புண்ணிய பாபங்களானவை பக்குவமா யிவன் புசியாதப டித் த்வந்தமறச் சுத்திபண்ணி,—

ஏன்றவுடற் கன்ம மநுபவத்தினாலறுத்து - பொருந்தின தேகப் பிராரர்த்தகன்மபலம் புசிப்பதும் - சுவாநுபவத்தினாலே யவனுக்குப் பரமறும்படி பண்ணி.—

பரமறுமாறு :-புஷ்டிகாரியம் தேகதருமமாகவும் சப்தா திகளை கிரகிப்பது சுரோத்திராதி தருமமாகவும் சோகமோக * அர்ஷணாதிக ளந்தக்கரண தருமமாகவும் கண்டு தா னிவை யிற்றுக்குச் சாக்ஷியாய்ச் சிவனுடன் வேறறநிற்கை.—

இங்கினிச்செய் கன்ம மூலமல ஞானத்தாலிடிப்பன்-இவ் விடத்து குரு வநுக்கிரகத்துக்குமேல் பண்ணு மாகாமிய கன்ம த்தையு மாணவ சத்தியையுஞ் சிவன் ஞானத்தினாலே பொடிப ண்ணுவனொன் றிதன்பொருள்.

* அர்ஷணம் - சந்தோஷம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

குருவதிகாரணனா யிருக்குஞ் சிவன் தத்துவசோதனை பண் ணுமுறைமை யறைகின்றார்.

மூன்று திறத்தணுக்கள் செய்யுங் கன்மங்கட்கு - ஆன்மா க்கள் மனோவாக்குக் காயங்களினது வியாபாரப் பிரகாரத் தாற் புத்தியில் வாசனையாய்ப் புகுத்திப் பண்ணுங் கன்மங்கட் கு,—

மூன்னிலையா மூவிரண்டா மத்துவாவின் - சஞ்சிதமாய்க் குறித்துப் பகுத்தமைச்சுத் தானமா மூவிரண்டா மத்துவாவின்,—

ஆன்றமுறையவை யருத்தியறுத்து - அந்தச்சஞ்சித கன்மங்களை யபக்குவங்களை விட்டுப் பக்குவங்களைப் பிராரத்த கன்மமாக்கிப் புசித்துத் தொலைத்து,—

மலமுதிர்வித்து - அந்தக்கன்ம போகதேகசம்பத்தினாலே மலசத்தியை வளர்த் தந்தமுதிர்ச்சியினாலே யந்தமலசத்தி,—

அரும்பருவ மடைதலுமே - பழுத்துப் பக்குவமாயுள்ளளவில்,—

ஆசானாகி - சிவன் குருவதிகரணனாகி,—

தோன்றி - பிரசன்னனாய், (தோன்றி யென்பது நடுநிலைத் தீபகமாதலால்). தோன்றி நுகராதபடி - திரும்பச் சென்மித்துப் புசியாதபடி,—

முற்செய் கன்மத் துகளறுத்து-மலபரிபாகத்தினது தீவிரதரத் தன்மையாற் பக்குவங்களாயும் மாந்தியத்தினால் அபக்குவங்களாயிருந்தாலுந் தீக்ஷாமந்திர சமஸ்காரத்தாற் பக்குவங்களாயுமிருக்கின்ற சஞ்சித கன்ம மலத்தைக் கலைகளிற் பகுத்துத் தீட்சா பலார்க கலார்கங்களாய்ச் சேஷித்து நிற்கவும் நில்லாமலும் சுத்தி பண்ணி,

அங்கு அத்துவாத் துடக்கறவே சோதித்து-சடத்துவக் கட்டுவிடச் சுத்திபண்ணி சடத்துவாவிற் புகுதப்பதித்துச் சஞ்சித கன்மமோசனமாகும் சுத்தியே அத்துவ சுத்தி யென்றுதாற்பரியம்.—

ஏன்ற உடற் கன்மம்-பிராரத்த கன்ம மலத்தை,—

அனுபவத்தினாலறுத்து - புசிப்பினாற் போக்கி,—

இங்கு இனிச்செய் கன்மம் - தீக்ஷைக்குப் பின் பிராரத்தம் புசிக்குமிடத் தபிமானத்தினு லேறும் வைதிகாதி சாத்திர மாத்திரப் பிரசித்த காமிய கன்ம மலம் சிவதன்மிணி தீட்சா சுத்தனிடத்தி லுவர்த்தரையில் விதைத்த விதைபோ லுக்கிப் போம். ஆதலால், சிவசாத்திர மாத்திரத்தில் விதித்த கன்மம் பண்ணுதல் விடுதல் நிஷித்த கன்மம் விடுதல் பண்ணுதலெனுஞ் சுத்தாசுத்த மனோவாக்குக் காய வியாபாரத்தால் சுத்தா சுத்த புத்தியிற் புகுத்தும் புண்ணியா புண்ணிய காமிய கன்ம மலத்தையும்,—

மூலமலம் - தீட்சையிற் சேஷித்த ஆணவ மலத்தையும் தீட்சா பலார்க கலார்கங்களாய்ப் பரிசேஷித்தும் பரிசேஷியாது மிருப்ப.—

ஞானத்தாலிடிப்பன் - தான் கற்பித்த சாலம்ப நிராலம்ப புவனபதி விஷய திரி பதார்த்த கர்ப்ப சிவ விஷய ஞானத்தியான காரிய சாக்ஷாத்கார காரணமாகுஞ் சாலம்ப நிராலம்ப புவனபதிவிஷய சமாதி சிவவிஷய சமாதி யிருவித சமாதியினு லிலயிப்பிப்பன்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

அநாதிமறைப்பாகிய வாணவமலமும் வாதனைபற்றி நிகழுமாகாமியவினையும் ஒளிமுன் னிருள்போல இறைவனது ஞானசத்தியா லொழியற்பாலன. அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு ஈட்டிய முறையானன்றிப பக்குவமுறையா னுகர்விக்கப்பட் டெஞ்சிக்கிடந்த கன்மமலமும் அதற்குப் பற்றுக்கொடுத்து நிற்கும் முன்னிலையாகிய மாயேயமலமுங் கிரியாசத்தியா லொழியற்பாலன. உடம்பு முகந்துகொண்ட பிராரத்தகன்மம்

அனுபவத்தா லொழியற்பாலன. இங்ஙன மாகலாற் கிரியா சத்தி விருத்தியாகிய தீக்கையால் எஞ்சிநின்ற கன்மங்களையுஞ் சுத்திசெய்தற் பொருட்டு, அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய வத்துவசுத்தியே ஈண்டுக் கூறப்பட்டன வென்பதாம்.

இவ்வாறு வருத்தோதற்பாலனவற்றை விரிவஞ்சி பொருமுடிபாக வைத்தோதினார்.

இரண்டும் ஒருபொருள் வினையாதற்குரிய வியைபுதோன்ற அருத்தியறுத்துத் தோன்றியறுத்தென உடன்கூறினார்.

ஆன்றமுறை பக்குவமானமுறை.

மலமுதிர்தலாவது தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்க ளெல்லாவற்றோடுங் கூடிப் பதனழியுஞ் செவ்வித்தாதல்.

உயிர் பருவமடைதலாவது அறிவித்தவாறே யறியவல்லுஞ் செவ்வித்தாதல்.

அரும்பருவமென்றார், எய்துதற்கருமை நோக்கி.

அது வருஞ் செய்யுளிற் பெறப்படும்.

பருவமடைதலுமே யாசானாகித் தோன்றியென்றதனானே பருவமடையாதார்க்குத் தீக்கை செய்தலும் அடைந்தார்க்கு அது செய்யாமையும் பழுதென்பது பெற்றாம்.

இதனானே அத்துவசுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது.

'உரைதரும்' என்பதுமுதல் வித்துணையுங் குருவாகிவந்துணர்த்தி, என்னும் முதற்கூற்றுப் பொருளை விரித்துணர்த்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லப்பட்ட ஆறத்துவாக்களிலும் ஆன்மாக்களுக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கிற கன்மங்களைக் கர்த்தா புசிப்

பித்துப் போக்குகிறபடி யெப்படியென்ற மாணுக்கனுக்கு மே லருளிச் செய்கிறார்.

மூன்றுதிறத் தணுக்கள்செய்யுங் கன்மங்கட்கு முன்னிலையா மூவிரண்டா மத்துவாவின் - மூன்றுவகைப்பட்ட வான்மாக்களும் அநாதியேசெய்த கன்மங்கள் அநாதியே கட்டுப்படுகைக்கு முனனிலையான ஷடாத்துவாக்களிலே,—ஆன்றமுறையவையருத்தி யறுத்துமல முதிர்வித்து - அவரவர் செய்ததற்குத் தக்கதாக வமைத்து,அமைத்தவடைவிலே அவையிற்றைப் புசிப்பித்துத் துலைப்பித்து,மலத்தையும் பக்குவமாக்குவித்து.— அரும்பருவ மடைந்துமே - இந்த வான்மாக்களுக்குச் சொல்லுதற்கரிதான மிக்கப் பக்குவமுண்டாகவே,—ஆசானுகித்தோன்றி - பரமேஸ்வரன் தனது காருண்ணியத்தினுலே ஆசாரிய மூர்த்தியாக வெழுந்தருளி வந்து,—முகராதவகை முற்செய்கன்மத் துகளறுத்து - முன்புசெய்யப்பட்ட கன்மமாய் அத்துவாவிலே கட்டுப்பட்டுக் கிடக்கிற சஞ்சிதமான புண்ணிய பாவங்களையும் இவன் புசியாதபடி நாசமாக்கி,—அங்கத்துவாத்துடக்கறவே சோதித்து - அந்தப் பாசநாசம் பண்ணின வவசரத்திலே அத்துவாக்களி லுண்டான தொந்தங்களையு மறுத்து,—ஏன்றவுடற் கன்ம மனுபவத்திலுலறுத்து - தேகத்துக்கு அடைத்த பிராரத்த கன்மத்தை அநுபவத்திலுலே நேராகவில்லையாக்கி,—இங்கு இனிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடைப்பன்-கன்மங்களெல்லாம் போக்கியும் சரீரமிருக்கையாலே மீளவும்பிராரத்தமும் ஆகாமியமும் வாதனையாலே போகாது; அது போகைக்கு இவ்விடத்திலே மேற் செய்யப்பட்ட வாகாமியத்தையும் அதுக் கேதுவான ஆணவமலத்தையும் பரமேஸ்வரன் தன்னுடைய ஞானத்தினுலே இவனுக் கில்லையாக்கி விடுவன்

இதனுற் சொல்லியது, பரமேஸ்வரன மூன்றுவகைப்பட்ட ஆன்மாக்களும் செய்தகனமம் அத்துவாக்களிலே கட்டுண

கிடக்கிறவையிற்றை அடைவிலே புசிப்பித்துத் தொலைப்பித்து மலத்தையும் பாகம்வருத்தி ஆன்மாவுக்கு மிக்கதொரு பக்குவத்திலே ஆசாரியமூர்த்தியாக வெழுந்தருளிவந்து அத்துவசோதனையினாலே சஞ்சிதத்தையும் அனுபவத்தினாலே பிராரதத்தையும் மேல் ஏறுகிற வாகாமியத்தையும் ஆணவமலத்தையுந் தன்னுடைய சிவஞானத்தினாலே போக்குவனென்னு முறைமையுமறிவித்தது.

'பலவிதமாசான்' என்ற திருவிருத்தமுதல், 'மூன்றுதிறத் தணுக்கள்' என்ற திருவிருத்தமீறாக, எட்டுத் திருவிருத்தமும் சகலரைப்பற்றியெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், அ-சூ, ௩-வெ, "அஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்தும்" என்னுமதுங் கண்டுகொள்க.

'உரைதருமிப் பசுவர்க்கம்' என்றதிருவிருத்தத்தில் 'சகலர்க்குக் கன்மவொப்பிற் றரையிலாசான் மூர்த்தி யாதாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ் சதுர்த்தா சத்திநிபாதத்தால்' என்ற பதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மூலமலம் - அநாதிமறைப்பாகிய வாணவமலமும்,—இங்கினிச் செய்கனமம்-இவ்விடத்து வாசனைபற்றிநிகழும் ஆகாமியவினையும்,—ஞானத்தாலிடிப்பன-ஒளிமுன் னிருள்போல விறைவனது ஞானசத்தியா லொழியற்பாலன,—மலமுதிர்வித்து-அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு,—அணுக்கள் மூன்றுதிறத்துச் செய்யுங்கன்மங்கட்கு-ஆன்மாக்கண் மனவாக்குக்காயமென்று முத்திறத்தா லீட்டப்படும் கன்மங்களை,—மூவிர

ண்டா மத்துவாவி னான்றமுறை யவையருத்தி யறுத்து,—ஈட்டிய முறையானன்றி யாறத்துவாவின் பக்குவமுறையா னுகர்விக்கப்பட்டு எஞ்சிகிடந்த கன்ம மலமும்,—முன்னிலையா மரும்பருவ மடைதலுமே யாசானாகித் தொன்றியறுத்து-அதற்குட்பற்றுக்கொடுத்து நிற்கு முன்னிலையாகிய மாயேயமலமும் பக்குவம் வந்தழிக் குருவடிவாய் வருதலாற் கிரியாசத்தியா லொழிகற்பாலன,—ஏன்றவுடற்கன்ம மனுபவத்தினாலறுத்து-உடம்புமுகந்து கொண்ட பிராரத்த கன்ம மனுபவத்தா லொழிதற்பாலன,—நுகராதவகை முற்செய்கன்மத் துகளறுத் தங்கத்துவாத் தொடக்கறவே சோதித்து - இங்ஙனமாகலாற் கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையா லெஞ்சி நின்ற கன்மங்களைச் சுத்திசெய்தற் பொருட்டு அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய அவ்வத்துவாசுத்தியே யீண்டுக் கூறப்பட்டன.

இதனானே யத்துவா சுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது. 'உரைதரும்' என்பதுமுத லித்துணையும் 'குருவாகி வந்துணர்த்தி' என்னு முதற்கூற்றுப் பொருளை விரித்துணர்த்தியவாறு.

☞ அ-ரூ, முதலதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

*மேலிந்தத் தீக்கையினறிப் பரமமுத்தி யடையப்படா தென்பதூஉம் புறச்சமயத்தின்க ணின்றுஞ் சத்கன்மானுட்டானத்தினாலே சைவசமய வதிகாரியாவ னென்பதூஉ முணர்த்துகின்றார்.*

புறச்சமய நெறிநின்று மகச்சமயம புக்கும் புகன்மிருதி வழியுழன்றும புகலுமாச்சிரம, வறத்துறை

களவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைக ள் பலதெரிந்து மாரணங்கள்படித்துஞ், சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச் சிறப்பொருளை மிகத் தெளிந்துஞ் சென்றுற் சைவத், திறத்தடைவ ரிதற்சரி யை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவ னடியைச் சேர்வர். (கக)

(இ-ள்.) புறச் சமய நெறிநின்றும் — உலோகாயுதம் பௌத்தம் ஆருகதம் மீமாஞ்சம் மாயாவாதம் பஞ்சராத்திர மென்னு நாலமாகிய புறச்சமயங்க ளாறில் நின்றும்,

அகச்சமயம்புக்கும் — சைவம் பாசுபதம் வாமம் வைரவம் மாவிரதம் காளாமுகம் என்னுஞ் சூக்குமமாகிய உட்சமயங்க ளாறினும்புக்கு நின்றும்,

புகன்மிருதி வழிபுழன்றும் — மனுமுதலிய வாசாரிய ராற்சொன்ன தன்மசாத்திரம் பதினெட்டின்வழி யனுட்டித்தும்.

அவையாவன? "மனுவே யத்திரி-சங்கு வாசிட்ட மயம் மங்கிரசம்-யோகீசுரமேவருணம்பராசரஞ்-சாதாதவமே சம்வர்த்தமமே - யுசநசம்லிகிதம் விடணுத்தட்சமம் - பிரகற்பதி மதமே கவுதமமென்றே கட்டுரைசெய்வர் அவர் பதினெண்மர்" மிருதிபைப் பண்ணினர் பெயரால் எனவறிக.

புகலுமாச்சிரமவறத்துறைகளைடைந்தும் — வேதத்திற் கொண்டாடிச் சொல்லப்படாநின்ற பிரமசரிய முதலியன வாசிரமங்கள் நான்கின்வழிநின் றனுட்டித்தும்.

அவையாவன?

பிரமசரியம் நயிட்டிகம் பௌதிகம் எனவிருவிதமாம்.

இல்லறம் சாதகன் உதாசினன் என விருவிதமாம்.

வானப்பிரஸ்தம் சபத்தினிகன் விபத்தினிகன் என விருவிதமாம்.

சன்னியாசம் வித்துவான் விபித்சு தவசுவி என மூன்றுவிதமாம்.

இதன்றி வைதிகத்தில் ஒவ்வொன்றை நந்நான்காக்கிப் பதினாறுகக்கூறும். அவையாவன?

காயத்திரம் பிராமம் பிராசாபத்தியம் நைட்டிகம் எனப் பிரமசாரிய நான்கு.

வார்த்தா விருத்திசாலுநீ விருத்தியாயா வாமகோசாரம் எனக் கிரகபதியும் நான்குவிதமாம்.

வைரிஞ்சம் வாலகில்லியம் தென்பம்———— ———— என வானப்பிரஸ்தம் நான்கு விதமாம்.

வேகூதகம் குடீசகம் அங்கிசகம் பரமஅங்கிசகம் எனச் சந்நியாசமும் நானகுவிதமாம்.

அருந்தவங்கள் புரிந்தும் — அனுட்டித்தற் கரிதாகிய பஞ்சாக்கினி முதலியவற்றினின் றரியதடசுகளைச்செய்து,

அருங் கலைகள் பலதெரிந்தும் — கற்பதற் கரிதாகிய கலைஞானங்களை யாராய்ந்தும் "கற்றிலேன் கலைகள் பலஞானம் இடைமருதுறை யெந்தைபிரானே" என்னுந் திருவாக்கானு முணர்க.

ஆரணங்கள் படித்தும் — "நால்வகை வேதம் இருக்கு தயித்திரியம்-சாம மதர்வணமெனச் சாற்றினர் புலவர்." எனக்கூறிய வேதங்களைச் சந்தை யிரட்டை முதலியன விலக்கணத்தோ டோதியும்

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் — சிறப்புடைய பதினெண் புராணங்களோதியுணர்ந்தும். அவையாவன?

பிரமம் பாத்மம் வயிணவமே - சைவம் பாகவதமென ச் சார்வருகாலம் - நாரதம் மார்க்கண் டேயமாக்கினேயங்- கைவர்த்த மிலிங்கம் வராகங்-காந்தம் வாமனங் கருதிற் கூர் மம் - மச்சியங் காருட மதிக்கிற் பிரமாண்டம்-பதினெண் புரா ணம் பண்ணினர் புலவர்.

| | |
|---|---|
| வேதச் சிறப்பொருளை மிகத் தெளிந்தும் | வேதாந்தத்திற் சொல்லிய உபநிடத்துக்கள் முப்பத்திரண்டினையு மோதித் தெளிந்தும். அவையாவன? |

பிரகதாரண்யம் சாந்தோக்கியம் கடவலி முண்டகம் மாண்டூகியம் தைத்திரியம் சாபாலம் பிரகத்சாபாலம் அதர்வசிரசு அதரசிகை பிரம்மோபநிடத்து கைவல்லியம் சுவேதாசுவதநரோபநிடத்து நாராயணோபநிடத்து காலாக்கினியுருத்திரோபநிடத்து சர்வசங்கற்பம் சூசிகை யுருத்திரோப நிடத்து ஈசோவாசோபநிடத்து நாரசிங்கம் தாமோபநிடத்து சுவரோபநிடத்து கோபாலோபநிடத்து பரம அம்சோபநிடத்து சாபாலோபநிடத்து வாசுதேவோபநிடதது காதிசாகை கௌதமீயம் பாரத்துவாசியம்.

| | |
|---|---|
| சென்றற்சைவத் திறத்தடைவர் | இவர்கள் நாடோறு மனுட்டித்த தபோபலத்தாலே சைவசித்தாந்தமாகிய காமிகாகம மிருபத்தெட்டையு மதிகரித்தற் குரித்தாவர்கள் |
| இதிற் சரியைகிரியா யோகஞ் செலுத்தியபின் | இங்ஙனங் கூறிய வாகமங்களிற் சொல்லியபடியே ஞானசாரியனிடத்தில் தீக்ஷையைப்பெற்றுச் சரியை கிரியாயோக மிவைகளின் வழிநின் றனுட்டித்த தபோபலத்தி |

னாலே கிரியை யென மருவுமவையாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்குமென வறிக.

ஞானத்தாற் ஞானத்தினாலே தானே பரம முத்தியை
சிவனடியைச் யடைவர். எ-று.
சேர்வர்.

இதற்கு யோகசத்துஞ் சிந்திய விசுவஞ் சுப்பிரபேதம் தேவிகாலோத்தரம் சைவபுராணத்து மறிக. (கக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேலிந்த மலபரிபாகம் வருமாறு கூறுகின்றது.

புறச்சமய நெறிநின்றும் - வேத * பாஹ்யமான பௌத்தாதிமதங்களிலே பிரவேசித்து அந்தந்த சாஸ்திரங்கள் சொன்னபடி தவம்பண்ணியதனால்,—

* பாகியம் - வெளிப்பட்டது,

அகச்சமயம்புக்கும் - தருமாதியான சதுர்வித புருஷார்த்தத்தையுஞ் சொல்லும் வைதிகத்திலே பொருந்தி,—

புகன்மிருதிவழி யுழன்றும் - ருஷிகளாற் பண்ணப்பட்ட ஸ்மிருதி யுக்தாநுஷ்டான மார்க்கத்திலே நின்று வருந்தியும் மனு முதலியன,—

புகலுமாசிரம வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்தும் - மேலுமந்த ஸ்மிருதியிலே சொல்லும் பிரமசாரிகிரகஸ்தவானப்பிரஸ்த சந்நியாசமெனுமாசிரமங்களை யடைந்தந்தவாச்சிரமங்களுக்கேற்ற தருமங்களை யநுஷ்டித்தும்,—

அருங்கலைகள் பலதெரிந்தும் - வேதாங்கங்களாகிய வியாகரணாதி கலைஞானங்களை யுணர்ந்தும்,—

ஆரணங்கள் படித்தும் - வேதாத்தியயநத்தைக் குறைவறப்பண்ணியும்,—

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் - அஷ்டாதச மகாபுராணங்களையு மறிந்தும்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்தும் - வேதாந்த சிரவணை மநந † நிதித்தியாசநங்களைப் பண்ணியும்,—

சென்றால்-இவ்வாறு உத்தரோத்தர மாகச் சநநங்கடோறு மப்பியாசம் பண்ணிவந்தால்,—

சைவத் திறத்தடைவர் - அந்த புண்ணிய பலத்தினாலே சைவ சமயத்தைப் பொருந்துவர்கள்.—

இதிற் சரிதைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர் - இந்தச் சைவத்தில் சரியை கிரியை யோகமென்னும் மூன்று வித்தையுங் கிரமத்திலே யநுஷ்டித்தவை யிற்றுக்களின் பலமாகிய சாலோக சாமீப சாரூபங்களை யடைந்து பின்பொரு சன்மத்திலே யாசாரியனுடைய வனுக்கிரகத்தினாலே சிவ சாயுச்சியத்தை யடைவர்களென்றிதன்பொருள்.

† நிதித்தியாசநம் - தியாநம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவசமாதி சித்தாந்தத்தன்றிச் சேரப்படாதென்று செப்புகின்றார்.

புறச்சமய நெறி நின்றும் - உலோகாயதம் பௌத்தம் அருகம் மீமாம்சம் மாயாவாதம் பாஞ்சராத்திரம் என்னும்புறச்சமயங்களினின்றும்,—

புகன் மிருதி வழியுழன்றும் - அப்பொருள்வழி பொருந்திப்போய்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால்,—

அகச்சமயம்-சைவம் பாசுபதம் வாமம் வயிரவம் மகாவிரதம் காளாமுகம் என்னு முள்ளறுசமயம்

புக்கும்,—

பின்சைவத்திறத்தடைவர் - சைவசித்தாந்தத்திற் பிரவேசிப்பர்.

இதிலெனப் பொருள் வழி பொருத்திப் பொருளுரைக்க. பதக்கிரமத்திற் பொருளுரைத்தாற் சமயக்கிரமம் மாறுபடும்,—

ஞானத்தால் - சிவ தீக்ஷாங்க நிராலம்ப சிவ சமாதியினால்,—

சிவனடியைச் சேர்வர் - சிவசத்தி சமானமாய்த் தமது சிற்சத்தி விரிவு திருத்தி யிருப்பார்கள்.

போகமாததிரத்தை நிமித்தீகரித்துவரு மலபரிபாகததிற்கும், மலபரிபாகமாத்திரத்தை நோக்கிவருஞ் சிவசத்திநிபாதத்துக்கும், சிவதீக்ஷானுக்கிரகத்திற்கும், ஞானத் தியான சமாதிசிவனமுதலி சாட்சாதகாரக்குறித் தீட்சாங்கத்துக்கும், மோக்ஷத்துக்கும், சாதிக்கிரம மாச்சிரமக் கிரமஞ் சமயக்கிரமங் காலதேசக்கிரமங் கருதி வருத லில்லாமையாற் சமயக்கிரமத்தினின்று சைவத்திறத் தடைவரென்பது தந்திரமன்று.

சகல சமயிகளுக்கு மிலிங்கோத்தாரஞ் சைவத்திற் சொல்லுதலால், சைவத்து வந்தல்லது பரமுத்தி சித்தியில்லை, பதமுத்தியென்று தாற்பரியம்

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி, 'மன்னுமருளா லுணர்த்தி' என்னு மிரண்டாஞ் சூத்திரத்தை இருபத்தைந்து செய்யுளான் விரித்துணர்த்துகின்றார்.

மேற்கூறிய அரும்பருவமடைதல், இங்ஙனஞ் சோபானமுறையாற பலபிறவிகளினு மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப்பெறுவ

தன்றி, ஒருங்கே யொருகாலத்து முற்றுப்பெறுவ தன்றென்ப தாம்.

சைவத்திறமென்றது சைவக்கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தை.

சென்றுலென்பது சேறலருமை விளக்கி நின்றது.

இதனானே மேற்கூறிய பருவமடையுமுறைமை கூறுமுகத்தான் மன்னுமருளென்றதன் வகையும் அவற்றிற்கு வாயிலிவை யென்பதூஉம் வகுத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி முன் சொல்லப்பட்ட சிவஞானம் ஆன்மாக்களுக்கு உண்டாம்படி யெப்படியென்ற மாணுக்களை நோக்கி மேலருளிச்செய்கிமுர்.

புறச்சமய நெறிநின்றும் - உலகாயதன் முதல் பாஞ்சராத்திரியீமுகச் சொல்லப்பட்ட புறச்சமயங்களிலே சென்றுசென்று அந்தந்த சாஸ்திரஞ் சொன்ன முறைமையிலே யனுட்டித்தும்,—அகச்சமயம்புக்கும் - உட்சமயமாகிய பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்றுசொல்லப்பட்ட அந்தந்தச் சமயங்களிலே புகுந்து அந்தந்தச் சாத்திரங்கள் சொன்ன முறைமையிலே யனுட்டித்தும்,—புகல்மிருதி வழியுழன்றும் - சொல்லப்பட்ட மிருதிவழிகளிலே திரிந்தும்,—புகழுமாச்சிரம வறத்துறைகளவையடைந்தும்-கொண்டாடப்பட்ட ஆச்சிரமமான தன்மநெறிகளைச் செய்தும்,—அருந்தவங்கள் புரிந்தும்-பஞ்சாக்கினியை முதலானஅரிய தபசுகளைவிரும்பிச் செய்தும்,—அருங்கலைகள் பலதெரிந்தும் - அரிய சாத்திரங்கள் பலவுமோதியுணர்ந்தும்,—ஆரணங்கள்படித்தும்-வேதங்களையோதியும்,—

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் - நன்மைப் பகுதிகளைச் சொல்லுகிற புராணங்களை யோதியறிந்தும்,—வேதச்சிரப்பொருளை மிகத்தெரிந்தும் - வேதாந்தத்தி னத்தங்களைமிகவும் ஆராய்ந்து இதுவே யத்தமென்று அறுதியிட் டறிந்தும்,—சென்றுற் சைவத்திறத்தடைவர் - இவையிற்றை வழுவறச்செய்து முடித்தது யாதொரு ஜனனம், அந்த ஜனனம்போய் மற்ற ஜனனத்திலே சைவநெறியைச் சென்று பொருந்துவார்கள்.—இதிற் சரிதைகிரியாயோகஞ் செலுத்தியபின - இந்தச் சமயத்திலே நின்று சரிதை கிரியாயோகங்களைச் செய்து அவையிற்றின் முதிர்ச்சியினாலே ஞானத்தைப்பெற்று,—ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர் - அந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்தைப் பொருந்துவர்கள்.

என்னவே கிரியையாலே மோக்ஷமென்ற சைவரை மறுத்து ஞானத்தினாலே மோக்ஷமென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "பல்பணி ஞான காரணமென்னிற் .றொல்பணி தொறும்பயன் றொப்பெபத னாலு-மொருபணிசெய்யாச் சிரபுரச் சிறுவரு-மரசராய தருணத்தலைவரு-முதிர்பரசமையத் திதமுறுமரசரு - ஞானம்பெற்ற நன்மையினாலு-மீனமில்பணியருட். கேதுவன்றன்றால்- ஞானோற்பத்தி நிமித்தமித்தொழிலென- வேறோற்கிறைநூ லியம்பிற் றென்னும்" என்றும், சிவஞானபோதம், அ சூ,க-வெ, "தவஞ் செய்தா ரொன்றந தவலோகஞ் சார்ந்து, பவஞ்செய்து பற்றறுப்பாராகத் —தவஞ்செய்த, நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக், கற்றோர்சூழ் சொல்லுமாங் கண்டு" எனனுமதுங் கண்டுகொளக.

இதனாற் சொல்லியது, உலோகாயதன், புத்தரில் சவுந்திராந்தகன் யோகாசாரன் மாத்தமிகன வைபாடிகன், அமணரி

ல்திகண்டவாதி ஆசீவகன், மீமாஞ்சரில் பட்டாசாரியன் பிரபாகரன் நையாயிகன் மாயாவாதி பாற்கரியன் நிரீச்சுரசாங்கியன் பாஞ்சராத்திரி ஆகப் புரச்சமயத்திற் பேதம் பதினாலும்; அந்தந்த முறைமைகளிலே நின்றும், பாசுபதம் மகாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்கிற உட்சமயத்திற் பேதம் ஐந்திலும் புக்கு அந்தந்த முறைமைகளிலே நின்றும் 'புகல் மிருதி' என்ற பதமுதல் 'வேதச்சிரப்பொருளை மிகத்தெளிந்தும்'என்றபத மீறாக உழன்றும் அடைந்தும் புரிந்தும் தெரிந்தும் படிந்தும் உணர்ந்து மிகத்தெளிந்தும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட முறைமைகளை வழுவறச்செய்து முடிந்தால் சைவநெறியைப் பொருந்துவார்களென்றும், இதிலேநின்று சரிதைகிரியை யோகங்களை யனுட்டித்தால் அந்தமுதிர்ச்சியினாலே ஞானமுண்டாயந்த ஞானத்தினாலே சிவனுடைய சீ பாதத்தை யிரண்டறச் சென்று பொருந்துவர்கள் என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

புறச்சமய நெறிநின்றும் - புறச்சமய நூல்வழியே யொழுகியும்,—அகச்சமயம் புக்கும் - அகச்சமய நூல்வழியேசென்றொழுகியும்,—புகன்மிருதி வழிபுழன்றும் - சொல்லப்பட்ட மிருதி நூல்வழியே சென்றொழுகியும்,—புகலுமாச்சிரம அறத்துறைகளவையடைந்தும்-வேதங்களிற் கூறியவாறு ஆச்சிரம தருமங்களிற்குறைவின்றியொழுகியும்,— அருந்தவங்கள் புரிந்தும் - செய்தற்கரிய தவங்களைச்செய்தும்,—அருங்கலைகள் பலதெரிந்தும்- அரிய கலைஞானங்களைப் பலபயின்றும்,—ஆரணங்கள் படித்தும் - வேதங்களை யோதியும்,—சிறப்புடைய புராணங்களுணர்

ந்தும் - சிறப்புப் பொருந்திய புராணங்களை யறிந்தும்,—வேதச் சிறப்பொருளை மிகத் தெளிந்தும் - உபநிடதப்பொருளை மிகவு மாராய்ந்து தெளிவுற்றும்,—சென்றுற் சைவத்திறத்தடைவர்- இங்ஙனஞ் சோபான முறையாற் பலபிறவிகளினு மேற்பட்டு நிகழ்ந்து சென்றுற் சைவக்கூற்றின் முடிவாகிய சித்தாந்த சைவத்தைத்தலைப்படுவர்,—இதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்திய பின்-இச்சித்சாந்த சைவத்தினுஞ் சரியைகிரியா யோகங்களை யனுட்டித்துமுன்னியபின்,— ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்-ஞானத்தைப்பெற்று அதனுற் சிவன்றுளைச் சேர்வருகலின் மேற்கூறிய பருவமடைதல் ஒருங்கே யொருகாலத்து முற்றுப் பெறுவதன்று.

இதனுனே மேற்கூறிய பருவமடையு முறைமை கூறுமுகத் தான் மன்னுமருளொன்றதன் வகையும் அவற்றிற்கு வாயிலவை யென்பதூஉம் வகுத்துக் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை



ஒருதலை துணிதலென்னுந் தந்திரவுத்தியா லுலோகாயதன் முதலியோர் முத்திச் சிறப்பின்மையுஞ் சித்தாந்த முத்தியே பரமுத்தியென்று முணர்த்துகின்றார்.

இம்மையே யீரெட்டாண் டெய்தியெழிலாரு மேந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்கமுத்தி, யம்மையே யென்றமுத்தி யைந்துகந்த மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தியென்று, மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தியென்றும் விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச், செம்மையே

பெறுகைமுத்தி யென்றுஞ்செப்புவர்கள் சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே. (கஉ)

(இ-ள்) **இம்மையேயீரெட்டாண்டெய்தி யெழிலாருமேந் திழைபார் முத்தியென்றும்** இந்தவுலகத்தின் மடந்தைப் பருவமுடைய மாதருடன்கூடி யவருடனூடுத லுணர்தல் பிரிவுற்றவிடத்து வாடுதல் வணங்குத லிவைகளை யரிய தபசுபண்ணுத லவர்களிடத்தி லுண்டாகிய சுகத்தை யடைகிறதே முத்தியென்றும்.

**இருஞ்சுவர்க்க முத்தி யம்மையே முத்தியென்றும்** வேதத்திற் கிரியாபாகத்தைப்பற்றி யனுட்டிக்கு மீமாஞ்சகன் சோதிட்டோம முதலிய வனுட்டானத்தாலே யொரு கன்ம முண்டா யதுதானே பலத்தைக் கொடுக்கும், சுருதி வாக்கியாத்மகமாகிய சத்தமே தேவதையொழிந்து வேறொரு தேவதை கன்மபலத்தைக் கொடுக்க வேண்டுவதில்லை. சுவர்க்கத்தை யடைகிறதே முத்தி யென்றும்.

**கந்தமைந்து மறக்கெடுகை யென்றும்** புத்திதத்துவ முதல் ஏழுள்ள தத்துவங்களடங்கலும் க்ஷணிகமாயிருக்கும், ஆன்மாவு மீசுரனு மென்ப தொன்றில்லை, முத்தி பூதத்தினுடையதா யிருக்கிற கூட்டமேயென்றும்; ரூபககந்தமும், சுகதுக்க ரூபமாயிருக்கிற புத்தியினுடைய சந்ததியென்னும் வேதனாகந்தமும், யாதொன்றுக்கு யாதொரு கந்தக் கூட்டங்களுடைய சந்ததி சங்ஞாகந்தமும், ஞான மிடைவிடாம லிருக்கிறதே ஞானகந்தம், இந்த ஞானத்தை விசேடித்தறிகிற சந்ததியே விஞ்ஞானகந்தம், ஆக விந்தப் பஞ்சகந்தங்களும் நேராகக் கெடுகிறதென் றறிகிறது மிந்த நூலையுபதேசித்த சுகத பகவானையே வழிபடுகை முத்தியென்றும்

அட்டகுண மு த்தியென்றும் — அருகசாத்திரஞ் சொல்லிய அநந்தஞானம் அநந்ததரிசனம் அநந்த வீரியம் அநந்த சுகம் நிர்நாமம் நிட்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசம்மியகபாவம் எனக்கூறிய குணங்களெட்டு.

இது தொகை.

அதனை வகுத்தறியில் அநந்தஞானம் ஐந்துவகைப்படும். அஃதாவது? மிதி சுருதம் அவதி மனபரியாயம் கேவலம் எனவரும். இதனை ஞானுவர்ணிப மென்பர்கள்.

இனித் தரிசனுவர்ணிபம் ஒன்பது பேதப்படும். அவையாவன? சட்சுதரிசனம் அசட்சுதரிசனம் அவதிதரிசனம் கேவலதரிசனம் நித்திரை நித்திரர்நித்திரை பிரசலை பிரசலாப்பிரசலை தியானக்கிரந்தியென வரும்.

இனி வேதநீயம் இரண்டு. சாதவேதநீயம் அசாத வேதநீயம் எனவரும்.

ஆயுஷியம் நாலு, தேவாயுஷியம் திரியக்காயுஷ்யம் மனுஷ்யாயுஷ்யம் நரகாயுஷ்யம் எனவரும்.

இனி மோகனுவர்ணிய மிருபத்தெட்டு. மித்தியாதத்துவம் மிகவு மித்தியாதத்துவம் சம்மியகம் பிரகிருதி அந்தானுசந்திகுரோதம் மானம் மாயாலோபம் அப்பிரத்தி யாச்கியானதிகுரோதம் சசுவலனம் அதிக்குரோதம் அதிமானம் அதிமாயம் அதிலோபம் சிரிப்பு அரதிருதி சோகம் பயம் நிந்தை மாதாவேதம் புருடவேதம் அலிவேதம் சத்தாவலோகனம் மாதிருதரிசனம் சாகாகிரகணதரிசனம் ஞானம் எனவறிக.

நாமந் தொண்ணூற்று மூன்றுபேதப்படும். வமயம் சந்தம் இரசம் பரிசம் உத்தியோகம் உச்சுவாசம் வாதாம்பரியாத்தி அபரியாத்தி சூக்குமவியாத்தி பிரசித்தம் அப்பிரசித்தம் சேவக தற்பக அதேய அநாதேய சாகாய சகீர்த்தி அபகீர்

த்தி அகுரு இவது உபகாதா பரகாதா ஆனுபூர்வி இதுமுதலா கப் பிண்டாபிண்ட பிரகிருதி பேதத்தினாலே யவைகளை யறிக.

இனி கோத்திரமிரண்டு. உயர்ந்த கோத்திரம் தாழ்ந்த கோத்திரம் எனவரும்.

இனி அந்தராயம் அஞ்சுபேதம், தாநாந்தராயம் இலாபாந்தராயம் போகாந்தராயம் உபபோகாந்தராயம் வீரியாணியந்தராயம் எனவரும்.

இந்த வட்டவித கன்மத்தை விசாரித்தறியில் நூற்று நாற்பத்தெட்டென வறிக.

இதன்மேல் விரிக்கிற் பெருகுமென வறிக.

| | |
|---|---|
| மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தியென்றும் | உண்மையாகவே கருவிகரணாதிகளொல்லாங் கழிந்து பாடாணம்போலே கிடக்கிறதென்னும் பாடாணவாதி முத்தியும் |
| விவேசமுத்தியென்றும் | மாயாவாதி சமுத்திரத்தி னிடத்திலே திரைதோன்றி யதிற்றானே யொடுங்குமாறு போலப் பிரமத்தி னிடத்திலே சகத்துத் தோன்றி யதிலேதானே யொடுங்கு மாயையிற் காட்டில் விலட்சணமான பிரமசுரூபத்தை வேதாந்த ஞானத்தினாலே விவேகித் தறிகிறதே முத்தியென்பதும் |
| தன் மெய்வடிவாஞ்சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தி | சிவசமவாதி யான்மாவுக்குச் சுபாவமான சைதன்னியத்தின் முறைமையினையுஞ் சிவனது சீர்பாதத்தினையுந் தானணைசலையுமின்றி மயக்கத்தாற் றன்னையே சிவனென மதிக்கு முத்தியும் |
| என்றுஞ் செப்புவர்கள் | உம்மையாற் சங்கிராந்தமாகிய பாசுபத முத்தியும் சமாவேசமாகிய காபாலமுத்தி |

காலாந்தரத்திற் றிரும்பு மதுவு மாகாது.
சித்தாகிய சிவனிடத்திலே மலரகிதஞான வானமாத் தோன்று மெனில்? யாதொன் றநேகமுமா யுற்பத்தியையு முடைத் தது நாசமடையும். இந்த மாவிரத முத்திபன்று

இப்படிச் சமயங்கடோறு முத்தியைப் பலவாகக் கூறும தனை மெய்யென்று கருதிப் பலங்கொள்ளக் கருத லெத்தன்மை க் கொக்குமெனில்? அக்கினியை விரும்பினவன் மின்மினியி னிடத் ததனைப் பெறுவேமென முயற்சிப்படு மதற்கொக்கும். அவைகளெல்லாஞ் சிருட்டிகாலத்தில் அழிந்துபோகிற முத்திகள். அழியாமுத்தி யாதெனின்?

| | |
|---|---|
| சிவனடியைச் சேருமுத்திசெப் புவதிங்கியாமே. | தீக்ஷையிற் மும்மலங்களையுஞ் சோதித்துச் சிருட்டிகாலத்தில் கீழே திரும்பாமல் சிவனைப்போல சர்வஞ்ஞத்துவா தீட்குணங்களபிவியத்தமாகிறதே யாஞ்சொல்லும் பரமுத்தி. எ-று. (கஉ) |

செம்மையே டெறுகையென்னும் ஏகாரந் தேற்றம்.
யாமே - ஈற்றசை.
யாம் - எழுவாய். செப்புவம்-பயனிலை.

இதற்குச் சிந்தியம் மிருகேந்திரம் நிச்வாசம் "நான்மகச் சேதா" என்னுஞ் சுலோகத்தா மறிக.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் பரமதமுத்தியைத் தூஷித்து ஸ்வமதமுத்திக் கூறுகின்றது.

இம்மையே யீரெட்டாண் டெய்தி டெழிலாரு மேந்திழை யார் முத்தியென்னும்- இகமேயுள்ளது, பரமென்பதில்லை, சுவர்

க்கம் நரகமென்பதேதென்னில்?* மஜ்ஜன போஜன கந்த புஷ்பாதி சௌக்கியமே சுவர்க்கம், இவைகளின்றி தரித்திரத்தினாலும் வியாதியினாலும் பீடிக்கப்படுகிறதே நரகம், அழகையுடைத்தாகிய வவயவங்களை யுடைத்தாய் பதினாறு வயதாய் † மதனகலா வல்லபைகளாயிருக்கிற ஸ்திரீகளுடனேகூடி யனுபவிக்கிற வேளையில் ‡ நீவிவிடுகிறதே மோக்ஷமென்னும் லோகாயதனும்,—

* மஜ்ஜனம் - ஸ்நாநம், † மதனகலாவல்லபை - மன்மதநூலில் கெட்டிக்காரி. ‡ நீவி - துணிமுடிச்சு.

இருஞ்சுவற்கமுத்தி யம்மையேயென்றும்- வேதோக்த்த கன்மாநுட்டானங்களினாலே யிந்தப் பூதபரிணாம தேகத்தை விட்டு திவ்விய தேகியாய் மறுமையிலே பெரியபோகத்தை யுடைத்தாகிய சுவர்க்கத்தை யடைவதே மோக்ஷமென்னும் பூர்வமீமாம்சகனும்,—

ஐந்துகந்த மறக்கெடுகை முத்தியென்றும்- ரூபம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமாகிற பஞ்சஸ்கந்தமும் § சந்தானமின்றியில் நிச்சேஷமாகக் கெடுகிறதே மோக்ஷமென்னும் பௌத்தனும்,—

§ சந்தாநம் - பரம்பரை.

அட்டகுண முத்தியென்றும் - அனந்தஞானம் அநந்ததரிசனம் அனந்தவீரியம் அனந்தசுகம் நிர்நாமம் நிர்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசம்மியதா பாவமென்னு மெண்குணப் பிராப்த்தி மோக்ஷமென்னுஞ் ஜயினனும்,—

மெய்ம்மையேபாடாணம் போல்கை முத்தியென்றும் - ஆத்மா சடமாய் ஞானாச்ரயமாயிருக்கும். அதெப்படி யென்னில்? விளக்குத்தகளியும் விளக்கும்போல அந்த ஞானத்தினாலே சுகதுக்கானுபவ முண்டாயிருக்கும் ¶ ஷோடச பதார்த்தத்வ

¶ ஷோடசம் - பதினாறு

ஞானத்தினாலே சுகதுக்கங்களும் தகேதுவாயிருக்கிற ஞானமும் நீங்கப் பாஷாணம்போல வோரறிவுமற் றிருப்பதே மோக்ஷமென்னும் நியாய வைசேஷிகனும்,—

விவேக முத்தியென்றும் - பிரகிருதிபுருஷ விவேகத்தைப் பண்ணி பிரகிருதி விகாரங்களுக்குத் தானன்னியமாகக் கர்த்திருத்துவ போக்த் திருத்துவங்களற நிற்பதே மோக்ஷமென்னும் நிரீஶ்வர சாங்கியனும்,மேல் மாயாபுருஷ விவேகத்தைப் பண்ணி மாயையை நீங்குவதே மோக்ஷமென்னும் மாயாவாதியும்,—

தன்மெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையே பெறுமைமுத்தியென்றுஞ் செப்புவர்கள் - பாஞ்சராத்திரிகள் மகாவிஷ்ணுவினுடைய கிருபையினாலே பிராகிருத தேகத்தை நீங்கித் தங்களுக்கு சத்திய ஸ்வரூபமான சுத்த சித்தரூபாய் விஷ்ணு× துல்யராய் சிரீ பூமி நீலாசத்தித்திரய வியதிரிகத்தமான சகல போகங்களும் மகாவிஷ்ணுவைப் போலே நித்தியமா யுடைத்தாயிருக்கை மோக்ஷமென்றும், பூர்வ சைவர் சிவானுக்கிரகத்தினாலே யாணவ மாயை காமிகங்களீங்க சத்தியமும் சுத்தமுமாய்த் தங்கள் ஸ்வரூபமாகிய ஞானக்கிரியை பிரகாசிக்க வதனால் சர்வஞ்ஞத்துவாதி ஷாட்குண்ணியாபி வியத்தியாய்ச் சிவசமமா யிருப்பதே மோக்ஷமென்றுஞ் சொல்லுவர்கள்; ஆதலால் இதெல்லாம் பதமுத்தியே.—

× துல்பம் - சமானம்.

சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே - ஆன்மாவுஞ் சிவனு மனாதியே பிறிவற்றது; அந்தப் பிறிவில்லாமையைத் தோன்றாதபடி யனாதியே யாணவசத்தி தடுத்திருக்கையா லிந்த வுபாதிகளினாலே யசத்தியமாகிய போகங்களை சத்தியமென்று மயங்கிநின்று சிவானுக்கிரகத்தினாலே யுபாதித் திரயங்களும் நீங்கக் கண்ணினது காச காமலாதி தோஷம்நீங்கக் காக்ஷி

யைப் பெற்றதுபோல,சிவனுடைய பிரிவில்லாமையைச் சிவஞானத்தா லன்னியமாகக் கண்டு சிவாநந்த பரவசத்தினாலே சிவமேயாய் நிற்பது மோக்ஷமென்று சொல்லிப் பரம மூர்த்தியையடைவது உத்தர சைவராகிய வெம்மொரேனோரேயென் றிதன் பொருள்.

பதமென்ற சொல்லுக்குப் பொருள் நிச்சயம், ரக்ஷை, இருக்குமிடம், அடையாளம், அடி, ஒருவஸ்து, இத்தனையுமாகையால், இவ்விடத்துச் சிவனடியைச் சேரவென்றது சிவமாகியவஸ்துவைப் பொருந்தவென்றது.

பொருந்த வென்றதினு லிரண்டிருந்து கூடிய தல்ல, தன்னுடைய பிள்ளையானவன் வியாதியினாலே மிகவும் பீடிக்கப்பட்டுக் குணமானபொழு திந்தப் பிள்ளையை யிப்பொழுது பெற்றேனென்றதுபோல வுபாதியினாலே சிவாநுபவம் விளங்காமலிருந்து விளங்கினபிறகு கூடியதென்று சொல்லவேண்டியது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆதலால், லோகாயதன் முதலோர் முத்தி, முத்திப்போலியென்பதுந் தெரிவித்து, சித்தாந்த முத்தித்திறனுஞ் செப்புகின்றார்.

இம்மையே யீரேட்டாண் டெய்தி யெழி லாரு மேந்திழையார் முத்தி யென்றும - முழுகுதல் புசித்தல் பூசுதல் முடித்தல் முதற் சுகமே சுவர்க்கம், அந்தச் சுகமில்லாமை நரகம், மகளிரை மணத்த லிம்மையே முத்தியென்று லோகாயதன் சொல்லுவன்,—

இருஞ் சுவர்க்க மம்மையே முத்தி யென்றும்- பூர்வமீமாஞ்சகன் சொல்லுவன்,—

உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்கின்ற,

கந்தமைந்து மறக் கெடுகை முத்தி யென்றும் - புத்தரிற் பிரதீப நிருவாணவாதி பேசுவன்.—

அனந்தஞான மனந்ததரிசன மனந்தவீரிய மனந்தசுகம் நிர்நாமம் நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசம்மியக்பாவ மெனும்,

அட்டகுணமுத்தி - என்று மருக னிசைப்பன்.—

ஞான முதலிய செயற்கைக் குணங்கள்கெட் டியற்கை யஞ்ஞானமே குணமாய்,

மெய்மமையே பாடாணம் போல்கைமுத்தி என்றுந் தார்க்கிகன் சாற்றுவன்,—

பிரகிருதி புருஷ,

விவேக முத்தி என்றும் - சாங்கிய னுரைப்பன்.—

தன் மெய் வடி வாஞ் சிவத்தை - தனதிந்த வடிவு போற் சாகார சிவமூர்த்தி சாரூப சிவாகாரத்தை,—

செம்மையே பெறுகைமுத்தி - பரமுத்தியாகப் பரிப்பது முத்தி,

என்றும் - சிவசமவாதி,—

செப்புவன் - இப்படி வாதிகள் செப்புவார்கள்.

சிவனடியைச் சேருமுத்தி - சிவசத்திக் கொத்து விரிக்குஞ் சாட்குண்ணிய சிற்சத்தி நாம சிவத்துவாபி வியத்தியா முத்தி,—

யாம் இங்குச் செப்புவதே.

சில ஆதுநிக சைவாசாரியர் யாஞ் சொல்லு மிந்த முத்தியைச் சாரூப முத்தி சாற்றுஞ் சிவசமவாதி முத்தியாய்த் திருப்பி நமது சிவசித்தாந்த சித்த சிவசாதிர்ச்சிச சிவசாத்தியைக் கிய சிவசுத்தாத்துவைத முத்தித் துவேஷிகளாய் வேதாந்த வி

சேஷசித்த விசிஷ்டாத்துவைத கோடி கொளுவிச்சிவ வியத்தி யத்துவைத விசிஷ்டாத்துவைதப் போலிமுத்தி விளம்பி விட்பி ரலம்பராய் விட்டார்கள்.

வாதிகளுடையும் பதமுத்திக் கிரமம் பகுப்பு வகுப்பாம்:—

பூதான்ம ஞானோபாய முபதேசிக்கு முலோகாயதனுக்கும், பூதவிசேஷப் பிராணான்ம ஞானோபாய முபதேசிக்கும் சௌத னுக்கும், விஞ்ஞானகந்த விச்சிஞ்ஞானோபாய முபதேசிக்கும் பிரதீப நிருவாண வாதிக்கும், கன்மேச்வர ஞானோபாய முப தேசிக்குக் மீமாம்சனுக்கும், சோதிரான்ம ஞானோபாய முபதே சிக்குஞ் சோதிசாத்திர வித்துக்களுக்கும், சூரியாக்கினி சமாத் ம ஞானோபாய முபதேசிக்குஞ் சூரியாக்கினி சாம்யவாதிகட்கு ம், அவரவர்க்கருகமான பஞ்ச பூதபுவனப் பிராப்திதானே மோட்சம்.

பூதாண்டகாரணப் பிரம ஞானோபாய முபதேசிக்கும் ஸ் மார்ததர்க்குத் தன்மாத்திர புவனப் பிராப்தி தானே மோட் சம்.

இந்திரியானம் ஞானோபாய முபதேசிக்கு முலோகாயத னுக்குளொருவனுக்கு இந்திரியபுவனப் பிராத்திதானே மோட் சம்.

மனாத்ம ஞானோபாய முபதேசிக்கு முலோகாயதர்க்கு ளொருவனுக்கு மனோ புவனப்பிராப்திதானே மோட்சம்.

அகங்காரான்ம ஞானோபாய முபதேசிக்கும் வைசேஷிக னுக்கு அகங்கார புவனப் பிராத்திதானே மோக்ஷம்.

புத்தியான்ம ஞானோபாய முபதேசிக்கும் நையாயிகனுக் கும், புத்திவிர்த்தி யான்ம ஞானோபாய முபதேசிக்கும் புத்தனு க்கும் புத்தி புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சலஞ்சல சதசத்குணான்ம ஞானோபாய முபதேசிக்கு மரு கனுக்குக் குணபுவனப் பிராப்திதானே மோக்ஷம்,

பிரமகாரியான்மா ஞானோபாய முபதேசிக்கும் பரிணாம வேதாந்திக்கும் நாராயணப் பிரகிருதி காரியான்ம ஞானோபாயமுபதேசிக்கும் பாஞ்சராத்திரிக்கும் பிரகிருதி புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சத்தப்பிரம கிரீடாப்பிரம சித்திரப் பிரமவாதிப் பிரமுகர்க்கும் பிரகிருதிபுவனப் பிராப்திதானே மோட்சம்.

யோகோபாய முபதேசிக்கும் பாதஞ் சலனுக்கும் பிரகிருதி புருஷ விவேக ஞானோபாய முபதேசிக்குஞ் சாங்கியனுக்குஞ் சந்நியாசோபாய முபதேசிக்கும் விவர்த்த வேதாந்திக்குமான்ம வாதிகளாதலால் புருஷபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சிவ தீக்ஷாங்கியங்க சிவஞானோப கிருத சாகார சிவாத்ம பாவனோபாய முபதேசிக்குஞ் சிவவாதிகளாகும் சைவரிற் சைவ பவுராணிகர்க் கிராக புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சாகார நிராகார சிவபாவனா பரிசோம சித்தாந்திகட்குக் கலார்க கர்ப்ப வித்தியா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சிவாவேச வாதியாகுங் காபாலர்க்குக் கலாபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

காலேசுர வாதிகட்குக் காலதத்துவப் பிராப்திதானே மோக்ஷம்.

சங்கிராந்த வாதியாகிய சைவபாசுபதர் வைதிகபாசுபதர்க்குஞ் சமுத் பத்திவாதி மாவிரத விசேஷர்க்கும் மாயா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

கலாதத்துவாந்த சோதினியாகிய தீட்சாவான்களுக்கு விஞ்ஞான கைவல்லியந்தானே மோக்ஷம்.

சர்வஞ்ஞத்துவ மாத்திரவாதி மகாவிரதர்க்குச் சுத்த வித்தியா புவனப்பிராப்திதானே மோக்ஷம்.

பிரயோச்சிய கர்த்திருத்துவ வாதிகட்கும் பிரவாகே வர வாதிகட்கும் அநேகேச்சுவர வாதிகட்கும் ஈசுவர புவனப் பிராத்திதானே மோக்ஷம்.

சதாசிவ சாமிப வாதிபாகிய சிவசமவாதிகளுக்குச் சதாசிவ புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சுத்தசாத்தர்களுக்குச் சத்தி புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

வாம தக்ஷிண காருட பூதராந்திரிகர்க்குச் சத்திகலா புவனப் பிராப்தி தானே மோக்ஷம்.

சிவ தீக்ஷா சாகல்லிய சுத்தராயிருந்துஞ் சிவவியத்திவைக்கியஞ் செப்புமிப்போதுள்ள சைவர்களுக்கு

"சதஷ் கலந்துஜாதீயாத்
புருஷம் லோகபாவநம்"

என்னும் வசனத்தினாற் சத்தி புவனப் பிராப்தி தானே மோக்ஷம்.

தீக்ஷா வைகல்லிய வான்களாகில் முற்சொல்லிய புருஷ புவனப் பிராப்தி தானே அல்லது சிவலோகப் பிராப்திதானே மோக்ஷமென்று சிந்திக்கப்படும்.

சிவனுக்கு வைந்தவ சரீரம் வாஸ்தவமென்னுஞ் சாமானிய சைவர்க்குச் சிவதத்துவ புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

உலோகாயதாதி வேதாந்தியந்த ஆன்மவாதிகளுக்கு மான்ம விவேகப் பிரவிர்த்திமான்களாகையாற் சிவவாதிகள் பண்ணுஞ் சிவவிவேகத்திற்கு மான்ம விவேக மடிப்படையாதலான் அவ்வான்ம விவேகிகட்கு மலபரிபாக நோக்குஞ் சிவசமான பரமுத்தி பார்க்கும்பாத்திரமாங் கால மெண்ணிக்கைக் கிசையுமாதலா லவரவர் முத்தி சாதனங்கள் சபலங்கள்தானே, நிஷ்பலங்களன்று.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

ஏனைச் சமயநூலார் கூறு முத்திகளாவன? சோபானமுறையால் நிலமுதலாதமீருய்க் கிடந்த முப்பத்தாறு தத்துவங்களிடைக்சட் பவனவாய அரிவைய ரின்புறுமுத்தி முதலாயினவாம். வேதாகமநூ லுண்மையுணர்ந்த யாங் கூறுமுத்தியாவது, முப்பத்தாறு தத்துவங்களுக்கு மப்பாற்பட்ட சிவனடியைச் சேருமுத்தியா மென்பதாம்.

ஏந்திழையை யென்னு மிரண்டாவது விகாரத்தாற் றொக்கது.

ஆர்முத்தி வினைத்தொகை.

உம்மையை எதிரது தழீஇயிற்றுக்கி ஈண்டுக்கூருத சமய முத்திகளையும் இவற்றுடன் வைத்துக் கூறிக்கொள்க.

இதனுனே புறச்சமயநெறிநிற்றன் முதலியனவெல்லாஞ் சைவத் திறத்தடைதற்குச் சோபானமுறையான் வாயிலாமாறு அவற்றது பயன் கூறுமுகத்தானே இனிது விளக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மேல் முத்தித்தொகை யருளிச் செய்கிருர்.

இம்மையேயீரெட்டாண் டெய்தியெழிலாரு மேந்திழையார் முத்தியென்றும் - இம்மையிலே பதினறு வயதைப்பொருந்தி அழகினையும்பொருந்தி ஆபரணங்களையுந் தரித்திருப்பதாயுள்ள ஸ்திரீகளுடனே கூடி அவர்களிடத் துண்டான சுகத்தை யனுபவிக்கிறதே முத்தியென்னும் உலோகாயதன் முறைமையும்,—இருஞ்சுவர்க்கமுத்தி யம்மையென்று - எக்கியாதி கன்மங்

களைச்செய்து மறுமையிலே சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்னும் பட்டாசாரியன் முறைமையும்,—முத்தி யைந்துகந்தமறக் கெடுகைகையென்றும் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கிற பஞ்சகந்தங்களும் நேராகக் கெடுகிறதே முத்தியென்னும் பௌத்தரில் சவுத்திராந்திகன் முறைமையும்,—அட்டகுண முத்தியென்றும் - எட்டு பதினெழு ஆறு என்று மூன்றுவகையாயுள்ள குணங்களை விடுகிறதே முத்தியென்னும் சமணரில் நிகண்டாவாதி முறைமையும்,— மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தியென்றும் - உண்மையாகவே ஆன்மா ஒன்றுமறியாமற் கற்களைப்போலே கிடப்பதே முத்தியென்னும் அகச்சமயத்திற் பாடாணவாதி முறைமையும்,—விவேக முத்தியென்றும் - இந்த ஜீவான்மாவுக்கு விவேகஞான முண்டாகிறதே முத்தியென்னும் மாயாவாதி முறைமையும்,—தன் மெய் வடிவாஞ்சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தியென்றும் - ஆன்மா தனக்குள்ள விந்தச்சரீரமானது ஸ்வரூபத்தைப் பெற்று நித்தியமாயிருக்கிறதே முத்தியென்னும் அகச்சமயத்தில் சமவாதி முறைமையும்,—செப்புவர்கள் - இப்படிப் பலவாகச் சொல்லுவர்கள். அப்படிச்சொல்லுகிற விவை குற்றத்தைப்பொருந்தின முத்திகளாம்;—சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே - ஆகையால் பரமேஶ்வரனுடைய சீர்பாதத்தைப் பெறுகிற முத்தியே இவ்விடத்தில் முத்தியென்று சொல்லப்படுவதும், யாங் கொள்ளப்படுவது மதுவே.

இம்மையே யீரொட்டாண் டெய்தி யெழிலாரு மேந்திழையார் முத்தியென்றது உலோகாயதன் பிரத்தியட்ச மொழிந்து அனுமான முதலானவை கொள்ளாத படியாலே இம்மைப்பயனாகிய மகளிரிடத்துச் சிற்றின்பமே முத்தியென்று கொண்டானெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபட்சம்,அவன்மதம்-உ0-செ. "ஊடு வதுணர்வதுற்ற கலவிமங் கயரையுள்கி, வாடுவதடியில் வீழ்ந்து வருந்துவ தருந்தவம்பின், கூடுவதுணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கையாகி, நீடுவதின்பமுத்தியித்தினின்முர்கள் முத்தர்," என்றும், அவன் மறுமைப்பயன் கொள்ளானென்பதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-உச-செ. "வீட்டினையுளதென்றோடி மெலிவதிங்கென்னைவீடு, காட்டுவோர் கண்டோர்கேட்டோர் கரியவையுண்டேற் காட்டீர்,நாட்டிலரசனாணைக் கிசையவேநடந்து நாளு, மீட்டியபொருள்கொண் டிங்கே யின்பத்துளியைந்திடீரே" என்னுமதுங் கண்டுகொள்க.

இருஞ்சுவர்க்கமுத்தி யம்மையேயென்றது பட்டாசாரியன் இம்மையிலே நித்திய கன்மங்களைச் செய்ய நன்மைப் பகுதிகளுண்டாமென்றும் சோமயாக முதலாயுள்ள யாகங்களைச் செய்ய மறுமையிலே மகத்தாகிய சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்றும் கொண்டான் எனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-கக-செ "நீதியால்நித்தகன்ம நிகழ்த்திட சுபத்தைநீங்கார், தீதிலாவிச்சா கன்மஞ் செந்தழலோம்பிச்செய்ய, வேதுதான்வேண்டித்தெல்லா மெய்தலாஞ்சோமயாக,மாதிதா னுகைவீசி யமைத்திடவீடதாமே" என்ற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

அவன் செயல்களே முத்தியைக் கொடுக்கும தொழிந்து ஒரு கர்த்தா வுண்டென்றுகொள்ளான் என்பதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மதம் சஉ செ. "கருதியகன்மஞான மிரண்டு காலாகக்கொண்டு" என்ற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

முத்தியைந்துகந்த மறக்கெடுகை யென்றது சவுத்திராந்திகன்பிருதிவி யப்புதேயு வாயு என்ற பூதரூபம் நாலும், அறிவுக்

தமிரதம் வன்னம் என்கிற உபாதான ரூபம் நாலும், ஆக ரூபகந்தம் எட்டு. குசலாவேதனை அகுசலாவேதனை குசலா குசலாவேதனை என்கிற வேதனாகந்த மூன்று. சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்ராணம் மனம் என்கிற குறிப்பு கந்தம் ஆறு. பொய்சொல்லல் கோட்சொல்லல் கோபித்துச் சொல்லல் பயனில சொல்லல் என்கிற வாக்கின்குணம் நாலும், களவுக்குப் போகல் வறிதே தொழில் செய்தல் கொலைசெய்தல் ஆக காயத்தின் குண மூன்றும், கொலை நினைக்கை காமப்பற்று ஆசையென்கிற மனதின் குணம் மூன்றும், ஆகத் தீக்குணம் பத்து. மெய்யுரைத்தல் வார்த்தை இனியனகூறல் பயன்படு சொல் என்கிற வாக்கின் குணம் நாலும், பள்ளிவலம் வருதல் தவம்புரிதல் தானஞ் செய்தல் என்கிற காயத்தின் குணம் மூன்றும், அருணினைவு ஆசையறுத்தல் தவப்பற்று என்கிற மனத்தின்குணம் மூன்றும் ஆக நற்குணம் பத்து. ஆக பாவனை கந்த மிருபது. சத்த பரிச ரூப ரச கந்தம் சித்தம் என்கிற விஞ்ஞான கந்தமாறு. ஆக இங்ஙனம் நாற்பத்து மூன்றாக வெண்ணப்பட்டு வருகிற பஞ்சகந்தங்கள் ஐந்தும் காரணங்கிடக்கக் காரியங்கிடக்கு மென்பது மிகுத்துரை யில்வழக்குமாய்ப் பந்தத் துக்கமுமாய் இது குற்ற விடென்றும் கந்தங்களைந்தும் நேராகக்கெட்டு விட்டின்பத்தை யடையுமென்பதுவே முத்தியின்பமாகக் கொண்டானெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபட்சம் அவன்மதம்,௩க-செ,"ஓங்கியவுருவமோடு வேதனைக்குறிப்போடு" என்னுந் திருவிருத்தத்திற் கண்டு கொள்க.

அட்டகுண முத்தியென்றது நிக்கண்டாவாதி. அட்டகுணமுதலாயுள்ள மூன்றுவகைக் குணங்களையும் விடுகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொள்க.

மூன்றுவகைக் குணமாவன, ஞானவாணியம் தரிசனவாணியம் வேதநீயம் மோகனீயம் ஆயுஷ்யம் நாமம் கோத்திரம் அந்தராயம் என்கிற குணங்கள் எட்டும், பசித்தல் தாகம் பயம் செற்றம் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித்தல் வேர்வை கேதம் மதம் அதிசயித்தல் புசிப்பு பிறப்பு உறக்கமென்கிற குணங்கள் பதினேழும் அர்ச்சிகம் இந்தி ஆரம் சோகம் சுருச்சை பயம் என்கிற குணமாறும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட முப்பத்திரண்டு குணமுதலான மூவகைக் குணங்களையும் விட்டு பூர்வத்திலுண்டாகிய கன்மங்களை புசித்துத் தொலைந்த வவதரந் தானே வீட்டின்ப மெனக்கொண்டானென்க் கொள்க.

முதற்சொன்ன ஞானவாணிய மாதிடாயுள்ள எட்டுக்கும் பிரமாணம் பரபட்சம் அவன்மதம் - உ-செ, "ஈறிலாதன வனந்த ஞானமுத லெண்குணங்களொனு மொண்குண, மாறிலாதமதி மேவுசீதமென மன்னிவானவர் வணங்கவே, வேறுலாவுகுணை ஞானவாணியம தாதியெட்டினையும் விட்டசீ, ரோறுபான்மையுடை நீடுவாழருக னெங்களுக்கிறைவ னென்றனன்"

இரண்டாவது சொன்ன பசித்த லாதியாயுள்ள பதினேழு குணங்கட்கும் பிரமாணம் பரபட்சம், அவன்மதம் - ௬ - செ. "பசித்தல்தாகபய செற்றமோடுவகை மோகசிந்தனை பழித்தல் நோய், நசித்தல்வேர்வினொடு கேதமோடுமதம் வேண்டலின்ண்டதி சயித்தலும், புசிக்கவந்திடு பிறப்புறக்கமிட விட்டொரட்டகுண பூதனாய், வசித்தவன்னுலகின் மேலிருந்தொருசொலிகலனுக்கருளு மென்றனன்"

மூன்றுவது சொன்ன அரிச்சிகமாதியாயுள்ள குணங்களாறுக்கும் பிரமாணம் பரபட்சம், அவன்மதம்-அ-செ."ஏனுமொன்றுடைய வாகியெங்குமணு வாயிரும்புகன் மரங்களும், பூணுமங்

குருவெ லாமுமாகுமிவை புற்கலப்பொருள்க ளென்னலாங்,கா ணுமங்சறு வகைத்தொழில்களவை கட்டுவிட்டநெறி கன்மமே ல், மாணநின்றுவரு மாறிமாறிமுன் வகைந்ததுண்டுவிட மாட் சியே" என்றும் பிரமாணங்கள் கண்டுகொள்க.

மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றது பா டாணவாதி அறிவிலாதவர்கள் அதிதப்பட்டுக் கிடக்குந் தன் மைபோல ஆன்மாச் சுத்தாவத்தையிலும் ஒன்றுமறியாமல் கல் லைப்போலே கிடக்கிறதேமுத்தியென்று கொண்டானெனக்கொ ள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "கொத்தை மாந்த ருத்துறு துயில்போற் - காட்சியென்னக் காணுத் துயர- மாட்சியைமுத்தி யெனவகுத்தனரே" என்னுமதுங் கண்டுகொ ள்க.

விவேகமுத்தி யென்றது மாயாவாதி நின்மலமாயிருக்கி ற ஆகாயத்தை மேகமறைத்த தன்மைபோல சுத்தமாயிருக்கிற பரப்பிரம மாயா வுபாதிகளினாலே வாதிக்கப்பட்டு இந்தவுட லிலே மயங்கிநிற்கிறதே ஆன்மாவாவது, அந்த ஆகாயத்திலே ஒரு வாயுத்தோன்றி அந்த மேகத்தை நீக்கின தன்மைபோல தன்னிடத்திலே ஒரு விவேகஞானந்தோன்றி யந்த மாயாவவி த்தையை நீக்குகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொ ள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "இவ்வியற் பந்தப் பவ்வமதகல - விண்முதநுந்த கொண்மூப்படலத் - தி ருளறவுதித்த காறகவிவேகந் - தன்னிற்முன்றிச் சாதக மனை த்தையு - மன்னகப்பிரிப்பு மடியிழைவாங்சலும் - போலஞா லம் பொய்யறக்கழீஇத் - தானேதானாய்த் தன்னிற்றன்னைத்- தானேகண்டு தன்னலமுற்றும்" எனனுமதுங் கண்டுகொள்க.

தன்மெய்வடிவாஞ்சிவத்தைச் செம்மையே பெறுகைமுத் தியென்றது சமவாதி வேட்டுவாளி யொன்றுமறியாத பச்சை

ப்புழுவையெடுத்துத் தற்சொரூபமாக்கின தன்மைபோல ஒன் றுமறியாமற் கிடக்கிற வான்மாவையும் சிவனுடைய ஞானமெ டுத்துத் தற்சொரூபமாக்கி அந்தவுடலே நித்தத்துவத்தை பெ ற்றிருப்பது முத்தியெனக் கொண்டானெனக் கொள்க. இதற் குப் பிரமாணம் சற்கற்பநிராகரணம், "முன்னேன்றனது மு திரொளிஞான- மறியாப்பச்சை சிறுபுழுக்கவர்ந்த- வண்டென வுயிரைக் கொண்டுடுமுயிரது- தன்னைநோக்கித் தன்னுருவாகி- வைவகைத்தொழிலு மெய்வகையுணர்வும் - பிரியாவாறு பெற் றுத் - திரியாட்பெரியோர் திரக்ஷிசேர்ந்திடுமே" என்னுமதுங் கண்டுகொள்க.

செப்புவர்களென்றது உலோகாயதன் முதலாயுள்ள எழு வகை முத்தியையுங் குற்றத்தையுடைய முத்தியென்று ரெனக் கொள்க. அவை வருமாறு:—

உலோகாயதன் முத்திக் குற்றத்தைப் பொருந்தின முத் தியென்றது, பன்றியானது கன்மத்துக் கீடாக விட்டையிரு ம்பிப் புசிக்குந் தன்மைபோல வசுத்தமாகிய மகளிரிடத் துண் டாகிய சிற்றின்பத்தையுங் கன்மத்துக்கீடாக விரும்பிப் புசிக் கையிலுலெனக் கொள்க. இதற்குப் பிரமாணம் பரபட்சம், அ வன் மறுப்பு-உஅ-செ. "ஆசையுற்றுழல் சூகரங்க ளசுத்தமேவி" என்கிற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

பட்டாசாரியன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தியெ ன்றது, கன்மத்தினாலும் ஞானத்தினாலு மோக்ஷமென்று சொ ல்லுகையில் கன்மத்தினாலே ஆசையுண்டா யதினாலே முத்தியு ண்டாகா தாகையினு லெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் பரபட்சம் அவன் மறுப்பு,க0-செ. "கருமங்கள் ஞானமது வு டனின்றலான்மருவு சதிதங்கலாவ தெனின்" என்னுந் திருவிரு த்தத்திற் கண்டுகொள்க.

சவுத்திராந்திகன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, கர்ப்பூரவிளக்குபோலக் கந்தமைருந்துமறக் கெடுகையினாலே பெறுவானில்லாத படியினாலெனக் கொள்க; இதற்குப்பிரமாணம் பரபட்சம், அவன்மறுப்பு ௩கூ-செ. "ஐந்துகந்தம் சந்தானத்தழிதல்பந்த துக்க" மென்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

நிகண்டாவாதி முத்தியைக் குற்றம் பொருந்தின முத்தியென்றது, குணங்களை விட்டவிடந் தவமாகா தென்பதாலும் பூர்வகன்மம் நிச்சயித்துப் புசிக்கைக்கு இவ்விடத்து ஆன்மாவுக்குத் தனக்கெனை வேறோரறி வில்லாதபடியாலு மெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மறுப்பு-கக-௩க-செ. "ஆறுகாரியங்கள் மாறவேதவங்க ளாமெனில்" என்னுந் திருவிருத்தத்திலும் "பூர்வகன்ம மற்றிடப் புசித்தபின்பு" என்னுந் திருவிருத்தத்தில்" தெண்கடல்நீர் வறந்தபின்பு பூனை மீனருந்த நின்றதே" என்னுமதுங் கண்டுகொள்க.

பாடாணவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது அவன் கேவலப்பட்டுக் கிடக்கிறதை முத்தியென்று சொல்லுகையினால் அது முத்தியாகாது.எனக் கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் அவன் மறுப்பு "காட்சியென்னக் காணுத்துயர - மாட்சிமை முத்தி யெனவ்குத்துரைக்கிற் - கரணபாவமரணங்கரும - மேய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே- வினையகதிக்கோர் முனைவரும்வேண்டா - தனிதருதுயர மெனுமிதுதிடமே - பாடாணத்திற் கூடாமுத்தி" என்னுமதுங் கண்டுகொள்க.

மாயாவாதி முத்தியைக் குற்றத்தைப்பொருந்தின முத்தியென்றது, இவனிடத்திலே தோன்றின விவேகஞானம் முன்பே யுள்ளதாமாகில் இவனுக்கு மயக்கம்வர வழக்கில்லை, பின்பு

ண்டானதாகில் ஆகாயப் பூப்போலே இல்லாத துண்டாகா து, ஆகையினாலெனக் கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகணம், "பந்தமகல் மூந்துவிவேகம் - வான்வளியெனத் தனிற் றனேதோன்றின் - முன்புளதாயின் மங்காதிலதெனிற்- பின்புளதாகா திலதுளதெனில்வெளி-மலரது தருமணம்" என் னுமதுங் கண்டுகொள்க.

சமவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தி யென்றது, அருவினைப்பொருந்தின ஆன்மாக்களுடைய மாயா தேகந்தானே நித்தியதத்துவத்தைப் பெற்றிருக்கிறது பதமுத் திபாம். அதொழிந்து சாயுச்சிய மாகாதாகையினாலும் யாதொ ருபாதொரு சரீரதொந்தனே யுள்ளமட்டும் மூன்று மலங்களுநீங் கா தாகையினாலுமெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் சங்க ற்ப நிராகரணம், "முத்தியுற்ற நற்றவரவையிடை-சேர்வதொன் றனை சார்தருமுத்தி - சாலோக்கியமோ சாயுச்சியமேற்- பந்த முற்ற கந்தலகழித்த-வறிவினோடறிவு பிறியாப்பெற்றி - வேண் டுமென்பதற் கிண்டிவரிவ்வா - றிருப்பவென்பதற் குறுத்தான் வேண்டும்" என்னுமதுங் கண்டுகொள்க.

"சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே" என்றது க்குப் பிரமாணம் பரபட்சம், சௌந்திராந்திகன் மறுப்பு-௨0 செ. "அனாதிமுத்தனாய்ப்பரனா யசலனாயெல்லா வறிவுதொழி லனுக்கிரக முடையவரன்கன்ம, நானாவிகமற் றொத்தவிடத்தே சத்திபாத நுழைவித்து மலங்களெல்லா நுங்கநோக்கி, மனாதி கரணங்களெல்லா மடக்கித் தன்னை வழிபடுநல் லறிவருளி மாக் கருணைக்கையா, லினாதிபிறப்பினினின்று மெடுத்துமாறு வின் பமுத்திக்கே வைப்ப னெங்கள் முத்திபிதுவே" என்னுமதங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, உலோகாயதன் முதலாயுள்ள சம யிகள் கொள்ளப்படு முத்திகள் குற்றத்தைப் பொருந்தின முத்

தியென்றும் இவ்விடத்து முத்தியென்று சொல்லப்படுவது பர மேசுவரனுடையசீ பாதத்தைப் பொருந்துகிறதே முத்தியென் னு முறைமையும் அறிவித்தது.

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

———o———

ஏனைச் சமயநூலார்கூறு முத்திகளாவன? சோபான முறையாகிலமுதலாதமீருய்க் கிடந்த முப்பத்தாறு தத்துவங்களிடைக்கட் படுவனவாம். அவற்றுள்,—இம்மையே யீரெட்டாண்டெய்தி யெழிலாருமேந்திழையார் முத்தியென்றும் - உலகாயதநூலா ரிய்மைக்கண் பதினாறு ஆண்டுள்ள அழகுபொருந்திய ஆபரணங்க ளணிந்த அரிவைய ரின்புறுதலே முத்தியேன்பர்.—அம்மையேயிருஞ் சுவர்க்க முத்தியென்றும் - மீமாம்சை நூலார் யாகாதிகன்மங்கள் செய்து அம்மைக்கண் சுவர்காதி போக மனுபவித்தலே முத்தியேன்பர்.—ஐந்துகந்த மறக் கெடுகை முத்தியென்றும் - சௌத்திராந்திக நூலார் உருவமுதலிய ஐந்துவகை கந்தங்களு மறக்கெடுதலே முத்தியென்பர்.—அட்டகுண முத்தியென்றும் - ஆருகதநூலார் அநந்தஞான முதலிய எண்குண மடைதலே முத்தியென்பர்,—மெய்ம்மையே பாடாணம் போலுகைமுத்தி யென்றும் - மெய்ம்மையாகப் பாடாணம்போற் கிடக்கை முத்தியென்பர் வைசேடிகநூலார்.— விவேக முத்தியென்றும் - சாங்கியநூலார் பகுத்துணரும் விவேகஞானமே முத்தியென்பர்.—தன் மெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தியென்றும் செப்புவர்கள் - சிவசமயவாதிகண் முதலியவாகச் சமயநூலார்களும் தன்னுடைய வடிவாகிய சிவசாரூப முதலிய பதமுத்திகளைப் பெறுதலே முத்தியென்றுஞ் சொல்லுவர்கள்.—இங்கு யாஞ்செப்புவது -

வேதாகமநூ லுண்மையுணர்ந்த யாங்கூறு முத்தியாவது,— சிவனடியைச் சேருமுத்தி - மும்பத்தாறு தத்துவங்களுக்கு மப்பாற்பட்ட சிவனடியைச் சேருமுத்தியாம்.

இதனானே புறச்சமயநெறிநிற்றன் முதலிய வெல்லாஞ் சைவத் திறத்தடைதற்குச் சோபானமுறையான் வாயிலாமாறு அவற்றது பயன்கூறுமுகத்தானே யினிது விளக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலிச்தச் சித்தாந்தமே சிறப்புடைத்தென்றுணர்த்து கின்றார்.

ஓதுசமயங்கள்பொரு ளுணருநூல்க ளொன்றோ டொன்றொவ்வாம லுளபலவு மிவற்றுள், யாதுசமயம் பொருணூ லியாதிங்கென்னி லிதுவாகு மதுவல்ல வெனும்பிணக்க தின்றி, நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண நிற்பதியா தொருசமய மதுசமயம் பொருணூ, லாதலினா லிவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடு மிவையிரண்டு மரனடிக்கீ மூடங்கும். (௬௩)

(இ-ள்.) ஓதுசமயங்கள் பொருளுணருநூல்களொான்றோடொன்றொவ்வாம லுள — இப்படிப் பலவாகச் சொல்லப்பட்ட சமயங்களையு மதற்கதற் கேற்ற தேவதைகளையு மதற்கதற் கேற்ற சாத்திரங்களையு முத்தி பெறுமதங்களையும் பலவாக வுரைத்து, இவற்றுளுண்மையான சமயம் யாது வுண்மைப் பொருள்யாது அச்சமயத்திற்குக் கூறுமாக

பலவு மிவற்றுள் யாதுசமயம்பொருணூலியாதிங் கென்னில்

மங்கள் யாது என்று கேட்கிறு யாகில்? அவைகளை யுணர்த்துதும்.

இதுவாகுமதுவல்லவெனும் பிணக்கதின்றி நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காணநிற்பது யாதொருசமய மதுசமயம் பொருணூல்

தத்தஞ் சமயத்தி லிழிவையுந் தேவதைகள் முறைமையினையு மந்தநூல்களுண்டாய வழியினையு நோக்காது சலம்பற்றி நின்றெமது பொருளே யுண்மை மற்றொன்று முண்மைப் பொருளல்ல வென்னுஞ் சந்தேக விகற்பமின்றிக் கடாவிடையானும் பிரமதப் பொருள்களெல்லா மெய்ப்பொருளன்றென்று விருவினுலுந் திருட்டாந்தத்தாலும் அவ்வியாப்தி முதலிய குற்றங்களாற் சோர்வுபடாத வுண்மைப் பொருளு மிதுவே சமயமு மதுவே இந்தச்மயநூட் டுணிந்து கூறப்பட்டதே பரமமான மோட்சமென்று கூறும் வாலொன்மத்தர் வாக்கிய மலையுமாறுபோல மூன்றொடுபின் மலைவின்றிப் பிறமதங்களைந்து தன்னுண்மைப் பொருளை யறுதியிட்டுணர்த்துகின்ற சமயநூலாகிய நூலேநூல்?

ஆகலினு லிவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிரும்

இச்சிறப்பினை யுடைய தாகையினுலே அச்சமயப் பொருள்களெல்லாம் வேதாகமங்க ளிரண்டினு மடங்கியிருக்கும்.

அவையிரண்டு மரனடிக்கி மூடங்கும்.

இந்த வேதாகமங்களாகிய விரண்டு மந்தவாதமின்றி விதிவாதமே கூறுகையா லவனது திருவாக்கே சிறப்புடைத்தெனப் பெறும் எ-று.

இதற்கு சிந்தியம் சிவதருமோத்தரம் மகுடம் சாமிகத்துமறிக. (௪௩)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் வேதசிவாகமங்களை சாஸ்திரமென்றும் சிவஞானமே ஞானமென்றுங் கூறுகின்றது.

ஓதுசமயங்க ளுணருநூல்கள் பொருள்க ளொன்றோடொன்றொவ்வாமை யுளபலவு மிவற்று ளியாதுசமயம் பொருணூலியாதிங் கென்னில் - சொல்லுஞ் சமயங்களு மந்தந்தச் சமய சாஸ்திரங்களும் சாஸ்திரங்களில் §பிரதிபாத்தியமான பதார்த்தங்களும் பந்தமுத்தியி னுடைய தன்மைகளும் மோக்ஷாபாயங்களும் ஒன்றுக்கொன்று விரோதமாகப் பலவாகவுள. இவையிற்றுக்களுக் குள்ளே யெந்தச்சமயம் பெரியது, எந்தசாஸ்திரம் சர்வத்தையுஞ் சொல்லுகிறது, எந்தச் சாஸ்த்திரத்திலே சொல்லும் பதார்த்தம் யதார்த்தம், எந்தச் சாஸ்த்திரத்தில் சொல்லு மோக்ஷாபாயம் பரமமுத்தியைக் கொடுப்பது, எந்தச் சாஸ்திரத்திலே சொல்லுந் தருமத்தைப் பண்ணவேண்டுவது, என்று வினவில்?—

§பிரதிபாத்யம் - சொல்லத் தக்கது.

இதுவாகு மதுவல்லவெனும் பிணக்கதின்றி நீதியினா லிவையெல்லா மோரிடத்தேகாணநின்ற தியா தொருசமய மது சமயம் பொருணூல்-உலகாயிதாதி சிவாவாத்துவைதி யந்தமாகச் சொல்லும் பதார்த்த லக்ஷணங்களையும் தருமங்களையும் மோக்ஷாபாயங்களையும் மோக்ஷங்களையு மிதுவாகு மதுவல்லவென்று ¶ சமுத்திர கலசநியாயமாக வேதாகமங்களிலே

¶ சமுத்திரகலசநியாயம் - சமுத்திரத்தில் குடத்தைப் போட்டுமொண்டால் குடங்கொண்ட ஜலந்தான் வருமென்கிற நியாயம்.

யேகதேசத்தை யறிவிப்பது பூர்வபக்ஷமும் சித்தாந்தமு மாகத் தர்க்கிப்பித்து, ஆறு குருடர் யானையினுடைய ஏகதேசத்தை ஸ்பரிசித்து யானை யிப்படியிருக்கு மிப்படி யிருக்குமென்று தர்க்கம் பண்ணக் கண்ணுள்ளவனிவர்கள்சொல்லு மவயவங்களெல்லா முடைய தியானையென்று நிச்சயித்ததுபோல, இந்தச்சமயங்க ளெல்லாஞ் சொல்லுவது வேதாகமத்தி லேகதேசத்தைப் பற்றியென்று பரதத்துவத்தை யுணர்வதான சமயமே சமயம், அந்தச்சமய சாத்திரமே சாத்திரம், அந்தச் சாத்திரத்திலே சொல்லும் பதார்த்தமே யதார்த்தம், அதிற்சொல்லும் தருமமும் மோக்ஷா பாயமுமே சாதிக்க வேண்டியது,—

ஆதலினா லிவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீழடங்கும் - சர்வத்தையுஞ் சொல்லுவது சாஸ்திரமென்ப தாதலால் வேதசிவாகமங்களுக்குள்ளே சகல சாஸ்திரங்களு மடங்கும். வேதாக மோக்தானுஷ்டானங்களையே பண்ணவேண்டுவதும், அதிலே அதிலேசொல்லும் பதார்த்தங்களே யதார்த்தமும், வைதிகமுஞ் சைவமுமே சமயமும். இவ்விடத்து மிரண்டாகச் சொல்லுகையினா லிரண்டிலே யதிகமேதென்னில்? வேதசிவாகம மாகிய அபரஞானமிரண்டும் பரஞானமாகிய சிவஞானத்திலே × பரியாவசானமாகையால் *வேதோபப் பிரமிதமானது கொண்டு வைதிக சைவமென்றும், சிவகுண † சங்கிராந்தி சமுற்பத்தி + சமாவேச சிவசமத்துவ மென் றிம்முத்திகளுக்கு மேலாயிருக்கிற சிவசாயுச்சியப் பிரதமாகையா லுத்தரசைவ மென்றும், இதை பூர்வபக்ஷம் பண்ணுவதற்கு ஒருசமய மில்லையாகையால் சித்தாந்தசைவமென்றும் பெயரையுடைய வைதிகசைவமே சர்வோத்கிருஷ்டமான சமயம். வேதசிவாகமங்களே சாஸ்திரம். இதிற்சொன்ன பதிபசுபாசம் பதார்த்தத் திரயமே யதார்த்தம். விசிஷ்

டதருமமாகிய சரிதை கிரியாயோக சிவதருமமே பண்ணவேண்டுவது. கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டை யென்பதே மோக்ஷோபாயமென் றிதன்பொருள்.

× பரியாவசானம்-முடிவு. * வேதோபப்பிரமிதம் - வேதத்திலே அதிகமாகச் சொன்னது, † சங்கிராந்தி - சம்பந்தம், + சமாவேசம் - பிரவேசம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

மேற்சாமான்னிய வேதவிசிஷ்ட விசேஷவேத சிவசித்தாந்தமே சிறப்புடைத்தென்று செப்புகின்றார்.

பொருள் - அந்த அந்தச் சமயத்திற்குச் சொல்லும் பதார்த்தங்கள்,—நூல் - அப்பொருளைச் சொல்லுஞ் சாத்திரம்,—பிணக்கின்று-சந்தேகமற்று,—ஓரிடத்தே - ஒருசமயத்திலே,—காண - அடங்க. வேதத்திற் சாவதியடங்கும், சிவாகமத்திலே நிரவதியடங்கும்,—அரனடிக்கீழடங்கும்-அபரஞானமாதலால் வேதஞ் சிவாகமத்தடங்கும், சிவாகமம் வேதத்தைக் குறித்துப் பரஞானமானாலும் சிவசத்தி சின்ன சிவாகமத்தைக் குறித்து அபரஞான மாதலால் சிவசத்தியாகுஞ் சேதன பரஞானசிவாகமத்தடங்கும்

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

கண்ணில்லார்பலர் குழீஇக்கொண்டு வேழமின்றழித்துத் தலைப்பட்டுக் கையினாற்றைவந்து வேறுவேறு கூறு மிலக்கணங்க

னெல்லாங் கண்ணுள்ளானொருவன் கண்டுகூறு மத னிலக்கணத்துள் ஏகதேசமாய்க் காணப்பட் டடங்குமாறுபோல, ஏனைச்சமயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறுபற்றி அவ்வநூல்களிற் கூறும் பொருளியல்புகளெல்லாம் முற்றுணர்வுடைய முதல்வனாற்செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும்பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்று ளடங்கும். சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக்கொண்டுரைக்கு மவ்விருவகை நூலும் அவ்விறைவன் றிருவடியி லடங்கு மென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

முன் சொல்லப்பட்ட சமயங்களும் அததற்குப் பொருந்தின அர்த்தங்களும் அததற்குப் பொருந்தின நூல்களும் ஒன்றுக்கொன் றொவ்வாமல் எண்ணிறந் திருக்கையினால் இவையிற்றுள் எந்தச் சமயத்தை எந்தப் பொருளை எந்த நூலை பொருளாகக் கொள்ளுவதென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச் செய்கிறார்.

ஓது சமயங்கள் பொருளுணருநூல்க ளொன்றோடொன் றொவ்வாமலுளபலவும் - சொல்லப்பட்ட சமயங்களும் அந்தந்தச் சமயிகள் கொள்ளத்தக்க வத்தங்களும் அததற்கு அறியத்தக்க சாத்திரங்களும் இவை யொன்றுக்கொன் றொவ்வாமலிருப்பது அநேக விருத்தியுண்டா யிருக்கும்,—இவற்றுள் - இவையிற்றுக்குள்ளே, — யாது சமயம் பொருணூ லியாதிங்கென்னில் - எந்தச் சமயத்தை எந்த வத்தத்தை எந்த நூலையுண்மையாகக் கொள்ளுவதென்று நீ கேட்கில்?—இதுவாகு மதுவல்லவெனும் பிணக்கதின்றி - இந்தச் சமயமும் இந்தப் பொரு

ளும் இந்தச் சாத்திரமும் ஆமென்றும், அந்தச்சமயமும் அந்தப் பொருளும் அந்தச் சாத்திரமும் அல்லவென்றுஞ் சொல்லுகிற மாறுபா டில்லைபாய்,—நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காணநின்ற தியாதொரு சமய மதுசமயம்பொருணூல் - உலோகாயதன்முதல் பாஞ்சராத்திரியீருகப் புறச்சமயத்திற் பேதம் பதினுறும், பாசுபதமுதல் வயிரவமீருக உட்சமயத்திற் பேதம் ஐந்தும், சைவத்தில் ஐக்கியவாதி முதல் சைவரீருகப் பேதம் எட்டும், ஆக இருபத்தேழு சமய பேதத்துக்கும் அததற்குத் தக்கதாகப் பொருந்தின பொருளும், அதற்குப் பொருந்தின சாத்திரங்களும், அவரவர் பக்குவத்திற்குத் தக்கதாகப் பரமேஸ்வரன் அருளிச்செய்தான் என்கிற முறைமையை யொருசமயத்திலே யறியப்பட்டது யாதொரு சமயம் அதுவே யுண்மையான சமயமென்பதும், அதுவே யுண்மையான அர்த்தமென்பதும், அதுவேயுண்மையான சாத்திரமென்பதும். இந்தவுண்மையைச் சொல்லுகிற சாத்திரந்தானேது என்னில்?—ஆதலினுலிவையெல்லா மருமறையாகமத்தே யடங்கிவிடும் - சர்வத்தையுஞ் சொல்லுகிற வேதாகமங்களாகையினுல் முன்சொல்லப்பட்டவையெல்லாம் ஒருவராலு மறியப்படாத வேதாகமங்களிலே யடங்காநிற்கும். அந்த வேதாகமங்க ளிரண்டும் எங்கே யடங்குமென்னில்?—அவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும் - அந்த வேதமும் ஆகமமும் இரண்டும் பரமேஸ்வரனுடைய ஞானமாகிய சீர்பாதத்தின் கீழே யொடுங்கும். என்னவே சைவசமயமே சமயமும், சைவசித்தாந்தமே சித்தாந்தமும், வேதாகமமே சாத்திரமும்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் பாயிரம், "பெருங்கட லுத்வுங் சருங்கடு வாங்கிக் - கந்தரத் தடைத்த வந்தமில் கடவுள் - பாலனை யுணர்த்து மேலவர் போலக் - கேட்போ

ராளைக் கோட்படு பொருளா - லருளிய கலைக ளருளில வா
லவை - பலபலசமயப் பான்மைத்ததன்றே - யஃதாலன்னாற்
றன்மையுன்னிய - மாந்தரிதுவே பொருளென்றதனிலை - யறைத
லின்வேற்றோர் பனுவலேற்றோர்க் - கிசையாமாறு பாடுகூறுவ
ரதனால்-புறச்சமயங்கள் சிறப்பில வாகி-யருளின்மாந்தரை வெ
ருளுற மயக்கி- யலகைத்தேரி னிலையிற்றீரு - மீங்கிவைநிற்க நீ
ங்காச்சமய - மூவிருதருதி மேவியதாகு - மொன்றொடொன்
று சென்றுறுநிலையி - லாறுமாறு வீறுடைத்திவற்று - ளெவ்வ
மில்லாச் சைவநற்சமயத் - தலகிலாகம நிலவுதலுளதவை- கன
கமிரணியங் காஞ்சனமீழந் - தனநிதியாடகந் தமனியமென்றி
வை - பலபெயர்பயப்பதோர் பொருளேபோலப் - பதிபசுபா
ச விதிமுறைகிளக்கும்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சொல்லப்பட்ட சமயங்களும் பொருள்களும் சாத்திரங்களும் ஒன்றோடொன்று ஒவ்வாமல் பலவாகச் சொல்லுகையினாலே எந்தச் சமயத்தை எந்தப் பொருள்களை எந்த நூல்களை உண்மையாகக் கொள்ளுவதென்று மாணாக்கன் கேட்க, ஆன்மாக்கள் பக்குவத்துக்கீடாகப் பரமேஸ்வரன் இப்படிப் பலவாக அருளிச்செய்தானென்று அறிகிறது சைவமாகையினால் சைவசமயமே சமயமும் சைவசித்தாந்தமே பொருளும் வேதாகமங்களே நூலுமென்று அருளிச்செய்ததென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஓதுசமயங்கள்-சொல்லப்பட்ட சமயங்களும்,—பொருளுணரு நூல்கள் - அச்சமயப் பொருள்களை யுணர்த்து நூல்களும்,— ஒன்றோடொன் றொவ்வாம லுளபலவும் - மாறுபட்டன

லாக வுள்ளன பலவாகலின்,— இவற்றுள் சமயமியாது பொ ருணூல்யா திங்கென்னின் - இவற்றுண் முதன்மையான சமய மியாது அச்சமயப் பொருளுணர்த்து நூல்யா திவ்விடத்தென் னில்,—இதுவாகு மதுவல்ல வெனும் பிணக்கதின்றி - கண்ணி ல்லார் பலர்குழீஇக்கொண்டு வேழநின்றுழித் தலைப்பட்டுக் கை யினாற் றைவந்து வேறுவேறு கூறு மிலக்கணங்க ளெல்லாங் க ண்ணுள்ளா னொருவன் கண்டுகூறு மதனிலக்கணத்து ளேகதே சமாய்க் காணப்பட் டடங்குமாறுபோல, இதுபொருந்து மிது பொருந்தா தென்றும் பிணக்கின்றி,—நீதியினு லிவையெல்லா மோரிடத்தேகாண நின்றது யாதொருசமயம் - முறைமையா லிவையனைத்து மொருங்கே காணப்பட்டுநின்றதெச் சமயம்,— அதுசமயம் பொருணூலாதலினால் - அதுவேசமயமும் அச்சம யப் பொருளுணர்த்து நூலுமாதலின்,— இவையெல்லா மரும றையாகமத்தே யடங்கியிடும் - ஏனைச்சமய நூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாய வாறுபற்றி யவ்வநூல்களிற் கூறும் பொருளியல்புக ளெல்லா முற்றுணர்வுடைய முதல்வனாற் செ ய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பி னேகதேச சமாய்க் காணப்பட் டவற்று ளடங்குதலின், அவையே நூல் களும்.— அவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும் - சிவபிரானா ற் செய்யப்பட்ட அதனையே தமக்குமுதலாகக் கொண்டுரைக் கு மவ்விருவகை நூலு மவ்விறைவன் றிருவடியி லடங்குமாத லின் அதுவே சமயமுமாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

ஆகமப்பிரமாண முன்னூல் முதலிய மூவிதம் இதற் குளதென் றுணர்த்துகின்றார்.

அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக்கையினு லளப்பரிதா மப்பொருளை யரனருளாலணுக்க, டருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்தவளவிற் றர்க்க மொடுத் தரங்களினாற் சமயஞ்சாதித்து,மிருதிபுராணங் கலைகண் மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழிபுடையாற ங்கம்வேதாங்கம், சுருதிசிவா கமமொழியச் சொல்லு வதொன்றில்லைச் சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணாதே. (கச)

(இ-ள்.) அருமறையாகம முதனூல் — பொருளறிதற் கரிதாகிய நாலுவேதங்களுங் காமிகமுதலிய விருபத்தெட் டாகமமு முதனூல். அஃதெக்காரணத்தா லென்னில்?

அனைத்து முரைக்கையினால் — அறம்பொருளின்பம் வீடாகிய நான்கினையு முரைக்கிறத்தினாலே அவனே சர்வஞ்ஞன் "வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" என்றார் தொல்காப்பியனார்.

அளப்பரிதா மப்பொருளை — வேத மநந்த சாகையையுடைத்தாகையா லளவிட் டதனை யறிதற்கரிது. ஆனாலொருவராலு மறியப்படாதோ வெனில்?

அரனருளாலணுக்க டருவர்கள் — சிவனது காருண்ணியத்தினாலே யநந்தமான வேதத்தை நாலாகப் பிரித்து வேதவியாச பகவான் விளங்க வருளிச்செய்தார்.

பின் றனித்தனியே தாமறிந்த வளவிற் றர்க்கமொ டுத்தரங்க — அதனையுற்று நோக்கி யாராய்ந்து தமக்கேற்ற கடாவானும் விடையானுந் தமதுபொருளையே மேலாக்கிப் பிறமதத்தைக் கீழாக்கி யந்த வேதத்தைப் பின்சென்று சமயபே

னிருற் சமயஞ் சாதித்து — தங்களையு மதற்கதற்கேற்ற பொருள்களையுஞ் சாதித்து,

மிருதிபுராணங்கலைகண் மற்றுமெல்லா மெய்ந்நூலின்வழி — மனுமுதலிய பதினெட்டு மட்டாதசபுராணமும் மறுபத்துநாலுகலையு மற்றுமுண்டாகப்பட்டதெல்லா மந்தவேதத்தின் வழிபாதலால் வழிநூலெனப் பெறும். 'முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி யழியாமறபினது வழி நூலாகும்" எனவறிக.

புடையாறங்கம் வேதாங்கம் — வேதங்களுக் கங்கமாகிய சிட்சைமுதலியவாறு முபாங்கமாகிய மீமாம்சை முதலிய நாலுமாகப் பத்தும் புடைநூலெனப் பெறும்.

உபாங்கத்தைத் தலைக்குறைத்தலாக்கி யங்கமென்றார்.

வேதமென்பதனை யிருபாலுங் கூட்டிப் பொருளுரைக்க.

அவையாவன:—

சிக்ஷை கற்பம் நிருத்தம் சந்தோபசிதி சோதிடம் வியாகரணம்.

இவற்றாற் பிரயோசன மியாதோவெனில்?

வேதோச்சாரணத்துக்கு வன்னத்திற் றோற்றுஞ் சுரத்தையு மாத்திரா பேதத்தினையும் விளங்கச் சொல்லுகையாற் சிக்ஷையெனப் பெயராயிற்று.

வேதமோது மதற்குக் கன்மத்தையுங் கன்மபிரயோஜனத்தையுஞ் சொல்லுதலாற் கற்பமெனப் பெயராயிற்று.

வேதவசனங்களுக் கர்த்தத்தை விளங்க வறியத்தக்கதாக வந்தப்பதங்களோடும் நிர்வசநத்தைச் சொல்லுகையா லதற்கு நிருத்தமெனப் பெயராயிற்று.

வேதத்திற் சொல்லிய மந்திரங்களினது வன்னத்தினு டைய கணனையினையு மாத்திரா விருத்தமாகிய உத்தமைமுதலிய விருபத்தாறு சந்தபேதத்தினையும் வன்னவிருத்தமாகிய பத்தியை முதல் யாரியை கிதிமுதல் காதையீருக வுள்ளவிலக்கணங்களை விளங்கக் கூறுகையால் சந்தோபிசிதியம்.

லௌகிக வைதீக கன்மங்களுக்கு முபயோகமாகிய திடிலைமுதலிய காலவிசேடங்களை யிதற்கிதுவென் றறுதியிட்டு விதிப்பதுசோதிடம்.

சங்கிதை பதங்களையு மறுவிதமான பதப்புணர்ச்சிமுதலிய விதியாகிய சத்தலக்ஷணத்தை விளங்கச் சொல்லுகிறது வியாகரணம் எனவறிக.

மீமாஞ்சை நியாயம் புராணம் மிருதி இந்நாலு முபாங்கமெனவறிக.

"இருவர் நூற்கு மொருசிறைதொடங்கித் திரிபு வேறுடையது புடைநூலாகும்" எனமூவிதத்தினையு மறிக.

இனியாகமதநுக்குக் காமிகாதி யாகமங்கள் முதனூல்?

அஃதெக்காரணத்தா லெனின்.

அநாதியே மலமில்லாதவனுமாய் ஆயுள்வேதத்தினையுங் கணிதத்தையும் மந்திரவாதத்தினையும் இரதவாத முதலியவற்றையுங் கூறுகையா லவனேசர்வஞானவான். அவன்வாக்கியமே முதனூல்.

இஃதாகவேணுமோ! கபிலர் பதஞ்சலி முதலாயினோர் வாக்கிய மாகாதோ வெனில்?

அவர்களுக்குச் சர்வஞானமில்லாத படியாலு மிராகத்துவேஷத்துடனே கூடினவர்களாகையாலும் அவர்கள் வாக்கிய முதனூலெனப் பெறு.

அளப்பரிதா மப்பொருளை அந்தச் சிவவாக்கிய மாமென்றோரிடத்திலே சொன்னதை யோரிடத்திலே யாகாதென்று

மந்த வாக்கியங்க ளெல்லாஞ் சாபேட்சை நிரபேட்சையாக விருக்குமாதலால் அதனைய ளவிடப்படாதென வறிக.

ஆனாலறிப்படாதெனில் அறியும் பகுதியாதெனில்?

ஓரிடத்திலே சத்தசாமர்த்தியத்தாலும் வத்துசாமர்த்தியத்தாலும் சங்கிதாந்தரங்களைக்கொண் டறிவதென வறிக.

நாரசிங்கமுதலிய வுபபேதங்க ளிருநூற்றேழும் வழிநூலெனப்பெறும்.

முன்னூலாகிய வாகமத்தையும் வழிநூலாகிய வுபாகமங்களாக விரண்டினையு முற்றுநோக்கி யுக்கிரச்சோதி சத்தியச்சோதி பிரகற்பதி பரதர் முதலாகிய வாசாரிமாராற் செய்யப்பட்ட போககாரிகை மோட்சகாரிகை பரமோட்ச நிராசகாரிகை முதலிய பிரகரணங்களைப் புடைநூலெனப் பெறும்.

இத்தன்மையை யுடைத் தாகையினாலே.

சுருதிசிவாகம மொழிபச் சொல்லுவ தொன்றில்லை — இந்தச்சுருதியு மாகமங்களுமே பிரமாண சாத்திரம், மற்றதுக ளெல்லாவற்றிற்கும் பிரமாணிக்க முண்டென்று சொல்லப் பெறு.

சொல்லுவார் தமக் கறையோ சொல்லொணாதே. — இதற்கு வேறுயிருக்கிற சாத்திரமே பிரமாணியமென்று கூறுமவர்களுக்கு நாமென்ன சொல்லப்போகிறோம் எ-று.

ஏகார மீற்றசை

இதற்கு அசிதம் காமிகம் மிருகேந்திர பத்ததி சுவாயம்புவம் பராசரோப புராணம் சர்வசித்தாந்த சங்கிரகங்களிலறிக. (கச)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் வேத சிவாகமங்களே சித்தாந்த சாஸ்திரமென்பது இடப்படுத்துகின்றது.

*அருமறையாகமமுதனூ லனைத்துமுரைக்கையினா லளப்பரிதாமப்பொருளை*-முடிய வோதியுணர்தற் கரிதாகிய வேதசிவாகமங்க ளிரண்டிலு மெல்லாத்தையுஞ் சொல்லுகையினா லதனுடைய பொருளைப் பூர்வோத்தர விரோதமற வேகவாக்கியத்தைப் பண்ணவரிது,—

*அரனருளா லணுக்கள் தா மறிந்தவளவிற் றர்க்கமொடுத் தரங்களினாற் றனித்தனியே பின் சமயஞ்சாதித்துத்தருவர்கள்*-விஞ்ஞானத்தின் பொருட்டு ருஷிகள் ஞானப்பிரதமான மந்திரங்களைத் தபசுடனேகூட புனர்ச்சரணைபண்ணி சர்வமந்திரபதியானவ ரந்தந்த மந்திரங்களுக்குந் தபசுக்குந் தக்க விஞ்ஞானத்தைப் பிரகாசிப்பிக்க அந்த ஞானத்தளவு வேதாகமங்களிலே யேகதேச மறிந்து தாமறிந்த மட்டுங்கொண்டு பூர்வபக்ஷமும் சித்தாந்தமுமாக வேறுவேறு சமயமாகச் சாதித்து அந்தப்படியே தாங்கள் சாஸ்திரங்களும் பண்ணுவர்கள்.—

*மிருதி புராணங் கலைகண் மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழிபுடையா மங்கமவேதாங்கஞ் சுருதி சிவாகம மொழியச்சொல்லுவதொன் றில்லைச் சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணாதே*- ஸ்மிருதிகள் புராணங்கள் சிக்ஷா கற்பம் வியாகரணம் நிருத்தம் ஜோதிஷம் சந்தசு என்னுங் கலைகள் இன்னுஞ் சாஸ்திரமென்று சொல்லப்பட்டவைகளெல்லாம் யதாத்தோக்த்தமான வேதசிவாகமங்களாகிய முன்னூலினுடைய வழிநூலும் அதற்கு சமான தந்திரமும் வேதத்துக்கு அங்கமுமாம். பிரதானமாச் சொல்லப்பட்டது வேதமுஞ் சிவாகமமு மொழி

யவேறில்லை, இதற் கந்நியமாக சுவதந்திராகமங்கள் பிடகநூ லாதிக ளுண்டென்று சொல்லுமவர் வேதபாஹிய ராகையால் அசம்பாவிதரானது கொண் டவர்களோ டுத்தரஞ் சொல்லலா காதென் றிதன்பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

முன்னூல் வழிநூல் சார்புநூ லிதுவென்று சாற்றுகின்றார்.

அணுக்கள் - ஆன்மவர்க்கங்களாகிய மனு முதலிய மிருதிக ர்த்தாக்கள் வியாசர் முதலிய புராணகலை கர்த்தாக்கள்,—ப ண்ணின—மிருதி-முதலியன, வேதமாகிய முதனூலுக்கு,—வழி நூல் ஆதங்கம் புடை-சார்புநூல் முதனூலாகிய சிவாகமத்துக் குபாகமங்கள் வழிநூல்,பிரகரணமுதலியன சார்புநூல்,—சுரு திசிவாகம மொழிபச் சொல்லுவ தொன்றில்லை- வேதத்துஞ் சி வாகமத்தும் புறச்சமய முட்சமய மடங்குதலா லஃதவற்றிற்கு வியாபகமாய்க் கொண்டு புறம்பா பொருசாஸ்திரமில்லை,—அ றை - உத்தரம்.

மற்றவை வெளிப்பொருள்.

ஒன்றில்லை யென்பதற்குப் புறச்சமய முட்சமய சாஸ்திர ங்களும் பிரமாணங்களாய்க் கொண்டு இல்லையென்று பேசவே ண்டாம், தமதவதிப் பிரமாணங்கொண்டு பௌஷ்கராதிகளி னும் ஸ்ரீராமகண்ட குருபண்ணின சர்வாகமப் பிராமாண்ணிய த்துஞ் சாதித்திருத்தலால்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

நூலெனப்படுவன வெல்லா மொருங்கிகரனவாதலின்றி மு தனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூலெனப் பலவேறுவ

கைப்பட்டு மென்மேனூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கண் மென்மையுடையனவாம். அவற்றுள் ஏனைச்சமய நூல்களெல்லாம் முதனூலாகிய வேதாகமப் பொருளை முழுவது முள்ளவாறுணரமாட்டாதார் அவற்றுட் சிலபொருளைச் சமுத்திரகலச நயம்பற்றி ஆண்டாண்டெடுத்துக் கொண்டு தத்தமறிவளவுக்கேற்பத் தொகுத்தும் விரித்துஞ் செய்த நூலாகலான் அவையெல்லாம் பூருவபச்க நூலெனப்படும். சமயநூலல்லவாகிய மிருதிபுராணங்கலைகள், மற்றுமென் பதனாற் றழுவப்படும் உபாகமமுதலாயின வெல்லாம் அவ்வேதாகப்பொருளை உள்ளவாறுணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கு இனிது விளக்குதற் பொருட்டு நால்வகையாப்பினு ளொான்றான் வழிப்படுத்துச் செய்த நூலாகலான் அவை வழிநூலெனப்படும். ஏனைக்காருடந் தக்கிணமுதலிய வாகமாங்கங்களும், சிக்கை கற்பசூத்திரமுதலிய வேதாங்கங்களும், முறையே யவ்விரண்டனையு முள்ளவாறுணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின், அவை சார்புநூலெனப்படும். இவ்வாறன்றி வேதாகமங்களி னடங்காதபொருளா பொன்றனை யெடுத்துக்கொண்டு சுதந்திரமாய்ச் செய்யுநூல் ஒன்றுமில்லை, உண்டென்று சொல்லிப் பிணங்கும் பேதைகள் எனகடவாரென்பதாம்.

சமுத்திர கலசநயம்பற்றி யெடுத்துக்கொண்டு தருதற்கும் அவர்சுவதந்திர ரல்ல ரென்பார் அரனருளாலென்றார்.

பிறநூ றிகழ்பூர்வமென முன் வருதலின் ஈண்டுவேறுகூறுதொழிந்தார்.

சாதித்துத் தருவர்களென விடையும்.

ஆமென்பதனை மேலுங் கூட்டுக.

ஆகமாங்கத்தை அங்கமென்றது தலைக்குறை.

ஒன்றுமென்னு மும்மை விகாரத்தாற் றொக்கது.

அறை உத்தரம்.

எல்லா மருமறையாகமத்தே காணப்பட்டடங்குதலை இனிது விளக்கியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொன்ன வேதாகமங்களிலே எல்லா மடங்குமாகில் மற்றுள்ள நூல்களேதுக்கென்ற மாணாக்கனை நோக்கி அருளிச் செய்கிறார்.

அருமறையாகமமுதனூல் - அறிதற்கரிய வேதாகமங்களிரண்டும் எல்லாத்துக்கு முன்னூல்,—அனைத்து முரைக்கையினால் - சர்வத்தையும் விரியச் சொல்லுகையினாலே,—அளப்பரிதாம் - அந்த நூல்களிலுண்டாகிய வத்தங்களைச் சேர வாராய்ந் தறிகைக்கு அரிதாயிருக்கையினாலே,—அப்பொருளை யரனருளாலணுக்கடருவர்கள் - அந்த வேதாகமங்களை விரியச்சொன்ன வத்தங்களைத் தம்பிரானார் திருவருளைப்பெற்ற பெரியோர்கள் அந்தத் திருவருளினாலே சுருக்கி ஒருநூலாகச்செய்து அந்த வத்தத்தைப் பக்குவான்மாக்களுக்குக் கடாக்ஷிப்பர்கள். இது வொழிந்து,—பின் தனித்தனியே தாமறிந்த வளவிற் றற்கமோடுத்தரங்களினாற் சமயஞ்சாதித்து - இந்த நூல்களையன்றிப் பின்னையும் பரமேஸ்வரனை யறியாதவர்கள் ஒருவர் சொன்னதொருவர்க்குப் பொருந்தாமல் தங்கள் தங்கள் போதத்துக்குத்தக்க சங்கற்பங்களையும் அதனுடன் நிராகரணங்களையும் வைத்துக்கொண்டு அதுக்கதற்குத்தக்க சமயங்களைச் சாதித்துச் சொல்லுகிற நூல்களும் அநேகம். இப்படி யான்மபோதத்தாலே சொல்லுகிற விந்த நூல்களுமின்றி,—மிருதிபுராணங் கலைகள் மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழிபுடையாம் - மிருதி என்கிற நூலும் பு

ராணங்களும் சாத்திரங்களும் இவையொழிந்து சொல்லப்பட்டவையெல்லாம் சத்தியமாயிருந்துள்ள வேதாகமங்களின்வழியேவந்து விரிந்தநூல்களாம்.—அங்கம் வேதாங்கம் - சந்தை கற்பம் வியாகரணம் நிருத்தம் சிக்ஷை சோதிடம் என்னும் அங்கம் ஆறும் வேதத்துக்குச் சொரூபமாயிருக்கும்.—சுருதிசிவாகமமொழிபச் சொல்லுவதொன்றில்லை- வேதமும் ஆகமமுமொழிப வேறொன்று இப்படி சர்வத்தையுஞ்சொல்ல மாட்டாது.—சொல்லுவார்தமக் கறையோ சொல்லொணுதே - அந்த நூல்களைப்போல மற்றுள்ள நூல்களையும் நூலென்றுசொல்லுவார்க்கெல்லாம் சொல்லவோ! சொல்லவென்று விசாரிக்கில் சொல்லிமுடியப் போகாது.

பின் றனித்தனிமே தாமறிந்த வள்விற் றற்கமோ டுத்தரங்களிறாஂல் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றது பரசமயிகளைப் பற்றித்தென்னக் கொள்.

உலகாயதன் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவன்மறுப்பு பரபக்ஷம் அவன்மதம்- க-செ. "இந்திரபுரோகித னியம்புமொரு நூலின், றந்தரமெனுதறிவிேனாடருளிலாமற், சந்தணைபுயத்துமண மாலைகடயங்க, வுந்தியுலகத்தலுலாகாயதனுரைப்பான்" என்றும்,

புத்தன் சமயஞ் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவனமதம்-க - செ. "நீதியார்வேத நூலின் நெறியலாவறங்களுளு, மோதிமோரைந்துசீல முடையராயுடலமூடிப், போதிநீழ்மரத்தின்மேவு புத்தர்நால்வரினும் வைத்துச், சாதிதானிலாதகொள்கைச் சவுத்தராந்திகன் மூன்சாற்றும்" என்றும்,

அமணன் சமயம் சாதித்துச் சொன்ன நூலென்றதற்குப் பிரமாணம் அவன்மதம் - ரு - செ. "அந்தவாய்மொழியி

ஞலவன்சரணை மாதியோசமுத்லானநூ, லிந்தமாலிட மயங்
கிடாதவகை யிங்கியம்பிபபி னிதன்பொருள், வந்தகாலமுயிர்
தன்மதன்மிபற மாறுவிண்மருவு புற்கலம், பந்தம்வீஷீனு ட
னுதியாயிவை படைப்பதின்றியுள பத்தமே" என்றும்,

மீமாங்கிசன் சமயஞ்சாத்துச் சொன்ன நூலென்றதற்கு
ப் பிரமாணம் பட்டாசாரியன் மதம்-க-செ. "வேதமேயோ
திநாத னிலையென்றுவின்னிலைறச், சேதமாங்கனமஞ்செய்ய
ச் செயமுனிசெப்புநூலி, நீதியேகொண்டுபட்டா சாரியனிகத்
துநீர்மை, யோதநீர்ஞாலத்துள்ளே யுள்ளவாறுரைக்கலுற்றாம்'
என்றும்,

மாயாவாதி சமயஞ்சாதித்துச் சொன்ன நூலென்றதற்
குப் பிரமாணம், அதனமதம் - க - செ. "நானேபிரமமென
றுரைத்து ஞாலம்பொய்த்தேரனைவெண்ணி, யூனேபுகுந்துநின
றுயிர்கட் குபதேசங்களுரைத்தவரு, மானுரதிகேடனுமாய
மாயாவாதிபேயாகித், தானேயுரைக்குமினனூலி னுண்மைதன
னைச்சாற்றுவாம்" என்றும்,

பாஞ்சராத்திரி சமயஞ்சாதித்துச் சொன்ன நூலென்றத
ற்குப் பிரமாணம் அவன்மதம்-க-செ. "ஆதிபாயருவாகி யகண்
டபூரணமாய்ஞானச், சோதிடாய்நின்றமாயன் சுவேச்சையா,
லுருவுகொண்டு, நீதிபார்கருணையாலே நீள்கடற்றுயினறு நூலு,
மோதினனென்றுபஞ்ச ராத்திரியுரைப்பனூற்றே" என்றும்.

ஆகசமயங்கள் ஆறுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, வேதமும் ஆகமமும் சர்வத்ஞையுஞ்
சொல்லுகையினால் அந்த வதத்தமெல்லாத்தையும் அறிதற் கரி
தானதுகொண்டு அவை யிற்றுக்குள் வேண்டத் தக்கவை யிற்
றைத் தம்பிரானார் திருவருளைப் பெற்றவர்கள் சுருக்கிச் சொன்
ன சாத்திரங்களும் வேண்டினதென்றும் அந்த இரண்டு நூலு

ச்கும் அத்தந் தெரியாமல் தங்கள் தங்கள் கருத்துக்குத்தக்க சமயஞ் சாதித்துச் சொன்ன நூல்களும் அநேக முண்டென்றும் இப்படிச் சொல்லப்பட்ட நூல்களு மிருதிமுதலான மற்றுமுள்ள நூல்களும் இந்த விரண்டு நூலினு முள்ள தொழிந்து வேறல்லவெனனு முறைமை யு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

(நூலெனப் படுவனவெல்லாம் ஒருங்கு ரணவாதலின்றி முதனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்ஷ நூலெனப் பலவேறு வகைப்பட்டு மேன்மேனூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கள் மென்மையுடையனவாம்),— சமயம்- அவற்றுளேனைச சமயநூல்களெல்லாம்,—அனைத்த முரைக்கையிலு ளளப்பரிதாம்-அனைத்தங் கூறுகையிலு ளவிடற்கரிய.—முதனூலருமறைபாகம மப்பொருளை - முதனூலாகிய வேதாகமப்பொருளை,— அணுக்களரனருளாற் பின்றனித்தனியே - முழுவது முள்ளவா றுணரமாட்டாத உயிர்கண் முதல்வ னருளாலவற்றுட் சிலபொருள்களைச் சமுத்திரகலச நயம்பற்றி யாண்டாண்டெடுத் துக் கொண்டு,—தாமறிந்தவளவில் - தத்தமறிவளவிற் கேற்பத்,—தர்க்கமொடுத்தரங்களினாற் சாதித்து தருவர்கள் - பூர்வபக்க சித்தாந்தங்களினாற் சாதித்துத்தொகுத்தும் விரித்தும் செய்தநூலாதலா னவையெல்லாம் பூருவபக்க நூலெனப்படும் —மிருதி புராணங் கலைகண்மற்று மெல்லாம்-சமய நூலல்லவாகிய மிருதி புராணங்கலைகண். மற்றும் என்றதனாற் றழுவப்படு முபாகம முதலாயினவெல்லாம்,—மெய்ந் நூலின் வழிபாம்-அவ்வேதாகமப்பொருளையுள்ளவாறுணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கு இனிது விளக்குதற்பொருட்டு நால்வகை யாப்பினு ளொன்முன் வழிப்படுத்துச்

செய்தநூலாகலா னவை வழிநூலெனப்படும்.—அங்கம் வேதாங்கம் புடையாம் - ஏனைக்காருட தக்கணமுதலிய வாகமங்களுஞ் சிக்ஷை கற்பசூத்திர முதலிய வேதாங்கங்களு முறையே யவ்விரண்டனையு முணர்வாறுணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின் அவைசார்புநூலெனப் படும்;—சுருதி சிவாகமமொழிபச் சொல்லுவதொன்றில்லை-இவ்வாறன்றி வேதாகமங்களினடங்காத பொருளா யொன்றனை யெடுத்துக்கொண்டு சுதந்தரமாய்ச் செய்யுநூ லொன்றுமில்லை.—சொல்லுவார் தமக்கறைபோ சொல்லொணாதே - உண்டென்று சொல்லிப் பிணங்கும் பேதைகட் குத்தரஞ்சொல்லுதன் முடியா தென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



*ஆதிகாலத்திலே ஞான மொன்றாயிருக்க வேதாகமங்களென*
*விரண்டாக்கிக் கூறியதென்னெனின்? அதிகார பேதத்தா*
*லென்பதூஉ மதனுட் சித்தாந்தமே சிறப்புடைத்*
*தென்பதூஉ முணர்த்துகின்றார்.*

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்தநூல்க, ளாதிநூலநாதியம லன்றருநூலிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்புநூலா, நீதியி னுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வேதாந்தத், தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும். (௧௫)

(இ-ள்.) வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள் — ஆப்த வாக்கியமாகிய வேதமு மாகமமுமாகிய விரண்டுமே யுலகத்திற் சிறப்புடையநூல்கள். அஃதெக்காரணத்தா லென்னில்?

வேறுரைக்குநூலிவற்றின் விரிந்தநூல்களாதிநூலநாதியமல னருநூ லிரண்டும் — அநாதியே மலமில்லாத நிட்களமான சிவனிடத்தினின்று வாக்குப் பிரபஞ்சமாகப் புறப்பட்டதை யொருவராலு மதனைத் தரித்துதரிக்கப்படாதபடியாலே, மகாசதாசிவதேவநாயனா ரதனைத் தரித்தான்மாக்களுக் குபயோகப் படுகையின் பொருட்டுத் தமது மேலான பஞ்ச வதனத்தினின்றுஞ் சிருட்டி காலத்திலே வேதாகமங்களை யுண்டாக்கினது.

அந்த வேதத்தில் விரித்துக் கூறியவற்றை யுற்றுநோக்கி

யக்ஷபாதர் நியாயத்தையும்

கணாதர் வைசேஷிகத்தையும்

கபிலர் சாங்கியத்தையும்

சைமினிபகவான் மீமாஞ்சையையும்

வாசுதேவன் வைட்டணவத்தையும்

பிரபாகரன் பிரபாகரத்தையும்

வேதாந்தத்தையும்

வேதத்தின்வழியே யுண்டாக்கின சாத்திரங்களும் ஆதிநூலெனப் பெறும்.

திவ்வியாகமங்களை யுற்றுநோக்கிச் சிலர் மாயாவாதம் ஐக்கியவாதம் ஈசுரைக்யம் சிவசம்வாதம் பேதவாதம் பாடாணவாதி சங்கிராந்திவாதி சமவேதவாதி நிமித்தகாரண பரிணாமவாதி எனக்கூறிய சமயபேதங்களைப் பிறித்துநிறுத்தி யதனை

மறுத்துச் சாத்திரங்களாக்கிக் கூறினவைகளு மாதிநூலென ப்பெறும்.

"நூலெனப்படுவது நுவலுங்காலை, முதலுமுடிவு மாறு கொளின்றி, யுண்ணின்றகன்ற வுரையொடு பொருந்தித், திண ணிதின் விளக்க லதுவதன் பண்பே". என்னு மிலக்கணத்தை யுடைத்தாதலா னூலென்றுரைத்தார்.

அந்தமுன்னூலாகிய விரண்டுநூலுந் தம்மி லொக்குமோ வென்னில்?

ஆரண நூல் பொது — வேதநூல் சாமான்யமெனப் பெறும். அஃதெக்காரணத்தாலென்னில்? அகோரமுக மான தற்புருடாதியான நாலுதிருமுகத்தி லுண்டாகையால்.

அந்த நாலுவேதமுந் தம்மி லொக்குமோ வென்னில் ? அஃ தொவ்வா.

சத்தியோசாதத்திற் றோற்றிய இருக்கு, அதைப்பற்ற வாமத்திற் றோற்றிய யசுர்வேதஞ் சிறப்புடைத்து, அதனைப்பற் ற அகோரத்திற் றோற்றிய சாமஞ்சிறப்பு, அதனைப்பற்றத் தற் புருடத்திற் றோற்றிய அதர்வணம் விசிட்டமெனவறிக.

என்னவே முஃபேதத்தா லிதுவு முத்தரோத்தரந் தம்மி ல்விசிட்டமாயிற்று.

சைவ மருஞ்சி றப்பு நூலாம் — காமிகமுதலிய திவ்யாகமங்க ளிருபத் தெட்டுஞ் சிறப்புநூலெனப்பெறும். அஃதெ க்காரணத்தா லென்னில்?

ஈசானமுகத்திற் றோற்றுகையாலு மதற்குமேற் றோற்ற மின்மையாலும் இதற்குமேலான நூல்கள் வேறின்மையாலு ஞ் சிறப்பாயிற்று.

சிவனுடைய திருவாக் கொன்றாயிருக்கப் பொதுவென்றுஞ் சிறப்பென்று மிருவிதப்படுத்திக்கூறிய தென்னையோவெனில்? அதிகாரிகள் பேதத்தால் பரமபரமென விரண்டாயிற்று.

அஃதென்போலென்னில்? கண்ணென்னுந் தன்மை யெல்லார்க்கு மொன்றாயிருக்கவு மிராத்திரியில் § விலாளத்துக்கு மானுடர்க்கும் விலக்கணமாகச் சேவிக்கக் கண்டோமே! ஆதலாலதுபோலெனவறிக.

§ விலாளம் - பூனை.

நீதியினு லுலகர்க்குஞ் சத்தினிபாதற்கு நிகழ்த்திபது — அந்த வேதாகமங்களைச் சிவ னிரண்டுபடுத்திக் கூறினது "உலகமென்பதுயர்ந்தோர் மாட்டே" என்பதனால், வேதத்தில் பார்ப்பார்முதலிய வன்னத்தார்க்கும் சதுராசிரமிகளுக்கும் மனுமுதலிய நீதிசாத்திரத்தின் வழிநின் றனுட்டிக்கு மதிகாரியர்க்குங் கூறியது. சைவாகமத்திற் கூறியது, நால்வகைச் சத்திநிபாதானு குணமாகச் சிவதீச்சையினையுடைய வதிகாரி யாகிய பக்குவான்மாக்களுக்கே கூறியது. அஃதெச்சிறப்பினை யுடையதெனின்?

நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல் சைவம் — அநேகசாகையினை யுடைய வேதநூல் சீவான்மாவையு மாயையாகிய வவித்தையையு மற்றுமொழிவுபட்ட பொருள்களையுங்கூறும், அந்தவேதாந்தத்திலே குற்றமற்ற பதியினது சொரூபத்தைத் தெளிவுபெறப் பிரித்துக் கூறமாட்டா, இதுவே யந்த முப்பொருளையும் விரித்துக் கூறுமாதலால்.

புறநூ னிகழ் பூர்வம் — வேதத்திற் சொல்லுமது பூர்வபக்க மெனப் பெறும்.

சிவாகமங்கள் இவ்வாகமங்கள் சித்தாந்த மெனப் பெ
சித்தாந்த மாகு றும். எ-று.
ம்.

சித்தாகமங்க ளிருபத்தெட்டையும் பஞ்சவத்திரத்திற்
ரேன்றிற்றென்றும், சித்துவசன மீசானத்திற் சிவபேதம் ப
த்து முபாகமங்க ளுடனே கூடியும், அங்கங்க ளுடனேகூட
நாலுவேதமு முண்டாயிற்றென்றுச் சொல்லியிருக்க;ஈண் டீசா
னத்திற்றானே தோற்றுமென் றுரைத்த தென்னெனில்? சிருட்
டி பேதத்தா லாகமபேதங் கூறியதென் றுசாரியர் தாமே வி
ரோதமின்றிப் பொருளுரைப்பது தன்மமென்று மதங்காகமத்
திற் கூறுகையா லவ்வழியே கொள்க வெனவறிக.

இதற்குக் காமிகந் தந்திராவதாரத்து மாசாரியாபிடேக
த்தும் பஞ்சப்பிரம பாடியத்தும் சுவாயம்புவத்தும் மோகசு
ரோத்தரத்தும் மூலதந்திராவதாரத்தும் இரத்தினத்திரயத்
துமறிக.

"வேதமோடாகம மெய்யா மிறைவனூ, லோதும்பொதுவு
ஞ் சிறப்புமென் றுன்னுக, நாதனுரையிவை நாடி லிரண்டந்தம்,
பேதமதென்னிற் பெரியோர்க் கபேதமே,, எனவறிக. (௧௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலு மதற்கே புறகடை.

வேத நூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் - வேதம் சி
வாகமமென் றிரண்டே சாஸ்திரம். பிரமவிஷ்ணுவாதி தேவர்
கள் ருஷிகள் பண்ணினது சாஸ்திரங்களல்லவோவென்னில்?—

வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்களாகி நூல் - வே
தசிவாகமங்க ளல்லாமல் தேவர்களாலும் ருஷிகளாலும் சொ

ல்லப்பட்ட சாஸ்திரங்களெல்லா மிந்த வேத சிவாகமங்களி லே யேகதேசத்தை யெடுத்துக்கொண்டு தங்களுடைய பசு ஞானத்தினாலே சொல்லப்பட்ட வாதிசாஸ்திரம்.—

அநாதியமலன் றருநூலிரண்டும் - அநாதி நின்மலனாகிய சிவனாலே சொல்லப்பட்ட தாகையால் வேத சிவாகம மிரண்டு மநாதி நூலென்று சொல்லப்படும். ஆகில் வேதமென்றுஞ் சிவாகமென்று மிரண்டாகச் சொல்லவேண்டுவா னேனென்னில்?—

ஆரண நூல் பொதுச் சைவ மருஞ்சிறப்புநூலாம் - வேத மானது சூரியன்முதலாக ஈஸ்வரனை முடிவாயுள்ள தேவர்களையெல்லா மாராதிக்கச் சொல்லுவதாகையாற் பொது, சிவாகமஞ் சிவனொருவனையேயாராதிக்கச் சொல்லுகையால் சிறப்பு நூலாகும். இவ்விரண்டுக்கு மதிகாரிக ளாரென்னில்?—

நீதியினாலுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது - கிரமத்திலே யஞ்ஞாதி யநுட்டானங்களைப் பண்ணிப் புண்ணிய வுலகங்களையடைய விச்சிப்பவ ருலகர், அவர்களுக்குச் சொன்னது வேதம். சிவசத்தி பதிந்ததனாற் சிவ சாயுச்சியத்தை யடைய விச்சிப்பவர் சத்திநிபாதர், அவர்க்குச் சொன்னது காமிகாதி சைவாகமம். ஆகில் வேதமுஞ் சைவமும் வேறேயோ வென்னில்?—

நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம்-வேதத்திலே தேவதாராதனையைச்சொல்லி, யதற்கு×கர்ஷணாதி பிரதிஷ்டாந்த முச்சவாதி தீர்த்தாந்தமான தந்திரங்க ளொன்றுஞ் சொல்லாதபடியாலே யவைகளையும், சார்வாகாதி பூர்வபக்ஷமும் நிராகரணமுஞ் சொல்லாதபடியாலே யவைகளையும், வேதாந்தத்திற் குற்றமற்ற சூக்குமார்த்தத்தையும்,திருவுள்ளத் தடைத்துக்கொண்டு விளங்கக் கூறியது சைவாகம மாகையால், வேதத்துக்குஞ் சைவாகமத்துக்கும் பேதமில்லை.

பிறநூல்திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்-வேதசிவாகமங்களுக் கந்நியமாய்ப் பிரகாசிக்கப்பட்ட பசுசாஸ்திரங்க ளெல்லாம் பூர்வபக்ஷம், காமிகாதி வாதுளாந்தமான சைவாகம மிருபத்தெட்டும் சித்தாந்தமென் றிதன்பொருள்.

× கர்ஷணம் - இழுப்பு.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

அப்படிச் சமய சாத்திரங்ளெல்லாம் வேதாகமங்களிற் சுருக்கிச் சூசிப் பித்திருக்கும், அவைகளையுருத்திரர் தேவருஷிகள் தனித்தனி விரித் துட்சமய புறச்சமய சாத்திரங்களாகப் பண்ணினார்களென்றும், அப்படியாகில் வேதமென்று மாகமமென்றுஞ் சாத்திரமிரண்டு வருவானேனென்ன, பிரகரணவிரோதங்களிருந்தாலும் வியாகரணுதியிற் சாமானிய விசேஷசூத்திரங்களைபோற் பொதுச் சிறப்புச் சாத்திரங்களாயிருக்குமென்றும், அப்படி வைதிகசம்மதமாய் விருத்தாசல புராணுதியிலு மாகமத்திலு மிருப்பதறிந்து குறித் துரைக்கின்றார்.

வேத மூலகர்க் கென்றது-லௌகிகம், வைதிகம், அத்தியான்மிக மெனகின்ற முச்சாத்திரப் பிரசித்த வுலோக தன்ம வருணுச் சிரமவழி வழுவாமைமுத லியாகாதி வைதிகப் பிரமவிசாராதிகளிற் பரபுத்தி பண்ணி யொழுகு மலபரிபாக மில்லாமாந்தர்க்கென்று பொருள்.

சிவாகமஞ் சத்திநிபாதர்க்கென்றது அதிமார்க்க மாந்திரமெனகிற விருசாத்திரப் பிரசித்தமா யுலோக தன்மாதி விடாதும் விட்டிருக்குஞ் சிவதீக்ஷா வான்களாய்ச் சிவதன்ம திரி

பதார்த்த ஞானத் திபான சமாதியுபாயஞ் சம்பாதிக்கு மிச்சாவான்களுக்கென்றும் பொருள்.

நீண்மறையி னொழிபொருள்-வேதத்திற் கெட்டாப் பொருள்.

வேதாந்தத் தீதில்பொருள் - சித்தாந்தத்துக் கொத்து விரோதியாத வேதாந்தப்பொருள்.

கொண்டு - அங்கீகரித்து.

பிறநூல் திசழ் பூர்வம் - வேதவேதாந்த முதலிய சாஸ்திரங்கள் பூர்வபட்சம்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

வேதஞ்சிவாகமமிரண்டும், ஏனையோர் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூல்களி னொன்றாகவைத் தெண்ணுதற்கு ஒருவாற்றானு மியையின்றி அவையனைத்திற்கும் முதனூலாகி அநாதிமுத்தனாகிய விறைவனாற் றரப்படுநூலாக, ஏனையவெல்லாம் இவையிரண்டினானும் விரிந்த நூல்களாகலின் இவ்விருவகைநூலுமே நூலென் றுபர்த்துக் கூறப்படுவனவாம். அற்றேல், முதல்வனாற் றரப்படு முதனூலை யொன்றாகவைத் தெண்ணாமல் இங்ஙன மிருவகைப்படுத் தெண்ணியது என்னையெனின்? அஃதொக்கும். முதல்வன் பெருங்கருணையாளனாகலின் உலகத்தாருய்தற் பொருட்டுஞ் சததிஙியாத முடையா ருய்தற் பொருட்டுந் திருவுளத்திற் கருதி பொருள் பலபடத் தோனறுஞ் சூத்திரமும், அதனை யவ்வாறாகவொட்டாது தெளித்துரைக்கும் பாடியமுப்போல, முறையே வேதமுஞ் சிவாகமமுஞ்

செய்யப்பட்டனவாகலான் அவையிரண்டும் முறையானே பொது நூல் சிறப்பு நூலெனப்பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத்தெண்ணப்பட்டன. இங்ஙனம் வேதத்திற் கூறும் கருமகாண்டப்பொருள்கட்கு இன்றியமையாது வேண்டப்பட்டெஞ்சிநின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டினிதுவிளக்குவது சிவாகமமாகலான், இதனின் வேறுபட வேதத்தின் பூர்வபக்கப்பொருளைச் சொல்லுமேனை நூல்களெல்லாம் பூர்வபக்கநூலெனவும் அதன்சித்தாந்தப்பொருளைச் சொல்லுவதாய சிவாகமஞ் சித்தாந்த நூலெனவு மாமென்பதாம்.

சிவாகமத்தின் சிறப்புக் கூறியவாறு.

இவ்வாறன்றி யுரைப்பனவெல்லாம் போலியென்பது சொற்கிடக்கை முறையானும் மருடாம முதலியவற்றானு மறிக.

இவை மூன்றுசெய்யுளானும் அவ்வ நூல்களி னியல்புகூறு முகத்தான் மேலது வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

வேதமென்றும் ஆகமமென்றும் புராணமென்கிறது முதலாக இப்படி நூல்கள் வெகுவிதமா யிருக்குமோவென்ற மாணாக்கனை நோக்கி மேலு மருளிச்செய்கிறார்.

வேத நூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் - வேத நூல் என்றும் ஆகமநூலென்றும் சொல்லப்பட்ட விரண்டுமே நூலென்பது, மற்றுள்ள நூல்களெல்லாம் நூலல்லவோ வென்னின்?— வேறுரைக்கும் நூலிவற்றின் விரித்தநூல்கள் - இதுவொழிந்து வேறுசொல்லப்பட்ட நூல்களெல்லாம் இவை யிரண்டிலே

நின்றும் தங்களுக்கு வேண்டத்தக்க வர்த்தங்களை யெடுத்துக் கொண்டு விரித்துச் சொல்லப்பட்ட நூல்களாம்.—ஆதிநூல் - அவையிரண்டையு முன்னூலென்று சொல்லப்படும்.—அநாதிய மலனாரு நூலிரண்டும் - அநாதியே மலரகிதனாயிருந்துள்ள பரமேசுவரன் அருளிச்செய்யப்பட்டதா யிருக்கும் வேதாகமங்களிரண்டும் ஒருவ னருளிச் செய்தானுமாயின் ஒருநூலே யன்மை யாதோ இரண்டு நூ லேனென்னில்?—ஆரணநூல்பொது - இவையிரண்டில் வேதநூல் சாமானியமா யிருக்கும்,—சைவம் அருஞ்சிறப்பு நூலாம் - ஆகமந்தான் விசேஷத்துவமுடைய நூலா யிருக்கும். இந்தநூல்க ளாருக்குச் சொன்ன தென்னில்?—நீதியினுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கும் நிசழ்த்தியது - உலகியல்பு வேதநூல் ஒழுக்கமாயிருக்கையால் உலகத்தி லுள்ளவர்களுக்கும், ஆகமநூல் சத்திநிபாதம் பதிந்த பக்குவரா யுள்ளவர்களுக்கும்சொன்ன தாயிருக்கும். இந்த நூலிரண்டையும் பொதுவென்றுஞ் சிறப்பென்று சொன்னது எப்படியென்னில்?—நின்மறையினொழிபொருள் வேதாந்தத் தீதில்பொருள்கொண்டுரைக்குநூல்சைவம்-அநாதியாயுள்ள வேதத்திலுஞ் சொல்லாத உபதேசப் பொருள்களையும் வேதாந்தத்திலே சொல்லபபட்ட குற்றமில்லாத வர்த்தங்களையுங் கூட்டிக்கொண்டு தெளியச் சொல்லப்பட்ட நூல் சிவாகமம்;—பிறநூல் திகழ்பூர்வம்-பெரிய வேதமானது விளங்காநின்ற பூர்வபாகமா யிருக்கும்,—சிவாகமங்கள் சித்தாந்தமாகும்- திவ்வியாகமங்கள் உண்மையாகிய உத்தரவாகமமாயிருக்கும்.

இதனாற் சொல்லியது வேதாகமங்க ளிரண்டும் அநாதியே பரமேசுவரனாலே யருளிச் செய்யப்பட்டதென்றும் மற்றுண்டான நூல்களெல்லாம் அந்த விரண்டு நூலிலும் விரித்த நூல்களென்றும், வேதம் பொதுவாக வுலகர்க்குச் சொன்னதென்

றும், ஆகமம்உண்மையாகச் சத்தினிபாதம் பதிந்தவர்களுக்குச் சொன்னது என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

வேதநூல் சைவநூலென்னிரண்டே நூல்கள்-வேதசிவாகமமிரண்டும்,ஏனையோர் செய்யப்படும் வழிநூல்சார்புநூல் பூர்வபக்கநூல்களி னொன்றாகவைத் தெண்ணுதற் கொருவாற்றானு மியைபின்றி யவையனைத்திற்கு முதனூலாகி,—அநாதி யமலன்றரு நூல்-அநாதி முத்தனாகிய விறைவனாற் றரப்பட்ட நூலாக,—வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்களாகி-ஏனையவெல்லா மிவையிரண்டி னின்றும் விரிந்த நூல்களாகலின்,—இரண்டுநூல் - இவ்விருவகை நூலுமே நூலென் றுயர்த்துக் கூறப்படுவனவாம். அற்றேல், முதல்வனாற் றரப்படு முதநூலையொன்றாக வைத் தெண்ணுமா லிங்ஙன மிருவகைப்படுத்து எண்ணிய தென்னையெனில்? அஃதொக்கும்,—நீதியினா; லுலகர்க்கும் சத்தி னிபாதர்க்கும் நிகழ்த்தியது,—முதல்வன் பெருங்கருணையாளனாகலின் முறையி னுலகத்தோ ருய்தற்பொருட்டுஞ் சத்தினிபாதமுடையா ருய்தர் பொருட்டும் திருவுளத்திற் கருதிப் பொருள் பலபடத்தோன்றுஞ் சூத்திரமு மதனை யவ்வாறாகவொட்டாது தெளித்துரைக்கும் பாஷியமும் போல முறையே வேதமும் சிவாகமும் செய்யப்பட்டன வாகலான்,—ஆரணநூல்பொதுச் சைவமருஞ்சிறப்பு நூலாம்-அவையிரண்டு முறையானே பொதுநூல் சிறப்பு நூலெனப்பட்டுச் சூத்திரமும் பாஷ்யமும்போல வேறுவைத் தெண்ணப்பட்டன.—நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில் பொருள்கொண் டுரைக்குநூல் சைவம் - இங்ஙனம் வேதத்துட் கூறும் கருமகாண்டப் பொரு-

ளகட் கின்றியமையாது வேண்டப்பட் டெஞ்சி நின்றனவாம் பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண் டினிது விளக்குவது சிவாகம மாதலான்,— பிரதா நிசம்பூர்வம்-இதனின் வேறாகிய வேதத்தின் பூருவபக்கப் பொருளைச் சொல்லு மேனை நூல்களெல்லாம் பூர்வபக்க நூலெனவும்,— சிவாகமங்கள் சித்தாந்தமாகும்-அதன் சித்தாந்தப் பொருளைச் சொல்லுவதாய சிவாகமம் சித்தாந்த நூலெனவு மாம்.

சிவாகமத்தின் சிறப்புங் கூறியவாறு.

இவை மூன்றுசெய்யுளானும் அவ்வவ் நூல்களதியல்பு கூறு முகத்தான் மேலது வலியுறுத்தப் பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙனங் கூறியவாகமத்திலே சிவன் ஞானாசாரியனை யதிட்டித்து மலங்களை நீக்கி முத்தியடைவிப்ப னென்று சொல்லியிருக்க வந்தவுண்மை யறிகிறார்க ளில்லையென் றுணர்த்துகின்றார்.

சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண்சேர்திச் செனநமொன்றி லேசிவன் முத்தராக,வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பையறுத்து, முத்தாந்தப் பதமலர்க்கீழ் வைப்பனென்று மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்கராகிப், பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப்பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்னபிராந்தே. (௧௬

(இ-ள்.) சித்தாந்தத்தே சிவன்றன் றிருக் கடைக்கண் சேர்த்தி — ஆகமத்தின் விசுவாசத்தை யுடையவான்மாக்களை முத்தி யடைவிக்கையின் பொருட்டுச் சிவன் றன் றுகாருண்ணியத்திருவேலே ஞானாசாரியனை யதிட்டித்துத் திருநோக்காகிய தீக்கையைச் செய்து,

செநந மொன்றிலே சீவன்முத்தராகவைத் தாண்டு மலங்கழுவி — மந்திர சாமர்த்தியத்தாலே வாகீசுர வாகீசுரி யிடத்திலே சனிப்பித் தநேக சன்மத்துக்குக் காரணமாகிய சன்பமுதலியபாசங்களைச் சோதித்துப் போக்கி யெடுத்ததொரு சனனத்திலே தானே வருத்தமறச் சீவன்முத்தி தன்மையை யடைவிப்பது.

ஆன்மாக்களுக்கு மலம்போனது காணுதபடியாலே மலக்ஷயம் பிறந்ததின்றூ மெனில்? மந்திரமூர்த்திகைக் காணுதிருக்கவும் விடம்போகக் கண்டோமே! அதுபோலக் கன்மாதியுந் தமது பலங்கெட் டான்மாக்களை வாதைபண்ணு தென வறிக.

இதன்றி யொருவன் றீக்கை பெறுமுன்னுந் தலையினிறுக்கப் பின்புநிறுத்தா லதனினுங் குறையுமென் றாகம மோதுகையாலுமறிக.

ஞானவாரிமடுத்து — இந்த சீவன்முத்தனைச் சுவானந் தானுபூதியாகிற சமுத்திரத்திலே யகவரதமும் முழுகும்படி யழுத்தி,

ஆநந்தம் பொழிந்து — ஆநந்தமாக்கட லாடுசிற் றம்பலம்"என்றார். இவனுக்குச் சிவத்துவாபி வியத்தியை நன்றாகப் பிரகாசிப்பித்து, அஃதாவது ஆணவியினிடத்திலே வியாபித்திருந்த மதமானது பருவம் வந்தவாறே புறம்பே புறப்பட்டும் பிரகாசித்தலை பொழிதலென்றார். இத்தன்மை யுடையனாதலால்,

வரும்பிறப்பையறுத்து — அனலிடைப் பட்ட வித்தானது மேலுமுளைத்தற்குச் சாமர்த்திய மில்லாதவாறுபோல இவனு மீண்டு மொருசரீர மெடுப்பியாத படியே பண்ணி.

முத்தாந்தப்பதமலர்க்கீழ் வைப்பன் — முத்திக்கு முடிவாகிய சாயுச்சியமாகிறதனது பாதமாகிற திருவடிக்கீழ் வைப்பன். பாதமாகிற மலரைப் பதலமலரென்றார்.

என்றுமொழிந்திடவும் — சிவனிப்படி யான்மாக்களுக் கனுக்கிரகஞ் செய்வனென்று திவ்யாகமங்கள் முறையிடுகையிலு மதனையறியாமல்,

உலகரெலா மூர்க்கராகி — பிரபஞ்சத்திலுள்ளடான வான்மாக்களிந்தச் சித்தாந்த சாத்திரத்தி னுதிக்கத்தினையு முண்மையினையு மறியாம லிவ்வாழ்க்கையின்கண் மயக்கத்தைப் பொருந்தி மூர்க்கரானவர்கள் வியாபாரத்தைப் பொருந்தி நூலறிவின்றித் திரிவர்கள். அஃதென்போலென்னில்?

பித்தரங்கப் பெரும்பிதற்றுப் பிதற்றி — பித்துக்கொண் டவனைப் போலப் பரசமயிகள் சாத்திரமாகிய பசுசாத்திரத்தி லொருப்பட் டிந்தச் சித்தாந்தத்தை நிந்திக்கையால்,

பாவப்பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தே. — ஆகமநிந்தை யதிபாதகமாதலால் ரௌரவமுதலிய நரகத்திலே விழுந்து நெடுங்காலங் கிடந்து நரகசேடம் புசித்தற்பொருட்டு மீளவுஞ் சனனத்துக் கேதுவாகிறார்கள்; இதுவென்ன மயக்கந்தான். எ-று.

சிவன் - எழுவாய், வைப்பன் - பயனிலை.

இதற்குச் சிவதருமோத்தரம் கிரணம் ரௌரவம் வாதுளை ரத்தினாவலி இரத்தினத்திரையத்து மறிக. (௧௬

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் சித்தாந்த முத்தியே முத்தியென்பது கூறுகின்றது.

சிவன்றன் றிருக்கடைக்கண்சேர்த்தி மலங்கழுவி ஞானவாரி மடுத்தாநந்தம்பொழிந் தாண்டுவரும்பிறப்பையொழித்து தன னையொன்றிலே சீயன் முத்தராகவைத்து முத்தாந்த பதமலர்க் கீழ் வைப்பனென்று சித்தாந்தத்தே யொழிந்திடவு முலகரெ ல்லா மூர்க்கராகிப் பித்தாந்தப் பெரும்பிதற்றுப்பிதற்றிப் பா வப் பெருங்குழியில் விழுந்திடுவ ரிதுவென்னப்பிராந்தே - என மாறிப் பொருளுரைக்க - சிவனு சாரியனாக வந்து நின்று பக்கு வான்மாக்களைக் கருணைகடாக்ஷ * வீக்ஷணம் பண்ணிக் கருணை ஜலத்தினாலே யஞ்ஞானமாகிய வழுக்கைக் கழுவிச் சிவஞான சமுத்திரத்தை யான்மாவினிடத்திலே பிரகாசிப்பித்துச் சிவா நந்தமழையை யொழிவறப் பெய்து தனது வசமாக்கி யிரண் டறக்கலந் தினிமேல் வருஞ் ஜநநத்துக் கேதுவான சஞ்சிதா காமியங்களைக் கெடுத்து தேகத்திலே பிராரத்தம் புசிப்பதாக ஜீவன்முத்தனாக வைத்துத் தேகாந்தத்திலே சர்வதரிசன முத் திக்கு முடிவாயிருக்கிற தம்முடைய பாதமலர்க்கீழ் வைப்ப னென்று சிவாகமத்திலே † சங்கோத்தரங்களுடனே விளங்க க் கூறியிருக்கவும், உலகவாழ்வே பரமப் பிரயோசனமாக மதி ப்பவரெல்லாந் தங்கள் மயக்கறிவுக் கேற்ற ‡ சுஷ்க தர்க்கங் களைப் பெரிதாகக் கூப்பிட்டுப் பாவமிகுதியினாற் பெரிதாகிய நர கக்குழியிலே விழுவர்கள்; இந்தப் பிராந்தருக் கென்ன சொல் லப்போகிறேமென் றிதன்பொருள்

* வீக்ஷணம் - பார்வை, † சங்கோத்தரம்-வினாவிடை, ‡ சுஷ்கம் - வீண், அதாவது அடியையே மலராகச் சொல் லுவது போல்.

பதமென்றது-சிவம்.

மலரென்றது - § ரூபகம். அஃதாவது, சிவஞானமணம், சிவாநந்தத் தேன்.

சிவஞானாநந்தாநுபவி யான்மா.

கீழ்வைப்ப னென்றது சிவனை யான்மா வியாபியான், ஆன்மாவைச் சிவன வியாபித்திருப்ப னென்றதை யறிவித்தது.

ஆண்டென்பது சிவ ஞானாநந்தாநுபவத்தைக் கொடுத்து முத்தியிலுஞ் சிவ ஞான்மாவை ரக்ஷிப்பனென்ப தெனவறிக.

§ ரூபகம் - ஓரலங்காரம்

இதனாற் சிவசமவாதிகள் முத்திபரியந்தமே யான்மா சிவ னாதீனமென்றும், சிவன் ரக்ஷிப்பனென்றும், முத்தியிலே ஸ்வதந்திரனே! சிவனால் ரக்ஷிக்கவுந் தேவையில்லை, ஞானக்கிரியா பிவியத்தி யொழிந்து சிவாநந்தாநுபவ மில்லையென்பதை நிராகரிக்கப்படுகிறது.

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சித்தாந்தத்தின் சிறப்பு புணர்த்துகின்றார்.

சித்தாந்தத்தே - சிவாகமாசார வான்களிடத்திலே,—திருக்கடைக்கண் சேர்த்தி - தனது தீட்சாரூபக் கிரியா சத்தி சங்கற்பம் பண்ணி,—ஞானவாரிமடுத் தானந்தம் பொழிந்து - சிவத்துவக்குறிச் சிற்சத்தி சமுத்திரத் தழுத்திச் சிவத்துவாபிவியத்திலட்சண சிவானந்த மனுபவித்து,—முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைப்பன் - நின்மல நிரதிசய தன்சத்திசமான சத்திமான்க ளாக்குவன்,—இதுவென்னபிராந்தே -இதுவேதுமயக்கம்,

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இத்துணைப் பெருமைத்தாகிய சித்தாந்தநெறி, வீடுபேற்றிற்கு நேர்வழியென உபமன்னியன் அகத்தியன் முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோதவும், அதனைத் தெளியமாட்டாது தத்தமக்கு வேண்டியவாறெல்லாந் தாபிமானங்கொண்டு பிதற்றுமவ்வுலகத்தார் என்கடவரென்பதாம்.

ஒர்த்திராதியென்றற்போல முத்தியந்தம் முத்தாந்தமெனமரீஇயிற்று.

பித்தாந்தம் பித்தமுடிபு, பெரும்பித்தென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சத்திநிபாதம் பதிந்த பக்குவான்மாக்களை சிவன் இரக்ஷிப்பனென்றதென்னைப்பு, ஆன்மாக்களிலே விசேஷவான்கள் குருவாய் இரக்ஷிக்குந்தொழிற்கு சிவனவரம் மனுதித கோசரனுயிருக்கையால் அவன் குருமூர்த்தமாகான் என்ற பாடாணவாதியை நோக்கியருளிச்செய்கிறார்.

சித்தாந்தத்தே சிவன்றன்றிருக்கடைக்கண் சேர்த்திச்செனனமொன்றிலே சீவன்முத்தராகவைத் தாண்டு மலங்கழுவி ஞானவாரிமடுத்தானந்தம்பொழிந்து வரும்பிறப்பையறுத்து முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைப்பனென்று மொழிந்திடவுமுலகமெல்லாம்-அன்வயம் - சிவன்றன் றிருக்கடைக்கண் சேர்

த்துச் சனனமொன்றிலே ஜீவன்முத்தராக மலங்கழுவி ஞான வாரிமடுத் தானந்தம் பொழிந்து வரும்பிறப்பை யறுத்து முத்தாந்த பாதமலர்க்கீழ் வைப்பனென்று சித்தாந்தத்தே யுலக சொல்லா மொழிந்திடவும் என்று பொருள்கூட்டுக - முன்சனனங்களிற் செய்த தபோபலத்தாலே இருவினை யொத்துச் சத்தினிபாதம் பதிந்த பக்குவான்மாக்களைப் பரமேஸ்வரன் தனது காருண்ணியத்தினாலே திருக்கண் சாத்தியருளி அந்தச் சனனந்தன்னிலே சரீரத்திலே கூடியிருந்து புசிக்கச்செய்தே அதிஸ்தாக்கறநிற்கிற வுண்மையையுந் தரிசிப்பித்து அடிமைகொண்டருளி ஆணவமலத்தா லுண்டாகிய அஞ்ஞானத்தையும்போக்கி ஞானசாகரத்திலே யழுத்தி சிவபந்தத்தையு நிறைத்து அநாதியே தொன்றுதொட்டு வருகிற சனனங்களையும் போக்கி முத்திகளுக்கெல்லா முடிவாயிருக்கிற தனது சீர்பாதத்தின்கீழே வைப்பனென்று ஆகமத்திலே யருளிச்செய் திருக்குமென்று உடாநதோர்கள் எல்லாஞ் சொல்லுகைசெய்தேயும் ஆன்மாக்களின விசேஷவான்களே ஆசாரியமூர்த்தியென்று,—மூர்க்கராகி-சாத்திரஞ் சொன்னவழி ஒன்று மறியாமல் மூடராய்,—பித்தாநதப் பெரும்பிதற்றுப்பிதற்றி - பித்த்ரது சுபாவம்போல அறிவும் அறியாமலு மாயிருக்கிற பெரியவார்த்தைகளையுஞ்சொல்லி,—பாவப்பெருங்குழியில் விழ்ந்திடுவர் - துக்கங்களுக் கேதுவான பிறப்பென்கிற குழியிலே விழாநிற்பர்கள்,—இதுவென்ன பிராந்தே - இந்த மதிமயக்க மேதென் றறிந்திலோம்.

என்னவே ஆகமங் குருவே சிவமென்று சொல்லுமென்பது கருத்து. இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், அ - சூ, ச, வெ, ‘‘ அறிவிக்கவன்றி யறியாவுளங்கள், செறியுமாமுன்பின குறைக—ணெறியிற், குறையுடைய சொற்கொள்ளார் கொள்ப

வத்திஙல்வீடென், குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு" என்னு மதூங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்களுடைய பக்குவத்திலே சிவனே ஆசாரிய மூர்த்தியாக வெழுந்தருளித் திருக்கண்சாத்தி அந்த சனனத்திலே ஜீவிக்கையிலே முத்தனாயிருக்கத்தக்க வுண்மையிலேவைத்து இரக்ஷித்து மலத்தையும்போக்கி ஞான சாகரத்திலே யமுத்தி சிவானந்தத்தையும் நிறைத்து அநாதியே வருகிற சனனதொந்தங்களையு மறுத்துத் தனது திருவடித்தாமரையின்கீழே வைப்பனென்று ஆகமத்திலே யருளிச்செய்யுமென்று பெரியோர்கள் சொல்லுகைச் செய்தேயும், சாத்திரகெதியையு மறியாமல் மூடராய்ப் பித்தரைப்போல வறிவுமறியாமலுமாய்ப் பிதற்றிக்கொண்டு திரிந்து நரகமாகிய பெரியகுழிகளிலே விழாநிற்பர்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

---0---

சித்தாந்தத்தே சிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்தி-சிவ னாசாரியமூர்த்தமா யெழுந்தருளிப் பக்குவான்மாக்களுக்குச் சனனமொன்றிலே திருநோக்கு முதலிய தீக்ஷைசெய்து,—ஞானவாரிமூழ்த் தானந்தம் பொழிந்து - ஞானசமுத்திரத்தின் மூழ்குவித்துச் சிவானந்த மேலிடச் செய்வதற்கும்,—செனனமொன்றிலே - இவ்வொரு பிறப்பிற்றனே,—மலங்களுவி-மும்மலவழுக்கைநீக்கி,—சீவன் முத்தராகவைத்து-சீவன்முத்தராகச் செய்து,—ஆண்டுவரும் பிறப்பையறுத்து-அவ்விடத்து மேல்வரும் பிறவியை யொழித்தற்கும்,—முத்தாந்தப் பாதமலர்க்கீழ்வைப்பன்-முத்தியந்தத்திற் றிருவடிக்கீ ழடங்கி நிற்கச்செ

ய்தற்கும் வழியாகலான்,—என்று சித்தாந்தத்தே யுலகரெலா மொழிந்திடவும் - இத்துணைப் பெருமைத்தாகிய சித்தாந்தநெறி வீடுபேற்றிற்கு நேர்வழியென உபமன்னியன் அகத்தியன்முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசம்ஹிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோதவும்,—மூர்க்கராகிப் பித்தாந்தம் பெறும் பிதற்றுப் பிதற்றி - அதனைத் தெளியமாட்டாது தத்தமக்கு வேண்டியவா றெல்லாந் தூரபிமானங் கொண்டு பித்தமுடிவாகிய பெரும்பித்தாற் பிதற்றி,—பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தே - அப்பாவத்தா னரகத்தில விர்வர் இதுவென்ன மயக்கம்.

---

## மறைஞானதேசிகர் உரை

இப்படி யெல்லா வான்மாக்களுஞ் சிவனுக்குச் சமமான குணத்தை யடைந்திருப்பர்களோ வென்னில்? அநேகேசுரத்வம் வர வதனைக் குறித்து எல்லாத்தையு மறியுந் தன்மையு மெல்லா முண்டாக்குந் தன்மையுஞ் சர்வான்மாக்களுக்கும் அனுக்கிரகஞ் செய்யு முறைமையுஞ் சிவனுக்கே யியல்பாக வுள்ளதென் றுணர்த்துகின்றார்.

இறைவனுவான் ஞானமெல்லாமெல்லா முதன்மையனுக் கிரகமெல்லா மியல்புடையானியம்பு, மறையாக மங்களினு லறிவெல்லாந்தோற்று மரபின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும், முறைமையினு லின்பத்துன் பங்கொடுத்தலாலே முதன்மையெலா மறிந்துமுயங் கிரண்டுபோகத், திறமதனுல் வினையறுக்குஞ் செய்தியாலே சேருமனுக் கிரகமெல்லாங் காணுதுநாஞ் சிவன்பால். (௧எ)

(இள்.) இறைவ ஞவான் — பரமகர்த்தா வானவன் யாவனெனில்?

எல்லா ஞான மெல்லா முதன் மை யனுக்கிரக மெல்லா மியல்பு டையான் — சர்வஞ்ஞத்துவத்தையுஞ் சர்வகர்த்திருத்துவத்தையுஞ் சர்வானுக்கிரகத்தையு மாக விம்மூன்றினையு மொருவராற் றருதலின்றித் தனக் கியல்பாக வுடையவன் யாவனொருவன் அவனே பரமகர்த்தா. மேற்கூறுருத்த முறையானே வகுத்துணர்த்து கின்றது.

இயம்பு மறை யாக மங்களினு லறிவெலாந்தோற்றும் — சிவன் சர்வஞ்ஞனென் றறியப்படும். அஃதெக் காரணத்தா லென்னில்? வேதாகமங்களை யுள்ளபடியறிந்து சொல்லுகையினாலே. "கணிதத்து மந்திரத்துங் காணக் கசடின் மை-யெணுகவிவை போன்மற் றெல்லாம்" எனவறிக. சர்வகர்த்தா வென்பதற்குப் பிரமாணம் யாதெனில்? அன்னுவயத்தாலே யவன் கருத்தாவென் றறிக. பெண் முதலா காரியத்தைப் பெற்று என்பதனுலறிக.

இதற்குப் பார்க்கியை மிருகேந்திரம் வாயவ்ய சங்கிதையினு லறிக.

மரபின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும் முறைமையினு லின்பத்துன்பங் கொடுத்தலாலே முதன்மை யெலா மறிந்தும் — சிவன் சர்வகர்த்தனென் றறியப்படும். அஃதெக்காரணத்தா லெனில்? ஆன்மாக்களோடுந் தானன்னியமாய் நிறைந்துநின் றவ னருளிச்செய்த திவ்யாகமங்களிற் சொன்ன வழியே புண்ணியஞ் செய்யுமவர்களுக்கு மதன்வழி வாராமற் பாவஞ் செய்வோர்க்கு மந்தந்த வினைவழி பிறழாம லிருவினைப் பலங்களையுங் கொடுக்கையாலே யிவனுக்குச் சர்வகர்த்தத்துவ முண்டென் றறிவிக்கப்பட்டது. சர்வகர்த்த னென்பதற்குப் பிரமாணம்.

"அன்னுவய வெதிரேகத் தாலவனறிவை- யுன்னுக வேது கருத்தா வுற்று" எனவறிக்.

இதற்குப் பராக்கியை மிருகேந்திரத்து மறிக.

முயங்கிரண்டு போகத் திறமத னால் வினையறுக் குஞ் செய்தியா லே சேருமனுக்கி ரகம் -

ஆன்மாக்கட்கு அபரபோகம் பரபோக மாகிய விரண்டினையு மவர்கள்செய்த வினை க்கீடாக வந்தந்தத் தேசத்திலே யிருந்து துய்ப்பித்து அதுதொலைந்தவாறே பரமமு த்தியை யளிக்கையாலு மிவன் சர்வானுக் கிரகனென்னு மதுவு மறிந்தோ மாதலால்,

எல்லாங்காணு துநாஞ் சிவன்பா ல்.

இங்ஙனங் கூறிய சர்வஞ்ஞத்துவஞ் சர்வ கர்த்திருத்துவமுஞ் சர்வானுக்கிரகமு மாக விம் மூன்றுஞ் சிவனிடத்திலே யுண்டா கையா லவனே பரமகர்த்தா. எ-று.

இதற்கு மிருகேந்திரஞ் சிந்தியவிசுவத்து மறிக.

அநந்தாதிகளுங் கர்த்தாவல்லோ வெனில்? "ஆக்கையு டைய வதிகாரியர்க் கெல்லா - மாக்கையிலானேபதி யாவான்" "முன்படைப்ப ளூக்கையிலா மூலனுயிர்கட்கவனாற் - பின்ப டைப்ப ராக்கையுர்பெற் றூர்." என்பதனாற் பரமசிவ னிவர்க ளுக்குப் படைப்பு முதலிய தொழிலைச் செய்யென்று கற்பித்து ப்பின் பவனேவலாற் பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்வர்க ளென வறிக.

இதற்குப் பௌட்கரத்தும் வாயவ்விய சங்கிதையினு மறிக.

(௧௭)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திருத்துவ சர்வாநுக்கிர ஹத்துவ முடையவனே பரம கர்த்தாவாகையா லிந்த லக்ஷண

ங்களெல்லாஞ் சிவனுக்கே யுள்ளதாகக் காணப்படுகையால் சிவனே பரமகர்த்தாவென்று கூறுகின்றது.

இறைவனுவா னெல்லாஞான மெல்லாமுதன்மை யநுக்கிரகமெலா மியல்புடையான்-சகத்து ஸ்வாமியாகிறவ னெல்லாவறிவையு மெல்லாத்துக்குங் கர்த்தாவாகையு மெல்லாத்தொழிலு மநுக்கிரகமே யாகையையும் ஸ்வபாவமாயுடையவன்.

அதுநாஞ் சிவற்கே - நாங்காண்பதுஞ் சிவற்கே. இந்தலக்ஷணங்கள் நாஞ் சிவனிடத்திலேயே காண்கிறோமாதலாற் சிவனே பரமகர்த்தா, இந்த லக்ஷணஞ் சிவனிடத்திலே கண்டதெவ்வா றென்னில்?

இயம்புமறை யாகமங்களினு லறிவெல்லாந்தோற்றும் வரைவின் வழி வருவோர்க்கும் வாராதோர்க்கு முறைமையாலின்பத் துன்பங் கொடுத்தலாலே முதன்மையெல்லா மறிந்து முயங்கிரண்டுபோகத் திறமதனுல் வினையறுக்குஞ் செய்தியாலே சேருமநுக்கிரகமெல்லாங் காணுதும் - சிவன் சொல்லப்பட்ட வேதாகமங்களினுலே சர்வஞ்ஞனென்ப தறியப்பட்டது. அந்த வேதாகமங்களின்படியே நடந்தபேர்க்கும் நடவாதபேர்க்குங் கிரமத்திலே சுகத்தையுந் துக்கத்தையும் புசிப்பிக்கையினுல் சர்வ கர்த்தாவென்ப தறியப்பட்டது. புசிக்கப்பட்ட சுகதுக்க போகங்களினுல் புண்ணிய பாபங்களையொழிந்து, புண்ணிய பாபங்களொழியவே சத்திநிபாத முண்டாம், சத்திநிபாதத்திலே யநுக்கிரகம்பண்ணுவர். ஆதலால் சிவனே பரமகர்த்தாவென்பது சித்தமென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிவன் சர்வஞ்ஞன் சர்வகர்த்தா சர்வானுக்கிரகன் என்று சாற்றுகின்றார்.

எல்லாஞானம் - சர்வஞ்ஞத்துவம்,—எல்லாமுதன்மை-சர்வ கர்த்திருத்துவம்,—எல்லா மனுக்கிரகம் - சர்வானுக்கிரகத்துவம். இம்மூன்றும்,—இயல்புடையான் - வேதாந்திகள் சைவரிற் சிலர் சாற்றுந் தடத்தலக்ஷணமன்றிச் சுத்த சைவ சித்தாந்திகள் சொல்லுஞ் சொரூப லக்ஷணமாக வுடையன்.— இறைவனுவான் - சர்வசகத் கர்த்தாவானவன்,—இடம்புமறை யாகமங்களினுல் அறிவெல்லாந் தோற்றும்-சர்வஞ்ஞத்துவ மனுமிதிக்கப்படும.—வரைவின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும்-விதிநிஷேதப்படி நடப்போர்க்கும் நடவாதோர்க்கும்,—முறைமையிரு வின்பத் துன்பங் கொடுத்தலாலே முதன்மை யெல்லாமறிந்தும் - சர்வகர்த்திருத்துவ மனுமித்தேம்,—மூட்டங்கிரண்டு போகத்திறமதனுல் - அனுபவிக்கப்படு மிருசுகதுக்க வேதனையினுலே,—வினையறுக்குஞ் செய்தியாலே - புண்ணியபாவங்களைப் போக்கும் பரிசினுல்,—சிவற்கே-சிவனுக்குத்தானே,—சேருமனுக்கிரக மெல்லாம் - பொருந்துஞ் சர்வானுக்கிரகம்,—காணுதுநாம் - அனுமானித்தறிவோம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

முற்றுணர்வு முதலிய மூன்றுஞ் சிவபிரானுக்கே யுளவென்பது மேற்கூறியவாற்றுற் பெறப்பட்ட மறையாகம மியம்புகன்முதலிய மூன்றேதுவானும் முறையே யறியக் கிடத்தலான், அங்ஙன மிம்மூன்றுகுண மியல்பாகவுடைய வம்முதல்வன் சனனமொன்றிலே திருக்கடைகண் சேர்த்தி ஞானவாரிமடுத் தானந்தம் பொழிதற்கும் அச்சனன மொன்றிலேதானே மலங்கழுவிச் சீவன்முத்தராக வைத் தாண்டு வரும்பிறப்பை யறுத்தற்கும் பாதமலர்கீழ் வைத்தற்கும் வல்லவனுவானென்பதாம்.

இறைவனென்றது வல்லவனென்னுந் துணையாய் நின்றது.

பலசனனங்களினு மாகாதவற்றையெல்லாம் ஒருசனனத்திலேதானே யங்ஙனமாகச் செய்யுமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி யவ்வாசங்கைநீக்கி மேலதனை வலியுறுத்தியவாறு.

இதற்குப் பிறரெல்லாம் ஒரியையன்றுதன் மேலுங் கூறிய துகூறலென்னும் வழுப்படவைத்துரைப்ப.

இவை யிரண்டுசெய்யுளானுஞ் சைவத்திறத் தடைதற் சிறப்புக் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---0---

எண்ணிறந்த கர்த்தாக்களில் சிவனே கர்த்தாவென்றதற்குப் பிரமாண மென்னவோ வென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

இறைவனாவான் - கர்த்தாவென்று சொல்லப்படுகிறவன்,— ஞானமெல்லா மெல்லாமுதன்மை யனுக்கிரகமெல்லா மியல்புடையான் - சர்வஞ்ஞத்துவம் சர்வகர்த்தத்துவம் சர்வானுக்கிரகம் என்று சொல்லப்பட்டவையிற்றை அநாதியே தனக்கென்ன வியல்பாகவுள்ளவன். இந்த முறைமைகளை யுடையவனை யறியும்படியெப்படி யென்னில்?—இயம்புமறை யாகமங்களினு லறிவெலாந் தோற்றும் - முன்னூல் வழிநூலின்றியே தனதிச்சையாலே அவனருளிச் செய்யப்பட்ட வேதாகமங்களினாலே அவனது சர்வஞ்ஞத்துவ மறிந்தோம்,— வனாவின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும்- அவ னியமித்தவழியே வருகிறவர்களுக்கும் அந்தவழி வாராதவர்களுக்கும்,—முறைமையினு லின்பந் துன்பம் கொடுத்தலாலே முதன்மையெலாமறிந்தும்-அவரவர்செய்த கன்மத்துக் கீடாகச் சுகதுக்கங்களைக் கொடுக்-

கையாலே அவனது சர்வ கிருத்யமெல்லா மறிந்தோம்,—மும்பந்திரண்டு போகத்திறமதனால் வினையாறுக்குஞ் செய்தியாலே-அவரவர்க்குப் பொருந்தப்பட்ட சொர்க்க நரகங்களிலுண்டாகியவின்பதுன்பங்களைபுசிப்பித்துத் தலைப்பிக்கிறமுறைமையாலே,—சேருமனுக்கிரகமெல்லாங் காணுதும் - பொருந்தப்பட்ட சர்வானுக்கிரகமெல்லா மறிந்தோம்,— நாஞ்சிவற்கே - இங்ஙனஞ்சொல்லிவந்த முறைமைகளெல்லாம் நாம் சிவனுக்கேயுள்ளதென் றறிந்தோம், ஆகையால் சிவனே கர்த்தா.

இதனாற் சொல்லியது, சர்வஞ்ஞத்துவமும் சர்வ முதன்மையும் சர்வானுக்கிரகமும் இவை மூன்றும் அநாதியே யியல்பாக வுடையவனே கத்தாவென்றும், முன்னூலின்றியே வேதாகமங்களைத் தானே யருளிச்செய்கையாலும், அந்த நூலின்வழி வந்தோர்க்கு இன்பத்தையு மந்த நூலின்வழி வாராதவர்களுக்குத் துன்பத்தையுங் கொடுக்கையினாலும், இப்படி இன்பத்துன்பங்களைப் புசிப்பித்துக் கன்மத்தைத் தலைப்பித்து இரக்ஷிக்கையினாலும், முன்சொன்ன முறைமைகளெல்லாம் சிவனுக்கே யுண்டாயிருக்கையினால் சிவனே கத்தாவென்னு முறைமையும் அறிவித்தது.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

எவ்லாஞான மெல்லாமுதன்மையெல்லாமநுக்கிரகஞ் சிவற்கே நாங்காணுதும் - முற்றுணர் வுடைமையும் முடிவிலாற்றலுடைமையும் பேரருளுடைமையும் ஆகிய மூன்றுஞ் சிவபிரானுக்கெ உளவென்பது,—இயம்புமறைக ளாகமங்களின லறிவெல்லாந் தோற்றும்- சொல்லுகின்ற வேதாகமங்களை யருளிச்செய்த வேதுவா லெல்லாஞான முடைமை தெரியப்படும்,—மாபின்

வழிவருவோர்க்கும் வாராதோர்க்கு முறைமையினு லின்பத்து ன்பங் கொடுத்தலாலே முதன்மையெல்லாமறிதும் - வேதாகம ங்களி னெறிச் சேல்லுவோர்க்கும் செல்லாதோர்க்கும் முறை யாற் சுகதுக்க மளித்தலாகிய யேதுவா னெல்லா முதன் மைதெளியப்படும்,—முயங் கிரண்டு போகத் திறமதனால் வினை யறுக்குஞ் செய்தியாலே யநுக்கிரக மெல்லாஞ் சேரும் - அநு பவியாநின்ற சுகதுக்கமாகிய கூறுபாட்டா லதற்கேதுவாகிய விருவினைகளை நீக்குமேதுவா னெல்லா மனுக்கிரக முடைமை தெரியப்படும்.—இயல்புடையா னிறைவனுவான் - அங்ஙன மிம் மூன்றுகுண மியல்பாக வுடைய வம்முதல்வன் சனனமொன்றி லே திருக்கடைக்கண்சார்த்திஞானவாரிமடுத்து ஆனந்தம்பொ ழிதற்கும் ஜனன மொன்றிலேதானே மலங்கழுவி சீவன்முத்த ராகவைத்து ஆண்டுவரும் பிறப்பை யறுத்தற்கும் பாதமலர் க்கீழ் வைத்தற்கும் வல்லவனுவன்.

இவையிரண்டு செய்யுளானுஞ் சைவத்திறத்தடைதற் சிறப் புக் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி யான்மாக்களுக் குபகரிக்கிற சிவனது சரியை
முதலிய தொழிலைத் தொகுத் துணர்த்துகின்றார்.

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்ரமார்க்கந் தாத மார்க்கமென்றுஞ் சங்கரனையடையு, நன்மார்க்க நாலி வைதான் ஞானயோக நற்கிரியா சரியையென்று நவிற் றுவதுஞ்செய்வர், சன்மார்க்க முத்திகள்சா லோக்கிய சாமீப்பிய சாரூப்பியசாயுச்சியமென்று சதுர்விதமா,

முன்மார்க்க ஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர்
மூன்றினுக்கு முத்திபதமென்பர். (கஅ)

(இ-ள்.) சன்மார்க்கஞ்சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்க மென்றுஞ் சங்கரனை யடையு நன்மார்க்கநாலு

சன்மார்க்கமுதலிய நல்லவழிகள் சிவனை யடையு மதற்கு நான்கு முத்தரோத்தரந் தாழ்ந்த பலத்தை யுடையன. அவை யாவை யெனில்?

இவைதான் ஞானயோக நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்

அவைகளுக் கடைவே ஞானபாதம் யோகபாதம் கிரியாபாதஞ் சரியாபாதமென்று பரியாயப் பெயராகிப் பிரித்துக்கூறுவர்கள். தான் - அசை.

இங்ஙனம் கூறிய நாலுக்குப் பெறும்பல மியாதெனில்?

சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியமென்று சதுர்விதமாம்

சைவரடையு நல்லவழி சன்மார்க்க முதலிய நான்கினுக்கு எதிர் நிறைநிரையாக வவனுடன் புசிக்கப்பட்ட சாயுச்சியமு மவனைப்போல மான்மழுவுங் காளகண்டமுமாயிருக்குஞ் சாரூபமும் அவன் சமீபத்தி லிருக்குஞ் சாமீப்பியமு மவனுலகத்தி லிருக்குஞ் சாலோகமுமாக நான்குவகைப்பட்டிருக்கும்.

முன் மார்க்க ஞானத்தாலெய்து முத்தி முடிவென்பர்

முதற்கண் கூறிய சன்மார்க்கமாகிய ஞானபாதத்தின் வழியின் றனுட்டிக்கு மதனாலடையுஞ் சாயுச்சியமே பரமமான முத்தி,

மூன்றினுக்கு மற்ற மூன்றினையும் பதமுத்தியென்றாக முத்திபதமென்மம் வல்லோர் சொல்லுவார்கள். எ-று. பர்.

உம்மை - எதிரதுதழீஇய வெச்சம்.

தாதமார்க்கத்தை முதற்கூறுது சன்மார்க்கத்தைக் கூறியது தலைதடுமாற்றமென்னுந் தந்திரவுத்தியாற் கூறியதென வறிக.

இதற்குக் காமிக முத்தரோத்தர விசிட்ட பலத்துஞ் சிந்திய விசுவத்துஞ் சிவஞான சங்கிரகத்துஞ் சுப்பிரபேதத்தும மறிக (கஅ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல் முன்சொன்ன சிவதருமத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

சங்கரனை யடையு நன்மார்க்கஞ் சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கம்*தாதமார்க்க மென்றுநாலு-சுகத்தைக்கொடுக்கையிலுல் சங்கரனென்னு நாமத்தையுடைய சிவனை யுத்தேசித்துப் பண்ணுந் தருமநெறியானது சத்தியநெறியென்றும் தோழநெறியென்றும் புத்திரநெறி யென்றும் தாதநெறி யென்றும் நாலாம். இதற்குப் பரியாயநாமம்.

அவைதான் ஞானயோக நற்கிரியா சரிதையென்று நவிற்றுவதுஞ்செய்வர் சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பியசாரூப்பிய சாயுச்சியமென்று †சதுர்விதமா முன்மார்க்கஞானத்தாலெய்து முத்திமுடிவென்பர் மூன்றினுக்கு முத்திபதமென்பர் - சரிதை யநுட்டித்தவனுக்குச் சிவசாலோக்கியமும், கிரியை யனுட்டித்தவனுக்குச் சாமீப்பியமும், யோகஞ்சாதித்தவனு

க்குச் சாரூப்பியமும், ஞானசாதகனுக்குச் சாயுச்சியமும் பலம். இவையிற்றுள் முனசொன்ன ஞானசாதகனுக்குப் பரமமுத்தி, நின்றமூன்றுபேருக்கும் பதமுத்தி.

பதமுத்தியாவது, காலாந்தரத்திலே ‡ புநருற்பவ முள்ளதென வறிக.

*நாத - பிதா, †சதுர்விதம் - நாலுவிதம், ‡ புநருற்பவம்- மறுபிறப்பு.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

புறச்சமயமெனும் விருத்தத்திற் சரியா கிரியா யோகஞ்செலுத்தியபின் ஞானத்தாலென்றுசெப்பிய நா லுபாயத்தின் செய்தி சிங்கநோக்காற் செப்புகின்றார்.

ஞானயோகாதிகளுக்குச் சன்மார்க்க சகமார்க்காதிப்பேறுஞ் சாற்றப்படுமென்று பொருள்.

சன்மார்க்கச் சொருபஞ் சொல்லுவாம்.

சிவசாஸ்திர சமுற்பன்ன நிராலம்ப சிவபரோக்ஷ ஞானோப காரோப கிருதமாயும், அஃதன்றி நிராலம்ப சிவசாக்ஷாத் காரமென்றும் நிராலம்ப சிவாபரோக்ஷ ஞானமென்றுஞ் சாற்றப்படும் நிராலம்பாங்கி சிவயோகத்திற்கு அங்கசிவ யோகமாகவுமிருக்குஞ் சாத்த மனச்சங் கற்பக் கிரியையுண் மணக்கும் அபரோக்ஷம்போ லபிநயக்குறிச்சாக்ஷ பவுத்த சிவஞானச் சிறப்புப் பிரவாக லக்ஷண நிராலம்ப சிவத்தியான மூலத்தின் முளைத்த தியானத்தின் தசைவருநற்குறி நிராலம்ப சிவசமாதியே சன்மார்க்கம்.

சகமார்க்கச் சொருபஞ் சொல்லுவாம்.

சிவசாஸ்திர சமுற்பன்ன சாலம்ப சிவபரோக்ஷ ஞானோ

பகாரோபகிருதமாயு மதன்றிச் சாலம்ப சிவ சாக்ஷாத்காரமெ ன்றுஞ் சாலம்ப சிவாபரோக்ஷ ஞானமென்றுஞ் சொல்லப்படு ஞ் சாலம்பாங்கி சிவபோகத்திற் கங்கச் சிவபோகமாயுமிருக்கு ம் பிராகிருத மனச்சங்கற்பக் கிரியையுண்மனக்கு மபரோக்ஷம் போ லபிநயக் குறிப் பிராகிருத பவுத்த சிவஞானச் சிறப்புப் பி ரவாகலக்ஷண சாலம்பசிவசமாதி மூலசாலம்பசிவத்தியானமே போகமெனுஞ் சகமார்க்கம்,—

சற்புத்திர மார்க்கம் - சிவபூசாதி,—

தாதமார்க்கம் - சிவசேவாதி,—

சன்மார்க்க முத்திகள் - நல்லமார்க்க முத்திகள்-

சதுர்விதம் - நான்குவகை,—

முன்மார்க்க ஞானத்தால்-சன்மார்க்க சமாதியால்,—

முடிவென்பர் - பரமுத்தியென்பர்.

மற்றைய வெளிப்பொருள்.

சன்மார்க்க முதலிய நான்கினும் பொதுச் சிறப்பாகச் ச ன்மார்க்கத்திற் சன்மார்க்கம் சன்மார்க்கத்திற் சகமார்க்கஞ் சன்மார்க்கத்திற் புத்திரமார்க்கஞ் சனமார்க்கததிற்றுதமார்க் கம், சகமார்க்கத்திற் சன்மார்க்கஞ சகமார்க்கசதிற் சகமார்க் கஞ் சகமார்க்கத்திர் புத்திரமார்க்கஞ் சகமார்கத்திர் றுதமா ர்க்கம்,புத்திரமார்கத்திற் சன்மார்கசம் புத்திறமார்கத்திற சக மார்க்கம் புத்திரமார்கததிற் புத்திரமார்க்கம் புத்திரமார்க்கத் திற்றுதமார்க்கம்,தாதமார்கத்திற் சன்மார்க்கம் தாதமார்க்கத் திற் சகமார்க்கம்தாதமார்க்கத்திற் புத்திரமார்க்கம்தாதமார்க க்கத்திற் றுதமார்கம் என்றிப்படி சன்மார்க்கமுதலியநான்குந் த னித்தனி ஸ்ரீகண்டநாத அனந்தேசுர சதாசிவ சாலோக்கியாதி அவரவர் சமபல சாயுச்சியாந்தமுத்திகளாயுஞ் சதாசிவ தத்து

வத்துக்குமேற் சத்தி தத்துவத்தான் சிவதத்துவத்தான் தத்துவாதீதமாகிய பரசிவத்தான முத்தானங்களிலே பரசிவ சாலோக்கியாதி சர்வத்திர பரசிவ சமபல பரசிவ சாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும் நயிஷ்டிகி தீக்ஷாமுத்திகளாயுங் காலாக்கினியாதி யனுசிருதாந்த புவனபதி சாலோக்கியாதி புவனபதி சமபல புவனபதி சாயுச்சியாந்த முத்திகளாயிருக்கும் பவுதிகி தீக்ஷாமுத்திகளாயும் அனந்தவிதமா யிருக்குமெனவறிக.

## சிவஞானயோகியருரை வருமாறு.

அங்ஙனஞ் சைவத்திறத்தடைந்தார் சிவனடியைச் சேர்தற்குரிய நெறி தாதமார்க்கமுதலிய நான்குவகைப் படுதலின், அவையே சரியைமுதலிய பெயரான் வழங்கப்படும். அவற்றிற்குப் பயன் முறையே சாலோகமுதலிய அபரமுத்தியுஞ் சாயுச்சியமாகிய பரமுத்தியுமா மென்பதாம்.

சாலோக்கிய முதலியவற்றிற்குப் பொருள் வருகின்ற செய்யுட்க ளொன்கினும் ஆசிரியர் தாமே மொழிபெயர்த் துரைக்கின்றவாற்று னறிக

இதனுனே, சைவத்திறத் தடைந்தாராற் செலுத்தப்படுஞ் சரியை முதலிய நான்கும் முத்தி நெறியாதற்கட்படும் பேதமும் அவற்றின் பயனுங் கூறப்பட்டன.

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி முன்சொல்லப்பட்ட சிவனை யான்மாக்கள் சென்று பொருந்துகிற முறைமை ஒரு பிரகாரமாயிருக்குமோ பல

பிரகாரமா யிருக்குமோ வென்ற மாணுக்கனை நோக்கி நாலுபிர காரமா யிருக்குமென்று மேலருளிச்செய்கிறார்.

சன்மார்க்கஞ்சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார் க்கமென்று சங்கரனையடையு நன்மார்க்க நால்வகைதான்-சன் மாரக்கமென்றுஞ் சகமார்க்கமென்றும் நல்ல புத்திரமார்க்க மென்றும்தாதமார்க்கமென்றும்பரமேஸ்வரனை பொருந்துகிற ந ல்லவழி நாலுவகையாயிருக்கும்,—அவைதான் ஞானயோகக் கி ரியாசரிதையென்று நவிற்றுவதுஞ் செய்வர் - ஞானமென்றும் யோகமென்றும் கிரியையென்றும் சரிதையென்றுஞ் சொல்லுவ துஞ் செய்வர்கள். இதுவன்றியும் சன்மார்க்கமுத்திகள் சலோக் கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்களென்று சதுர்விதமாம்- சன்மார்க்க முதலான நாலு மார்க்கத்துக்கு முத்திகள் சொல் லுமிடத்து சாலோக்கியமென்றும் சாமீப்பியமென்றும் சாரூப்பி யமென்றும் சாயுச்சியமென்று நாலு பிரகாரமாயிருக்கும்,—மு ன்மார்க்கஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர்-முன் சொல் லப்பட்ட சன்மார்க்க ஞானத்தாலே பெறுகிற மோக்ஷத்தை யே முடிந்த முத்தியென்று பெரியோர்கள் சொல்லுவர்கள்,— மூன்றினுக்கு முத்திபதமென்பர் - நின்ற சாலோக்கிய மாதியா யுள்ள மூனறினையும் பதமுத்தியென்று பெரியோர்கள் சொல்லா நிற்பர்கள்.

இதனுற் சொல்லியது, பரமேஸ்வரனை ஆன்மாக்கள் பெ றுகிற முறைமை தாதமார்க்க முதலாக நாலுமார்க்கமாயிருக்கு மென்றும் ஞானபாதமுதலாக நாலுபாதமா யிருக்குமென்றும் சாயுச்சிய முதலாகப பேறு நாலாயிருக்கு மென்னு முறைமையு மறிவித்தது.



## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

சங்கரனை யடையு நன்மார்க்கம்-அங்ஙனம் சைவத்திறத் தடைந்தார் சிவனடியடையச்சேற்தற் குறிய நெறியாவன,—தாத மார்கஞ் சற்புத்திர மார்க்கஞ் சகமார்க்கம் சனமார்க்க மென்றுநாலு-தாசநெறி யென்று நனமையாகியபுத்திரநெறி யென்று ந்தோழநெறி யென்று நனநெறியென்று நானகு வகைப்படும்.—அவைதான் சரிகை கிரியா யோக ஞானமென நவிற்றுவது ஞ்செய்வர்-அவையே சரியை நல்லகிரியை யோக ஞானமென்ற பெயரான் வழங்கப்படும்,—சாலோக்கிய சாமீப்பிய சாரூபயிய சாயுச்சிய மென்று சன்மார்க்க முத்திகள் சதுர்விதமாம் - அவற்றிற்குபயன் முறையே சாலோக சாமீப சரூப சாயுச்சிய மென்கிற நன்னெறியாகிய முத்திகள் நான்கு வகைப்படும்,—மூன்றிறக்கு முத்திபதமென்பர் - சலோக சாமீப சாரூபமூனறற்கும் அபரமுத்திக ளாகிய பதமுத்திக ளென்பர்,—முன்மார்க்க ஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர்-சகுதகின ற ஞானவழியா னெய்துஞ் சாயுச்சிய மாகிய பரமுத்தியே முடிவாகிய முத்தியாம்.

இதனுனே சைவத்திறத் தடைந்தாரற் செலுத்தப்படுஞ் சரியை முதலிய நான்கு முத்திநெறியாதற்கட் படும் பேதமும் அவற்றின் பயனுங் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.

——•———•——

மேற் குதமார்க்க முணர்த்து கின்குர்.

தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன்கோயிற் றல மலகிட் டிலகுதிரு மெழுக்குஞ்சாத்திப், போதுகளு

ந் கொய்துபூந்தார் மாலைகண்ணி புனிதர்க்குப் பலச
மைத்தே புகழ்ந்துபாடித், தீதிமிரு விளக்கிட்டுத் தி
ருநந்தவனமுஞ் செய்துதிரு வேடங்கண் டாலடியேன்
செய்வ, தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம்பணி
யு மியற்றுவது இச் சரியைசெய்வோ ரீசனுலகிருப்பர். (கக)

(இ-ள்.) தாதமார்க்கஞ் சாற்றில் — சரியைத் தொழிலாகிய தாதமார்க்கத்தைச் சொல்லின்,

சங்கரன் றன் கோயிற் றலமலகிட்டு அலகு இரு மெழுக்குஞ் சாத்தி — நித்தியகன்மஞ் செய்து, திருக்கோபுரந் தூலலிங்க மானையால் லதனைவணங்கிப் பலிபீடமுதலாயினவை வணங்கி நந்திகேசுரனனுமதிபெற் றுள்ளேசென்று, விதிவழியுண்டாக்கிய தென் னலகாற்றுன் மவுஞ்சிப்புல்லாற்றுன் திருவலகைக் கொண் டலகிட்டு

"நேப்புமலரு முடைமமுந்தின்பதென்னு - மாத்தானுந் துய்ய
தல்ல வாகு" என்னுங் குற்றமற்ற கோமயமும் வடித்தெடுத்த
ஜலமும் வார்த்து மெழுகிப் பின்பு,

போது சஞ்சு கொய்து பூந்தார் மாலை கண்ணி புனிதர்க்குப் பலசமைத்து — தான்வைத்த மரத்தின் பூவே யுத்தமமாகலின் திருப்பள்ளித் தாமமெடுத்துச் சிவனுக்குத் தொடை நெற்றிமாலை வீசுமாலை முதலிய பணிப்பற்றிச் சூட்டுவித்து,

புகழ்ந்துபாடி — அவன் கீர்த்தியை வடமொழி தமிழ்மொழி முதலியவற்றாற் பூபாளமுதலிய விராகங்களைக் காலானு குணமாக வறிந்து தோத்திரஞ் செய்து,

தீதிறிருவிளக்கிட்டு — கொட்டையி னுண்டாகிய தன்றிக் கபிலை முதலிய பசுவினெய்யாற் றிருவிளக்கும் பார்த்து, தீபமெனவே தூபமுங் கூறியதாயிற்று. இதனைப் பின்னற் கூறிய தென்னெனில்?

"விரும்புநல் விளக்குத்தூபம் விதியினி லிடவல்லார்க்குக், கரும்பினிற் கட்டிபோலுங் கடவூர்வீ ரட்டனாரே" இதனுட் டூபத்தைக் கூறியது பலாதிக்கத்தானும், தூபமின்றித் தீபமின்மையானுமென வறிக. "விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகு, மளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடாமருளு மாறே" எ-ம், "தீபமாலை தூபமுஞ் செறிந்த கையா" எ-ம். அறிக.

திருநந்த வனமுஞ்செய்து — கோட்டுப்பூ முதலிய நால்வகையினையு முண்டாக்கி, எனவே திருக்கோயில் மடமுதலானவுங் கூறியதாயிற்று.

திருவேடங் கண்டாலடியேன் செய்வ தியாது பணியீ ரென்று பணிந் தவர்தம் பணியுமிபற்றுவது — அதிலெழுந்தருளி யிருக்கு நைட்டிகர் முதலாயினார்க்குத் தானே வேண்டியதுஞ்செய்து வணங்கி யவரேவினதுங் கேட்டு "எவரேனுந்தாமாக விலாடத்திட்ட திருநீறு கண்டாலே" "ஆமாத்தூர்ரையா னடி யாடப் பெற்றனன் பெற்றனன் போந்து போந் திறவாமைக்கே" எனவும் "நிலைபெறுமா றெண்ணுதியே அலருதில்லே" எனவுமறிக.

இச்சரிதை செய்வோ ரீசனுலகிருப்பர். — இந்தச் சரியைத் தொழில் செய்வோர் சிவனு துலகத்தை யடைவர்கள். எ-று.

செய்வோர் - எழுவாய், இருப்பர் - பயனிலை.

இதற்குக் காமிகம் சுப்பிரபேதம் காரணுகிகாரம் சிவதன்மம் சிவஞானபோத சங்கிரக வோதசங்கிரகத்து மறிக. (கக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் * தாசோகம் † பாவிதஞான சமயிபண்ணுஞ் சரிதை யிலக்கணந் தொகுத்துக் கூறுகின்றது.

இதற்குப் பொருள் வெளி.

* தாசோகம் - நானடிமை, † பாவிதன் - பாவிக்கப்பட்டவன்.

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

தாதமார்க்க முத ஞானிகளது ஸ்வரூபம் நான்கு திருவிருத்தத்தாற் சொல்லுகின்றார்.

இது வெளிடபொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

புறத்தொழின் மாத்திரையானே உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியையெனப்படு மெனபதாம்.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன சொல்லிவந்த நாலுமார்க்கத்தில் தாதமார்க்கத்தின் முறைமை மேலருளிச்செய்கிறார்.

தாதமார்க்கஞ் சாற்றில் - பரமேஸ்வரனுக்கு அடிமைப்பட்டு அடிமைத்திறஞ் செய்கிறவர்களுடைய வழிபாட்டைச்

சொல்லில்,—சங்கரன்றன்கோயிற் றலமலகிட் டலருதிருமெழு
க்குஞ்சாத்தி - சிவலிங்கப்பெருமா னாயனார் எழுந்தருளியிருக்
கிற திருக்கோயிலுக்குத் திருவலகுமிட்டு விளங்கத் திருமெழுக்
குஞ்சாத்தி,—போதுகளுங்கொய்து பூந்தார்மாலைகண்ணி புனை
தற்குப் பலசமைத்து- திருப்பள்ளித் தாமங்களுமெடுத்து பொ
லிவினை யுடையதாகிய தொடையல் மாலைகோவை கண்ணி தம்
பிரானார்க்குச் சாற்றுகிறபடிக் கிடாகப் பலவாகப் பத்திப
ணி,—புகழ்ந்துபாடி-அவனுடைய கீர்த்திகளையுஞ்சொல்லி வா
ழ்த்தி,—தீதி றிருவிளக்கிட்டு - குற்றமற்ற திருவிளக்குகளு
மிட்டு,—திருநந்தவனமுஞ்செய்து - நன்றாகத் திருநந்தவனங்க
ளும் வைத்து,—திருவேடங்கண்டா லடியேன்செய்வ தியாது
பணியென்று பணிந் தவர்தம்பணியுமியற்றுவது - சிவனுடை
ய வடியாராகிய திருவேடத்தாரைக் கண்டால் அடியேன் செ
ய்யத்தக்க பணிவிடை யாதென்று தண்டன்பண்ணி யருளிச்
செய்ய வேணுமென்றுகேட்டு அவர்களருளிச்செய்த பணிவிடை
யுஞ்செய்து முடிப்பது.—இச்சரிதை செய்வோ ரீசனுலகிருப்பர்-
இந்தச் சரிதைத்தொழிலைச் சாத்திரஞ்சொன்ன முறைமையி
லே செய்து முடித்தவர்கள் சிவலோகத்திலே யிருப்பார்கள்.

இதனாற் சொல்லியது தாதமார்க்கத்துக்குச் சொல்லப்ப
ட்ட திருவலகிடுகிறது முதற் சிவனடியாரை வழிபடுகிறது யீறா
கச் சொல்லப்பட்ட திருத்தொழில்களை இந்த முறைமையிலே
செய்தவர்கள் சாலோக்கியத்தைப் பெறுவர்களென்னு முறை
மையை யறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தாசமார்க்கஞ் சாற்றில் - தாதநெறியைச் சொல்லுமிடத்
து,—சங்கரன் றன்கோயிற்றல மலகிட்டு-சிவபிரா னெழுந்தரு

ளியிருக்கின்ற திருக்கோயினுட் டிருவலகிட்டும்,—இலகு திருமெழுக்குஞ் சாத்தி - விளங்குகின்ற திருமெழுக்கிட்டும்,—போதுகளுங்கொய்து- திருப்பள்ளித்தாமங்களெடுத்தும்,—பூத்தார்மாலைகண்ணிப்புனிதற்குப் பலசமைத்து- பொலிவினையுடைத்தாகியமாலை யிண்டைமுதலிய கண்ணிகளுஞ் சிவபிரான் றிருமேனியிற்பொலிவுறும் வண்ணம் பலவாகவமைத்தும்,—புகழ்ந்துபாடி-முதல்வனுடைய புகழ்தற்கரிய மேலாகிய சீர்த்தியினை வாயாற வாழ்த்தியுர்,—தீதிறிருவிளககிட்டு - குற்றமற்ற பிரகாசம் பொருந்திய விளக்குகளிட்டு,—திருநந்தவனமுஞ் செய்து-அழகிய நந்தவனங்கள் வைத்தும்,—திருவேடங்கண்டா லடியேன் செய்வதியாதுபணியீரென்று பணிந்து-சிவனடியாராகிய திருவேடத்தாரைக் கண்டா லடியேனாற் செய்யத்தக்கபணி யாதென் றருளவேண்டுமென்று வணங்கி,—அவர்தம் பணியு மியற்றுவது- அவரருளிச் செய்யும் பணிவிடையும் செய்வதாம்.—இச்சரியை செய்வோ ரீசனுலகிருப்போர் - இச்சரியைத் தொழிலினை யநுட்டித்தோர் சாலோகமாகிய பதமுத்தியைப் பெறுவர் என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



*மேற்புத்திரமார்க்க முணர்த்துகின்றார்.*

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப்போது புகையொளிமஞ் சனமமுது முதல்கொண்டைந்து, சுத்தி செய்தா சனமூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும் பாவித்தா வாகித்துச்சுத்த, பத்தியினா லர்ச்சித்துப் பரவிப்போற்றிப் பரிவினொடு மெரியில்வரு காரியமு

ம்பண்ணி, நித்தலுமிக் கிரியையினை யியற்றுவோர்க
ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங்காலே. (உ0)

(இ-ள்.) புத்திர மார்க்கம்புகலின் — கிரியாபாதமாகிய புத்திர மார்க்கத்தின் பகுதியைச் சொல்லின்.

புதிய விரைப்போதுபுகையொளிமஞ்சன மமுதுமுதல் கொண்டு — பழம் பூவின்றி மணம்பொருந்திய மலர் முதலானது கொண்டு

ஐந்து சுத்தி செய்து — பூதசுத்தி முதலிய பஞ்ச சுத்தியினையுஞ் செய்து.

ஆசன மூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும்பாவித்தாவாகித்து — ஆதாரசத்தி யாதி சத்திபரியந்தமாக ஆசனம் பூசித்தன்மேல் வித்தியா தேகமாகிற மூர்த்தியை கற்பித்து அந்தமூர்த்திக் கதிட்டாதாவா யிருக்கிற சோதிரூபத்தைத் தியானித் தாவாகித்து

சுத்த பத்தியினாலர்ச்சித்து — சுத்த பத்தியினா லேகாக்கிரமான மனதை யுடைத்தா யிருந்து முன்னற் கூறிய கன்மங்களையு மேற்செய்யுஞ் சேடித்த வுபசாரங்களையுஞ் செய்துமுடித்து.

பரவி — சுவாமீ! தேவரீர் யான்செய்யுங் கிரியையிந்தச் சிவலிங்கத்திலே யெழுந்தருளி யிருந்து கைக்கொள்ள வேணுமென்று வேண்டிக் கொண்டு,

போற்றி — தோத்திரஞ் செய்து

பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி — வைதிகப் சைவம் வைதிகசைவமாகிய மூவிதத் தருகமான வக்கினி காரியத்தை விருப்பத்துடனே செய்து.

நித்தலு மிக்கி ரியையினை யியற் றுவோர்க ளின் மலென்றன் னருகி ருப்பர் நிலையுங் காணே.

இந்தக் கிரியை நாடோறு முட்டாமலியற் றினோர்க ளிருக்குமிடம் விசாரிக்கில் சிவன து சமீபத்திலே யிருப்பர்கள் எ-று.

இயற்றுவோர் - எழுவாய், இருப்பர் - பயனிலை,

"நிறைமலி காமன் செருடுமுகை நறுமலர், புகைமிகு வளரொ ளி நிறைபுனல் கொடுதனை, நினைவொடு நிதமும் வழிபடு மடிய வர், குறைவில் பதமனை தரவருள் குணமுடை யிறையே" எனவும் "முட்டாதே நாடோறு நீர்மூழ்கிப் பூப்பறித்து மூன்றுபோதுங், கட்டார்ந்த வின்னடை கொண் டடிசேர்த்து மந்தண்" எனவும். "மணம் பொருந்திக் கைவிட நான்கடவேனோ" எனவு மறிக.

இதற்குக் காமிகம் அஞ்சுமான் ஞானரத்திநுவலி இவை களி லறிக. (உ0)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் புத்திரகன் பண்ணுங் கிரியாலக்ஷணந் தொகுத்துரை க்கின்றது.

இதற்குப் பொருள் வெளி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.



விரைப்போது - மணம் பொருந்திய புஷ்பம்,—புகை ஒளி - தூபதீபம்,—ஐந்து சுத்தி - ஆன்ம ஸ்தான திரவிய மந்திர லிங்க சுத்தி,—ஆசனம் - சக்தி யாதிசக்திபரியந்த பத்மரூப விந்து,—

மூர்த்தி - விந்து மத்தியத்தெழுந்து கண்டா சிருதியாய்த் திரும்ப வித்தியா தேக ரூப வியாபகமாயிருக்கும் நாதம்,—மூர்த்திமானுஞ் சோதி - வித்தியா தேகத்துக்குச் சீவனும் பர சிவ தேஜஸ—.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

புறத்தொழி லகத்தொழிலென்னு மிரண்டானும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியையெனப்படுமென்பதாம்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் புத்திரமார்க்க மருளிச் செய்கிறார்.

புத்திர மார்க்கம் புகலில் - பரமேசுரனுக்கு உபதேசத்தினாலே புத்திரரா யுள்ளவர்கள் செய்யுங் கிரமத்தைச் சொல்லில்,—புதிய விரைப்போது - நவமாயிருக்கப்படாநின்ற திருமெய்ப்பூச்சுமுதலான பலசுகந்தத் திரவியங்களும் திருப்பள்ளித் தாமமும்,—புகையொளி மஞ்சன மமுதுமுதல் கொண்டு—தூபதீபம் திருமஞ்சனம் அமுது முதலானவை யெல்லாம் நன்குகவரத் தேடி வைத்துக் கொண்டு,— ஐந்துசுத்தி செய்து-பூதசுத்தி ஆன்மசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி லிங்கசுத்தியென்றுசொல்லப்பட்ட அஞ்சி சுத்திகளையும் பண்ணி,—ஆதனமூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும் பாவித் தாவாகித்து-ஆதன மூர்த்தியும் மூலமாக சாதித்து அந்தமூர்த்தி மானுன சோதியை

தியானிக்கும்படி பிரமாமுதல் சதாசிவ மீறாகத் துவாதசாந் தத்திலே கூடிக் கோடி சந்திரப் பிரகாசம் போலே பாவித்து இ இந்தப்பொருளைச் சிவலிங்கப் பெருமானிடத்திலே ஆவாகனம் பண்ணி,—சுத்தபத்தியினாலர்ச்சித்து-அழுக்கற்று நின்மலமாயி ருக்கிற அன்புடனேகூடியிருந்து அர்ச்சித்து,— பரவிப்போற் றி-புகழ்ந்து தோத்திரங்களுஞ் செய்து,—பரிவினொடு எரியில் வருகாரியமும் பண்ணி - விருப்பத்துடனே அக்கினிகாரியமுஞ் செய்து,—நித்தலுமிக் கிரிகையினை யியற்றுவோர்கள் - நாள் தோறுஞ் சாத்திரஞ் சொன்ன முறைமையிலே இப்படி சிவனை யர்ச்சிக்கிறவர்கள்,— நின்மலன் றனருகிருப்பர் நிலையுங்காலே- மலரகிதனாயிருக்கிற சிவனுடைய சமீபத்திலே யிருப்பர்கள் வி சாரித்துப் பார்க்குமிடத்து.

இதனாற் சொல்லியது புத்திர மார்க்கத்துக்குச் சொல்ல ப்பட்ட புதியவிரை போதுமுதல் அக்கினிகாரிய மீறாக நாள் தோறு மிந்தமுறைமையிலே செய்து முடித்தவர்கள் சாமீப்பி யத்தைப் பெற்றிருப்பார்களென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

புத்திரமார்க்கம் புகலின் - புத்திரநெறியைச் சொல்லுமி டத்து,—புதியவிரைப்போது புகைபொளி மஞ்சனமமுது முத ல்கொண்டு-புதிதாகிய வாசனை பொருந்திய போதுகளுந் தூபதீ ப திருமஞ்சன மமுதுமுதலியனவெல்லாந் தேடிவைத்துக்கொ ண்டு,—ஐந்துசுத்திசெய்து ஆசனமூர்த்தி மூர்த்திமானும் - ஐவ கைச் சுத்திகளையும்பண்ணி யாசனமூர்த்தி மூலங்களாலே மூர் த்திமானாகிய சிவத்தை,—சோதியையும் பாவித்தாவாகித்து- சோதியுருவாகப்பாவித்து ஆவாகனம்பண்ணி,— சுத்தபத்தியி

னாலர்ச்சித்து-நிருமலமாகிய மெய்யன்பினாலர்ச்சனை செய்து,—பரிவினொடும் பரவிப்போற்றி- விருப்பத்தோடுதுதித்து வழிபாடியற்றி,—நித்தலு மெரியில்வரு காரியமும்பண்ணி-நித்தியாக்கினி காரியமும்பண்ணி,—நினையுங்கால்கிரியையினை யியற்றுவோர்கள்,—நினையுமிடத்துக் கிரியையினை யநுட்டித்தோர்,— நிருமலன்றனருகிப்பர் - சாமீபமாகிய பதமுத்தி பெறுவர் என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற்சகமார்க்க முணர்த்துகின்றார்.

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டு
ஞ் சலிப்பற்று முச்சதுர முதலாதாரங்க, ளகமார்க்க ம
றிந்தவற்றி னரும்பொருள்களுணர்ந்தங் கணைந்துபோ
ய் மேலேறி யலர்மதிமண்டலத்தின், முகமார்க்க வ
முதுடல முட்டத்தேக்கி முழுச்சோதி நினைந்திருத்த
ன் முதலாகவினைக, ளுகமார்க்க வட்டாங்க யோகமு
ற்று முழத்தலுமந் தவர்சிவன்ற னுருவத்தைப்பெ
றுவர். (௨௧)

(இ-ள்) சகமார்க்கம் — போகபாதமாகிய சகமார்க்கமாவது,

புலனொடுக்கி — பதும முதலிய வாசனங்களி லொன்றிலிருந்து புலன்வழி செல்லாதபடி யாமையான தவயவங்களை யுள்ளே யடக்குமாறுபோல வடக்கி, இஃதாசனம்.

தடுத்துவளியிரண்டுஞ் சலிப்பற்று — ரேசகபூரகங்களில் வாயுச்சலிக்குமதனைத் தடுத்துக் கும்பித்திருந்து பிராணவாயுவைச் சுழுனையிலே நிறுத்தி, இதுபிராணாயாமம்.

**முச்சதுர முதலாதாரங்களக மார்க்க மறிந்து** தனது சரீரத்தினுள்ளே முக்கோணமுக தலிய வாறு தாரங்களின தாகிருதியையு மஃதிருக்குந் தானங்களையும் வடிவுமுதலிய வற்றை யதுவதுவாக வறிந்து,

**அவற்றினரும் பொருள்களுணர்ந்து** மூலாதார முதலிய வாதாரங்க டோறு மிருக்கும் பதுமதளங்களையு மவைகளி லிருக்கு மதிதேவதைகளையு மவைகளி லிருக்கு மக்கரங்களையு மறிந்து தியானித்து.

**அங்கணைந்து போய் மேலேறி யலர்மதி மண்டலத்தின் முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி** மூலாதாரத்தி லிருக்கு மக்கினிமண்டலத்தி னக்கினியைச் சொலிப்பித்து, அந்தச் சந்திரமண்டலமாகிய நாபித்தானத்தி லிருக்குங் குண்டலினி சத்திச்சொரூபிணி யாயிருக்கிற வமிர்தத்தை யுருகப் பண்ணி, மற்றவாதாரங்க ளனைத்து மதோமுகமான பதுமங்களினது கிரந்திகளை யடைவே யதனைக் கொண்டு பேதித்து, மேலேசென்று விந்துத் தானத்தின் வழியேயிறங்கிப் பெருகாநின்ற வமிர்த தாராப்பிரவாகத்தைத தனதுடலமுழுது நிறைந்தவாறே யிவனுக்கு மந்திரபீசாக்கர முச்சரிக்கிற தெல்லாம் விளங்கா நிற்கும்.

**முழுச்சோதி நினைந்திருத்தல்** தான் முன் தியானம் பண்ணப்படுமது, பொருளி னிடத்திலே யடிக்கிற காற்றுன தெப்படிசலியாமல் வியாபித்திருக்கும், அதுபோலப் பரிபூரணமான பிரகாசாந்தத்திலே யழுந்தி யிருத்தல் சமாதி. இதனாற் பயன் யாதெனில்?

**முதலாகவினைகளுக** இம்மைக்கண் கன்மமுதலிய பாசங்களினது வலிகெட்டுப் போம்படியு மறுமைக்கண் முத்தியடைகையின் பொருட்டும்

மார்க்க வட்ட சகமார்க்கமாகிய யோகபாதத் தட்டாடாங்க யோகமுங்க போகத்தை யியமநியம முதலாக நாற்று முழுத்த லு டோறும் வருந்திச் சாதித்தவர்கள், முந்தவர்

சிவன்ற னுருவ சிவனது திருமேனியைப் போலத் தாங்கத்தைப்பெறுவர். ஞா'ம் வடிவை யெடுத்துக்கொண்டவன் சமீபத்திலே யிருப்பர்கள் எ-று.

சகமார்க்கத்தைத் தலைக்குறைத்து மார்க்க வட்டாங்கமென்றுர் "இயமநியம மிணங்காசனம்யாம, மயர்வில் பிரத்யாகாரமாகு—முயலுங்காற், றாணை யோடு தியானஞ் சமாதிபு மென், றோிருநான்குமே யோகு" எனவறிக.

இது பொழிப்பு.

மேலகலம்.

மூலாதாரமாவது:—குதத்துக் கிரண்டங்குலத்துக்கு மேலிலிங்கத்துக்கு இரண்டங்குலத்துக்குக் கீழெனவறிக.

இதற்குவடிவு முக்கோண மாயிருக்கும். செந்தாமரை யிதழ்க ணன்கு.

இவைகளி நிற்கு மக்கரங்க ளாவன வ ஶ ஷ ஸ எனநான்கு.

இவ்விதழ்களுக் கதிதேவதைக ளாவன? விநாயகன் வைரவன் க்ஷேத்ரபாலன் சண்டன் எனநால்வர்.

சுவாதிஷ்டான மாவது:—இதற்குத் தான மிலிங்மூலம்.

இதர்குவடிவு அறுகோணம். அநேக காந்தியினை யுடைய வாறிதழ்த் தாமரை.

இதினிற்கு மக்கரங்கள் ப ஹ ம ய ர ல

ஆறிதழ்களி னிற்கு மதிதேவதைக ளாவன? பிரதிட்டை சுத்தவிரினி பாவனை இருடி பத்மனி பத்மயோகி என்றறுவர்.

மேல் மணிபூரகம்:—இதற்குத் தான நாபி.

இதற்குப் பத்ம தளங்களாவன? செந்தாமரை தளங்களிர ண்டு. இவைகளி லிருக்கு மக்கரங்கள் ஹ க்ஷ எனவிரண்டு.

இதற் சத்திதேவதைகளாவன? சுந்தரி யாநந்தி எனவிருவர்.

இவைக ளெல்லாத்தையு மாதனமாகப் பண்ணிக்கொண் டதற்கு மேலாகிய பிரம்மரந்திரத்தி லாயிரந் தளத்துடன் கூ டின பதுமத்தின்மேற் பரமசிவ னெழுந்தருளி யிருப்பார்.

இது பெரும்பான்மையாதலின், சிறிதாகமங்களிற் சிறுபா ன்மையாக நவாதாரத்தின் முறையைக்கூறிற் பெருகுமாயினுஞ் சிறிதுகூறுதும்.

மூலாதாரமுதல் விசுத்தியீருக முன்புபோல்.

இதற்குமேற்கிரியாசத்தி ஞானசத்தி யிச்சாசத்தி இம்மூ ன்று மூன்று மண்டலம். அம்மூன்றொவ்வொன்றுக்குப் பதினாறுத் ளமு மதி லகாரமுதலிய வெழுத்துப் பதினாறும்.

விந்து நாதங்களுடன்கூடி மேற்பிரம்மரந்திரம். இதிற் ப த்மதள முன்னூற் றறுபதுடன் கூடியகமலம் பராசத்தி மய மாயிருக்கும். அதிற் பரமசிவனைப் பாவிக்கின் முத்தி யடைவர் களெனவறிக.

இதற்குச் சுப்பிரபேத மகுட சிந்திய விஸ்வத்து மறிக (உக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—— 0 ——

சன்மார்க்கம் - சோமநெறியாவது,—தடுத்து வளியிரண்டு ம் - உச்சுவாச நிசுவாச மிரண்டையு மடக்கிச் சுழுமுனை மார்க்க த்திலே பிராணவாயுவை நிறுத்தி,—புலனொடுக்கி - விஷயங்க ளின்வழி மனதைப் போகவொட்டாமற் றிருப்பி,— சலிப்பற் று - அந்த மனோவியாபாரமு மன்றி லட்சியத்திலே நிறுத்தி,— முச்சதுர முதலாதாரங்க ளசுமார்க்க மறிந்து - திரிகோண

மாயிருக்கிற மூலாதார முதலான வாறுதாரத்திலுந் தர்மார்த்தகாமத்தை யறிந்து அந்தந் தாதாரங்களின் றேவதைகளைத் தியானித்து,—அவற்றி னரும்பொருள்க ளுணர்ந்து - அந்தவாறுதாரங்களிலுஞ் அசபை சத்தி சிவாத்மகமாக நிற்கும் முறைமையைப்பார்த்து,—அங்கணைந்துபோய் மேலேறி - மூலாதாரந்துவக்கி விநாயகன் முதலாயுள்ள தேவதைகளைப் பொருந்தி யபிமுகம் பண்ணிக்கொண் டாறுதாரத்துக்கு மேலாகிய பிரமரந்தர மளவும் அசபையுடனே சென்று,—அலர் மதிமண்டலத்தின் முகமார்க்க வமுதடல முட்டத்தேக்கி - பிரமரந்தரத்தி னதோமுகமாய்ச் சகஸ்ரதளமாய் வாழைப்பூப்போலே யிருக்கிற தாமரை முகையை ஜ்யோதிர் ஜ்யோதி பதோச்சாரணத்தா லுதிக்கப்பட்ட * சிவார்க்கனாலே யலரச்செய் தந்தத் தாமரைப்பூவின் † கேசராக்கிரத்திலே யுள்ள சந்திர மண்டலத்தை ‡ அருஞ் சனத்தினாலே மூலாக்கினியை வன்னி பீஜோச்சாரணத்தினாலே யெழுப்பி நாடிசக்கிரத்தைப் பேதித்து அந்த அக்கினியினாலே சந்திரமண்டலத்தை யிளகப்பண்ணி அந்த வமிர்தத்தைச் சர்வநாடி முகவழித்தாய் நிரப்பி யவ்விடத்திலுண்டாகிய சுகோதயத்திலே தன்மயாவத்தையை யடைந்து நின்று இவையேழும் பிரத்தியங்கமாக,—முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக-முன்சொன்ன சோமசூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய § கண்டஜ்யோதிசுக்க ளெல்லாம் சூரியோதயத்திலே நக்ஷத்ராதி பிரகாசங்க ளடங்கினாற்போலத் தன்னிடத்தடங்க சர்வதோமுகமாய் ஸ்வபரப்பிரகாசமாயிருக்கிற பூரணப்பிரகாசத்தைப் பாவிப்பது பிரதானாங்கமாக. இவ்வாறு,—வினைசனாக வட்டாங்க யோகமார்க்கமுற்று முழுத்தலுழன்றவர் சிவனற னுருவத்தைப் பெறுவர்-சஞ்சிதாகாமிய கன்மங்களெல்லாம் நசிக்கும்படிக்குச் சொல்லிப்போந்த வட்டாங்க யோக

த்தை யெல்லா ¶ முத் யோகத்துடனே பிரயாசைப்பட்டுச் சாதித்தபேர் சிரீகண்ட பரமேஶ்வரனுடைய சாரூப்பியத்தைப் பெறுவர்.

* சிவஅர்க்கன் - சிவசூரியன், † கேசரம்- தாது, ‡ ஆகுஞ்சனம் -சுருக்குதல், பிரத்திபங்கம்- அங்கங்தோறும், § கண்டஜ்யோதிசு-ப்ரத்யேகமான ப்ரகாசம், ¶ உதயோகம் - முயற்சி.

தடுத்து வளியிரண்டு மென்றது பிராணாயாமம்.

புலனொடுக்கி யென்றது பிரத்யாகாரம்.

சலிப்பற் றென்றது தாரணை.

மூச்சுதார முதலாதாரங்க ளகமார்க்க மறிந் தென்றது தியானம்.

அவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தென்றது வீக்ஷணம்.
அங்கணைந்துபோய் மேலேறி யென்றது ஜபம்.

அலர்மதி மண்டலத்தின் முகமார்க்க வமுதுடல முட்டத்தேக்கி யென்றது சமாதி.

முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாகவென்றது பிரதானாங்கமாகிய யோகம்.

தத்ர க்ரம꞉ — ப்ராணாயாம꞉ ப்ரத்யாஹாரோ தாரணா த்யான வீக்ஷணே । ஜபஸ் ஸமாதிரித்யேவம் ஸப்தாங்கோ யோக ஈரித꞉ ॥

இதற்குப் பூர்வாங்கம்-இயமநியம ஆசன மென்று மூன்று.
இவைகளில்லாதிருக்கில் யோகங் கூடாதாகையால் மூல விருத்தத்திற் கூறுதிருக்கவும கூட்டிப் பொருளுரைக்க வேண்டும்,

இவையிற்றில் இயமமாவது × அஹிம்சை சத்யம் + அஸ்

தேயம் ப்ரம்மசரியம் தயை வஞ்சனையற்றிருக்கை பொறுமை தைரியம் அல்பாசாரம் ÷ சுசித்வம் எனப்பத்துவகை.

× அஹிம்சை-கொல்லாமை, + அஸ்தேயம் - திருடாமை ÷ சுசித்வம் - சுத்தி.

ததாஹு: — [illegible]

தயாபஶ: — ெவெஜொெக்ஷந ப்ரகாெரண க்ருஹ்ர
சாம்த்ராயணாதிபி: | ஶரீரெஶாஷணம் க்ருத்வா ஜ
த்ரா-ந்த்ருெத பை-ரெமெய: || ெஸாஹம் ஜ-க்தி: கய்ம
ெகநஸம்ஸாரம் ப்ரதிபந்வாது | ஐத்ராெமாக்ஷநஜ
யத்ருஜாஸ்த்ஜம் ஸம்திபம்பிதா: || யதூர்த்வாஹாஹெதா
நித்ரம்ஶ்ரீதிஷ்ட்ராஜாயெத நரணாழ | தஸ் ஸெஶா
ஷம்விஜ-:ப்ராஜ்ஞாபரிஜ்ஞாெநகதஸ்பரா: || ஶ்ரம்
ஹாதிெமாகபயுங்க விரக்தஸ்ரபராதி | ப்ரயம்
யத்ம் ஜஹாப்ராஜ்ஞாஸ்ெஶாஷம் பரஜம் விஜ-: || ஶ்ரள
ெதஸாெதச்வஶாெஸா யஸ்தாஸ்க்ரஜ-ச்ருெத
நராயாஜித யநபாஞம்ஶ்ரஜயா ெவெஷெகஷிு
ெஜ: || சநத்ரா யஸ்ப் தீெயத தஷாநம்ெப்ராசு
ெதஜயா | சமெவகிகாய விப்ராயதூதம் யநிப
ஜவ || ெநாபகாராய தத்ஸஸ்ஸநீவா ஹதம்
ஜவி: | ஶ்ராம்ஹணம் விஷ்ணந்ஶாநம் ெவஶ்ரக்ஷ்ரி
யபாநெவ: || யதாஶக்த்ருநா ஹக்த்ரா யத்தீஶர
பஜநழ | ராமாதூெவதம்ஹரூயம் பாமதூஷா
நரதாகிநாழ || ஹிம்ஸாகிரஹிதம் காய வதெசவர
ரபஜநழ | ஸத்ரஜ்ஞாநஜநஞ்ஞு பராநதம் யர
வம்பரழ || ப்ரத்ரிதரவமதரஞ்ம் ெவஹாஞ ஶ்ரவ
ணம்ைப-யா: | ஶிஜாஞஶ்ரவணம் ப்ராஹ-சி-ஜாநா

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

புலனொடுக்கி - பிராணாயாமப் பிரத்தியாகாரங்களினா லிந்திரியங்களை நிறுத்தி,—தடுத்து வளியிரண்டும்-பிராணனை இடை—

பிங்கலைகளினியக்கம் மடக்கி,—மூச்சதார முதலாதார மகமார்க்கம் - சுழுமுனை நாடிவழி பொருந்திய பிரமாதி தேவதை முதலியன,—அலர்மதி மண்டலம் - புருவமத்தியம்,—முழுச் சோதி நினைந்திருத்தல்-அந்தப் புருவமத்திய பதுமத்தில் விந்து நாதரூபமாயிருக்குந் தேஜோலிங்க சகளநிஷ்கள சிவத்தை, இருதயத்திற் சதாசிவ முதலிய சகள சிவத்தைத் தான் தியானித்துச் சமாதித்தல்,—முதலாக - சங்காரக்கிரமத் தாதியாகச் சிருஷ்டிக்கிரமத் தந்தமாக,—அஷ்டாங்க யோகம் - இயமநியம ஆசனப்பிராணாயாமப் பிரத்தியகார தாரணை தியான சமாதி யென்னு மெட்டங்கமுடைய சகள சகளாகள சிவ சாக்ஷாத்கார ரூப அங்கிசிவ யோகத்தை,—முற்றும் - அங்கவீன மின்றி,—உழத்தலுழந்தவர் - அந்த வட்டாங்கங்களினாற் சாதித்தலைப் பண்ணினவர்.

மற்றைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருணை வருமாறு.

—o—

அசத்தொழின் மாத்திரையானே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு யோகமெனப் படுமென்பதாம்.

சகமார்க்க முழத்தலென வினைமுடிக்க.

இவ்வியோக முழந்தவரென எடுத்துக்கொண்டுரைக்க.

---

## நிரம்பவழகியருணை வருமாறு.

—o—

மேல் சகமார்க்க மருளிச்செய்கிறார்.

சகமார்க்கம் புலனொடுக்கி - சகமார்க்கமென்று சொல்லப்பட்டது ஐம்புலன்களையும் விஷய வியாபாரத்திற் செல்லாமலடக்கி,—தடுத்து வளியிரண்டுஞ் சலிப்பற்று - பிராணயாமத்தினாலே உஸ்வாச நிஸ்வாசங்களிரண்டும் தடுத்து சத்துஞ் சலனமற்று,—மூச்சதுர முதலாதாரங்க ளகமார்க்கமறிந்து - மூன்றுசதுரமான மூலாதாரமுதலான ஆறு ஆதாரங்களுக் குண்டான வழிகளையறிந்து,—அவற்றி னரும்பொருள்க ளுணர்ந் தங்களைந்துபோய்மேலேறி - அவையிற்றினுடைய வழிதான அந்த வத்தங்களையு மறிந்து அவ்விடங்களிலே பொருந்தி அந்த ஆதாரங்களுக்கு மேலேசென்று,—அலர்மதிமண்டலத்தின் முகமார்க்கவமுதுடல முட்டத்தேக்கி- விரிந்த சந்திரமண்டல முகத்தின்வழியி னுண்டான வமுதத்தைத் தன்னுடைய தேகமுழுதும் நிரம்பத்தேக்கி,—முழுச்சோதி நினைந்திருத்தல்முதலாக வினைகளுகமார்க்க - எல்லாப் பிரகாசமுங் கூடிநிறைந்த பிரகாசத்தைப் பொருளாகத் தியானித்திருப்பது இவனுடைய கன்மங்களெல்லாம் சமமாகத் தக்கவழிக் கேதுவாம், இதுவன்றியும்,—அட்டாங்க யோகமுற்று முளைத்தெழுந்தவர்- இயமநியம ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகார தாரண த்யாந சமாதி என்னு மட்டாங்கயோகந் தொடங்கி மற்றுள்ள யோகங்களெல்லாஞ் சாதிக்கிற விது யோகமாம். இப்படிச் சாதித்தவர்கள்,—சிவன்றனுருவத்தைப் பெறுவர்- பரமேஸ்வரனை யொத்த சாரூபமான திருமேனியைப் பெறுவர்கள்.

இதனாற் சொல்லியது, சகமார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட புலன்களை யொடுக்குகிறதுமுதல் அஷ்டாங்கயோக மீறாக இந்த முறைமையிலே செய்து முடித்தவர்கள் சாரூபியத்தைப் பெறுவர்கள் என்னு முறைமையை யறிவித்தது.

—

## சுப்ரம்மண்யதேசிகருரை வருமாறு.

———o———

சகமார்க்க முழந்தல் - தோழ நெறியைச் சொல்லுமிடத்து,— புலனொடுக்கி - விடயங்களிற் செல்லுமைம்பொறிகளையு மடக்கி,—வளியிரண்டுந் தடுத்து - உச்சுவாச நிசுவாசமாகிய வாய்விரணைடினையுந் தம்பித்து,—சலிப்பற்று- சுழுமுனை மார்க்கத்திலே மனோவியாபார மின்றிச் சலனமற்று,— முச்சதுர முதலாதாரங்களகமார்க்க மறிந்து-திரிகோணமுதலிய மூலாதாரமுதலான வாறுதாரத்தினு மந்திரக்கிரமத்தை யறிந்து,—அவற்றி னருட்பொருள்க ளுணர்ந்து - அந்த வாதாரங்களின் றேவதைகளை தியானித்து அவ் வாறுதாரங்களினு மசபை சிவசொரூபமாய் நிற்கு முறைமை யுணர்ந்து,—அங்கணைந்து போய் மேலேறி - மூலாதாரந் தொடங்கி விநாயகர் முதலாயுள்ள தேவதைகளைப் பொருந்தி பிரமரந்திர மளவும் சபையுடனே சென்று,— அலர்மதி மண்டலத்தின் முகமார்க்கம்-விரிந்தசந்திரமண்டல முகத்திடை யுண்டாகிய,— அமுதுடல் முட்டத் தேக்கி - அமுதத்தை தனனுடைய தேகமுழுமை நிறப்பத்தேக்கி,—முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக-எல்லாப் பிரகாசமுங்கூடினிறைந்த சோதி சொருபமாகத் தியானித்தன் முதலிய வற்றான்,—வினைசளுக மார்க்க வட்டாங்க யோகமுற்று முழந்தவர்-வினைகள் கெடுதற்கு வழிபாகிய வியம நியமமுதலிய வட்டாங்க யோகத்தை யனுட்டித்தோர்,—சிவன்ற னுருவத்தைப் பெறுவர் - சாருபமாகிய பதமுத்தியைப் பெறுவர்.

---

## மறைஞானதேசிகர் உரை

சன்மார்க்கமாகிய ஞானபாத முணர்த்து கின்றார்.

சன்மார்க்கஞ் சகலகலை புராணவேத சாத்திரங்கள் சமயங்க டாம்பலவுமுணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாகமேலாம் பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக்காட்டு, நன்மார்க்க ஞானத்தை நாடிஞான ஞேயமொடு ஞாதுருவு நாடாவண்ணம், பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றிஞானப் பெருமையுடை யோர் சிவனைப் பெறுவர்காணே. (உஉ)

(இ-ள்.) சன்மார்க்கம் — சிவனையடைதற்கு நல்லவழி யாதெனில்

சகலகலை புராணவேத சாத்திரங்கள் சமயங்கடாம் — அறுபத்துநாலு கலைக்கியானம் நாலுவேதம் பதினெண் புராணம் வேதத்துசகுப் புறம்பாயுள்ள லோகாயதம் பௌத்தம் ஆருகத மிந்தச் சாத்திரங்கள் வேதவழி யாகிய தர்க்கம் வேதாந்தம் பிரபாகரம் பாட்டம் வைசேடிகம் சாங்கிய மெனக் கூறிய சமய சாத்திரங்களாறு. சாத்திர மெனபதனை யிருபாலுங் கூட்டிப் பொருளுரைக்க.

வேதாகமத்தின வழியின் றனுட்டித்த வானமாக்களுக்குச் சுகத்தைக் கொடுக்கையாலும் ஜனன மரணங்களிற் றுயக்குறு தெடுத்து விடுகையாலுஞ் சாத்திரமெனப் பெயராயிற்று, இதுவடமொழி.

பலவும் — "அறம்பொரு ளின்பம்வீ டென்னு மிவற்றைத், திறம்பெற வேதாகமங்கள் செப்பும்—அறைந் தவற்றுள், வீட்டினை விடல்லா வினைதனையும் விளங்கக், காட்டுமது சாத்திரமேகாண்" "மருந்தினை வித்தைப் பணியினை மாற்றத், திருந்தவே செய்யுந் திறமு — மருந்தினொடு, மந்திரமுஞ் சொல்லி விடத்தினையு மாற்றிவிக்கும், தந்திரமுஞ்

சாத்திரமே தான்” “எழுத்தின் விதிச்சொல் விதியெழுவாயும், விழுக்க விளக்க விளம்பும்—மொழித்திறமும், காலவிதனைத்தனைப் பலத்திணையுங் காட்டுமதற், கேதுநாலாஞ்சாத்திரம்” பிறவும் வந்துழிக்காண்க.

உணர்ந்து — இவைகளெல்லாத்தையு மறிந்து.

பன்மார்க்கப் பொருள் பலவுங் கீழாக மேலாம் பதிபசு பாசந் தெரிந்து — இங்கனங்கூறிய சமயிக டமதுகோட்பாட்டை பரமென்று நிறுவ வதனையாகாதென்று கீழ்ப்படுத்திச் சித்தாந்த வசனத்தா னிராகரித்ததற்கெல்லாம் விசிட்டமான பதிபசுபாசமாகிய முப்பொருள்களை யுள்ளபடி யறிந்து.

பரசிவனைக்காட்டு நன்மார்க்க ஞானத்தைநாடி ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் — ஞானமாகிய வறிவுடனு மதனாலறியப்படும் பொருளாகிய ஞேயத்துடனு மறிவானை யொருமுத லெனக் கருதாது கேவலம் நின்று ஞானசத்தி முதலிய மூன்றினுக்கு மப்பாற்பட்ட சிவனை, ஞானாசாரிய னுபதேசித்தவழியே துரியத்தைக் கடந்த சமாதி பொருந்துதற் பொருட்டு ‘ஞானமொடு ஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் பரமசிவனைக் காட்டும் நன்மார்க்க ஞானத்தை நாடி’ என மாறிப் பொருளுரைக்க.

பின் மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்பெருமையுடையோர் — அந்தச் சத்திகளுடன் கலந்தப்பாற்பட்ட பின் சமரசீபாவமா யாநந்தத்தைப் பொருந்தி யதனை யனுபவித்த ஞாதாக்கள் பெறும்பலன் யாதெனின்?

சிவனைப் பெறுவர்காணே. — சிவசாயுச்சியமாகிய பரமுத்தி யடைவர்கள். எ-று.

ஞானப் பெருமை யுடையோர் எழுவாய்,பெறுவர் பய
னிலை

இதற்குக் காமிகம் சிந்தியம் காந்தபுராணத்து மறிக.(உஉ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் ஞானமார்க்கத் தடைவு கூறுகின்றது.

பின்மார்க்கச் சிவனுடனும்பெற்றி சன்மார்க்கம் - சரியை கிரியா யோகமார்க்கானுஷ்டானத்துக்குபபின் ஷடத்துவ மார்க்கத்தினாலே சிவ சாயுச்சியத்தை யடையுந் தனகைமை சத்திய நெறி.

சத்தியநெறி என்றது சரிகையாதி அநுஷ்டானங்களும் அதனாலடையும் சாலோக்கியாதி முத்திகளும் அநித்தியமாகை யால் அசத்தியம். ஞானமும் இதனாற் பெறும் சிவசாயுச்சிய மு நித்தியமாகையாற் சத்தியம். ஆகையாற் சத்தியநெறியெ னபதற்குப் பரியாயமாகச் சன்மார்க்கமென்றது. அஃதாவ னா:—

சகலகலை வேதபுராண சாத்திரங்கள் சமயங்க டாம்பல வு முணர்ந்து-

கலைபுராண வேதமென்றது ஜாதியொருமை.

உணர்ந்தென்பதை பதந்தோறு மொட்டிப்பொருளுரைக்க.

இவ்விடத்துக் கலைகளென்றது பாசஞானங்களை.

இதற்குச் சம்மதி.

'மொய்தருபூதமாதி' என்ற விருத்தத்திலே எழுதப்பட் டது.

அந்த ஞானங்கடா னெவையிற்றுக்களினாலே யறியப்படு மென்னில் ?—

வேதங்களுணர்ந்து - வேதங்களையோதி வேதாந்தப்பொருள்களை யறிந்ததனால் வேதாத்தியயநத்துக்கு அதிகாரமில்லாத ஸ்திரீ சூத்திர துவிசபந்துக்கள்,—

புராணங்களுணர்ந்து - புராணங்களையோதி யதன்பொருளை யறிந்ததனால்,—

இதன்றிச் சிவ தீக்ஷாயுத்தராய் * விசிஷ்டமாகிய சிவதர்மிகளானபேர் காமிகாதி சிவசாஸ்திரங்களை யோதி யதிலே பூர்வபக்ஷமாகச் சொல்லும் சார்வாகாதி சமயங்களினுடைய பலச்ருதி லக்ஷணங்களை எல்லாமறிந்து,—
இதற்குச்சம்மதி சித்தாந்தபோதத்திலே,—

வேதாநாம் ஶ்ரவணம் தத்ர த்ரிவர்ணாநாம் விதீயதே |
ஶூத்ராணாஞ்ச த்விஜாதீநாம் புராணம் ஶ்ருதிவர்ஜிநாம் || ஶ்ரத்தாஶுஶ்ரூஷயா நிஷ்டா ஶைவஶாஸ்த்ரேஷு ஶம்ஸிதா | ஶுஶ்ரூஷூணாம் வ்ருத்தியோவாச்யா ஶ்ருத்யைர்யை ஶாஸ்த்ரஜ்ஞைஃ || இதரேஷாம் விரக்தாநாம் பாஷயா தத்வவேதநம் ||

பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாகமேலாம் பதிபசுபாசந்தெரிந்து - பலசமயிகளுடைய நெறியிற் சொல்லும் பதார்த்தங்கள்தாழ சர்வோன்னதமான பதிபசுபாசமாகிய பதார்த்திரியங்களைத் தெரிந்து.

தெரிந்தெனறது தெரித்தென விகாரமாயிற்று.

இவ்வளவும் பரஞானம்

மேற் பரஞானங் கூறுகின்றது.

இதற்குச் சம்மதி யளவையிலே'அநாதியே யமலனுகி' என்ற திருவிருத்தத்திலே எழுதப்பட்டது —

பரசிவனைக்காட்டு நன்மார்க்க ஞானத்தைநாடி - நீல ருத்திராதி சதாசிவ பரியந்தம் சிவாதிஷ்டித விக்கிரஹங்களுக் கெல்லாம் சிவனென்னு நாமமுண்டாதலால் இவர்கள் பரசிவ னென்று கருத்தாய் நிஷ்களசிவனைப் பரசிவனென்றது. அந் தப் பரசிவனைத் தரிசிப்பிக்கும் ஞானம் நன்மார்க்கமென்றது, சரிதையாதிகளைப்போல காயக்கிலேசாதி இல்லாமல் அப்பியா சாவஸ்தையிலும் †சுகரமாகையால்.

இனிச் சூரியனையுந் தன்னையுந் தரிசிக்கிறவனையுந் தரிசிப்பி க்கும் சூரியப்பிரகாசம்போல, சிவனையுந் தன்னையு மான்மாவை யும் தரிசிப்பிப்பதான சிவசமவேத சிற்சத்தியைத் தரிசித்த தனால் சிவனைத் தன்னிடத்து வேறறக்கண்டு.

இது விகற்பஞானம்.

மேல் நிர்விகற்ப ஞானமாவது?—

ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் - காட்சியாகிய சிவஞானத்தையும் காணப்படுவதான சிவனையும் காண்பவனா ன தன்னையும் பகுத்தறியு முறைமையின்றிச் சிவமாகிநிற்பது,—

ஞானப்பெருமையுடையோர் சிவனைப் பெறுவர்காணே - இவ்வாறு ஞானதிக்கத்தினாலே சிவாநந்தாநுபவத்தை யா ன்மலாபமாகப் பெறுவராதலா லிந்த அநுபவத்தை ஞானப்பி யாசத்தினாலே நீயு மனுபவித் தறிவாயாகவென் றிதன் பொ ருள்.

ஏகாரம் - ஈற்றசை.

* விசிஷ்டம்-மேலானது, † சுகரம்-சுளுவாய்ச் செய்யக் கூடும்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

நன்மார்க்க ஞானத்தால் - சிவாசமத்திரிவழி சரிக்குஞ் சிவசத்தி விளக்கில் விளங்கிய சிற்சத்தி மூலத்தில் முளைத்து வாயிற் காட்சி கடந்து யோகக்கட்சி தொடர்ந்து நடுநிற்கு மறிவினால் சிவனை,—நாடி - அதுவிதுவல்ல வதுவெனவறிந்து ரூப தரிசனமுற்றுப் பின் மகாமந்திரத்திரிவழி பற்றி முற்றும் போய் மே விராலம்பினியாஞ் சிவசத்தி விளக்கில் விளங்கிப் போய்ச் சமனைகடந் துன்மனை பற்றி விசேஷித்து ரூப தரிசன முற்று மகாவாக்கியப் பொருளுன்னித் தியானமுமிழ்த் துபரி விரியுஞ் சிற்சத்திப் புத்தி வித்தின் முளைத்துக் காட்சிபோற் காட்டி நடிக்கு ஞானசிறப்புகருறித் தியானக் குறியாய்ச் சிற்சத்தி மனைச் சங்கற்பக் கிரியை மணந்து பின் கோத்த சிற்போதத்தாற் றியானித்து,—ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம்-தியானிக்குமான்மா, தியானம் பண்ணப்படுமாம், தியான முபலக்ஷிக்குஞ் சிவ மிம்மூன்றெனுஞ் சித்தாந்த வாக்கியார்த்தங்களொரு நெறியானுந் தோற்றுதென்னில்? நித்திரை முத்திரை நிலைபெறுமாதலாற், சிற்சத்திப் புத்தி வித்துமிழ்க்குஞ் சூக்ஷ்ம யோசன விகற்ப சாந்திர சசலச தரங்க போதப் பிரவாகக்குறித் தியானத்தின துறைப்புக்குறி நிர்வியோசன நிர்விகற்ப நிரந்தர நிர்ச்சல நிஸ்தரங்க போதப் பிரவாக சமாதியிலும் "ஸ்வரூப சூந்யமிவஸமாதி" எனும் பதஞ்சலி வசனத்தா லொரு நெறி யோகமாய் மூர்சூனியம் போல முப்பொருள் விள்ளாது விண்டு தோற்றாது தோற்ற நோக்காது நோக்கி,—பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப் பெருமை யுடையோர்-முன்பின சொன்ன சன்மார்க்க நிராலம்ப சிவயோக சிவசமாதி யுறைப்புற்ற சத்துக்கள்,—சிவனைப் பெறுவர்காணே - சிவனோடு சமமாய் ம

லத்தால் மறைந்திருந்து, மலமுத்தியால் வியத்தியாய் விரிந்து விளக்குஞ் சிவத்துவத்தை ஸ்வரூப லக்ஷணமாகச் சாக்ஷாத்கரித்திருப்பர் தானே.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

புறத்தொழி லகத்தொழி லிரண்டுமின்றி அறிவுத்தொழின் மாத்திரையானே அம்மூன்றுதிருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்துநிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஞானமெனப்படுமென்பதாம்.

அவ்வழிபாடிவையென்பது முன்னர் வகுத்துக் கூறப்படும்.

ஈண்டு வேதமென்றது வேதஞ்சிவாகமமென்னு மிரண்டினுமுள்ள கருமகாண்டத்தை.

சிவாகமமும் வேதமென வழங்கப்படும்.

கீழுள்ளவற்றைக் கீழெனக் கண்டு கழித்தாலன்றி மேலுள்ளன பயன்படாவென்பார், கீழாகவென்றார்.

கழித்தென்பது சொல்லெச்சம்.

பதிபசுபாசந் தெரித்தலாவது அம்மூன்றுபொருளையுந் தடத்தலக்கணத்தின் வைத்து வகுத்துணர்த்தல்.

பரமசிவனைக் காட்டலாவது, அம்மூன்றனுட் பதிப்பொருள் ஏனைப்பாச பசுக்களுக்கு மேலாத லினிதுவிளங்கச் சொரூப லக்கணத்தின்வைத் துணர்த்துதல்.

ஈண்டு ஞானமென்றது ஞானசாஸ்திரத்தின் மேற்று.

தெரித்துக்காட்டு ஞானநூலெனவே, ஞானகாண்டமெல்லாந் தூலாருந்ததிநியாயம்பற்றி இங்ஙனமிருபகுதிப்பட நிகழுமென்பதாயிற்று.

நாடுதல் சிந்தித்தல்.

நாடியெனவே, நாடுதற்கு வேண்டப்படும் ஓதல்கேட்டல்களும் உடன் கொள்ளப்படும்.

பின்மார்க்கசச்சிவன் வினைத்தொகை.

பின்னுதல் அத்துவிதமா யிசைதல்.

நாடாவண்ணம் பின்னிய சிவனென்றுரைக்க.

மார்க்கம் இடைப்பிறவரல்.

சன்மார்க்கமாவதுணர்ந்து கழித்து நாடியுடனும்பெற்றியென வினைமுடிபு செய்க.

மேல் இச்சரியை யிக்கிரியை யென்றாற்போல ஈண்டும் இஞ்ஞானப்பெருமையெனச் சுட்டு வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானும் மேலெடுத்துக்கொண்ட சரியைமுதலிய நான்கிற்கு மிலக்கணங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சன்மார்க்கத்தின் முறைமை யருளிச்செய்கிறார்.

சன்மார்க்கஞ் சகலகலைபுராணவேத சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவு முணர்ந்து - சன்மார்க்கமாவது? பலகலை ஞானங்கள் வேதங்கள் பலசாத்திரங்கள் புராணங்கள் உலோகாயதன் முதலாயுள்ள புறச்சமயங்க ளுட் சமயங்களென்று சொல்லப்பட்ட பலவகையிற்றையு மாராய்ந் தறிந்து, அப்படியறியவே பல மார்க்கத்திலுள்ள பொருள்களெல்லாஞ் சத்தியம்போலே தோன்றி அசத்தியமாய்ப்போம். ஆகையாலே,—பன்

மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதிபசுபாசந்தெரித்து - பலசமயங்களினுஞ் சொல்லப்பட்ட வத்தங்களெல்லாங் கீழ்ப்படுத்தி எல்லாதத்துக்கு மேலாயிருக்கிற பரமேஸ்வரனுடைய விலக்ஷணத்தையும் ஆன்மாக்களுடைய விலக்ஷணத்தையும் பாசங்களுடைய விலக்ஷணத்தையும் கூறுசெய்து,—பரசிவனைக்காட்டு நன்மார்க்க ஞானத்தைநாடி-மேலான பரமேஸ்வரனைத் தரிசிப்பிக்கைக்கு நல்ல வழியான பரஞானத்தை யாசாரியனாலே யறிந்து,—ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் - இவனுக்குக் காட்டுகிற ஞானமுங் காணப்படுவதாயிருந்துள்ள ஞேயமும் அதனோடு காண்கிற ஞாதருவாகியதானும் என்கிற சங்கற்பங்களும் பொருந்தாதபடி,—பின்மார்க்கச் சிவனுடனும்பெற்றி - பின்பு இந்தஞானத்தின்வழித்தாய் தற்போதஞ் சீவியாமனிற்கவே சிவனைவிட்டு நீங்காமல்நிற்கிற ஞானத்தைப்பெற்று ஞானமேயாய் விடுவர்கள். இந்தநிலை கூடினவர்கள்,—ஞானப்பெருமை யுடையோர் சிவனைப் பெறுவர்காணே - இப்படிப் பரிபூரணமான அந்த ஞானத்தைப் பொருந்தினவர்கள் அந்த ஞானத்தினாலே சிவனோடே கூடிச் சிவனாய்நிற்பர்கள்.

பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றியென்றது ஆன்மதரிசனம்.
ஞானப்பெருமை யுடையோரென்றது ஆன்மசுத்தி.
சிவனைப்பெறுவர்காணே யென்றது ஆன்மலாபம்
என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சன்மார்க்கமாவது வேதாகம புராண சாத்திரங்க ளெல்லாவற்றையு மாராய்ந்தறிந்து உட்சமயம் புறச்சமயங்களிலுள்ள பேதங்களையும் அவை பொன்றுசொன்னது ஒன்றுசொல்லாத வத்தங்களையு மறிந்து அவையிற்றைக் கீழ்ப்படுத்தி யவற்றிற்கு மேலாயிருக்கிற பதிபசுபாசமார்க்கத்

தினுண்மையை யறிவதென்றும் அந்தப் பதிஞானத்தாலே சிவ னுடைய திருவடியைப் பெறுகிறது சாயுச்சியமென்னு முறை மையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

சன்மார்க்கம் - நன்னெறி யாவது,— சகலகலை புராண வேத சாத்திரங்கள் - சகலமான கலைஞானங்களும் புராணங் களும் வேதாகமங்களி லுள்ள கருமகாண்டங்களும் மற்றச்சா த்திரங்களும்,— சமயங்க டாம்பலவு முணர்ந்து - ஏனைச்சமய நூல்கள் பலவுமாராய்ந்து,— பன்மார்க்கப் பொருள்பலவுங் கீ ழாக-பலவழிப் படுகின்ற பொருண் முழுவதுங் கீழெனக் கொ ண்டு கழித்து,— மேலாம் பதிபசுபாசந் தெரித்து-மேலான ப திபசு பாசமாகிய மூன்று பொருளையுந் தடத்த லக்கணத்தில் வைத்து வகுத்துணர்த்தி,— பரசிவனைக் காட்டு நன்மார்க்க ஞானத்தை நாடி - அம்மூன்றனுட் பதிப்பொருளைனைப் பாச ம் பசக்களுக்கு மேலாத விளிதுவிளங்கச் சொரூபலக்ஷணத்தி ன் வைத் துணர்த்தலாகிய நல்லவழிக்கேதுவான ஞானகாண் டத்தை யோதல் கேட்டல் களுடன் சிந்தித்து,— ஞானஞேய மொடு ஞாதிருவு நாடாவண்ணம் பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி-ஞாதுரு ஞானஞேய மாகிய பகுப்பின்றி யத்துவிதமா யகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நி றைந்து நிற்கின்ற சிவபிரானோடு கலக்குந் தன்மைத் தாகிய ஞானப் பெருமை யுடையோர்,—சிவனைப் பெறுவர்காணே-ஞா னத்தை யனுட்டித்தோரே சாயுச்சியமாகிய பரமுத்தியைப் பெறுவர்.

இவை நான்கு செய்யுளானு மேலெடுத்துக்கொண்ட சரி யை முதலிய நான்கிற்கு மிலக்கணங் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

கருமயாக முதலியவற்றால் பல மடையப்படாதோ வெ னின்? அவற்றினுட் ஞானயாகமே சிறைப் புடைத்தெ ன் றுணர்த்து கினறார்.

ஞானநூ றனையோத லோதுவித்த னற்பொருளை க் கேட்பித்த றான்கேட்டனன்று, வினையிலாப் பொரு ளதனைச் சிந்தித்தலைந்து மிறைவனடி யடைவிக்கு மெ ழின்ஞானபூசை, யூனமிலாக் கன்மங்க டபஞ்செபங்கடி யான மொன்றுக்கொன் றுயருமவை யூட்டுவதுபோ க, மானமையான் மேலான ஞானத்தாலரனை யர்ச்சிப் ப்பர் வீடெய்த வறிந்தோரெல்லாம். (உ௫)

(இ-ள்) ஞானநூறனையோதல்: சாமிகாதியான திவ்யாகமங்களை யோதல். அஃதாவது, ஆசாரியன் சுத்தத் தலத்தி லே வடக்குக் கிழக்கு முகமாக விருந்து அசீரண முதலிய குற்றங்களை நீக்கித் தனது முன்னே மெழுகி யதிற் பருதிகளைச் சூழவைத்து நடுவே சிவனை யும் பக்கதகிற் குருவையுங் கணபதியையும் பூசித்து, அதிலே விதிவழிச்செய்த யந்திர பீடத்தை வைத் ததன்மேலே பரிவட்டம் விரித் ததிலேவைத்துப் பூசித்துப் படித்தல்.

ஓதுவித்தல்: அந்தஆசாரியன் மாணுக்கர்க் காகமங்களை போதிக்கு மிடத்து தபிமுகமாக மாணுக்கனை யிருவென்று கற்பித்துச் சிருட்டிகாலத்தி லாகமங்கள பரம்ப

ரை பரமசம்பந்தம் தற்சம்பந்தம் அந்தராளம் அதிவ்வியம் தி வ்யாதிவ்யம் எனவாறு சம்பந்தத்துடன் ஆசாரியர் பாரம்ப ரை முதற்கூறித் தனதாசாரிய பரம்பரையாக ஆகமங் கேட்ட முறைமை யுணர்த்திப் பின்பு தான்சொல்லப்போகிற பொருளை யு மிதனாற்பெறும் பலத்தினையு மவனுளங்கொள வுரைத்தல்.

நற்பொருளைக் கேட்பித்தல் "கருத்துப் பதப்பொருள் காட்டு மிரு விடை" எனக் கூறிய வைந் துறுப்புடனு மாணாக்கர்க்கு வியாக்கியானஞ் செய்வது.

தான்கேட்டல் ஐயந்திரிவறத் தன்னாசிரிய னிடமாகக் கேட்டல்.

நன்று வினமிலாப் பொருளைதனைச் சிந்தித்தல் தான் கேட்ட பொருள்களைத் தனக்கொ த்த சம்பிரதாயிகளுடன் கூடியிருந்து நா டோறுஞ் சிந்தித்தல்.

ஐந்து மிறைவ னடி யடை விக்கும் ஓதல்முதலிய வைந்தினையுங் குற்றமறச் செய்தார்க்குச் சிவனது திருவடியை யடை விக்கும். அஃதெக்காரணத்தா லெனின்?

எழின் ஞான பூசை அழகிய ஞானபூசை யென்று திவ்வியாக மங்களோதுதலால்,

ஊன மிலாக் கன்மங்கள் சிவபூஜை முதலிய நித்திய கன்மங்கள் க ன்மயாகமெனப் பெயரும்.

தவம் சாந்திராயண விரத முதலியவற்றாற் சரீரத்தை மெலிவித்தல்.

செபங்கள் மானதமுதலிய மூவிதத்தால் ஜபஞ்செ ய்வது.

தியானம் "காண்பானுங் காட்சியுங் காணப்படும் பொருளு-மாண் பாந் தியான வகை" என்ப தனாற் றனக்கு வேண்டியதொரு பொருளை யாற்றுநீரான தி

டையறும லொழுகுமாறுபோலத் தியானஞ் செய்தல் தியான யாகம்.

ஒன்றுக் கொன்றுயரும் — கன்மத்தைப் பற்றத் தவம் பதின்மடங்கு பலமதிகம், அதனைப் பற்ற ஜபம் நூறுமடங் கதிகம், அதனைப் பற்ற தியானம் நூறு மடங்கதிகம், அதனைப்பற்ற ஞானயாகமானது சாதனப் பிரயாசமற்பமாய் மகத்தா யளவற்ற பலத்தைக் கொடுப்பதா யிருக்கும்.

கன்ம முதலிய நான்கினையு மனுட்டித்தாற் பெறும்பலன் யாதெனின்?

அவை யூட்டுவது போகம் — அவைகளின் வழிநின் றனுட்டித்தவர்களுக்குப் போகத்தைக் கொடுக்கும். அந்த போகமும் புசித்துத் தொலைத்தவாறே மற்றொரு சரீரமெடுத்தற்குக் காரணமாம்.

ஆனமை பால் மேலான ஞானத்தா லரனை யர்ச்சிப்பர் விடைய்த வறிந்தோரெல்லாம். — இத்தன்மை யுடைத் தாதலினாலே மோட்சத்தை யடையக் கருதின ஞானவான்கள் விசிட்டமான ஞானபூசனையே யனவரதமுஞ் செய்வர்கள். எ-று.

ஞானபூசை யடைவிக்குமெனவும் அறிந்தோ ரர்ச்சிப்பரெனவும் எழுவாய் பயனிலை கூட்டுக.

இதற்குச் சிவதருமோத்திர மெனவறிக. (உ௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு·



மேல் சைவர் அநாதிசைவர் ஆதிசைவர் மஹாசைவர் அநுசைவர் அவாந்தரசைவர் பிரபரசைவர் அந்தியசைவர் என்றேழுபேதத்திலே அநாதிசைவரும் பிரபரசைவரும் அந்தியசைவருநீங்கலாக நின்ற நாலுபேருக்கும் விசேஷ தர்மமாகிய பஞ்சமகா யக்யம் கூறுகின்றது.

ஊனமிலாக் கன்மங்கள் தபஞ்செபந் தியானங்களிவையொன்றுக்கொன் றுயரு மூட்டுவது போகம் ஞானநூறனையோதலோதுவித்த னற்பொருளைத்தான்கேட்டல் கேட்பித்தல்நன்று மீறுமிலாப் பொருளதனைச் சிந்தித்தலைந்து மெழின்ஞானபூசை இறைவனடி யடைவிக்கு மானமையான் மேலானஞானத்தா லரனை யர்ச்சிப்பர் விடையர்துவ ரறிநதோரொல்லாம் என மாறிப் பொருளுரைக்க.

ஊனமிலாக் கன்மங்கள்-* பிராம முகூர்த்தத்திலே யெழுந்திருந்து சிவசிந்தனை முதலாகச சிவபூஜை யக்நிகாரியம் தரியாசந்தி டரியந்த மாகமோக்தப் பிரகாரங்களிலே அந்தந்தவர்ணாச்ரமத்துக்கு வேறாக் கிரியைகளை யேற்றக் குறைச்சலறப் பண்ணுவது கனமயக்கியம்.

தவம் - சாந்திராயணம் கிருச்சிரம் மாசோபவாசம் அஷ்டமியாதி † யநசன விரதங்களினாலே தேகத்தைத் தபிப்பிக்கிறது தபோயக்கியம்.

ஜபம் - அந்தந்த வர்ணாச்ரமாநுகுணமான சிவமந்திரத்தை வாசகமாகத்தான் ‡ உபாம்சுவாகத்தான் மானசமாகத்தான் மேற்சொல்லும் பிரகாரத்திலே ஜபிப்பது ஜபயக்கியம்.

தியானம்-இருதயாதி ஸ்தானங்களிலே சதாசிவாதி மூர்த்திகளைப் பலகாலும் தியானிப்பது தியானயக்யம்.

இவை யொன்றுக்கொன்றுயரு மூட்டுவது போகம் - இந் நாலும் ஒன்றுக்கொன்று அதிக பலங்களைக் கொடுப்பதாய்ச் சிவலோகத்திலே மஹா போகங்களைப் புசிப்பித்துக் காலவிறுதி யிலேலே புநர் ஜநநத்தை யுண்டாக்கும்.

ஞானநூறனை யோத லோதுவித்தல் நற்பொருளைத்தா ன்கேட்டல் கேட்பித்தல் நன்றும்- ஞான சாஸ்திரத்தைத் தா ன் முன்னொடு பின் மலைவற ஆசாரியனிடத்திலே படித்தல், தா ன்படித்தபடி யொருவர்க்குப் படிப்பித்தல், பாசபசுபதியென் று மூன்று பொருளுக்குள்ளே ஞானாநந்த ஸ்வரூபியாகையால் நற்பொருளாகிய பதியை மனமுதலான காரணங்களை நீக்கிப் பா விக்கும்படி யாசாரியனிடத்திலே தான் கேட்டல் அவ்வாறு தன் சிஷ்யனுக்குப் போதித்தல்.—

ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்து மெழின்ஞா னபூசை யிறைவனடி யடைவிக்கு மானமையான மேலானஞா னத்தா லரனையர்ச்சிப்பர் வீடெய்துவ் ரறிந்தோரெல்லாம்- பா சமானது ஜடமு மலமு மாகையினாலும் பசு அந்த மலசம்பந்த மாகையினாலும் ஓரிழுக்கு மல்லாமல் ஸ்வபாவ நிர்மலமாய் நித் தியானந்தமயமா யுள்ள பரம்பொருளை யான்மாவிலே வேற றப் பாவிக்கையா லவ்வைந்தும் முன்சொன்ன நாலு யக்யங்க ளிலும் விசிஷ்டமாகிய ஞான யக்யம். இது சிவசாயுச்யத்தை யடைவிக்கும். ஆதலினாலே பாச பசுஞானத்துக்கு மேலான சிவஞானத்தினாலே சிவனைப் பூசைபண்ணுமவர்கள் மோக்ஷத் தை யடைய வறிந்தோர்க ளென் றிதன்பொருள்.

* பிராமமுகூர்த்தம் - வெடியஐந்துநாழிகை, † அநசந ம் - சாப்பிடாமை, ‡ உபாம்சு - ரஹஸ்யம்.

ஸ்வாஸ்த்யா ஜ்யா ஸ்ஷ்டாம ஹோம ஸ்ரண ஷ்ய | ஸநாதிஸ்வஸ்வ்யாஸ் ஆதிஸ்வ

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிவசித்தாந்த சாத்திர ஞானமு மறிந்தே தியானசமாதி பண்ணப்படுமாதலால், சாக்ஷாத்கார சாதன சாக்ஷாத் சன்மார்க்க ஞானபூசையாகு நிராலம்ப சிவத்தியான சமாதி முதலிய வற்றைச் சாதிப்பிக்குமாதலால், சன்மார்க்க ஞான பூசையாமென்று சாற்றுகின்றார்.

சிந்தித்தலுக்குப்பின் தெளிதல் என்பதைகூட்டி ஆறென்று பண்ணுக.

சாலம்ப சிவ சக மார்க்க ஞானசாத்திய சாலம்ப சக மார்க்கத் தியான சமாதி முதலியவற்றைக் குறித்து நிராலம்ப சிவசன்மார்க்க சாஸ்திரஞான முயர்ந்தது, நிராலம்ப சிவசன்மார்க்கத் தியான சமாதி முதலியற்றைக் குறித்துத்தாழ்ந்ததெனபதறிக.

அப்படிச் சிவாகமஞ் செப்பியது காண்பிப்பாம். கிரியாவான்கள் பத்துப் பெயர்க் கதிகன சாந்திராயண முதற் றபவிரதி, தபவிரதிகள் நூறுபெயர்க் கதிகன் சபசீலன்; சபசீலர்க ளாயிரம் பெயர்க் கதிகன் சிவஞானி, சிவஞானிகளில் லக்ஷம்பெயர்க்கதிகன சிவத்தியானி, சிவத்தியானிகள் கோடிபெயர்க்கதிகன் சிவசமாதிமான், சிவசமாதிமான்க ளனந்தம்பெயர்க் கதிகன் சிவசாக்ஷாத்காரவான்.

சிவத் தியானம் சிவ சமாதி சிவ சாக்ஷாத் காரங்களும் கிரியோத்திரேக விசிஷ்டச் சிறப்பு ஞானங்கள்தானே.

பதப்பொருள் வெளிப்பொருள்.

—

# சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சிவதருமோத்தரத்திற் கூறியவாறே ஒன்றற்கொன்றேற்ற மாகிய கன்மவேள்வி தவவேள்வி சபவேள்வி தியானவேள்வி ஞானவேள்வியென்னு மைந்தனுள், முன்னைநான்கும் போகத் தையூட்டுவனவாக, ஓதன்முதலைவகைப்பட்ட ஞானவேள்வி யொன்றுமே வீடுபேற்றைத் தருவதாகலான் அஃதுணர்ந்தோ ரா லங்ஙன மைவகை ஞானவேள்வியே வேட்கற்பாற்றென்ப தாம்.

தெளிதற்கும் நிட்டைக்கும் நூல் வேண்டாமையின் நூலா னாகற்பாலனவாய ஏனையைந்துமே ஈண்டு வேள்வியென் றெடுத் துக்கொள்ளப்பட்டன.

நற்பொருளைத்தான்கேட்டல் கேட்பித்தலெனக் கேட்ட ற்குப்பின வைத்தோதாமையான், ஈண்டுக் கேட்பித்தலென் றது, ஆசிரியனை வழிப்பட்டுத் தான் சேட்டலின்றியும் ஓசவு மோதுவிக்கவும் பெற்று நூலின்க ணதிகாரமுடையராயினார் அந்நூற்பொருளைத் தமது மதிநுட்பத்தாலுணர்ந்து தம்மாலோ துவிக்கப்பட்டார்க்கு உரைத்தலையெனபதுபெற்றாம்.

சேட்டற்குப் பின்னாத்தாகிய ஏனைக் கேட்பித்தல், பிறர் க்குரையிடத்தே நூல்கலப்பானுமென்பவாகலிற் சிந்தித்தற்பய த்தாய் அதனுளடங்குதலின், வேறுவைத் தெண்ண வேண்டா வாயிற்று.

அற்றாகலினன்றே வருஞ் செய்யுளிற் கேட்டற்குப்பின் சிந் தித்தலே கூறியொழிந்ததூஉமென்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொன்ன பரஞானத்தாலே சிவனைக் கூடுதற் கரிதென்ற மாணுக்கனை நோக்கி அபரஞானத்தாலே கூடுகிற முறைமை மேலருளிச்செய்கிறார்.

ஞான நூலதனையோதல் ஓதுவித்தல் நற்பொருளைக்கேட்பித்த றான்கேட்டல்நன்று மீனமிலாப் பொருளதனைச் சிந்தித்தலைந்தும் - ஞான சாஸ்திரங்களைத் தானோதலும் பிறர்க்கு அந்தச் சாஸ்திரங்களை யோதுவித்தலும் அந்தச் சாஸ்திரங்களினுடைய நல்ல வத்தங்களைப் பிறருக்குச் சொல்லுதலும் தான் பிறரிடத்திலே கேட்டலும் நன்றாகக் குற்றமற்ற வத்தப்பொருளை யாராய்ந் தறிதலுமென்று சொல்லப்பட்ட வைந்தும்,—இறைவனடி யடைவிக்கு மெழில்ஞானபூசை - இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யெல்லாங் கர்த்தாவுக்கு அழகிய ஞானபூசையாயிருக்கு மாகையாலே அவனுடைய திருவடியிலே பொருந்தும்பட்டிபண்ணும்.—ஊனமிலாக் கன்மங்கள் தவஞ்சபங்கள்தியான மொன்றுக்கொன்ன றுயருமிவை யூட்டுவது போகம்-குற்றமில்லாத எக்யாதி கன்மங்கள் தபசுகளைப்பண்ணுகை ஜபங்கள் தியானங்கள் இவை தன்னில் ஒன்றுக்கொன்று மேற்பட்டிருக்கும். அப்படியிருந்தாலும் புசிப்புக் கேதுவொழிந்து இவையிற்றாலே மோக்ஷமுண்டாகாது.—ஆனமையால் மேலானஞானத்தா லரனையர்ச்சிப்பர் வீடெய்த வறிந்தோரெல்லாம் - ஆகையாலே இவையிற்றுக்கு எல்லா மேலாயிருக்கிற சிவனைப் பெற்றுச் சிவானுபவத்தை அனுபவித்துக்கொண் டிருப்பர்கள் மோக்ஷத்தைப் பெறுகிற முறைமையறிந்த பெரியோர்களெல்லாம்.

இதனாற் சொல்லியது, ஞான சாஸ்திரத்தை யோதுகிறது முதலாயுள்ள அபரஞானத்தாலே பரஞானத்தைப் பெறலாமெ

ன்றும் கன்ம வெக்ய முதல் நாலும் ஒன்றுக்கொன்று மேலாயிருக்குமென்றும் அவையிற்றினால் போகமொழிந்து மோக்ஷமுண்டாகாதென்றும் ஞானத்தினாலே மோக்ஷமுண்டாமென்றும் அறிந்த பெரியோர்கள் அனவரதமும் அந்த ஞானத்தினாலே சிவனோடே கூடியிருப்பர்களென்னுமுறைமையும் அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஒன்றுக் கொன்றுயரும் - சிவதரு மோத்திரத்திற் கூறியவாறே யொன்றற்கொன் றேற்ற மாகிய,— ஊனமிலாக் கன்மங்க டவஞ் சபந் தியான மிவைபோக மூட்டுவது-குறைவிலாத கன்மவேள்வி தபவேள்வி தியானவேள்வி ஜபவேள்வி ஞானவேள்வி யென்னுமைந்தனுள் முன்னைய நான்கும் போகத்தை யூட்டுவனவாக,— ஞான நூறனை யோதல்-ஞான நூறனை யோதலும்,— ஓதுவித்தல்-அந்நூலைப் பிறர்க் கோதுவித்தலும்,— நற்பொருளைக்கேட்பித்தல்-அந்நூற் பொருளைத் தமது மதினுட்பத்தாற் பிறர்க்குக் கேட்பித்தலும்,—தானன்றாக் கேட்டல்-அந்நூற்பொருளைத் தானன்றாகக் கேட்டலும்,— ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தலைந்து. டெழின்ஞான பூசை யானமையான் - குறைவில்லாத வப்பொருளைச் சிந்தித்தலு மாகிய வைவகைப்பட்ட அழகிய ஞானவேள்வி யாகலின் அஃதொன்றுமே,— இறையனடி யடைவிக்கும் - வீடுபேற்றைத் தருவ தாகலான்,— வீடெய்தவறிந்தோ ரெல்லாம்-அஃதுணர்ந்தோ ரெல்லா ராலும்,—மேலான ஞானத்தா லரனையருச்சிப்பர்-அங்ஙனமைவகையான ஞானவேள்வியே வேட்கற்பாற்று என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலந்த ஞானத்தினை யுடையவர்கள் பெறும்பல மீதென்பதூஉம் அஃதில்லாதார் பெறும்பல மிதென்பதூஉம் வரையறை செய் துணர்த்துகின்றார்.

கேட்டலுடன் சிந்தித்த றெளிதனிட்டை கிளர்த்தலென வீரிரண்டாங் கிளக்கின்ஞான, வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவினோர்கண் மேவாது தப்பினவர் மேலாயபதங்கட், கிட்டியபுண் ணியநாத ராயிபின்ப மினிதுநுகர்ந் தரனருளா லிந்தப்பார்மே, லொட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக்குருவான் ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன்றாளே. (உச)

(இ-ள்.) கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை கிளர்த்தலென வீரிரண்டாங் கிளக்கின் — யாதாமொருவர் தாம் ஞானசாரிய னிடத்தோதின திவ்யாகமங்களின் வாக்கியத்தைத்தனக்குப் புலப்படக் கேட்டலு மதனை மறவாமல் நாடோறு மீண்டு சிந்தித்தலு மதனை யறிவிற் றெளிதலும் தெளிந்த மேலான ஞானத் துடனே கலந்து நிட்டைபுரிதலு மெனச் சொல்லில் நாலுப் பிரகாரமாம்.

ஞானவீட்டை யடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள் — இவ்வாறு சமாதியை யடைந்தவர்கள் பரமமான மோட்சத்தை யடைவர்கள். நிட்டை மேவினோர்கள் வீட்டை யடைந்திடுவர் என்பதமாறுக.

மேவாதுதப்பினவர் — இராகத் துவேஷத்துடன்கூடி நிட்டையைப் பொருந்தி யிருக்க மாட்டாதவர்கள் பிரிந்தவாறே

மேலாய பதங் கட்கிட்டியபுண் ணிய நாதராகி — அந்தத் தபோபலத்தாலே சிவலோகமுதலிய புவனங்களுக் கதிபராய்

இன்ப மினிது நுகர்ந்து — அவர்களிருபத்தொரு தலைமுறையிலுண்டான பேர்களுடன் சிவலோகத்தி னூறு கோடி கற்பகால மிருந் தாண்டுள்ள போகம் புசித்துத் தொலைந்தவாறே பின் மாயனுலகம் பிரமன் பிரசாபதிலோக மிந்திரன்புரி கந்தருவர்புரி யிவர்களுலகங்களிலுண்டான போகங்களை யடைந் தக்காலவரையுமிருந் தாண்டுள்ள போகங்களைக் கிரமத்திலே யனுபவித்துத் தொலைந்தவாறே.

ஆரனருளால் — சிவன் றனதுகாருண்ணியத்தினாலே. இது நடுநிலைத்தீபகம்.

இந்தப் பார் மேனுட்டியசுற் குலத்தினில் வந்து — இந்தப்பூமியின்கண் வேதாகமங்களிற் கூறப்பட்ட நல்லசாதியினும் நல்ல ஐஸ்வரியத்தினும் வந்து

நதவநத்து

குருவால் ஞானநிட்டை யடைந்து — ஞானசாரிய னிடமாகச் சிரவணம் மனனம் நிதித்தியாசனம் முற்றுதலானும் பூர்வவாதனையினாலும் எவ்வளவு இவனுக்குச் சிவஞானநிடம் பிறக்கு மவ்வளவு மதன்வழி நின்று பின்பு ஞானநிட்டையைப் பொருதியிருந் தெடுத்தவுடலுக் கணைந்த கன்மபலந் தொலைந்தவாறே

அடைவர் நாதன்றாளே. — சிவனது சீர்பாத கமலங்களைப் பொருந்தியிருப்பர்கள். எ-று.

நிட்டை மேவினோ ரடைவர் ஒழியினும் எது; மேவாதோர் ஒருசன்ன மெடுத்துக் குருவாலடையரென எழுவாய் பயனிலை கூட்டுக.

இதற்கு நிசுவாசம் சிவதருமோத்தரம் சிந்திய விசுவம் சுப்பிரபேதமு மெனவறிக. (உச)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் ஞானயக்கியம் நாலுபேதமாயிருக்குமுறைமை கூறுகின்றது.

கேட்டல் - பதிபசுபாசத்தினுடைய லக்ஷணங்களை யாசாரிய முகத்திலே நின்றுங் கேட்டல்,—உடன்சிந்தித்தல் - கூடப்படிதகபேருடனே யந்த லக்ஷணத்துக்கு அவ்யாப்தி அதிவியாப்தி அசம்பவதோஷமில்லாமற் சோதித்தல்,—தெளிதல் - மூன்று பொருள்களினுடைய ஸ்வரூபத்தை நிச்சயித்துப் பாச *ஹரணமென்றும், பதி † யுபாதேயமென்றும் பாசத்தைநீங்கிப் பதியைப் பிரிவற நிற்பாமென்றுந் துணிதல்,—நிட்டை கிளர்த்தல்-அந்தப் பதியுடனே வேறறநின்று பேரின்ப வளர்ச்சியைப் பெறுதல்,— என வீரிரண்டாம் - இவ்வாறு ஞானப்பியாசம் நாலுவிதமாம்.—கிளர்க்கில் ஞானவிட்டை யடைந்திடுவர் நிட்டைமேவினோர்கள் - சதுர்வித ஞானப்பியாச பலத்தை விசாரிக்கில் ஞானத்தினாலே யுண்டாம் பரமமுத்தியை, நிட்டைபொருந்தினபேர்க ளடைவார்கள்.—மேவாத தப்பினவர் மேலாய பதங்கட் கிட்டியபுண்ணியநாதராகி யினபமினிது நுகர்ந்து-நிட்டை பொருந்தாது கேட்டல் சிந்தித்தல் தெளிதலளவிலே தேகத்தை விட்டபேர் பிருதிவியாதி புத்திதத்துவ பரியந்தங் கடந்து இவையிற்றுகளுக்கு மேலான பிரகிருதி மண்டலத்தில் சிவலோகத்திலே சாலோக சாமீப சாரூப பதங்களுக் கேதுவான புண்ணியங்களை யுடையவரா யவவிடத்துத் துக்கமென்பது சற்றுமில்லாமல் சுகமே யநுபவிப்பர்.அநுபவிக்கையிலும் போகத்தில் மனப் பற்றில்லை. ஆகில்,—அரனருளால்-சிவனருளால் நிட்

டை-ௗ-டி பிரளயகால மளவும் அவ்விடத்துச் சீவன்முத்தரா யிருந்து பிரளயத்திலே பரமுத்தியை யடைவர். அவ்விடத்துப் போகபரவசத்தினாலே நிட்டை கூடாதிருந்ததாகில்,—இந்தப் பார்மேல் நாட்டிய நற்குலத்தினில்வந்தவதரித்து- இந்தப்பூமி யின்மேல் ஈனகுலத்தின்றிச் சிவதருமம்பண்ணுவோர் குலத்தி லேவந்துதித்து,—குருவான் ஞானநிட்டையடைந்தவர் நாதன்றனே-ஆசாரியர் கருணையினாலே ஞானநிலைமையைப் பெற்றதனால் சிவனை வேறற சிவசாயுச்சியத்தை யடைவர்களென்றிதனபொருள்.

* ஹரணம் - நீக்குதல், † உபாதேயம்-எடுக்கத்தக்கது,

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சர்வாதிக்க நிராலம்ப சிவ சாக்ஷாத்கார சாதன நிராலம்பசிவசமாதி முன்சொல்லிய ஞானத்தினு முக்கிய மென்பது ஆசாரியரு மறிவிப்பிக்கின்றார்.

கொத்தல் - பண்ணுதல்,—இந்தப்பார்மே லென்பது நியம மன்று "புவனே குரவஹ" என்று சிவாகம வித்துக்கள் செப்புவார்களாதலால், போய்ப் பொருந்திய புவனத்திருந்தபடி பூமியிற் றிரும்பாது ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரகுரு சதாசிவகுரு முதலோரால் நிரீக்ஷிதர்களாய்க் கொண்டுப் பரமுத்திமான்களாவார்கள்.

மற்றைய வெளிப்பொருள்.

× புவனந்தோறுங் குருக்கள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மேற்கூறிய ஞானவேள்வி யைந்தனுள் முன்னையமூன்றினும் ஆசிரியனறிவுறுக்கு முண்மைஞானம் நிகழாமையின், உண்மைஞான மெனப்படுவன ஏனைக் கேட்டல்சிந்தித்தல்களுஞ் சிந்தித்ததனைப்பின்னர்த் தெளிதலுந்தெளிந்தவாறே யதன்பி னிட்டைகூடுதலுமென்னு நான்கேயாம். இம்முறையே வந்து நிட்டைபொருந்தினோர் வீட்டினைத் தலைப்படுவர். இந்நான்கினுண் மேவுதலின்றித் தீக்கையி லத்துவசுத்தி பண்ணப்பட்டு ஓதலோதுவித்தல் கேட்பித்தன் மாத்திரையினின்று தப்பினவர், பதமுத்திகளின் வைகி நீங்கியதுணையானே ஆசிரியன் மாட்டுக் கேட்டன்முதலிய நெறியா னிட்டையினைத் தலைக்கூடி வீடுபெறுவ ரென்பதாம்.

ஓதன்முதலிய மூன்றினின்றார்க்குங் கேட்டன்முதலிய ஆசிரியனையின்றி யமையாதென்பது உணர்த்துதற்பொருட்டு, 'இந்தப்பார்மே லுட்டிய நற்குலத்தினில்வந் தவதரித்து' என்றதனையேயாகலின் அதுவே நியதமன்றெனக்கொள்க; சரியைமுதலியவற்றி னின்றாரும் 'அங்குநாதனே முன்னிற்கி ன்னுகுவர்நற்றாளே, என வருஞ் செய்யுளிற் கூறப்படுதலின்.

இனி மேவாதுதப்பினவரென்பதற்குக் கேட்டன்முதலிய மூன்றினின்று தப்பினவரென் றுரைப்பாருமுளர்.

கேட்டபின்னர்க் கேட்கவேண்டாமையானும், சிந்தித்தபின் நூல் வேண்டாமையானும், தெளிந்தவழி நிட்டைமேவுதற்கு இடையீடின்மையானும், கேட்டன் முதலியவற்றி னின்றார் சுத்ததத்துவபுவனங்களின் அபரமுத்தராக வைகியவாறே பரமுத்தியைத் தலைப்படுவதன்றி மீளுதலின்மையானும், அவர்களைச் சரியைமுதலியவற்றி னின்றாரோடொப்ப வைத்து அங்

ஙனமுரைத்தல் சிறிதுமேலாமையானும், மேலைச்செய்யுளோ டியைபுபடாமையானும், அவருரைப்பனவெல்லாம் போலியென்றொழிக.

இவையிரண்டு செய்யுளானும் மேற்கூறிய ஞானமாவது இத்துணைப் பகுதித் தென்பதூஉம் அவற்றுட் பொதுச்சிறப் பாமாறும் அவற்றிற்குரிய பயன்வேறுபாடு முணர்த்தியவாறு.

## நிரம்பவழகியருரை வருமாறு.



இந்த நிட்டை கூடாதென்ற மாணுக்கனை நோக்கி மேலுமோருபாயநிட்டை யருளிச்செய்கிறார்.

கேட்டல் - முற்சனனங்களிற்செய்த சரிதை கிரியை யோகங்களின முற்றுதலினாலே ஆசாரிய னருளிச்செய்த ஞானோபதேசங்களை ஏகாக்கிர சித்தனாய்க்கொண்டு விரும்பிக் கேட்டல்.—உடன் சிந்தித்தல் - முன்சொல்லப்பட்ட திரிபதார்த்தங்களைக் கேட்டபொழுதே இப்படியோ பதியினுண்மை, இப்படியோ பசுவினுண்மை, இப்படியோ பாசத்தி னுண்மையென வாராய்வது சிந்தித்தலாம்.—தெளிதல் - இப்படி யாராயப்பட்ட பாசத்தினுண்மை பசுவினுண்மையிற் கூடாமல், பசுவினுண்மை பதியினுண்மையிற் கூடாமல், பாசஞானம் அஞ்ஞானம், பசுஞானம் சுதந்திரஹீனம், ஆகையால் பதிஞானமே உண்மையாகவுள்ள இதுவே பொருளெனத் தெளிவதே தெளிதலாம்.—நிட்டைகூடல் - பதிஞானம் பெத்தத்தி லான்மாவொழிந்து தானொரு முதலில்லையென்ன அந்த வான்மாவாய்நின்ற தன்மைபோல இந்த வான்மாவும் அந்த ஞானமொழிந்து தானொருமுதலில்லையென்ன அந்த ஞானந் தானாய் நின்றுவிடுதல் நிட்

டைகூடுதலாம்.—எனவிரண்டாம் - இப்படியே கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென நாலுவகையாம்.—கிளக்கில் ஞானவீட்டை யடைந்திடுவர் நிட்டைமேவினோர்கள் - இவையிற்றுக் குண்டான பேறுகளைச் சொல்லுமிடத்து நிட்டையிலே பொருந்தினவர்கள் ஞானத்திலே யுண்டாகப்பட்ட சாயுச்சியத்தைப் பெறுவர்கள்—மேவாது தப்பினவர் - அல்லது கேட்டுச் சிந்தித்துத் தெளிதமாத்திரத்திலே நிட்டை கூடாதவர்களுக்குச் சாயுச்சிய முண்டாகாது.—மேலாய பசங்கடபுண்ணியநாதராகி - மேலாய சாலோக்கியாதியான பதமுத்திகளைப் பெற்று அதற்குக் கர்த்தாக்களாக விருந்து,—இனபமினிதுறுசார்ந்து-அவ்விடங்களி லுண்டான சுகங்களை நன்றாக வனுபவித்து,—அரனருளா லிந்தப்பார்மேல் நாட்டியநற்குலத்தினில் வந்தவதரித்து-அது தொலைந்தபின்பு தம்பிரானுருடைய காருண்ணியத்தினாலே இந்தப் பூமியின்கண்ணே வேதாகமங்களிலே சொல்லப்பட்ட தபசுபொருந்தியிருக்கிற நல்ல ஜாதிகளிலே வந்துதோன்றி அந்த ஜநநந்தன்னிலே,—குருவால் ஞானநிட்டையடைந் தடைவர்நாதன்றளை - ஆசாரியனாலே ஞானநிட்டையைக்கூடி பரமேஸ்வரனுடைய சீர்பாதத்தைப் பொருந்தா நிற்பர்கள்.

இதனாற் சொல்லியது, கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென ஞானம் நாலுவகைப்பட் டிருக்குமென்றும், நிட்டை கைகூடினவர்கள் சாயுச்சியத்தைப் பெறுவர்களென்றும், நிட்டைகூடாதவர்கள் சாலோக்கியாதியான பதமுத்திகளைப் பெற்று அதற்குக் கர்த்தாக்களாயிருந்து அந்தப்போகத்தையநுபவித்துத் தொலைந்தபின்பு தம்பிரானுருடைய காருண்ணியத்தினாலே பூமியின்கண்ணே நல்ல ஜாதிகளிலே வந்துதோன்றி ஆசாரியனாலே ஞானநிட்டையைப் பெற்று அதினாலே பர

மேய்வரனுடைய சீர்பாதத்தைப் பெறுவார்களென்னு முறை மையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கிளக்கின் ஞானம் - மேற்கூறிய ஞானவேள்வி யைந்தனுள் முன்னைய மூன்றினும் ஆசிரியனறிவுறுக்கும் உண்மைஞான நிக மாமையின் உண்மைஞானமெனப்படுவன,—கேட்டலுடன் சிந் தித்தறெளிதனிட்டை கிளத்தலென விரண்டாம்-ஏனைக்கேட்ட ல்சிந்தித்தல்களுஞ் சிந்தித்ததனைப் பின்னர்த்தெளிதலுந் தெளி ந்தவாறே யதன்பி னிட்டை கூடுதலுமென்னு நான்கேயாம்.—நி ட்டை மேவினோர்கள் வீட்டை யடைந் திடுவர் - இம்முறை யே வந்த நிட்டைபொருந்தினோர் வீட்டினைத் தலைப்படுவர்,— மேவாது தப்பினவர்- இந்நான்கினுள் மெவுதலின்றித் தீக்கையி லத்துவ சுத்திபண்ணப்பட்டு ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தல்மா த்திரையி னின்று தப்பினவர்,— மேலாயபதங்கட் கிட்டிய பு ண்ணியநாதராகி - மேலாய பதமுத்திகட் கிட்டப்பட்ட புண் ணிய பேலிட்டால்,—இன்ப மினிதநுகர்ந்து - இன்பத்தினை யி னிதாக வநுபவித்தலாகிய பதமுத்திகளின்வைகி,—அரனருளா லிந்தப் பார்மேல்-முதல்வ ஞணையானைவைகளினின்றுநீங்கி யி வ் வுலகத்தின்,—நாட்டியநற்குலத்தினில்வந் தவதரித்து - உய ர்ந்த நற்குலத்திற்றோன்றிய தணையானே,—குருவான் ஞான நிட்டை யடைந்தடைவர் நாதனருளே - ஆசிரியன் மாட்டுக் கேட்டன் முதலிய நெறியான் நிட்டையினைத் தலைக்கூடி வீடு பே றடைவர்.

இவையிரண்டு செய்யுளானு மேற்கூறிய ஞானமாவது இத்துணைப் பகுதித்தென்பதூஉம் அவற்றுட் பொதுச்சிறப் பாமாறு மவற்றிற்குரிய பயன்வேறுபாடு முணர்த்தியவாறு.

## மறைஞானதேசிகர் உரை.



நிட்டை கூடாதோர் திரும்புதலன்றி வேசத்தின்வழி நின்று தானஞ் செய்தோர் பெறும்பேறும், சரியைமுதலியவழியினின்றனுட்டித்தவர் அபரமுத்தியை யடைந்ததற்கும்,பக்குவர் பரமுத்தியை யடைவரென்பதூஉ முணர்த்து கின்றார்.

தானம்யா கந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள் சாந்திவிர தங்கன்ம யோகங்கள்சரித்தோர், ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின்மீள்வ ரீசன்யோ கக்கிரியா சரியைதனின்முயன்றோர், ரூனமிலா முத்திபதம் பெற்றுலகமெல்லா மொடுங்கும்போ தரன்முனிலா தொழிலிலுற்பவித்து, ஞானநெறி யடைந்தடைவர் சிவனையங்கு நாதனை முன்னிற்கி னணுகுவர்நற்றோரே. (உரு)

தானம் — துலாபுருட முதலிய மகாதானஞ் செய்தவர்களும்

யாகம் — அக்கினிட்டோம முதலிய யாககன்மத்தை யனுட்டித்தவர்களும்

தீர்த்தம் — தீர்த்த யாத்திரைசெய்து கங்கைமுதலிய தீர்த்த மாடினவர்களும், கோடி தீர்த்தங் கடந்து குளிக்கினும் பலமில்லை யென்றார்.

ஆச்சிரமம் — பிரமசரிய முதலிய நாலாச்சிரமத்தின் வழிநின் றனுட்டித் தவர்களும்

தவங்கள் — விரத சாந்திராயணங்களினாலே சரீரத்தைவாடப் பண்ணினவர்களும்

சாந்தி — பரிகாரம்

விரதம் — "வீடுஞானம்வேண்டுவ திரல்விரதங்களால், வாடிஞான மெனுமவதென் அடிசேர்வது ஞானமே" என்பதனால் மாதோபவாச முதலிய விரதங்களை யனுட்டித்தவர்களும்,

கன்மயோகங்கள் சரித்தோர் — கன்மயோகத்தின்வழி நின் றனுட்டித்தவர்களும், இவர்களெல்லாரும்

ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின மீள்வர் — சுருதிவழி யொழுகினவர்கள் சுவர்க்கத்தார், என்பதனாற் சுவர்க்கத்தி லுண்டான போகங்களைப் புசித்துத் தொலைந்தவாறே இமைக் கொட்டி விழிக்குமுன்னே பூமியின் கண்வந்து பிறப்பர்கள். சைவர்க ளடையும் பலமியாதெனில்?

ஈசன் யோகக் கிரியா சரியைதனின் முயனறோர் — சிவ னருளிச்செய்த திவ்வியாகமங்களிற் கூறிய சரியை கிரியை யோகமெனனு மிம்மூன்றினு மனுட்டித்தவர்கள்

ஊன மிலா முத்திபதம் பெற்று — குற்றமில்லாத சாலோக சாமீப சாரூபமாகிய பதமுத்திகளை யடைந்திருந்து. இவைவடமொழி.

அஃதாவது ஸ என்றது அவனென்றதாம். அவனுலோகத்தை யவன் சமீபத்தை அவ னுருபத்தை எனவறிக.

இப் பதமுத்தியாவது மிச்சிராத்துவாவிற் பிரளயாகலப்பிராப்த்தியைப் பெற்றிருக்கிற ஸ்ரீகண்ட பரமேசுரன் எழுந்

தருளி யிருக்கும் சிவலோகத்திற் பதமுத்தியைப் பெற்றிருக்க லெனவறிக.

உலக மெல்லா மொடுங்கும்போது — அசுத்தமாயை சங்காரப் படும்போது பக்குவரிற் சிலருக்குச் சிவன் சாந்நித்தியமாகி மேலான நாத தத்துவத்தை யடைந்திருந்து மகாசங்கார காலத்திற் பரமுத்தியை யடைவிப்பது.

அரன்முனிலா தொழியில் — சிலர் பக்குவ மில்லாதபடியினாலும் போகத்தில் விருப்பத்தை வைக்கையினாலும் அவர்களுக்குச் சிவன் சாந்நிதியமாய்த் திருவடியைக் கொடுத் தனுக்கிரகஞ் செய்யா திருப்பானாகில் அப்பொழுதவர்கள்

உற்பவித்து — அந்தப் பிரகிருதியினின்றுஞ் சங்கரிப்புண்டு மீளவுஞ் சிருட்டிக்கப்பட்டு சநநமெடுத் தந்தப் போகங்களைப் புசித் ததில் வையிராக்கியம்பிறந்து முத்தியடையவேணு மென்னு மிச்சையுண்டாய்

ஞானநெறி யடைந்து — முன் சநநத்தில் விட்ட குறையினாலே ஞான யாகத்தை யடைந்து கேட்டல் முதலியவற்றின் வழியே யனுட்டித்து நிட்டை பொருந்தி நின்று

அடைவர் சிவனையங்கு — அந்த வான்மாக்கள் பிரகிருதி சிவலோகத்தை முன்புபோ லடைவர்கள்.

அஃதெங்ஙன்போல வெனில்? சுந்தரப்பெருமானாயனார் சிவலோகத்தினின்று பூமியின்கண் வந்து சரீரமெடுத்து என்னை யொருவனாக வகுத்தனை யென்று திருவுளஞ் செய்த ஞானநிட்டா பலத்தாலே பிராகிருதமான வடிவுடனே போகக்கண்டோமே!

நாதனே முன் அவ்விடத்துச் சிவன் சாநித்திய மாகில்
னிர்கி னுறுவ மாயைக்கு மேற்பட்டு நாத தத்துவத்திற்பு
ர் நற்றுளே. வனபோகங்களைப் புசித்திருந்து மகாசங்கா
ரகாலத்திலே சிவ னவர்களை யவலோகனம் பண்ணிப் பரமமு
த்தியான அவனதழகியதிருவடியை யடைந்திருப்பர்கள். எ-று.

பரமமுத்தி யாதலினு னற்றுளெனச் சிறப்பித்தார்.

சரித்தோர் மீள்வரெனவும் நற்றுள் நணுகுவர் எனவும் எழுவாய் பயனிலைக் கூட்டுக.

இதற்குச் சிவதருமோத்திரம் சுப்ரபேதம் மிருகேந்திரத்துமறிக.

உலகமெலா மென்று சொல்லியிருக்க மாமாயைக் கூறும ல் அசுத்த மாயையைக் கூறிய தென்னெனில்? ஜகத்சப்தேன மாயாந்தம்'' என்றுமதங்கத்து வசனமுண்டானபடியாலே மாயையே கூறியதெனவறிக.

சுத்தாத்து வாவைப் பொருந்தினவர்க ளெல்லாருஞ் சிவ னல்லயரென் றேருதலால் அவர்கள் திரும்பார்கள்.

விசிட்டமான கன்மபரிபாகத்தாலே புரியட்டக வுடலை யெடுத்துப் பொல்லாதென்ற சகலயோனிகளைப் பொருந்தி யெல்லா விடயஞானங்களையுங் கலையடைவே புசித்துத் தொலைந்தவாறே பிரளயா கலராய்ப் பின்பு விஞ்ஞானகல ராவர்களெனவறிக.

''விஞ்ஞான கன்மத்தான் மெய்யட் டகங்கூடி, யஞ்ஞானகன்மத் தாற் சகலயோனிபுக், கெஞ்ஞானமு மெய்தி யிடையிட்டு மீண்டுபோய், விஞ்ஞானராய்ச்சிவ மேவுவ துண்மையே'' எனவறிக. (௨௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



முந்தின விருத்தத்திலே வைதிகதரும மிருவகை சிவதரு மமாகிய சிவபூஜாதிகளே செய்யவேண்டுவதாகக் கூறிய தென் னையென்னும்சங்கையைப்பண்ணிக்கொண்டுத்தரங்கூறுகின்றது.

தானமியாகந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள் சாந்திவிரதங்கன் ம யோகங்கள்சரித்தோ ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பள வின்மீள்வர் - ருஷிப் * புரோக்தங்களான ஸ்மிருதியாதி தரு ம சாஸ்திரங்களிலே சொல்லும் பூதானமுதலாகிய தானங்கள், அக்னிஷ்டோமாதியான யக்கியங்கள், தீர்த்தயாத்திரை பிர ம சாரியாதி யாச்சிர மாநுஷ்டாநங்கள், பஞ்சாக்கினி மத்திய † வர்த்தித் துவாதிதபசுக்கள் பிராயச்சித்தங்கள், கிருச்சிர சா ந்திராயணாதி விருதங்கள், அடையோகங்க ளிவைபிற்றுகளைப் பண்ணினபேர்; துக்கமில்லாமல் சுகமே யனுபவிக்குந் தலமா கையினால் சுவர்க்கமென்று பெயராயுள்ள தேவலோகத்தை யடைந்து சுகத்தைப் புசித்துக் கன்மத்துக் கீடான தேகத்தை யெடுப்பர்கள்.—

இமைப்பளவிலென்றது-சிறிதுகால மென்பதற்கு உபலக்ஷ ணம்.

ஈசனியோகக்கிரியா சரிதையினின் முயன்றோ ரூனமிலாமுத் திபதர்பெற்று - சிவப்புரோக்தமாகிய காமிகாதி யாகமங்களி லே சொல்லும் சரிதைகிரியா யோகங்களை யனுட்டித்தபேர் குறைவற்ற சாலோக சாமீப சாரூபமென்னும் பதமுத்திகளைப் பெற்று பிரளய பரியந்தமும் அவ்விடத்திருந்து—

உலகமெலாம் ஒடுங்கும்போ தரன்மு னிலாதொழிவி லிங் குற்பவித்து ஞானநெறி யடைந்தவர் சிவனை-பிரளயாரம்ப மள வும் போகத்திலே வைராக்கியம் பிறவா திருக்குமாகில் அர ன

வர்களிடத்தில் சாந்நித்தியம் பண்ணார். பண்ணாதொழியவே பிரளய முடிவாய்ச் சிருஷ்டி யாரம்ப மெவ்வளவுண்டு, அவ்வளவு காலமுங் கேவலாவஸ்தையை யடைந்திருந்து சிருஷ்டிக்குப் பிற கிந்தப் பூமியின்கண்ணேபிறந் தாசாரியனாலே ஞானமார்க்கத்தைப் பெற் றந்தமார்க்கத்திலே சிவசாயுச்சியத்தை யடைவார்கள்.

நாதனே முன்நிற்கி னணுகுவர் நற்றாளே-பிரள யாரம்பத்துக்கு முன்னே வைராக்கியம் வந்ததாமாகில் சிவன் சாந்நித்தியம்பண்ணுவர், பண்ணவே சிவசாயுச்சியத்தை யடைவர்.

சிவனே என்பது நடுநிலைத்தீபம்.

ஏகார மீற்றசை.

இதனால் ஸ்மிருதியுக்த தருமத்திலும் ஆகமோக்த தருமமதிகமென்பது கூறியது.

* புரோக்தம் - சொல்லப்பட்டது, † வர்த்தித்வம் - இருக்கை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

அப்படியே ஸ்ரீமத் ஸ்ரீகண்ட தேசிகாதியர்களால் நிரீக்ஷிக்கப்படா திருந்து சிலர் மகாப்பிரளய முடிவில் சிவநிரீக்ஷணத்தால் பரமுத்திமான்களாவார்கள், ஸ்ரீமத் ஸ்ரீகண்டாதி நிரீக்ஷணம்போல சிவ நிரீக்ஷணமு மில்லாதார் மற்றும் மகாசிருஷ்டியிற் பூமியிற் புவனங்களிற் முன்ஜன்மித்துப் புவன குரு குலங்களாற் றீக்ஷிக்கப்பட்டுச் சிவசமாதிபண்ணிப் பரமுத்திமான்களாவார்களென்று பாஷிக்கின்றார்.

இமைப்பளவில் - நித்திய நிலையின்றி,—ஈசன் யோகமென்றது சாலம்ப சிவயோகமாதலால் ஈசன் யோகக் கிரியா சரியை

தனி னினேமுர் நிராலம்ப சிவசமாதி நிலைகெட்டு நிலைபெறுதோ ருமென்று வருவித்துக்கூட்டுக,— முத்தி - பதமுத்தி.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

'மேலேமேலே போயும் மீளுதற்கேதுவாகிய பசுபுண்ணிய ம்போலன்றி, மேம்பட்ட சரியைமுதலிய சிவபுண்ணியங்களை விதிவழியனுட்டித்தோரும், மேவாது தப்பினவரோடொப்ப த் தத்தமக்குரிய பதமுத்திகளி னெடுங்காலம்வைகி முடிவின் க ணவ்வாற்றானும் ஞானநெறியைத் தலைப்பட்டே வீடெய்து வரென்பதாம்.

இதனானே சரியைமுதலியவற்றிற்குப் பயன் மேற்கூறிய சாலோகமுதலிய பதமுத்திமாத்திரையே போலுமென்னு மா சங்கையை நீக்கியதூஉமாயிற்று.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

ஆன்மாக்கள் புண்ணியங்களைச்செய்து போகங்களைப் புசி க்குமிடத்து இருக்கிற பதங்களெல்லா மொத்திராமல் ஒன்று க்கொன்று ஏற்றக் குறைந்த தென்னம்பு என்ற மாணுக்கனைநோ க்கி யருளிச்செய்கிறார்.

தானம் - கோதான பூதான முதலாகவுண்டான தானங் கள்,—யாகம் - சோமயாக முதலான யாகங்கள்,—தீர்த்தம் - கங்கைமுதலான தீர்த்தங்கள்,—ஆச்சிரமம்-தேவதாருவனமுத லான ஆச்சிரமங்கள்,—தவங்கள் - பஞ்சாக்நி நடு ஜலத்தின் னடுமுதலாகச் செய்கிற தவங்கள்,—சாந்தி - நன்மைப்பகுதி

களைப் பொருந்தியிருக்கிற சாந்திகள்,—விரதம் - மாகேோபவா சம் அட்டமிவிரத முதலான விரதங்கள்,—கன்மயோகங்கள் - சிவயோகமன்றியே சரீரவருத்தமாகச் செய்யப்பட்ட யோகங் கள்,—சரித்தோர் - தான முதலானவற்றைச் செய்தவர்கள்,— ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவில் மீள்வர்-குற்றமற்றி ருக்கிற சுவர்க்கத்தைப் பெற்று அவ்விடத்திலுண்டாகிய வின பங்களை யனுபவித்து அது தொலைந்தவாறே ஒரு கணப்பொழு திலே பூலோகத்திலே மீண்டு வருவர்கள். இந்தப் பசுபுண்ணிய த்தின் முறைமையன்றியும்,—ஈசனியோகக்கிரியா சரிதையினி னின்றோர் - பரமேசுவர னருளிச்செய்த சிவாகமஞ் சொன்ன முறைமையிலே சரிதை கிரியை யோகங்களை யனுட்டித்தவர்க ள்,—ஊனமிலாமுத்திபதம்பெற்று - குற்றமற்ற சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பியமென்னும் பதமுத்திகளைப்பெற்று சருவச ங்காரம் வருமளவு மந்தப்பதங்களிலுண்டாகிய போகங்களைப் புசித்துக்கொண் டிருப்பார்கள்.— உலகமெலா மொடுங்கும் போது -பிரபஞ்சமெல்லாஞ் சங்காரப்படும்பொழுது,—அரன் முனிலா தொழியின - பரமேசுவர னிவர்களை யந்தவவசர த்திலே முன்னின்று இரக்ஷியானாகில்,—உற்பவித்து - மீண்டுஞ் ஜநநத்தையடைந்து,—ஞானநெறி யடைந்தடைவர் சிவனை-மு ன்பு விட்டகுறையிலே அந்த ஞானத்தைப் பொருந்தி ய தின்வழித்தா யந்தஞானத்திலே சிவனைப் பெறுகிற்பார்க ள்.—அங்கு நாதனேமுனனிற்கில் நணுதுவர்நற்றாளே - அந்தச் சங்காரகாலத்திலே பரமேசுவரன் முனனின்று இரக்ஷிப்பானா கி லப்பொழுதே யவனுடைய நன்மைப்பகுதியா யிருந்துள்ள சீ ர்பாதத்தைக் கூடாநிற்பர்கள்.

இதனாற் சொல்லியது, தான மியாகமுதலான பசுபுண்ணி யங்களைச் செய்தவர்கள் சொர்க்காதி பதங்களைப்பெற்று அங்கு

ள்ள சுகங்களை யனுபவித்துத் தொலைந்தவாறே இமைப்பிற் பூலோகத்திலே வருவர்களென்றும், சிவ புண்ணியமென்று சொல்லப்பட்ட சரியை கிரியை யோகங்களைச் செய்தவர்கள் பதமுத்திகளைப் பெற்றிருப்பர்களென்றும் சங்காரகாலம் வந்த வவசரத்திலே பரமேசுவரன அனுக்கிரகிக்கி லவ்விடந்தனிலே சாயுச்சியத்தைப் பெறுவர்களென்றும் அவ்விடத்தி லனுக்கிரகஞ் செய்தானில்லையாமாகில் மீளவுஞ் ஜனனத்தை யெடுத்து ஞானத்தினாலே சிவனுடைய சீர்பாதத்தைப் பெறுவர்களெனனு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தானம் - தானங்கள் செய்தலும்,— யாகம் - யாகங்களியற்றுதலும்,—தீர்த்தம் -புண்ணியதீர்த்தங்க ளாடலும்,—ஆச்சிரமம் - தத்தநிலைகளிற் றவருது நுட்டித்தலும்,—தவங்கள்-தவங்களியற்றலும்,—சாந்தி - பிராயச்சித்தங்க ளியற்றலும்,—விரதம்-விரதங்களியற்றலும்,—கனமயோகங்கள் சரிதத்தோர் - கனமயோகங்க ளியற்றலுமாகிய வினைகளை யநுட்டித்தோர்,—ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின மீள்வர் - ஈனமிக்குடைய சுவர்கலோகத்தினைப்பொருந்தி யநுபவித்து மீள்வராகலின மேலேமேலேபோயும் மீளுதற்கேதுவாகிய பசுபுண்ணியம்போலன்றி,—ஈசன் சரியைகிரியாயோகத்தினின் றோர் - முதல்வன விதித்த மேம்பட்ட சரியைகிரியாயோகங்களாகிய சிவபுண்ணியங்களைவிதிப்படி யநுட்டித்தோரும்,—ஊனமிலா முத்திபதம்பெற்று - மேவாது தப்பினவ ரோடொப்பத் தத்தமக்குரிய பதமுத்திகளி னெடுங்காலம்வைகி,— உலகமெலாமொடுங்கும்போ தரன்முநிலா தொழியின்-பிரபஞ்சமெல்லாஞ் சங்

காரப்படும்பொழுது முதல்வன் முன்னின்றருளானாகில். —உ
ற்பவித்து ஞானநெறியடைந்த சிவனையடைவர் - மீட்டுஞ் சன
னத்தையுற்று முடிவின்கணெவ்வாற்றானுங் குருவருளான் ஞா
னநெறியைத் தலைப்பட்டே வீடெய்துவராகலின்,—அங்ஙனா
தனைமுன்னிற்கில் நற்றுணையாதவர்-மேற்கூறிய சரியைமுதலிய
வற்றினனேறு முதல்வனருள்பெற்று திருவடியிற் கலப்பர்.

இதனானே சரியைமுதலியவற்றிற்குப் பயன் மேற்கூறிய
சாலோக முதலிய பதமுத்தி மாத்திரையே போலுமென்னு
மாசங்கையை நீக்கியதூஉமாயிற்று.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலெய்தியது விலக்கிச் சிறப்புவிதி யுணர்த்துகின்றார்.

சிவஞானச் செயலுடையோர் கையிற்றானந் திலை
மளவே செய்திடினு நிலமலைபோற்றிகழ்ந்து, பவமாய
க் கடலிலழுந் தாதவகையெடுத்துப் பரபோகந் துய்ப்
பித்துப் பாசத்தையறுத்த, தவமாரும் பிறப்பொன்
றிற் சாரப்பண்ணிச் சரியைகிரியாயோகந் தன்னினுஞ்
சாராமே, நவமாருந் தத்துவஞானத்தைநல்கி நாதன
டிக் கமலங்கணணுகுவிக்குந்தானே. (உசு)

| | |
|---|---|
| (இ-ள்.) சிவஞானச் செயலுடையோர்கையிற் றானந் திலமளவே செய்திடினும் | சிவஞானத்தினுடைய செயலை யுணர்ந்த ஞாதாக்களிடத்தி னெள்ளளவுபொருள் தானங் கொடுக்கினும் ஆசையற்ற ஞாதாக்கள் தானம்வாங்கில் அவர்களும் நம்மைப்போலே விருப்ப முடையவர்களாகார்களோ வெனில்? |

"மெய்ப்பினையுணர்ந்தஞானி வேணவா விடுத்தானேனும், மூப்பவே பிறவையுன்னி யவர்கொடை யுகப்பன்" என்பதனு லறிக.

நிலமலைபோ ற்றிகழ்ந்து — நிலமானது மலையானது மெய்ப்படி நாடோறும் வளருமோ அதுபோல்இந்தப் புண்ணியமும் பிரளயபரியந்தமும்நின் றந்தந்த வவதரத்துக்குப் போகத்தைக் கொடுக்கும்

"கருமிகட் கீகைநிற்குங் கலந்தொரு பிறப்பிற்சுற்ற, பெரியராந் தவத்தோர்க் கீகை பிறப்பொரு நூறுநிற்கு, மரியமந் திரத்தார்க்கீகை யாயிரம்பிறப்புநிற்கு, மூரியயோகிக்குஞானிக் கூழிபேரூழிநிற்கும்" என்பதனு லொன்றுக்கொன்று விசேட்ட மெனவறிக.

பவமாயக்கட லி லழுந்தாதவ கையெடுத்து — இந்தப் பலங்கொடுத்த தாதாவை ஜநநமரணமாகிற கடலிலே கிடந் தழுந்தாதபடி கரையேற்றி

பரபோகந் துய்ப்பித்து — அபர போகங்களைப் புசிப்பியாமல் மேலான போகங்களைப் புசிப்பித்து

அவ்விருவகை யாவன? மாயாகாரியமாகிய புவனங்களிலிருக்கு மமகேசாதிகளான உருத்திரர்கள் புசித்திருக்கும் போகம் அபரபோக மெனவறிக.

சுத்தமாயா காரியமாகிய சுத்ததத்துவ புவனங்கள் வித்தியேசுரர் முதலாயினூர் புசித்திருக்கும் போகம் பரபோகமெனவறிக.

சுத்த தத்துவ புவனவாசிகளுக்குக் கன்மமில்லாமையாலவர்களுக்குப் போகங் கூடாதெனில், பிரளயாகலருக்குக் கன்ம முண்டாதலால் அபரபோக மெனறூர்.

விஞ்ஞான கலருக்குக் கன்மங் காரணமன்று மலபரிபாகமே காரணமாதலானும், சுத்தகன்ம முண்டென்று ஆகமங் கூறுகையாலும் பரபோகத்தைப் புசித்திருப்பர்களென வறிக.

பாசத்தைய றுத்துத் தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணி — அநேக ஜநநமெடுத் தடைதற் கரிதாகிய முத்தியை யெளிதினிலடைதற்குத் தவத்தைப்பண்ணுதற் கேற்றதொரு ஜநநத்தை யெடுப்பித்து ஞாநாசாரியரை யெளிதினி லடைதற்குத் தவத்தைப் பண்ணுதற் கேற்றதொரு ஜநநத்தை யெடுப்பித்து ஞாநாசாரியன் றீக்கையிலே பாசத்தைச் சேதிக்கும்படி பண்ணி,

சரியைகிரியா யோகந் தன்னினுஞ்சாராமே — சரியை முதலியவற்றைப்பொருந்தி யதனாலே வருந்தி யனுட்டித் தந்தப் பலத்தினாலே யடையவேணுமென்னும் நியமமு மின்றி, இஃ தில்லாவிடத் தெக்காரணத்தாலெனின்?

நயமாருந் தத்துவ ஞானத்தை நல்கி — நினைக்குந்தோறு நினைக்குந்தோறும் புதுமைபொருந்தி யிராநின்ற சத்தியஞானத்தைக் கொடுத்து,

நாதனடிக் கமலங்க ணணுகுவிக்குந் தானே. — அந்தத் தான பலத்தினாலுண்டாகிய ஞானந்தானே சிவனது திருவடித் தாமரைகளைப் பொருந்துவிக்கும். எ-று.

தானம் - எழுவாய்.

நணுகுவிக்கும்-பயனிலை.

இதற்குச் சிவதருமோத்தரம் மிருகேந்திரம் பௌட்கரத்து மறிக. (உகு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் தானமும் சாமானியருக்குக் கொடாமற் சிவஞானிக்குக் கொடுக்கில் சுவர்க்க பலமாத்திரமன்றி முத்திக் கேதுவாமென்பது கூறுகின்றது.

சிவஞானச் செயலுடையோர்கையிற் றானந்நிலமளவுசெய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து பரபோகந்துய்ப்பித்து-காஷ்டத்திலே மறைந்திருந்த அக்கினியானது * மதனத்தினாலே பிரகாசித்துக் காட்டத்தை மறைத்துத் தானேயாய் நின்றதுபோல முன் னான்மாவிலே மறைந்திருந்த சிவனது ஞானக்கிரியாசத்திகள் கேட்டல் சிந்தித்தல் தெளிதலினாலே ஆன்மாவினுடைய ஞானக்கிரியா சத்திகளிலே பிரகாசித் தவைகளை யடக்கித் தானேயாய் நிற்கும். அவ்வாறு பெற்றபேர் சிவஞானச் செயலுடையோர். அவர்கள் கையிலே யெள்ளளவாகிலும் ஒருவஸ்துவைப் பக்தியுடனே கொடுத்தால் அது ரத்தினங்கள் முதலான சர்வ வஸ்துக்களையு முடைத்தாய்ப் பஞ்சாசத்கோடி விஸ்தீரணமுமா யிருக்கும் பூமியையும் ஸ்வர்ணமயமாகிய மகாமேருவையும் வேத வேதாங்கங்களை யோதியுணர்ந்து வழுவற அக்னிஷ்டோமாதி சத்திரயாக பரியந்தம்பண்ணுங் கன்மகாண்டிகையினாலே கொடுத்த தநிலும் அதிகமாக விளங்கி இந்திரலோக முதலான வுலகங்களிலே மேலான போகங்களைப் புசிப்பித்து,—பவமாயக கடலி லழுந்தாதவகையெடுத்துப் பாசத்தையறுத்துத் தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணி-ஆசாரியனாலே ஜநந மரணமாகிய மாயா சமுத்திரத்திலே நின்றுங் கரையேற்றி யாணவ மாயை கன்மமென்கிற பாசத்தையொழிக்கும்படிச் சிவதருமமாகிய † தபோதநருடைய குலத்திலேயொரு ஜநநத்தை யெடுப்பித்து,—சரிகைகிரியாயோகந் தன்னிலும் சாராமே - சரிதைகிரியா யோகங்களைச் சாதியாமலே,—நவமாருந் தத்துவஞானத்தைநல்கி - புதுமையாகவே பரதத்துவமாகிய சிவஞானப் பிரகாசத்துக் கேதுவாய்,—தாதனடிக் கமலங்க ணணுகுவிக்குந்தானே - சுவாமியாகிய சிவனுடைய சாயுச்சியத்தை யடைவிக்குஞ் சிவஞானிகள் கையிற் றானமென்றிதன்பொருள்.

* மதனம் - கடைதல், † தபோதநர் - தவத்தைத் தன மாகவுடையார்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

நிஷ்பிரபஞ்சமாதி நிலைபெற்றோர் பெருமை நிகழ்த்துகின்றார்.

சிவஞானச் செயலுடையோர் - நிராலம்ப சிவயோக சமாதி மான்கள்,—சித்துவஞானத்தை - நிராலம்ப சிவயோக சமாதியை,—நல்கி - கொடுத்து,—நாதனடிக்கமலங்கள் - நானாது ஞானக்கிரியா சத்திசமான சத்திலக்ஷண சிவத்துவத்தை.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

விதிவழியின்றிப் பத்திவழியினின்று பதமுத்தியைப் பெற்றோரும் முடிவின்கண் ஞானநெறியைத் தலைப்பட்டே வீடெய்துவரென்பதாம்.

பத்திநெறியினின்றோர்க்குப் பக்குவ மிகுதிப்பாட்டாற் சரியைகிரியாயோகம் எளிதிற் கைகூடி முற்றுப்பெறுவனவன்றி ஏனோர்க்குப்போலக் காலநீட்டிப்பும் அருமையுமுடையனவல்லவென்பார், சரியைகிரியாயோகந் தன்னினுஞ்சாராமேயென்றாராகலின், சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வரென மேற்கூறிய சோபானமுறையோடு முரணாமையறிக.

இவை நான்கு செய்யுளானும் ஐவகைவேள்வி யாற்றினோர் பெறும் பயனும் சரியைமுதலியவற்றிற் சரித்தோர் பெறும் பய

னும் சிவஞானிகட்குச் செய்யுந் தானப்பெருமை கூறுமுகத்தா ற் பத்திநெறியினின்றோர் பெறும் பயனும் உணர்த்துமுகத்தா னே, எந்நெறியினின்றோர்க்கும் வீடுபேறெய்துதற்கண் ஞான நெறியாகிய சன்மார்க்கம் இன்றியமையாச் சிறப்பிற்றென்பது கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

பாத்திரா பாத்திரங்களை யறிந்து தானஞ்செய்யு முறை மை யருளிச்செய்கிறார்.

சிவஞானச் செயலுடையோர் கையிற் றானந் திலமள வே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து - தேகாதிப் பிரபஞ்ச த்தைவிட்டு நீங்கியிருக்கிற சிவஞானிகள் கையிலே கொடுக்கப்ப ட்ட திரவிய மோ ரெள்ளளவாகிலும் அது பூமியின்கண் ணுண் டான மகாமேருவென்னச் சக்கிரவாளகிரியென்ன விட்டுவிளங் கி,—பவமாயக்கடலி லழுந்தாதவகை யெடுத்து - ஜனனமரண மாகிய மயக்கத்தைப் பொருந்தியிருக்கிற துக்கசாகரத்திலே வி ழுந்து அழுந்தாதபடி யெடுத்து,—பரபோகந் துய்ப்பித்து - மே லானபோகங்களைப் புசிப்பித்து,—பாசத்தையறுத்து- பாசங்க ளை நாசமாக்கும்படி,—தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண் ணி-அரியதவசுகளைச் செய்யத்தக்க கோத்திரங்களிலேவந்து ஒ ருஜனனமெடுத்து,—சரிதை கிரியாயோகந்தன்னிலுஞ்சாராமே- சிவஞானிகள் கையில் கொடுக்கப்பட்ட தானமாகையாலே திரி வித கரணங்களிலுண்டாகிய தொழிலாலே செய்யுஞ் சரிதை கி ரியை யோகமென்று சொல்லப்பட்டவையிற்றிலும் பொருந்தா மல்,—நவமாருந் தத்துவஞானத்தைநல்கி - நாளுநாளும் புது மைபொருந்தி யிருக்கப்பட்டாநின்ற வுண்மை ஞானத்தையும்

கொடுத்து,—நாகனடிக்கமலங்கள் நண்ணுவிக்குந்தானே - தம்பிரானுருடைய சீர்பாத கமலங்களிலேதானே பொருந்திவிக்கும்.

இதனாற் சொல்லியது, திலமளவாயினுஞ் சிவஞானிகளுக்குச் செய்ததான மகாமேருபோல மகத்தாகிய பிறவிக்கடலிலே நின்றுமெடுத்து மேலான போகங்களைப் புசிப்பித்து பாசநாசமாம்படி தவகோத்திரத்திலேவந்து ஒரு ஜனனமெடுப்பித்துச் சரிதை கிரியை யோகங்களையும் அனுட்டியாமல் உண்மை ஞானத்தை யுண்டாக்குமென்றும் அந்த ஞானந்தானே தம்பிரானுருடைய திருவடித்தாமரைகளிற் கூட்டுவிக்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சிவஞானச் செயலுடையோர்கையிற் றானம் - விதிவழியின்றிப் பத்திவழியினின்று சிவஞானிகள் கையின்கண் தானஞ்செய் தளித்தபொருள்,—திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து-சிறிதாயினு நிலமலைபோல் வளர்தலால்,—பரபோகந் துய்ப்பித்து - மேலாகிய சாலோகாதி பதங்களை யொருதலையாகநண்ணி யாண்டுளவாகிய வின்பங்களை யநுபவிக்கச்செய்து,—பவமாயக்கடலி லழுந்தாதவகையெடுத்து - ஜனனமரணக்கடலின்க ணழுந்தாதவண்ணங் கருணைக்கையா னெடுத்து,—பாசத்தையறுக்க - பாசத்தினை நீக்கி,—தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணி - தவஞ்செய்தற்குரிய வுயர்ந்த குலத்தி லொரு பிறவியை யடையச்செய்து,—சரியை கிரியாயோகந் தன்னினுஞ் சாராமே - சரியை கிரியாயோக மேனோர்க்குப்போலக் காலநீட்டிப்பு மருமையுமின்றி யெளிதிற் கைகூடி முற்றுப்பெறச்செ

ய்து,—நவமாருந் தத்துவ ஞானத்தைநல்கி நாதனடிக் கமலங் கணுதுவிக்குந்தானே - முடிவினகண் ஞானநெறியைத் தலைப்பட்டே முதல்வன் கமலம்போன்ற திருவடியிற் கலத்தலாகிய வீட்டினை யெய்துவிக்கும்.

இவை நான்குசெய்யுளானு மைவகைவேள்வி யாற்றினோர் பெறும்பயனும் சரியை முதலியவற்றிற் சரித்தோர் பெறும்பயனும் சிவஞானிகட்குச் செய்யும் தானப்பெருமை கூறுமுகத்தாற் பத்திநெறிநின்றோர் பெறும் பயனு முணர்த்து முகத்தானே யெந்நெறியினரோர்க்கும் வீடுபே றெய்துதற்கண் ஞானநெறியாகிய சன்மார்க்கமின்றி யமையாச் சிறப்பிற்றென்பது கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை

ஆதலான் ஞானத்தினாலே தானே முத்தியென் றுணர்த்துகின்றார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள்புராண நல்லவா கமஞ்சொல்ல வல்லவாமென்று, மூனத்தா ரொன்கடவா ரஞ்ஞானத்தா லுறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞானந்தா, னத்தா லதுபோவ தலர்கதிர்முன்னிருள்போ லஞ்ஞான மறப்பந்த மறுமுத்தியாகு, மீனத்தார் ஞானங்க ளல்லாஞான மிறைவனடி ஞானமே ஞானமென்பர். (உஎ)

(இ-ள்) ஞானத்தால் வீடெ னதே நான் — நாலுவேதமும் பதினெண்புராணமு மிருபத்தெட்டுத் திவ்வியாகமங்களு மிவைக ளொல்லா ஞானத்தினாலே முத்தியென்று

மறைகள் புராண முறையிட்டுச் சொல்லியிருக்க. அவையா கல்லவாகமஞ் சொல்ல வன:-

இருக்கில், பிராமணத்திலும் உருதிரசூக்தத்திலும் ஞானத்தினாலே முத்தியெனவும்,

இரண்டாம் வேதத்தி லாரணத்திலும் ப்ரகதாரண்யத்திலும் ஞானத்தினன் முத்தியெனவும்,

சாமத்திற் சாந்தோக்கியத்தி லாறுவதில் ஞானத்தால் முத்தியெனவும்,

அதர்வசிரசில் ஈஸ்வர சாட்சாத்காரத்தினாலே முத்தியெனவும் கூறுகையாலும்,

இவைதன்றிச் சைவபுராணத்தும், சூதசங்கிதையிலும், ஞானத்தால் முத்தியென்பதாலும்,

சுப்பிரபேதத்தும் சிவதருமோத்தரத்தும் ஞானத்தினல் முத்தியென்கையால் ஆகமத்துங் கூறியதாயிற்று.

அல்லவாமென்னு மூனத்தாமொன்கடவார் இந்த ஞானத்தினாலே முத்தியில்லை கன்மத்தினாலே முத்தியென்றும் சிவதீக்ஷையினாலே தானே முததியெனறும் சர்வஞானோத்தரமுதலிய ஆகமத்தும் காந்தபுராணத்தும் பிருகு சாபதிரயத்திலும் சைவதீக்கையினாலே முக்தியென்றேதியிருக்க, 'ஈண்டு ஞானத்தால்' என்று கூறிய தென்னெனில்? 'கிரியையென மருவுமவையாவுஞானங் கிடைத்தற்கு நிமித்தம் எனக் கிளர்க்கும்' என்கையாலும்,

பார்க்கிலை தேவிகாலோத்தர மென்னு மாகமங்களிற் கிரியை சரியை யோக மிம்மூன்றும் ஞானத்துக்கு அங்கமென்

று கூறுகையால் இவ்வாசிரியரு மிக்கருத்தையேபற்றி யருளிச் செய்ததென வறிக.

அஞ்ஞானத் தாலுறுவதுகா ன்பந்தம் — இப்படி யறியாமற் சொல்லுகிறதுக்குப் பலம் யாதெனில், சரீரபந்தமான பிறப் புண்டாகையால் முத்தி யடைந்தானென்று சொல்லப்பெறு.

உயர்மெய்ஞ் ஞானந்தா ஞானத்தாலது போவது — இந்த ஞானத்தால் பெறும்பலம் யாதெ ன்னில்? அஞ்ஞானமான ஜநநமரணத் துற் று வாதையுமு மலவனது திருவடியை யடை ந்திருக்கிறதே! அஃதெனபோலவென்னில்?

அலர் கதிர் மு ன்னிருள்போல ஞ்ஞானமறப் ப ந்த மறு முத்தி யாகும் — பிரகாசத்தினை யுடைய வாதித்தன து மு ன்னே யந்தகார நிலலாம னீங்குமாறு போ ல, அஞ்ஞான மிவனைவிட்டு நீங்கினவாறே பாசபந்தமு மற்று முத்தியையு மடைவன.

ஈனத்தார் ஞானங்களல் லாஞான — பரசமயிகள் தங்காந் தெய்வத்தை யடை ந்திருப்பதே முத்தியென்பர்கள், அந்தஞா ன மிவர்கள் சொல்லு ஞானம்போலன்று, இந்தக் சிவஞானத்துக்குப் பரமு மில்லைச் சமனுமில்லை யாதலால்.

இறைவனடி ஞானமே ஞான மென்பர். — அநாதி யமல முத்தனுமாய்ச் சுத்தனுமா யாநந்தமே வடிவாயிருக்கிற கர்த்தாவினது திருவடியைச் சேர்ந்து சர்வஞ்ஞத்துவம் வி ளங்கிச் சுவாநந்தாநுபூதியைத் தினைத்திருப் பதே மேலான ஞானமென் றறிவாலுயர்ந்தோர் சொல்லுவர் கள். எ-று (உஎ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மோட்சம் ஞானத்தினாலே யல்லது சரியை கிரியா யோகங்களினு லில்லையென்பது கூறுகின்றது.

(ஞானத்தால் - ...ஞானமென்பர்) ஞானத்தினாலே முத்தியென்று நாலுவேதங்களிலும் பதினெண் புராணங்களிலும் இருபத்தெட் டாகமங்களிலுஞ் சொல்ல, அப்படியன்று யாகாதி கன்மங்களினாலே மோக்ஷமென்று சொல்லும் பூர்வமீமாம்சகரும், தீக்ஷாகன்மத்தினாலே மோக்ஷமென்று சொல்லும் பூர்வ சைவரும், குறைந்த * மதிமானகளாகையாலே என்ன சுகத்தைப் பெறக்கடவர். அவர்கள் சொல்லுங் கன்மங்களெல்லாம் அஞ்ஞானமான மாயா காரியத்தினாற் செய்வது. மாயா காரியத்தினாலே பொருந்துவது பந்தமே! நின்மலா சத்தி ஞானத்தினாலே யந்தப்பந்தம் நீங்குவது. அதெவ்வாறெனில்? விரிந்த பிரகாசத்தையுடைய ஆதித்தன்முன் னிருள் நீங்குவது போல. இவ்வாறு சிவஞானத்தினாலே அஞ்ஞான நீங்கவே பந்தம்நீங்கி முத்தியாம். அந்த ஞானந்தான் ஈனவாதிகளாகிய உலகாயிதராதி நிரீஸ்வர சாங்கியராந்தம் ஆன பெயருடைய ஞானம்போலே ஒத்த ஞானமல்ல, பின்னை ஏதென்னில்? சிவஞானமே பரமமுத்தியைக் கொடுக்கும். பரஞானமென்று பெரியோர்கள் சொல்லுவர்களென் றிதன்பொருள்.

* மதிமான் - புத்தியுள்ளவன்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



ஜடகன்மத்தால் முத்தியென்று மீமாம்சன் விளம்ப மறுத்துச் சிற்கன்மத்தாலே முத்தியென்று செப்புகின்றார்.

ஞானத்தால் வீடென்றே-நிராதார தீக்ஷையிற் றிரிபதார்த்த கர்ப்ப தீக்ஷாகலா கலாபமறிந்து பண்ணவேண்டு மாதலால்.

சிவனது ஞானசத்தி கிர்த்தியக்குறித் தீக்ஷாங்க ஞானமும் ஞானம்.

பின்னவனது தீக்ஷாக்குறிக் கிரியாசத்திச்சிறப்பிருப் பிச்சா சத்தி கிர்த்தியக்குறிச் சங்கற்ப சிற்கன்மமு ஞானம்.

அதுவன்றிச் சாதார தீக்ஷையில் திரிபாதார்த்தகர்ப்ப தீக்ஷாகலா கலாப மறிந்து பண்ணவேண்டு மாதலாற் குருவினது ஞானசத்திக் கிர்த்தியக்குறிச் சிவாகம சிரவண மனனத்தெழுந் தெளிதிற் செயற்கைத் தீக்ஷாங்க யோகாங்க ஞானமும் ஞானம்.

பின்னவனது காயிக வாசிக மானசிக தீக்ஷாகன்மமியற்றுங் காயவாக்கு மனத்தசைவு பண்ணுந் தீக்ஷாக் குறிக் கிரியா சத்திச் சிறப்பிருப் பிச்சாசத்தி கிர்த்திய சங்கற்பக்குறிச் சிற்கன்மமு ஞானம்.

அதுவன்றிச் சாதார வசத்தியோ நிருவாண தீக்ஷையிற் சீஷனது திரிபதார்த்த கர்ப்ப யோககலா கலாப மறிந்து பண்ணவேண்டுதலாற் சீஷனது ஞானசத்தி கிர்த்தியக்குறிச் சிவாகம சிரவண மனனத்தெழுந் தெளிதறச் செயற்கைத் தீக்ஷாங்கயோகாங்க ஞானமு ஞானம்.

பின்னவனது யோகக்குறிக் கிரியாசத்திச் சிறப்பிருப் பிச்சாசத்தி கிர்த்தியக்குறிச் சங்கற்ப சிற்கன்மமணைந்த ஞானசத்தி கிர்த்தியக்குறிச் சிறப்பு ஞானப்பிரவாக தீக்ஷாங்க யோகாங்க தியானமும் ஞானம்.

தியானத் தசைவறு தற்குறித் தியான சாத்திய தீக்ஷாங்க யோகாங்க சமாதியும் ஞானம்.

சமாதி சாத்திய திருக்கிரியாச்சுறி யோகப்பேர் விசேஷப ரமுதந்தி சாக்ஷாத்கார சாதன தீக்ஷாங்க சதேக சிவன் முதந்தி சாக்ஷாத்காரமும் ஞானம்.

இஞ்ஞானங்களிற் சிறிதிற் றுதான்மியமாயுஞ் சிறிதி லாரூடமாயு மனுசரிக்குஞ் சாக்ஷான் மோக்ஷமும் கிடைப்பிக்கும் சங்கற்ப தீக்ஷண நிரீக்ஷணம் பண்ணுஞ் சிவக்கிரியா சத்திச் சிறப்பிருப்பிச்சாசக்தி லக்ஷண தீக்ஷையும் ஞானம்.

அப்படிச் சுப்பிர பேதம், சுவாயம்புவம், பௌஷ்கர முதற் சிவாகமங்களிற் சிறப்பித்திருத்தலால் தீக்ஷையும் ஞான மென்பது சிவாகமப் பிரசித்தம்.

விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென மவரவர்க் கருகமாய் விட்டுக் கூட்டி விதிக்கும் அநேக வித ஞானத்தால் மோக்ஷ மென்றே பொதுச் சிறப்பாய்,—

நான் மறைகள் புராண நல்லவாகமஞ் சொல்லவல்லவா மென்று மூனத்தாரெனகடவார் - பிராகிருத காமிக வாசிக மானசிக ஜடபந்த கன்மத்தால் முத்தியென்று செப்பும் ஞானினராகும் கன்ம மீமாம்சர் முதலோர் ரேது பிரயோஜனத்திற் கருகர், நிஷ் பிரயோஜனர்களே!—

அஞ்ஞானத்தால் - அஞ்ஞான மூலவஞ்ஞானப்பெய ராணவமல மாரோபித விபரீத ஞானரூப போகக் கிரியாகர்த்திருத்துவக்குறி போக்த் திருத்வத்தால்,—

உறுவது தான் பந்தம் - மாயா கன்ய தேகபோகம் கட்டிப் பொருந்தும்.—

உயர் மெய்ஞ்ஞானந் தானுனத்தால் - சொல்லிய வந்தச் சிவ தீக்ஷா சிவஞான சிவயோக சிவ சரியாங்கி யங்கஞானத்தால்.—

அதுபோவது - அந்தப் பந்தம் நீங்குவது. காரண மிருக்கக் காரிய மெப்படிப்போம்?—

அலர்கதிர்முன் னிருள் போல் - சூரிய கிரண சந்நிதானத்தி லந்தகார மொப்ப,—

அஞ்ஞான மறப் பந்தமறும் - மலம் நீங்க மாயா கன்மக் கட்டு விடும்—

முத்திபாகும் - பின் சிவத்துவாபிவியத்தி சித்திக்கும்.

சொல்லிய அங்காங்கி ஞானங்களு ளங்கி ஞான முக்கிய மென்ப தறைகின்றார்:—

ஈனத்தார் ஞானங்க ளல்லாஞானம் - சிவ தீக்ஷா சிவஞான சிவயோக ஞானபாத்திரர்களல்லாச் சாங்கியன் வேதாந்தி முதலோர் சொல்லும் பிரகிருதி புருஷ விவேகப் பிரம விவேக பவுருஷ ஞானங்கள் சைவைகதேசிகள் சொல்லுஞ் சீவ சிவ ஐக்கிய விஷய சிவசத்திப் பிரமாணிக பௌருஷப் பிரமிதிக குறித்தீக்ஷாங் காங்கி ஞானம்.

இவைகளல்லா ஞானம் சங்கற்ப சிற்கன்ம கிர்த்திய ஞான கரண ஞானம்:—

இறைவனடி ஞானமே - சிவக்கிரியா சத்திச் சிறப்பிருப்பிச்சாசதந் லக்கண சிவதீக்ஷையே —

ஞானமெனபர் - ஞானச் சிறப்பென்று சிவ சிந்தாந்திகள் செப்புவார்கள்.

சைவ சித்தாந்திப்போல் மறைந்து சாங்கிய வேதாந்தி மதத் தாபாசர்களாய்ச் சஞ்சரிக்கு சிலர், தியான சமாதிச் சிற்கன்மச் சிறட்பு ஞானமுரு செப்பாது ஞானத்தியான சமாதி சீவன் முத்தி சாக்ஷாத்கார சர்வாங்காங்கியாயிருக்கும் தீக்ஷையை ஞானத்துக் கங்கமென்று மாறிக்கொண்டு சீவ சிவ ஐக்கிய விஷய சிவசத்திகரண நைமித்திக பௌருஷ போத ஞான மா

த்திரமே இறைவனடி ஞானம், அதுவே சமாதி, அதுவே ஞான மென்பர்.

அவர்கள் முன்னுசாரியர் தீக்ஷையே மோக்ஷ சாதன மென் றநேகந் திருவிருத்தத்தில் விஸ்தரித்த வாக்கியங்களுக்கு முன்பின் விரோதமாய்ப் பொருள்கொள்ளாது தங்கள் மனக்கொள்கைக் கிணங்கப் பொருள கொண்டு முன் பின் விரோதிககப் பண்ணி யக்குருவாக்கியங்களைப் பிராந்த வாக்கியங்களாகவும் விப்பிரலம்ப வாக்கியங்களாகவும் பண்ணிப் பேசும் பேயர்களோடு பேச்சே திருக்கின்றது.—

ஏதிப்போ நீர் நீதிதப்பிச் செப்பிற்றெனறு நிகழ்த்தியது? மலங்குணமது அஞ்ஞானமே, அஞ்ஞானங் குணகுணிதிரவியமன்று. மலமாகுமந்த வஞ்ஞானமுஞ் சிப்பி வெள்ளி ஞானம்போல ஞான மாத்திரத்தா னிங்கும்.

நனறு நீ சொல்லியது, மலங்குணம் அஞ்ஞானமாகிலதற்குச்குணியொன்று கூறவேண்டும். ஆன்மாவென்னிற் பாஷாணம் போல அஞ்ஞானமான்மா வெனனும் நையாயிக வைசேஷிக மதமாம். ஆனமாவுக் கன்னிய மக்குணி யென்னி லதுவே மலம். அஞ்ஞானமெனறது மலகுணமென றமக் கபிமத ஞானத்தியந்தா பாவ லக்ஷணம் மவுட்டியமாகும். அஞ்ஞானமன்று. குற்றி கொல்லோ மகன் கொல்லோ வென்னு மைடஞானம்போ லைடஞான மாகு மஞ்ஞானமே.

அல்ல திதவெள்ளிபெனுஞ் சிப்பி வெள்ளி விபரிய ஞானம் போற் சவிகற்ப விபரிய ஞானமாகு மஞ்ஞானமே தான், நனறிதுவன்று. குணியொனறு குறிக்குமிடத்துச் சாகங்கார புத்தி தத்துவமாதலால், புத்திதத்துவமுதற் றத்துவபிரளயத்து முதிப் பிரசங்கம் வரும். அப்போது இருசகதிரனெனனும் விபரி

ய ஞானம்போற் புத்தி பொருந்தாது. சரீர நானென்று சற்றே தோற்று நிர்விகற்ப விபரிய ஞானமாகு மஞ்ஞானமே.

அதுவும் நன்றன்று, ஞானும் சத்திற்குச் சித்தம் விபரியாம் சத்திற்கு மலகலை மணந்து கலந்த வித்தையுங் குணியாதலால்,இயற்கைக் குணிமாறி மயங்கிச் செயற்கைக் கலைகலந்த வித்தியா தத்துவ முதற் றத்துவப் பிரளயத்து முத்திப் பிரசங்கம் வரும்.

அதுவன்றி, இரு சந்திர ஞானமாகு மஞ்ஞான மொருசந்திரனெனு முண்மை ஞானத்தா லுண்ணிக்க முற்றுலு ரொப்புமாத்திரந் துதிக்குஞ் சிப்பி வெள்ளி ஞானமாகு மஞ்ஞானஞ் சிப்பியெனு முண்மைஞானத்தா லுண்ணிக்கம் புறநீக்க முற்று முற்றும்போலுற்போல நேத்திரபடல திரவிய நீக்கமன்றிப் புறநீக்க முறாததுபோலச் சரீர நானென்னுஞ் சரீரான்ம ஞானமாகு மஞ்ஞானமுஞ் சரீரத்துக் கன்னிய மான்மா நானெனு முண்மை ஞானத்தா லுண்ணிக்க முற்றுலு மொரு மலத் திரவிய நீக்கமன்றிப் புறநீக்க முறாத மல திரவியமும் படலமென றிதொரு திரவியப் பொருளெனு முண்மை ஞான மாத்திரத்தாற் படலம்போல மல மென் றிதொரு திர வியப் பொருளெனு முண்மை ஞானமாத்திரத்தால் நீங்காது.

நேத்திர படல திரவியம் படல நீக்கு முபாய ஞானத்துளை யுடைய வைத்திய சத்தி சத்திர கன்மத்தால், நேதத்திர விபரீத விருத்தி நிமித்தாந்திய விருத்தியோடு நீங்குவது போல், மல திரவியமு மல நீக்கு முபாய ஞானத்தினையுடைய சிவதீக்ஷாக்குறிக் கிரியா சத்திச் சிறப்பிருப் பிச்சாசத்தி கிருத்தியக் குறிச் சங்கற்ப சிற்கன்மத்தாற் கலை கலந்த வித்தியா தத்துவ விபரீத விர்த்தி நிமித்த மவுட்டிய விர்த்தியோடு நீங்குமாதலால்,

சாங்கியர் போற் சொல்லுஞ் ஸ்வதந்திர ஞானத்தால், பாதஞ்சலர் போற் சொல்லுஞ் ஸ்வதந்திர யோகத்தால், வேதாந்

திகள்போற் சொல்லுஞ் ஸ்வதந்திர சந்நியாசத்தால், மீமா ஞ்சர் போற் சொல்லுஞ் சுவதந்திர கன்மத்தால், மோக்ஷமி ல்லை

சீஷ பௌருஷ சிவஞானாதிகளும் சீஷபௌருஷ சிவயோ காதிகளும், சாதார வசத்தியோ நிர்வாண தீக்ஷாங்கி மாத்தி ராங்கஙகள் குருசிவஞானாதி குருசிவ யோகாதிகளும், சிவ சிவ ஞானாதிகள் சிவ சிவயோகாதிகளு முறைமையிற் சாதார நிரா தார சததியோ நிருவாண தீக்ஷாங்க மாத்திராங்கங்கள். சீஷ பவுருஷ சிவ ஞானாதி சிவ யோகாதிகள் மோக்ஷகாரியமுற்று மொத்துச் செல்லாது ஓரிடத்தில் வியபிசாரிகளாதலான்.

மோக்ஷ காரிய முற்று மொத்துச் சொல்லுஞ் சொல்லிய சிவசத்தி லக்ஷண தீக்ஷையாற் றானே மோக்ஷ மென்று ஸ்வத ந்திர தீக்ஷா சிற்கனமத்தால் மோக்ஷம் ஸ்வ தந்திரமல்லா ஞா ன கோடிகள் தீக்ஷாங்கங்களன்றி ஸ்வ தந்திரங்களாய்ச் சூ ழ்ந்தாலு மோக்ஷமில்லையாம். ஆகலாற் சொல்லிய சிவ தீக்ஷா சத்தி சங்கற்ப சிற்கன்மத்தாற்றானே மோக்ஷமென்று சித்தா ந்தம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மேற்கூறியவாற்றால் ஏனையவெல்லா ஞானத்தைப் பயப் பிக்கும் ஞானமொன்றே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமாவ தெனபது. வேதமுதலிய பிரமாண நூல்கட்கெல்லாந் துணிபாக வும், அவற்றோடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கை மாத்திரை ே... டையும், ஐவகை வேள்விமுதலிய கன்மங்களேயமையும், ப த்திநெறிமாத்திரையே யமையுமென்று இவ்வாறு பிதற்றும் பே தைகீரார் ஒருவாற்றானுந் தெருட்டற்பால ரல்லரெனவும்; ஞா

னமல்லாதனவெல்லா மஞ்ஞானமாகலின் அவ்வஞ்ஞானப் பகுதிகளாற் பந்தமுறுதலின்றி வீடுபேறடைதல் கூடாதெனவும், அவ்வஞ்ஞானப்பகுதிகளெல்லாம் ஒளிமுன் னிருள்போல ஞானத்தின் முன்னாச் சத்திகெட்டொழியும். அவை யொழியவே அவற்றானாய பந்த நீங்கும். அது நீங்கவே முத்திநிலை கைகூடுமாகலான் ஞானமொன்றே முத்திக்குச் சிறந்தகாரணமெனவும், ஞானத்துள்ளுந் தார்க்கிகர் சாங்கியர் மாயாவாதிமுதலியோர் கூறும் ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்களாகலான் அவையும் பந்தமுறுத்துவனவேயன்றி வீடெய்துவிக்க மாட்டாமையின் அவற்றின் வேறாய திருவடிஞானமொன்றே அப்பேற்றித்தாகிய ஞானமாவதெனவுங் கூறுவர் அந்நூல்களி னுண்மையுணர்ந்தோரென்பதாம்.

ஏகாரமிரண்டும் பிரிநிலைக்கண் வந்தன.

சொல்லவுமெனச் சிறப்பும்மை விரித்துரைக்க.

தானிரண்டும் அசை.

ஆனத்தால் ஆனவதனாலென்க.

ஆனவென்பதனு ளகரமும் அதனாலென்பதனு ளன் சாரியையுந் தொடைநோக்கி விகாரத்தாற் றொக்கன? "பெற்றத்தாற் பெற்றபயன்" என்றாற்போல.

ஆதல் உண்டாதல்.

இதனானே, பிறவெல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்தகாரணமல்லவாதல் இனிது விளக்கி மேலது வலியுறுத்தப்பட்டது.

இத்துணையும் ஞானத்தினியல்பும் அதன் பயனும் பொதுவகையாற் கூறி, இனிச் சிறப்புவகையாற் கூறுகின்றார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

ஞானத்தை நல்கி மோக்ஷத்தைக் கொடுக்குமென்ற தென்னாப்பு, கிரியையினாலே மோக்ஷமென்ற சைவரை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள்புராண நல்லவாகமஞ்சொல்ல - சரியைகிரியா யோகங்களுக்குப் பதமுத்தியொழிந்து மோக்ஷமுண்டாகாது, ஞானத்தாலே மோக்ஷமென்று நாலு வேதங்களுந் திவ்வியாகமங்களும் புராணங்களுஞ் சொல்லிப்போத,—அல்லவாமென்னு மூனத்தாரென்கடவார் - அந்தஞானத்தாலே மோக்ஷமில்லையென்று சொல்லுகிற அறிவில்லாதவர்களுக்கு ஞானமில்லாததுகொண்டு அஞ்ஞானமுண்டாம்,—அஞ்ஞானத்தா லுறுவதுதான்பந்தம் - அந்த வஞ்ஞானத்தா லுண்டாவது ஜனனமொன்றுமே! அந்த ஜனனந் தான போம்படி யெப்படி யெனனில்?—உயர்மெய்ஞ்ஞானந்தா ஞானத்தா லதுபோவது - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற சிவஞானமுண்டானா லந்த ஜனனம்போம் அல்லது போகாது. அது வென்போல?—அலர்கதிர்முன்னிருள்போல் - விட்டு விளங்காநின்ற வாதித்தன் சன்னிதியி லந்தகாரம் போனாற்போல்,—அஞ்ஞானமறப் பந்தாறுமுத்தியாகும் - இவனை அநாதியே மறைத்துக்கொண்டு நிற்கிற மலசம்பந்தம் போகவே ஜனனமற்று ஞானம் பிரகாசிக்கும். அந்த ஞானத்தாலே மோக்ஷமுண்டாம்.—ஈனத்தார் ஞானங்களெல்லாஞானம் - இந்தச் சிவஞான மொழிந்து வேறுசொல்லப்பட்ட ஞானங்களெல்லாம் போதகீனர் சொல்லுகிற ஞானங்களாம். போதவான்கள் சொல்லுகிற ஞானமேதென்னில்?—இறைவனடி ஞானமே ஞானமென்பர் - ஆகையால் பரமேசுவரனுடைய சீர்பாதத்திலே பொருந்துகைக்

கு உண்டான சிவஞான மெய்ஞ்ஞானமென்று சொல்லுவர்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள்.

இதற்குப் பிரமாணஞ் சங்கற்பநிராகரணம், "பல்பணி ஞான காரணமென்னிற் - றொல்பணிதொறும்பயன் றொடுப்ப தனாலு-மொருபணிசெய்யாச் சிரபுரச்சிறுவரு-மரசராயத் தரு ணத் தலைவரு-முதிர் பரசமயத் திதமுறுமரசரு-ஞானம்பெற் றநன்மையினாலு - மீனமில்பணிட்ருட் கேதுவன்றென்றால் - ஞா னோற்பத்தி நிமித்தமி கதொழிலென-வேறோற்கிறைநூ லியம் பிற்றென்னும்" என்றும், சிவஞானபோதம், அ-சூ, க- "வெ. தவஞ்செய்தா ரொன்றுந் தவலோகஞ் சார்ந்து, பவஞ்செய்து ப ற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த, நற்சார்பில் வந்துதித்த ஞா னத்தை நண்ணுதலை, கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு" என் னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவஞானத்தாலே ஆன்மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவர்களென்றும், அந்த ஞானத்தி னாலே ஜனன மறுமென்றும், அல்லாத ஞானங்களெல்லாஞ் சுற் றத்தைப் பொருந்தின ஞானமாகையால் ஜனனத்தைப் போ க்காதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஞானத்தால் வீடென்றே - மேற்கூறிய வாற்றால் ஏனைய வெல்லா ஞானத்தைப் பயப்பிக்கு ஞானமொன்றே வீடுபேற்றி ற்குச் சிறந்த காரணமென்பது,—நான்மறைகள் புராண நல்ல வாகமஞ்சொல்ல - நான்குவேதங்களும் பதினெண்புராணங்க ளும் நன்மையான இருபத்தெட்டு ஆகமங்களுமாகிய பிரமாண நூல்கட்கெல்லாந் துணிபாகவும்,—அல்லவாமென்னு மூனந் தாரென்கடவர் - அவற்றொடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கை

மாத்திரையே யமையும், ஐவகை வேள்வி முதலிய கன்மங்க ளேயமையும் பத்திநெறி மாத்திரையே யமையுமென்று இவ்வா று பிதற்றும்பேதைநீரா ரொருவாற்ருனுந்தெருட்டற்பாலரல்ல ரெனவும்,—அஞ்ஞானத்தா லுறுவதுதான்பந்தம்-ஞானமல்லா தனவெல்லா மஞ்ஞானமாகலின்அவ்வஞ்ஞானப் பகுதிகளான் பந்தமுறுதலின்றி வீடுபேறடைதல் கூடாதெனவும்,—அலர்க திர்முனிருள்போ லுயர்மெய்ஞ்ஞானந்தா ஞானத்தா லதுபோ வது - அவ்வஞ்ஞானப் பகுதிகளெல்லா மொளிமுன் னிருள் போல ஞானத்தின் முன்னர் சத்திகெட் டொழியும்,—அஞ்ஞா னம்விடப் பந்தமறு முத்தியாகும் - அவ்வஞ்ஞான மொழிய வே யவற்ருனுய பந்தநீங்கும், அது நீங்கவே முத்திநிலை கைகூ டு மாகலான், ஞானமொன்றே முத்திக்குச் சிறந்த காரணமொ னவும்,—ஈனததார் ஞானங்களல்லாஞானம் - ஞானத்துள்ளு ந்தார்க்கிகர் சாங்கியர் மாயாவாதி முதலியோர்கூறு ஞானங் களெல்லாம் பாசஞான பசுஞானங்களாகலா னவையும் பந்த முறுத்துவனவே யன்றி வீடெய்துவிக்க மாட்டாமையின்,—இ றைவனடி ஞானமே ஞானமெனபர் - அவற்றின்வேருய திருவ டி ஞானமொன்றே யப்பெற்றித்தாகிய ஞானமாவதெனவும் கூறுவர் அந்நூல்களினுண்மை யுணர்ந்தவர்.

இதனுனே பிறவெல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்தகாரண மல்லவாத லினிது விளக்கி மேலது வலியுறுத்தப்பட்டது.

இத்துணையு ஞானத்தினியல்பு மதன்பயனும் பொதுவகை யாற் கூறி யினிச் சிறப்பு வகையாற் கூறுகின்ருர்.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்த வான்மாவுக் கனுக்கிரகஞ் செய்தற் பொருட்டு அருபியாயிருக்கிற சிவன் ருனே யாசாரியனை -

ஞம் வடிவையெடுத் துபசரிக்கு முறைமை
புணர்த்துகின்றார்.

சூரியகாந் தக்கல்லி னிடத்தேசெய்ய சுடர்தோ
ன்றி யிடச்சோதி தோன்றுமாபோல், ஆரியனு மாசா
ன்வந் தருளாற்றோன்ற வடிஞான மான்மாவிற் றோன்
றுந்தோன்றத், தூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந்
தோன்றுந் தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோ
ன்று. நேரியனுப் பரியனுமா யுயிர்க்குயிராயெங்கு
நின்றநிலை யெல்லாமுந் திகழ்ந்துதோன்றும். (உஅ)

(இ-ள்) சூரியகாநதக் கல்லினிடத்தே செய்யசுடர்தோன்றியிடச் சோதிதோன்றுமாபோல் — சிவந்த வாதித்தப் பிரகாசந் தோன்றின விடத்துச் சூரியகாந்தக் கல்லினிடத்திற் கிடந்த அக்னிப்பிரகாச முண்டான வாறு போல

ஆரியனு மாசான்வந் தருளாற்றோன்ற — சிவன்றன தனுக்கிரகத்தால் பூச்சியனு ன வாசாரியன்வந் திவனுக்கு ஞானோபதேசஞ் செய்தவிடத்து

அடிஞான மான்மாவிற் றோன்றுந்தோன்ற — அந்தப்படியே நாடோறு மநுசந்தானம் பண்ணியிருக்கவே யிவனிடத்திலே சிவஞானம் பிரகாசிக்கும். அது பிரகாசித்தவாறே 'அடிகளது ஞான மடிஞானம்' என்னவே சிவன் ஞானமென்றதாயிற்று. "அடிகே ளுமக்காட் செயவஞ்சுதுமென் றமரர்பெருமானை யாரூ ரனஞ்சி" எனவறிக.

தூரியனுஞ் சிவதோன்றும் — அரூபியாயிருக்கிற சிவனும் வெளிப்படுவன்.

தானுந் தோன் றும் — தற்சொரூபமும் விளங்கும்.

இவ்விடத்து விளங்குமென்றது அசுத்தமாயா காரியமாகிய தத்துவ முப்பத்தொன்றும் விட்டு நீங்கினவிடத்துச் சுத்த மாயா தத்துவரூபியாய் நிற்பன், அப்பொழு திவன் சுத்தமாயா ரூபமாகிய தன்னுடைய தனுகரணங்களைக் காண்கிறதே யென வறிக.

இத்தன்மை யுண்டாகவே,

தொல்லுலக மெல்லாந் தன்னுள்ளே தோன்றும் — பழபதாய் வருகின்ற சுத்தசுத்தவ புவனத்திலிருக்கு மான்மாக்களு மிவனிடத்திலே விளங்கத்தோன்றும். இந்தச் சுத்தமாயா பந்த நீங்கவே,

நேரியனுய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்றநிலை யெல்லாமுந் திகழ்ந்து தோன்றும். — சிவ னணுவுக்கணுவாயு மகத்துக்கு மகத்தாயு மானமாக்களுக் கெல்லாம் பிராணநாயகனு யெவ்விடத்தும் விட்டு நீங்காமற் பிரகாசித்து நிற்கு முறைமையெல்லாந் தரிசிக்கப்படும். எ-று.

"சூரியகாந்தமுஞ் சூழ்பஞ்சும்போலச் - சூரியகாந்தஞ் சூழ்பஞ்சைச் சுடமாட்டா - சூரியனசன்னிதியிற் சுடுமாறுபோ - லாரியனுருற்றமுன னற்றமலங்களே" எனவுமறிக.

"தேவதேவ வாதிபுராண - மாயப்படலங்கீறித் தூயஞான நாட்டம் பெற்றேன்-பெற்றபின மெய்ம்மைய நின்பெருந் தன்மையுங் -கண்டேன் காண்டலு - மென்னையுங் கண்டேன்பிறரையுங் கண்டே-னனனிலை யனைத்துங்கண்டே- னென்னேநினைக் காணுமாந்தர் - தம்மையுந்தானுந் தன்மையோரே" எனப் பிள்ளை வாக்கினு முணர்க. (உ௯)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

—o—

மேலந்தச் சிவஞானஞ் சித்திக்கு முறைமையும் அதனாற்
றரிசனப்படுவதுங் கூறுகின்றது.

ஆரியனுமாசான்வந் தருளாற்றோன்ற வடிஞானமான்மா
விற்றோன்றும் - சர்வதேவ முநிகணங்களினாலும் பூஜ்யனான
சிவன் கருணையினாலே ஆசாரியமூர்த்தியை யதிஷ்டித்துவந்து
பக்குவான்மாவினிடத்திலே சந்நிதாநம் பண்ணச் சிவஞானம்
ஆன்மாவிலே அபிவியத்தியாம். அஃதெதன்போலவெனின்?—சூரி
யகாந்தக் கல்லினிடத்தே செய்ய சுடர்தோன்றியிடச் சோதி
தோன்றுமாபோல் - ஆதித்தன் சூரியகாந்தத்தி னிடத்திலே ச
ன்னிதானம் பண்ண வதனிடத்திலே அக்னி யுண்டானதுபோ
ல,—தோன்றத் தூரியனுஞ்சிவந்தோன்றும் தானும்தோன்றும்
தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளேதோன்றும் நேரியனாய்ப் பரி
டனுமா யுயிர்க்குயிராயெங்கு நின்றநிலை எல்லாமுன் னிகழ்ந்து
தோன்றும்-இவ்வாறு சிவஞான மான்மாவிலே பிரகாசிக்கவே
முன் வாக்குக்கு மனத்துக்கும் விருத்திஞானத்துக்கு மெட்டா
தே நின்ற சிவன் ஆன்மாவிலே வேறறத் தோன்றுவன். அந்த
ச் சிவனிடத்தில் தன்னையும் வேறற ஸ்வரூபஞானத்தினாலே கா
ணப்படும் அநாதியாகிய பிரபஞ்சமெல்லாம் பரிபூரணமான
தன்னிடத்திலே யேகதேசமாய்க் காணப்படும். தேகத்துப் பி
ரேரகன் ஜீவான்மாபோலச் சிவன் ஜீவான்மாக்களுக்குப் பிரே
ரகனாய் பரமான்மாவாய் ஜடவஸ்துக்களிலும் குறைவற நிற்கு
முறைமையும் விளங்கத் தெரியுமென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

அப்படிக் குரு ஞானுதி சாங்க சாதார சத்தியோ நிருவா ண தீக்ஷையினால் விதேக பரமுத்தி சாக்ஷாத்காரஞ் சடிதி வி ளங்கு மென்றுஞ் சீஷஞானுதி சாங்க சாதார வசத்தியோ நி ருவாண தீக்ஷையினால் சதேக சீவன் முத்தி சாக்ஷாத் கார மெ ல்லாம் விளங்குமென்றுஞ் சமாதி நடுவொரு திருவிருத்தத்தால் காட்டி யிரு திரு விருத்தத்தா லிசைக்கின்றார்.

இதுமுத லிரண்டு செய்யுள் - ௩௦ - வது செய்யுளுரையிற் காண்க.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

தனது கிரணத்தோடுந் தோன்று ஞாயிற்றின் சந்நிதி மா த்திரையானே சூரியகாந்தக்கல்லின்கண் ணெருப்பு விளங்கித் தோன்றுமாறுபோல, கேட்பித்தலோடுந் தோன்றுமாசிரியன் சந்நிதிமாத்திரையானே மாணுக்கன்மாட்டு மேல் 'ஈரிரண்டா ங்கிளக்கின் ஞானம்' என்றவர்றுள் முந்திய ஞானமாகிய கேட் டலறிவு விளங்கித் தோன்றும். அது தோன்றவே, பதிமுதலிய முப்பொருளும் அவை யொன்றிெனுன்று வியாபக வியாப்பிய ங்களாமாறும் நிருவிகற்பமாய்த் தோன்றுமென்பதாம்.

அருளானென்புழி ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்த து. "தூங்குகையா னோங்குநடையன்" எனறுற்போல.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலாற் கேட்பித்தலையு ணர்த்திற்று.

ஆசிரியன் னூற்பொரு ளுரைக்கும்வழி ஆசிரியன்ஞானமே மாணுக்கன்மாட்டுச் சென்று பற்றுவதுபோலுமென்னு மாசங்கை யறுத்தற்பொருட்டுத் தோனறத்தோன்று மென்முர்.

உவமை கூறியதுமது.

சடத்துக்கன்றிச் சித்துக்குச் சங்கிரமங் கூடாதென்பது சிவாகமனூற்றுணிபெனக.

அணுவோரண்டமாம்படி நேரியனுகலால் உயிர்க்குயிராதலும், அண்டமோரணுவாம்படி பரியனுமாதலால் எங்குநிற்றலும் பெறப்படுமென்பார், 'நேரியனுய்ப்பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்றநிலை' என்முர்.

முன்னிகழ்ந்தென்பதனை யாண்டுங் கூட்டுக.

முன்னிகழுந் தோற்றமாவது சவிகற்பத்துக்கு முன்னுக நிகழும் நிருவிகற்பத் தோற்றம்.

இதனுனே கேட்டலாமாறும் அதன்கணிகழுமனுபவமுங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

அருவமாய் வாங்மனுதீத கோசரனுய் நின்ற சிவன் உருவமாய் வந்து இரக்ஷித்த தெப்படியென்ற பாடாணவாதியை நோக்கி யருளிச்செய்கிமுர்.

சூரியகாந்தக் கல்லினிடத்தே செய்யசுடர் தோன்றியிடச் சோதிதோன்றுமாபோல் - சூரியகாந்த மென்கிற கல்லினிடத்திலே சிவந்த வாதித்கர் வந்து பிரவேசிக்க வரூபமாய்நின்ற வக்னி உரூபமாய்த் தோன்றுகிற முறைமைபோல,—ஆரியனுமாசான்வந் தருளாற்முேன்ற வடிஞான மான்மாவிற்முேன்றும் -

சுத்தனு யருவமாய்நின்ற சிவன் ஆன்மாக்கள்மேலே வைத்த காருணணியத்தினாலே தான்தானே ஆசாரியமூர்த்தியாக வந்து தோன்ற பெத்தத்தன்மையி லிவனை யுபகரித்துக்கொண்டு நிற்கச்செய்தேயுந் தோன்றாமல்நின்ற சிவஞானந் தன்னிடத்தி லே பிரகாசிக்கும்.—தோன்றத் தூரியனுஞ் சிவந்தோன்றும்- அந்த ஞானம் பிரகாசிக்கவே இத்தனைகாலமுந் தோன்றாமல் நின்ற சிவதரிசனமுண்டாம்,—தானுந்தோன்றும் - ஆன்ம தரி சனமுமுண்டாம்,—தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளேதோன் றும் - பழயதாய்வருகிற விசுவங்களெல்லாம் அசத்தியமென்கி ற முறைமையுந் தன்னிடத்திலே தரிசிக்கலாம். இவையொழிந் து மந்தஞானத்தாலே,—நேரியனாய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்ற நிலையெல்லா மொன் னிகழ்ந்துதொன்றும்- அந்தச் சிவன் அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய் சர்வான்மாக் களுக்கும் பிராணனாய் எவ்விடத்தும் பரிபூரணனா யசைவற நின்ற நிலைமையெல்லாஞ் சந்தேகமற விளங்காநிற்கும்.

ஆரியனுமாசான்வந் தருளாற்றோன்ற வென்றது பாடா ணவாதி.

ஆன்மாக்களிலே விசேஷவான்கள் குருவா யிவனை இர க்ஷிக்கும தொழிந்து சிவன் வாங் மனுநீதநுகையால் குரு மூர்த்தி யாகானென்னச் சிவனே குருவா யிரக்ஷிப்ப னென்றத ற்குப் பிரமாணம், சிவஞானபோதம் - அ - சூ, டு-வெ, இல்லா முலைப்பாலுங் கண்ணீருமேந்திழைபால், நல்லாயுளதாமல் நீர் நிழல்போ—லில்லா, வருவாகிநின்றானை யாரறிவார்தானே, யுரு வாகித் தோன்றானே லுற்று" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது அருவமாகிநின்ற சிவன் ஆன்மாக் கள்மேல் வைத்த கிருபையாலே யாசாரியமூர்த்தியாக வந்து தோன்ற இவனிடத்திலே யநாதியேயப்பிரகாசமாய்நின்ற சிவ

ஞானம் பிரகாசிக்குமென்றும் அந்த ஞானத்தினாலே சிவத
ரிசனம் ஆன்மதரிசனம் பிரபஞ்சமாகிய பாசதரிசனம் என்
னும் மூன்று தரிசனப்படுமென்றும், இவை யொழிந்து மந்தச்
சிவன் சடசித்துக்க ளிரண்டினும் பரிபூரணனாய்நின்ற முறை
மையும் இவனுக்கு விளங்கா நிற்குமென்னு முறைமையு மறி
வித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

——o——

தோன்றிவிடச்செய்யசுடர் - தனது கிரணத்தோடுந் தோ
ன்றுஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே,—சூரியகாந்தக் கல்
லினிடத்தே சோதிதோன்றுமாபோல - சூரியகாந்தக் கல்லின
கண் நெருப்புவிளங்கித் தோன்றுமாறுபோல,—அருளான்வந்
தாரியனுமாசான்றோன்ற-கேட்பித்தலோடுந்தோன்று மாசிரிய
ன் சந்நிதி மாத்திரையானே,—ஆன்மாவினடி ஞானந்தோன்று
ம்-மாணாக்கன்மாட்டுமேல்ஈரிரண்டாங்கிளக்கின்ற ஞானம் என்
றவற்றுண் முந்திய ஞானமாகிய கேட்டலறிவு விளங்கித்தோன்
றும்.—தோன்றத்தூரியனுஞ் சிவந்தோன்றும் தானுந்தோன்று
ந் தொல்லுலகமெல்லாந் தனுள்ளே தோன்றும் - அதுதோன்ற
வே முதல்வனாகிய பதியும் ஆன்மாக்களாகிய பசுவும் பழுப பிர
வஞ்சமாகிய பாசமும் என்ற முப்பொருள்களுந் தன்னுள்ளே
தோன்றும்,—நேரியனாய்ப் பரியனுமாய் - அணுவோரண்டமா
ம்படி நேரியனாயும் அண்டமோரணுவாம்படி பரியனுமாய் நிற்ற
லால்,—உயிர்க்குயிராயெங்கு நின்றநிலையெல்லாமுன் னிகழ்ந்து
தோன்றும் - உயிர்க்குயிராதலு மெங்குநிற்றலு மவை யொன்
றிலொன்று வியாபக வியாப்பியங்களாமாறு நிருவிகற்பமாய்
த் தோன்றும்.

இதனுனே கேட்டலாமாறு மதன்க ணிகழு மறுபவமும் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



இவ்வாறடைந்த சீவன்முத்தித் தன்மை யுணர்த்துகின்றார்.

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநிபாதமே வுதலு ஞானம்விளைந் தோர்குருவினருளாற், புக்க னுட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள் பூதலத்தே புகழ்சீவன் முத்தராகித், தக்கபிரி யாப்பிரிய மின்றியோட்டிற் றபனியத்திற் சமபுத்தி பண்ணிச்சங்கரனே, டொக்கவுரைந் திவனவரை யவரிவனே விடாதே யுடந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்.(உகூ)

(இ-ள்.) மிக்கதொரு பக்குவத்தின் மிகு சத்திநிபாத மேவுதலும் — ஆன்மாக்கட்கெங்கு மொக்க மலபரிபாக முண்டாயுள்ளளவில் அப்பொழுதிற் சிவனிவனிடத் துண்டாய மலத்தைக் கீழ்ப்படுத்தித் தீவ்ரதரமான சத்தியைப் பதித்துள்ளளவிற் சம்சாரத்தில் வையிராக்யம் பிறந்து,

ஞானம் விளைக்தோர் குருவினருளால் — ஒருஞானசாரியனை யதிட்டித்துக் கொண்டு சாதிகாரை யென்னுந் தீக்கையைப் பெற்று,

புக்கனுட்டித் தேநிட்டைபுரிந்துளோர்கள் — அவனருளிச்செய்த வாகமத்தின்வழி யாராய்ந்து வைகல்யமற வனுட்டித்த பலத்தாலே, காட்ட மானதுபோல வசைவின்றி யி

ருந்து நிட்டையைப் பொருந்தினவர்கள் எச்சிறப்பினை யுடையோ ரென்னில்?

பூதலத்தேபுகழ்சிவன் முத்தராகி — பூமியின்கண்ணே யெல்லாராலும் சிவன் முத்தரென்று கொண்டாடப்பட் டிருப்பர்கள்; அவர்கள் பூதலத்தே சஞ்சரிக்குமிடத்து.

தக்க பிரியாப் பிரியமின்றி — ஆன்மாக்களுக்குத் தகைமைப் பாட்டையுடைய சுகதுக்கமு மித்ருசத்ரு வென்னும் விகற்பமின்று. இஃதில்லாமையால்

ஓட்டிற் றபனியத்திற் சமபுத்தி பண்ணி — எப்படி யோட்டி னிடத்தில் விருப்பற்றார் அதுபோலப் பொன்னி னிடத்தும் விருப்பற்று,

சங்கரனோடொக்கவுரைந்து — சிவனுடைய வியாபகத்துடனே தானும் வியாத்தனாய்

அவனிவனை யிவனவனை விடாதே — சிவனு மான்மாக்களை விடாமல் ஆன்மாக்களு மந்தச்சிவனை விடாமற் கலந்திருப்பர்கள். இக்கலப்பு யாதெனில்? அநாதியந்த சமவாய மெனப்பெறும்.

உடன்தை யாய்ச்சிவன் றோற்றமொன்றுமே காண்பார். — விசுவமெங்குஞ் சிவன்வியாபித்து நிற்கையா லஃதெல்லாஞ் சிவனுடைய சொருபமாகவே கண்டிருப்பர்கள். எ-று.

நிட்டை புரிந்துளோர் - எழுமாய், காண்பர் - பயனிலை. ஏகாரந் தேற்றம்.

இதற்குப் பௌட்கரம் சிவதருமோத்தரம் சுப்ர பேதத் தமறிக. (உகூ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



(மிக்கதொரு பக்குவத்தில்...காண்பர்)ஏகபாதம். ஆணவமல மிகவும் பரிபாகமான காலத்தில் தீவ்ரசத்திநிபாதம்பதிய வொப்பற்ற ஆசாரியனுடைய சருணையினாலே சிவஞானம் பிரகாசித்து விஷயமுகத்தைவிட்டுச் சிவாபிமுகனாகப் பொருந்தி நிட்டைகூடினபோ திந்தப்பூமியின் கண்ணிலே யெல்லாரு மேத்தப்பட்ட ஜீவன்முத்தராகி யிச்சை யுண்டாகத்தக்க பதார்த்தத்திலே பிரிடமும் அல்லாத பதார்த்தத்திலே துவேஷமு மில்லாமற் பொன்னையு மோட்டையும் சமமாகக் கண்டு சுகத்தைப் பண்ணுகிறவராகையால் சங்கரனென்று பெயருடைய சிவனுடனே பிரிவற்று, சிவன் ஜீவன்முத்தரைப் பிரியாமல் ஜீவன் முத்தர் சிவனைப்பிரியாம லோரியல்பாய்ச் சிவானந்தோதய மொன்றையுமே யனுபவிப்பரென் றிதனபொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



௯௦ - செய்யுளுரையுட் காண்க.



## சிவஞானயோகியருரை வருமாறு.



பக்குவமுதிர்ச்சியா னொலுஞ் சத்திநிபாத மேவப்பெற்றார்க்கு அக்கேட்டலறிவு மந்தமாதலின்றி முதிர்ந்த முறுக வினையும், அப்பொழுது தம்மாசாரிடராதல் தம்மோ டொருசாலை மாணுக்கராய்த் தம்மின் மூத்தாருளொருவராதல் சிந்திப்பிக்கப்பெறு மந் நூற்பொருளின கண்ணே கருத தொருங்கி நழை

ந்து முன்னொடுபின் மலைவற ஏது இருட்டாந்த முதலியவற்று
ற் சிந்தித்து நிட்டை கூடுதற்கண் வேட்கை மிக்குடையராகப்
பெற்றார், சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு மற்றொன்றினும்
பற்றொன்றின்றிச் சீவன் முத்தரோடொத்துப் பேரறிவாகிய சி
வமுஞ் சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றினொளியுங் கண்ணொளியு
ம் போலத் துவிதமாய் நிற்றலான், ஆண்டுத் தாமுளராதலறியப்
பெறாது சிவத்தோற்றமொன்றே காணப்பெற்று நிருவிகற்பஞ்
சவிகற்பமென்னுமிரண்டிற்கு மிடைநிலததே நிற்பரென்பதாம்.

மிக்கதொருபக்குவத்தின் மிகுசத்திநிபாத மேவுதலுஞானம் விளைந்ததெனவே, அஃதங்ஙன மேவாதவழி அக்கேட்டலறிவு முறுகுதலின்றி யஃகி நிகழுமென்பதாயிற்று.

விளைந்தவழியென்பது விளைந்தெனத் திரிந்தது.

ஓர்குருவெனப் பொதுப்படக் கூறினார், ஒருசாலை மாணக்கராய்த் தம்மின் மூத்தாரையுந் தழுவுதற்கு.

புரிதல் விரும்புதல்.

சீவன்முத்தராகி யென்புழி ஆக்கச்சொல் உவமைப் பொருள் குறித்து நின்றது. "ஆள்வாரிலிமாடாவேனோ" என்றாற் போல.

உடனாயுறைந்து காண்பரென்றது, மணம்பெய்து குளநிறைந்த தென்றாற்போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

உம்மை சிறப்பு.

ஏகாரம் பிரிநிலை.

'அடைபவர்சிவமேயாகு மதுவன்றித்தோன்றுமென்ற கடனதென்' என்பதும் இந்நிலையெனக் கொள்க.

இதனானே சிந்திக்கலாமாறு மதன்கணிகழு மனுபவமுங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

இப்படி முன்சொல்லப்பட்ட சிவதரிசனம் ஆன்மாக்களுக்குண்டாம்படி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச் செய்கிறார்.

மிக்கதொரு பக்குவத்தின் - இருவினையொப்பு வந்து ஆன்மாக்களுக்குச் சிவனைப் பெறவேணுமென்று உதித்ததொரு வாஞ்சை யெழுந்திருந்த வவசரத்து,—மிகு சத்திநிபாத மேவுதலும் - தீவிரம் தீவிரதரம் என்னும் மிகுந்த சத்திநிபாதம் பொருந்துதலும்,—ஞானம்விளைந்து - அந்தச் சத்திநிபாதத்தாலே இவனிடத்திலே ஞானம் பிரகாசித்து,—ஓர் குருவினருளார்ப்பு க்கனுட்டித்தே நிட்டைபுரிந்துளோர்கள் - இவனுக்குப் பிராணனாய்நின்று பிரகாசித்த அந்த ஞானந்தானே ஒப்பற்ற வாசாரியனாக வெழுந்தருளிவந் திரக்ஷித்து அவனருளிச்செய்த முறைமையிலேநின்று நிட்டைகூடினவர்கள்,—பூதலத்தே புகழ்சீவன முத்தராகி - பூமியிலே சொல்லப்பட்ட ஜீவன்முத்தராயிருப்பர்கள். இவர்களுடைய விலக்ஷணம் எப்படி யென்னில்?—தக்கபிரியாப் பிரியமின்றி - சுகதுக்கங்களைப் புசிக்குமிடத் ததுக்குமுறைமையான விதாவகிதங்களு மில்லையாய்,—ஒட்டிற்றமணியத்திற் சமபுத்திபண்ணி - மட்குடமுடைந்த ஓடும் பொற்குடமுடைந்த வோடும் இரண்டும் பிருதிவியென்று இரண்டையு மொக்கக் கண்டு இந்தப் பிரபஞ்ச வியாபாரத்தைவிட்டு நீங்கி,—சங்கரனோ டொக்கவுறைந்து - பரமேஶ்வரனுடனே இரண்டறக் கூடிப்பொருந்தி,—இவனவரை யவரிவனை விடாதே -

இந்தவான்மா அந்தச் சிவனைவிட்டு நீங்காமல்நிற்க அந்தச் சிவனிந்தவான்மாவைவிட்டு நீங்காமநிற்க,—உடனாகையாய் - ஆன்மபோதஞ் சீவியாமல் அந்தச் சிவபோதமேயாய் ஒன்றுபட்டு நிற்பர்கள். அப்படி நின்றவர்கள்,—சிவன் றேற்றமொன்றுமே காண்பர் - பிரபஞ்சஞ் சிறிதுந்தோனறுமல் சிவனுடைய சுகசொரூப மொன்றுமே கண்டுகொண் டிருப்பர்கள்.

சங்கரனே டொக்க வுறைந் திவனவரை யவரிவனைவிடாதே என்றது ஆனமதரிசனம்.

உடைந்தையாய் என்றது ஆன்மசுத்தி.

சிவன் றேற்றமொன்றுமே காண்பரென்றது ஆன்மலாபம்.

இதனாற் சொல்லியது மிகுத்த பக்குவான்மாககள் ஆசாரியனுடைய வனுக்கிரகத்தினாலே ஞானநிஷ்டை கூடி இந்தப் பூமியிலே ஜீவன்முத்தர் விருப்பு வெறுப்பின்றி யிருப்பார்களென்றும் அவர்களுக்குச் சிவதரிசனமொன்று மொழிந்து மற்றொன்றுந் தோன்றுதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

மிக்கதொரு பக்குவத்தின் - பக்குவமுதிர்ச்சியான்,—மிகு சத்தி நிபாத மேவுதலும் - நாலாஞ் சத்தி நிபாத மேவப்பெற்றோர்க்கு,—ஞானம் விளைகது - அசகேட்டலறிவு மந்தமாதலின் றிமுதிர்ந்த முறாக விளையும்.—ஓர் குருவி னருளாற் புக்கு - அப்பொழுது தம்மாசிரியராதல் தம்மோடு ஒருசாலை மாணாககராய்த் தாமின மூத்தாருளொருவராதல் சிந்திப்பிக்கப் பெறும் அந்நூற் பொருளின் கண்ணே கருததொருங்கி னுழைந்து,—அநுட்டித்தே நிட்டை புரிந்தளோர்கள் - முன்னொடு பின் மலைவற வேது திட்டாந்த முதலிய வற்றாற் சிந்தித்து நிட்டை கூடுதற்

கண் வேட்கை மிக்குடையராகப் பெற்றார்,—பூதலத்திற் றக்க பிரிபாப் பிரிய மின்றி - இவ்வுலகின்கண் விருப்பு வெறுப்பின்றிச் சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு,—ஓட்டிற் றமனிபத்திற் சம புத்திபண்ணி - ஓடும் செம்பொடு மோக்கவே நோக்குவதாய் மற்றொன்றிற் பற்றொன் றின்றி,—புகழ் சீவன் முத்தராகி - புகழத்தக்க ஜீவன்முத்தரோ டொத்து,—சங்கரனோ டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே யுடைந்தையாய் - பேரறிவாகிய சிவமுஞ் சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றி னொளியும் கண்ணொளியும் போலத் துவிதமாய் நிற்றலால்,—சிவன் றேற்ற மொன்றுமே காண்பர் - ஆண்டுச தாமுளதாத லறியப் பெறாது சிவற்றேற்ற மொன்றே காணப்பெற்று நிரு விகற்பஞ் ச விகற்ப மெனனு மிரண்டிற்கு மிடைநிலத்தே நிற்பரெனப தாம்.

இதனானே சிந்தித்த லாமாறு மதன்க ணிகழு மநுபவமுங் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



இந்த ஜீவன்முத்தர் ஞேயத்தழுந்துமுறை யுணர்த்துகின்றார்.

அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதேயறிந்து, குறியாதே குறித்தந் தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப் பையாகிற், பிறியாத சிவன்றானே பிறிந்துதோன் றிப் பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த்தோன்றி, நெறியாலே யிவையெல்ல மல்லவாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனையே. (௬0)

(இ-ள்.) அறியாமை யறிவகற்றி — அறியாமையாகிய வாணவத்தான் மறைப்புண்டு மயக்கமுறுங் கேவலக்கிடையுங் கருவிகரணங் கூடின சகலாவத்தையு மாகவிரண்டிடனுங் கூடாமல்,

அறிவினுள்ளே யறிவுதனை — சுத்தாவத்திதனானவன் இவனிடத்திலே அறிவுக்கறிவாய்த் தோன்றிநிற்கும் ஞானப்பிரகாசத்தினை,

அருளினா லறியாதேயறிந்து — சிவனது கிருபையினாலே பசுகரணத்துடனே கூடி யறியாமற் சிவகரணமே தனுவாய் நின்றறிந்து,

குறியாதே குறித்து — பாராதே பார்த்து, அஃதாவது:—

"ஊனக் கண்ணினா லீதென்றுகூட்டி யறியாதே யறிந்து, அருட்கணோர்க்கு மவரருள் பெற்றாரோ" எனவும், "எண்ணென்றின்றி நினைந்தவர்தாம்பா லுண்ணின்றுமகிழ்ந்தனன" எனவுமறிக

அந்தக்கரணங்களோடுங் கூடாதே — சிவன் கரணாதீதனாகலாற் புத்தியாதி கிழுகமாதலால் அந்தக் கரணத்தா லறியாமல்

வாடாதே — அவத்தைகளிலும் பொருந்தாமல்

குழைந் திருப்பையாகில் — அந்த ஞேயத்துடன்கூடி ஐக்கியமாயிருப்பையாகில்

"எப்பொழுதும் நிறைவு வேண்டுவீர் வன்னியூர் மறையுளான்கழற் குறவு செய்மினே" எனவுமறிக.

பிறியாதே சிவன்றானே பிறிந்துதோன்றி — சர்வான்மாக்களிடத்திலு மிரண்டற வியாபித்திருக்கிற சிவன்றானே யிவனிடத்திலே பிரகாசித்து,

"என்னிலாருமெனக்கினி யின்னம்பூரீசனே" எனவறிக.

| | |
|---|---|
| பிரபஞ்சபேத மெல்லாந் தானாய்த்தோன்றி | விஸ்வத்திலுண்டாகிய சராசரங்களெல்லாத்தையு மவன் வியாபித்திருக்கையாலநதச் சிவனுடைய சுரூபமாகவே காணப்பட்டு, |
| நெறியாலே யிவையெல்லா மல்லவாகி | அவனுடைய வுண்மையை விசாரித்தறிவில் இந்தப் பிரபஞ்சசொரூப மெல்லா மல்லவாய், |
| நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனாயே. | இவை யனைத்துக்கும் வேறாகி நிராதாரனாகிநின றெப்பொழுதும் தோன்றிடுவன. எ-று. |

உம்மை - எதிர்மறை.

சிவன - எழுவாய்.

நிற்பன் -பயனிலை.

இதற்குத் தேவிகாலோத்தரம். (௩௦)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சிவதரிசனம் வருவதற் குபாயங் கூறுகின்றது.

அறியாமை யறிவகற்றி - அறியாமையாகிய கேவலாவஸ்தையையு மறிவாகிய சகலாவஸ்தையையுஞ் சிவஞானபலத்தினாலே தள்ளிவிட்டு,—அறிவினுளளே யறிவுதனை யருளினாலறியாதே யறிந்து- ஆன்மாவினிடத்திலே சிவனைப் பராசத்தியினாலே வேறாக வறியாதே வேறறவேயறிந்து,—குறியாதேகுறித்து - ஆன்மாவினிடத்திலே சிவனைக் காண்கையாற் சிவனுக் கானமாவாதாரமென்று குறியாதே ஆன்மாவிற்குச் சிவனிடத்திலே அவகாசமென்று குறித்து, — அந்தக்கரணங்களோடுங் கூடா

தே- அவ்விடத்துச் சிவசத்தி பதிகையாற் சிவகரணமான விச்சா ஞானக்கிரியைகளுடனேகூடிய சிவானந்தத்தை இச்சித்த துப்பற்றி யனுபவிப்பதுஞ் செய்யாதே,—வாடாதே-அவ்விடத்து ஞானலயமும்வாராதே.—குழைந்திருப்பையாகில்-இளகியவுள்ளத்தனா யிருப்பையாகில்,—பிறியாதே சிவன்றானே பிறிந்து தோன்றி-பெந்தத்திலே பாலினிடத்துநெய் பிறிந்து தோனறுதுபோலத் தோன்றுதிருந்த சிவன் தயிரினிடத்து நெய்போலத்தன்னுடைய ஸ்வரூபந் தெரியத்தோன்றி,—பிரபஞ்சபேதமெல்லாந தானாய்த்தோன்றி - அநேகபேதமா யிருக்கிற பிரபஞ்சமெல்லாஞ் சிவாகாரமே யென்னும்படிக்குக் காண்பித்து,—நெறியாலே யிவையெல்லா மல்லவாகி - ஞானமார்க்கத்தினாலே பிரபஞ்சமெல்லாம் சத்தியமல்லவாகவுந் தோற்றுவித்து,—நின்றென்றுந்தோன்றிடுவ னிராதாரனுமே- ஆதாரதேசாதிகளில்லாமலகண்டாகார சச்சிதாநந்தாத்வய மாகவே பிரகாசிப்பனென் றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சூரியக்காந்தக் கல்லினிடத்தே,—

செய்யசுடர் தோன்றியிட சோதிதோன்றுமாபோல் - சூரிய சன்னிதானமாக நெருப்பிருந் தெழுந்தது போல்,—

ஆரியனு'மாசன் வநது தோன்ற - பூச்சியனாகிய குருப்பருவங் கருதி விரும்பி வெளியாக,—

அருளால் - அக்குருபண்ணிய செயற்கைத் தீக்ஷாக்குறிக கன்மத் தாவிர்ப்பவித் தியற்கைத் தீக்ஷாக்குறியுற்ற சிவக்கிரியா சத்திச் சிறப்பிருப் பிச்சா சத்தி கிருத்தியக் குறிச் சங்கற்ப சிற்கன்மத்தால்,—

ஆன்மாவி லடி ஞானந்தோன்றும் - உயிரின்கண்ணே யென்று படித் தபசரிக்கப்படும் கரணக்குறி ஞானக்கிரியா லக்ஷணன்ம தன்ம சின்ன மூனனுள்ள சிற்சத்தியின தறிதல் பண்ணுதல் கிருத்தியாகிருதி சாக்ஷாத்காரஞ் சடிதிமல முத்தமாய் வியத்தமாம்.—

தோன்ற - அப்படி யாவிர்ப்பவிக்க,—

தூரியனுஞ் சிவந்தோன்றும் - மலசத்தியால் மூர்த்தமாகு முன் சிற்சத்திக்கண் மறையப் பிரத்தியக்ஷமன்றி யிருந்த சிவன் பிறப்பொருளறிவி லுதித்த சாக்ஷாத்காரத்திற் பிரத்தியக்ஷமாவன்.—

தானுந்தோன்றும் - அப்படி முன்னிருந்த ஆன்மாவுந் தற்பொருளறிவி னுதித்த சாக்ஷாத்காரத்திற் சிவனுக்கு ஒத்தறு முருவனாய்ப் பிரத்தியக்ஷமாவன்.—

தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளே தோன்றும் - அநாதிசித்த சடசித்துப் பிரபஞ்ச மெல்லா மொத்த வியாபகமாயு மொவ்வா வியாப்பியமாயும் பிரத்தியக்ஷமாம்.—

நேரியனுய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்ற நிலையெல்லாமும் நிகழ்ந்து தோன்றும் - பிரத்தியக்ஷமாகிய சிவனுஞ் சிறப்பா யணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய்ப் பசுவர்க்கப் பிரேரகனாய் முத்தான்ம மித்திரனாயிருக்கு முறைமை முற்றுஞ் சாட்சாத்காரமாம். (உஅ)

மிக்கதொரு பக்குவத்தில் - தீவிரதர பக்குவ மல காலத்தில்,—

மிகுசத்தி நிபாத மேவுதலும் ஞானம் விளைந்து - பாஷாணபதன பயம்பண்ணுதல்போ லனுக்கிரக சத்தியினது சம்சார பயம் பண்ணுஞ் சங்கற்பம் பொருந்துதலும், சம்சார பயஞ்சிறிது ஒரு பிரகாரம் பரோக்ஷ சிவ புத்தியும் பிறக்கத் தீக்ஷித சிவ

சொரூபத்தைச் சிவசாத்திரத்தாற் பரோக்ஷ ரூபதரிசனப் படுத்தித் தியானிப்பித்துச் சமாதிப்பித்துப் பின் சிவனைப் பிரத்தியக்ஷமாய்க் காட்டும் குருவைத் தேடி யோடித் திகைக்கச் சிவனவனைக் காட்டிக் கூட்டக்கூடிய,—

ஓர் குருவினருளால் - கடாக்ஷித் தவன் பண்ணுந் தீக்ஷாகன்மாரூட சாக்ஷாத் தீக்ஷாலக்ஷண சிவசத்தி சங்கற்ப சிற்கன்மத்தால் சிவாகமக் கேள்விக் கருகர்களாய்,—

புக்கனுட்டித்தே - கேட்டுச் சிந்தித்துப் பரோக்ஷ சிவ நிச்சயம் பண்ணிப் பின்னபரோக்ஷம்போ லபிநயித்து நடிக்கும் தியானஞ் செய்தே,—

நிட்டை புரிந்துள்ளோர்கள் - தியானத்துறைப்பு ரூப சமாதி சாதித்தோர்கள்,—

பூதலத்தே புகழ் சீவன் முத்தராகி - சதேக சீவன் முத்தி சாக்ஷாத்கார வான்க ளாகுகைக்குக் கீர்த்திக்கும் யோக்கியர்களாய்,—

தக்க பிரியாப் பிரியமின்றி - விருப்பு வெறுப்பு மின்றி,—

ஓட்டிற்றமணியத்திற் சம புத்தி பண்ணி - ஓடுஞ் செம்பொன்னு மொப்ப நோக்கி,—

சங்கரனொடொக்க வுறைந்து - சிவ சத்தி வியாத்திக்கொப்பத் தங்கள் சிற்சத்தி விரிவு சிந்தித்து,—

அவனிவரை யிவரவனை விடாதே யுடந்தையாய் - நிரந்தர நினைப்புற்று நிரந்தர நினைப்பு நீங்காதே,—

சிவன் தோற்ற மொன்றுமே காண்பர் - சமாதி முகிழ்க்குஞ் சாக்ஷாத் காரத்திற் சிவன் முதற் சித்த சித்தவஸ்து முற்றுங் கைத்தலத்து நெல்லிக்கனி கண்ணோக்கத்திற் போலுற்று விளங்குமாறாலும் சமாதியி லேகாக்கிர மாத்திர மாதலாற் சிவனிற்கு நிலைமாத்திரஞ் சிந்திப்பார்கள்.

பிரத்தியக்ஷமாய்ப் பார்ப்பார்களென்று பேசவேண்டாம், சிவ சித்தாந்திகட்குப் பாதஞ்சலர் முதலோர்க்குப் போற் சமாதி யோகமன்று; சாக்ஷாத் காரமாகு மங்கிபோகத்திற்கு அங்கமாதலால்.

" ஸர்வார்த்த பாசகம் ஞானம்
சிவபோகந்து சாச்வதம்"

என்றிருத்தலானுஞ் சாக்ஷாத காரமாகும் சிவயோகத்துக்கங்கம் சாக்ஷாத்கார யோகமே!

தியானம் சமாதி யோக மென்ப தங்கமாகையா லுபசாரம். (௨௧)

தியானம் ஞானத்துதிக்கு முறைமையும், சமாதி தியானதத்திக்கு முறைமையும், சதேகசீவன் முத்தி சாட்சாத்காரஞ் சமாதியின் முகிழ்க்கு முறைமையும் சாற்றுகின்றது.

அறியாமை யறிவகற்றி யென்பன முதலியன ஸ்ரீகுருத்திருவாய் மலர்ந் துபதேசிக்கு மொரு வார்த்தையென் றுலகுரைக்கும் வசிமாற் றிருமுப் பிற்றிருசுழி யொருமொழியிற்"கோவாமமஹிம்"என்னும் வடமொழி வினாவில்உத்தரமொப்புச்செப்புதலாகு மயமத்தியாதி படர்க்கை முன்னிலை தன்மை முக்குறி மூவாக்யம் மும்முப்பதம் மும்முப்பத மொட்டு மூவெழுத்து மும் முப்பதத்தில் மூவெழுத்திற் குறிக்கும் வாச்சிய லக்கிய விருமுப்பொருள்.

அவ்விரு முப்பொருளில் இலக்கியப் பொருளாகும் ஆன்ம பரசிவ முக்குறி முப்பொருள்களின முதற் பொருண் முறைமயிற்றுக்குஞ் சுழுத்தி துரியம் துரியாதீதம் முச்குறி மூவவத்தை சாக்கிரஞ் சொப்பனந் தாக்குஞ் சமனை மட்டு முட்டுஞ் சகிதகும்பகோப சாந்திமேல் உன்மனை மூலாந்தோபரியுபாந்தங்களில் அப்படி யப்பொருள் தாக்கிப் பண்ணப்படுங் கேவல கும்பக

சூனிய கும்பக சூனியாந்த கும்பக முக்குறி முக்கும்பகஞ் சாம் பவி கேசரி சாககிரஞ் சொப்பனந் தாக்கிய தாதலால்.

அப்படி யப்பொருள் தாக்குஞ் சின்முத்திரை மவுன முத்தி ரை மவுனாந்தமுத்திரை முக்குறி மும்முத்திரை.

அப்படியப்பொருள் தாக்குந் தியானஞ் சமாதி சாட்சாத் கார முக்குறி மூவறிவு முனசொல்லிய மும்முப்பதங்களினு மும் முப்பத மொட்டு மூவெழுத்துக்களினும், நடுப்பத முதலெழுத்து க்களுக்கு வாச்சியப்பொருள் அணுபட்ச ஸ்வரூப சிவயோகங் குறித்தால், பூதான்ம தத்துவான்ம அந்தரான்ம சீவான்ம மந் திரான்ம பஞ்சான்மா,

சம்பு பட்ச சிவரூப சிவயோகங் குறித்தால், குருலிங்க சங் கமாதி,

இலக்கியப்பொருள் முறைமையி னுன்மனை யுற்ற சின்மா த்திரான்மா அதிக் கிராந்த விந்துக சின்மாத்திர பரசிவம்.

முதற்பத முதலெழுத்துக்களுக்கு வாச்சியப்பொருள் பி ரமாதி பரசிவமூர்த்தி ஈசான மூர்த்தி பரியந்த அணுபட்ச அப ரசிவம்.

நாதத் துள்ளெழுந் தொளிருஞ் சுத்த பூதாதி யுபாதியுற்ற பஞ்சான்மாவுஞ் சூக்கும பரசிவ ரூபியாயிருந்தாலு மொரு பிர கார மீசானமூர்த்தி முதல் அணு பட்ச அபரசிவ ரூபியாதலா லப் பொருளாம்.

இலக்கியப் பொருள் அதிக்கிராந்த விந்துக பரசிவ மாகு மணுபட்ச சம்புபட்ச இருபரம்.

முடிவிற் பதமுடி வெழுத்துகளுக்கு வாச்சியப்பொருள் தி யாக சமாதி யுபாதித தியாசசியத்தினுற் சொரூபலட்சண சிவ கோடிக்குட் படுதிக்கும் தியான சமாதி யுபாதியுற்ற அணுபட்ச

சம்புபட்ச சின்மாத்திரான்ம பரங்கள். இலக்ஷியப்பொருள் சுத்த சிவமாகு மணுபட்ச சம்புபட்ச இருசிவம்.

ஆன்மாத் தியானத்தானம், பரஞ் சமாதித்தானம், சிவம் சாட்சாத் காரத்தானம்.

பின்னொரு பகுப்பு மிதுபோ லிரு சிவத்தியானங் குறித்துச் செப்பப்படும்; அது செப்புவாம்.

சிவ சத்தி யநந்தேசுர சத்தியாதித் துவாரத்தினாலே பசு சாத்திராதி லோகாதி யாரூடமாய் சுத்தராக அசுத்த கலை யசுத்த வித்தை யிவற்றின் மறைந்து விளக்கினதினாற் செயற்கைப் பசுகரண மென்றும் பசுப்பிரமாண மென்றும் படிக்கப்படுந் தற்பொருளறிவு பிறப்பொருளறிவுச் சிற்சத்திகளைப் பொதுச் சிறப்பாய் மணந்ததினாலு மியற்கையினாலு மசுத்தப்பிராகிருத மனோகங்கார புத்திகள் பசுகரணங்களென்றும் பசுப் பிரமாணங்களென்றும் படிக்கப்படும்.

சிவசத்தி சாட்சாத் சிவாகமாரூடமாயுஞ் சிவமந்திரா ரூடமாயும் நாதத்து வெழுந்தொளிருஞ் சுத்த மனோகங்கார புத்தி கர்ப்பமாயிருக்குஞ் சுத்த ராகஞ் சுத்தகலை சுத்தவித்தை யிவற்றின் மறைந்துவிளக்கினதினாலு மியற்கையினாலுஞ் சிவகரண மென்றும் பதிப்பிரமாண மென்றும் படிக்கப்படும்.

தற்பொருளறிவு பிறப்பொருளறிவுச் சிற்சத்திகளைப் பொதுச்சிறப்பாய் மணந்ததினாற் செயற்கையினாற் சிவகரணங்களென்றும் பதிப் பிரமாணங்களென்று மந்த முந்தச் சொன்ன மனோகங்கார புத்திகள் படிக்கப்படும்.

முறைமையில் அதிற் சிவாகம வழிச்செல்லு மனோகங்கார புத்தியிற் படிப்பனது பசுத்துவ சிவதத்துவ விவேகத் திரிபதார்த்த விவேக பரோக்ஷ தீக்ஷாயோகாங்க விகற்ப சங்கற்ப கர்வபோத ஞான விசேஷங்களைப் பண்ணும், சிவமந்திரவழிச் செ

ல்லு மனோகங்கார புத்திகள் காலாக்கினியாதி யனுசிருதாந்த புவனத்ததிச்கும் அபரசித்தி பராபரசித்தி பரசித்தி முச்சித்திகள் விருப்ப முறைமையிற் சித்திக்கும் பொருட்டும் முடிவின் முத்தி சிக்கும்பொருட்டும் பிருதிவிமுதற் குணமீறுகும், அசுத்த கோடி பிரகிருதி முதற் கால மீறுகும், சுத்தாசுத்த கோடி சுத்தவித்தை முதற் சிவமீறுகும், சுத்தகோடி முக்கோடிகளிற் சாட்சாத் தரங்களாயு மணிப்பிரபைபோ லுபரி விரியும் வியாபாரத் துவாரத்தினாலும் பூதான்மாதி மந்திரான்மாந்த பஞ்சான்ம சாலம்ப சிவயோக பஞ்சமார்க்கங்களி லொருவழியிற் பிரவேசித்து விகற்ப சங்கற்ப சர்வ போத வியாபாரங்களைப் பலவிதமாய்ப் பண்ணும் அந்த விகற்ப சங்கற்ப சர்வ போதங்களால்,—

அறியாமையறிவகற்றி - அறிவகற்றி அறியாமை யகற்றி யென மாறுக. அறிவகற்றி யென்பது தத்துவசுத்தித் துவாரத்தினாலே ஆன்மசுத்தி தானே பண்ணப்பட்ட தாகிலும் தத்துவசுத்தி பிரதானமாகையால் தத்துவசுத்தி பண்ணியென்றே சாற்றப்படும்.—

அறியாமை அகற்றி என்பது மலமல வாசனை சுத்தித்துவாரத்தினாலே யான்ம சுத்தி பண்ணப்பட்டதினாலும் ஆன்மா பசுத்துவ மென்னும் மலோபாதியாற் பசுத்துவ மென்று வேறு தத்வமாய் படிக்கப்படு மாதலால் மலம் பசுத்துவத்தோடு பசுத்துவ மென்று படிக்கப்படும்.

மலதத்துவ மென்று வேறு தத்துவமாய் மதிக்கப்பட்டதில்லையாதலானும் ஆன்ம சுத்தி பிரதான மாகையா லான்ம சுத்தி பண்ணி யென்றே யுரைப்படும்.

இது தொகைப் பொருள்.

அறியாமை யசுத்த தத்துவமென்றும் அறிவு சுத்த தத்துவமென்றுஞ் சொல்வாருமுளர்.

வகைப்பொருள்.

விரிவுப்பொருள் ஒருமிக்க வகுத் துரைப்பாம்.—

அறிவசற்றி - நிருவிகற்பம் புணர்ந் ததிலுதிக்குஞ் சவிகற்பமாய்த் தேவர் நரர்முதற் பசுவர்க்க மாயா சகல வர்க்கத்திற் காணப்படுஞ் சிற்றறிதல் சிறுச் செயற் றொழில்களையும் விபரீதவேதன விக்கிரக போகங்களையும் பண்ணும்படி சிறிதமலஞ்சிந்தித்தும் அசுத்தகலாதி கஞ்சுககலா வச்சியத்துவ தௌரிந்திரியக்குறி யசுத்த சகலத்துவமுற்றுக்கிஞ்சிஞ்ஞத்துவ கிஞ்சித் கர்த்திருத்துவ லட்சண சித்துவ சின்ன அசுத்த போகக் கிரியா கர்த்திருத்துவமாகிய வசுத்த போத்திருத்துவ மாத்திர பொதுக்குறித் தூல புருஷ தத்துவத்தினது புத்திரப் போலிப் போக்கிய போத்திருத்துவ போகோப போத்திருத்துவமாகிய வசுத்த போச்திருத்துவச் சிறப்புக்குறித் தூல சீவத்துவ மேகம்.

நிர்விகற்பம் புணர்ந் ததிலுதிக்குஞ் சவிகற்பமாய் மந்திரேசுர மாயாசுத்த சகலபதி வர்க்கத்திலும் மந்திர மந்திரமகேசுர மகாமாயா சுத்த சகல பதிவர்க்கத்திலும் காணப்படுஞ் சாதிசயப் பேரறிதல் பெருஞ்செயற் றொழில்களையு மற்ப விபரீத வேதன விக்கிரக போகங்களையும் பண்ணும்படி பரியாதியில் மலவாசனை துடைக்குங் கலாதி கஞ்சுகமுற்றுக் கலாவசியத்துவ வைதுரியக் குறிச் சுத்த சகலத்துவ முற்றுச் சாதிசய சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திருத்துவ லக்ஷண தூல சிவத்துவ சின்ன சுத்தபோகக் கிரியா கர்த்திருத்துவமாகிய சுத்த போத் திருத்துவமாத்திரப் பொதுக்குறிச் சூக்கும புருஷத்துவத்தினது

புத்திரப்போலி போக்கிய போத்திருத்துவ போகோப போத்திருத்துவச் சிறப்புக்குறிச் சூக்கும சீவத்துவ மேகம்.

இம்மந்திர மகேசுராதி யபரபதிவர்க்கத்துக் கூறிய குறியுட் கூடிய சுத்த சகலத்துவ முதற் பொதுக்குறிச் சிறிது சின்னமுஞ் சூக்கும சிவத்துவ விளக்கு விக்கிரக விசிஷ்ட சகலத்துவ முதற் சிறப்புக்குறிச் சிறிது சின்னமுமுடைய வணுசதாசிவ வணுவங்கபதி வர்க்கத்தின் முன்சொல்லிய பொதுச்குறிப் பரபுருடத்துவத்தினது புத்திரப்போலி போக்கிய போத்திருதுவ வ போகோப போத்திருததுவச் சிறப்புக் குறிப் பரசீவததுவ மேகம்.

இம் முப்புருடத்துவப் புத்திரப் போலி முச்சீவத்துவமு முபாதிச் சித்துவமும் தூல சிவத்துவமுஞ் சூக்குமசிவத்துவமும் நிரதிசய பரசிவத்துவ சொரூபலட்சண சிவ சமசுத்த சிவஞ யிருக்கின்ற நமக்குச் சொரூப லட்சணமன்று; தடஸ்த லட்சணமேயென்று மகாவாக்கிய நடுமுத விருபதங்களுக்கு வாச்சியார்த்த தடத்த லட்சணுன்மத்துவ தடஸ்த லட்சண சிவத்துவ சுத்திக்குறி முப்புருஷத்துவப் புத்திரப்போலி முச்சீவத்துவசுத்தி தத்துவசுத்தி பண்ணித்தானே வேறுயத்தன மின்றிப் பண்ணப்படு மாதலால் முச்சீவத்துவ தடஸ்தவறிவு விளக்காதலா லறிவென் றுபசரிக்கப்படுந் தத்துவங்க ளாதலா லறிவகற்றி யென்பதற் கர்த்த மிதுவாகத் தத்துவசுத்திபண்ணி,

ஈதிம்முறை பண்ண வென்ப திசைக்கின்றும்.

சாதக சாமர்த்தியத்துக்குத் தக்க சிவஞானத்துணைச் சித்த சிவகன்மயோகி பண்ணுந் தத்துவ தடஸ்த ஆன்ம தடஸ்த சிவ முப்பதார்த்தங்களின திலட்சண வபரோட்ச நிரீட்சணக் குறித் திரிரூபம்,

ஒன்றுக்கொன்று தத்துவ முதற் றிரிபதார்த்த லட்சண

விலட்சண பரோட்ச பரீட்சாரூப நிரீட்சணக் குறித் திரி தரிச
னம்.

மனோவிகற்ப சங்கற்ப பிரவிர்த்தமாய்ச் சிவோகஞ் சிவோ
யஞ் சிவ சிவ வென்பது முதற் பலவித வகங்கார புத்தி விர்த்
திப் பிரவாக சின்ன தியானக்குறி தியானசித்தி சின்ன சமாதி
க்குறி திரியோகஞ் சமாதி சித்தி சின்ன சாட்சாத்காரக் குறித்
திரிபோகம்.

மூலமந்திர முச்சரித் துள்ளிருக்குஞ் சுரிகாஸ்திர மதித்து
த்தொடுத் திருதயாந்தந் தொட்டுத் துவாதசாந்தங் குறித்துச்
சமனாந்த மட்டு முட்ட முறைமையிற் போய்ப் போய்த்தான்
தேசகால சத்திக்குத்தக்க திருதயத் திருந்துதான் சூனியப் பி
ராசாத முச்சரித் துள்ளிருக்குஞ் சுரிகாத்திர மதித்துத் தொ
டுத்து தத்துவங்களையு மான்மாவிலுஞ் சிவனிடத்தினுந் தத்துவ
தடஸ்தத்தினால் வைத்த தடஸ்தத் தன்மைகளையு மறுத்துக்
காரணத் தடைவிலொடுக்கி யகண்டிதங்களாகப் பண்ணப்பட்
டனபோ லடக்கித் தனது தத்துவ வசியத்துவத் திபாச்சியம்
பண்ணித் தத்துவங்கள் தனக்கு வசியங்களாகத் தான் வசியா
யிருத்தலாகுந் திரிசுத்தி.

இவைகளைத் தான்பண்ணிச் சிவஞானத்துணைச் சாத்திய
சிவகன்மயோகி பண்ணுஞ் சொல்லியகுறிப் பரோக்ஷரூபந் தரி
சனம் யோகங்கூடிய மரியாதி மனோவாயு ஜயவச மாத்திரத்
தினாலே யொரு பிரகாரந் தன்வச மாக்குதலாகும் திரிசுத்தி.

இவைகளைத் தான்பண்ணி போகசாமர்த்திய மில்லாதிருந்
தால்,நேதிநேதி நியதலட்சண சிவகன்ம மாத்திரத் துணைச் சா
த்திய சிவஞானயோகி பண்ணுஞ் சொல்லியகுறிப் பரோட்ச
ரூபந் தரிசன மநாத் மந்யாத் மாபிமானத் தியாக மாகுந் திரி
சுத்தி.

இவைகளைத் தான்பண்ணி, அதிமல பரிபக்குவத்தா லாவி ர்ப்பவிக்கு மதிமோட்ச வாஞ்சையின தாவேசத்தாற்றான் அது வன்றித் தேசகலா சத்தி சங்கடத்திலுற்றான் வித்தார சுத்தி விருப்பமில்லையேல் மமகார வகங்கார மாத்திரத் தியா ச்சிய மாத்திரமாகுஞ் சுத்தி தான்பண்ணி,

அல்ல திலகுவாய்த் தத்துவ தாத்துவிகப் பிரபஞ்ச மனை த்து நிராகார நிராலம்ப மாயா மகா மாயாத் தோற்ற மாத லா லப்படி யகண்டிதமாய்க் காரணாகார நிராதார நிராலம்ப நிஷ்பிரபஞ்ச சிந்தனைமாத்திரமாகுஞ் சுத்திதான் பண்ணி,

இப்படிச் சுத்திபண்ணு மிடத்துச் சுத்திமார்க்க பேதமு ண்டு, அது சொல்லுவாம்.

முத்திமாத்திரம் விரும்பின் நிராலம்ப சிவயோகம் பண் ணும் பொருட்டு குரு போதிப்பச் சிவாகமஞ் சிவாகமார்த்த மாத்திரஞ் செப்புங் குருவாக்கிய மாத்திரந்தான் கேட்டுச் சிந் தித்துத் தெளிந்து இருதயமுதற் றுவாதசாந்த வியாபியா யிரு க்கும் பிரமரந்திர முடிவாகும் பஞ்சாதாரங்களிற் றங்கித் தங் கிக் கமல முடிச்சுக் கதவு திறந்து திறந்து தத்துவமுதலிய முப் பதார்த்த ரூப தரிசனமுதலிய பண்ணிப்பண்ணிப் பழகிப்பழ கிப் பின் றானங்களிற் றங்காது சடுதி சற்றே தாக்கித் தாக்கி முன் சாத்திய முறைமையின் முச்சிவயோகிகள்பண்ணு முப்ப குப்புக் தத்துவமுதலிய முப்பதார்த்த முச்சுத்திபண்ணி, ப ண்ணுமிடத்து,

பிரமாதி பரசிவமூர்த்தி ஈசானமூர்த்தி பரியந்த சிவமூர்த் தி பதங்களில் விரும்பிய சிவமூர்த்தி பதமுத்தியெனும் பரமுத் திக்குறிச் சித்திகுறித்து, முச் சிவயோகிகள் பண்ணு முறைமை யிற் சுவாங்கி சுத்தியோடு விரும்பிய தத்துவ தத்துவாருகா ன்ம சிவமூர்த்தி சிவசிவ மூர்த்தி திரிரூப தரிசன யோகபோகங்

கலைப் பண்ணுமிடத்தும் சித்திக்குப்பின் முத்திவிரும்பின முத்திவழி பழகச் சுத்தியோடு பண்ணுமிடத்தும் பவுதிக தேகாதிக்குறிப் பூதாதி மந்திராந்த மைம் பொருள்கட்குந் தத்துவங்களென்று பெயர் சாற்றப்படு மாதலாற் பூதான்ம தத்துவான்ம வந்தரான்ம சீவான்ம மந்திரான்ம சாலம்ப சிவயோகமார்க்கங்களிற்பழகிய வொருவழிவைத்துப் பின் வழியடக்கிச் சுத்த பூதாதி தொட்டுச் சமனுந்தமட்டு முட்டும் பூதான்ம சித்துபாதித் தூல தேகக்குறிப் பூதங்களிற்றன் றத்துவான்மசித்துபாதிச் சூக்கும தேகக்குறி தத்துவங்களிற் றன் அந்தரான்ம சித்துபாதி பரதேகக்குறி யந்தரத்திற்றன் சீவான்ம சித்துபாதி பகங்கார மாத்திரக்குறிச் சீவனிற் றன் மந்திரான்ம சித்துபாதிக்குறிப் பிராசாத முதலிய மந்திரத்திற்றன் ரூப தரிசன யோகபோக சுத்திகள் பண்ணப்படும்.

அறிவகற்றி யென்பதற் கர்த்த மிவ்வள வமைந்தது.—

அறியாமை யகற்றி- மாயா சகல பசுவர்க்கத்திற் காணப்படுஞ் சரீரம் நான், இது சுகம் இது துக்கம் இது மோகம், நான் சுகி நான் துக்கி நான் மோகி யென்பன முதற் பிரஞ்ஞாமோக வஞ்ஞான மூல பசுத்துவ மலத்தின தசோதியாமிகாசத்தி வைத்த போத்திருத்துவக்குறிப் புருஷத்துவ ரூபமாய்ப் போதலாற் றத்துவசுத்தி யான்ம சுத்தி யாமாதலால் மலத்தின தாவாரக சத்தி வைத்த நித்திய கேவல நித்திரா முத்திரித கிஞ்சிஞ்ஞானக் கிரியா சூனிய வறியாமைக்குறி மூர்ச்சாமோக மூல சித்துவ சூனியக்குறி யறியாமைப்பே ரசித்துவ தூலதர பசுத்துவத்தைச் சொல்லிய பிருதிவிமுதற் கலாந்த தத்துவ சுத்தி நடுநடுவே தத்துவ சுத்திப்படி முச்சிவ யோகிகளடைணு முறைமையிற் சிறிது மலசுத்தி துவாரத்தினாலே சுத்தி பண்ணி,

பிரளயாகல விஞ்ஞானகல மூட பசுவர்க்கத்திற் காணப் படுந் தூல சாதிசய சர்வ ஞானக் கிரியா சூனியக் குறி மூர்ச்சா மோக தூல மூலசிவத்துவ சூனியக்குறி யறியாமைப்பெய ரசித் துவ தூல பசுத்துவத்தை மாயா தத்துவ சுத்தியினு மாயா த த்துவ சுத்தி சுத்த வித்தியா தத்துவ சுத்திக்கு நடுவினுந் தத்து வ சுத்திப்படி முச்சிவ யோகிகள் பண்ணு முறைமையின் முற்று மல சுத்தித் துவாரத்தினாலே சுத்தி பண்ணி.

பின் மந்திரே ஸ்வர மந்திர மந்திர மகேஸ்வர மாயா சகல மகாமாயா சகல பதிவர்க்கத்திற் காணப்படுஞ் சூக்கும சாதிச ய சர்வஞ்ஞானக் கிரியா சூன்யக் குறியாகிச் சுத்த போகோப போகப் பிரஞ்ஞா மோகத்திலழுந்திய மூர்ச்சாமோக மூல சூக் கும சிவத்துவ சூனியக்குறி யறியாமைப்பேர் சிவத்துவ சூக்கும பசுத்துவத்தைச் சுத்த வித்தியா தத்துவ வீசுர தத்துவ சுத்தி க்குட் டதத்துவ சுத்திப்படி முச்சிவ யோகிகள் பண்ணு முறை மையிற் றூலதிகார மல மூல தூல மல வாசனு சுத்தித் துவா ரத்தினாலே சுத்தி பண்ணி.

பின்னனுசதாசிவ வணுப் பிரமாங்க மகாமாயா சகல பதி வர்க்கத்திற் காணப்படும் பர நிரதிசய சர்வ ஞானக் கிரியா சூ னியக்குறிச் சுத்த போகோப போகப் பிரஞ்ஞா மோகத் தமிழ் ந்திய மூர்ச்சாமோக மூலபர சிவத்துவ சூந்யக்குறி யறியாமை ப்பரசிவத்துவ பர பசுத்துவத்தைச் சதாசிவ தத்துவ முதல் முத்தத்துவ சுத்திக்குட் டத்துவ சுத்திப்படி சொரூப திரோ தானசத்தி சுத்தியோடு முச்சிவ யோகிகள் பண்ணு முறைமையி ற் சூக்குமாதிகார மலமூல சூக்கும மலவாசனு சுத்தித் துவார த்தினாலே சுத்திபண்ணி.

அறியாமை யகற்றி யென்பதற்கு இவ்வளவு பொருளமை ந்தது.—

அறிவினுள்ளே - தூலசூக்குமபர முச்சின்மாத்தி ரான்மதத்துவ மும்மூல முளைத்த தூல சூக்குமபர முப்பர வித்தியாதத்துவமும் மரம்பழுத்த தூல சூக்குமபர முச்சிவ சிவதத்துவ முப்பழங்கள் விரும்பப் படுமாதலாற் சமனைக்குக் கீழிருபகுப் பான்ம பரசிவ தத்துவத் தியாச்சியத்தினாலே சம்ஞு சுததிக்குமேலுன்மனாந்தாவதி பரசிவத்துவாபி வியத்தி சித்திக்குமளவும் தாக்கிப் பரமல வாசனை யாபாசிக்கு மாதலா லுன்மனா மூலாந்தம் ஸ்வச்சந்த சர்வஞ்ஞானோத்ர சுருதிப்படி சிவசத்தித் துணையாய்ச் சென்று திரோதான சத்தி நிக்ரக கிர்த்திய பரா சத்தியனுக்கிரக கிர்த்திய மத்தியஸ்த சிவ சின்மாததி ரான்மாவினுங்கூடச் செல்லுதலாற் செல்லுஞ் சிவசின்மாத்தி ரான்மாவினும்,—

அறிவுதனை - முறைமையி லனுபர சிவங்கள் சிவபர சிவங்களெனு நாலுசித்துகளையும்,—

அருளினால் - சமனைமட்டு முட்டும் பிராகிருத மனோகங்கார புத்திகளில் மறைந்து சாலம்பித் தன்மனையுற் றுபரி நிராலம்பிக்குஞ் சிற்சத்திவிளக்கு விளக்கிய சிற்சாத்த மனோகங்கார புத்தி விகற்ப சங்கற்ப சிற்றுவிகற்ப சவிகற்ப சர்வபோத நிருவிகற்ப ஞானங்களால்,—

அறியாதே யறிந்து - திருச்சியமாய் நோக்காதே தடத்த லக்ஷண நிர்முக்த ஸ்வ சிவரூப லக்ஷண சர்வதிருக் கர்த்திருரூப லக்ஷண பரோக்ஷ நிரிட்சண சிவக்குறிச் சிவரூபம் தடத்த லட்சண விலட்சண ஸ்வரூப லட்சண பரோட்ச நிரீட்சணரூபசாஸ்திரீயபரீட்சா விலட்சண சூக்கும பரீட்சாக் குறிச் சிவதரிசனமெனுந் தச காரியத் திரு காரியம் படுத்திப் பார்த்து,—

குறியாதேகுறித்து - முன்சொல்லிய சாத்தமனச்சங்கற்ப முனைனுகச் சாத்தாகங்கார புத்திப் பிரவாகச் சிறப்புக் சர்வ

போதஞானங்களா லியற்கையினு லனு பட்ச தற்பொருட் சி வக்குறிப்பினுற்ருன்,—

சம்பு பட்சப் பிறப்பொருட் சிவசாதி விசிஷ்ட தற்பொ ருட் சிவக்குறிப்பினுற்ருன்.

செயற்கையினு லாரோபித சம்புபட்ச பிறப்பொருட் சிவ க்குறிப்பினுற்ருன,

திருச்சிய மன்றிச் சர்வதிர்க் கர்த்திரு ரூபமா ய பரோட் சம் போ லபிநயித்துச் சிவோக மென்றுதான் இயற்கையினுற் சம்பு பட்ச வேற்றுமைச் சிவக்குறிப்பினு லப்படிச் சிவோய மென்று தான் சிவ சிவ வென்றுதா னென்றின் மற்றது மொக் க ஸ்புரிக்க அத்தியஸ்மி யருக மருவப்பொருத்திப் பண்ணும் சி வத்தியானச்குறித் தசகாரியத் தொருகாரிய சிவயோகம்ப ண்ணி,—

அந்தக் கரணங்களோடுங் கூடாதே - இடுக்குக் கொடுத்து விடுத்துத் தொடுத்துச் சிவத்திற் சிறைப்படுத்துஞ் சிவத்தியா னத்திற் சிறிதிடங்கண்டு தாக்கிச் சமனையிற் சுருங்கிச் சூனியப் போலியாய்ப்போன மனதைத் திரும்ப வெழுப்பித திருப்பி வி ஷயத்தில் வீழ்த்துஞ் சகலதன்மை தொட்டுவிட்டுத் தட்டா தே,—

வாடாதே - திரும்பத் திருப்பி யோக நித்திரா முத்திரித ம னத்தைப் பிராகிருத நித்திரையில் முழுகுவிக்குங் கேவலத்த ன்மை தாக்காதே,—

குழைந்திருப்பையாகில் - தியானத்தின துர்க்சர்ஷாவஸ் தாரூபமாய் ஞாதிரு ஞானஞேயச் சிறப்புத் தியாதிரு தியான தேய சூனியப் போலியாய் ஞேயத்தழுந்தி யத்தேய மாத்திரத் திலங்கு ஞானச்சிறப்புத் தியான விசேஷசமாதி பண்ணி யிரு ப்பையாகில்,—

பிறியாத சிவன்றனே - கூடுதல் பிரிதல் குறிக்கிற குற்றமுண்டாதலா லநாதி தொட்டுப் பிரேரகப் பிரேரியத் தன்மைச் சம்பந்தியா யிருந்த வீசுரன் றனே,—

பிரிந்து தோன்றி - அந்தச் சம்பந்தம் விட்டுச் சாதிருச்சிய மாத்திர மித்திர சம்பந்தியாய்ச் சாட்சாத் கரிக்கப்பட்டு, அதுவன்றி,—

பிரபஞ்ச பேத மெல்லாந் தானாய்த் தோன்றி - சித் அசித்துச் சிதசித்துச் சித்திரப் பொருள்கட் கெல்லாம் வியாபகமாய்த் தாரகமாய்ச் சாட்சாத் கரிக்கப்பட்டு,—

நெறியாலே - திருக்குத் திருசியக் குறிக் குறிப்பினாலே,—

அவையெல்லா மல்லவாகி-அந்தத் திருக்குத் திருச்சியப் பொருள்களி னொன்றன்றி,—

நின்றெனாந் தோன்றிடுவ னிராதாரனாயே - தனைக்கொரு தாரக மன்றி நிராதாரனா யிருந்தும் சமாதி சாமர்த்தியத்தினாலுதிக்குஞ் சாட்சாத் காரத்தினால் சாட்சாத்கரிக்கப் படுவன்.

பரார்த்த ஸ்வார்த்தார்த்தப் பிரத்தியர்த் தப்பிரத்தியர்த்தச் சர்வார்த்த சீவன் முத்தி சிவ சாட்சாத் காரஞ் சமாதி சாமர்த்தி யத்தினாற் சித்திக்கு மென்று தாற்பரியம்.

---

## சிவஞானயோகியருளை வருமாறு.

———0———

ஆசிரியன் றிருவருளா லிருவகைப்பாசங்களு நீங்கிக்கேட்குமுறையிற் கேட்டுச் சிந்திக்கு முறையிற் சிந்தித்துப் பின்னன்புசெய் தடங்கி நிற்கப் பெறுவார்க்கு, முதல்வனியல்பு கேட்டற்காலத்துப் பொருட்டன்மைபற்றிப் பேதமாய்த் தோன்றிச் சிந்தித்தற் காலத்துக் கலப்புப்பற்றி யபேதமாய்த் தோன்றித்

தெளிந்தபின் இவ்விரண்டுமின்றி நேரியனும் பரியனுமாயதோர் முறைமைபற்றி எவற்றினு மொற்றித்து நின்றே ஒன்றினும் பற்றிலனாய் வேறு தோன்றுமென்பதாம்.

நின்று நிராதாரனாய்த் தோன்றிடுவனெனக் கூட்டுக.

தெளிதலாமாறு மதன்பயனு மினிது விளங்குதற் பொருட்டு மேற்கூறிப் போந்தவற்றையும் அனுவதித்து உடன் கூறினார்.

கூடாதே வாடாதேயென நின்டுக் கூறவே, ஏனைக் கேட்டல் சிந்தித்தல்களின் றொரோவழிக் கூடுதலும் வாடுதலு நிகழுமென்பதாயிற்று.

அற்றாகலினன்றே ஆண் டிவ்வா றினிதுவிளங்கப் பெறாதாயிற்றென்பது.

இருத்தலருமை நோக்கி இருப்பையாயினென்றார்.

இதனானே தெளிதலாமாறு மதன் கணிகழு மனுபவமுங் கூறப்பட்டன.

---

# நிராம்பவழகியருளை வருமாறு.

—o—

இந்த வுண்மையை யடியேன் பெறும்படி யெப்படியென்றமாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

அறியாமையறிவகற்றி - கருவிகளெல்லாம் நீங்கி ஒன்றுமறியாமற் கிடக்கிற வதீதா வத்தையையும் முப்பத்தாறு தத்வங்களோடுங்கூடி விஷய வியாபாரத்தை யறிகிற ஜாக்கிராவத்தையும் நீக்கி,—அறிவினுள்ளேயறிவுதனை யருளினாலறியாதே யறிந்து - ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கிற ஞானத்தினை ஆன்மபோதங் கூடாமல் அந்த ஞானந் தன்னாலே அறிந்து அங்

த ஞானத்தின் வழித்தாய் நிற்கவே தற்றரிசனமுந் தன்னைத் தோன்றாமல் மறைத்துநின்ற பாசத்தின் முறைமையுந் தோன்றும். இந்த முறைமையையும்,—குறியாதேகுறித்து- ஞானத்தாலே கண்டோமென்று காணுதே கண்டு நிற்கக்காட்டின ஞானந் தனக்குக் கரணமாம்.—அந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகில் - அந்த ஞானக்காட்டத்தானை காண்கிற காட்சியையு மிழந்துநிற்க அவ்விடத்தி லவத்தையாம். அந்த அவத்தையாய் மயங்காதே அந்த ஞானத்தோடே கூடித் தற்போதஞ் ஜீவியாமல் நிலைபெற்று நிற்பையாகில்,—பிறியாத சிவன்றானேபிறிந்துதோன்றி - ஆன்மாவுடனேகூடி யான்மாவொழிந் தில்லையென்னும்படி யநாதியே மறைந்துநின்ற சிவன்றானே சிவனுமொரு முதலுண் டென்னும்படித் தோன்றி அப்பிரகாசமாய் நின்ற தான் பிரகாசித்ததுவு மன்றி,— பிரபஞ்சபேதமெல்லாந் தானாய்த்தோன்றி - காணப்பட்ட விஸ்வத்திலுள்ள பேதங்களெதனையுண்டு அத்தனையுந் தன்னையொழிந் தில்லையென்னும்படி தானாகக் காணப்பட்டு,—நெறியாலே இவையெல்லா மல்லவாகி - சடசித்துக்க ளிரண்டுந் தானாய்நிற்கச்செய்தே இவையிற்றிற் றேய்வறநிற்கிற முறைமையாலே யிந்தப் பிரபஞ்சமெல்லாந் தானல்லவாய் நிற்பன,— நின்றெனறுந்தோனறிடுவ னிராதாரனுயே - தானன்றி வேறொரு முதல்களுமற நிற்கச்செய்தேயும் தானு மொன்றினுந் தாக்கற நின்று பிறகாசியாநிற்பன்.

அறியாமையென்றது கருவிகளெல்லாம் நீங்கி ஆன்மாப் பாடாணம்போலே யொன்று மறியாமற் கிடக்குமதே முத்தி யென்று பாடாணவாதி கொள்கையினுல் அதாகாதென்றதெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், “காட்சி யென்னக் காணுந்துயர - மாட்சியைமுத்தி யெனவகுத்துரைக்

திற் - காணுபாவ மரணங்கருமா - மேய்ந்தவர்முத்தி சேர்ந்த வரன்றே - யளையகதிக்கோர் முளைவரும்வேண்டா - தனிதரு துயர மெனுமிதுதிடமே- பாடாணத்திற் கூடாமுத்தி" என்னு மதுங் கண்டுகொள்க.

அறிவகற்றி யென்றது, வயிந்தவ சரீரத்தைப் பெற்றிருக் கிறதே முத்தியென்று சமவாதி கொள்ளுகையினால் அதாகா தென்ற தெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற் பநிராகரணம், "அகன்று-நீங்கியு முருவ நீங்காதாயி - னோ ங்கியமுத்தி யாவதெனுமைக்கச் - செடியுடலனுகாக் குடி லைகொடுகருமென - ளுதினைநீயே பேதாய்ப்பகட்டுர - லொ ளிர்சினைமுச்சித் தளிரொனுமிதுக்கு"எனனுமதுங் கண்டுகொள்க.

அறிவினுள்ளே யறிவுகளை யருளினாலறியாதே யறிந்தது என்றது ஆனமதரிசனம்.

அந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதேகுழைந் திருப்பையாகில் எனறது ஆனமசுத்தி.

நினறுந் தோன்றிடுவனிராதாரனாயே என்றது ஆன்மலா பம்.

இதற்குப் பிரமாணம் திருக்களிற்றுப்படியார் - ௨௯-செ, ஆக்கப்படாத பொருளா யனைத்தினிலுந, தாக்கிததா னொன் றோடுந் தாக்காதே—நீக்கியுட,னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய், நிற்கை நிராதாரமாம்" எனனுமதுங் கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, கேவல சகல மிரண்டினையு நீங்கி ச் சுத்தத்தி லுண்டாகிய ஞாதரு ஞான ஞேயங்களையுங் கழன் று இந்த நிலையிலேநிற்கி லநாதியே தோன்றாமல் நினற சிவன் தோனறிப் பிரகாசிப்பன் என்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---0---

அருளினாலறியாமை யறிவகற்றி - ஆசிரியன் றிருவருளா லறியாமையு மறிதலுமாகிய விருவகைப்பாசங்களு நீங்கி,—அறிவினுள்ளே யறிவுதனை யறியாதேயறிந்து- தன்னறிவின்கண்ணே கேட்டலறிவினைக் கேட்குமுறையிற் கேட்டு,—குறியாதே குறித்து - சிந்திக்குமுறையிற் சிந்தித்து,—குழைந்தநதக்கரணங்களொடுங் கூடாதே வாடாதே யிருப்பையாகில் - பின்பு அன்பு செய்து அந்தக்கரணங்களிற் சோராதடங்கி நிற்கப் பெறுவார்க்கு,—பிறியாதே சிவன்றானே பிறிந்து தோன்றி - பிறிதலில்லாத முதல்வனியல்பு கேட்டற் காலத்துப் பொருட்டன்மைபற்றிப் பேதமாய்த் தோன்றி,—பிசவஞ்சபேத மெல்லாந் தானாய்த் தோன்றி-சிந்திதற் காலத் தவை கலப்புப்பற்றி யபேதமாய்த் தோன்றி,—இவையெல்லா மல்லவாகி - தெளிந்த பிரிவையிரண்டுமின்றி,— நெறியாலேயென்று நின்று நிராதாரனாயே தோன்றிடுவன் - நேரியனும் பரியனுமாயதோர் முறைமைபற்றி யெவற்றினு மொற்றித்து நின்று ஒன்றினும் பற்றிலனாய் வேறு தோன்றும்.

இதனானே தன்க ணிகழு மனுபவமும் தெறித லாமாறும் கூறப்பட்டன.

* இச்செய்யுளின் முற்பாதியே "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்திதனி லோர் விருத்தப்பாதி போதும்"என்னும் சிவபோக சாரத்தானும் "பார்விரிந்த நூலெல்லாம் பாதிவிருத்தத்தால் சாதித்தார் பொன்னடியைச் சாருநாளென்னாளோ" என்று தாயுமானார் பாடலானும் கூறியதென சாம்பிரதாய வழக்காய்க் கூறுவது. இதனைச் சிந்தித்தறிக.

## மறைஞானதேசிகர் உரை.



*இப்படி ஞேயத்தழுந்தின ஜீவன்முத்த ஞானவன் தேகாந்தத்திற் பெறும் பலம் பரமுத்தி யென் றுணர்த்துகின்றார்.*

* புண்ணியமே நோக்குவிக்கும் பாவங்கீழ்நூக்கும் புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே, நண்ணிய ஞானத்தி னிரண்டினையுமறுத்து ஞாலமொடு கீழ்மே லு நண்ணாகி, யெண்ணுமிக லோகத்தே முத்திபெ றுமிவன்று னெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றகு றைவின்றிக், கண்ணுதற னிறைவதனிற் கலந்துகாய ங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போனிற்பன். ௩க

(இ-ள்.) புண்ணியமே நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும் — புண்ணியஞ் சுவர்க்காதி பலத்தை யடை விக்கும், பாவம் நரகக்குழியிற் பலத்தை ய டைவிக்கு மாதலா லிவ்விரண்டும் பொன்வி லங்கு மிருப்பு விலங்குமென வறிக.

புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே — புண்ணிய மூர்த்தியாகிய சிவனைப் பூசித்த சிவ புண்ணிய பலத்தாலே

நண்ணிய ஞானத்தி னிரண்டினையுமறுத்து — கன்ம க்ஷயம் பிறவாவிடத்து முத்திகூ டாதபடியாலே யிவனுக்குச் சிவனை வழிபடு தலா லுண்டாகிய சிவபுண்ணிய மாகிற ஞா னவாளா லவ்விரண்டினையு மேற்சொன்னபடி யறுத்து,

"ஞானவா ளேந்துமையர் நாதப்பறையறைமின்" என்றார்.

| | |
|---|---|
| ஞாலமொடு கீழ்மேலு நண்ணு ஞகி | புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணியபாவத்தாலும் |
| நண்ணுமுயிர் மேல்கீழ் நடு. | இம்மூன்று லோகத்தையும் பொருந்தாதவனாய், |
| எண்ணுமிக லோகத்தே முத்திபெறுமிவன்றான் | இந்த வுலகத்திலே யுண்டுடுத்திருந்து முத்தியினை யடையக் கருதுஞ் சீவன்முத்தனானவன், |
| எங்கெழிலென் ஞாயிறெமக் கென்று குறைவின்றி | இப்படிப்பட்ட ஞாதாக்கள் வேறு நமக்கு வேண்டியதொரு குறைகளுமில்லையெனக்கருதி யாதித்திய னெவ்விடத்து துதித்தாலுந் தாழ்வில்லையென் றிருப்பர்கள். |

"இங்கிப்பரிசே யெமக்கெங்கோ னல்குதியே, லெங்கெழிலென் ஞாயிறெமக்கேலோ ரெம்பாவாய்" எனவறிக.

| | |
|---|---|
| கன்றுதறன் னிறைவதனிற் கலந்துகாயங் கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன் போனிற்பன. | இந்த ஜீவன் முத்தனுக்குக் கன்மத்தாலுண்டான வாதனைகெட்டுச் சரீரமொழிந்தவாறே கடமான தொலைந்தா லதனுள்ளிருக்கும் விளக்கான தெப்படி யெங்கும் பிரகாசிக்கு மதுபோலிந்த வான்மா நெற்றியிற் கண்ணினையுடைய சிவனது வியாபகத்தைக்கலந்தவனைப்போல சர்வக்கியத்துவமுதலிய குணங்களுடனுங் கூடியிருப்பன. எ-று. |

ஆன்மா - என்பதெழுவாய்.

நிற்பனென்பது - பயனிலை.

இதற்குச் சிவதருமோத்தரம் தேவிகாலோத்தரம் மதங்கம் இரத்தினத்திரையத்து மறிக. (௩௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் ஜீவன்முத்தி பரமமுத்திக் கிரமங் கூறுகின்றது.

புண்ணியமே நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும் - ஆன்மா விவ்விடத்து ஸ்தூலதேகம் விடும்பொழுது புண்ணிய கன்மமே பரிபாகமாகில் மேலாகிய சுவர்க்கபோகத்தை யனுபவிக்கும். பாபகன்மமே பரிபாகமாகில் நரகத்திலே தள்ளும். மேல் ஞாலமோ டெனகையால் புண்ணியபாப மிருவகைக் கன்மங்களேற்றக் குறைச்சலாக பரிபாகமாகிற் பூமியிலே சுக துக்க மிரண்டையு மனுபவிக்கப் பண்ணும்.—

புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே நண்ணியஞானத்தினா லிரண்டினையுமறுத்து-புண்ணியமூர்த்தியாகிய சிவனைப் பூசித்த ÷ சுகிர்தத்தினாலே யுண்டான ஞானத்தாலே புண்ணியபாப மிரண்டையுமறுத்து,—

ஞாலமொடு மேல்கீழ் நண்ணானாகி - தேகாதிசனுக் கேதுவான புண்ணியபாப மிரண்டும் போகையால் பூமியினிடத்து பூதபரிணம தேகத்தையும் தேவலோகத்தில் பூதசார சரீரத்தையும் நரகத்தில் பூத சரீரத்தையு மினிமேற் பொருந்தாதவனாய்,—

எண்ணுமிக லோகத்தே முத்திபெறும் - கன்மபூமியென்றெண்ணப்பட்ட விந்த பூலோகத்திலே தானே ஜீவன்முத்தியை யடையும். இவ்வாறு ஜீவன்முத்தியை யடைந்தவன்,—

இவன்முனெங் கெழுகோ ஞாயிறெமக்கென்று - இவ்வாறு ஜீவனமுத்த னானவன் மகோத்பாதமாக வாந்ததன் றிசை மாறி யுதிக்கினு மஞ்சாமல்,—

காயங் கழிந்தக்காற் குறைவின்றி கண்ணுதறன் னிறைவ்கனிற்கலந் தெங்குமா யரனபோல் நிற்பனென - சருதுபிராரத்

தனேக மொழிந்தால் முன்னின்ற யேகதேசித்துவம் நீங்கிச் சிவனுடைய பூர்ணத்திலே யப்போடே கலந்த உப்புப்போலக் கலந்த அப்புள்ளளவு முப்புள்ளதுபோலச் சிவனுடனே சர்வவியாபியாய் நிற்பன, முத்தானமா வென்று புத்திபண்ணென் றிதனபொருள்.

÷ சுகிருதம் - நற்செய்கை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படி யசத்தியோ நிருவாண தீட்சாவானுய்ப் பின் சிவாகமக கேள்வி முலியவற்றுன் முறைமையில் முப்பதார்த்த விவேக பசுத்துவ சிவத்துவ விவேக சிவ ஞான வானுய்ப் பின் சிவத்தியான வானுய்ப் பின சிவசமாதிமானுய்ப் பின சீவன் முத்தி சிவ சாட்சாத்காரவானுய்ச் சாமர்த்தியவா னல்லாதிருந்தால், மரியாதி மதித்தக் கடாக்ஷிக்குஞ் சிவ தீட்சா ரூப சிவ சத்தி பதிந்த ஞானுத் மூன்றி ஞென்றிரண்டு மூன்று முறைமையிறுடையனுய்த் தானிருந்தவன சரீராந்தத்திற் சத்தியோ நிருவாண தீட்சாவான் போலப் பரமுத்தி சிவசாட்சாத்கார சிவ சாதிருச்சிய சிவவா னுவனென்று சாற்று கின்றுர்.

புண்ணிய மேலுேக்குவிக்கும் பாவங் கீழ் றூக்கும் புண்ணியனே பூசிதத புண்ணியத்திறுலே - கிரியாபூசையினுலேதான் தீக்ஷா மாத்திரத்தினுலேதான,—

நண்ணிய ஞானத்திறுல் - முனசொல்லிய முறைமையில டைந்த ஞானத்திபான சமாதி சீவன் முத்தி சாக்ஷாத்காரக் கூட்டப்பிரிவு ஞானபூசையினுல்,—

இரண்டினையுமறுத்த - புண்ணியபாவங்களை மலத்தோடு பிரதி தினம் மரியாதியிற்போக்கி,—

எங்கெழுகோ ஞாயிறெமக்கென்று எண்ணும் இகலோகத்தே முத்திபெறுமிவன்முன் - பதிக்கப்படுஞ் சீவன்முத்தனானவன,—

காயஞ் சழிந்தக்கால் குறைவின்றிக் கண்ணுதறன் னிறைவதனிற்கலந்து - சிவசத்தி பரிபூரணத்திலொத்து வியாபித்து.

ஞாலமொடு கீழ் மேலும் நண்ணுனுகி எங்குமாய்க் கருதரன்போனிற்பன் - எங்கும் வியாபியாய்த் தான்றியானித்த சிவனுகொத் தெங்கும் வியாபித்துச் சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திரு ரூப சிவனுயிருப்பன். அப்படித் திருமந்திரத்துஞ் சொல்லப்பட்டது.

> "முப்பதுமாறும் படுமுத்தியேணியா
> யொப்பிலாப் பேரண்டத தள்ளொளிப்புக்குச்
> செப்பவரிய சிவங் கண்டுநின்றவ
> ரப்பரிசாகி யமர்ந்துநின்முரே."

இப்படிப் பிறப்பொருட் சிவசாதி விசிஷ்டாத்வைத விசிஷ்ட தர்சிவ வியத்திச் சுத்தாத்துவைதஞ் சொல்லி யிருக்கவும் பிரமித்துச் சிறிதிடத்து மதாங்கரப் போலிவசந் தூக்கி யெடுத்துக்கொண்டு பிறப்பொருட் சிவ வியத்திச் சுத்தாதுவைதம் பிறப்பொருட் சிவ வியத்தி விசிஷடாத்துவைதந்தான் விளம்புவோர் வேதாந்தி ராமானுஜ வேஷங்கொண்டு வேற்றுச் சமயிகளாவார்கள்.

சிவ சாயுச்சியச்சொற் செப்புவது நிருப சர்வ வைக்கியமன்று.

ஏகான்மப் பிரசங்கம் வருமாதலால், சிவ சம்யோகமுமன்று.

விகாரப்பிரசங்கம் வருமாதலால் சிவ சமவாயமுமன்று.

ஏகான்மப் பிரசங்கத்திற் கிடங்கொடுக்கு மாதலால்; சிவ தாதான்மியமுமன்று.

சமவாயத்திற்குச் சொல்லிய தூஷணம் வருமாதலால். சிவ தத்துவ ரூபம்போ லிருப்பது சிவ தாதான்மிய மென்னில் சித்த சாதனமாம், சிவ லயமுமன்று.

துல்லியப்பொருள் கொள்ளாதிருந்தால் விருசப் பிரசங்கம் வருமாதலால். சிவானனனியமுமன்று.

துல்லியப்பொருள் கொள்ளா திருந்தால் வேதாந்த மதாந்தரமாதலால் சிவ சாங்கரியமு மன்று.

பரிணாமவேதாந்த பாஞ்சராத்திரி மதாந்தரமாமாதலால். சிவ ஸ்வஸ்வாமித்துவமுமன்று.

பரமுத்தி பங்கம் வருமாதலால் சிவப்பிரேரக பிரேரித்தியத்துவமு மன்று.

ஸ்வஸ்வா மித்துவத் துக்குச் சொன்ன தோஷம் வருமாதலால் சிவ காரண காரியத்துவமு மன்று.

காரண காரியத்துவம் பிரேரக பிரேரியத்துவ மொன்று பொருளாதலால் ஸ்வஸ்வாமித்துவத்துக்குச் சொல்லிய தோஷந்தானே வருமாதலால். சிவ மேலிடக் கீழ்ப்படுதலு மன்று.

விநாசதுல்லியமா மாதலால் அருக்கன சண்களுக்குப் போற் சிவ வியங்கியத்துவமு மன்று.

பிரதிபந்தப் பிரசங்கம் வருதமாதலால் சிவ வியாபக வியாப்பியத்துவமுமன்று.

ஜடத்துவ நிதநியத்துவப் பிரசங்கம் வருமாதலால் சிவப் பிரதிவிம்பமுமன்று.

மேற்சொல்லிய தூஷணம் வருமாதலால் சிவகுண சங்கிராந்தியு மன்று.

திருஷ்டாந்தமில்லை யாதலால் சிவாவேசமு மன்று.

சுவாதந்திரிய சூனியம் வருமாதலால் சிவகுண சமுற்புத்தியுமன்று.

அநித்தியத்துவப் பிரசங்கம் வருமாதலால் சிவநுக்கிரா யாநுக்கிராககத்துவமு மன்று.

அது வியங்கிய வியஞ்சகத்துவமாதலா லிது பிரதிபந்தப்பிரசங்கம் வருமென்று முன்றள்ளப்பட்ட படியால் சிவ போக்கிய போத்திருத்துவமு மன்று.

ஜடப்பிரசங்கம் வருமாதலால் சிவ ஞாப்பிய ஞாபகத்துவமு மன்று.

அப்படி திருச்சியமாகில் ஜடத்துவப்பிரசங்கம் வருமாதலால் ஸ்வஸம்வித் புராணநுபாவியாநுபவி த்ருத்துவமு மன்று.

ஏகான்மப் பிரசங்கம் வருமாதலால் பரஸம்வித் புரோணகி யோகித்ருத்துவமு மன்று.

சர்வபதார்த்த சாயுச்சியப் பிரசங்கம் வருமாதலால். சிவ சாநித்தியமு மன்று.

ஒன்றுக்கொன்று சாக்ஷாத்காரமே சாநித்திய மாதலால் அப்போது சிவ சாக்ஷாத்காரந் தானே பாசகட்டும்; "ஸர்வார்த்தப்பாசகம்ஞாநஞ் சிவயோநது சாச்வதம்" எனனும் வசனத்திறு லதுவு மொருநிக்கிறைலாகும்.

ஆனல் முடித்த பக்ஷமேது,சிவ சாநிதென்று செப்பப்படுஞ் சிவ சாதிருச்சியமே சிவ சாயுச்சியம். ஆதிமுத்தன் அநாதிமுத்தன் என்னுஞ் சிறிது வைசாதிருச்சிய மிருத்தலான் முற்றுஞ் சாதிருசியஞ் சிவ சாயுச்சியமென்று செப்பப்படாது.

அப்படிச் சொல்லப்படாது ஆதிமுத்தனநாதி முத்தனெனும் சிறிது வைசாதிருச்சிய வார்த்தை மலோபாதி தொட்டுவந்த வெகிரங்கவார்த்தை யென்றும், முத்தனுக்கு அவர்ச்சநீய சஞ்சித கிர்த்தியம் சிவனுக்குக் கிருபாசம்சித்த கிர்தியமென்னு

ஞ் சிறிது வேற்றுமை வார்த்தையும் வேறு காணியமில்லாமையா மென்றும், முற்றுஞ் சிவசாதிர்ச்சிய மென்பதே யங்கரங்க வார்த்தை யென்று முடிதலான் முற்றுஞ் சிவசமாதிருச்சியமே சிவசாயுச்சிய மென்று சித்தாந்தம் சித்தித்தது.

ஆகையா லெல்லாம் நல்லதுதானே! சிவ முற்றுவமை சிவைக்கியமென்று சிலர் செப்புவதேதது? சத்தியம். அது நிருபசரித வைக்கிய மன்றுபசரித வைக்கிய மப்படிச் சுருதி சொல்லியதென்று காந்தபுராணங் கூறுதலால்.

சிவா னன்னியத்துவமே சிவ சாயுச்சியமென்று சில சிவசித்தாந்திகள் செப்பியதேது? அது பரீக்ஷை பண்ணுதுபடித்தது.

சிவனோடு அனன்னியத்துவ மென்னுமிடத்து அன்னென்பது அனனிடப்பொருள் விருத்தப்பொருள் அபாவப்பொருளாக முப்பொருட் சொல்லாதலால், முப்பொருளுள் சிவனுக்கன்னியமாய் முத்தான்மாவில்லை யாதலாற் சிவா னன்னியனென்ற பாவப்பொருட் டொகை விரித் தருத்தஞ் சொல்லிவ் விவர்த்த வேதாந்தமாம்.

சிவனுக் கன்னிய மல மாயா கன்மங்கட்கு விருத்தனாதலால் சிவானனனியனென்று விருத்தப் பொருட்டொகை விரித் தர்த்தஞ்சொல்லில் சிவனுமப்படி யென்று சிவ சதிர்சியனாய்ச் செப்பப்படுவன்.

சிவனுக்கு அன்னிய மலமாயா கன்மங்கட் கனனியன் விசதிருசனாதலால் சிவானனனிய னென்று அன்னியப் பொருட்டொகை விரித்தர்த்தஞ்சொல்லில் சிவனுமப்படியென்று சிவ சதிருச்சியனாய்ச் செப்பப்படுவன்.

இப்படி அவர்கட் கிட்ட விகாதம்பண்ணுஞ் சிவா னன்னியச் சொற் சொல்லி யேதுப் பிரயோசனம் விசேடித்துக் கட்

டிக்கொண்டது, ஒன்றுமில்லை. சகள சதாசிவ சாதிருச்சியமாத்திரஞ் சிவ சமாதி மதம்.

அது சித்தாந்தமன்றென் றறிந்து முற்றுஞ் சிவ சாதிர்ச்சியமே சிவ சாயுச்சியமென்று சிவ சித்தாந்தம் பண்ணிச் சுகியாயிரு.

## சிவஞானயோகியருரை வருமாறு.

வியாபகமாகிய வுயிர் அவ்வியல் பிழந்து கீழுமேலு மேகதேசப்பட்டுச் சேறற்குக் காரணம், அங்ஙனஞ் சென் றவ்வப்பய னுகரச்செய்யு மிருவினைத் தளையேயாகலின், அத்தளை யிரண்டனையும் ஞான நூலோதன முதற் சிந்தித்தலீறாகிய ஞானபூசையின் பயனாய் நிகழ்ந் தெளிதலுணர் வெனப்படும் அரந்தான் அறுக்கப் பெற்றார்க்குக் காரண மின்மையிற் காரியமாகிய ஏகதேசச் செலவு மின்றா பொழியும். அஃதொழிடவே, அவர் கரணங்களின வயத்தராதலின்றி மேலங்ஙனந் தோன்றிய விறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு ஒருவாற்றானுங் குறைவின்றி இம்மையே சீவன் முத்தராகி, மாசு நீங்கியவழி ஆடையின் வெண்மை ஆடைமுழுதும் விளங்கினாற்போல, இருளிவாங்குங் கலம்போ லுழல்வதாகிய விவ்வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையிற் றமது வியாபக மெங்ஙனும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோ டொத்து நிற்பரென்பதாம்.

சிவசம மாதற்குரிய சாதாரண தன்மியாவ திஃதென்பார், எங்குமா யென்றார்.

தெளிந்தார்க்குக் கண்ணுதற னிறைவதனிற் கலத்தற்கணிடையீடின்மை யினிது விளக்குவார், இடையீடாவன விவையென்ப தூஉம் அவை கழிந்தவாறு முடன் கூறினார்.

கண்ணுதற னிறைவதனிற் கலந்தார்க்குப் பண்டை யே கதேசவுணவு தூர்ந்து போதலின், ஏகதேசவுடம்பி னிகழு மின் பதுனபததிற்கு ஏதுவாகிய உற்பாத முதலியவற்றை நோக்கி வரக்கடவதோர் கவலையின்மையின, எங்கெழிலென் ஞாயிறெ மக்கென்று குறைவினறி நிற்பாராயினு ரெனபது.

"தனக்குவமை யிலலாதான றாள்சேர்ந்தார்க் கல்லான் - மனக்கவலை மாற்ற லரிது", என வெதிர்மறை முகத்தாற் கூறி யது மிதுபற்றியென்க.

கலந்து முததிபெறு மிவனென விடையும்.

இதனுனே நிட்டை யாமாறு மதன பயனுங் கூறப்பட் டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இந்தச் சிவஞானம் இருவினை யொத்தவிடத்திலே இவனுக் குண்டாமென் றருளிச்செய்கிறார்.

புண்ணியமேல் நோக்குவிக்கும் - நல்வினையானது மேலா யிருக்கில் சுவர்க்கததிலே கொண்டுபோய்வைத்து இனபததைப் புசிப்பிக்கும்,—பாவங்கீழ் நூக்கும - தீவினையானது நரகத்தி லே தள்ளித் துனபததைப் புசிப்பிக்கும் இவையொழிந்து,— புண்ணியனைப் பூசிதத புண்ணியத்தினுலே - பரமேசுவரனைப் பூசிதத சரியைகிரியா யோகங்களின முற்றுதலினு லுண்டான சிவ புண்ணியத்தி னதிகத்தினுலே,—நண்ணிய ஞானததினுலி ரண்டினையுமறுதது - பொருந்தப்பட்ட சிவஞானத்தினுலே ஆ ன்மபாவ மெனகின்ற பாசங்களிரண்டினையுஞ் சோதிதது, அப் படிச் சோதிக்கையால்,—ஞாலமொடுகீழ்மேலு நண்ணுகி - கனமத்துத யார்ஜ்ஜிக்கிறபூமியிலும் அனுபவிக்கிற சொர்க்கரக

கங்களிலுஞ் சென்று பொருந்துதலின்றி.—எண்ணுமிகலோகத்தே முத்திபெறும் - எல்லாப் பாக்கியங்களுக்கு மேதுவென்றெண்ணப்பட்ட இந்தலோகந்தன்னிலே மோக்ஷத்தை அந்தச்சிவஞானத்தாலே பெறுகிற்பன.—இவனரு ளெங்கெழுகோ ஞாயிறெமக்கென்று குறைவின்றி - இப்படிப் பெற்ற அந்தச் சிவஞானியானவனை பொல்லாத காலத்துக்கு ஞாயிறு திசைமாறித் தோன்றப் பிரபஞ்சத்தி லுள்ளவர்களுக் கெல்லாம் விதனம்வரும். இவன எவ்விடத்திலே யுதித்தால் நன்று நமக்கென்று ஒரு சலனமுமின்றி,—கண்ணுதற னிறைவதனிற்கலந்து - பரமேஸ்வரனுடைய பூரணத்துடனே தானுங்கூடிச் சரீரமுள்ளமட்டு நின்று,—காயங்கழிந்தக்கால் - பிராரத்தம் புசித்துத் தொலைந்து சரீரம் விட்டபொழுது,—எங்குமாய்க் கருதரனைபோனிற்பன - சிவஞானத்தினாலே யறிதியிட் டறியப்பட்ட சுகசொரூபியாயிருக்கிற பரமசிவனைப்போலே தானும் பூரணனாய் நிற்பன.

நண்ணியஞானத்தி னிரண்டினையு மறுத்து என்றது ஆன்மதரிசனம்.

குறைவின்றிக் கண்ணுதற னிறைவதனிற் கலந்து என்றது ஆன்மசுத்தி.

காயங்கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போனிற்பன் என்றது ஆன்மலாபம்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௮-சூ, ௨-வெ, "பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு, மிசைத்து வருவினையினின்ப—மிசைத்த, விருவினையொப்பி லிறப்பிற றவத்தால், மருவுவனாம் ஞானத்தை வந்து" எனனுமதுங் கண்டுகொளக.

இதனாற் சொல்லியது, புண்ணியபாவங்க ளிரண்டும் சொர்க்க நரகங்களிலே கொண்டுபோ மென்றும் சிவனைப் பூசித்த சிவ புண்ணியத்தினாலே உண்டாகிய ஞானத்தினாலே இந்த வி

ரண்டு வினைகளும் போமென்றும் இவை போனால் இவனுக்குப் பூமியிலும் நரக சுவர்க்கத்திலுமுள்ள தொந்தனை யுண்டாகா தென்றும் இந்தச் சரீரத்தோடே கூடியிருக்கச் செய்தே விருப்பு வெறுப்பற்றுச் சிவனுடனே கூடி யொன்றுபட் டிருப்பார்களென்றும் இந்தச் சரீரம் நீங்கினால் பரமுத்தியைப் பெறுவர்களென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

இவன்றனே - வியாபகமாகியவுயி ரவ்வியல்பிழந்து,—கீழ் நோக்கும் மேல்நோக்கும் பாவபுண்ணியம் - கீழுமேலு மேகதேசப்பட்டுச் சேறற்குக் காரண மங்ஙனஞ்சென்று அவ்வப்பயனுகரச்செய்யு மிருவினைத் தளையே யாகலின்,—இரண்டினையும் - அத்தளையிரண்டினையும்,—புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே - சிவபுண்ணிய மிகுதிப்பாட்டால்,—நண்ணிய ஞானத்தினாலறுத்து - ஞான நூல் ஓதல்முதற் சிந்தித்த லீறாகிய ஞானபூசையின பயனாய் நிகழ்ந் தெளிச லுணர்வெனப்படும் அரத்தா னறுக்கப்பெற்றோர்கள்,—ஞாலமொடு கீழ்மேலு நண்ணாகி - காரணமின்மையாற் காரியமாகிய பூமி நரகம் சுவர்க்கத்திற் செல்லுதலாகிய வேகதேசச் செலவு மின்றி யொழியும் —எண்ணுதற் கிறைவதனிற்கலந்து - அஃதொழிபவே யவர் கரணங்களின் வயத்தராதலின்றி மே லங்ஙனந் தோன்றிய விறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு,—ஞாயிறெங்கெழிலென்னை மக்கென்று குறைவின்றி - ஞாயிறெவ்விடத்தெழினு மதனாலே தமக்காவதோர் பயனின்மை தெரித்தவராய் ஒருவாற்றானுங் குறைவின்மையை யடைந்து,— எண்ணு மிகலோகத்தே முத்திபெறும் - இவ்விதமாகக் கருது மிம்மையே சீவன் முத்தராகி,—கா

யங்கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போளிர்பன் - மாசு நீ
ங்கியவழி யாடையினது வெண்மை யாடைமுழுவதும் விளங்கி
னாற்போல இங்குளி வாங்குங் கலம்போ லுழல்வதாகிய வில்
வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையிற் றமது வியாபகமெங்
கணு மறிவு விளங்கப் பெற்றுக் கருதுகின்ற முதல்வனோ டொ
த்து நிற்பர்.

இதனானே நிட்டையாமாறும் அதன்பயனும் கூறப்பட்
டன.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேல் ஜீவன்முத்தர் தன்மை யிரண்டு
செய்யுளா லுணர்த்துகின்றார்.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு நன்
மையொடு தீமையிலை நாடுவதொன்றில்லை, சீலமில்லைத்
தவமில்லை விரதமோடாச்சிரமச் செயலில்லைத் தியா
னமில்லைச் சித்தமலமில்லைக, கோலமில்லைப் புலனில்லை
க் கரணமில்லைக் குணமில்லைக் குறியில்லைக் குலமுமில்
லைப்,பாலருட னுன்மத்தர் பசாசர்குணமருவிப் பாடலி
னோ டாடலிவைப் பயின்றிடினும்பயில்வர். (௩௨)

(இ-ள்) ஞாலம இந்தப் பூமியின் கண்ணே நிட்டையைப்
தின் ஞான பொருந்தின ஞாதாக்களுககு,
நிட் டையு
டையோருக்கு
நன்மையொடு விருப்பு வெறுப்பு மில்லை யாகையா லிரு
தீமையிலை வினையு மேறுவ தில்லையாய்,

| | |
|---|---|
| நாடுவதொன் றில்லை | தனக் கேதுவந்தாலுஞ் சிவன் செயலெனக் கருதி யவனவனாது வென்னுஞ் சுட்டுப் போதமு மில்லையாய், |
| சீலமில்லை | இன்னபடி யாசாரமாய் நடக்க வேணுமென்னுந் தன்மையு மில்லையாய், |
| தவமில்லை | சாந்திராயண முதலிய விரதங்களை யனுட்டித்துச் சரீரத்தை வாட்டுதல் செய்விப்பது மில்லையாய், |
| விரதமொடாச்சிரமச் செயலில்லை | பிரமசரிய முதலிய விரதத்துடனே கூடின நாலாச்சிரமத்தின் வழியின் றனுட்டிக்க வேணுமென்று நியமமுமில்லை, |
| தியானமில்லை | யாதாமொரு மூர்த்தித் தியானமுமில்லை, |
| சித்த மலமில்லை | மனவழுக்கு மில்லை, |
| கோல மில்லை | இப்படி யிருக்கவேணு மென்கிற நியமுமில்லை, |
| புலனில்லை | விடயங்களின் வழி யொழுகுவது மில்லை, |
| கரணமில்லை | சிவகரணமாய்ச் சீவிப்பதன்றி யவகரண மில்லையாய், |
| குணமில்லை | பொல்லாத குணங்களுடன்கூடி நடப்பதுமில்லை, |
| குறியில்லை | ஓரடையாளங்களுடனே கூடியிருக்கவேணுமென்கிற நியமமுமில்லை, |
| குலமுமில்லை | இன்ன சாதியென்று வரைதலுமில்லை, |
| பாலருடனுன்மத்தர் பசாசர் குற்றதே | இம்மூவரையு முவமித்துத் தங்களுக் கே செய்திருக்கையாற் கூறியதொழிய- |

ணமருவி — இவர்களைப் போல வறிவற்றதென்றுகூறிய தன்று;

பாடலினோ டாட லிவைபயி ன்றிடினும் பயில்வர். — பாடியுமாடியுந் திரிந்தாலுந் திரிவார்கள் எ-று.

உம்மை ஐயம்.

இதற்குச் சர்வஞானோத்திர மதங்கத்துமறிக. (கஉ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—— o ——

சீவன் முத்தர் பண்ணவேண்டுவ தொருநியமுமில்லை யென்பது கூறுகின்றது.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு நன்மையொடு தீமையில்லை - பூமியின்கண்ணே சிவஞான நிலைப்பேற்றை யுடையோருக்கு நன்மையாகிய புண்ணியமுமில்லை,—

ஒடு- உடனிகழ்தல். தீமையாகிய பாபமுமில்லை.—

நாடுவதொன்றில்லை - புண்ணிய பாபக்கிரியைகளைப் பண்ணினார்களாகிலும் ஒரு பலத்தை நாடுவதில்லை,—

சீலமில்லை- சமயாசாரங்கள் பண்ணவேண்டுவது மில்லை,—

தவமில்லை - சாந்திராயணாதி தபசைப் பண்ணவேணுமென்பதுமில்லை,—

விரதமில்லை -நைஷ்டிகம் பாசுபதம் ÷ அதியாச்சிரமம், பஸ்மசரியை இவைகள் முதலான விரதங்களைப்பண்ணவேண்டியது மில்லை,—

ஆச்சிரமச் செயலில்லை - ஆசிரம தருமங்களை யனுஷ்டிக்க வேண்டுவது மில்லை,—

தியானமில்லை-மூலாதாராதி ஸ்தானங்களிலே சகுணமூர்த்தி தியானங்கள் பண்ணவேண்டுவது மில்லை —

சிதமலமில்லை - சித்தமான தலமருதலில்லை. அலமருதல்=விகர்ப்பம்.—

கோலமில்லை - சமயத்துக்கேற்ற வேடத்தைத் தரிக்கவேணு மென்பது மில்லை,—

புலனில்லை - சப்தாதி விஷயங்களை விடவேணும் பொருந்தவேணுமென்னும் நியமமுமில்லை, —

கரணமில்லை - அந்தக்கரணங்களை யடக்கவேணு மென்பதுமில்லை.

இவ்வாறு விஷயங்களிற் செல்லாமற் கரணங்களை யடக்கவேண்டுவது ஞான சாதகனுக்கே! ஞானசித்தனுக்குக் கரணங்கள் சிவகரணமும் சகலவஸ்துக்கள் சிவாகார மாகையாற் கரணங்களை யடக்கவேணுமென்னும் சங்கற்பமில்லை,—

குணமில்லை - தாமச ராசச குணக்கிரியைகளை யடக்கி சாத்வீக குணக்கிரியைகளைச் செய்யவேணுமென்னு நியமமில்லை,—

குலமில்லை-குலதருமத்திலே நடக்கவேணு மென்பதுமில்லை,—

பாலருடனுன்மத்தர் பசாசகுணமருவி - பாலர்குணமாவது பசித்தநேரம் புசிப்பதன்றி யினிமேற் புசிப்புக் கிதுவேணு மென்று தேடாமலும் மாதாபிதாவுக்குவந்த பேறிழவிற் சந்தோஷமுந் துக்கமுந் தனக்கில்லாமலும் பிரயோசனத்தை யிச்சியாம லொருதொழில் செய்வதும்.

+உன்மத்தர் குணமாவதுவொரு தன்மையாய் வைதவரையும் வாழ்த்தினவரையும் பகுத்து நோக்காமல் தேக சவுக்கியங்களையு மிச்சியாமலிருக்கை.

பசாசர்குணமாவது பேய்பிடியுண்டவன் தேகத்திலேயொ

ருத்தர் பண்ணு மிதாஹிதங்கள் பிடித்த பேய்க்கேயாகத் தனக்குப் பாரமற விர்ப்பது,—

பாடலினோ டாடலினை யயின்றிடினும் பயில்வர்-ஆனந்த மேலீட்டினாலே சிவனைப் பாடுதலுந் தாமாடுதலுஞ் செய்வர்.

உம்மையினால் நிர்விகாரமாயிருந்தாலு மிருப்பர். இவ்வாறு அந்நியமமே நியமமாகையால்,—

குறியில்லை-இன்னபடித்தாயிருப்ப ரின்னபடி செய்வரொன்றே ரடையாளஞ் சொல்லப் பெறுவதில்லை யெனறிதனபொருள்.

÷ அதியாச்சிரமம்-ஆசிரமத்தைக் கடந்தது, + உன்மத்தர்-பித்தர்.

[illegible]

---

## ஞானப்பிரகாசருணா வருமாறு.

—o—

தியானமூலத்து முளைத்து மந்தமாயும் தீவிரமாயுஞ் சீவன்முத்தி சாக்ஷாத்கார பரமுத்தி சாக்ஷாத்காரப் பழ்ப்பழுக்குஞ் சமாதி விருக்ஷம் வளர்த்தவன் மகிமை யிருவிருத்தத்தால் வகுத் துரைக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருணா வருமாறு.

———o———

இந்த நிட்டையுடையார்க்கு விதித்தன செய்தலும் விலக்கியன வொழுகலும் வேண்டாம், அவர் செய்தன வெல்லாந் தவமா மெனபதாம்.

பாலர் குணம் அறவொழுகற்கும், உன்மத்தர் குணம் ஒருகாற்செய் தொருகாலொழிதற்கும், பிசாசர்குணஞ்செயலிழப்பினாறு செய்தற்கு முவமையாயின.

இவ்வாறன்றி, மேலுணவு சேடாமை முதலியவற்றிற்கு அம்மூன்று முவமையாயின வெனபாருமுளர்.

இச்செய்யுளி னெடுத்துக்கொண்ட பொருளோ டியைபின்மையானும்' "பால ருன்மதத்தர் பிசாசரிலெனவு - முறங்கினோன்கை வெறும்பாகெனவுந் - தானேதவிராதானல்" எனப் பிராண்டுந் தவிர்தன் மாத்திரைக்கே அவற்றை எடுத்து காட்டிய வாற்றானும், அஃதிண்டைக் கேலாமை யறிக.

பாடலினொடாடலினை பயிறல் பரமானந்த மேலீடு நோக்கி நிகழ்வதெனக.

———

## நிரம்பவழகியருணா வருமாறு.

———o———

இந்த உண்மைநிட்டை கூடின ஞான வான்களினிலக்கண மேலருளிச்செய்கிறார்.

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு - இந்தப் பூமியிலே ஞானநிட்டை கூடியிருக்கிறவர்களுக்கு,—நன்மைபொடு தீமையில்லை - விருப்பு வெறுப்பு மில்லையாய்,—நாடுவதொன்றில்லை-இன்னது வேணுமென்று ஒரு நாட்டங்களு மில்லையாய்,—

சீலமில்லை - ஜாதித்தொழில் குணத்தொழில் முதலான சீலங்களுமில்லையாய்,—தவமில்லை - பஞ்சாக்கினி நடுவும் ஜலத்திணடுவு முதலாகச் செய்கிற தவங்களு மில்லையாய்,— விரதமொடாச்சிரமச் செயலில்லை-மாசோபவாசம் அட்டமிவிரத முதலானவையும் ஒரு ஆசிரமங்களு மில்லையாய்,— தியானமில்லை-ஆதாரம் பிராசாதம் முதலாயுள்ள தியானங்களு மில்லையாய்,—சித்தமலமில்லை - ஆன்மாவுக்கு அநாதியே சகசம யிருக்கு மாணவமலமு மில்லையாய்,—கோலமில்லை - இப்படி இருக்கவேணுமென்று ஒரு வடிவுமில்லையாய்,—புலனில்லை - இந்திரிய வியாபாரங்களு மில்லையாய்,—கரணமில்லை- அந்தக்கரண வியாபாரங்களுமில்லையாய்,—குணமில்லை- சாத்துவித ராசத தாமதமென்கிற குணங்களுமில்லையாய்,— குறியில்லை - ஓரடையாளமுமில்லையாய்,—குலமில்லை- பிராமண க்ஷத்திரியன் முதலாயுள்ள குலதன்மமு மில்லையாய், இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யெல்லாமில்லையா யிருக்கையில் இவர்களிலக்கணம் எப்படி யென்னில்?—பாலருட னுன்மத்தர் பசாசர்குண மருவி - யாதொன்றையும் விகற்பியாமல் நிருவிகற்பமாய்க் காண்கிற பாலனைப் போலவும் வைகாரையும் வாழ்த்தினரையுஞ் சுட்டி யறியாத மதுபானஞ் செய்தவர்களைப்போலவும் ஆகாரம் நித்திரை பயமைதுனம் என்கிற நாலு காரியமு மில்லாத பசாசனைப்போலவும் இந்தக் குணக்களைப் பொருந்தி,—பாடலினோ டாடலிவை பயினறிடினும்பயில்வர் - தங்களுக்குண்டான சுகத்தின்மிகுதியாலே பாடுவதாடுவதாய்த் திரிந்துடனுந் திரியாநிற்பர்கள்.

இதற்குப்பிரமாணம் திருவாசகம் புணர்ச்சிப்பத்து-அ-செ-

,"நெக்குநெக் குள்ளுருகி யுருகிநின்று மிருந்துங் கிடந்துமெழுந்து, நக்குமழுதுந் தொழுதும்வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச், செக்கர்போலுந்திருமேனித் திகழநோக்கிச் சிலிர்சிலிர்

த்துப், புக்குநிற்பசென்று சொல்லோ வெண் பொல்லர்மணிமை ப்புணர்ந்தே" எனனுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, உணமையைப் பெற்ற ஜீவன்முக் தரா யுள்ளவர்களுக்கு விருப்பு வெறுப்பு முதல் ஜாதிதன்ம மீறாகச் சொல்லிவந்த முறைமைகளெல்லா மில்லையென்றும் அ வர்கள் பாலருன்மத்தர் பசாசர் குணங்களைப் பொருந்தி நிற் பர்களென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

ஞாலமதில் ஞானநிட்டை யுடையோருக்கு - இவ்வுலகத்தி ன்கண் ஞானநிட்டை யுடையார்க்கு,—நன்மையொடு தீமையி லை- நன்மைதீமைகளாகிய விருவினைகளுமில்லை,—நாடுவதொன் றில்லை-வினைகளைச் செய்தாராயினு மொருபலத்தை நாடுவதுமில் லை,—சீலமில்லை - சமயாசாரங்களனுட்டிக்க வேண்டுவதுமில் லை,—தவமில்லை - தவங்கள் பண்ணவேண்டுவதுமில்லை,—விரத மோ டாச்சிரமச்செயலில்லை-விரதானுட்டானங்களுட னாச்சிர ம தருமங்களையு மனுட்டிக்க வேண்டுவதுமில்லை,—தியானமில்லை- தியானபாவனைகளுமில்லை,—சித்தமலமில்லை - சித்தசலனமுமி ல்லை,—கோலமில்லை-அவ்வச் சமயத்துக் கேற்ற வேடத்தைத்த ரிக்கவேண்டுவது மில்லை,—புலனில்லை - விடயங்களைவிடுதல்பற் றுதல் வேண்டுமென்ற நியமமு மில்லை,—கரணமில்லை - அந்தக் கரணங்களை யடக்கவேண்டுவதுமில்லை,—குணமில்லை-தாமதரா சதகுணங்களை யடைக்கிச் சத்துவகுணச் செய்கைகளைச் செய்ய வேண்டுமென்ற நியமுமில்லை,—குறியில்லை - ஒருகுறியினைக் கொள் கவேண்டுமென்பது மில்லை,—குலமுமில்லை - குலதன்மத்திலே ந டக்கவேண்டுவது மில்லை,—பாலருடனுன்மத்தர் பிசாசர்குண

மருவி-பாலகரைப்போல அற ஒழுகலும் உன்மத்தரைப்போலொரு காற்செய்த தொருகாலொழிதலும் பேய் பிடியுண்டவர் போல செயலிழப்பி னின்று செய்தலு மாகிய குணங்களைப்பொருந்தி,— பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்- பரமானந்த மேலீட்டாற் பாடலாடல்க ளாகிய தொழில்களைச் செய்திடினுஞ் செய்வர்.

---

## மறைஞானதேசிகர் உரை.

தேசமிடங். காலந்திக் காசனங்களின்றிச் செய்வ தொன்று போற்செயயாச் செயலதனைச் செய்தங், கூசல்படு மனமின்றி யுலகவனிற்ற லுறக்கமுணர் வுண்டி பட்டி னியிருத்தல்பிடத்தன், மாசதனிற் றூய்மையினில் வறுமைவாழ்வில் வருத்தத்திற் றிருத்தத்தின் மை யூனத்திற்சினத்தி. லாசையினில் வெறுப்பிலிவை ய ல்லாதுமெல்லா மடைந்தாலு ஞானிகடா மரனடியை யகலார். (கக)

(இ-ள்.)தேசமிடங் காலந்திக் காசனங்க ளின்றி — காசி முதலிய புண்ணிய தேசத்திலிருக்க வேணுமென்னு நியமமும் கங்கை முதலிய நதிகளை யடுத்தி லிருக்கவேணு மென்னு நியமமும் உபராகமுதலிய புண்ணிய கால ங்களை வேணுமெனனக் கருதுதலு மின்ன திக்கைப் பார்த்திருந்து ஜபானுஷ்டானஞ் செய்யவேணுமென் பதுவும் பதுமாதன முதலியவோ ராதனங்களிலே யிருக்கவே ணுமென்னு நியமமுமின்றி

செய்வதொன்றுபோற்செய்யாச்செயலதனைச்செய்து — யாதாமொன்றை யவர்கள் செய்யுமிடத்தவர்கள் கோட்பாடு வேற்றுமையாற் செயல்களொல்லாதனதையுஞ் சிவன் செயலெனவே கருதிப் பணியற நிற்றலாலும்,

"யாதேசெய்யினு நாமலோம்நீயெனி, லாதேசெய்யு மளவில்பெருமையன" எனவறிக.

அங்கூசல் படுமனமின்றி — ஊசலானதெப்படிப் போக்குவரவு செய்யும், அதுபோன்ற சஞ்சல புத்தியுமின்றி

உலாவனிற்றலுறக்க முணர்வுண்டி பட்டினியிருத்தல் கிடத்தல் மாசகனிற் றூய்மையினில் வறுமை வாழ்வில் வருத்தத்திற் றிருத்தத்தின் மைதுனத்திற் சினத்திலாசையினில் வெறுப்பிலிவையல்லாத மெல்லா மடைந்தாலு ஞானிகடா மரனடியையகலார். — ஞானிகளானவர்கள் நடந்தன முதலிய வியாபாரங்களைப் பொருந்தின விடத்தும், இஃதன்றி யாதாமோரவத்தைகளைப் பொருந்தின விடத்தும், வாயுவானதெப்படி விளாவி லடித்தாலு மாகாசத்தைவிட்டு நீங்காதவாறுபோலச் சிவனது திருவடிநிழலை விட்டொருக்காலு நீங்கார்கள். எ-று.

மாசு - அசுசியான விடத்தும்,

தூய்மை - சுத்தனாயிருந்த விடத்தும்.

இதற்குச் சர்வ ஞானோத்தரத்தும், நிசுவாசத்து மறிக.

(௩௩)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலிதனையே விரித்துரைத்தல்.

தேசமிடங் காலந்திக் காசனங்களின்றி-இன்றி என்பதுப தந்தோறு மொட்டிப் பொருளுரைக்க. *ஆரியாவர்த்தாதி புண்ணியதேசத்திலே வசிக்கவேணுமென்றுங் கீகட கேரளாதியீந தேசத்திலே வசிக்கலாகா தென்பதும் சிவாலய சமீபத்திலே தீர்த்த சமீபத்திலே இருக்கவேணுமென்பதும் ÷ இதர ஸ்தலத்திலே யிருக்கலாகா தென்பதும் இன்ன காலத்திலே யின்னகிரியையைச் செய்யவேணு மின்னகாலத்திலே யின்னகிரியையைச் செய்யவேண்டா மென்பதும் இன்னதிக்குமுகமாக இருக்கவேணும் இன்னதிக்கிலே இன்னதிக்கு தலையாகப் படுக்கவேணும் ×வியாக்கிராசன முதலான வாசனங்களிலே இருக்கவேணும் பூமியிலே ஆசனமில்லாம லிருக்கவொண்ணா தென்பது மின்றி சுவஸ்திக பத்மாசனாதி யாசன பந்தங்களைப் பண்ணவேணு மவேண்டாமென்னும் நியமங்களில்லாமல்,—

செய்வதொன்றுபோற் செய்யாச்செயலதனைச் செய்தஞ் சுசல்படு மனமின்றி - பலத்தை யுத்தேசித் தொரு கன்மம்பண்ணுகிறவர்களைப்போல பலத்தைக் கொடாவகையாகவே ஸ்நாந தானாதிக் கிரியைகளைப் பண்ணி யிவ்விடத்து இது இவ்வாறு மிவ்வாறல்ல இது பண்ணலா மிது பண்ணலாகாது என்னு மனதினுடைய சஞ்சலமின்றி,—

உலாவுகிற்ற லிருத்தல் கிடத்த லுண்டி பட்டினி யுறக்க முணர்வு - இங்ஙனங் கூறிய செயல்களைப் பிராகிருத சனங்களைப்போலே செய்தும்.—

மாசதனிற் றூய்மையினில் வறுமைவாழ்வில் வருத்தத்திற் றிருத்தத்தின் மைதுனத்திற் சினத்தி லாசையினில் வெறுப்பி

வினையல்லாது மெல்லா மடைந்தாலும் - இவ்வாறு சொன்ன வைகள் முதலான விதி * நிஷேத கன்மங்க ளநேகஞ் செய் தார்களாகிலும்,—

ஞானிகடா மரனடியை யகலார் - ஞானசித்தர் சிவனை நீங்கித் தொழிற் செய்தவரல்லர். ஆதலாற் புண்ணிய பாப மவர் கட்கில்லை. இவ்வாறு விகாரக் கிரியைகளைப் பண்ணுகையிலே சிவனை நீங்காத தெப்படியென்னில்? வாயுவானது சைத்திய † சௌரப்பிய மாந்தியத்துடனே தென்றலாகவு மிதற்கு விபரீதமான சூறாவளியாகவும் இவ்விரண்டு கிரியை முதலாக வேகததிலே சரித்தும் ஆகாசத்தை நீங்காததுபோல,

இதற்குச் சம்மதி,—

[illegible] ||

இதனால் பிராரத்த கன்மம் நானாபேத மாகையால், கோபவானாகியும் சாந்திமானாகியும் விரக்திமானாகியும் ராகவானாகியும் போகவானாகியு மிருப்பார்களாகையால் சீவன் முத்தர்களுடைய லக்ஷணமிவ்வாறென் றறியப்போகாதென்று கூறியது.

இதற்க்குசசம்மதி.

[illegible] ||

* ஆரியாவர்த்தம் - ஒருபுண்ணியதேசம், ÷ இதரம் - வேறு, + வியாக்கிராசனம் - புலித்தோல், * நிஷேதம் - விலக்கு, † சௌரப்பியம் - வாசனை.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

தேசமிடங் காலந் திக் காசனங்கள் முதலியவை தியான த் திச்சிக்கப்படுவன, சமாதியில் வேண்டுவதன்றென்று பொருள்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

விகாரமுறுதற்கேதுவாகத் தம்முன் மாறுபட்ட தொழில் பலவற்றையுஞ் செய்தாராயினும், அவைபற்றி யவர் சிறிதும் விகாரமுறுவாரல்லர் : உண்மையானோச்குவார்க்கு அவர் செய்யுஞ் செயல் வேறாகலானென்பதாம்.

செய்யாச் செயலதனைச் செய்தற்கு வேறொரு நியதியும் வேண்டாவென்பார், தேசமிடங்காலந் திக்காசனங்களின்றி யென்றார்.

இன்றிச் செய்வதெனவும் அடைந்தாலு மெனப்படு மனமின்றி யெனவு மியையும்.

அடைந்தாலு மென்னு மும்மை சிறப்பின்கண் வந்தது. "உவரி தோனறிவாம் தொழிலவாயினு மயிலை தீஞ்சுவையுப்பின்" என்றாற் போல.

இவையிரண்டு செய்யுளானும் நிட்டைமேவினோர்களதாசாரங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

இப்படி முன்சொன்ன வுண்மையைப்பெற்ற சிவஞானிக ள் எவ்விடத்து மந்தச் சிவஞானமேயாய் நிற்பார்களென்று ம ருளிச்செய்கிருர்.

தேசமிடங் காலந்திக் காசனங்களின்றி - நல்ல விராச்சி யம் பொல்லாவிராச்சியம் என்கிறதேசங்கள் காசி திருவம்பல முதலாயுள்ள தானங்கள் விஷுவயன சங்கிரமங்கள் முதலாயு ள்ள காலங்கள் கிழக்கு தெற்கு முதலாயுள்ள திக்குக்கள் சித் ராசனம் பத்மாசன முதலாயுள்ள வாதனங்கள் இவையுமில்லை யாய்,—செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய் து - சரிதை கிரியாயோகங்களை வழுவறச்செய்து சாலோக்கி யாதி பதங்களைப் பெறுகிற முறைமைபோலச் செய்யாத செய லாகிய மவுனயோகத்தை யாசாரியனுலே பெற்றுச் சிவாநு போகத்தை அநுபவித்து: அப்படி அநுபவிக்குமிடத்து,—அங் கூசல்படு மனமின்றி - அவ்விடத்து ஊசலின் ருெழிலையொத் துப் போக்குவருத்துச் செய்யத்தக்க மனமுமில்லையாய்,— உ லாவல் நிற்றல் - நடந்தாலும் அசைவற நின்ருலும்,— உறக்க முணர்வு - உறங்கினுலும் விழித்தாலும்,— உண்டி பட்டினி - புசித்தாலும் பசித்தாலும்,— இருத்தல் கிடத்தல் - இருந்தாலு ங் கிடந்தாலும்,—மாசதனிற் றூய்மையினில் - அசுத்தத்திற் சு த்தத்தில்,—வறுமை வாழ்வில் - மிடியிற் செல்வத்தில்,— வரு த்தத்தில் திருத்தத்தில் - துக்கத்தில் சுகத்தில்,— மைதுனத்தி ல் சினத்தில் - சந்துசாரமாகிய பிரியத்தில் கோபத்தில்,— ஆசையினில் வெறுப்பில்-விருப்பு வெறுப்புக்களில்,—இவையல் லாதவெல்லா மடைந்தாலும் - இங்ஙன மொன்பது வகையில் பதினெட்டாகச் சொல்லப்பட்ட விவையுமன்றி வெறுஞ் சிலவ

ந்து பொருந்தித்தாகிலும்,—ஞானிகடா மரனடியை யகலார்- உண்மைஞானிகளா யுள்ளவர்கள் பரமேஸ்வரனுடைய சீபாத த்தை விட்டு நீங்காமல் அனவரதமு மதுவே நிலையாக நிற்பார் கள்.

இதனாற் சொல்லியது,சீவன முத்தராயுள்ளவர்கள் பிராரி த்தம் புசித்தற்கு தலையுமளவு மௌனோப தேசத்தோடுங் கூடி இருப்பர்களென்றும் அவ்விடத்து ஆகாரம் நித்திரை பய மை துனமுதலாயுள்ளவை வந்து தாக்கினாலும் பரமேஸ்வர னுடை ய சீர்பாதமே பற்றுக்கோடாக நின்று விடுவர்களெனனு முறை மையு மறிவித்தது.

'சூரியகாந்த' 'மிச்சதொரு' 'அறியாமை' 'புண்ணியம்' 'ஞாலமதின' 'தேசமிடம்' ஆகவாறும் உண்மை நிட்டை.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

ஞானிகடாம் - ஞானிகளாவார்,—தேசமிடங் காலந்திக் காசனங்களின்றிச செய்வதொன்றுபோல்- ஓர்தேய மோர் கா ல மொருதிக்கு ஒரு ஆசனமுதலியவையின்றிச் செய்வதாகிய ஒ ருதொழில்போல்,—செய்யாச் செயலதனைச் செய்து- செய்தற் கரியதொழிலதனை யியற்றியும்,— உலாவனிற்றல் - உலாவுதலி னும் நிற்றலினும்,—உறக்கமுணர்வு - உறக்கத்தினு முணர்ச்சியி னும்,— உண்டிபட்டினி - உண்ணுதலினு முண்ணுதொழிதலினு ம்,—இருத்தல் கிடத்தல்- இருத்தலினும் கிடத்தலினும்,—மாச தனிற்றூய்மையினில் - மாசுடைமையினுந் தூய்மையுடைமையினு ம்,—வறுமைவாழ்வின் - வறுமையினும் வாழ்வினும்,—வருத் தத்திற்றிருத்ததில் - துன்பத்தினு மின்பத்தினும்,—மைதுன த்திற் சினத்தில்- புணர்ச்சியினுங் கோபத்தினும்,—ஆசையின்

வெறுப்பின் - விருப்பினும் வெறுப்பினும்,—இவையல்லாத மெல்லாமடைந்தாலும்-விகாரமுறுதற் கேதுவாகத் தம்முன்மாறுபட்ட தொழில்பலவற்றையுஞ் செய்தாராயினும்,—அக்கூசங்கமனமின்றி யானடியையகலார் - அவ்விடத்து அவைபற்றிய வர் சிறிதும் விகாரமின்றி முதல்வனதிருவடியை விட்டுநீங்கார் எனபது உண்மையாநோக்குவார்க்கு அவாசெய்யுஞ் செயல் வேறுகலான.

இவை இரண்டு செய்யுளானு நிட்டை மேவினோரது ஆசாரங் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இஃதில்லா தோர்க்கு வேறுமோருபாய நிட்டை யுரைத்து கின்றார்.

இந்நிலைதா னில்லையே லெல்லாமீச னிடத்தினினு மீசனெல்லா விடத்தினினுமியன்ற, வந்நிலையை யறிந்தந்தக கரணங்களடக்கி யறிவதொரு குறிகுருவினருளினலறிந்து, மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்றனுலே மருவுபசு கரணங்கள் சிவகரணமாகத், துன்னியசாக் கிரமதனிற் றுரியாதீதந் தோன்றமுயல் சிவானுபவஞ் சுவானுபூதிகமாம். (௲௪)

(இ-ள்) இந்நிலை இந்தப்பாவனை சைவாராதாகில்
தா னில்லை
யேல்
எல்லா மீசனி சராசராத்மக மாகிய வான்மாக்களெல் டத்தினினு மீச லாம் சிவனிடத் தைக்கியமாகிநிற்கு முறை

| | |
|---|---|
| ஒனல்லா விடத் தினினு மியன்றவ ந்நிலையையறிந்து | மையினையு மந்தச்சிவன்ருனு மாயாதி தனு வினு லுயிர்களுயிராய் வியாபித்து நிற்கு மு றைமையினையு மறிந்து, அதெனபோல வெளி ல்? சிவசாதாக்கிய முதலியநாலு மெப்படி |

யொன்ருகக் கன்ம சாதாக்கியத்திலே வியாபித்து நிற்கும், அது போல மாயாதனு முதலியவற்றினு னனுப்பிரவிட்டமாக வியாபித்து நிற்பனென வறிக.

"கன்ம சாதாக்கியத்திற் கலந்தூறல்போலநாதி, நின்மல னவனோமாயா தனுவினு நிரைந்துநிற்கு, மன்னிய மநாதுதனனுட் கலாதியு ளுயிருள்வைகுஞ், சின்மயன சீவனபாலு முனனில்லச சிவன் பாற் சீவன்" "உண்டு மனமாதிபதத் தார்வதெனுர்போ க வற்று ளுண்டுயி ருண்டீச னுயிருட்டுடிக்குங் கண்டனிலு ற மற் றைப தானங்களினு முண்டு மனமாதியவற் றுற்றவுயிருட் சிவ ன்ருனுண்டு" என்ரு ரெமதகுரவர்.

| | |
|---|---|
| அந்தக கரண ங்களடக்கி | அந்தக் கரணஙகளைப் புலன்வழிச் செல்லா மலடக்கி |
| அறிவதொருகு றி குருவி னருளி னலறிந்து | ஞானசாரியன் கடாக்ஷத்தாலே யவ்விட த் தறியத் தக்கதோருபதேசதகை முறை பிரமாமற் பெற்று |
| மன்னுசிவன்ற னை யடைந்து நி ன்று | அநதககுறிப்படியே நிலைபெற்ற சிவனைக் கண்ணிமைககு மளவாதல் அம்பெய்தா லது போய் விழுமளவாதல் பசுக்கரக்கு மள வாதல் அந்தப் பாவத்துடன் கூடியிருநது |
| அவன்றனுலே | அந்தச சிவனது கடாட்சத்தா லாகியே பலத்துடன் கூடியிருக்கிற வான்மாவுக்கு, |
| மருவு பசுகர ணங்கள் சிவகர | பசுகரணமாய்ச் சீவிக்கிற விச்சாஞானக் கிரியைகடாமே யனுக்கிரகததைப்பொருந்தி |

ணமாக — யிவனுக்குப் பரமமான சிவகரணமாக்ச் சீவி யாநிற்கும்.

தன்னிய சாக்கிரமதனிற் றுரியாதீதந் தோன்றுமியல் — கருவிகணிறைந்த சாக்கிரா வத்தையின் கணின்று நாடோறுந் துரியாதீதனுமா யுவவமையு மில்லாத சிவத்தை யடைந் திருப்பாயாக

சிவானுபவஞ் சுவானுபூதிகமாம். — ஆகையா லிப்படி நிட்டையைப் பொருந்தி வரவே யதுமுற்றுதலாலே சிவனிடத் துண்டான வானந்த மானதுபோல உன்னிடத்திலே தானே யனுபூதியான துண்டாகா நிற்கும் எ-று.

இது பதப்பொருள்.

சுவ எ-து உனக்கு.

அனு எ-து பினபுணடாம்.

பூதி எ-து ஆனந்தமாயினும் ஐசுவரியம் எனவறிக.

"பிரிவிலாவடியார்க் கென்றும் வாராத செல்வம்வருவிப்பானை" எ-ம். "முத்திநெறியறியாத மூர்க்கருடன் முயல்வேனை அத்தனெனக்கருளியவா றார்பெறுவாரசசோவே" எ-ம். "கோலமாகரி யரித்தவர்தம்மைத் தம்மைபோலத்தன்னடியார்க் கின்பமளிப்பவர் பொருள்களை விடமுண்டநீலத்தார் மிடற்றண்ணலார் சிரபுரந்தொழுவினை நில்லாவே" என்னுந் திருவாக்கினுமறிக.

இதற்குச் சர்வஞானோத்தரத்தும் மதங்கம் சூதசங்கிதையினுமறிக. (௲ச)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

சொல்லிப் போந்தவா றுண்மையாகிய நிட்டை கூடாதிருக்கில் நிஷ்டை கூடு முபாயம் மேல் கூறுகின்றது.

இந்நிலைதா னில்லையேல் - சிவனில் வேறற்றுச் சிவனே யாய்ச செய்யுஞ் செயலெல்லாஞ் சிவன்செயலாய் நிற்குந் தன் மைகூடித் தில்லையாகில்,—

எல்லாமீசனிடத்தினு மீசனெல்லாவிடத்தினுநின்ற வ ன்னிலையை யறிந்து-சித் தசித்தாயுள்ள பிரபஞ்சமெல்லாஞ் சிவ னிடத்திலே யவகாசமாய் நின்றமையுஞ் சிவனெல்லா வஸ்துக் களினு மந்தரியாமியாக நின்றமையு மறிந்து,—

அநதக்கரணங்களடக்கி யறிவதொருகுறிகுருவி னருளினு லறிந்து - மனோபுத்தி யகங்கார சிததங்களின் வியாபாரமன றியிலே சிவனை யறிவதர்க் கொரு லக்ஷியத்தை ஆசாரியனு லரு எ.பெற்று,—

மனனுசிவன் றனையடைந்து நின்றவன்றனுலே மருவுபுறக் கரணங்கள் சிவகரணமாக - தன்னிடத் தந்தரியாமியாக நினசு சிவனைச் சரணமாகவடைநது பிரிவறநின்ற வந்தச் சிவப்பிரகா சத்தினுலே யளத்திற்பட்ட புற்போல ஆன்மாவுக்கு போகசா தனமாகப் பொருந்தின உட்கரணங்களும் புறககரணங்களுஞ் சிவ கரணங்களாக,—

துன்னிய சாக்கிரமதனிற் றுரியாதீதந் தோன்றமுயல்-பிரு திவியாதி நாதாந்த முப்பத்தாறுந் தாத்துவிகங்களும் நெரு ங்கினின் றுள்ள ஜாக்கிராவஸ்தையிலே நின்மல துரியாதீதம் பிறக்கும்படி முயற்சிபண்ணும். இங்ஙனஞ் சொன்ன நின்மல து ரியாதீதம் பிறக்குமாகில்,—

சிவாநுபவஞ் சுவா * னுபூதிகமாம் - சிவாநந்தானுபவம் ஆநநிய வனுபவமாமென றிதனபொருள்.

இந்த நின்மலாவஸ்தை முதலே 'ஐநதுசாக்கிரமதனில், எ

ன்ற விருத்தத்தில் விரித்தமையா லிவ்விடத்து விரியக் கூறிய தில்லை.

* அனுபூதி - அநுபவம்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

நிராகாரத தியானசமாதி சாமர்த்திய மில்லாதான் குரு கற்பித்த சதாசிவாதி சாகாரத் தியான சமாதிபண்ணச் சாலம்ப சிவ சமாதி சாக்ஷாத்கார பூர்த்திச் சுகானுபூதி முன்னாக, நிசமும் நிராலம்ப சிவ சமாதியானது பரசம்வித் சிற்சத்தியில் மூ றைமையின முகிழ்க்கும் நிராலம்ப சிவ சமாதிச் சிற்றுப்பூர்த் திச சுகமும் நிராலம்ப சிவ சாக்ஷாதகார முற்றுப் பூர்த்திச் சு கமுஞ் சுவ சம்வித்சிற்சத்தியின முகிழ்க்குஞ் சுவானுபூதியினு லனுபவிக்கப் படுமென் றுரைகின்றார்.

இந்நிலைதா னில்லையேல் - நிராலம்ப சிவயோக நிலை நிற்கச் சத்தி போதாதிருந்தால்,—எல்லா மீசனிடத்தினிது மீசனெல் லா விடத் தினிதுநின்ற வந்நிலையைக் குருவினருளாலறிந்து - ஒருபிரகாரம் அகண்டித சகலவியாபக சிவரூபங் குருச் சொல்ல இது தத்துவாதீத சிற்சத்தி விஷயம் புத்தி கோசரமன்றென்ப து அறிந்து,—அறிவதொரு குறி குருவினருளினாலறிந்து - புத்தி யினாற்றிபாவிக்கப்படு மொரு சிவ விக்கிரக மக்குரு கிருபையினா ற் கற்பிக்கவறிந்து,—அந்தக்கரணங்களடக்கி - விஷயத்தில் வி மூாதுமேலெழுப்பி யச்சகளசிவ முகமாக்கி.— மன்னுசிவன் றனை யடைந்தின ருமருவு பசுகரணங்கள்-அந்தவந்தக்கரணங்கள்,— அவன் தனனாலே - முற்சொல்லிய முறைமையிற் சுத்தவித்தை முதலியவற்றோடு கூடி,—சிவகரணமாகி-தியானித்துச் சமாதித்

துச்சாக்ஷாத்கரித் திருப்பச் சாக்கிர சாக்கிராதிக் கிரமத்தில,—அ துன்னியசாக்கிரமதனிற் றுரியாதீதந் தோன்ற முயல்சிவாநுப வம்-நிஷ்கள சிவ சாக்ஷாத்கார மூற்றுப்பூர்த்தி ஸ்புரிக்க பண் ணுந் துரிய சமாதிச் சிற்றுப்பூர்த்தி,—சுவாநுபூதிகமாம்-ஸ்வா நுபவாநு பாவியமாம்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

இங்ஙனங் கூறிய முறையானே, அகம்புறமென்னுமலெ ங்கணு மேகநிலையாய்க் கண்டு இறைநிறைவி லழுந்துவதாகிய நி ட்டை மேவுத லரிதாய்ப் பண்டைப் பயிற்சிவயத்தாற் சுட்டுண ர்வுபற்றிப் பிரபஞ்சங் காட்சிப்பட வருமாயின் அதனைக் காணு ம் பொழுதே இறைவ னதற்குள்ளாயும் புறமாயு நிற்கு நிலையு மு டன்கண்டு, அவ்வா றண்டத்தினிற்குநிலை அறிதலரிதாயிற் பிண் டத்தினிற்கு நிலையு மொன்றின்மைத் தறிந்து அதுவாயிலாகப் புகுந்தாதல் அவ்வியல்பைத் தலைப்பட்டறிந்து ஆண்டுக் காணுங் கரணங்களெல்லாம் பேரின்பமாகப் பேணி, இவ்வாறு கருவிக ளோடுந் தொழிற் பட்டு நிற்பதாகிய சகலசாக்கிரத்திற்றானே கருவியொன்றனோடுங் கூடாது தொழிலிறந்து நிற்கும் நின்மல துரியாதீதநிலை கை கூடும்படி முயல்வார், சிவாநுபவந் தமதா கக்கொண்டு அனுபவிக்கப் பெறுவா ரென்பதாம்.

அந்நிலையை யறிந்தெனறது அண்டத்தின்மைத் தறிதலை யெனவும், அறிவதொருகுறி குறிவினாலறிந்தென்றது அவ்வறி விற் கேதுவாய்ப் பிண்டத்தின்மைத் தறிதலையெனவு முண ர்க.

சிவன் ஆருபெயர்.

அகரச்சுட்டு வருவித்துரைக்க.

முட்டலென்பது முன்னிலை யேவல்.

சிவானுபவஞ் சுவானுபூதிகமென்புழித் தொக்குநின்ற வாருவது முறையே செயப்படு பொருண்மைக் கண்ணும் வினைமுதற் பொருண்மைக் கண்ணும் வந்த காரகம். அமிழ்தவுண்டி கடவுளருண்டி யென்றாற் போல.

இதனானே அந்நிட்டை மேவப்பெறா தார்க்கு அது பெறு முபாயங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இப்படி முன்சொன்ன வுண்மை நிட்டை கூடாதென்ற மாணாக்கனை நோக்கி மேலொரு உபாயநிட்டை யருளிச்செய்கின்றார்.

இன்னிலைதானில்லையேல் - இந்த மௌன உபதேசத்தைப் பெற்று அந்தநிலையே நிலையாக நிற்கக்கூடாதாகில்,—எல்லாமீசனிடத்தினும் மீசனெல்லாவிடத்தினும் நின்றவுண்ணிலையையறிந்து - ஜடசித்துக்களென்று சொல்லப்பட்ட சர்வமும் தம்பிரானார் தாரகமாக நின்று காரியப்படுகிற முறைமையையும் அந்தச் சர்வத்திலும் தம்பிரானார் நிற்கிற அந்த நிலைமையையும் சிவஞானத்தாலே யறிந்து,—அந்தக்கரணங்களடக்கி - சர்வமுஞ் சிவனிடத்திலே நிற்கிற முறைமையும் சிவனவ்விடங்களிலே நிற்கிற நிலைமையும் அந்தஞானங் காட்டாகத் தான்காண்கிற காட்சியையுமிழந்து தற்போதஞ் ஜீவியாமலந்த ஞானமாய் நின்று,—அறிவதொருகுறி குருவினருளினாலறிந்து - ஞானமாய்நின்ற அவவிடத்திலே யறியத்தக்கதோ ருபதேசத்தை ஆசாரியனுடைய வனுக்கிரகத்தினாலே பெற்று அப்படிப் பெற்றாலனாதி

யே தன்னிடத்திலே தோன்ருமல் நிலைபெற்று நின்ற சிவம் பிரகாசிக்கும்.—மன்னுசிவன் றனையடைந்தநின்று - அப்படி நிலைபெற்ற வந்தச் சிவனைக் கூட்டிநின்று, —அவன்றனாலே - அநாதியே யான்மாவைப்பொருந்தி நிற்கிற அந்தச் சிவனுடைய பிரகாசத்தின் மேலீட்டாலே,—மருவுபசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிபசாக்கிரமதனிற் றுரியாதீதந் தோன்றமுயல்-அநாதியே யான்மாவைப்பொருந்தி நிற்கிற தத்துவங்கள் தானே சிவகரணமாம் முப்பத்தாறுடனுங் கூடிநிற்கிற ஜாக்கிராவஸ்தைக்கு ஸ்தானமாகி யவ்விடத்திலே சாக்கிரதிற் சாக்கிரம் சாக்கிரத்திற் சொற்பனம் சாக்கிரத்திற் சுழுத்தி சாக்கிரத்திற் றுரியம் என்கிற நாலுங் கழன்று. சாக்கிராதீதம்புரிந்து நில். அப்படி நிற்கவே பசுகரணந்தானே சிவமாம்,—சிவானுபவம் சுவானுபூதியமாம் - அப்படிச் சிவமாய்நிற்கிற வதுதானே யுனக் கனுபூதியமாம்.

அன்னிலையை யறிந் தந்தக் கரணங்களடக்கி யறிவதொரு குறிகுருவி னருளினுலறிந்தது ஆன்ம தரிசனம்.

மருவு பசு கரணங்கள் சிவகரணமாகத் துன்னியசாக்கிரமதனிற் றுரியாதீதந்தோன்றமுயல் ஆன்மசுத்தி.

சிவானுபவஞ் சுவானுபூதியமாம் என்றது ஆன்மலாபம் என்னுமதுங் கண்டுகொள்க.

இதற்குப்பிரமாணம் திருக்களிற்றுப்படியார், ௪௨-செ"பாலைநெய்தல்பாடியதும் பாம்பொழிப்பப்பாடியதும், காலனையன்றேவிக் கராங்கொண்ட—பாலன், மரணந்தவிர்ப்பதுவு மற்றவர்க்கு நந்தங், கரணம்போ லல்லாமை காண்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, முன்சொன்ன வுண்மை நிட்டைகூடாமல் வாதனை மேலீட்டால் ஜடசித்துக்க ளிரண்டும் பரமே

ப்ரவரனிடமாகநிற்கிற முறைமையையும் அவ்விடங்களிலே பிர மேப்ரவரநிற்கிற நிலைமையையு மந்த ஞானத்தாலே யறிந்து அப்படியறிந்த தற்போதமுங் கெட்டுநிற்க அந்த நிலையாமெனு மம் அதொழிந்தும் ஆசாரியனாலே தனக்குப் பிராணனாய்நிற் கிற சிவனை யறிந்து அவனாலே பசுகரணமுந் தானே சிவகரணமு மாய்ச் சாக்கிராதீதமும் புரியுமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

இந்நிலைதானில்லையேல் - இங்ஙனங் கூறியமுறையானே யகம்புறமென்னுமல் எங்கணு மேக நிலையாய்ககண டிறைநிறை விலமூந்துவதாய் நிட்டை மேவுதலரிதாய்ப் பண்டைப் பயிற்சி வயததாற் சுட்டுணர்வுபற்றிப் பிரவஞ்சங்சாகூதிப்பட வருமாயி ன்,—எல்லா மீசனிடத்தினிலு மீசனெல்லா விடத்தினிலு நின் றவந்நிலையையறிந்து - அதனைக்காணும் பொழுதே யிறைவனத ற்குள்ளாயும் புறமாயு நிற்குநிலையுமுடன் கண்டு,—அந்தக் கரண ங்களடக்கி- அவ்வாறண்டத்தினிற்கு நிலைபறிதலரிதாயின் மனா திகளடக்கி,— குருவினருளால் நின்றறிவதொரு குறியுமறிந்து- குருவருளாற் பிண்டத்தினிற்கு நிலையு னொன்றின்வைத் தறிந் து,—மனனுசிவன்றனை யடைந்து-அதுவாயிலாகப புகுந்தாத ல வ்வியல்பைத தலைப்பட்டறிந்து,—நின்றஅவன்றனாலே மருவுப சுகரணங்கள் சிவகரணமாக - ஆண்டுக்காணும் கரணங்களெல் லாம் பேரின்பமாகப்பேணி,—துன்னிய சாகக்கிரமதனில்-இவ்வா று கருவிகளோடுந் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தி ற்றானே,—துரியாதீதந் தோன்ற முயல் சிவானுபவம் - கருவி யொன்றனோடுங் கூடாது தொழிலிறந்து நிற்கு நின்மல துரியா

நிலை கைகூடும்படி முயல்வார் சிவாநுபவத்தை,—சுவாநுபூதிகமாம் - தமதாகக்கொண் டநுபவிக்கப் பெறுவர்.

இதனானே யக்கிட்டை மேவப் பெருதார்க் கதுபெறு மூபாயங் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை



மே லித்தன்மை யுடையோர் சிறப்பு மஃதில்லார் சிறப்பின்மையு முணர்த் துகினுரா.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வசங்க நிவிர்த்திவந்த தபோதனர்களிவர்கள், பாக்கியத்தைப் பகர்வதுவென் னிம்மையிலேயுயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவநன்றே, வாககுமுடி கவித்தரசாண் டவர்க ளிவையோ டனுபவித்திங்கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர், நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற்றாலு நுழைவர்பிறப் பினில்வினைக ளுங்கிடாவே. (௩௫)

(இ-ள்) சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வசங்கநிவிர்த்திவந்த தபோதனர்க ளிவர்கள் பாக்கியத்தைப் பகர்வதுவென் இந்தப் பூமியிலே சஞ்சரித்திருக்கவும் சகலாவத்தையிற்றானே சாக்கிராதீதத்தை முன்கூறியபடி பொருந்தினவர்கள் சிறப்பை விசாரிக்கி லவர்களே சர்வசங்க பரித்தியாகம் பண்ணினவர்க ளாதலா லந்த ஞாதாக்கள் பண்ணின பாக்கியத்தை நாமெனன சொல்லப் போகிறோம், அஃதெக்கா ரணத்தாலெனில்?

இம்மை யிலே யுயிரின பற்றறுத்துப் பரத்தை யடைபராவுசிவ ரனரே

சமுத்திரத்திலே யநவரதமும் மச்சமானது கூடியிருந்தாலும் அந்த உப்பினது தன்மையை யடையாத வாறுபோல இந்த ஜீவன் முத்தரான ஞாதாக்களு மிந்தச் சரீரத்துடனே கூடி யிருந்தார்களே யாயினு மிந்தச் சரீரத்துடன் பற்றுமற்றுப் புறப்பற்றாகிய வான்மாக்களிடத் துண்டாகிய பற்றையும் விட்டுப் பரமமான சிவனுடனே கூடியிருக்கையா லிந்தப்பூமியிலே யிரண்டாஞ் சிவனெனக் கருதுமவர்களே யாதலால்,

ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களிளையரோ டனுபவித் திங் கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர்

விதிவழியுண்டாக்கு முடியை யிராஜாவாக்குதற் கபிஷேகம்பண்ணி யதனைச் சூட்டிப் பட்டத்துக் குரிய மடவாருடன் கூடியிருந்தார்களே யாயினு மகளால் வசியரல்லர். அஃதெத்தன்போ லெனின்? சுந்தரப்பெருமா னாயனார் மடவார்கலவியுடன் கலந்திருந்து மெய்ப்படிப் பற்றுதலின்றி யிருந்தா ரதுபோல இவர்களு மப்படியே யிருவகைப் பற்றையு மற்றிருப்பர்கள்.

நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற்றுலு றுழைவர் பிறப்பினின் வினைகளுங் கெடாவே.

நிட்டையைப் பெருமையென விசாரித்ததன்வழி நில்லார்களேயாயி னவர்களொருவராலும் விடுத்தற்கரிய விருவிதப் பற்றையும் விட்டார்களே யாயினு மப்பலத்தை யுறார், ஜனன மரணப்படுத் திரிவார்கள்; அஃதுண்டாகையா லதற்குக் காரணமாகிய வினைகளுங் கெடாது. எ-று.

ஓகாரம் - எதிர்மறை.
நுங்குதல் - கெடுதல்.

'பற்றுகபற்றற்றான் பற்றினை யப்பற்றைப்-பற்றுக பற்று விடற்கு' எனவறிக.

அகப்பற்றே சிறப்புடைத்தென வறிக.

இதற்குச் சர்வஞானோத்தரம், சிவதருமோத்தரமுமென வறிக. (௩௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் ஜீவன்முத்தர்களுடைய வப்பியந்தர வேறுபாடும் புறத்துறவினாலே முத்தியில்லை யென்பதுங் கூறுகின்றது.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள் - சகலமான சாக்கிறத்திற் கருவிகளெல்லாம் பிறியாம லிருக்கையிலே நின்மல துரியாதீதத்தைப் பொருந்தின பேர்கள்,—

உலகிற் சர்வசங்கநிவிர்த்தியுந்த தபோனர்க ளவர்கள் பாக்கியத்தைப் பகர்வதுவெ னிம்மையிலேயபிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரன்றே - பூமியினக ணெல்லாப்பற்றையு மொழிந்து தவமே பொருளாக வுள்ளவர்களவர்களுடைய செல்வத்தை யிவ்வளவென்று நம்மாற் சொல்லவரிது. இம்மையிலே தானே யான்மாவினுடைய பந்தமாகிய வாணவ மாயை காமியங்களை யறுத்துப் பரமசிவனை வேறறக் கலந்து பூமியின்கணுள்ள வான்மாக்களை யீடேற்றுவது பொருட்டாகச் சஞ்சரிக்கிற ஜீவர்களல்லவோ, ஆமே!—

ஓகாரம் - எதிர்மறை.

அவர்களாக்குமுடி சவித்தரசாண் டரிவையரோ டனுபவித்திங் கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர் - அந்த ஜீவன்முத்தரானவர்கள் நவரதினங்களினாலே பண்ணப்பட்ட முடியைத் தரித் திராச்சியத்தையாண் டநேக மடந்தையர்களைப் புணர்ந் திந்தப் பூமியின்கண்ணே பஞ்சபூதான்மகமான தேகத்திலே

யிருந்தும் சிவோகம் பாவனையை விட்டுச் சிவோகமென்றே யிருப்பர். சிவனு மிந்த ஆன்மாவே தாமா யிந்த பஞ்ச பூதான்மக மாயிருக்கிற தேகத்தை யதிட்டித்திருப்பர் —

த஥ா ஞௐ — த஥ாவிஜ-வ௱ெத ஜெவி வதி விஜாநநிஜஃ । வஞுஹ-ஸாத்ரெக ஜெஹெ மிவஶ்ரெவ திஷ்டதி ॥

நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற்றாலும் வினைகளுங் கிடாவே நுழைவர்பிறப்பினில் - சிவஞானத்தினாலே சிவனை யநந்யமாகக் கண்டு ஜீவபாவத்தை விட்டு சிவபாவனையைப் பண்ணுதவர் தனக்குப் பரமமான ÷ போக்கிய வஸ்துக்களை யொழிந்தார்களாகிலும் புண்ணிய பாபங்கள் கெடாது, ஆதலால் ஞானத்தை யெடுப்பொன் றிதன்பொருள்.

ஏகாரம் ஈற்றேகாரம்.

÷ போககியம் - புசிக்கத்தக்கது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சீவன் முத்தி சாக்ஷாத்கார சித்திமான் முத்தித் தலைப்படுப்பனென்று சாற்றுகின்றார்.

வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இங்ஙனம் பசுகரணஞ் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரா தீதத்தினின்று கொண்டுதானே கரணங் கடந்த வதீதத்துவதப் புரி

ந்தார், கருவிகளினீங்கி நிட்டை மேவினோரோ டொப்பச் சிற ந்தாரே யாவார். அவ்வுண்மை யறிந்தார் உண்டுடுத்துப் பூசி முடித்துச் செய்யுந் தொழிலொப்புமையேபற்றி யவரை உலகத் தாரோடுவைத் தெண்ணற்க வெனபதாம்.

பராவுதல் சஞ்சரித்தல்.

இதனானே யங்ஙன முயன்றாரது பெருமை கூறப்பட் டது.

ஞானவதிகாரப் பட்டமைபற்றி யீண்டுக் கேட்டலுடன் வைத்து ஓருவாற்றாற் றொகுத்தோதிய இன்னோரனைவை யெ ல்லாம் வருகின்ற சூத்திரங்களான் விரித்துக் கூறப்படும்.

புறச்சமய நெறியெனபதுமுத லித்துணையும் இரண்டாங் கூற்றைத் தெரித்துணர்த்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படிச் சாக்கிராதீதம் புரிந்துநிற்கும் ஞானவான்கள் பெருமையை மேலருளிச்செய்கிறார்.

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள் - அருளுடனே கூடி இரண்டற நிலைபெற்று நேயத்துடனே யழுந்துகிற சாக்கி ராதீதங் கைவந்தவர்கள்,—உலகிற் சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் - பூமியிலே சருவசங்கப் டரித்தியாகம் பண் ணின தபோதனர்கள்,—அவர்கள் பாக்கியத்தைப் பகர்வது வென் - அவர்கள் முன் ஜனனங்களிலே செய்த சிவ புண்ணிய த்தை வாக்காலே கோசரிப்ப தெப்படி ?—இம்மையிலே யுயிரி ன் பற்றறுத்து - இந்த ஜனனத்திலே ஆன்மாவுக் குண்டான பாசப் பற்றுக்க ளெல்லாத்தையுந் தங்களுக்குப் பிராணனாய்

நிற்கிற ஞானத்தினாலே யறுத்து,—பரத்தையடை பராவுசிவ ரனரே - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற சிவத்தைப் பொருந்தி சிவமாயிருந்துள்ள இவர்கள் சஞ்சரிபாநிறை சீவரல்லவோ!—ஆக்குமுடி கவித்தரசாண்டவர்க ளரிவையரோ டனுபவித்தங்கிருந்திடினு மகப்பற்றற்றிருப்பர் - அவர்கள் பண்ணப்பட்ட வபிஷேகமுஞ்சூடி இராஜ்ஜியம் பண்ணினவர்களுடனே கூடி யனுபவித்து அங்கே யிருந்தார்களாயினும் உட்பற்றற் றிருப்பார்கள்,—நோசகியிது புரியாதோர் புறப்பற்றற்றாலும் நுழைவர்பிறப்பினில் - இப்படிப் பார்த்து இந்தவுண்மையிலே கூடாதவர்கள் புறப்பற்றுகக ளற்றிருந்தாரோ யாயினுஞ் ஜனனத்தை யடையா நிற்பார்கள். ஆகையாலே,—வினைசனுங்கெடாவே-பிராரத்த கனமமு மது புசிக்கையி லுண்டான வாகாமிய கனமங்களுங் கெடாது.

இதனாற் சொல்லியது, கருவிகளெல்லாங்கூடி இலாடத்தானத்திலே நிற்கச்செய்தே அவையிற் றிற் றேயாமல் சிவத்துடனேகூடிச் சிவமாய்ச் சாக்கிராதீதம் புரிந்துநிற்கிற ஞானவானகளுக்கு ஜனன மறுமென்றும் இநத வுண்மை கூடாதவர்களுககு ஜனன மருமெனறு முறைமையு மறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சாக்கிரதே யதீதத்தைப் புரிந்தவர்கள் - இங்ஙனம் பசுகரணம் சிவகரணமாகத் தனவிய சாக்கிரத்தி னின்றுகொண்டு தானே கரணங்கடந்த வதீதததனைப் புரிநதார்,—உலகிற் சர்வசங்க நிவிர்த்தியாகத தபோதனர்கள்-இவ்வுலகின்கண்ணே கருவிகளினீங்கி நிட்டைமேவினோரொ டொப்பச் சிறந்தவரேயாவர்,—இவாகள் பாக்கியததைப் பகர்வதுவென்- இவர்கள் முற்பி

றவியில்செய்த சிவபுண்ணியத்தைச் சொல்லவொண்ணாமையி
ல்,—இம்மையிலே யுயிரின்பற்றறுத்து-இம்மைக்கண் ணுயிர்ப்ப
று நீங்கி,—பரத்தைப டைட பராவுசிவரானமோ- மேலாகிய சிவத்
தைப் பொருந்தி யிரண்டற நிற்கையாற் சஞ்சரிக்கின்ற சிவமே
யாவர்,—அவர்க ளாக்குமுடி கவித்து அரசாண டரிவையரோ
டணைவித்தங் கிருந்திடினும்- அவர்களாக்கப்பட்ட முடியினை ய
ணிந்து அரசாக்ஷிசெய்து அரிவையரோ டின்புற் றிருந்திடினு
ம்,—அகப்பற்றற்றிருப்பர்-அகப்பற்றுநீங்கினவரேயாவர்—நோ
க்கியிது புரியாதோர் புறப்பற்றற்றாலும் - ஆராய்ந் திவ்வகப்பற்
று நீங்காதோர் புறப்பற்று நீங்கினும்,—வினைசனுங்கிடா பிறப்
பினினுழைவர்-வினைகளொருகலின பிறப்பினை யடைவர். இவ்வு
ண்மை யறிந்தா ருண்டுடுத்துப் பூசிமுடித்துச் செய்யுந் தொழி
லொப்புமையேபற்றி யவரை யுலகத்தாரோடொவைத் தெண்ண
ற்க.

புறச்சமய நெறியென்பது முத லிததுணையு மிரண்டாங்
கூற்றைத் தெரிந்துணர்த்தியவாறு.

☞ அ-சூ, உ-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படிக் கருவிகரணங்களை நீங்கினூற் காண்பதென்னெ
ன்று சங்கிராந்தவாதி சொல்ல வுணர்த்துகின்றார்.

கருவிகழிந்தாற்காணு ரொன்றுமெனிற் காணுர் கா
ணுதார் கன்னிகைதான் காமரசங்காணுண், மருவியிரு
வரும்புணர வந்தவின்பம் வாயினூற் பேசரிது மணந்
தவர்தாமுணர்வ, ருருவினுயிர் வடிவதுவு முணர்ந்தி

லர்காண்சிவனை யுணராதா ருணர்விஞ லுணர்வதுகற்ப
னைகா, ணருள்பெறிலவ் விருவரையு மறிவிறந்தங்கறிவ
றறியாரேற் பிறப்பும்விடா தாணவமுமறுதே. (௩௬)

(இ-ள்.) கருவிக ழிந்தாற் கா ணு ரொன்று மெனில் — ஆன்மாக்கள் கருவிகரணங்க ளெல்லாத் தையும் விட்டு நீங்கினவிடத் தொன்றையுங் காணமாட்டார்க ளென்னில்?

காணுர் காணுதார் — உண்மை யறிவில்லாதா ரொன்றையுமறி யார்கள் காண். அஃதெதென்போல வென்னில்?

கன்னிகை சான் காமரசங்காணுள் — கருவி கரணங்களுடனே கன்னியானவ ள் கூடியிருக்கவு மந்தக் காமத்தாலுண்டா ன வின்பத்தை யறியாதிருக்கக் கண்டோ மே! அஃதெக்காரணத்தா லெனில்? அவளுக் குப் பக்குவமின்மையா லெனவறிக.

'பருவத்தில்வந்து பயனுற்றபண்பி-லயனைப் படைத்தபர ன்' எனவறிக.

ஆனால் நீர்தாங் கருவிகரணங்கள் கூடாமற் சிவதரிசனப் படுவதெப்படியென்று நீ கேட்கிருயாகில்?

மருவியிருவரும்புணர வந்தவின்பம் வாயினுற் பேசிது மணந்தவர்தா முணர்வர் — பருவமான மாதர் காந்தனைக்கூடின விடத்துண்டாகின வின்பத்தை வேருெருவர்க் கின்னபடியிருக்குமென்று வாக்காலே வசனிக்கப்படுமோ! ஆகலா லந்தச் சிவனுடன்கூடின வின்பத்தை அந்தப் பக்குவான்மாக்களே யறிவார்கள்.

உருவினுயிர் வடிவதுவு முணர் — அஃதன்றியும் கருவிகரணங்களைக் கூடியிருக்கிற வானமா சரீரத்தினகண் ணைடிதி

நிலர்காண் — னிற்கவு மதனுடைய சுரூபத்தை யுள்ளபடி யறியமாட்டார்கள் காண்.

சிவனையுணரா தார் — ஆநந்த ஸ்வரூபனாயிருக்கிற சிவனை ஞானாசாரியனுடைய வுபதேசத்தாலுணரார் காண். நான் ஆநந்த தரிசனப்பட்டேனென்று சொல்லுகிற தல்ல.

உணர்விரு துணர்வது கற்பனைகாண் — சிவனுடைய ரூபம் பலவிதமாகத் தியானிக்கையா லதுவு மநந்தமன்று. வன்னரூப ஆன்மபோதத்தாற் சுட்டியறிகையால் அதுவுஞ் சங்கற்பஞான மாய்விடுங்காண். ஆதலால் உருபம் வன்னரூபமு மாநந்தமெனப் பெறா. ஆனாலும்முடைய வாநந்தந்தான் யாதெனின்?

அருள்பெறி லிவ் விருவரையு மறிவிறந்தங் கறிவர் — சிவனருளைப்பெற்ற ஞாதாக்கள் கருவிகரணாதிகளுடன் கூடாமற் கேவல மான்மாச் சிவனைக் கலந்திருத்தலே பரமமான ஆநந்தமென்று சொல்லுவர்கள்.

அறியாரோற்பிறப்பும்விடா தாணவமுமறாதே — ஞானசாரியனாலே முன்னற் சொல்லிய கற்பனைகளு மன்றென்று கருதி யந்தக் கற்பனை யில்லாததுமாய்ச் சாசுவதமுமாய்த் துரியங்கடந்ததுமா யிருப்ப தியாதொன்று அதுவே பரமமான வானந்தமென்ற வித்தை யறியா திருப்பர்களாகில் அவர்களுக் கொருக்காலுஞ் ஜனன மரண வாதையு மொழியாது, அஃதன்டாகவே யாணவ மலமும் விட்டு நீங்கப் பெறாது. எ-று.

மணந்தவர் எழுவாய்.

உணர்வர் பயனிலை.

"மைப்படிந்த கண்ணாளுந் தானும்" "அவனருளே கண்ணாகக் காண்பதல்லால்" "இப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" எனவுமறிக.

இதற்குச் சிந்திய விசுவத்திலு மறிக. (௩௯)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

நிமல துரியாதீதத்திலே சோத்திராதி சித்தமிறுதியாக நீங்கி லொன்று மறிவதில்லை யென்பவனைக் குறித்துக் கூறுகின்றது.

கருவிகழிந்தாற் காணு ரொன்றுமெனிற் காணர் காணுகார் - கரணங்களெல்லாம் நீங்கினு லொன்றையுங் காண்பதில்லை யெனினில்? அவ்வாறு கரணங்க ணீங்கினு லொன்றுமறியாமற் + பாஷாணம் போலே ஆன்மா விருக்குமென்று முதலியினிலை பத்தைக் காணுதபேர் காணுத ருஷி சம்பிரதாயிகளான காணு தாரொனலும் சமயிகளே சிவனுடனே கலக்கவென்பது வேண்டா! சிவாநுக்கிரகத்தினாலே சுவஸ்வரூபாபி வியத்தியா யிருப்பதே போதுமெனனில்,—

கன்னிகைதான காமரதங்காணுள் - ஷோடச கலையும் நிறைந்த சந்திரனைப்போலப் பதினாறு வயதும் நிறைந்து அதிசுந்தர வதியாய் மதன கலைகளைக் கற்றுடையவளாயினுங் கன்னிகை காமரசத்தை யறியாள். மேல்,—

மருவியிருவரும்புணர வந்தவின்பம் வாயினாற்பேசரிது மணர்ந்தவர்தா முணர்வர் - வாழ்க்கைப்பட்டு பர்த்தாவும் ஸ்திரீயுமாக வொருதலைக் காமமன்றி யிருவருமொத்த குணமாய்ப் புணர அந்தக் கலவியிலுண்டான சுக மிவ்வாறென்று ஊமை கண்ட கனாப்போலப் புறத்தியாருக்குச் சொல்லப்போகாது. அனுபவித்தபேரே யறிவர்கள்.

ஆதலா லான்மாவுஞ் சீவனுங் கலந்தவிடத் தல்லது ஆன்ந்தானுபவ முண்டாகாது. கலந்துண்டான அனுபவ மந்தஞாதாக்களுக்கே அனுபவமொழிய புறத்தியார்க்குச் சொல்லப் போகாது —

சிவனை யுணராதா ருருவி னுயிர்வடிவதுவு முணர்ந்திலர்காண - சிவஞானத்தினாலே சிவ தரிசனப்படாதபேர் தேகேந்திரியாதிக் கந்நியமான ஆன்ம ஸ்வரூபத்தையுந் தரிசித்தவ ரல்லர்காண். காணென்றது மாணாக்கன் முன்னிலை. சிவஞானத்தினாலே சிவனையு மான்மாவையுந் தரிசிக்க வென்பானேன், ஆன்மஞானத்தினாலே தரிசிக்கலாகாதோ வென்னில்?—

உணர்ந்தார் உணர்வினானுணர்வது கற்பனைகாண் - ஆன்மஞானத்தினாலே யறிவேனெனகிறது சங்கற்பம். சங்கற்பமுண்டானபொழுதே விகற்பமுமுண்டு. விகர்ப்பம் அத்துவைத மாகாது. மேலெவ்வாறு சிவ சீவ தரிசனமென்னில்?

அருள் பெறி லவ்விருவரையு மறிவிறந்தங் கறிவ ரறியாரேற் பிறப்புவிடா தாணவமுமறாதே - சிவனுடைய பராசத்தி ஆன்மாவிலே பிரகாசிக்கப்பெற்று லந்தச் சிவ சீவனிரண்டுபேரையு மான்மாவினுடைய விருத்திஞானம் லயிக்க ஸ்வரூபஞானத்தினாலே வேறின்மையை யறிவர்கள். இவ்வாறு ஆன்மாவையுஞ் சிவனையும் அறியார்களாமாகி லவர்களுக்கு ஜனனமு மொழியா தாணவமலமு நீங்காதென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பசுகரணங் கழன்ற விடத்துஞ் சிவசத்தி விளக்கு விளங்கிய சிற்சத்திகுறிச் சிவ கரணத்தினாற் சிவனையுந் தனையுஞ் சி

வகரணத்தி லுதிக்குஞ் சிவ சாக்ஷாத்கார பூர்த்திசத்தியு ம றிந்தனுபவிப்பன்; புத்திபோதத்தா லன்றென்று போதிக்கின் றார்.

காணுதார்-சிவ கரணத்தால் நோக்காதார்,— காணார்-ப சுகரணத்தாற் சிவரூப சிவசமாதி சிவ சாக்ஷாத்கார சித்துப் பூர்த்தி முற்றுப் பூர்த்திச் சுக முதலியவற்றை யுணர்ந்தனுபவி யார்,—உணர்விலறிவது - சுத்தவித்தை பொருந்திய சுத்த தத்துவ புத்திபோதத்தா லறிவது,— கற்பனைகாண் - கிருப்த சரீர சதாசிவாதி மூர்த்தி தானன்றே,— அறிவிறந்தங் கறிவ ர் - சாலம்ப சிவயோக மார்க்கத்துப்போய்ப் புத்திபோதங் க டந்து சிவனைச் சாக்ஷாத் சிவசத்தி வியத்தி சிற்சத்தி யுணர்வி னுலுணர்வர், சிவாகமானு மாரூட சிவசத்தி வியத்தி பூமிபூ த சிவகரண புத்தி போதானுவித்த சிற்சத்தி யுணர்வினற் ப ரோக்ஷமாய்ப் பரம்பரையாய்ப் பார்ப்பர்.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருணா வருமாறு.

—o—

இருவரும் புணர வந்த வின்பம் பேசரிதாயினும் மணந்தவ ர் தாமுணர்வர் அக்காமரசங் கன்னிகை காணுள். அதுபோ ல அருள்பெறி லவ் விருவரையு மறிவிறந்தங்கறிவர். காணமாட் டாத வபக்குவ ரதனைக் காணர், தாமேயாகலான் அவருக்கு உணர்த்தும் வாயிலில்லை. இதுநிற்க, பன்னிறங்களான் மயங்கி த் தன்னொளியிழந்த படிகம்போல உருவான் மயங்கியே யான் ம சொரூப முணரப் பெற்றிலர். அதனை யுணராதார் அப்பெற் றித்தாகிய வுருவுணர்வால் அவ்வான்மாவுக் குள்ளாகிய சிவனை யு மறிவாமெனறல் பாவகமாத்திரையேயாகலாற் கருவியறிவி

றந்து நின்று அருளானறியப் பெறுதார்க்கு ஏகதேசமாகிய கருவியுள்ளளவு மேகதேசக்காட்சி நீங்காமையாற் பிறவியொழியாது. பிறவிக்கு மூலமாகிய வாணவமலமும் பற்றறக் கழியாதெனபதாம்.

இஃது எடுத்துக் காட்டுவரை.

ஈண்டுரு வென்றது கலையாதி மண்ணந்தமாகிய கருவிக்கூட்டத்தை.

இன ஏதுப்பொருட்கண் வந்த வைந்தாமுருபு.

அது பகுதிப்பொருள் விகுதி.

உணராதார் சிவ்வை யுணர்வதென வினையும்.

உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

உணராதா ரென்றது சிவசங்கிராந்த வாதிகளை நோக்கிக் கூறியது.

காணிரண்டுங் கட்டுரைக்கண் வந்த வசைநிலை.

இதனானே பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னி சாக்கிரத்தைப் பெற்றார் அதனமேலுங் கரணங் கடந்த வதீதத்தைப புரிதற்கு அறிவு செல்லுமாறு யாங்ஙன மெனனுஞ் சிவசங்கிராநதவாதிகளை மறுக்குமுகத்தால், 'தனியவைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையு மறியாது தயருறுந் தொல்லுயிர்' என்ற மூன்றுங்கூறு வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

கருவிகளைக் கொண் டறியுமதொழிந்து கருவிக ணீங்கினு லச்சிவனைக் காணப்படாதென்ற சங்கிராந்தவாதியை நோக்கியே லருளிச்செய்கிறார்.

கருவிகழிந் தாற்காணா ரொன்றுமெனிற் - கருவிகளொன்
று சொல்லப்பட்ட பாசஞான நீங்கினால் ஒன்று மறியார்களெ
ன்று நீசொல்லில்?—காணார் காணாதார் - உன்னைப்போ லுண்
மை யறியாதவர்க ளல்லவோ அசேதனமாயிருக்கிற கரணங்க
ணீங்கினால் ஒன்றையு மறியாம லிருக்கிறவர்கள். கரணங்களைக்
கொண்டறியாமல் ஒன்றையறியும தெப்படியெனில்? உனக்க
து சொன்னாலுந் தெரியாது. அதென்போலவெனில்?—கன்னி
கைதான் காமரதங் காணாள்-பக்குவப்பட்டுப் புமானைக் கூடா
த ஸ்திரீ காமரத மறியாத முறைமைபோல. காமரதமானது
சொல்லப்படாதோ வெனில்?—ருவி யிருவரும்புணர வந்தவி
ன்பம் வாயினாற் பேசரிது-அந்த ஸ்திரீ புமான்க ளிருவருந் தங்
களிற் கூடி யுண்டான சுகம் வாக்காற் சொல்லுதற்கரிது. ஆனா
லந்தச் சுகந்தா னில்லையோவென்னில்?—மணந்தவர்தா முண
ர்வர் - கூடிப் புணர்ந்தவர்க ளறிவ ரிதனை. ஆகையால்,—உரு
வினுயிர் வடிவதுவு முணர்ந்திலைகாண் சிவனை யுணராதா ருண
ர்வினா லுணர்வது கற்பனைகாண் - சிவனுடைய ஞானத்தினா
லே சிவனை யறியாதவர்கள் தேஹத்திலே நிற்கிற வான்மசொ
ரூபத்தையு மறிந்தார்க ளில்லை காண். முன்சொன்ன முறைமை
யொழிந்து ஆன்மபோதத்தாலே கருவிகளைக்கொண் டறியப்ப
ட்டதெல்லாம் சங்கற்பித்துக் கொண்டவைகாண். ஆனால் சிவ
னையு மான்மாவையு மிவனறியும்படி யெங்ஙனே என்னில்?—அ
ருள்பெறிலங் கிருவரையு மறிவிறந்தங் கறிவர் - முற்சனனங்க
ளிற் செய்த தபோபலங்களினாலே ஆசாரிய னநுக்கிரகத்தைப்
பெறில் அந்தச் சிவனையு மான்மாவையுந் தற்போதஞ் சீவியா
மல் அந்த ஞானத்தோடேகூடி ஞானமாய் நின்றே யறியாநிற்
பர்கள்.—அறியாரேற் பிறப்பும் விடா தாணவமு மறாதே - இப்
படி யந்த ஞானத்தினாலே சிவனையு மான்மாவையுந் தரிசியார்
களாகில் ஜனனமு மறாது அஞ்ஞானமும் விட்டு நீங்காது.

கருவிகழிந்தார் காணார் என்ற சங்கிராந்தவாதியை மறுத்தற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம் - நிறைந்து நீயாய் நின்றனை யென்று - மறந்தைம் புலனாய் வரா யெனறுங் - கரணமெல்லாங் கடந்தனையென்று - மரணமையைந்தி னப்புறத் தெனறு - முன்னருட் டலைவர பன்னின ரெனவு-மினையவை பொழிய வறிகுவதெவ்வா - றென்ற நிற்கலிக் கொன்றிய வின்பங்-கூறுத றகுமருட் டேரினையன்றே." என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, கருவிகணீங்கினு லொன்றுந் தெரியாது கருவிகளைக் கொண்டே சிவனை யறியவேணுமென்று சங்கிராந்தவாதி சொல்லக் கருவிகள் பாசஞான மாகையால் பதிஞானத்தாலே பதியை யறியவேணுமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

மருவி யிருவரும் புணர வந்தவின்பம் வாயினாற் பேசரிது-பொருந்தி யிருவரும் புணரவந்த வின்பம் வாக்காற் பேசுவதரிதாயினும்,—மணர்தவர்தா முணர்வர் காமரதம் கன்னிகைதான காணாள் - மணந்தவர்தா முணர்வானறியக் காமரசத்தினைக் கன்னிகையறியாள். அதுபோல,—அருள்பெறி னவ் விருவரையு மறிவிறந்தங் கறிவர்காண்- திருவருளைப் பெறிற் றன்னையுந் தலைவனையு மறிவிறந்தங் கறியர்,—அறியாரேற்காணார்-அறியமாட்டாத அபக்குவ ரதனைக காணார்தாமே யாகலா னவர்க்குணர்த்தும் வாயிலில்லை. இதுநிற்க,—உருவினுயிர் வடிவது முணர்ந்திலர் - பன்னிறங்களான் மயங்கி தன்னொளியிழந்த படிகம் போல வுருவான மயங்கி யானமசொரூப முணரப் பெற்றிலர்,—உணராதாருணர்வினாற் சிவனையுணர்வது கற்பனைகாண் -

அதனையுணராதா ரப்பெற்றித்தாகிய வுருவுணர்வா லவ்வான் மாவுக் குள்ளாகிய சிவனையு மறிவாமென்றல் பாவகமாத்திரை யேயாகலால்,—கருவிகழிந்தாற் காணுறொன்றுமெனிற் காணூர் காணுதார்-கருவியறிவிறந்து நின்று அருளானறியப் பெறுதார்க் கேகதேசமாகிய கருவியுள்ளளவு மேகதேசக்காக்ஷி நீங்காமை யால்,—பிறப்பும்விடா ஆணவமு மருதே,—பிறவியொழியாது பிறவிக்கு மூலமாகிய ஆணவமலமும் பற்றறக் கழியாது.

இத்துணை பசுகரணங்கள் சிவ கரணமாகத் துன்னிய சாக்கிரத்தைப் பெற்று ரதன்மேலுங் கரணங்கடந்த அதீததசைட புரிதற்கு அறிவுசெல்லுமாறு யாங்ஙனமென்னும் சிவசங்கிராந் தவாதிகளை மறுக்குமுகத்தால் 'துன்னியவைம்புல வேடர் சுழ லிற்பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிர்' என்ற மூன்றாங்கூறு வலியுறுத்தப்பட்டது.

அ-ரு, ௯-ம், அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி நிட்டையைப் பொருந்தி நீங்கினவிடத்துக்
கருவி கரணாதிகளுடன் கூடினுயேயாயினு மத
ன்வழித் தன்றென றுணர்த்துகின்றார்.

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட், டின்னிறங்க ளென்னிறமன் றென்றுதன்ற னெழினிறங்கண் டருளி லின்னிறத்தின்வேறாய்ப், பொய்ந்நிறவைம் புல னிறங்கள் பொய்யென மெய்கண்டான் பொருந்திடுவ ன்சிவத்திறெனும் போதான்பின்னை, முன்னிறைநீர் சி

றைமுறிய முடுகியோடி முந்நீர்சேர்ந் தந்நீராய்ப்பின் னீவகா முறைபோல். (௬௭)

(இ-ள்) பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போல் — படிகமான தெப்படித் தன்னிடத்திற் கூடின வன்னங்களே மேலிடத் தனகெப்பொழுதுஞ் சுபாவமான சொரூபத்தைக் கரந்து தன்னையடுத்த பதார்த்தத்தின் தன்மையே காட்டி நிற்கும். அதுபோல?

உள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட்டு — இந்திரியத்துக்கு வேறுபட்டிருக்கிற வான்மா வதனைக் கூடினவிடத்துத் தனக்குச் சுவபாவமா யிருக்கிற வடிவைமறைத் திந்திரியங்களே காட்டிநிற்கு மென்பதனை யறிந்து.

இந்நிறங்களென்னிறமன் றென்று — ஆன்மாவு மிந்த விந்திரியங்களின் வியாபார நமக்குண்மையல்ல வென்றுகருதி

தன்ற னெழினிறங்கண்டு — இந்திரியங்களின்வழி பொருந்துமது உபாதியெனக் கருதி யான்மாவுக் கழகு சுத்தனாயிருக்கிறதே யுண்மையெனத் தரிசித்து இவனாக வறிந்துநிற்க வல்லனேலெனில்?

அருளினா லிந்நிறத்தின வேறாய் — மத்தியான காலத்திற் படிக மானது கொடுத் ததனைக் கவராது வேறு பட்டாற்போல இவனுந் திருவடியைக் கூடினவிடத்து நமக்குச் சுபாவமன்றென்றுகருதி யதற்குவேறாய்

பொய்நிறவைப்புல நிறங்கள் — அசத்திய ரூபமாகிய விந்திரி யாதிகளைப் பொய்யென்று கருதி யதனை விட்டுநீங்கித் த

பொய்யென மெய் கண்டான் — ற் சொரூபத்தைத் தரிசித்தவனே யுண்மை ஞானி,

பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான்பின்னை — சிவனைப் பொருந்தினவன் பின்பந்தச் சிவதத்துவத்தை விட்டு நீங்கான். அஃதென்போ லென்னின?

முன்னிறைநீர் நிறைமுறிய முடுகியோர்டி முந்நீர் சேர்ந் தன்னீராய்ப் பின்னீங்கா முறைபோல் — போக்கற நிறைந்த நதியான துடைந்தவாறே, அஃது துடைந்தால் விரைவிற் சென்று சமுத்திரத்தைப் பொருந்தினவிடத் தந்த வுப்புநீராயப் பின்பது திரும்பாம லிருக்கு மாறுபோல விந்த வான்மாவு மந்தச் சிவமேயாய் மீளவுந் திரும்பார். எ-று.

முறைபோ லென்பதனாற் காஷ்டத்திலே யடங்கியிருந்த வன்னியான தெப்படி மிருந்த பிரகாசமுண்டானது பின்பந்த அரணியிற் புகாதவாறுபோலவும், தயிரான தெப்படி நெய்யானது பின்பு தயிராகாத வாறுபோலவு மறிக.

மெய்கண்டா னென்பது எழுவாய்.

நீங்கானென்பது பயனிலை.

இதற்குச் சுப்பிரபேதம், ரௌரவ சூத்திரம் நிர்வாசத்து மறிக.

"தொண்டலாற் றுணையுமில்லைத் தோலலா துடையுமில்லைக், கண்டலாதருளுமில்லைக் கலந்தபின் பிரிவுமில்லைப், பண்டைநான் மறைகள்காணாப் பரிசனே யென்றென்றெண்ணி, யண்டவா னவர்களேத்து மைய னையாறனார்க்கே". (௩௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் வ்ருத்திஞான மொழிப்ப தெவ்வாறென்ற மாணாக்க னுக் கம்முறைமை கூறுகின்றது.

பனனிறங்களவைகாட்டும் படிகம்போலுள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட்டு - பலநிறப் பொருள்கள் ஸ்ப டிகத்தை யடுத்துள்ளளவில் ஸ்படிகத்தினுடைய வொளியான து அடுத்த பொருளின் நிறமாகத் தனைப் பிறருக்குக் காட்டினது போலச் சத்தாதி புலன்களைக் கவருஞ் சுரோத்திராதியை யா னமாவினுடைய வ்ருத்தி ஞானமானது மனதினுடனே கூடப் பொருந்தினவிடத் தந்தச் சுரோத்திராதிக ளானதாகவே கா ண்பிக்கு மியல்பைக் கண்டு,—

இனனிறங்க ளனனிறமன் றென்றுதன்ற னெழினிறங்க ண டருளினொ லனனிறத்தின் வேறாய் - இந்த விஷயஞானங்க ளென்னுடைய ஸ்வரூப மன்றென்று தன்னுடைய ஸ்வருப ஞா னத்தை சிவஞானத்தினாலே கண்டு அந்த வ்ருத்தி ஞானங்களு க்கு வேறாய்,—

பொய்நிறமைம் புலநிறங்கள் பொய்யென மெய்கண்டான் பொருந்துவன சிவத்தினொடும் போதானபின்னை - விஷயஞா னங்களானது மூன்று லக்ஷணத்திலே கெடுவதாகையால் அசத் தியமென்று தனது சத்தியஞான ஸ்வரூபத்தை சிவ ஞானத்தி னாலே தரிசித்தவன சிவ ரூபத்திலே கலப்பன். அவ்வாறு கலந் தவன் திரும்ப ஜனனத்தில் வாரான். அதெனபோல வென னில்?—

முனனிமைநீர்சிறைமுறிப முடிகியோடி முந்நீர்சேர்ந் தன் னீரிய் பின்னீங்காமுறைபோல் - முதலே கட்டுப்பட் டிருந்

த வேரிநீர் கரையுடைய மிகவும் விரைந்துசென்று சமுத்திரத்தைப் பொருந்தி யுவர்த உப்புநீரேயாய்த் திரும்ப நன்னீராகாதது போலவென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

சிவஞானத்துணைச் சிவகன்ம யோகிகளல்லாச் சில சிவநியதிகன்மத்துணைச் சிவஞான யோகிகளா பண்ணும் பசுத்துவ சிவத்துவ விவேகத்தை யிருந்து மனமடக்கிப் பலப்படப்பண்ணும வனும் பாசமுத்தி சிவத்துவாபிவியத்தி மாருய்ச் சிவனேடொருத்துத் திருப்பத் திரும்பானென்று செப்புகின்றார்.

பன்னிறங்க ளவை காட்டும் படிகம் போல - செம்பரத்தம் பூ முதலிய தடஸ்த லக்ஷண சிவப்பு முதலிய தன்மங்களைத் தனது ஸ்வரூபலக்ஷண சுக்கில முதலிய தன்மங்கள்போற் றனிடத்திற் காண்பிக்கும் படிகக்கற்போல்,—

உளம் - ஆன்மாத்தான்,—

பலபுலன்க ணிறங்காட்டும் பரிசும் பார்த்திட்டு - பலபுலன்களெனபது மல முதலியவற்றைக் காண்பிக்கும் குறிப்பு மொழிபாதலான், மல முதலிய தடஸ்தலக்ஷண பசுத்துவ சிவத்துவ முதலிய தன்மங்களைத் தனது ஸ்வரூப லக்ஷண சிவத்துவ முதலிய தன்மங்கள் போலத் தன்னிடத்திற் காண்பிக்கு முறையுங் கண்டு,—

இந்நிறங்க ளென்னிற மன்றென்று - இப்பசுத்துவ சிவத்துவ முதலிய தடஸ்த லக்ஷணங்க ளெனது ஸ்வரூப லக்ஷணங்களன்றென்று,—

அருளினல்-சிவ சத்தி வியத்த சிற்சத்தியால் விவேகித்து;—

தன்றனெழினிறங்கண்டு - தனது ஸ்வரூப லக்ஷண சிவத்துவ தரிசனம் பண்ணி,—

இதனிறத்தின வேறாய் - இச் சிவத்துவ லக்ஷண விலக்ஷணமாய்,—

பொய்நிற வைம்புலனிறங்கள் - என்பதற் கசத்திய வைம்புல குணங்களென்று பொருளுரைக்கில் மாயாவாத மதமாமாதலால், ஆன்மாவுக்குத் தடத்த லக்ஷண மாதலால் சிவத்துவம்போற் ஸ்வரூப லக்ஷண மாயுள்ளன வன்றி மல முதலிய பாசங் கட்குச் சுவரூப லக்ஷண மாயுள்ள பசுத்துவ சீவத்துவ முதலிய தனமங்கள்,—

பொய் பென மெய்கண்டான் - தனக்குச் செயற்கைக் குணங்களா யுள்ளன வன்றென்று மல முதலிய வற்றிற் கியற்கைக் குணங்களா யுள்ளமை யுணர்ந்தான் சிவத்துவ விவேகி யென்றுமாம்,—

முன்னிறைநீர் சிறை முறிய - கட்டுவிட,—

முடுகி யோடி - விரைந்து சென்று,—

மூந்நீர்சேர்ந் தனநீராய் - சமுத்திரத நடைந் தட்புநீராய்,—

பின்னீங்கா முறைபோல் - திரும்பத் திரும்பாத செய்தி போல,—

பொருந்திடுவன் சிவத்திறோடு- அமூர்த்தத்திரவிய பதார்த்தங்கட்குப்பொருந்துதல் பிரிதல் கலத்தல் போதிப்பது நீதியனாதலால் சிவத்திறோடு தாதான்மிய சம்பந்தத்தால் தனது சிவதத்துவத்தோடு சாதிருச்சிய சம்பந்தத்தால் சிவனோடு சம்பந்திப்பன்.—

போதான் பின்னை - பசுத்துவ சிவத்துவமுத லுபாதிப்படான்.

நீருப்புச் சொபாதி, சிவத்துவம் நிருபாதி, நீர்போ லுப்
புப் பொருந்துஞ் சித்திருந்தபடி யிருந்து சிவத்துவ மிசையு
மாதலால் முற்றுவமையன்று, திரும்பத்திரும்பா னென்று திட்
டாந்தம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

தன்னையடுத்த பன்னிறங்களி னியல்பே தன்மாட்டுக்காட்
டி நிற்கும் பொதுவியல் புடைய படிகம்போல, ஆன்மாவுந் த
னைஞற் சாரப்பட்ட கருவிகளி னியல்பே தனமாட்டுக் காட்டி
நிற்கும் தனது பொதுவியல்பை முன்னற் சிந்தித்தறிந்து
கொண்டு, பின்னர் அப்படிகவொளி யவற்றின் வேறாளதாயி
னாற் போல, தனது சிறப்பியல்பு இவற்றின் வேறாயுண்டென்ப
து முணர்ந்த, பின்னங்ஙனம் பொது வியல்பையே தன்னியல்
டாகச் செய்துநிற்கு மக்கருவிஞானம் பொதுவியல்பேயா பொ
ழிபும்படி தன்னியல்பு விளங்குதற்கு ஏதுவாகிய வுண்மை யுண
ர்ந்தானத்தனியல்பின விளங்கித் தோன்றுஞ் சிவத்தைப் பு
றுவன்; மீள வக்கருவிக் கூட்டத்திற் செல்வானல்லன. சிறை
ப்பட்டநீர் முறிந்தவழிக் கடலிற் சென்றடங்கி மீளாதவாறு
போலு மென்பது.

கருவிகளை அப்பெற்றிய வாயவழி அவற்றை நீங்கி யருள்
பெறுமாறு யாங்ஙனமென்று நோக்குவார்க்கு உபாயங் கூறி
யவாறு.

சேர்தற்கு இடையீடின்மை விளக்குவார், முதுகியோடி
யென்றார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

இப்படிக் கர்த்தாவி னருளினாலே யான்மாக்க ளறிவர்க ளென்ற தென்னைம்பு, அவன் நீரும் நிழலும்போல விகாரமற நிற்க இவனைச் சென்று கூடுவனென்ற அவிகாரவாதியை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

பன்னிறங்களவைகாட்டும் படிகம்போல - பஞ்சவன்னங்களி னுண்மையைக் காட்டுகிற படிகத்தைப்போல,—உள்ளம் பலபுலன்க ணிறங்காட்டும் பரிசுபார்த்திட்டு-ஆனமாவானது பஞ்சவிந்திரியங்களுடைய சுபாவமே தானுங்காட்டுகிறமுறைமையை யறிந்து,—இன்னிறங்க ளன்னிறமன் னென்று-இந்தஸ்வரூப மெனனுடைய சுபாவ மல்லவென்று,—தன்றனெழில் நிறங்கண்டு-தனனுடைய வழகிய சுபாவத்தை யறிந்து,—அருளினு லின்னிறத்தின்வேறாய் - அந்தப் பஞ்சவனனங்களைப்போலத் தன்வசமாக்கிக்கொண்டு நிற்கிற வசத்தியமான விந்தவிந்திரியங்களைக் குருவினாலே தனக்கு வேறாகவறிந்து,—பொய்நிறமைம் புலநிறங்கள் பொய்யெனமெய்கண்டான பொருந்திடுவன் சிவத்தினெடும் போதானபின்னை - அசத்தியமான சுபாவத்தையுடைய பஞ்ச விந்திரியங்களின் வனனங்க ளெல்லாம் அசத்தியமென்றறிந்து சத்தியத்தைத் தரிசித்தவன் அந்தச் சத்தியமாயுளள சிவனுக் கடிமையென்றறிந்து அந்தச் சிவனோடுங் கூடிப் பின்பு சிவத்தைவிட்டு நீங்கான. அதென்போல வெனனில்?—முன்னிறைநீர் சிறைமுறிய முடுகியோடி முந்நீர்சேர்ந் தன்னீராய்ப் பின்னீங்கா முறைபோல - முன்னே சிறைசெய்ய நிறைந்துநின்ற நீரானது அந்தக் கரை முறிந்தபோது விரைந்துசென்று சமுத்திரத்தைக் கூடி யுப்புநீராய்ப் பின்பு பழைய நீராகாத முறைமைபோல வான்மாவுந் தனனைச் சிறைசெய்துநின்ற விந்தி

ரியங்களைக் குருமுகமாகத் தனக்குச் சிறையென்றறிந்து இந்திரியங்களை நீங்கிச் சிவனுடைய சீர்பாதத்திலே பொருந்தி யழுந்தின வான்மா, மீண்டும் அசற்காரியமான விந்திரியங்களில் வந்து கூடப்படாது.

'பன்னிறங்களவைகாட்டும் படிகம்போ லுள்ளம் பலபுலன்கணிறங்காட்டும்பரிசுபார்த்திட் டின்னிறங்களென்னிறமன்றென்னுதன்ற னெழிற்றிறங்க ளறருளி லின்னிறத்தின்வேறாய்ப் பொய்ந்நிறமைம்புல நிறங்கள்பொய்யென் மெய்கண்டான் பொருந்திடுவன் சிவதநிறென்றும் போதானபின்னை'' என்றது அவிகாரவாதி. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், ''ஆதலின் வாயிலளவினிலறிதலி - லேதமிலறிவுயிர்க் கெய்துதலிலதே'' என்றும், ''நீர்நிழலனைய சீர்பெறுகடவுளைச்- சேர்ந்தவர்க்கின்பம் வாய்ந்திடுமென்றனை - பாதவமென்றுஞ் சேதனமனமையி - னிழைத்தோர்வம்மி னென்பதுந்துன்பதுந்- விளைத்தோர்தம்மின் வெறுப்பு மொன்றிலதே'' என்றும், சிவஞானபோதம், அ-சூ, ௩-வெ, ''பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந், தன்னிறமே காட்டுந் தனைநினைந்து—பன்னிறத்து, பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான், மெய்ப்பொருட்குத் தைய்வமாம் வேறு.''என்னுமதுங் கண்டுகொள்க.

'முன்னிறைநீர் சிறைமுறிய முடிகியோடி முன்னீர்சேர்ந் தன்னீராய்ப் பின்னீங்கா முறைபோல்'' என்றதற்குப் பிரமாணம், சிவஞானபோதம், அ-சூ, எ-வெ, சிறைசெய்யநின்ற செழும்புனலினுள்ளஞ், சிறைசெய் புலனுணர்ந்து தீர்ந்து—சிறைவிட், டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா, துலைவிலரன் பாதத்தை யுற்று'' என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மா விந்திரியங்களோடு கூடித் தன்னை யறியாது மயங்கி நிற்குமென்றும் முத்தியிற் சிவனுக்

கடுமையா யிருப்பனென்றும் குருமுகமாக விந்திரியங்களைத்தன க்கு வேறென் றறிந்து நீங்கச் சிவனுடைய திருவடியே இவனு க்குத் தாரகமாமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போல - தன்னை யடு த்த பன்னிறங்களி னியல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும் பொ துவியல்பையுடைய படிகம்போல,—உள்ளம் பலபுலன்க ணிறம் காட்டும் பரிசுபார்த்திட்டு-ஆன்மாவுந் தன்னோற் சாரப்பட்ட க ருவிகளி னியல்பே தன்மாட்டுக் காட்டி நிற்கும். தனது பொது வியல்பே முன்னற் சிந்தித்தறிந்துகொண்டு,—இன்னிறங்க ளொ ன்னிறமன்றென்று தன்றனெழினிற மருளினாற் கண்டு - பின்ன றப்படிக வொளி யவற்றின் வேறுளதாயினாற் போலத் தனது சிறப்பியல்பு இவற்றின்வேறு யுண்டென்பது மருளா னுணர்ந் து,—இன்னிறத்தின் வேறாய்ப் பொய்நிற வைப்புலநிறங்கள் பொய்யென மெய்கண்டான்-பின்பஞ்ஞனம் பொதுவியல்மை த ன்னியல்பாகச் செய்து நிற்கு மக்கருவி ஞானம் பொதுவியல் பேயாயொழியும்படி தன்னியல்பு விளங்குதற் கேதுவாகிஉண் மையுணர்ந்தான்,—சிவத்திறோடும் பொருந்திடுவன்-தன்னியல் பின் விளங்கித்தோன்றுஞ் சிவத்தை யுறுவன், — பின்னைப்போ தான்-மீள வக்கருவிக் கூட்டத்திற் செல்வானல்லன்,— முன்னி றைநீர் சிறைமுறிய முடிகியோடி - சிறைப்பட்ட நீர் முறிந்தவ ழி விரைந்தோடி,—முந்நீர் சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா மு றைபோல - கடலினகட்சென் றந்நீரா யடங்கிப் பின மீளாத வாறுபோலும்.

## மறைஞானதேசிகர் உரை

பரிணாமவாதி சிவனை பெத்தான்மாக்களை போடிக் கூடிஞானென்றதென்னை? யவன் சர்வவியாபியோ யேகதேசியோ வென்ன அவனைக் குறித்துணர்த்துகின்றார்.

எங்குந்தா னென்னி னொய்தவேண்டா மெங்குமிலனென்னின்வே றிறையுமல்லன், அங்கஞ்சே ருயிர்போல்வ னெங்குமங்கத் தவயங்கள் கண்போலக் காணுதான்மா, இங்குநா மியம்புந்தத் துவங்களின்வைத்தறிவ திறைஞானந் தந்துதா னீதல்கூடிற்றந்த, தூங்கவிற்றிச் சோதியுமுட் சோதியும்பெற்றாற்போற் சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே. (கூஅ)

(இ-ள்.) எங்குந்தானென்னி னொய்தவேண்டாம் — அவன் சர்வவியாபியென்பீராகி லப்பொழுதவனை நாம்சென்று கூடவேண்டுவதில்லை.

எங்குமிலனென்னில் வேறிறையுமல்லன் — சர்வவியாபி யல்ல வென்பீராகில் அப்பொழுதவன் கர்த்தாவுமல்லவாய் வேறேயொரு கர்த்தாவை யபேட்சிக்க வேண்டும்.

அங்கஞ்சே ருயிர்போல்வன் — அஃதன்றிச் சரீரத்திலே யிருக்கிறவான்மாவைப்போ லேகதேசமாயிடுவன்.

எங்குமங்கத் தவயவங்கள் கண் — சரீரத் தண்டாகிய அவயவங்களைக் கண்ணானது காணுமதனை யவயவங்கள் காணுத

போலக் காணு தானமா — வாறுபோலச் சிவனெங்கும் வியாபித்து நின்றானேயாகிலு மவனை யான்மாக்கள் காணமாட்டார்கள், ஆன்மாவையு மற்றுள்ள பிரபஞ்சங்களையுஞ் சிவன் கண்டுநிற்பன். அஃதென்போல வென்னில்?

இங்குநா மிய ம்புந் தத்துவங் களின் வைத்தறி வது — இவ்விடத்து நாஞ் சொல்லப்பட்ட கால முதலிய தத்துவங்களை வியாபித்துக்கொண்டுநின்று விஸ்வத்தை நடத்து முறைமை போல,

இறைஞானந் தந்துதாளீதல் — சிவ ஞான்மாக்கட்குச் சர்வஞ்ஞத்துவாதிகளை விளக்கி முத்தியை யடைவிப்பது. அஃதெங்ஙபோ லென்னில்?

சுடரிழந்ததுங் கவிழிச் சோதியு முட் சோதியும் பெற்றாற்போல் — படலத்தாலே யொளியை யிழந்த கண்ணைது பண்டிதன் வியாபாரத்தாலே படலநீங்கினவாறே நல்ல விழியினையு மதற்குக் காட்டாய்நிற்கிற கருவிழியுங் கரிவிழியிலிருக்கும் பாவையையும் பெற்றாற்போல.

சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே — அப்பொழு துயிர்க்குயிராத் தோன்றப்பட்ட சிவனை யவ்விடத்துக் கலந்ததைக் கூறியது. எ-று.

என்னவே சிவனு மிவனுக்குஞ் சர்வஞ்ஞத்துவ முண்டாகல் சற்குண சமானத்தாற் சமரசிபாவங் கூறியதாயிற்று. இச்சமரசிபாவம் பாலும் பாலுங்கூடினது பிறிக்கப்படுவதன்று.

இந்த வைக்கியம் பின்னமே யதனால், கண்ணிற் பிரகாசத்தையும் ஆதித்தப் பிரகாசத்தையும் உவமித்துக் கலந்ததென்றுரனவறிக.

"திருவேயென்செல்வமே தேனேவானோர் கண்ணேகண்ணுட் கருமணியே மணியாடு பாவாய்காவா, யருவாயவல்வினைநோ யடையாவண்ண மாவடுதண் டுறையுறையு மமரரேறே" எனும் வாக்கியத்தறிக.

இதற்கு நிசுவாசம் சித்தாந்தரகசிய சாரத்து மறிக(௩அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

மேல் சிவன் சர்வவியாபியாய் நின்றும் பாச பசு ஞானத்தினால் அறியப்படாமல் சிவஞானத்தைக் கொடுத்ததனால் தோன்ற நிற்பனென்று கூறுகின்றது.

எங்குந்தானெனனினு மெய்தவேண்டா - சிவன் சர்வவியாபியென்னில்? நாம் புதிதாகப் பொருந்தவேணு மென்பதில்லை,—

எங்குமிலனென்னில் வேறிறையுமல்லன் - சர்வவியாபியல்லவென்னில்? ஆன்மாக்களுக்கு அன்னியமாக ஆன்மாக்களிடத்திலே பிரிவறநின்று அந்தர் நியமநத்தைப் பண்ணுகையால் அந்தரியாமியென்று பேருமாய்ச் சுவாமியென்று சொல்லப்படுமவர் அவ்வாறில்லையாகில் கர்த்தாவே யல்லவாம். அந்தரியாமியாகில் அவனைத் தெரியாதே யிருப்பானே னென்னில்,—

அங்கஞ்சே ருயிர்போல்வ னெங்குமங்கத் தவயவங்கள் கண்போலக்காணுதான்மா - தேகத்திலே யான்மாவினின்று சேஷ்டிக்குமாப்போல ஜடசித்தாயுள்ள பிரபஞ்சமெல்லா மீஶ்வரன் நிறைந்துநின்று பிரேரிப்பன். ஈஶ்வரன் ஜடசித்துக்களெல்லாத்தையும் பிரேரிப்பானுமாகில் ஜடங்களுக்கு மறிவுண்டாக வேணுமென்னில்? தேகத்தி லவயவங்களெல்லாங் கண்ணைப்போலேகாணுந் தன்மையில்லை, அவ்வா றுதல் சித்தாகிய ஆன்மாக்க

ளூக்கே யறியுந் தன்மை, ஜடங்களுக்கில்லை. ஆன்மா சித்தாகை யால் தானே யறியுமென்னில்?—

இங்ஙுனமியமபுந் தத்துவங்களில்வைத்தறிவ திறைஞான ந்தந்து - இவவிடத்து நாஞ்சொல்லுந் தத்துவங்களிலே ஆன மாவினுடைய வ்ருத்திஞானத்தைப் பொருந்தி விஷயங்களை யறிவதுங் கர்த்தாவினுடைய ஞானசத்தி ÷ பிரசாதத்தினுலே யே! இந்த ஞானமேயோ முத்திக்கு மென்னில்? அல்ல. இந்தஞா னங் குருடனுக்குக் கோல் கொடுத்து வழி காட்டுமாப்போலக் கலாதி தத்துவங்களைக்கொண் டான்மாவுக்கு விஷய தரிசன த்தைப் பண்ணுவிப்பது,—

தாளீதல் சுடரிழந்த துங்கவிழிச்சோதியுமுட் சோதியும்பெ ற்றுப்போற் சோதிச்சுட் சோதியாய்த்தோன்றிடுவன்காணே- மோக்ஷத்தைக் கொடுக்குஞ் சிவஞானமானது காச காமலாதி தோஷத்தினுலே பிரகாசந் தடைப்பட் டவயவத்திற் குறை வற்றிருந்த கண்ணுக்கு சலா†காஞ்சனுதி வைத்தியக் கிரியையி னுலே யாகுதல் தேவதா பிரசாதத்தினுலே யாகுதல் கண்மீதி லொளியும் சூரியாம்சமான உள்ளொளியும் பிரகாசித்தாற்போ ல், ஆசாரியன்பண்ணும் தீக்ஷாக் கிரியையினுலே யாகுதல் பரா சத்திப் பிரசாதத்தினுலே யாகுத லாணவசத்தி நீங்கி யான மா ஜோதியு மதனுள் பரமான்ம ஜோதியு மபிவியத்தியாவது காண மோக்ஷஞானமென் றிதன்பொருள்.

÷ பிரசாதம் - அனுக்கிரஹம், † அஞ்சனம்-மை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆசாரியரு முன்வாக்கில் வாசனையாற் புறப்படும் ‹பொருந் திடுவன் சியத்திரேு டென்பது பெறுது, சுவாயம் புவத்திற்

சொல்லியபடி பசுத்தன்மை மறையத் தன்பதித் தன்மை விளக்கத்தோடு பதிவெளியா யறிவில் விளங்குவதே பொருந்துவதென்று போதிக்கின்றார்.

எங்குந்தானென்னில் - சிவன் சித்தசித்துப் பிரபஞ்சமெல்லாம் வியாபியா யிருப்பனென்னில்,—

நாமெய்த வேண்டாம் - ஆற்றுநீர் சமுத்திரத்திற் சென்று கூடுவதுபோலவனை நாஞ்சென்று கூடவேண்டுவதில்லை,—

வேறெங்கு மிலனென்னில்,—சர்வத்தையு மறிதல் பண்ணுதல் கூடாதாகையால்,—

இறையு மல்லன் - சர்வ ஜகத் கர்த்தாவு மல்லனாகி விடுவன். உம்மையால் சர்வகர்த் திருத்துவ மில்லாமையாற் சர்வஞ்ஞனு மல்லாதே போவன்.

பின்னவனை யடைவதில்லை யெனில் அறிவது தியானிப்பது சமாதிப்பது சாக்ஷாத்கரிப்ப தெப்படி யென்னில், அந்தச் சிவனெங்குந் தனக்குச் சரீரம்போ லுபசரிக்கப் படுஞ் சித்தசித்துப் பிரபஞ்ச மெல்லா வற்றினும்,—

அங்கஞ்சே ருயிர்போல்வன் - இயற்கையாற் சர்வவியாபியாயிருந்தாலு மவ்விரு ளுபாதிச் செயற்கையினாற் றனது சரீர விளக்குப் பொருந்திய வவ்வளவில் ஞானமுண்டாகையால் அவ்வளவு வியாபக னென் றுபசரிக்கப்பட்ட ஆன்மா வொப்பன்,—

அங்கத் தவயவங்கள் - அந்த ஆன்மாப் பொருந்திய சரீரத் தறுப்புக்கள்,—

கண்போல - நேத்திர மாகிய வுறுப்புப்போல,—

காணுவாகும் கண்ணே காணும் - அப்படியே சிவன் பொருந்திய சித்தசித்துப் பிரபஞ்ச மாகிய சரீரத் தறுப்புக்களுள் ஆன்ம சிற் சத்திக்குறி பொறித்த சிற்கண் ணுறுப்புப்போ லறி

யா வாகும்,ஆன்மசிற் சத்திக்குறி பொறித்த சிற்கண்ணுறுப்பே காணும். ஆகையா லான்மாக் குறிப்பு மொழியாதலா லான்ம சிற்சத்திகுறி பொறித்த சிற் கண்ணுனது,—

இங்குநாமியம்புந் தத்துவங்களின் வைத்தறிதல் - இந்த ச் சாத்திரத்தில் நாம்முன்சொல்லிய போக்கியப் பொருளை யறியும்போதும் பசுகரணமா யிருந்தாலுஞ் சகளசிவனை யறியும்போது சிவகரணமா யிருக்கின்ற புத்தி முதலிய தத்துவங்கள் காட்டாகப் பண்ணும் பதி ஞானக்குறி பொறித்த வோருணர்தல் ஈதொரு சோதி,—

தாள்-தததுவா தீதமாகிய சிவசத்தி,—

இறைஞானந்தந்து - கருவிப் பதிஞானக்குறி பொறிதத சிற்சததியைவிளக்கி,—

ஈதல்- தொழிற்பதிஞானக்குறி பொறித்துக் கொடுக்க அறிதல் ஈதொரு சோதி. இந்த இருசோதியும் பெற்றது,—

சுடரிழந்த தங்கவிழி - ஒளிமறைநத பொறியாசுககண்,—

சோதியு முட்சோதியும் பெற்றாற்போல - புறவொளியு முள்ளொளியு முற்ற தொப்ப,—

சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே - சோக்திகுள் உட்சோதிக் தெனறு மாறுக. சொல்லிய ஆன்மசிற்சத்தியி னந்தரங்க நிருபாதிக சோதிக்குட் சோதியாய் நிஷ்களனாக,—

தோன்றிடுவன் காணே - திருச்சியமன்றித் திருக்கு ரூபியாய திருசியன்றனையாவன்.

சோதிக்குள் - சிவசத்திக்குள் தோன்றிடுவன் - விளங்குவன் என்று சிலபெய ருரைப்பர். பராக்குரூபியாகிய சிவசத்தியில் சிவன் தோன்றுவனாகில் சிவசததிக் கன்னியனாய் விடுவ னென்பது முதற் றாஷணம் பிரமாணப் பிரசங்கததிற் பேசியதறிக.

அதுவன்றி யெடுத்தல் முடித்தல் இசையாது பகைக்கும், பார்ப்பவன் பலப்பிரமிதியன்றிப் பிறர் பிரமாணப் பிரமிதி பலமுடைமாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

உயிர் கரணங்களெல்லாஞ் சிவமயமேயெனின் வேற்றுமை யின்மையாற் கருவிவழிச் செல்லுஞ் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூட வேண்டாமையானும், அதுபற்றி யெல்லாஞ் சிவமாக வில்லையெனின் எவற்றினும் வியாபகமாயுடனின்று செலுத்துவ தாகிய வவன திறைமைக்கு இழுக்காய் முடியு மாகலானும், இருவகையு மின்றிக் கலப்பினா லுடம்பின்கணுயிர்போல ஒப்பநிற்ப னென்பது பெறப்படு மாகலான், உடம்பின்கணுளவாகிய வைந்திந்திரியங் களினும் உயிர் ஒப்ப நிற்பினும் ஏனை யிந்திரியங்களொன்றும் ஒளியா லவ்வான்ம போதத் தோடும் விரவிச் சேய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுங் கண்ணிந்திரியம்போல வியாபித்தறிய மாட்டாவாய்த் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றுநின்று இயைந் தறிவனவே யாமன்று, அது போல வான்மாவினுந் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து வேற்றுமை யறிந்து கொள்ளப் படுமாகலான், அப்பெற்றித்தாகிய வுயிர் அப்பெற்றித் தாகிய கருவிஞானத்தைக் கைவிட்டு இறைஞானந்தந்து திருவடிகளை யியப்பெறுதல், ஒளியிழந்த கண் மாசு நீங்கியவழித் தனதொளியையுந் தனக்கு உள்ளொளியாய் நின்று செலுத்து மான்ம போதத்தையும் ஒருங்கே பெற்றுற்போலு மாகலான், அவ்வழி யிறைவன் ஆன்மாவி னறிவுக் கறிவாய்த் தோன்றுவா னன்றி

ஏகதேசமாகிய வேனைக் கருவியறிவிக்கு ளறிவாய்த் தோன்று வானல்ல னென்பது.

இறைவ னொப்ப நிற்பினும் ஏகதேசப் பொருள் ஏகதேசப் பொருளே வியாபகப் பொருள் வியாபகப் பொருளே யென்பார், உவமை யெடுத்துக் காட்டி ஆன்மாவினும் நாமியம்புந் தத்துவங்களினும் இங்குவைத் தறிவ தென்றார்.

நாமென்னு முளப்பாட்டுத் தன்மை "நாமறையாமத் தென்னோ வந்துவைகி நயந்கதுவே" என்றாற்போல ஈண்டிழிந் தற்குறிப்புத் தோன்ற முன்னிலைக்கண் வந்தது.

அறிவ தென்றது வியங் கோள், "கொள்ளப்படாது மறப்பது,, என்பது போல.

இங்கென்பது உவமவுருபு தோன்ற நின்றது.

ஈதல் ஆகுபெயர்.

இழந்த வென்னும் அன்பெறாத வகரவீற்றுப் பலவறி சொல் யிழிகளை யுணர்த்திப் பெற்றாறபோ லெனும் பயனிலை கொண்டது.

மாசுநீக்கந் தோன்றத் துங்கவிழிச் சோதியென்றார்.

யாண்டுமொப்ப நிற்குஞ் சிவத்தினோடும் பொருந்தினவன் மீளினும் அதுபற்றி யிழுக்கென்னையென்னுஞ் சிவாத்துவித சைவரை நோக்கி ஒப்பநிற்கும் வழியும் வேற்றுமை யுண்டென்பது உவமைமுகத்தா னினிது விளக்கிப் போதான் பின்னையென்றதனை வலியுறுத்தியவாறு.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

எல்லா வுருவங்களுஞ் சிவமென்று சொல்லுமைச்செய்தே யிவன்சென் றவனைக் கூடுவனென்றதென்னப்பு எனற பரிணாமவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

எங்குந்தாமென்னிலு மெய்தவேண்டாம் - எல்லாவுருவங் களிலு நின்றறிகிறது சிவனேயெனில்? அவனுடைய திருவடி யை நாஞ்சென்று பெறவேண்டுவது இல்லையாம். ஆனால் சிவன் இந்தப் பிரபஞ்சரூபங்களுக் கன்னியனோ வென்னில்,—எங்கு மிலனென்னில் வேறிறையுமல்லன் - எவ்விடத்திலு மில்லை யென்று நீ சொல்லில் அவன் பிரபஞ்சத்துக்கு வேறுமாய் ஏகதே சியுமாய்க் கர்த்தாவுமாகான். எல்லா வுருவங்களும் சிவனே யாகில் ஆன்மாவென்பதொன் றெங்கே காணப்பட்டதென்னி ல்?—அங்கஞ்சே ருயிர்போல்வ னெங்குமங்கத் தவயவங்கள் கண்போலக் காணுவான்மா விங்கு நாமியம்புந் தத்துவங்களில் வைத்தறிவது - சிவனுமே எல்லாவுருவங்களுங் காரியப்பட்ட தாமாகிலும் பிரபஞ்சத்தைப் பார்க்க வான்மாவுக்கு விசேடத் துவ முண்டு. அதெங்ஙனே யென்னில்? சரீரத்திலே எல்லா வவ யவங்களுக்கும் ஆன்மா பிராணனாய் நிற்கிற நிலையாயிருக்கச் செய்தேயு மெல்லா வவயவங்களுக்குங் காணுந்தன்மையில்லையா ய்க் கண்ணுக்குக் காணுந்தன்மை யுண்டானாற்போல இவ்விடத் து நாஞ்சொன்ன வவயவங்களைப் பார்க்கக் கண்ணுக்கு ஒரு வி சேஷ முண்டானாற்போல, பிரபஞ்சத்தைப் பார்க்க ஆன்மாவு க்கும் ஒருவிசேஷ முண்டென்று வைத்துப்பார்த் தறிவாயாக. ஆனா லந்தவான்மாக்கள் சிவனைக்காணு திருப்பானேனென்னி ல்?—இறைஞானந்தந்து தாளீதல் சுடரிழந்த துங்கவிழிச்சோ தியுமுட்சோதியும் பெற்றாற்போல-முன்னே காணுமென்ற கண் படலத்தாலே மறைப்புண்டு காக்ஷியின்றி நின்ற வவ்தரத்து அந்தப் படலை நீக்கினபொழுது காணுந் தன்மையுங் காட்டு மொளியின் தன்மையும் பெற்றாற்போல பரமேஸ்வரன் தன்னு டைய ஞானத்தையுந் தந்து அந்த ஞானத்தாலே ஆன்மாவுக் குண்டான பாசநீங்கத் தன்னுடைய சீர்பாதத்தையுந் தர அ

த சீர்பாதத்தைப்பெற் றதுவாய் நிற்கவே,—சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே - ஆன்மாக்களே இவனுக்குப்பிராணனாய் நின்று பிரகாசிப்பனென்று அறிவாயாக.

இதற்குப் பிரமாணம். சங்கற்பநிராகரணம், "புவனமிபாவையும் புனிதன தருவெளி-லவன்முதற்காரண மன்றுமென்னி-நிமித்தகாரண நிகழ்த்துகென்னீ - யவனேகாரண மனைத்துமென் றறைந்தனை - மண்டனிற்குலால தண்டசக்கிராதி - காரணமூன்று மோர்புனைந்திடவித் - தாரணியதனிற் கண்டதுசாற்றுக" என்றும். "சிவஞானபோதம், அ-சூ, அ-வெ, "எவ்வுருவுந்தானென்னி லெய்துவாரில்லைதா, னிவ்வுருவின் வேறே யிறையல்ல—னெவ்வுருவுங், கண்போல வையகங்கள் காணுவக் கண்ணிலார், கண்பேறே காணக் கழல்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, எல்லா வவயவங்களு மான்மாவாலே காரியப்பட்டு தேகக் கண்ணுக் கொரு விசேஷ முண்டானாற்போல பிரபஞ்சமெல்லாம் சிவனாலே காரியப்படுகைச் செயலே ஆன்மாவுக்கு ஒரு விசேஷ முண்டென்றும்,பக்குவான்மாக்களுக் கல்லாது சிவ தரிசன முண்டாகாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

எங்குந்தானென்னி ளுமெய்தவேண்டா - உயிர் கரணங்களெலலாஞ் சிவமயமே யெனில் வேற்றுமை யின்மையாற் கருவிவழிச் செல்லுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக் கூட வேண்டாமையானும்,—எங்கு மிலனென்னின் வேறி

றையுமல்லன்- அதுபற்றி யெல்லாஞ் சிவமாதலில்லையெனின் எ வற்றினும் வியாபகமா யுட்னின்று செலுத்தவதாகிய வவனது இறைமைக் கிழுக்காய் முடியுமாகலானும்,—அங்கஞ்சே ருயிர் போல்வ னென்னின்-இருவகையு மின்றிக் கலப்பினு லுடம்பின் க ணுயிர்போல ஒப்பநிற்ப னென்பது பெறப்படுமாகலான்,—அ ங்கத் தவயவங்கள் கண்போலக்காணு-உடம்பின்க ணுளவாகிய வைந்திந்திரியங்களினு முயி ரொப்பநிற்பினு மேனையிந்திரியங்க ளுன்கு மொளியா லவ்வான்ம போதத்தோடும் விரவி சேய் மைக் கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியும் கண்ணிந் திரியம்போல வியாப்பித்தறிய மாட்டாவாய் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றாங்கு நின் றியைந்தறிவனவே யாமன்று. அ துபோல—,ஆன்மா இங்குநாமியம்புந் தத்துவங்களின் வைத்த றிவது - ஆன்மாவினுந் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து வேற்றுமையறிந்து கொளப்படுமாகலான்,— இறைஞானந்தந் து தாளீதல் - அப்பெற்றித்தாகியவுயி ரப்பெற்றித்தாகிய கரு வி ஞானத்தைக் கைவிட் டிறைஞானந்தநது திருவடிகளை யீயப் பெறுதல்,—சுடரிழந்த துங்கவிழிச்சோதியு முட்சோதியும்பெ ற்றாற்போல - ஒளியிழிந்தகண் மாசுநீங்கியவழி தன்னொளியை யும் தனக் குள்ளொளியாய் நின்றுசெலுத்து மான்மபோதத்தை யும் ஒருங்கே பெற்றாற்போலு மாகலான்,—சோதிக்குட் சோதி யாய்த் தோன்றிடுவன்காணே - அவ்வழி இறைவ னான்மாவி னறிவுக்கறிவாய்த் தோன்றுவானன்றி யேகதேசமாகிய யேனை க் கருவியறிவுக்கு ளறிவாய்த் தோன்றுவானல்லன என்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.



இந்தப்படி நிற்கமாட்டாதார்க்கு வேறோருபாய முணர்த்துகின்றார்.

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற்பரக்கு, மாசுபடு மலமாயை யருங்கன்மமனைத்து மரனடியை யுணரும்போ தகலும்பின்னணையு, நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலைபிதுவேயாகு, மாசையொடு மங்குமிங்கு மாகியலம் வருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழியுரைப்பாம். (௯௬)

(இ-ள்.) பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப்படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற்பரக்கும் — இத்தன்மைபோல

ஆசுபடுமலமாயை யருங்கன்மமனைத்து மரனடியை யுணரும்போ தகலும்பின்னணையும் — குற்றத்தைப் பொருந்திய வாணவாதி மலங்களு மிந்த ஜீவன்முத்தர் திருவடியைப் பொருந்தி யிருக்கும்பொழுது, நீங்கும் அதனைக் கூடாவிடத் தப்பொழு தவைகள்வந்திவனைப் பொருந்தாநிற்கும். ஆதலால்

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையிதுவே யாகும் — சிந்தையுடன் கூடித் திருவடியில் வைத்த வுண்மையைப் பொருந்தி யனவரதமும் பிரியாம லிதுவேயெனக் கருதி நிற்க வெண்ணுஞ் ஜீவன்முத்தர்க ளிதுவே நிலையாகநிற்பர்கள்.

ஆசையொடு மங்குமிங்கு மாகிய லமவருவோ ரரும்பாச மறுக்கும் வகை யருளினவழி யுரைப்பாம். — இந்த முறையி னிற்கமாட்டாதா ராசையிருலே விஶ்வத்தின்கட் கூடியும் பிரிந்துமிருக்கு மவர்களும் பாசத்தை யறுத்து முத்தி யடைகையினபொருட் டியாமருளின வழிநிற்கு முபாய நிட்டை மேற் சொல்வாம். எ-று

நினைவுடையோர் நின்றிடுவர். எ-ம். யாம் உரைப்பாம் எ-ம். பொருள் கொள்க.

யாம். எ-து. தன்மைப்பெயர்த் தொக்கது எனவறிக. அருளினவழி யெனபதனை யிருபாலுங் கூட்டுக. (௯௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் பாசவாசனை நீங்குமுறைமை கூறுகின்றது.

பாசிபடுகுட்டத்திற் கல்லினைவிட்டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும் - பாசிநிறைந்த குளத்திலே மெனமேலும் கல்லுகொண்டெறிய வந்தக் கல்லுபடுநேரம் பாசி நீங்கி ஜலந் தூயதாயிருக்கும், கல்லெறியாமல் விடும்பொழுதிற் பரக்கும் பாசியானதுமூடி ஜலமலினமாம். இதுபோல—

அரனடியையுணரும்போ தாசுபமெலமாயை யருங்கன்மம னைத்து மகலும்பின்னனையும் - சிவபாவனையைப் பண்ணுங்கா லத்துக் குற்றத்தை விளக்கு மாணவமு மாயையுங் கன்மமும் நீங்கும், சிவபாவனை யொழிந்து ஜீவபாவனை வந்தபின் மும்ம லங்களும் பொருந்தும். ஆகலால்,—

நேசமொடீங் திருவடிக்கீழ் நீங்காதேதுங்கு நினைவுடை யோர்நின்றிவர் நிலையதுவேயாக - உண்மையினுல் ஞானத்து டனும் பத்தியுடனும் சிவனிடத்து நீங்காது நின்மல துரியாதீதா வஸ்தையைத் தானே யடையு மிச்சையுடையோர் சுத்தாவ ஸ்தையே நிலைபெருக நிற்பர்கள்,—

ஆசையொடு மங்குமிங்குமாகி யலம்வருவோ ரரும்பாச ம றுக்கும்வகை யருளின்வழியுரைப்பாம்- விஷயங்களிலே பொரு க்கால் விருப்பு மொருக்கால் வெறுப்புமாய், வெறுப்புவந்த கா லத்து சிவபாவனையும் விருப்புவந்த காலத்து விஷயாநுபவமு மாகச் சுழலுமவர்கள் வலிதாகிய பாசத்தை யறுக்கு ஞான நெறி கூறுவாமென் றிதன்பொருள்.

சிவாக்ரயோகியர் பண்ணின<br>சிவஞானசித்தியார் எட்டாஞ் சூத்திரம்<br>வியாக்யாநம் சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஞானத் தியான சமாதி சஞ்சல ஜீவன் முத்தி சாட்சாத் கார சமயமாத்திரத்தில் மலமுதலிய பாசம் பறியும். அவை குலையிற் பரக்குமென்று பாஷிக்கின்ருர்.

அருளின்வழி யென்பது- அருள்தரு மாகமமார்க்கத்தால்.
மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

சிவத்தைப் பொருந்தியவன் ஒரோவழிக் கருவிகளின் மீள வருமாயின் அது நீர்ப்பாசிபோல அற்றம் பார்த்து வந்து தலைப்படும் வாதனைபற்றி நிகழ்வ தாகலின், அவ்வாதனை முன்னர்க் கூறப்படு முபாயத்தைக் கடைப் பிடித்துச் செய்து நீக்கிக் கோடற் பாற்றென்பதாம்.

இவை மூன்று செய்யுளானும் 'அவரினீக்கி மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்' என்ற நாலாங் கூற்றுப் பொருள் வலியுறுத்தப் பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இந்த வான்மா சிவனை யறிந்து கூடினதே யுண்டாகில் மீள வந்த இந்திரியங்களோடு கூடவற்றோ வென்ற பாடாணவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

பாசிபடுங்குட்டத்திற் கல்லினைவிட்டெறிய - பாசிபொருந்தின குளத்திலே கல்லைவிட் டெறிந்த விடத்து,—படும்பொழுது நீங்கி யதுவிடும்பொழுதிற்பரக்கும்-அந்தக்கல்லுப் பட்டபொழுது பாசிவிட்டு நீங்கியும் எறிகிறது தவிர்ந்தபொழுதே மீண்டு

மந்தப் பாசிவந்து தண்ணீரை மூடிக்கொள்ளாநிற்கும். அத்த ன்மைபோல,—அசுபமலமாயை யருங்கன்மமனைத்து மரனடி யையுணரும்போ தகலும்பின்னனையும் - குற்றதைப் பொருந்தி ன மலமாயை காணுதற்கரிய கன்மமிவையெல்லாம் பரமேஸ் வரனுடைய திருவடியை வேறறக்கண்டு கூடும்பொழுது அந்த மலமாயா கன்மங்க ணீங்கும் இவன் சகலஞனபடியாலே அந் தத்திருவடியை யுணராதபொழுது மீண்டு மவை வந்துகூடும், இந்தப் பாசங்கள் மேலிடாமல் நீங்கும்படி யெங்ஙனே யென் ற மாணுக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.—நேசமொடு திரு வடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் நினறிடுவர் நிலை யதுவேயாக - சினேகத்துடனே தனக்குப் பிராணனாய்நிற்கிற பரமேஸ்வரனது ஸ்ரீபாதத்தின் கீழே யனவரதமும் விட்டுநீங் காமல் அதுவே பற்றுக்கோடாக நிற்கத்தக்க வறிவினையுடைய வர்க ளதுவே நிலையாக நிற்பர்கள். மீளவு மந்தநிலைகூடா தவர் களுக்கு பாசம்நீங்கும தெப்படியென்ற மாணுக்கனை நோக்கி யருளிச்செய்கிறார் —ஆசையொடு மங்குமிங்குமாகி யலம் வரு வோ ரரும்பாசமறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்,- பிர பஞ்ச வியாபாரத்தை விட்டுச் சிவனைப் பெறவேணு மென்கிற வாசையுடனே யந்தத் திருவடியிலே கூடிநின்று மலத்தின் மே லீட்டாலே யந்தத் திருவடியை விட்டு நீங்கிப் பிரபஞ்ச வியா பாரத்திலே கூடிச் சுழன்று அதவாய் வருகிறவர்களுடைய நீ ங்குதற்கரிய பாசத்தை நீங்கின முறைமையினைத் தம்பிரானரு டைய காருண்ணியத்தினாலே மேற் சொல்லா நின்றேன்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். அ-சூ, கூ-வெ

" ஐம்பொறியி னல்லையெனு மந்தரசிவனை, யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி, னீங்காநீர்ப்பாசிபோல் நீங்கி மலகன்மம்வரி, னீங்கானை நீங்குநினைந்து" எனுமதுங் கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது, இந்த வான்மாச் சிவனைப்பெற்றும் பிராரத்தம் புசிக்கவேண்டிய மல மாயாதி கன்மங்களோடு கூடுமென்றும் இந்த மலங்களைத் தனக்குப் பிராணனாய் நிற்கிற சிவனாலே நீக்கிக்கொள்ளு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் - இடையறாத அன்போடுஞ் சிவத்தைப் பொருந்தி உதீதத்தையடையு மிச்சையுடையோர்,—நிலையதுவேயாகி நின்றிடுவர்-சுத்தாவத்தையே நிலைபேறாக நிற்பர். ஒரோவழிக் கருவிகளின் மீளவருமாயின் அது,—பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப்படும்பொழு திதுநீங்கி யதுவிடும்பொழுதிற் பரக்கும்-பாசிபொருந்திய தடாகத்திற் கல்லெறியும்போது நீங்கியு மஃது இல்லாதபோது நீர்ப்பாசிபோல,—ஆசுபடுமலமாயை யருங்கனம மனைத்து மரனடியை யுணரும்போ தகலும் பின்னணுகும்-குற்றம் பொருந்திய மலமாயை கன்மங்களெல்லா முதல்வன திருவடியை யுணரும்போது நீங்குதலு மதனை யுணராத வற்றம்பார்த்துத் தலைப்படுதலும் வாதனை பற்றி நிகழ்வதாகலின்,—ஆசையொடு மங்குமிங்கு மாகி யலட் வருவோர் அரும்பாசமறுக்கும் வகை யருளின்வழி யுரைப்பாம் - அவ்வாசனை பற்றி விருப்பத்தோடு சனனமரணங்களிற் சுழலுதற் கேதுவாகிய அரிய

பாசங்களை நீக்கும்வகை யருள்வழி முன்னர்க் கூறப்பட்ட முபாய த்தைக் கடைப்பிடித்துச் செய்து நீக்கிக் கோடற்பாற்று.

இவை மூன்றுசெய்யுளானும் 'அவரினீக்கி மலமகற்றித் தா ளுக்கி மலரடிக்கீழ்வைப்பன' என்ற நாலாங்கூற்றுப் பொருள் வலியுறுத்தப் பட்டது.

☞ அ-சூ, ச-ம், அதிகரண முடிந்தது.

☞ எட்டாஞ் சூத்திரம் முற்றிற்று

"நாற்பதினி லொன்றிழிந்து"
என்ற ஏழாஞ்சூத்திரம்
முப்பத்தொன்பது முடிந்தது.

பாயிரமுட்பட திருவிருத்தம்-உகக.

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்கம்.

## ௯—சூ. ஆன்மசுத்தி இலக்கணம்.

### மறைஞானதேசிகர் உரை.

மேலிச்சூத்திர மென்னுதலிற்றோ வெனின்? முற்கூறிப்போந்த வான்மாக்களுக் கந்த நிலைநிற்கக் கூடாத படியினாலே யுபாய நிட்டையா லான்மசுத்தி யுணர்த்துத நுதலிற்று.
இத்தலைச் செய்யு ளென்னுதலிற்றோ வெனில்? 'நேசமொடுந்திருவடிக்கீழ் நீங்காதே தூங்க' என்பதனை விரித் துணர்த்துத நுதலிற்று.

பாசஞா னத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே, நேசமொடு முள்ளத்தே நாடிப்பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதி, னாசைதரு முலகமெலா மலகைத்தேராமென் றறிந்தகல வந்நிலையே யாகும்பின்னு, மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலாமோட. (௧)

(இ-ள்.) பாசஞா னத்தாலும் — மேலான கர்த்தாவைச் சுத்த மாயாகாரிய மாகிய வாக்குக்க ளாலும் மாயாகாரிய மாகிய கலாதி ஞானத்தினாலு மறிவது
பசு ஞானத்

தாலும் பார்ப்பரி யபரம்பரனை — பாச ஞானம். ஆன்ம போதத்தாலு மவன் சுத்தனுதலா லறியப்படான். அஃதெக்கார ணத்தா னெனின்? இவ்விரண்டினுலு மவ னையறிந்து முத்தி யடையப் படாமையால். ஆனுற் காணும்படி யாதெனின்?

பதிஞானத்தாலே நேசமொடுமுள்ளத்தே நாடிப் பாத நீழற்கீழ் — ஆன்மா வானவ னவன்கண்வைத்த நேச த்தாற் சிவஞானமிடமாகச் சிவனைத் தரிசி த் தவனது திருவடிநீழலிற் பொருந்தி யத னைவிடாமல் நிற்கி லப்பொழு தான்ம சுத் தியாம்.

நில்லாதே நீங்கிப்போதின் — உலக மயக்கத்தா லதனைப் பொருந்தாம ற் பிறிந்து விடுவானுகில்,

ஆசைதருமுலகமெலா மலகைத்தேரா மென்றறிந்தகல வந்நிலையேயாகும் — மெய்யுணர் வில்லாமையா லிவனுக்கு மெ ய்ப்பொருள்போலத் தோன்றும் பிரபஞ்ச த்தை நிலையல்லவென்று கருதி யவ்வஞ்ஞா னத்தைவிட்டு நிற்பையாகி லுனக்கு முற்கூ றிய வுண்மையான நிலைமையுண்டாம். இது வும் நிற்கவரிதாகில்,

பின்னு மோசைதருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க வுள்ளதே புகுந்தளிப்பனூனமெலா மோட — அந்த நிட்டை கூடாதபின்பு ஸ்ரீ பஞ்சாக் கரத்தை யந்த வனனத்துக் குணடான மா த்திரை முதலாயின வற்றை யதுவதுவாக வே யறிந் தோசை யேறுமற் குறையாமற் க ருதி யுச்சரிக்கி லப்பொழுது வாச்சிய வாச கத் தன்மைப் பொருளாய் நின்ற சிவன் று னே யான்மாவின்கண் வந்து பிரகாசித் தா ணவாதி குற்றங்களைப் போக்கிச் சுவாநந் தானுபூதியைக் கொடாநிற்பன். எ-று.

விதிப்படி யென்பதனைப் பின்னாகக் கூறுகின்றார்.
நில் ஏவல் வியங்கோள்.
அரன் எழுவாய்.
புகுந்திடுவன் பயனிலை.
இதற்குச் சிவஞானபோதத்துஞ் சுவாயமபுவத்து மறிக.
பிரணவத்துட னைந்தெழுத்தென ஷேதியிருக்க விதனைக் கூறிய தென்னையெனில்? அது பொதுவிதியாக வேதாகமங்களிற் கூறினார்.
'வேதநான்கினு மெய்ப்பொருளாவது, நாதநாம நமச்சிவாயவே" எனவறிக.
இதற்குச் சிவதருமோத்தர மெனவறிக. (௬)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடு முள்ளத்தே நாடி - சுத்தாசுத்த மாயா காரியங்களுடனேகூடி யறியுமறிவினாலு மவையிற்றுக்களை நீங்கிய ஆன்ம வ்ருத்திஞானத்தினாலும் காண்பதற் கரிதாகி பரமாகிய சுத்தமாயைக்கு மேலான சிவனை சிவஞானத்தினாலே சிவராகத்துடனே யானமாவினிடத்திலே வேறறக்கண்டு அவனே தானாய்நிற்பது நிட்டை, அப்படி நின்றவன சுத்தான்மா.—

த்ரூக்ஸம் ஸாயம்ஸவே — வதி ஜாதெநக ஹ்ருத்ம் தித்ஸிரஷா உமெஹாவர । தெநதக்ஜாந நிருக்த பஶ்ஜாதேதெவாசெதஸ்ஸெயே: ॥

பாதநிழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதின் - பாதமென்பது பாசநாம். நிழலென்றது தாபத்திரயத்தையும் கெடுப்பதாத

லால் கௌணமாகச் சொன்னது. சிவாநந்தானுபவியாக நில்லா மனீங்கி யந்தக்கரண வழித்தாகவரில்,—

ஆசைதரு மூலகமெலா மலகைத்தேராமென் றறிந்தகல வந்நிலையேயாகும் - ஆன்மாக்களுக் கிச்சையைக் கொடுக்கு மூலகங்களெல்லாம் பேய்த்தேர்போல அசத்திய மென்பதை யறிந்து பிரபஞ்ச வாசனையை நீங்கி நிற்கவே முன்சொன்ன நிஷ்டைகூடும்,—

பின்னும்-இதன்றியும்,—

ஓசைதருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட - அஞ்செழுத்தின் வாசகத்தால் உண்டாம் வாச்சியங்களை யவரவர்கள் வர்ணத்துக்கு மாசிரமத்துக்குஞ் சொன்னபடியே * யனுசந்தானம்பண்ணக் காஷ்டத்திலே அக்னி பிரகாசித்தாற்போலச் சிவ ஞானமாவிவிடத்திலே பிரகாசித்து பாசத்திரயங்களும் போம்படிக்கு ஞாநாநந்தானுபவியாக பிரகாசிப்பதென் றிதன்பொருள்.

* அநுசந்தானம் - ஜபஞ்செய்தல்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

முன் சொல்லிய சமாதி நிலை குலைந்தாற் பின் கூடுமுபாயங் கூறுகின்றார்.

பாசஞானத் தாலும்-புத்தியாதி தத்துவ தாத்விக விருத்தி ஞானத்தினாலும்,—பசுஞானத்தாலும் - பாசவிருத்தி விளக்கிய ஆன்ம சிற்சத்தி விருத்தி ஞானத்தினாலும், பிரம நானென்றாது நான் பிரம மென்னும் பசுவாசனை தாக்கும் விபரீதஞானத்தினாலும்,—பார்ப்பரிய பரம்பரனை - காணுதற்

சரிய செயற்கைச் சிவகரண மாகிய பாச ஞான விஷய சகள சதாசிவா தீத நிஷ்கள பர சிவனை,—பதிஞானத்தாலே நேச மொடு முள்ளத்தே நாடிப் பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போ தில் - ஆன்மாவிற் சாக்ஷாத் சிவ சத்தியால் விளங்கிய சிற்சத் தி விர்த்திப் பதிஞானத்தால் சாமர்த்திய மரியாதியி லறிந்து தி யானித்துச் சமாதித்துச் சாக்ஷாத் கரித்துச் சிவசத்திப் பிரபை தாரகமா யிராது விட்டுப் போதில்,—ஆசைதரு மூலக மெலா மலகைத்தேரா மென் றறிந்சகல வந்நிலையேயாகும் - பிரதிபந் தமாயிருக்கும் பிரபஞ்சமனைத்தும் கானல்போற் பொய்போல தோற்று மாயாகார நிராகாரமாய் நோக்கத் திரும்பச் சமாதி நிலைதானேயாம்.—பின்னும் - அதுவன்றியும்,—ஓசைதரு மஞ்செ ழுத்தை விதிப்சடியுச்சரிக்க - சிவமுதல் நமவீறுகச் சபிக்க,—ஊ னமெலாமோட - நமப் பதார்த்த பாசம் பறிய மிஞ்சிநின்ற,— உள்ளத்தே-சுத்தபஞ்சாக்கரததில் நடுவெழுத் தரைக்குஞ் சின் மாத்தி ரான்மாவிலே,—புகுந்து - முதலெழுத் துரைக்கும் பா தத்தைப் பதித்து,—அளிப்பன - ஈற்றெழுத துரைக்குஞ் சிவத் தை யிணக்குவன்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேலைச் சூத்திரத்தாற் பேறுமுதலிய வற்றை யுணர்ந்தா னுக்கு அப்பேறு பயப்பதாகிய சாதனஞ் செய்யுமாறு வகுத்து க் கூறுதற் கெழுந்தது ஒன்பதாஞ் சூததிரம்.

மேற் கூறியவாற்றால் ஏனை பிருவகை ஞானங்களானு மெ ய்துதற் கரியனாகிய பரம்பரனை அவனது திருவடிஞான மொ ன்றானே தன்னறிவின்கண்ணவைத் தாராய்ந்து நேசமொடுந் திரு

வடிக்கீழ் நீங்காதே தூங்கப் பெருதவழிப் பற்றுச் செய்தற் கேதுவாகிய எத்திறப்பட்ட பிரபஞ்சமும் நின்றுழி நில்லாது பெயருங் காலன்றோரீ ரியல்பினவாகக் கண்டு கழிப்பவே, அத்திருவடி ஞானம் விளங்கி யந்நிலை கைகூடப் பெறும். அதன் பின்னு மவ்வாறு பாசத்தை யொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்ட காட்சி யொரோவழி வாதனைபற்றிச் சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்தை யவ்விதிப்படி யறிந்து உச்சரிக்க வென்பதாம்.

ஈண்டு ஊன மென்றது வாதனா மலத்தை.

நில்லாதே நீங்கிப் போதி னெனவே, அவ்வாறு நிற்றலு மருவாத முகத்தா னீண்டு விதிக்கப் பட்ட தாயிற்று.

ஆகவே இச்செய்யுள் முதனூ லொன்பதாஞ் சூத்திரம் போல முக்கூற்ற தாயவாறு கண்டு கொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இந்திரியங்களைக் கொண்டு சிவனை யறியுமதொழிந்து இந்திரியங்கணீங்கி யறியவேணு மென்பா னேனென்ற சங்கிராந்தவாதியை நோக்கி மே லருளிச்செய்கிறூர்

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரியபரம்பரனை - இந்திரியங்களா லறியும் பாசவறிவாலும் இந்திரியங்கள் கூடினலொழிந்து அறியாத பசுவறிவாலும் அறிதற்கரிய வெல்லாத்துக்கு மேலாயிருக்கிற பரமேஸ்வரனை,—பதிஞானத்தாலே நேசமொடு முள்ளத்தே நாடி - அந்தப் பதிஞானத்தாலே பதியை விருப்பத்துடனே ஆன்மாவிலே யாராய்ந்தறிந்து அவனுடைய திருவடிநிழலிலேநிற்க முன்சொன்ன நிலையாம்;

பாதநிழற்கீழ நில்லாதே நீங்கிப்போதின் - இப்படித் திருவடி யினகீழ் நில்லாமல் வாதனையாலே யிந்த நிலையும்நீங்கிப் போ துவனாகில்,—ஆசைதரு மூலகமெலா மலகைத் தேரா மென் றறிந்தகல வந்நிலையே யாகும்பினனும் - ஆசையை யுண்டாக் குகிற பிரபஞ்சமெல்லாம் பேய்த்தேர்போல நிலையல்லவென றறிந்து விட்டுநீங்கி முன்சொன்ன நிலைகூடு. இந்த நிலைகூடா தாகில்,—ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்கி லுளளத தேபுகுந்தளிப்பனூனமெலாமோட - வேதாகமங்களிலே சத்தி யமாகச் சொல்லப்பட்ட பஞ்சாட்சரத்தி னுண்மையை ஆசா ரியனாலேயறிந் துச்சரிக்கில் அநதப் பரமேசுவரன தானே கு ற்றத்தையுடைய பாசங்களெல்லாம் ஓடிப்போம்படி ஆன்மா வுக்குப் பிராணனாய் நினறநிலையிலே பிரகாசித்து இரக்ஷிப்பாநி ற்பன்.

இதனாற் சொல்லியது, ஆன்மாக்கள் தீக்ஷிதரான பினபு தேகத்திலே நிற்கிறபடியாலே பாசவாதனையைப் பல பிரகார த்தாலுஞ் சுத்திபண்ணிகொள்ளு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் - மேற்கூறிடவா று லேனைப் பாசஞானம் பசுஞானங்களாகிய இருவகை ஞான ங்களாலும்,—பார்ப்பரிய பரம்பரனை - எய்துதற் கரியனாய பர ம்பரனை,—பதிஞானத்தாலே யுள்ளத்தே நாடி - அவனது திரு வடிஞானமொன்றனானே தனனறிவினகண்வைத்து ஆராய்ந்து,— நேசமொடும் பாதநிழற் கீழ் - நேசமொடுந் திருவடிக்கீழ்,— நீங்கி நில்லாதே போதின் - நீங்காதே தாங்கப்பெறுதவழி,— ஆசைதரு மூலகமெல்லாம் - பற்றுச் செய்தற் கேதுவாகிய வெ

த்திறப்பட்ட பிரவஞ்சமும்,—அலகைத்தேரா மென் றறிந்தகல— நின்றழி வில்லாதபெயருங் கானற்றேரி நியல்பினவாகக் கண்டு கழிப்பவே,—அந்நிலையே யாகும் - அததிருவடி ஞானம் விளங் கி யந்நிலை கைகூடப்பெறும்.—பின்னுமுள்ளதவே புகுந்தளிப்ப ஞானமெலாம் ஒட - அதன்பினனு மவ்வாறு பாசத்தை யொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்டகாட்சி யொரோவழி வாதனைப்பற்றிச் சலியாமைப் பொருட்டு,—ஔைசதரு மஞ்செழு த்தை விதிப்படி யுச்சரிக்க - அப்பொருள் பயக்குந திருவஞ்செ ழுத்தை யவவிதிப்படி யறிந்து உச்சரிக்க.

இச்செய்யுள் முதனூல் ஒன்பதாஞ் சூத்திரம்போல முக் கூற்றதாயவாறு கண்டுகொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேனிறுத்த முறையானே தொகுத்தவற்றை வகுத்துச் சததப்பிரமவாதியைமறுத் துணர்த்துகிறார்.

வேதசாத் திரமிருதி புராணகலைஞானம் விரும்ப சபை வைகரியா தித்திறங்கண்மேலா, நாதமுடி வான வெலாம் பாசஞான நணுகியான் மாவிவைகீழ் நாட லாலே, காதலினு னன்பிரம மென்னுஞானங் கருதுப சு ஞானமிவ னுடலிற்கட்டுண், டோதியுணர்ந் தொன றென்று வுணர்ந்திடலாற்பசுவா மொன்றுகச் சிவனி யல்பி னுணர்ந்திடுவன்காணே. (உ)

(இ-ள்.) வேதசா சுத்தமாயா சன்னியமாகிய வைகரியிற் த்திரமிருதி றோன்றிய நாலு வேதமுந் தர்க்க முதலிய புராணகலை வாறு சாஸ்திரமு மட்டாதச புராணமும்

ஞானம் விரும்ப சவை வைகரியா தித்திறங்கண்மே லா நாதமுடிவா னவெலாம் பாச ஞானம்

கிதை முதலிய வறுபத்தநாலு கலைஞானமும் எல்லாரு நாடோறு முச்சரிக்கப்பட்ட அக்ஷ ரமைந்திர முதலாக நாதமீருக வுள்ளவைக ளெல்லாம் பாசஞானம். அஃதெக்காரண த்தா லெனின்?

நணுகியான்மா விவைகிழ் நாட லாலே

இந்தச் சத்தப்பிரமத்தை யறிந்த வான் மாவுங் கீழ்வந்து சுகதுக்கமாகிய விருவி னைப் பலங்களைப் புசிக்க நாடுகையினாலே யிதனைப் பிரதிஞ்ஞா ஏதுவினாலு மறிவித் ததெனவறிக.

காதலினா ஞா ன்பிரம மென்னு ஞானங் கருதுப சுஞானம்

வேதாந்தி விருப்பத்துடன் நான்ருனே பிரமமென வகங்கரித்துக்கொண்டு சொல்லு கிற ஞானமும் பசுஞானமென் றறியப்படும். அந்த அறிவையு மாகாதென்று கழித்த தெக் காரணத்தா லெனின்?

இவனுடலிற் க ட்டுண் டோதியு ணர்ந் தொன்ரு ன்ரு வுணர்ந் தி டலாற் பசுவாம்

இந்த வான்மா வானவன் தனக்கென ஒரு செயலில்லாமையாற் கன்மத்துக் கீ டாக வொருவன் கரசரணதிகளைக் கூட்ட வதிற் கட்டுப்பட்டுக்கொண்டு சகலசாஸ்தி ரங்களை யோதி யதன்பொருளை யறிந்திருக் கவு மிந்திரியங்க ளெல்லாவற்றையு மொரு காலத்திற் ருெருக வறியமாட்டாதபடியா லொற்றி யொற்றி பொன் ருென்ருகவே பாசமேலீட்டா லறிகையாலும் பரவச மாய் நிற்கையாலு மிதனைப் பசுஞான மென்ருர். இந்த விரண் டுஞானமு முத்திக்குக் காரண[illegible] லஃதியாதெனில்?

ஒன்றாகச் சிவ அந்தச் சிவனுக்கு மலமில்லாமையாலும் ச
னியல்பி னுணர்ந் ர்வஞ்ஞனாகலாலு மிந்தப்பிரபஞ்சத்திலுண்
திடுவன் காணே. டானவான்மாக்கள் செய்த வினைப்பலத்தை
யொருகாலத்திலேதானே யறிந் துள்ளபடியே பலத்தைக் கொ
டுக்கை. பதிஞானமவாது பிரகாசத்தைப் பெற்றவர்கள் ஞான
திருட்டியாற் காண்பார்கள். எ-று.

ஏகார மீற்றசை.
சிவன எழுவாய்.
உணர்ந்திடுவன் பயனிலை.
இதற்குச் சிந்தியத்தும் நிசுவாசத்துமறிக.
மேற் பதிஞான முணர்த்துகையா லாண்டுக்காண்க. (உ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பாச பசு பதி ஞானங்களினுடைய வியல்பு கூறுகின்
றது.

வேத சாஸ்திர மிருதி புராணகலை விருப்பசபை வைகரியா
தித்திரங்கண் மேலான நாதமுடிவான வெல்லாஞானமும் பாச
ஞானம்-வேதசாஸ்திர மிருதி புராணகலை விரும் பசபை வைக
ரியாதித்திரங்கண் மேலா நாதமுடிவாக வுண்டானவையிற்று
க்களினாலே யுதிக்கும் ஞானமெல்லாம் பாசஞானம். அதேனெ
ன்னில்?—

நணுகி யான்மா விவைகீழ்நாடலாலே-ஆன்மா சிவஞானத்
தைப் பொருந்தி யிவையிற்றுக்களை யெல்லாந் தனக்கு வியாப்
பியமாகக் காண்கையாலே.—

நானபிரம மென்னுஞானம் - பாசத்தை நீங்கி பதிஞான
த்தினாலே ஆன்ம தரிசனப்பட் டுள்ளளவில் பதிஞானத்தினு

லே தரிசனப் பட்டோமென்பத றியாமலிதுநானல்ல விதுநா னல்லவென் றல்லாத்தையுந் தள்ளிவந்தோம். இந்த ஸ்வரூப ஞானத்தை யல்லவென்று தள்ளப் போகாதபடியாலே யிதுநா ன் இதர்க்குமே லொன்றுமில்லை யானபடியாலே நானேபிரம மெனபது பசுஞானம்.

பசுத்துவமாவது அஞ்ஞானம். ஞானஸ்வரூபியா யிருக்கிற ஆன்மாவை பசுவென்பானேன?—

இவனுடலிற் கட்டுண்டோதிபுணர்ந் தொன்றொன்று யுணர்த்திடலாற் பசுவாம் - இவ்வான்மாவானவன ஸ்தூலசூக்கும தேகங்களினாலே கட்டுப்பட்டு சாஸ்திரங்களைப்படித்த தனாலே சிறிதறிதலினாலும் ஒவ்வோரிந்திரியங்களைப் பற்றி யொவவொரு விஷயங்களாகவே யறிகையினாலு மான்மாவுக்குப் பசு வென்று பெயராம்.

ஒன்றாகச் சிவனிபல்பி னுணர்ந்திடுவன் காதலினாற்கருது காணே - ஒதலு மொருதரா லுணர்தலு மொன்றொன்றா யறிதலுமின்றி சிவன் சுவபாவ நிமலஞான சுவரூபியாகையாலே சகாலத்திலே யெல்லாத்தையும் யதர்வத்தாகவறிவன். ஆதலாலந்தச்சிவனை வேறற வடையவேணுமென்னு மாசையுடனே விசாரிப்பாயாக வென றிதன்பொருள்.

காணென்றது மாணாக்சனமுன்னிலை.

ஏகார மீற்றசை.

கருது என்றது கருதுவது கரணம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவப்பிரமாணமாய்ச் சுத்த கோடியிற் பிரவேசிக்கும் சிவாகம மந்தமாஞ் சாஸ்த்திரங்களும், பிராசாத மந்திர மந்தமாம்

மந்திரங்களும், சிவதத்துவ மந்தமாந் தத்துவங்களும், தத்துவ முதலியவற்றின் விருத்திகளும், பாச ஞானமென்றும்; நான் பிரமமென்பது முதலிய ஞானம் பசு ஞானமென்றும் படிக்கின்றார்.

இவை நணுகியான்மாக்கிழென மாறுக. அந்தப் பசுவானவன்.—சிவனியல்பின் - சிவதத்துவம் பெற்ற காலத்தில் பதியாய்,—ஒன்றாக - உள்ளபடி யொருமிககு எல்லாப் பொருள்களையும்,—உணர்ந்திடுவன் காணே - அறிவன் றானே! சிவனொன்றாக வியல்பினுணர்ந்திடுவனென வுரைக்கிலுமாம்.

மற்றைய வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிப்போந்த மூவகை ஞானங்களுட் பாசஞானமாவது நால்வகை வாக்கின் பகுதிய வாகிய வேதமுதலிய சொற் பிரபஞ்சமும் நிலமுதல் ஞுசமீறாகிய பொருட் பிரபஞ்சமுமென்னு மிவைபற்றி நிகழு மேசதேசஞான மெனதது மாமெனவும், ஏனைப்பசு ஞானமாவது இவற்றைப் பொருந்திய வானமா இவை யனைத்துந் தன்கீழ் வியாப்பிய மெனவறிந்து நீங்கித தானவற்றிற்கு மேற்படுதலான் அங்ஙனமதுபற்றி நிகழ்வதோர் செருக்கால் அநாதி முத்தனைப் போல முத்தனாகிய யானு மவ்வாறு பிரமமாவே னெனச் சடிதியின் மதிக்க வருவதோர் சிவசமவாத ஞான மெனவு முணர்க வென்பதாம்.

ஞான வேற்றுமை தெரித்துக் கூறியவாறு.

அற்றேல், அறிந்து நீங்குதலின வேற்றுமை யின்மையாற் சமப்பிரம மொன்றற் கிழுக் கென்னை யென்னு மாசங்கை நீக்குதற் பொருட்டு அநாதி முத்தனோடு ஆதி முத்தனிடை யறிந்து

நீங்குதலின் வேற்றுமை பெரிதாதல் காட்டுவார், இவனுடலிற் கட்டுண் டோதியணர்ந் தொன்றென்று வுணர்ந் திடலாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந் திடுவன் காணேயென்றார்.

பசுத்துவ நீங்கிய வழியு மவ்வாறு மதித்தல் பசுத்துவ வாதனை பற்றி யாகலானது பசுஞானமேயா மென்பது.

நான்பிரம மென்னுஞானம் ஏகான்ய வாதம்பற்றி நிகழுஞான மெனினுமாம்.

நாடலா லெனவும் உணர்ந்திடலா லெனவும் உணர்ந்திடுவ னெனவுங் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

நாதமுடி வானவெல்லா மென்றது மது.

நணுகிய வென்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற் றொக்கது, ,,தகுவரியன்பு" என்றாற் போல.

ஒன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே என்றதனாற் பதிஞானத் தியல்பு இது வென்பதூஉம் பெறப்பட்டது.

அஃதங்ஙனமாக வைகரி யாதித் திறங்க ளெல்லாம் பாசஞானமெனக் கழிப்பின், வைகரிபாதித் திறத்துடபட்ட ஞான நூற்னே யோத லோது வித்தன் முதலியன ஞான பூசையென மேற்கூறியது போலியாய் முடியும் போலு மெனின்? முடியாது. பதிஞானம் விளங்குதற்கு ஏதுவா முகத்தாற் பயன்படுத லுடைமையின்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிச் சொல்லப்பட்ட பாசஞானம் பசுஞானம் பதிஞானமென்னு மூன்றினது முறைமையு மெப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விரும்பசவை வைகரியாதித்திறங்கள்மேலா நாதமுடிவானவெலாம் பாசஞானம்- நாலுவேதங்களும் பலசாஸ்திரங்களு மிருதி புராணங்களும் பலகலை ஞானங்களும் விரும்பத்தக்க வசனையும் வைகரி முதலாக நாலுவாக்குகளும் எல்லாத்துக்கு மேலான நாதமீறாக வுண்டாகப்பட்ட விவையெல்லாம் பாசஞானமாம். இவையிற்றை யெல்லாம் பாசஞானமென்று சொல்லவேண்டியது,— நணுகியான்மாவிவைகீழ் நாடலாலே-ஆன்மா விவையிற்றைப் பொருந்தி அதோ மாயையிலுண்டாகிய திருவித காரணங்களினு லாறியந்து அறிகையினாலே,—காதலினால் நான்பிரம மென்னுஞானங் கருதுபசுஞானமாகும் - எல்லா தத்துவங்களுங் கழன்றவிடத்து ஆசையின் மிகுதியினாலே நானே கர்த்தாவென்று சொல்லப்பட்ட வறிவு சுட்டறியும் பசுஞானமாகும். அதெங்ஙனே யென்னில் ?—இவனுடலிற்கட்டுண் டோதியுணர்ந் தொன்றொன்றாவுணர்ந்திடலாற்பசுவாம் - இந்த வான்மா கன்மத்துக் கீடாக வொவ்வொரு தேகங்களிலே கட்டுப்பட்டு ஒன்றை யறியுமிடத்து ஒருவராலே சிலவையிற்றைக் கற்றறிந்தும் விஷயங்களையறியு மவதரத்து வொவ்வோ ரிந்திரியங்களினாலே வொவ்வொரு விஷயங்களை யறிந்து நிற்கையால் இவனைப் பசுவென்று சொல்லப்படும்,—ஒன்றாகச்சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே - இப்படியன்றியே பரமேஶ்வரன் தனனுடைய ஞானத்தினாலே சர்வத்தையும் ஏககாலத்திலே ஒருவரறியாமல் தனக்குள்ள வியல்பாகத் தானே யறிந்துநிற்பனென் றறிவாயாக.

இதனாற் சொல்லியது, வேதசாஸ்திர முதலானவையெல்லாம் ஆன்மபோதத்தினு லறியப்படுகையினால் பாசஞானமென்றும் கருவிகளெல்லாங் கழன்றவிடத்து நானே கர்த்தாவென்று மறிவு ஒரு சரீரத்திலே கூடிநின்று ஒன்றொன்றாக வறிகையி

னால் பசுஞானமென்றும் பதியறிவானது ஒருத்த ரறியாமல் சர்வத்தையு மொருகாலத்திலே தானே யறிகையினாலே பதிஞான மென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பாசஞானம் - மேற்கூறிப்போந்த மூவகை ஞானங்களுட் பாசஞானமாவது,— வைகரியாதித்திறங்கள் - வைசரிமுதலிய நால்வகை வாக்கின் பகுதியவாகிய,—வேதசாத்திர மிருதிபுராணகலைஞானம் விரும்பசமை-வேதங்களுஞ் சாதிரங்களு மிருதியும் புராணங்களு மற்றைக் கலைஞானங்களும் விரும்புகின்ற அசமையுமாகிய சொற்பிரவஞ்சமும்,—மேலானாதமுடிவான வெல்லாம் - மேலாகிய நிலமுத னாதமீறாகிய பொருட் பிரவஞ்சமும் என்னு மிவைபற்றி நிகழு மேகதேச ஞானமனைத்துமாம்,—கருது பசுஞானம் - கருதுகின்றவேணைப் பசுஞானமாவது,—நணுகியான்மா விவைகீழ்நாடலாலே - இவற்றைப் பொருந்திய வான்மா இவையனைத்துந் தனகீழ் வியாப்பிய மென்றறிந்து நீங்கித் தானவற்றிற்கு நேர்படுதலால்,—காதலினா னான்பிரம மென்னு ஞானம்,—அங்ஙனமதுபற்றி நிகழ்வதோர்செருக்கா லநாதி முத்தனைப்போல முத்தனாகியயானு மவ்வாறு பிரமமாவே னெனச் சடுதியின் மகிக்கவருவதோர் சிவசமஞானமாம். அற்றேலறிந்துநீங்குதலின் வேற்றுமை யின்மையாற் சமப்பிரமமெனற் கிழுகென்னை யெனு மாசங்கையை நீக்குதற் பொருட்டு அநாதிமுத்தனோடு ஆதிமுத்தனிடை யறிந்து நீங்குதலின் வேற்றுமை பெரிதாதல் காட்டுவார்,—இவனுடலிற் கட்டுண்டு - இவ்வான்மாத் தூலசூக்கும தேகங்களாற் கட்டுண்டலானும்,—ஒதியுணர்ந் தொன்றொன்றாயுணர்ந்திடலால் - நூலுணர்வானா

ணர்த்த வுணர்த்தலானும் ஒவ்வொரு இந்திரியங்களினு லொவ்வொரு விடயங்களை யுணர்தலானும்,—பசுவாம்- ஏகதேச அறிவையுடைய பசுவெனப்படும். பசுத்துவ நீங்கிய வழியு மவ்வாறு மறித்தல் பசுத்துவவாதனையே பற்றி யாகலா னது பசுஞான மேயாம்,—சிவன்-பதிஞானமாவது,—இயல்பினுனன்றாக வுணர்ந்திடுவன்காணே,—ஒருவனுணர்த்தவுணர்தலின்றித் தானேமுழுவதுமறிந்தாங் கறியும்பேரறிவெனபதை யுணர்கவென்பதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் பாடாணவாதி நீர் பதிஞானத்தினாலே பதி தரிசனப படுவது முத்தியென்றீர், அஃதன்றுகாண். ஞானஞ் சூனியம் பிறந்திருக்கிறதே முத்தியென்ன, அவனை மறுத துணர்த்துகின்றார்.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னிற் கதியாகுஞ் சினைமுட்டை கருமரத்தினுயிர்கண், மரணங்கொண்டிடவுறங்கி மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தையடையச் சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ் சமாதி தவிராது மலமிதுவும் பசுஞானமாகு, மரணங்களெரித்தவன்ற னடியையறிவிறந்தங் கறிந்திடர் செறிந்ததுக ளகற்றிடரே. (௫)

(இ-ள்.) கரணங் கள் கெட விருக்கை முத்தியா மெனனில் — கருவி கரணங்கள் ஜீவியாமற் றுக்கற விருப்பதுகாண் முத்தியென்று நீ சொல்லில்?

கதியாகுஞ் சினைமுட்டை கருமரத்தி னுயிர்கள

அப்பொழுது மீனிற்றோன்றிய சினையு மண்டத்திற் றோன்றிய வுயிர்களும் உத்பீஜத்திற்றோன்றிய பெரிய மரங்களும் இவையெல்லாததினு மிருக்கு மான்மவர்க்கங்க ளெல்லா மோக்ஷ மடையவேண்டும். இஃதன்றி,

மரணங்கொண்டிட வுறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ணவல் விடத்தையடைய

இயற்கையாற் றேகம் விட்டவர்களும் நித்திரைகொண்டு கிடந்தவர்களும் சன்னிவாத முதலியவற்றால் மயக்கம் வந்து கிடந்தவர்களும் மரமுதலியவற்றி னின்று விழுந்து மூர்ச்சித்துக் கிடந்தவர்களும் யோகசாமர்த்தியத்தாலே பிராணவாயுவைத் தம்பித்துக்கொண் டிருந்தவர்களும் பாம்பு முதலான விஷமேலீட்டினாலே யறிவினறிக் கிடந்தவர்களு மாகவிவர்களெல்லார்க்குங் கரணங்கள் ஜீவியாதிருக்கையால், இவர்களெல்லாரு முத்தியை யடையக் கண்டிலங்காண். ஆதலாலப் படியன்று.

சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ் சமாதி

ஒரு நாழிகைக் கெண்பத்தொரு அடியாய்நின்ற நிழல் பொழுதேறிக் காலஞ் செல்லக் குறைந்து குறைந்து வந்து மத்தியானகாலத்திற் றானவைத்த அடியிலே நிழலடங்கினாற்போலக் கருவிகரணங்களனைத்து நிற்கின்ற வான்மஞானத்தைப் பொருந்தி யவற்றி னுண்மைகளை யுணர்ந்து அவ்வழியின்க ணின்று பிரிந்துபோந்து தன்னுண்மையின்கண் ணடங்கித தளராதிருத்தலே முத்தி யாகுமென்று நீ சொல்லில்?

தவிராது மலமிதவும் பசுஞா

நீ யிப்படிச் சொல்லுகிற தெல்லாம் பசுஞான மாய்விடு மாதலா லஃதன்றி யாணவ

ணமாகும் மும் விட்டு நீங்காது, அஃ துண்டாகவே வி
ஞ்ஞான கலத்துவமும் கூடாது, அஃ தில்
லாமையாற் பரமுத்தியு முண்டாகாது காண். அஃ தடையும் வ
ழி யாதென்று கேட்கிறாயாகில்?

அரணங்களெ
ரித்தவன்ற னடி
யை யறிவிறந்த
ங் கறிந்திடாசெ
றிந்ததுகளகற்றி
டீரே.

திரிபுரத்தை யெரிசெய்த சிவனது திருவடியைப் பதிஞானத் துடனேபொருந்தி நிஷ்டையைப் புரிந்திருங்கள். அப்பொழுது உங்களிடத் துண்டாகிய மலமும் போய்விடும். அது போனவாறே சாயுச்சியபத்தையு மடைவீர்கள். எ-று.

இதுவும் என்றவும்மை யெதிரது தழீஇயவெச்சம்.

ஏகாரம் ஈற்றசை.

இதற்குச் சிந்தியாகமம். (௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

மேல் அந்தக்கரணங்கள்கெட வோரறிவுமற் றிருப்பதே முத்தியெனனும் வைசேஷிகன வாக்கியத்தை மேலனுவதித்து மறுத்தல்.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னில் - கரணங்களெல்லாங்கெட வோரறிவுமறறுக் கல்லுப்போலே யிருப்பது மோக்ஷமென்று சொல்லில?—

கதியாகுஞ் சினைமுட்டை கருப்பரத்தினுயிர்கள்-சினையிலே யிருந்த ஆன்மாக்களுக்கும் முட்டையிலேயிருந்த ஆன்மாக்களுக்கும் § கர்பபாசயத்திலே யிருந்த ஆந்மாக்களுக்கும் மரமுதலா ஸ்பதகிய ரங்களுக்கும் மோக்ஷமாக வேண்டும். இதன்றியும் மனுஷ்ய தேகத்திலே.—

மரணங்கொண்டிட வுறங்கிமயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம் பனைபண்ண வல்லிடத்தையடைய - மரிப்பதற்குப் பத்தாம வஸ்த்தைவந் தோரறிவு மற்றிருந்த ஆன்மாவுக்கும் சுழுத்தியி லே யறிவற்றிருந்த ஆனமாவுக்கும் மயங்கி மூர்ச்சைவந்தபொழு து அறிவற்றிருந்த ஆன்மாவுககும் கன்மயோகத்தினாலே வாயுஸ் தம்பிச் சறிவற்றுக் காஷ்டம்போலே யிருந்த ஆன்மாவுச்கும வ லிதாகிய விஷயங்களைத் தினமுதல் பாம்பு கடித்தாதல் தலைம ண்டைகொண் டறிவற்றிருந்த வான்மாவுக்கும் மோக்ஷமாகவே ணும். கதியாகுமென்பது முதனிலைத் தீபம். உயிர்களென்பது நடுநிலைத் தீபம்.—

சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ் சமாதி - தன் னையறியாமலடைந்த ஞானோபாவமாகிய வஞ்ஞானத்தை யென் னவுதாரணமாகச் சொல்லி மறுக்கின்றார். தேகத்திநிழலானது வரவரக்குறுகி மத்தியானமான பொழுது தாட்கீழி னடங்கினா ற்போல ஞானத்தினாலே மனோவிர்த்தி ஞானங்களை விட்டு வி ட் டவையிற்றுகளை நீங்கின ஞானமும் தன்னிடத்திலே யொடு ங்க வோருணர்வு மற்றிருப்பது சமாதி. அந்தச் சமாதியேயா யிருக்கு மோக்ஷமென்று சொன்னே னென்னில்?—

தவிராது மலமிதுவும் பசுஞானமாகும் - இந்தச் சமாதியி னாலே அஞ்ஞானம் நீங்காது, இதுவும் பசுஞான மாகையால். மேலெவ்வா றெனனில்?—

அரணங்களெரித்தவன்ற னடியை யறிவிறந்தங் கறிந்திடிர் செறிந்தக லைகற்றிடரே - முப்புரத்தையும் நகையினாலே யெரி த்த பரமேசுரனைச் சரணமாக வடையு மதனா லும்மைப் பொ

ருந்தின வாணவமாயை காமியங்களை நீக்குவன். இவ்வாறு நீக்கிக்கொள்ளுங்கோளென் றிதன்பொருள்..

ஏகார மிரண்டும் எதிர்மறை.

§ கர்ப்பாசயம், சிசுவிருக்கும் பை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

அந்தக்கரண விருத்தி சமூல நிவிர்த்தியே சமாதியும் முத்தியும் தற்பொரு ளறிவு பிறப்பொரு ளறிவு முகிழ்க்கும் ஸ்வவேதன சிவ வேதனுதி வியத்தி வேண்டியதில்லை யெனும் பாஷாண வாதி முதலோர் மதம் பாஷித்துத் தூஷிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

அங்ஙனம் நான்பிரமமெனநிகழுஞானமே யன்றி ஆன்மாவினைவகிழ்நாடி நீங்குதன மாத்திரையே முத்தியாதலமையுமென வதற்கு முன்னாக நிகழும் பாடாணவாத ஞானமும், சேய்மைக்கட் சென்ற வொருவனிழல் உச்சிப் போதின்க ணங்ஙனஞ் சேறலொழிந்த அவனடியுள்வந் தொடுங்கினாற் போலக் கரணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவம் வந்துழி யங்ஙனஞ் சேறலொழிந்து தன்மாட்டுவந் தொன்றி நிராதாரமாய் நிற்குமதுவே முத்தியாதலமையுமெனப் பாடாணவாத ஞானத்தின பின்னாக நிகழும் பேதவாத ஞானமு மெனவிவையுப் பசுஞானம். இவ்வாறு நிகழும் பசுஞானங்களுக் கேதுவாகிய பசு

த்துவ வாதனை இவற்றைக் கைவிட்டுச் சிவஞானத்தாற் சிவனை யுந் தம்மையு மறியப் பெற்றார்க் கன்றி நீங்காதென்பதாம்.

இதுவும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

கதியாகுமென்றது செயவென்னும் வாய்பாட்டு வினையெ ச்சங்களோடு தனித்தனி சென்றியையும்.

சினைமுட்டை கருமரத்தி னுயிர்கண் மருவவென் றுரைக்க. மருவவென்பது சொல்லெச்சம்.

• முத்தியா மென்னி லென்பதனைத் தனையடையுஞ் சமாதி யென்பதனோடுங் கூட்டுக.

ஞாயிற்றைக் காணப் பெறாதார்க்கு இருணீங்காத வாறு போலத் தனையடையுஞ் சமாதி முத்தியென்பார் சிவனையறிய ப்பெறாமையி னவர்க்கு மலந் தவிராதாயிற் றென்பது.

கதியாகு மெனவுந் தவிராதுமல மெனவும் ஈண்டுக் கூறி யது, மேலைச் செய்யுளின் உணர்ந் திடலாற் பசுவா மொன்றாக ச் சிவனியல்பி னுணர்ந்திடுவ னென்றாற் போல ஆசங்கை நீக்கி அவை பசுஞான மாதலை வலியுறுத்துதற் பொருட்டு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

கருவிகளெல்லா நீங்கி ஆன்மா வொன்று மறியாமல் பா டாணம்போலக் கிடக்குமதுவே முத்தியென்ற பாடாண வாதி யை நோக்கி யருளிச்செய்கிறார்.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியாமென்னில் - அந்தக் கரணங்கள் கெட்டுப்போய் ஒன்று மறியாமலிருக்கிறதே மோ க்ஷமென்று சொல்லில்?—கதியாகுஞ் சினைமுட்டை கருமரத்தி னுயிர்கள் - சினையிலும் முட்டையிலும் பெரியமரத்திலு முள்ள

ப்ராணிகளுக்கெல்லா மோக்ஷ முண்டாகவேணும். இதுவனறி யும்,—மரணங்கொண்டிட - ஆன்மா தேகத்தை விட்டபொழு தும்,—உறங்க - நித்திரைகொண்ட வவதரத்தும்,—மயங்கி மூர்ச்சிக்க-மிகுந்த மயக்கத்தினாலே மூர்ச்சை வந்தவிடத்தும்,—வாயுத்தம்பனைபண்ண - பிராணவாயு வியங்காமல் தம்பித்தவிடத்தும்,—வல்விடத்தையடைய - தீர்த்தற்கரிய வலியவிடத்தைப் பொருந்தினவிடத்து முத்தி யுண்டாகவேண்டும். அவ்விடங்களில் முத்தியில்லாம லிருக்கையால்,—சரணங்கள் புந்தி மூற்போற் றனையடையுஞ் சமாதி- மத்தியான காலத்தில் அடிக்குள் அடங்கின நிழல்போல ஆன்மா தன்னைப் பொருளொன் றறிகிறவிடத்திலும்,—தவிராதுமலம் - ஆணவமலம் விட்டு நீங்காது,—இதுவும் பசுஞானமாகும் - இது பசுஞானம். முத்தியைப் பெறுகிறபடி யெப்படி யென்னில்?—அரணங்க ளெறிந்தவன்றனடியை யறிவிறந்தங் கறிந்திடார் செறிந்ததுக ளகற்றிடரோ - திரிபுரதகனம் பண்ணின பரமேஸ்வரனுடைய ஸ்ரீபாதங்களைத் தற்போததைத விட்டு நின்றவிடத்திலே ஆசாரியனாலே அந்த வுண்மையைத் தரிசித்து அந்தத் தரிசித்த ஞானப் பிரகாசத்தினாலே அநாதியே சம்பந்தித்துக்கொண்டு நிற்கிற மலமாயா கனமங்களி லுண்டாகிய குற்றங்களைப் போக்கி.

"செறிந்ததுக ளகற்றிடார்" என்றது. 'க்ஷேமச் சொல்.' 'கரணங்கள் கெடவிருக்கைமுத்தி' என்ற பாடாணவாதியை மறுத்ததற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், கரணபாவ மரணங்களுமர - மேய்ந்தவர்முத்தி சேர்ந்தவரன்றே - யனையகதிக்கோர் முனைவரும்வேண்டா - தனிதருதுயர மெனுமிதுதிடமே. என்னுமது கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, கரணங்க ளொடுங்கினவிடமே முத்தியென்ற பாடாணவாதியை நோக்கிக் கரணங்க ளொங்கு

கினவிட முத்தியென்னில்? சினைமுதல் வல்விடத்தைப் பொரு ந்தினவர்க ளிறுகச் சொல்லப்பட்டவை யெல்லாத்துக்கு முத்தியுண்டாக வேணுமென்றும் அது இல்லாதபடியாலே கரண ங்கள் நீங்கினவிட முத்தி யாகாதென்றும் சிவனுடைய ஞான த்துடனேகூடி ஆன்மபோதஞ் ஜீவியாம லந்த ஞானத்தாலே சிவனுடைய திருவடியைப் பொருந்தினுலொழிந்து மலமு நீங் காது முத்தியு முண்டாகா தென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில் - அங்ஙனம் நான் பிரமமென நிகழு ஞானமே யன்றி யான்மாவினை கீழ்நாடி நீங்குதன் மாத்திரையே முத்தியா மென்னில்,—சின முட்டை கருமரத்தி னுயிர்கண்மருவ - சினையிலு முட்டையிலு ங் கருப்பாசயத்தினு மரத்தினு முயிர்கள் பொருந்த,—கதியாகு ம்-முத்தியடைதல் வேண்டும். அங்ஙன மின்மையின் இங்ஙனங் கூறும் பாடாணவாத ஞானமும்,—சரணங்கள் புகுநிழல் போற் றனையடையுஞ் சமாதி முத்தி யெனில் - சேய்மைக்கட் சென்ற வொருவனிழ லுச்சிப்போதின்க ணங்ஙனஞ் சேறலொழிந்து வ னடியில்வந் தொடுங்கினாற்போல கரணங்களிற் சென்ற த ன்னறிவு பக்குவம் வந்துழி யங்ஙனஞ் சேறலொழிந்து தன்மாட்டேவந் தொடுங்கி நிராதாரமாய் நிற்குமதுவே முத்தியெனில்?—மரணங்கொண்டிட வுறங்க மயங்கிமூர்ச்சிக்க வாயுத்தம் பனைப ண்ண வல்விடத்தையடைய - மரணமாகிய பத்தாமவத்தை யடையுமிடத்து முறககத்து மயக்கமுற்று மூர்ச்சையுறுமிடத்தும் பிராண வாயுவியங்காமற் றம்பிதத விடததும் கொடியவிடத் தைப் பொருநதினவிடததும்,—இதுவுங் கதியாகும்-இதுவுமுத்

தியாதல் வேண்டும். அங்ஙன மின்மையி னதுவே முத்தியாதலை மையு மெனக் கூறும் பேதவாத ஞானமு மென்னு மிவையும்,—பசுஞானமாகும் - பசுஞானமாம்,—அரணங்க ளெளித்தவன்றனடியை யறிவிறந்தங் கறிநதிடீர் - சிவஞானத்தாற் சிவனையுந் தம்மையு மறிவிறந்தங் கறியப் பெறுங்கள்,—செறிந்ததக ளகற்றிடீரே - உம்மைப் பந்தித்த மலத்தினின்று நீங்குமினெ,—மலந் தவிராது - மேற்கூறிய பசுஞானங்கட் கேதுவாகிய பசுத்துவ வாதனை யிச்சிவஞான முடையார்கட் கன்றி நீங்கா தெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



சிவனை யகங்காரவாதி யந்தக்கரணங்களா லறியலாயிருக்கச் சிவஞானத்தா லறியவேண்டுமென்ப தெனனென்றுவினவ, அவனைக்குறித் துணர்த்துகின்றார்.

சிவனையவன் றிருவடிஞா னத்தாற்சேரச் செப்புவது செயல்வாக்குச் சிந்தையெல்லா, மவனையணு காவென்று மாதலானு மவனடியவ் வொளிஞான மாதலானு, மிவனுமியான் றுவக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக்கொத்தோ, பவமகல வெனையறியே னெனுமையமகல வடிகாட்டி யான்மாவைக் காட்டலானும். (ச)

(இ-ள்.) சிவனையவன் றிருவடி ஞானத்தாற் சேரச்செப்புவது — ஆன்மாக்க ளந்தச் சிவனைக் கூடுமிடத்தவனது திருவடி ஞானமாகிய சிவஞானத்தாலே கூடியிருக்க வென்று வேதாகமங்கள் கூறியிருப்ப, மனமுதலியவற்றா லடையலாமென்று சொல்லுவ தென்னெனனில்?

செயல்வாக்கு — அவன் வாக்கு மனதீத னுதலா லவனை

ச் சிந்தைசெயல் — மனோவாக்குக் காயங்களா லடையப்படா லா மவனையனு — ன காண.

காவென்றும்

'மறையினா லயனான்மாலான் மனத்தினால் வாக்கான்ம ற்றும், குறைவிலா வளவினாலுங் கூறொணாதாகிநின்ற; விறைவ னார்' என்று முன்னோர் கூறினாராகையாலும்,

ஆதலானும் — இத்தன்மையை யுடையனாதலானும்,

அவனடியவ் வொளி ஞானமா தலானும் — அவனுடைய திருவடி விளங்கா நின்ற ஞானப் பிரகாசமா யிருக்கையாலும்

இவனுமியான் றுவக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ — இவ்வான்மா வேகமென்று புத்திபண்ணுஞ் சத்த தாதுக்களோ, இந்திரியங்கள் சமூகங்களோ, அல்லவே!

பவமகல வெனையறியே னெனுமையமகல — எனக்குண்டாகிய ஜநநமரணங்களை விட்டுக் கரையேற வேண்டுமெனு மறிவுண்டாகையின் பொருட்டுந்தமயக்கந் தீர்ந்து நிற்க

அடிகாட்டி யான்மாவைக் காட்டலானும் — இப்படி யான்மாவுக்குத் தனது திருவடியாகிய ஞானத்தைப் பிரகாசிப்பித் தவனை யுணர்த்தி நிற்கையாலும். எ-று.

செயலென்பது காயத்தின் றொழில்.

ஓகார மெதிர்மறை.

இதற்குக் காரணத்துங் காமிகாதமுமறிக. (௪)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



சிவனையவன் றிருவடிஞானத்தாற் காணச்செப்புவது செயல்வாக்குச் சிந்தையெல்லா மவனை யணுகாவென்றுமாதலானும் - சிவனை யவனுக்குப் பிறிவற்ற பரஞானத்தாலே காணச் சொல்லுவதேனெனனில்? இந்திரிய வியாபாரஞானமும் வாச்ய வாசகஞானமும் புகதிவிருத்திஞானமுஞ் சிவனையெக்காலத்துங் கிட்டமாட்டா தாகையாலும்,—அவனடி யவவொளி ஞானமாதலானும் - அந்தச்சிவனுடைய ஸ்வரூபமானது பிரசிததியான ஸ்வபரப்பிரகாச ஞானமாகையாலும்,—இவனுமியான்றுவக்குதிர மிறைச்சிமேதை யெனபு'மச்சை சுக்கிலமோ விந்திரியக்கொத்தோ வவமகல வெனையறியே னெனு மைய மகல வடிகாட்டி யான்மாவைக்காட்டலானும் - இந்த ஆன்மாவும் யானென்புமுதலாகிய வுறுப்புக்கள் கூடிய தேகமோ இந்திரியக் கூட்டமோ வென்னுங் குற்றமகல வென்னுடைய ஸ்வரூபத்தை அறிகிறேனில்லை யெனனுஞ் சந்தேகந் தீரும்படிக்குச் சிவன் றனது ஞானசத்தியை யானமாவினிடத்திலே பிரகாசிப்பித்து அதனால் ஆனம ஸ்வரூபத்தையுந் தரிசிப்பிப்ப ராகையாலுஞ் சிவனைச் சிவஞானத்தினாலேயே யனையச் சொன்னதென் றிதன் பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சாக்ஷாத் சிவசத்தி விளக்கு விளக்கிய சிற்சத்திக் குறிப்பதிஞானத்தாற் சிவான்ம சொரூபந்தெரியு மென்று செப்புகின்றார்.

வெளிப்பொருள்.

அடுத்தடுத்துச் சொல்லியது சொல்லிற் கூறியது கூறலென்னுங் குற்றம் வாராதோ? வாராது, சமாதிதிடம் பிறக்கும்படி சாற்றியதாதலால்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

ஈண்டுக் கூறிப்போந்த ஞானங்களுள் முப்பொறி முதலியனபற்றி யேகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர் வாகிய பாசஞானத்திற்கும், தற்சொரூபமே யறியமாட்டாது பாதலைப்பட்டுற்று நிற்பதாகிய பசுஞானத் திற்கும், தானே சுப்பிரகாசமும் பரப்பிர காசமுமா யெல்லாப் பொருளையு மினிது விளக்குவதாகிய பதிஞானம்போல விளக்கு மாற்றல் செல்லாமையால், அப்பெற்றித்தாகிய பதிஞான மொன்றுமே பதிப் பொருளையங்ஙன மறியற் பாற்றென மேற்கொண்ட தென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

சிவனுடைய ஞானத்தாலே சிவனை யறியவேணு மென்றதென்னம்பு என்ற சங்கராந்தவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

சிவனையவன் றிருவடி ஞானத்தாற் சேரச்செய்புவது - பரமேஸ்வரனை யவனுடைய சீபாதமாகிய ஞானத்தாலே கூடவேணுமென்று சொன்னது. அதெப்படியென்று நீ கேட்கில்?—செயல்வார்க்குச் சிந்தையெல்லா மவனையணுகாவென்று மாதலானுமவனடியவ் வொளிஞான மாதலானும் - அன்வயம், அவனுடைய சீர்பாதமாகிய வந்தஞானம் விட்டுவிளங்காநின்ற ஞானமாகையாலு மஞ்ஞேயார்க்குக் காயங்களா லவனைக் கிட்டவுஞ் செல்

லவும் நினைக்கவும் ஒண்ணாதாகையாலும், இதுவன்றியும் ஆன்மா தன்னையும் இந்திரியங்களா லறியப்படாது. அதெப்படியெனனில்?—இவனுமியான் றுவக்குதிர மிறைச்சிமேதை யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியகெளத்ரோ - ஆன்மாவானது தோலோ விரத்தமோ மாமிசமோ நிணமோ யெலும்போ மூளையோ சுக்கிலமோ இந்திரியக் கூட்டமோவென்று,—பவமகல வெனை யறியே னெனு மையமகல - ஜனனங்க ளெல்லாம் விட்டு நீங்கும்படி என்னை யறிகின்றிலே னென்கிற சந்தேகந்தீர,—அடிகாட்டி யான்மாவைக் காட்டலாலும் - தனது ஞானத்திருலே தன்னுடைய திருவடியுந் தரிசிப்பித்து,— ஆன்மாவையுந் தரிசிப்பிக்கையால் பாசஞான மறியாது. ஆகையால் பதிஞானமே யெல்லாத்தையு மறியும்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், “சத்தப்பரிச ரூபரசகந்தை - யெத்திறத்தினதரு ளியம்புகவன்றியும் - நிறைக்துநீயாய் நின்றனையெனறு - மறைநகைம் புலனாய் வாராயென்றுங் - கரணமெல்லாங் கடந்தனையென்று - மரணமையைத் தினப்புறதென்று - முன்னருட்டலைவர் பன்னினொனவு - மினையவையொழிய வறிகுவதெவ்வா - றெனாநிற்கலித் கொனறியவின்பங் கூறுதற்கு மருட் பேறினையனறே” எனறும், சிவஞானபோதம் கூ-சூ-க-வெ,“நாடியேர்வெனபோ நரம்புசீக் கோழையோ, தேடியெனையறியேன றேர்ந்தவகை,— நாடியரன், றன்னாலேதன்னையுங் கண்டுதனைக் காண, வொன்றாமெனவறிவாரின்று” என்னுமதுங் கண்டுகொள்.

இதனாற் சொல்லியது, பாசஞானத்தினாற் பாசத்தை யறியுமதொழிந்து, பதியை யறியாதென்றும் பதிஞானத்தினாலே பதியை யறிய வேணுமெனனு முறைமையை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

———0———

செயல்வாக்குச் சிந்தையெல்லாம் - ஈண்டுக் கூறிப்போந்த ஞானங்களுள் மனவாக்குக் காயமாகிய முப்பொருள் முதலியனபற்றி,—அதனையென்று மணுகாவாதலானும்-அவனை யென்ஞான்று மணுகாமையானேகதேசமாய்நிகழுஞ் சுட்டுணர்வாகிய பாசஞானத்திற்கும்,—இவனும்-இவ்வான்மாவும்,—யான் றுவக்குதிர மிறைச்சி மேதையென்பு மச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ- யான் றோலிரத்த மிறைச்சி மேதையெனபு மச்சை சுக்கில மிந்திரியக் கூட்ட முதலியனவாகப் பலதலைப்பட்டு,—அவமகல வெனையறியே னெனு மையமகல - குற்றமகலத் தற்சொருபமே யறிமாட்டாதையுற்று நிற்பதாகிய பசுஞானத்திற்கும்,—அவனடி யவ்வொளி ஞானமாதலானும் - முதல்வன் ஞானசத்திதானே தற்பிரகாசமாய் நின்றும்,—அடிகாட்டி யான்மாவைக் காட்டலானும் - தன்னையு மானமாவையும் விளக்கி பரப்பிரகாசமுமாய்நின றெல்லாப் பொருளையு மினித்து விளக்குவதாகிய பதிஞானம்போல விளக்கு மாற்றல் செல்லாமையால் அவன்றிருவடி,—ஞானத்தால்-அப்பெற்றித்தாகிய பதி ஞானமொன்றானே,—சிவனைச்சேரச்செப்புவது - பதிப்பொருளை யங்ஙன மறியற்பாற்றென மேற் கொண்ட தென்பதாம்.

சிவஞானத்தா லன்றி யறியப்படாமைக் கேது காட்டியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.

———

மேல் சிவனைப் பாசஞான முதலிய வற்று லறியப்படா தென்பதூஉ மவனைவைகளைக் கண்டிருப்ப னென்பதூஉ முணர்த்துகின்றார்.

கண்டிடுங்கண் டனைக்காணா கரணங்காணா கரணங்க டமைக்காணா வுயிருங்காணா, வுண்டியம ருயிர்தானுந் தன்னைக்காணா துயிர்க்குயிரா மொருவனையுங் காணாதாகுங், கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்ணாகக் கரணங்கள் காணுமனிற்பன்,கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற்பாசங் கூடாது கூடிடினுங் குறிப்படியினின்றத்தே. (௫)

(இ-ள்.) கண்டிடுங்கண்டனைக்காணா — விஸ்வத்திற் பதார்த்தங்களுக் கெல்லாங் காட்டாய் நிற்கிற கண்ணானது தனையு மறியமாட்டாது,

கரணங் காணா — அதுவுந் தனக்குட் கரணமாய்நின்று ஜீவிப்பிக்கிற கரணங்களையு மீதெனறு கண்ணை தறியமாட்டா.

கரணங்க டமைக்காணா — அவைகளுக்குக் காட்டாய்நிற்கிற கரணங்களு நாமே யெல்லாத்துக்குங் காட்டாய் நிற்கிறோ மென்னுந் தன்மையு மறியமாட்டாது.

உயிருங் காணா — அந்தக் கரணங்களுந் தனக்கு மேலுமாய்ப் பிராணனுமா யிருக்கிற வான்மாவையு மறியமாட்டா.

உண்டியமருயிர்தானுந் தன்னைக்காணா — இந்தக் கருவி கரணாதிகளைக்கொண் டுணர்வாகிய சுகதுக்க மோகங்களைப் புசிக்கிறோ மென்னு முணர்வையு மான்மாவு மறியமாட்டான்.

உயிர்க்குயிரா மொருவனையுங் — அந்த வான்மாவுந் தனக்கு மேலுமா யுயிர்க்குயிருமாய் நின்றுணர்த்துங் கர்த்தாவை

காணுதாரும் — யுமுணரமாட்டா. ஆதலாலிவைகளிப்படி பொன்றுக்கொன்று ஞானவிருத்தியுமதிக விருத்தியுமாய்க் காரியப்படு முறைமை யறிந்து,

கண்ட சிவன் றனைக்காட்டி — இப்படியெல்லாத்துக்குமேலா யெல்லாத்தையும் வியாபித்திருக்கிற சிவன் பக்குவான்மாக்களுக்குத் தற்சுரூபத்தைக் காட்டி,

உயிருங்காட்டி — ஆன்மரூபத்தையுந் தரிசிப்பித்து,

கண்ணுகக் கரணங்கள் காணுமனிற்பன் — அந்தச் சிவன் கரணங்களிடத்தினு மனுப்பிரவிஷ்டனாய் வியாபித்து அவைகளாற் றான் காணப்படாமலதற்கு வேறாய் நிற்பன்.

கொண்டரனை யுளத்திற்கண்டடிகூடிற் பாசங் கூடாது — இப்படிச் சிவன் வியாபித்து நிற்குமுறைமையை உன்னிடத்திலே கண்டு மயக்கவிகற்பமின்றி யவனுடைய திருவடியை யெப்பொழுது நினைந்திருக்கி லுன்னிடத் துண்டாகிய பாசங்கள் விட்டுநீங்கும்.

கூடிடினுங் குறிப்படியினிறுத்தே. — அதுவந்து மேற் கூடிற்றே யாயினு முன்புபோல நிற்கி லந்தப் பாசங்கள் வருத்தாது. எ-று.

இப்படிச் சொல்லவே சிவ ஞான்மாக்களுக் குபகரிக்குமுறை யுணர்த்தியதாயிற்று.

உண்மை-ஐயத்தின்கண் வந்தது.

இதற்குக் காலோத்தரம், வாயவ்ய சங்கிதையினு மறிக. (ரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

ஆன்மா தனது ஞானத்தினாலே சிவனைக் காணும் சிவனுந் த

னது ஞானத்தினாலே ஆன்மாவைக் காண்பனென்னி லிவ்வாறு கூடாதென்னு முறைமையைக் கூறுகின்றது.

கண்டிடுங்கண் டனைக்காணா கரணங்காணா - ரூபவத் பதார்த்தங்களைக் காணுங் கண்ணானது தனையுங்காணாது தனக்கு முதலாகிய அந்தக் கரணங்களையுங் காணாது,—கரணங்கடமைக்காணா வுயிருங் காணா - அறியுந்தன்மையை யுடைய புத்திதத்துவ விதத்தியாத்துவங்கள் தம்மையுமறியாது கமகருக் கர்த்தாவாகிய ஆன்மாவையுமறியாது,—உணடியமருயிர்தானுந் தன்னைக்காணா வுயிர்க்குயிரா மொருவனையுங் காணாதாகும் - விஷயத்தைப் பொருந்திநிற்கிற ஆன்மாவும் பந்ததசையிலே தன்னையுந் தனக்குயிரா யினை யற்றவனாகி நிற்கிற சிவனையுங் காணாது,—கண்டசிவனறனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்ணாகிக் கரணங்கள்காணா நிற்பன் - ஆன்மாக்களையுஞ் சர்வ பிரபஞ்சங்களையும் வேறொரு சகாயத்தையு மபேக்ஷியாமல் ஏககாலத்திலே யதாவததாகக் கண்டிருக்குஞ் சிவன் றனது ஞானப்பிரகாசத்தினாலே ஆன்மாவுக்குத் தனையுங் காட்டி யந்த ஆன்மாவையுங் காட்டித் தானந்த வான்மாவி னிடத்தில் அநந்நியமா யிருந்தும் பாசபசு ஞானசம்பியனா யிருப்பன். ஆதலால்,—கொண்டானை யுளத்திற்கொண் டடிகூடின பாசங் கூடாது கூடிடினுங் குறித்தடியினிறுததே - அந்த சிவஞானத்தைக் காட்டாகக் கொண்டானை யான்மாவிலே வேறறக்கண்டந்த ஸ்வரூபமேயாகிற பாசநீங்கும் நிஷ்டை—திரித்து கரண வியாப்தியைப் பொருந்தின நேரத்துப் பாசவாசனை பொருந்தித் தாமாகிலது நீங்கும்படிக்கு முன்போலச் சிவபாவனையைப் பண்ணிச் சிவத்தினிடத்திலே யுன்னுடைய போதத்தை யழுந்த நிறுத்தென்றிதன்பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

மேற்சொல்லிய பதிஞானமே சிவ முதலிய திரிபதார்த்தங் காணுங் கண். கண் முதலிய வற்றிற்குக் கண்ணென்பது, கண்ணுக்குபகாரம் பண்ணுதலாற் கண்ணென வுபசரிக்கப் பட்டதென்று காண்பிக்கின்றார்.

கரணங்காண - கரணங்களைக் காண,—உயிருங்காண - உயிரையுங் காண,—கண்ட சிவன் - இவையெல்லா வற்றையும் பிரத்தியக்ஷமாகப் பார்க்குஞ் சிவன்,—தனைக் காட்டி - தனைக் காட்டி - தனக்கியற்கைக் கண்ணாகி உயிர்க்குச் செயற்கைக் கண்ணாகிய தனது சத்தியினால் உயிர்க்கு இயற்கைக் கண்ணாகிய சிற்சத்தியை விளக்கித் தனது ஸ்வரூபத்தை யுயிர்க்குக் காண்பித்து,—உயிருங் காட்டி - உயிர்க்குயிர்ச் சுவரூபத்தையுங் காண்பித்து,—கண்ணாகி - உயிர்க்கியற்கைக் கண்ணாகிய சிற்சத்தி வியஞ்சக தன் சத்தி சமவாய சம்பந்தத்தா லுயிரைக் குறித்து பசரித செயற்கைக் கண்ணாகி,—காண - காணமல்,—அடிகூடில் - சிவசத்திக் கொப்பச் சிற்சத்திக் கண்ணைத் திறந் தொளிபரப்பித் தியானிக்கில்,—குறித்தடியி னிறுத்தே - திரும்பப் பாசம் நீங்கும்படி சிவ சிந்தனை பண்ணிச் செய்யிபபடி சிவ சத்தித் தாரகமாகத் தானே நில்.

மற்றைய வெளிப் பொருள்.

—

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

பாசபச் ஞானங்கள் பரப்பிரகாசமாய் நிற்பினுந் தற்பிரகாசமாய் நிற்றல் செல்லா தென்பது கண்மேல்வைத் தறியக்கிடத்தலானும், ஏனைப் பதிஞானத திற்குத் தற்பிரகாசமாய் நிற்

ாலுஞ் செல்லுமென்பது தானல் விரண்டிற்குங் காட்டாய்த் தனக்கொரு காட்டு வேண்டாது நிற்றல்பற்றி யறியப்படுதலானும், சிவனை அவன் றிருவடி ஞானத்தாற் சேறலே பொருத்தமுடைத்தென்பதாம்.

மேலதற்குத் தரிசனங் காட்டியவாறு.

காணுமென்னும் தவ்விறு விகாரத்தாற் றொக்கது.

கண்டிடு மென்பதனைக் கரணங்க ளென்பதனோடுங் கூட்டுக.

கண்டிடுதல் ஈண்டுப் பரப்பிரகாச மாதன் மேற்று.

உண்டி யமர்தலு மது.

எடுத்துக்காட்டு வமை.

தனைக்காட்டி யுயிருங் காட்டிக் கண்டசிவ னென வியையும்.

காட்டிக் கண்டசிவ னென்றது அனுவாதம்.

கண்ணாகி யென்பது கட்டாகி யென்றவாறு. சொன்னசிவன் கண்ணா வென்றாற் போல.

கரணங்களாற் காணுமெனவே மூன்றாவது விரித்துரைக்க.

கரணங்க ளெனவும் உயிரெனவும் சிவனெனவும் அவ்வப் பொருண்மேல் வைத்து உபசரித்தார்.

இரண்டாங் கூற்றுக்குத் தோற்றுவாய் செய்வார், பாசங் கூடாது, கூடினுங் குறித்தடியி னிறுத்தே னென்றார்.

இவை நான்கு செய்யுளானும் முதற் கூற்றின் பொருள் விளக்கப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

அந்த முத்தியில் பதியும் பசுவும் தரிசனப்பட்டதே யுண்

டாகில் இந்தப் பேதத்திலும் தரிசனப்பட வேண்டாவோ வெ
ன்ற பாடாணவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

கண்டிடுங்கண் டனைக்காணு - அவயவங்களைக் காண்கிறகண்
தன்னைக் காணமாட்டாது,—கரணங்காணு-அது வன்றியும் அந்
தக் கரணங்கள் தாமெல்லா விடயத்துக்கு மறிவாய் நிற்பினும்
தன்னை யறியமாட்டாது,—உயிருங்காணுது - அத்தக்கரணங்க
ளைக் காரியப்படுத்திநிற்கிற பிராணவாயுவுந் தன்னைத் தான கா
ண மாட்டாது,—உண்டியம ருயிர்தானுந் தனைக்காணு- கன
மத்துக் கிடாகச் சரீரத்தைப் பொருந்தி சுகதுக்கங்களை யனுப
விக்கிற வான்மாவுந் தனைத்தான் காணமாட்டாது,—உயிர்க்
குயிராமொருவனையுங் காணுதாகும்-தனக்குப் பிராணனாய்நின்
றுணர்த்துகிற பரமேசுரனையும் ஆன்மாக காணமாட்டாது.
ஆனாலந்தச் சிவனை யறியும்படி யேனென்னில்?—கண்டசிவன் ற
னைக்காட்டியுயிருங்காட்டி-எல்லாத்தையுமறியத்தக்கசிவன் பே
தத்திலிந்த வான்மாவுக்குத் தோன்றாமல் நின்று முத்தியில் த
ன்னையுங்காட்டி யிந்த வான்மாவையுங் காட்டிக்,—கண்ணுகிக்
கரணங்கள் காணாமல் நிற்பன் - சிவன் றன்னைக் காண்கைக்கு
ஆன்மாவுக்குத் திருஷ்டியுமாய்க் கரணங்களா லறியுமிடத்துத்
தோன்றாமலுநிற்பன். அந்தக் கரணங்களாகிய பாசஞானம் நீ
ங்கும்படி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்
கிறார்.—கொண்டானை யுளத்திற்கொண் டடிகூடிற் பாசங்கூ
டாது - அப்படி வாதனை மேலிட்டால் தனக்குப் பிராணனாய்
நிற்கிற சிவனை யவனுடைய ஞானத்திலேயே தன்னிடத்திலே
கண்டு கொண்டு அவனுடைய சீபாதத்தைப் பொருந்தில் மயக்
கவிகற்பங்கள் பொருந்ாது,—கூடிடினுங் குறித்தடியினிறுத்
தே - அந்த மயக்க விகற்பங்கள் கூடித்தாயினும் ஞாதிருவென்
கிற தன்மை பொய்ஞானமாய் நிற்கவே முற்பட்ட நிலை கூடும்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், கூ-சூ, உ-வெ, "காட்டிய கண்ணே தனைக்காணுக் கண்ணுக்குக், காட்டாய வுள்ளத்தைக் கண்காணுய்—காட்டிய, வுளளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணுய, கள்ளந்தா னுள்ளத்திற் காண்." என்னுமதுங் கண்டுகொள்க

இதனுற் சொல்லியது, பேதத்தில் மலசம்பந்தமாயிருக்கையால் பதியையும் பசுவையுந் தரிசிக்கப்பட்ட தில்லையென்று முத்தியி லந்த மலம் நீங்குகையா லவ்விரண்டையுந் தரிசிக்கப்படுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கண்டிடுங்கண் டனைக்காணு சரணங்காணு - ஒருவிடயத்தைக் காண்கின்ற கண்ணனது தன்னியல்பையுங் காணமாட்டாது, தனக்கு முதலாகிய அந்தக் கரணங்களி னியல்பையுங் காணமாட்டாது,—கண்டிடுங் கரணங்கடமைக்காணு வுயிருங்காணு - அறியுந் தன்மையுடைய புத்திமுதலிய புறக்கரணமும், வித்தியா தத்துவமாகிய அகக்கரணமும், தம்மியல்புங் காணமாட்டா; தமக்கு அவ்விடயத்தைக் காட்டி முதலாய் நிற்குமுயிரையும் அவை காணமாட்டா. அவைபோல,—உண்டியமருயிர் தானுந் தனைக்காணு வுயிர்க்குயிரா மொருவனையுங் காணுதாகும்-ஒருவிடயங்களைப்பற்றி நிற்கின்ற ஆன்மாவுமவ்வாறே தன்னியல்பையு மறியமாட்டாது, தனக்கு முதலா யுயிர்க் குயிராயுணர்த்திநிற்கு முதல்வனையுங் காணமாட்டாது. ஆகலின்,—தனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்டசிவன் - தற்சொரூபத்தையு மான்மசொரூபத்தையும் விளங்கச்செய்து தனக்கொரு காட்டின்றி அறிந்தாங் கறிந்து நிற்குஞ்சிவன்,—கண்ணுகிக் கரண

ங்கள் காணுமனிற்பன் - காட்டாகித் தனக்கொரு கரணங்கள் வேண்டாது நிற்பனாகலின,—கொண்டானை யுளத்திற் கண்டு - அச்சிவஞானத்தைக் காட்டாகக்கொண்டு முதல்வனை யவ்வறிவினிற்காணப்பெற்று,—அடிகூடிற் பாசங்கூடாது - திருவடியைத் தலைகூடிற் பாசநீங்கும்,—கூடிடினுங் குறித்தடியினிறுத்தே-நீங்காதுகலந்திடினுஞ் சிவபாவனையை விடாதுசெய்து சிவனை யவன் றிருவடி ஞானத்தாற் சேறலேபொருத்த முடைத்தென்பதாம்.

இவை நான்குசெய்யுளானு முதற்கூற்றின்பொருள் விளக்கப் பட்டது.

கூ - சூ, க-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் சொல்லிய முறையில் நிலைபெற்றுநிற்கு ஞாதாக்களுக் கனுக்கிரகஞ்செய்யு முறைமை யுணர்த்துகிறுர்.

குறிப்படியி னின்றட்ட குணமெட்டுச்சித்தி கோ
கனகன் முதல்வாழ்வு குலவுபதமெல்லாம், வெறுத்து
நெறி யறுவகையு மேலொடுகீழடங்க வெறும்பொ
யெனநினைந்திருக்க மேலொடுகீழில்லா, னிறுத்துவ
தோர் குணமில்லான் றன்னையொருவர்க்கு நினைப்பரி
யா னென்றுமிலான் நேர்படவந்துள்ளே, பொறுப்
பரிய பேரன்பை யருளியதன்வழியே புகுந்திடுவ னெ
ங்குமிலாப் போகத்தைப்புரிந்தே. (கூ)

(இ-ள்.) குறிப்ப ஞானசாரிய னுபதேசித்த முறையினின்
டியினின்று று,

அட்டகுணம் "தோற்றமநந்த ஞானத்தோ டநந்ததரி சனமும், தோற்றமனந்த வீரத்தோ டநந்தசுகத்தினுடன், மாற்றியநாமமின்மை கோத்திர மின்மை யாயுவின்மை, யேற்றியதோடமி யாவியல்பென்ப ரேந்திழையே" என்றார் பார்த்திபமுடையார்.

எட்டுச்சித்தி விருத்தம். அணுவினுநுண் ணுருவுகொள லணிமாவா மவற்றி னதிவேகத் தியங்கியுந்தோய் வற்றவுடலகிமாத், திணியபெருவனாயெனமெய்ச் சிறப்புறுகைகிரிமா, சிந்தித்தபலமெவையுஞ் சிறப்புறுகை பிராத்தி, பிணைவிழியா ராயிரவ ரொடும்புணர்ச்சிபெறுகை பிரகாமியீசிதைமாவலியுமடி பேணி, மணமலர்போ லெவராலும் வாஞ்சிக்கப்படுகை வசிவசிதைவலியராற் றடுப்பரியவாழ்வே" என்றொமதகுறவர் எனவறிக. "அட்டமாசித்திமுத லனேகநுள்ளவேறுகளுங், கட்டமாங்கதிகடரும் பரகதிகாணக்கொடா, மட்டிலாமாலையாய வியாபகமாயறிவாகிக், கிட்டலாகாமுத்தியது மற்றிவற்றுற்கிடையாதே".

கோகனகன்முதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து பிரமா முதலாயினோ ரனுபவிக்கும் போகங்களெல்லாத்தையுஞ் சீயென் றுவர்த்து.

நெறியறுவகையுமேலொடு கீழடங்க ஆறத்துவாவினையும் பந்தமெனக் கருதி வெறுத்து

வெறும்பொயென நினைந்திருக்க அவைகள் அபரபோகங்கொடுத்தற் கேதுவாகையால் அசத்தியமெனக் கருதி ஞானாசாரிய னுபதேசித்த நிட்டையைப் பொருந்தி நிற்பையேயாகில் அப்பொழுது

மேலொடுகீழி லாவிறுத்தவதோர் குணமில்லான்றன்னையொருவர்க்கு நினைப்பரிய தொன்றுமில்லான் — தான் பூரணனாய்த் தனக் காதியந்தமுமில்லாதவனுமாய்ச் சுத்தனாதலாற் றன்கண் வைக்கப்படுவதொரு வண்ணரூபங்களுமில்லாதவனுமாய்த் தான் சாந்தனாதலால் தன்னுண்மையினை யின்னபடியென் றொருவராலுமறிதற் கரியனுமாயாதித்தனெப்படித் தனக்கொன்றை விரும்பிச் செய்யா தான் மாக்களுக் குபகாரஞ் செய்யுமாறுபோல இவனுந் தனக்கென வோர் கைம்மாறு கருதா தான்மாக்களுக் குபகாரஞ் செய்வனாதலால்.

நேர்படவந்தவ்ளோ பொறுப்பரிய பேரன்பையருளி — இச்சிறப்பினை யுடைய சிவ னிந்த முத்தான்மாவை யனுக்கிரகஞ் செய்தற் பொருட்டாகவுந் திவனிடத்திலே தரித்தற்கரிதாகிய சிற்சத்தியைப் பிரகாசிப்பித்து

அதன்வழியே புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப்புரிந்தே. — அந்தச் சிற்சத்தியுடன் கூடியிருக்கிறவர்களுக்குத் தன்னிடத் துண்டான சுவாநந்தானுபூதியைத் தினைப்பிப்பன். எ-று.

வெறுத்தெனபதனை நடுநிலைத் தீபகமாக்கி யிருபாலுங் கூட்டுக.

கோகனகன்-காரணக்குறி.

நினைப்பரியான் எழுவாய்

புரிந்திடுவன் பயனிலை.

இதற்குச் சிவதருமோத்தரத்தும், சர்வ ஞானோத்தரத்து மறிக. (கூ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பிரபஞ்ச வைராக்கியம்வரிற் சிவன் ஞானே அநுக்கிரகம் பண்ணுவனென்பது கூறுகின்றது.

குறித்ததடியி னின்றட்ட குணமெட்டுச்சித்தி கோகனகன்முதல்வாழ்வு குலவுபதம் நெறி யறுவகையு மேலோடுகீ ழடங்கவெல்லாம் வெறும் பொய்யென வெறுத்து நினைத்திருக்க-லக்ஷியமாகிய சிவபதத்திலே நின்று பசாசுபத முதலாகப் பிரமபதமீறாக வடைவே பிருதிவி யப்பு தேசோ வாயு வாகாசம் மனசு அகங்காரம் புத்தி இந்த வெட்டு தத்துவங்களிற் கிரமத்திலே யெட்டு பதத்திலு மொவ்வொரு குணமதிகமாக வெண்குணமான வணிமாதியாகிய வெட்டுச்சித்தியையும்,

இதற்குச்சம்மதி.

தஶாஷ்டகுணமைஶ்வர்யம் பைஶாசம் விஶ்ருத ஹாஸ்திநா। தஸ்மாச்சதுர்குணாநாஸு நிராணாஸ ஸம்யுதம்॥ ரக்ஷஸாம் ஷோடஶகுணம் பைஶாசாத்வாஞ்சுதந்த்ரியா। வநதஸ்ரீ ரவஸேஷேண யக்ஷ ஷட்த்ரிம்ஶஜ்ஜஸம்॥ கந்தர்வாணாஞ்சு வாயவ்யம் யாக்ஷாஞ்சு ஸகலம் ஸம்யுதம்। பாஞ்சாஹிக இந்த்ரஸ்ய அஷ்டாரிம்ஶத் குணைஶ்ஸ்॥ஸௌம்யஸ்ய ஷாஷஸம் ஷிவம் யஞ்சாயம் பாஞ்சாஹிகம்। ஸௌம்யாச் ப்ரஜாபதிர் யோர ஷடம்கார குணாதிகம்॥ அதஷ்டஷ்டி குணம் ப்ராஹ்மம் ஸௌஸமைஶ்வர்யம் ஷட்கஷ்டதி।

பிரமாதிகளுடைய ஐஸ்வரியங்களையு மவர்கள் வாழுமுலகங்களையு மந்திரபத முதலான பதங்கள் மந்திரபத வன்னபுவன தத்துவங் கலைகளென்னு மாறத்துவாவு மூர்த்வ மாயையதோ மாயையெனனு மிரண்டு மாயையினுடைய காரிய மாகையாற் பயனற்ற பொய்யென்று வெறுத்துச் சிவபதத்தையே யிச்சித்து நினைத்திருக்க,—

மேலொடுகீழில்லான் நிறுத்துவதோர் குணமில்லான் றன்மையொருவர்க்கு நினைப்பரியானொன்றுமிலா னேர்படவந்துள்ளே பொறுப்பரிய பேரன்பை யருளியதன்வழியெ யெங்குமிலாப்போகத்தைப் புரிநதேபுகுந்திடுவன - முடியுமடியுங் காண்பரியான் இன்னதொரு குணவானென் றுருத்தரா னிச்சயிக்கப்போகாதவன் தன்னுடைய ஸ்வரூபத்தை இவ்வாறென் றறிவதற் கரியவன் தேகேந்திரியாதி கரணங்க ளொன்றுமில்லாதவன் சந்நிதானம்பண்ணி யான்மாவினிடத்திலே தரித்தற் கரிதாகிய சிவராகத்தைவிளைத்தந்தச் சிவராகம் வழியாகப் பூமிமுதல் சத்தியலோக பரியந்தத்தில் மறுவியா நந்தமுதல் பிரமாநந்த முடிவான யானந்தங்க ளெல்லாஞ் சரி இன்றி விளங்குஞ் சிவாநந்தத்தை விளைத் தான்மாவினிடத்திலே வேறறக் கலந்திடுவனென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

அப்படித் தியானம் பண்ணிச் சிவசத்தி தாரகமாய் நின்று செய்வ துரைக்கின்றார்.

நெறியறுவகையும் - ஆறத்துவாவும்,—வெறும் பொய்யென - அசத்தியம்போற் காணுங் கண்டிதமாக,—புகுந்து - விளை

ங்கி,—போகத்தை - சிவத்துவ விளக்கமாகுஞ் சிவானந்தப் பெயர்ச் சிவபோகத்தை.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

குருவினருளா லறிவதொரு குறிபின்க ணுறைத்து நின்று கொண்டு, காலாக்கினி புவனமுத லநாசிருத புவன மீறாயுள்ள எவ்வகைப் பட்ட புவனமும் இதற்குமுன னனுபவித்துக கழித்தமையிற் கான்ற சோறெனக்கண் டருவருத்து விட்டு, அறுவகை யத்துவா வுட்பட்ட மூவகைப் பிரபஞ்சமுங் காரணரூபத்திற் சிறிதுங் காணப் படாமையாற் பித்திகைவடிவம் காணபார்க்குக் காணப்படாதா யதன்கண் மறைந்த சித்திர வடிவம் போல முழுப்பொய்யெனக் கண்டு, அவ்வாறு கண்ட காட்சி சலியா திருக்கப் பெறின, அப்பிரபஞ்சத்திற்கு விலக்கணமான ஞான சொரூபம் ஆண்டினிது விளங்கித் தோன்றும். தோன்றவே, வறியார்க்கு நிதி வாய்த்தாற்போல அதனகட் பெருங்காதன் மீதூறும். அது மீதூறவே "இனபி னினிதெனற லின்றுண்டே லினறுண்டா - மனபினிலேயேயது" ஆகலான அவ்வன்பின வழியே பேரின்ப மயமாய்ப் புகுந்து உயிரின கண் விளங்கித் தோன்றும் அந்தஞானத்திற்கு முதலாகிய ஞேயமெனபதாம.

அட்டகுண மெட்டுச் சித்தி கோகனத னென்றது பைசாசபதத்தி னட்டமா சித்தியை நோக்கி எண்மடங் கேற்றமாகிய வட்ட சித்தியுடைய பிரமபதமென வதனபெருமை கூறிய வாறு.

கோகனதன் ஆகுபெயர்.

ஒற்று மிகாமை வடநூன்முடிபு

வாழ்வு குலவுபதம் திப்பிய மகளிரும் அதிவிசித்திரமாகி
ய மாடமு மாளிகையு முதலிய போக்கியப் பொருட் சிறப்புக
ளா னிறைந்து பெற்ற பதம்.

ஒற்றுமை பற்றிக் குணங் குணியாக வுபசரிக்கப் பட்டது.

இதனானே ஆணைசெரு முலகமெலா மலனைச் சேரா வென்
றறிந் ததனுமாறும் அந்நிலையே யாமாறும் வகுத் துணர்த்தி இ
ரண்டாங் கூறு வலி யுறுத்தப் பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.



இப்படி ஜீவபரமென திரண்டில்லை யெல்லாஞ் சிவமே
யென்ற பரிணாமவாதியை நோக்கிச் சிவ னின்மலனென்றும் ஆ
ன்மா மலசம்பந்தியா யிருப்பனென்று மது நீங்கினு லொழிந்து
சிவ தரிசன முண்டாகாதென்றுஞ் மே லருளிச்செய்கிறார்.

குறித்தடியினின்று - ஆசாரிய னறிவித்தபடியே யறிந்து
பரமேஸ்வரனுடைய திருவடியிலே தற்போதஞ் ஜீவியாமலந்த
ஞானமேயாய் நின்று,—அட்டகுணமெட்டிச்சித்தி-நற்குணங்க
ளாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களும் நுண்மை பெருமை
அறவுநொய்தாயிருத்தல் மிகவுங் கனத்திருத்தல் விண்மிசைபே
கல் பாரமெய்சேர்தல் வேண்டின வுருவைக் கொள்ளுதல் எங்
குந்தானேயாய் நிற்றல் என்னும் எட்டுச் சித்தியும்,—கோகனக
ம முதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-பிரமாவினுடை
ய ஐஸ்வரிய முதலாகவுள்ள ஐஸ்வரியங்களையும் கொண்டாடப்
பட்ட பதங்களையும் உபேட்சித்து,—நெறிபறுவகையும் மேலொ
டு கீழடங்க-கீழும் மேலும் எங்கும் நிறைந்து நிற்கத்தக்க சட
த்துவாக்களின வழியடங்கலும்,—வெறும்பொய்யென நினைந்தி

ருக்க - இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யெல்லாம் சுத்த வசத்தியமென்று இவையித்தை சிவஞானத்தாலே யறிந்து அந்தஞானமாய் நிற்கவே,—மேலொடு கீழில்லான் - முதல் நடு விறுதி மூன்று மில்லாதவனுமாய,—நிறுத்துவதோர் குணமில்லான - சொல்லப்பட்டதொரு குணங்களுமில்லாதநிர்க்குணனுமாய்,—தன்னையொருவற்கும் நினைப்பரியான் - தனனுண்மையைத் தானறிவிக்க வறியுமதொழிந்து ஒருவராலு மறியப் படாதவனுமாய்,—ஒன்றுமிலான் - சர்வமுந் தானாய் நிற்கச்செய்தே ஒன்றுந் தானல்லனுமாய் நிற்கிறவன்,—நேர்படவந்துள்ளே பொறுப்பரிய பேரன்பையருளி - வேதத்திற் றேன்றும லப்பிரகாசமாய் நின்றமுதல் தானே முத்தியில் பிரகாசித்து இவனுக்குள்ளே பொறுத்தற்கரிய மிகுத்த பத்தியையு முண்டாக்கி அதன் வழியே புகுந்திடுவன்,—எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே - அந்தப் பெரிய பத்திவழியாகத் தானுஞ் சென்றுகூடி எவ்விடத்திலு மில்லாத சிவபோகத்தைக் கொடாநிற்பன்.

இதற்குப் பிரமாணம், சங்கற்பநிராகரணம், "சத்தியுஞ் சிவமுந் தாமேறுசுருமென் - றிதநிறனுணர்வுவந் தெய்துவதெவர்க்கோ - தமக்கேயெனனிற் றமுணராமையு - மமைப்பரவுணர்தலு மவர்க்கடையன்றே" என்றும், சிவஞானபோதம், ௬-சூ, ௩-வெ, " நிற்குணனாய்நின்மலனாய் நித்தியானந்தனாய்த, தற்பரமாய்நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ, லானுவறிவாயளவிறந்து தோன்றானோ, வானேமுதல்களையின் வந்து" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது,ஆன்மா பாசமாகிய பிரபஞ்சத்தை யசத்தென்றறிந்து நீங்கிச் சத்தாகிய சிவம் பிரகாசிக்கு மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

அடியிற் குறித்துநின்று - குருவினருளா லறிவதோர் குறி
யின்க ணுறைத்து நின்றுகொண்டு,—அட்டகுண மெட்டுச்சித்தி-
பைசாசபதத்தி னட்டமாசித்தியை நோக்கி யெண்மடங் கேற்
றமாகிய வட்—சித்தியையுடைய,—கோகனகனைமுதல்-பிரமபத
முதலியவற்றின்,—வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-திப்பி
ய மகளிரு மதிவிசித்திர மாகிய மாடமு மாளிகையு முதலிய
போக்கியப்பொருட் சிறப்புகளா னழகுபெற்ற பதமாகிய காலா
க்கினி புவனமுத லநாசிருதபுவனமீறாகிய வெவ்வகைப்பட்ட பு
வனமும் இதற்குமுன்னனுபவித்துக் கழித்தமையிற் கான்றசோ
றெனக் கொண் டருவருத்துவிட்டு,—நெறியறுவகையு மேலொ
டு கீழுடங்கவெறும் பொய்யென நினைந்திருக்க,— அறுவகை யத்
துவாவுட்பட்ட மூவகைப்பிரவஞ்சமுங் காரணரூபத்திற் சிறிது
ங் காணப்படாமையான் பித்திகைவடிவங் காண்பார்க்குக் கா
ணப்படாதா யதன்கண்மறைந்த சித்திரவடிவம்போல முழுப்
பொய்யெனக்கண்டு அவ்வாறு கண்டகாட்சி சலியாதிருக்கப்பெ
றின்,—மேலொடு கீழில்லான் - மேலொடு கீழில்லானாகியும்,—நி
றுத்துவதோர் குணமில்லான் - குறித்தறிவதொரு குணமில்லா
னாகியும்,—தன்னையொருவர்க்கு நினைப்பரியான்- தன்னையொரு
வர்க்கு முணர்தற் கரியானாகியும்,—ஒன்றுமிலான் - ஒன்றுமில
னாகியும்,—உள்ளேவந்து நேர்பட - பிரவஞ்சத்திற் கிலக்கணமா
ன ஞானசொரூப மாண்டினிது விளங்கித்தோன்றும். தோன்ற
வே,—பொறுப்பரிய பேரன்பையருளி-வறியார்க்கு நிதிவாய்த்
ததுப்போலப் பெருஞ்சாகன் மீதூறும்,—அதுமீதூறவே, யத
ன்வழியே, "இன்பினினிதென்ற லின்றுண்டே லின்றுண்டா-ம
ன்பினிலையேயது" ஆகலான் அவ்வன்பின்வழியே,— எங்குமிலா

ப்போகத்தைப் புரிந்தே - எவ்விடத்து மறிதற்கரிய பேரின்ப மயமாய்,—புகுந்திடுவன - புகுந் தயிரினைகள் விளங்கித் தோன்று மந்தஞானத்திற்கு முதலாகியஞேயம்.

'இதனுனே யாசைதரு முலகமெலாம் அலகைத்தேராமென்றறிந் தசனுமாறு மந்நிலேயேயாமாறும்' பகுத்துணர்த்த இரண்டாங் கூறு வலியுறுத்தப் பட்டது.

☞ கூ-சூ, உ-ம், அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேன் மாயாவாதி ஜீவபரங்களை யொன்றென்றுரை யிருக்க நீ யிரண்டாகக் கூறிய தென்னென்று வினவ வுத்தர முணர்த்துகிறார்.

கண்டவிவை யல்லேனு னென்றகன்றுகாணுக் கழி பரமு நானல்லே னெனக்கருதிக்கசிந்த, தொண்டிறெ டு முளத்தவன்று னின்றகலப்பாலே சோகமெனப் பா விக்கத் தோன்றுவன்வேறன்றி, விண்டகலு மலங்க ளெலாங் கருடத்தியானத்தின் விடமொழியு மதுபோல விமலதையுமடையும், பண்டைமறை களுமதுநா னு னேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவத்தைக் காணே. (எ)

(இ-ள்) கண்டவிவை யல்லே னுனென்ற கன்று — ஆன்மாவானவ னிது விதுவென்று சுட்டியறியப்பட்டவைகளெல்லா வற்றையு மிது நானல்லவென் றதற்கு வேறாய்

காணுச்சுழியா முநானல்லே னெனக்கருதி — ஆன்மபோதத்துக் கெட்டாதிருக்கிற மேலான பரமசிவனும் நானல்லவென் றறிந்து. எனவே, பாசத்துக்கும் பதிக்கும் வேறுயிருப்பதோ ரான்மா வுண்டென் றறிவிப்பதாயிற்று.

கசிந்ததொண் டிநொடு மூளத் தவன்றானிவ றகலப்பாலே — அந்தச் சிவன் றானாககாநின்ற அடிமைத்திறத்துடன் கூடிநின்ற வான்மா விடத்திலெள்ளுக்கு ளெண்ணெய்போலவும் பூவினிடத்துக் கந்தமானது பொருந்தி நின்றாற்போலவு முள்ளும் புறம்புங் கலந்துநின்ற வைக்கியத்திறலே

சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றன்றி — நானந்தச் சிவனாகா நின்றேனென் றவனறிந்து பாவிக்க அப்பொழுது அவனிடத்தில் அநந்நியமாய்நின்ற சிவன்றனே பிரகாசியா நிற்பன்.

அச்சோகம் பாவனை ஆன்மாப் பரமான்மாவைக் கூடினவிடத்துத் தானென்பதொரு முதலின்றி யவனுடனே யிலயித்தொன்றாய்ப் போமென்னுட் வேதாந்தி மதம்போல வன்று. இங்ஙனஞ் சிவம் பிரகாசிககவே!

விண்டகலு மலங்களெலாம் — அநாதியாக விவனிடத்திற் செறிந்து நீங்காதிருக்கிற மலங்களெல்லாம் விட்டுப்போகாநிற்கும். அஃதென்போல வென்னில்?

கருடத்தியானத்தின் விடமொழியு மதுபோல — பாவனையிற் பட்ட கருடனாற் பாம்பொழியும். பாவனையே செய்யும் பலம் என்பதனாலிந்தப் பாவனை பண்ணவே மலமானவைகணீங்குமென வறிக.

| | |
|---|---|
| விமலதையு மடையும் | ஆதலா லிந்த வான்மா சுத்தனும். அஃதாவது, நின்மலத்துவத்தைப் பொருந்தா நிற்கும். |
| பண்டைமறைகளு மது நானு னேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக்காணே. | இந்தப் பாவனையைக்காண பழயதாகவிருக்கிற வேதங்கள் சோகம் பாவிக்கச் சொல்லுகிறது நீயதற்குப் பொருள்கோ ளறியாமல் விபரீதமாகக்கொண்டாய்காண். ஆதலாலது கூடாது. எ-று. |

ஸ: - அவன், அஹம் - நான். இதனைச் சோகமென்முர். இதுவடமொழி. இது செய்யுட்கண்ணும் வரப்பெறும்.

"செந்தமிழ்ச்செய்யுட் டெரித்துணர்த்துஞ் செய்யுட்கண் வந்தவடமொழியை மாற்றுதே—சந்தம், வழுவாமற் கொண்டியற்று மாண்பினுர்க் குண்டோ, தழுவாம லிற்குந் தமிழ்" எனவறிக.

வழித்தலைப்படுவான் சுழல்கின்றே னுனைபோ லென்னைப் பாவிக்கமாட்டேன் எனவறிக.

இதற்கு வாதுளம் சித்தாந்த சம்போதியிலு மறிக. (எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் வேதத்திலே சோகமெனறதனு லொன்றென்ற தன்று பிரிவற்ற வநுபவாதிசயத்தினுலே யது நானென்றதே யென்று முறைமையும் பேதமாகச் சிவனுக்கு சமனுயிருக்கு மெனனு மந்த மதிகளை நிராகரித்து சிவ ஜீவர்களுக்குத தாதாத்மிய மும் கூறுகின்றது.

கண்டவிவை யல்லே னென்றகன்று - ஆன்மபோதத்தி
னாற் பிரித் தறியப்பட்டதெல்லா மென்னுடைய ஸ்வரூபமல்ல
வென்று நீங்கி,—காணுக்சழிபரமு நானல்லேனெனக்கருதி- ஆ
ன்மபோதத்தினாலே காணப்படாமல் விஶ்வாதீதனாய் நிற்கிற
சிவனும் நானல்லனென்று புத்திபண்ணி,—கசிந்த தொண்டி
னொடுமுளத்தவன்றனின்றகலப்பாலே சோகமெனப் பாவிக்க
தமேதான்றுவன்வேறன்றி விண்டகலு மலங்களெல்லாம் விமல
னதயையடையச் கருடத்தியானத்தால் விடமொழியுமதுபோ
ல-கசிந்தசம்பந்தத்தினுடனே ஆனமாவிலே ஜீவன் வேறின்மை
யாகி நின்றமையா லந்தச் சிவனென்று பாவனைபண்ண வா
ன்மாவிலே வேறறப் பிரகாசிப்பன். சிவபாவனைபண்ணலே யா
ணவாதி பாசங்களெல்லா நீங்கிப்போ யான்மா நின்மலத்துவ
த்தைப் பொருந்துவன். அதென்போல வென்னில்? கருடபாவ
னையினாலே விடநீங்குமாப்போல,—பண்டைமறைகளு மதுநா
னேனென்றுபாவிக்கச்சொல்லுவ திப்பாவகத்தைக்காணே-
பழயதாகிய வேதங்களு மதுநானேனென்று பாவனைபண்ண
ச் சொன்னது நாமிப்பொழுது சொன்ன பாவனையைக் காணெ
ன் றிதன்பொருள.

ஏகார மீற்றசை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவயோக நிமித்தமாகுங் குலைந்த சிவசமாதிகூடும் பொரு
ட்டுப் பிரபஞ்சம் பொய் யென நினைந்திருத்தன் மாத்திரம் போ
துமோ வெனனச் சித்தாந்த சிவோகம்பாவனைத் திவக வேதாந்
த சோகம் பாவனை வேண்டுமென்று விளம்புகின்றார்.

கண்டவினை-தேகாதிப் பிரபஞ்சத் தாக்கி வாச்சியப்பொருளாய் மயங்கி யிருக்குங் குருலிங்க சங்கமாதிகள்,—

அல்லேனன் - நித்திய நிலையங் குலையுங் கண்டிக வடிவ தடத்த லக்ஷண முற்ற வயமிதம் பதவாச்சியப் பொருளாய்ச் சாலம்ப சிவ யோக விஷயமாய்த் தடத்தலக்ஷண சிவபதவாச்சியப்பொருட் சிவக்குறி பொறிக்கு மிடமாதலானும் வாச்சியப் பொருள் விட் டிலக்கியப் பொருட் சுவரூப லக்ஷண சிற்பரமிரண்டு மெடுத்துத் தொடுத் துரைத்தாலுஞ் சிவோயஞ் சிவமிதமென்று படர்ச்சைகப்பொருட் சுவரூப லக்ஷண சிவப்பொருளாய்ப் பாவிக்கப்பட்டு சிவோகமென்று தன்மைப் பொருட் சிவப்பொருளாய்த் தியானிக்கக் கிட்டித் தட்டாதாதலானும் அகம்பதத்தில் வாச்சியப்பொருட்டடத்தலக்ஷணத் தன்மைப் பொருட் பூதான்மாதி மந்திரான்மாந்த பஞ்சான்மக் குறிதாண்டிச் சிட்டவிலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத்தன்மைப் பொருட் சின்மாத்தி ரான்மாவாய்ச் சிவபதத்தில் வாச்சியப் பொருட்டடத்த லக்ஷணத் தன்மைப் பொருட் பிரமாதி சாங்க சதாசிவாந்த பஞ்சேசுவரக் குறிதாண்டிச் சிட்ட விலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத் தன்மைப் பொருட் பரக்குறி பதித்துப் பின்னஸ்மிபதத்தில் வாச்சியப்பொருட் டடத்த லக்ஷணத்தன்மைப்பொருட் டியான சமாதி யுபாதி யுற்ற சின்மாத்தி ரான்மாக்குறி பரக்குறி யிருகுறிதாண்டிச் சிஷ்ட விலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத் தன்மைப் பொருட் சிவக்குறி பொறிக்கப் பாத்திரவானுகையால்,—

நானன்றென் றகன்று பஞ்சவித சாலம்ப சிவயோக மார்க்கத் தொரு மார்க்கத்தால் முப்பத வாச்சியப்பொருள் கடந் துன்மனையுற்று,—

காணுக் கழிபரமும்-பரோக்ஷ வநாதிமுத்த பரசிவமும்,

நானல்லேன் படர்க்கைப் பொருளாதலாற் றன்மைப்பொருளா
கிய,—

நானல்லேன் எனக் கருதி - சிவோயஞ் சிவமிதமென்று
சிந்திக்கலாம், சிவோகமென்று சிந்திக்கப்படாது. ஆரோபிதமா
யப்படியுஞ் சிந்திக்கலாமென்றுஞ் சிந்திதது,—

கசிந்த உளத்து - ஆன்மாவில்,—

தொண்டினொடும் - சமயதீட்சையிற் சைவர் செயற்கை
யாய்ப் பாவிக்கு மியற்கையாய் வைஷ்ணவ ரெப்போதும் பாவி
க்கும் தாசோகம் பாவனை வாசனையோடு,—

அவனருள் - சிவனருள்,—

நின்ற கலப்பாலே - நிலைபெற்ற சாங்கரியத்தாலே சிவோக
மென்று சிறப்பித்துச் சிந்திக்கப்படான். ஏவப்படுந் தாசத்
தன்மையுமேவுஞ் சிவத்தன்மையும் என்மாதா மலடியென்பது
போற் பகைத் தேகீபவித்துப் பாவிக்கப் படாதாகையால். ஆகி
லெப்படி ?—

சோகமெனப் பாவிக்க - இரண்டுங்கெட்ட வைஷ்ணவ தா
சோகம் பாவனை வாசனை துடைத்துச் சித்தாந்தச் சிறப்புச் சி
வோகம் பாவனைத் தீபக வேதாந்தப் பொதுச்சோகம் பாவனை
யஸ்மியந்தத் தனைத்துச் சோகமென்று பண்ண,—

தோன்றுவன் வேறின்றி - தாசோகம் பாவனை வாசனை த
ள்ளியந்தத் தஸ்மியனைத்துச் சிந்தாந்தச் சிறப்புச் சிவோகம்
பாவனை பண்ணப் பண்ணிக் குறிபொப்பித்து வேற்றுக குறியி
ன்றி சீயன் முத்தியிற் சமாதி முற்றிச் சாட்சாத கரிக்கப்படுவ
ன். நீரிப்போது செப்பியது செப்பமன்று. ஸ்வரூப சிவபாவனை
சத்தியமானதுபோ லாரோபித சிவரூப சிவபாவனை சத்தியம
ன் றசத்தியமே! அசத்திய மெப்படிப் பலங்கொடுக்கும்? சத்தி
யம் நீ சாற்றியது. முத்திசெய் சிவாவிர்ப்பாவ பாத்திர பாவ

னையாகலாற் சத்திய சிவ பாவனையினாற்போல அசத்திய சிவபாவனையினாலும்,—

கருடத் தியானத்தால் விடமொழியு மதுபோல மலங்களெல்லாம் விண்டகலும் -பிரியாது பிரிந்து நீங்காது நீங்கும்,—

விமலதையு மடையும் - சிவத்துவாபி வியத்தியும் ஸ்திதஸ்தாபிதமாம்.

விண்டகலு மென்பதனால் முத்திபலமும், விமலத்தையு மென்பதனால் வியத்திபலமுமவிளம்பப்பட்டன.

தொண்டிஞே டென்பதனைநின்றகலப்பாலெனபதோடு விசேஷியாமற் சிலர் பாவிகக வெனபசோடு படுதநி விசேஷித்தார்கள் சிவோகந் தாசனென்று சிந்திப்பார்களாய் மன்மாதா வந்தியை யென்றும் வழக்குரைப் பார்கள்,—

பண்டை மறைகளும் -

பிரவாகா நாதிச் சுருதிகளும்.

உம்மையினாற் சில விடத்து சிவாகமங்களும்,—

அது நானேனென்று பாவிக்கச் சொல்லுவது-இதத்துமமென்று தியானிக்கச் செப்புவது,—

இப்பாவகத்தைக் காணே - இச சிவோகம பாவனைத் தீபக சோகம்பாவனையைத் தானே,—

சோகமென்பது பரோக்ஷாபரோக்ஷப்பகைப்பொருள், ஐக்கியப் பிராந்தி யாகையால்.

“தாஸோஹ மிதிஸம்மோஹம் ஸோஹமேவ பரிப்ரம:
அஹமேவ பரிப்ராந்தி தஸ்மாத்ரீணி பரித்யஜேத்.”

என்று சில சிவாகமத்திற் றள்ளி யிருத்தலால் அப்படிச் சிவோகம் பாவனையே பகையாமற் பாவிக்கப் படுமென்று படித்திருந்தாலுஞ சோயம் தேவதத்த னென்பதுபோற் சுருதிசொ

ற் சித்த விவேகத்திருற் சிவோகம் பாவனைத் தீபமாகச் சோக மென்று மொருவழி சொல்லலாமென்று தாற்பரியம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும் இங்ஙனம் விபரீதமாக வுணர்கின்றன. உயிராவது சுட்டுணர் வுட்பட்ட வப்பாசமு மன்று சுட்டுணர் விறந்துநின்றவப் பதிப் பொருளு மன்று இரண்டற்கும் வேறெனக் கண்டு, வேறாகிய பாசத்தை மேற் கூறிய வாற்று லொருவி, ஏனைப் பதிப் பொருள் வேறாயினும் வியாப்பிய வியாபக பாவகத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றி னொளியும் போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினையும் இறைவன் கலப்பினையும் நோக்கி நின்று, கருடோகம் பாவனை யொருவன செய்யப் பெறுமாயின, அக்கருட னம்மாந்திரிகனுக்கு வேறாதலின்றி யத்து விதமாய்த் தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யு மாறுபோல, சிவனு மிவனில் வேறாதலின்றி அத்து விதமாய்த் தோன்றி மலங்களை நீக்கிச் சுத்தனாகச் செய்வன். வேதாந்த மகாவாக்கியத் திற்கும் இதுவே பொருளாகக் கொள்க வென்பதாம்.

இப்பாவனை யின்றி யமையாச் சிறப்பிற்றென்ப துணர்த்துவார், பயனு முடன் கூறினார்.

பரமுமெனற வும்மை இறந்தது தழீஇது.

பரம் அவனெனத் திணைமயங்கிற்று.

தொண்டாவது சார்ந்ததனவண்ணமா மியல் பையுடைய வுயிர் கழிபரமு நானல்லே னெனக் கருதியவழி முன்போல முனைத்தலின்றி ஒங்குணர்வி னுள்ளடங்கி அதன் வழித் தாய் நிற்றல்.

முனைத்து நின்று செய்யும் உலகத் தொண்டினீக்குதற்குக் கசிந்த தொண்டென விசேடித்தார்.

வேறாய வழியுஞ் சோகமெனப் பாவித்தற் குறிய வினைப்பு இருவர் மாட்டு முண்மை விளக்குவார், கசிந்த தொண்டினொடு முளைத்தவன்றா னின்ற கலப்பாலே யெனறார்.

கருட பாவனையை யெடுத்துக் காட்டியதும் அதன்கணைய நீக்குதற் பொருட் டென்பது.

எனவே கருடோகமெனப் பாவிக்கு மத்துவித பாவனைக்கு மந்திரத்தின தாற்றலும் அவ்வாற்றல்வழி நின்று பாவிக்கும் மாந்திரிகன தாற்றலும் ஒருதலையான் வேண்டப்பட்டு ஆண்டைக்கு நிலை பெறுமாறு போல, சிவோக மெனப் பாவித்து நிற்கு மத்துவித நிலைக்கு இறைவனது கலப்பும் இவனது தொண்டும் ஒருதலையான் வேண்டப் படுமென்பது போந்தமையால், அங்ஙனந் தொண்டு செய்தற் குரிய ஆன்மாவினது ஞானக்கிரியைகளும் கலத்தற்குரிய இறைவன் ஞானகிரியைகளும் ஆண்டுக் கேடின்றி நிலைபெறு மென்பதூஉம் அருத்தியா னுணர்ந்து கொள்க.

“உன்றன் குலமிரண் டென்குலமிரண்டுங் குறுகிடா வண்ண மின்பமா யெனபாற் கூத்தையுங் கொண்ட தெப்படி” என வியந்து கூறிய தூஉம் இவ்வுண்மை நோக்கி யென்க.

இப்பெற்றித் தாகிய சுத்தாத்துவிதவுண்மை யுணரமாட்டாதார், ஒருபொருள் மற்றொரு பொருளாதல் யாண்டுமின்மையின் அது நானேனென்னு மொருவார்த்தைப் பொருள் படுமாறு யாங்ஙனமென் றசங்கித் தார்க்கு, ஒன்றுகெட்டு ஒன்றாமெனக் கொண்டு பரிணாமங் கூறுவாரும், அது நானென்னு மிருபெயரும் விட்டும் விடாத வாகுபெயரெனக் கொண்டு கேவலாத்துவிதங் கூறுவாரும், அவற்றுள் ஒன்றனை மாத்திர மாகு

பெயரெனக் கொண்டு விசிட்டாத்து விதங் கூறுவாருமா யிடர்ப் படுவர்.

அங்ஙன மிடர்ப்பட் டுரைப்பன வெல்லாம் பொருளல்ல வென்பார் 'பண்டை மறைகளு மதுநானே னென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே' என்றார்.

எனவே, வேதாந்த மகா வாக்கியமுஞ் சித்தாந்த மகாவாக்கியமும் பொருளா லொன்றென்ப தூஉம் பெறப் பட்டது.

ஈண்டுக் கருடனென்றது கருடனுக் கதிதெய்வமாகிய மந்திர சொரூபத்தை யாகலின் அப்பாவனை மெய்யாதற் கிழுக்கின்மை யுணர்க.

இதனானே திரு வஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிப் பார்க்கு வேண்டப்படும் பாவனை கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

அது நானென்று சாஸ்திரஞ் சொல்லுகைச் செய்தே நீரிதை யிரண்டாகச் சொல்லுவானேனென்ற பரிணமவாதியை நோக்கி மே லருளிச்செய்கிறார்.

கண்டவிவை நானல்லே னென்றகன்று - தேகாதிப் பிரபஞ்சத்தை இது நானல்லவென்று நியதிபண்ணி அந்தப் பிரபஞ்சத்துக்குத் தான வேறாய். தான் வேறென்றதெனனம்பு, அப்படியறிந்து நீங்கினதா லல்லோ அந்தச் சிவனெனனில்?—காணுக் கழிபரமு நானல்லே னெனக்கருதி - வாக்கு மனதீதமாயிருக்கிற மேலான சிவமுமல்ல நானென்றறிந்து,—கசிந்த தொண்டினொடு முளத்தவன்ற னின்றகலப்பாலே- பத்திபண்ணுகிற வடிமைத்திறத்துடனே பொருந்தின வான்மாவிலே பவன்கூடி நின்ற வயிக்கியத்தினால்,—சோகமெனப் பாவிக்கத் தோனறு

வன்வேறின்றி - நானவனென்றே தியானித்து நிற்கப் பேதத்தி ற் றோன்றாமல் அப்பிரகாசமாய்நின்ற சிவன் இப்பொழுது வே றறநின்று பிரகாசியா நிற்பன்,—விண்டகலு மலங்க ளெலா மே - அவனப்படிப் பிரகாசிக்கவே அநாதியே பொருந்திநிற்கிற மலங்களெல்லாம் விட்டுநீங்காநிற்கும். அதென்போலவென்னி ல்?—கருடத்தியானத்தில் விடமொழிபு மதுபோல விமலதையு மடையும்-விஷந்தீண்டினவன் றன்னைக் கருடனாகப் பாவிக்க அந்தப் பாவகத்தினாலே அவனுக்குண்டாகிய விஷந் தீர்ந்தாப் போல் இவனுமந்த ஜீவனென்று சோகம் பாவஞ்செய்ய நிமலத் துவமும் பொருந்தா நிற்கும்,—பண்டைமறைகளு மதுநா னே னென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக்கானே- பழமைபாய்வருகிற வேதங்களும் தத்துவமசியெனகிற மகாவா க்கியத்தினாலே அது நானே னென்று தியானிக்கச் சொல்லுவ தும் இந்தப் பாவனை தனைக்காண்

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம்-க - சூ, ௫-வெ, "கண்டதையன் றன் றெனவிட்டுக்கண்டசத்தா, யண்டனையா னமாவி னுய்ந்துணரப்—பண்டணைந்த, வூனத்தைத் தான்விடு மா றுத்தமனிலொண்கருட, தியானத்திற் றீர்விடப்போற் றோ ன" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவன் ஆன்மாவிலே நின்ற கலப் பை யறிந்து தானவனுக்கடிமையாய்ச் சோகம் பாவஞ் செய்ய வே தனக்குண்டான பாச நீங்குமென்னு முறைமையு மறிவி த்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(உடம்பே நானென்று மதுநீங்கியவழிப் பிரமநானென்று மிங்ஙனம் விபரீதமாக வுணர்கின்ற வுயிராவது) கண்டவிவைய

ல்லேனான் - சுட்டுணர் வுட்பட்ட வப்பாசமுமன்று,—காணாக்
கழிபரமு நானல்லேன் - சுட்டுணர் விறந்த வப் பதிப்பொருளு
மன்று,—என்றகன்று-இரண்டிற்கும் வேறெனக்கண்டு வேறாகி
யபாசத்தை மேற்கூறியவாற்றாலொருவி,—கருதிஅவனானாத்
துக்கப்பாலே நின்ற,—ஏனைப்பதிப்பொருள் வேறாயினும் வியாப
பியவியாபகத்தாற் கண்ணொளியு ஞாயிற்றொளியும்போலவேற்
றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய,—கசி
ந்ததொண்டரொடுமெனக் கருத - தனதுதொண்டினையு மிறை
வனகலப்பினையு நோக்கி நின்று,—சோகமெனப் பாவிக்க - க
ருடோகம் பாவனைபோல சிவோகம் பாவனை யொருவன் செய்
யப்பெறுமாயின,—கருடத்தியானத்தால் விடமொழியு மதுபோ
ல-அக்கருடனம்மாந்திரிகனுக்குவேறாதலின்றி யத்துவிதமாய்த்
தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறுபோல,—வேறி
ன்றித் தோன்றுவன - சிவனு மியனிலவேறாதலின்றி யத்துவித
மாய்த் தோன்றி,—மலங்களெல்லாம் விண்டகலும விமலனை
யுமடையுர-மலங்களை நீக்கிச் சுத்தனாகச் செய்வன,—பண்டை
மறைகளுமது நானேனென்று பாவிக்கச் சொல்லுவது இப்பா
வகத்தைக்கணே-வேதாந்த மகாவாக்கியத்திற்கு மிதுவேபொ
ருளாகக் கொள்கவென்பதாம்.

இதனானே திருவஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிப்பார்க்கு வேண்டப்படும் பாவனை கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்நிலை மயங்கிற்றாகின் மேலோ ருபாயநிட்டை
யுணர்த்துகின்றார்.

அஞ்செழுத்தா லான்மாவை யரனுடையபரிசு ம
ரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையுமறிந்திட், டனு

செழுத்தா லங்ககர நியாசம்பண்ணி யான்மாவி லஞ்செ ழுத்தா லிதயத்தர்ச்சித், தஞ்செழுத்தாற் குண்டலியி னனலேயோம்பி யணைவரியகோதண்ட மடைந்தருளின்வ ழிநின், றஞ்செழுத்தை யிதிப்படி யுச்சரிக்கமதியருக் கணையரவம் போற்றேன்று மான்மாவிலரனே(அ)

(இ-ள்.) அஞ்செழுத்தா லானமாவைய ரனுடைய பரிசும் — ஸ்ரீபஞ்சாக்கரத்தினுள்ளே சிவமுஞ் சத்தியு முந்நின் றன்மாவை நடுவேவைத்த முறைமையு மறிந்து, என்னவே! சிவ ஞானமாக்கள் பாசத்தை நீக்கி யனுக்கிரகஞ் செய்கையா லான்மாவைச் சிவனுடைமை யெனறார்.

"ஊனநடன மொருபா லொருபாலா - ஞானநடந் தானடுவே நாடு. "சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும் - பவமிதுவே யோதும்படி" என்றுருமாபதி சிவாசாரியார்.

"சிவஞ்சத்தியானமாத திரோதத்திமிரஞ்-சிவமுதலேந்து சிந்தைசெய்" என்றொமதகுரவர்.

"யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள்சேர் மருங்கில் வேற்றுமைசாரும்" எனனு மிலக்கணத்தால் மூன்றனுருபு ஏழாமுருபாயிற் றெனவறிக.

அரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்டு — சகள நிட்களமாகிய சதாசிவமூர்த்திக்குஞ் சகளமூர்த்திகளுக்கும் ஸ்ரீபஞ்சாக்கரமே திருமேனியான முறைமையினையு மறிந்து, அவை வருமாறு,—

யகாரம் லிங்கம். வகாரம் நாளம், சிகாரம் மேற்பதுமம், மகாரங் கண்டம், நகாரங் கீழ்ப்பதுமம். நகாரஞ் சத்தியோசாதம, மகாரம் வாமம், சிகாரம் அகோரம், வகாரந தற்புரு

டம், யகாரம் ஈசானவத்திரம், ஆகத் திருமேனியான வாறு காண்க.

"யகார மிலிங்கமாம் நாளம் வகாரஞ், சிகாரமேற் பீடந் தெரிக்கின்—மகாரந்தான், கண்டமேயாகுங் கவிஞ ரடிப்பீடம், பண்டிகழு நம்காரமே யார்." "நகாரமேசத்தியோ சாதமுக நாடின், வகாரந்தான் வாம மெனமதிக்கச்—சிகாரம், அகோர ம்வகாரந் தற்புடமாகும், யகார மீசான முக மென்" என்றொ மதுகுரவர்.

மேற் சகளத்தைத் தரிசிக்கிறது; நகாரம் பாதம், மகாரம் வயிறு, சிகாரந்தோள்கள், வகாரம் முகம், யகாரந் திருமுடி" எனவறிக.

"நவ்விரண்டுகாலதாய் நவின்றமவ்வும் வயிரதாய்ச், சிவ்விரண்டுதோள்களாய்ச் சிறந்தவவ்வும்வாயதாய், யவ்வும்யவவு முடியதா யெழுந்தசெம்மல் நேர்மையைச், செம்மையோர்ந்து நிற்பதே சிவாயவைஞ்செழுத்துமே" எனவறிக.

இவ்விரண்டும் பஞ்சாக்கர தரிசனமென வறிக.

அஞ்செழுத்தா லங்ககரநியாசம் பண்ணி

ஸ்ரீ பஞ்சாக்கரத்தாலே கரந்நியாச மங்கந்நியாசங்களைப் பண்ணி. அஃதாவது:—

கநிட்டாதி யங்குட்டாந்தமான கரங்களிலே யகார வகார மகார சிகார நகாரங்களைச் சங்கார ந்யாசம்பண்ணி, பாத முதல் தலையீறான வங்கங்களிலே யவ்வெழுத்துக்களை யடைவே நியாசம்பண்ணி இருதய முதலிய தானங்களிலே சடங்கங்களை நியசித்து, மற்றவங்கங்களிலே பிரணவத்தை நியசித்து,

ஆன்மாவினை யஞ்செழுத்தா லிதயத்தர்ச்சித்து

ஆன்மாவி னிதயத் தஞ்செழுத்தா லர்ச்சித்தெனப் பதமாறுக. சூரியகோடிப் பிரபை போன்ற ஆன்மாவினது இதய கமலத்திலே பஞ்சாக்கரமே வடிவான சிவனை யெட்

டன்குல வுயரத்தையுந் தனக்கு வேண்டினதொரு நிறத்தினையு
ஞ் சிவலிங்கமாகக் கற்பித் தஞ்செழுத்தாற் பூசைபண்ணி,

அஞ்செழுத்தா
ற் குண்டலியி னை
லையோம்பி

குண்டலியெனப் பெயரையுடைய நாபி
த்தானத்தே யிருக்கிற நாடி யட்டகோண
முமாய்ப் பாம்பானது மண்டலமாகப் பே
ழைசெய் திருக்கிறதைக் குண்டமாகப் பா
வித் ததினுளே ஞானாக்கினிநின்று சொலிக்கிறதாகப் பாவித்
தந்த ஞானவனலைச் சுழுமுனை நாடியிலே மேலே கொண்டுபோ
ய்ப் பிரமரந்திரத்திலே வைத்து, அந்த வனற்பொறியோடு மே
கோபவிக்கிறதாகப் பாவித்து, அதினாலேதான் சுத்தனாய்க் கி
ழேயிறக்கி நாபியி லக்கினியிலே கூட்டிச் சதாசிவனைப் பூஜித்து,

“அஞ்செழுத்தாற் சொன்ன வனைத்தினையுஞ் செய்யடை
வே - யஞ்செழுத்தே மந்திரமேலாம்” என்றாரெமது குரவர்.

அந்த நாடியினின்று மேலே புறப்பட்டு விந்துத்தானத்
தை யடைந்திருக்கிற வமிர்ததாரையாகப் பெருகுகிறத்தை மன
தாகிற பாத்திரத்திலே வாங்கி யிடைபிங்கலைகளாகிற சுருக்குச்
சுருவங்களாலே யஞ்செழுத்தை யுச்சரித் தோமஞ் செய்து.

அணைவரியகோ
தண்ட மடைந்த
ருளின்வழி நின்
று

கருவி கரணாதிகளை விட்டுச் சென்று கூடு
தற்கரிதாகிய புருவமத்தியத்தைப் பொருந்
தித் தன்னுடைய வாதீனமின்றி யருளின்வ
ழியேநின்று சரற்காலத்திற் சந்திரப் பிர
பைபோலத் தியானித்து

அஞ்செழுத்
தை விதிப்படியு-
ச்சரிக்க

“நம்முதலா யோதிலருணாடாது நாடும
து, சிம்முதலா யோதுநீசென்று” என்னும்
விதியறிந்து நாடோறுந் தனக்கியன்ற மாத்
திரஞ் சபஞ்செய் திருக்கில்

மதியருக்கன
னையரவம்போற்

ஒருக்காலுங் காணப்படாதிருக்கிற இரா
குகேதுக்களுபராகத்தாலெப்படி காண

ரேன்று மான் ப்பட்டிருக்குது, அதுபோலச் சிவனு மந்தவா
மாவிலரனே. ன்மா விடத்திலே வந்து பிரகாசியா நிற்கு
ம். எ-று.

அரன் எழுவாய்.

தோன்றும் பயனிலை.

இதற்குச் சிந்தியம் காரணம் சுப்பிரபேதத்து மறிக.

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

மூதலே யோசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றதை மேல் விரித்துக் கூறுகின்றது.

அஞ்செழுத்தாலான்மாவை யரனுடையபரிசு மரனுருவம ஞ்செழுத்தா லைந்தமையுமறிந்து - அஞ்செழுத்திலேலே யான்மாவைச் சிவனடிமையாகவுடைய பரிசாவது:—பஞ்சாக்ஷரத்தினுடைய பொருள், சிவன்பொருட்டு நமஸ்காரமென்று சொல்லும். நமஸ்கரிக்கிறவ னடிமையும் நமஸ்காரத்தைக் கொள்ளுகிறவ னுண்டவனு மாகையா லான்மா வடிமையுஞ் சிவ னுண்டவனுமென்கிற முறைமையும், நகாராதி யைந்தெழுத்தும் நிவிர்த்தியாதி யைந்து கலைகளுக்கும் பீஜமாதலால் நிவிர்த்தியாதி பஞ்சகலைகளையும் வேறாக சத்தியோசாதாதி பஞ்சமந்திரங்களுமுதித்துச் சதாசிவர்க்குத் திருமேனியானமையு முணர்ந்து,—

அஞ்செழுத்தா லங்கநியாசம்பண்ணி - யகாராதிநகாராந்தம் பீஜமாக ஈசானுதி மந்திரங்களை யங்குஷ்டாதி கநிஷ்டாந்த மாகவும் ஹரஸ்வப் பிரணவாதி யகாராந்தம் பீசமாக இருதயாதி மந்திரங்களை கநிஷ்டாதி யங்குஷ்டாந்தமாகவும் † நியசித்து சிரசுமுதல் பாதாந்தம் இருதயாதி அஸ்தாந்த மந்தப்படியே நியசித்துப் பஞ்சாக்ஷரத்திலுலே பஸ்மீகரணம் பண்ணி,—

அஞ்செழுத்தாலிதயத் தான்மாவி லர்ச்சித்து-இருதயகம லத்தி னடுவே ஆன்மலிங்கத்திலே பஞ்சாக்ஷரத்தினலே பஞ்ச பிரம ஷடங்க மூர்த்தியாகிய சதாசிவ தேவனை மேற்சொல் லு மந்தர் × யஜநப்படியே பூஜைபண்ணி,—

குண்டலியி னஞ்செழுத்தா லனலையோம்பி- குண்டலிமஸ் தகத்தி ஞ்பிகுண்டத்தில் வைந்தவாக்கினியிலே சந்திர மண்ட த்து லமிருதங்கொண்டு பஞ்சாக்ஷரத்தினலே ஓமம்பண்ணி,—

அனைவரிய கோதண்ட மடைந்து தருளின் வழிநின்று- யோகப்பிபாசத்தினலே யல்லது கிட்டப்போகா புருவமத்திய த்தை மூலாக்கினியை யெழுப்பி வாயு வன்னிபீசத்தை யுச்சரித் ததன்வழித்தாய்ச் சென்றடைந்து நூருயிரஞ் சந்திர சமான மாயிருக்கிற சிவமண்டலத்திலே சமாதியடைந்து சிவனுடைய ஆஞ்ஞாசத்தி பிரேரிக்கத் தான் ¶ பிரேரியனாய் நிற்குமுறை மை கண்டு, அவ்வாறே யெல்லாத் தொழில்களையுஞ் செய்து நின்று,—

அஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க மதியருக்கனையரவ ம்போற்றோன்று மான்மாவிலரனே - பஞ்சாக்ஷரத்தை நாலுவ ர்ணத்தவர்களும் நாலாசிரமத் தவர்களு மின்னபடி ஜபிக்க வென்று சிவாகமஞ் சொன்னபடியே ஜபிக்கத் தனித்துக் கா ணப்படாத ராகு கேதுக்களைச் சந்திரசூரிய ரிடமாகக் காண் பித்ததுபோல ஆன்மாவிலே சிவ சாந்நித்யமாகப் பிரகாசிப்பனெ ன்றிதன் பொருள்.

இந்தப் பஞ்சாக்ஷரத்தின்கிரமங் கிரியாதீபிகையிலே விஸ் தரித்துச் சொன்னேம் கண்டுகொள்க

† நியசித்து-நியாயஞ்செய்து, × யஜநம்- யாகம், ¶ பி ரேரியன் - பிரேரிக்கத் தக்கவன்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இந்நிலையுங் கூடாதோர்க்குச் சுத்த பஞ்சாக்ஷரத் துவார த்தினாற் சிவோகம் பாவனைத் தீபகமா மஞ்செழுத்து சப மறைகினறார்.

அஞ்செழுத்தா லான்மாவு மரனுடைய பரிசும் - மறைஞான தேசிகர் விரித்துரைத்தபடி யகாரமான்மா சிகாரம் சிவம் என்பன முதன்முறையும்,—அரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையும் - சிகாரமகோரமென்பது முதன் முறைமையிற் சதாசிவாதி ரூபமுற்றதும் அறிந்திட்டு,—அஞ்செழுத்தாலங்க கரநியாசம்பண்ணி - கனிஷ்டாதி யங்குஷ்டாந்தங்களில் யகாராதியாகக் கரநியாசமும் பாதாதி மூர்த்தாந்தங்களில் நகாராதியாக வங்கநியாசமும் பண்ணி,—குண்டலியில் - நாபித் தானத்தில்,—கோதண்டம் - புருவமத்தியம்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

கசிந்த தொண்டினொடு முளத்தவன்றானின்ற கலப்பாலே சோகமெனப் பாவித்தற்கண் ஆன்மாவுஞ் சிவமு மங்ஙனம் உடைமையு முடையானுமாய் நிற்கும் பரிசை ஐந்தெழுத்தோது முறையின் வைத்துணர்ந்து, "ஆடும்படி கேள்" எனவும் "சேர்க்குந் துடிசிகரம்" எனவு மோதியவாறே அவன் றிருமேனி அஞ்செழுத்தா லமைந்த பரிசு முணர்ந்து, அம்முறையே அங்கநியாச கரநியாசங்களு மவ் வைந்தெழுந்தாற் செய்து கொண்டு, இதயமுந்தி புருவ நடுவென்னும் மூன்றும் பூசைத்தானம் ஓமத்

தானந் தியானத் தானமாகக் கற்பித்துக் கொண்டு, அந்தானம் வழிபட்டு நின்று கொண்டு அவ் வஞ்செழுத்தை விதிப்படியே மாறி நெஞ்சழுதத யுச்சரித்தல் செய்க. இவ்வாறு சிவோகம்பா வனையுந் திருவஞ் செழுத்து மந்திரமும் அந்தரியாகக் கிரியையு மென்னும் இம்மூன்றும் ஒருவழிப்பட நின்று கொண்டு அதனை க் கணிக்கப் பெறுவார்க்கு, நவக் கோள்களுள் ஏனை யேழும் போலக் கண்டற் செல்லாத ராகு கேதுக்கள் உபராகத்திற் சந்திராதித்தர் மாட்டுக் காணப்படு மாறுபோல, முப்பொருள களுள் யாவுந் தனை யறிந்தே னறிகின்றேனென னு மறிவிற்கு வி டயமாய்த் தோன்று மேனைப் பசுபாசங்கள் போலப் புலனு காதவழிப் பதிப்பொருள் அவ்வுச்சரிப்பி லான்மாவின் மாட்டு விளங்கித் தோன்று மென்பதாம்.

அறிந்திட் டென்பதனை மேலுங் கூட்டுக.

ஆன்மாவை யரனுடைய பரிசுமென்ற வுண்மையால் ஆன்மா அரனுக் குடைமையாம் பரிசு மறிதலினு லறிந்திட் டென்பது உம் பெற்றும்.

அரனுருவு மென்ற வுண்மை சிறப்பு

அரனுருவு மஞ்செழுதகா லமைந் தமையு மறிதல் இதயத் தி லானமாவில் அவ்வாறு கண்டு அர்ச்சித்தற்பொருட் டென்க.

இனி உண்மைமை யெண்ணும்மையாக்கி, அஞ்செழுக்தா லா ன்மாவை யரனுடைய பரிசு மரனுருவு மறிந்திட்டெனக் கண் ணழித்து, ஆன்மாவையும் அரனுடைய பரிசாகிய திருவருளையுஞ் சிவ சொரூபத்தையும் அஞ்செழுத்தா லுணர்ந்தென்றும், அஞ் செழுத்தா லமைந்தமையு மறிந்திட்டெனபது அமைந் தொழிந் த மலங்களையு மைந்தெழுத்தி லுணர்ந் தென்றும் உண்மை வி ளக்கஞ் சிவப்பிரகாச முதலிய வற்றுள் ஓதிய வாறுபற்றி யுரை த்தலு மொன்று.

இப்பொருட்குக் "கற்பனவு மினியமையும்" என்றாற்போல அமைதல் வேண்டாதொழி தன்மேற்று.

மை அஞ்சனம் மலம் என்பன ஒரு பொருட்கிளவி.

ஈண்டு மலமென்றது ஆணவ திரோதங்களை.

இவை கழிக தொழிந்தமை பற்றி வேறுவைத் தெண்ணப்பட்டன.

அணைந்து தியானித் தெனற் பாலது அணைந் தென்று உபசரிக்கப் பட்டது.

அல்லுழிப் பயன் படாமை யுணர்த்துவார், விதிப்படியென ஈண்டுக் கூறினார்.

இதனானே ஆன்மைக்கு வேண்டப்படும் மந்திரமுங் கிரியையுங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மேல் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே ஆன்மாவைச் சிவனுக் கடிமையான பத்தி டண்ணுகிற முறைமை மாணுக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

அஞ்செழுத்தா லான்மாவு மரனுடையபரிசும் - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே ஆன்மாவைச் சிவனுக் கடிமையானபடி யறிந்து,—அரனுருவுமஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்டு - பரமேஸ்வரனுக்கு பஞ்சாக்ஷரந் திருமேனியான முறைமையுமறிந்து,—அஞ்செழுத்தா லங்ககரநியாசம்பண்ணி யான்மாவில் - ஆன்மாவிலே பஞ்சாக்ஷரத்தினாலே அங்கநியாசமுங் கரநியாசமுஞ்செய்து,—அஞ்செழுத்தா லிதயத்தர்ச்சித்து - அந்தச் சிவனைப் பஞ்சாக்ஷரத்தினாலே யிதயகமலத்திலே பூசித்து,—அஞ்செழுத்தால் குண்டலியி னனலையோம்பி-பஞ்சாக்ஷரத்தினு

லே நாபி குண்டலத்திலே சுவாகாவென்று அக்நிகாரியஞ் செய்து,—அணைவரிய கோதண்டமடைந் தருளின்வழிநின்று-பொருந்துதற்கரிய யிலாடத்தானத்தின் கீழான புருவமத்தியிலே சிவன் ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கிற தன்மையை அவனுடைய ஞானத்தினாலே யறிந்து சோகம்பாவஞ்செய்ய அப்பொழுதே சிவனுக்கு அடிமையாவன். இப்படி நிற்க ஆன்மசுத்தி வருகிறபடி எப்படியென்ன மேலருளிச்செய்கிறார்.—அஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க - பஞ்சாக்ஷரத்தை உபதேசப்படியே யறிந் துச்சரிக்க,—மதியருக்கனணையரவம்போற் றோன்றும்-ஆதித்தனிடத்திலும் சந்திரனிடத்திலும் ஆச்சரியமாக இராகு கேதுக்கள் கூடினவிடத்து அந்தச் சந்திராதித்தர்களை யுள்ளடக்கி இராகு கேதுக்கள் மேலிட்டு நின்றாற்போல,—ஆனமாவிலரனே - அந்தச் சிவனுனென்று சோகம்பாவஞ் செய்யி லப்பொழுதே காட்டத்தி லக்கினி தோன்றினாற்போலச் சிவனுமான்மாவிலே தோறின்ப் பிரகாசியா நிற்பன்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம்,௯-சூ, ௩-வெ, அஞ்செழுத்தாலுள்ள மரனுடைமை கண்டரனை, யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற், குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சாநிக்கி, லண்டனுஞ் சேடனு மங்கு”

அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க மதியருக்க னணையரவம் போற்றோன்று மானமாவிலரனே என்றதற்குப் பிரமாணம் சிவஞானபோதம்,௯-சூ,எ-வெ, “இந்துவிற்பானுவி லிராகுவைக் கண்டாங்கு, சிந்தையிற்காணிற் சிவன்கண்ணே—முந்தவே, காட்டாக்கித்தோன்றிக் கனல்சேரும்பென்ன, வாட்டானுமோ தஞ் செழுத்து” எனனுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே ஆன்மா சிவனுக் கடிமையென் றறிந்து பூசை யோமத் தியானங்களும்

ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே செய்யக்கடவ னென்றும், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுள்ளமரியாதி யறிந்து சோகம் பாவஞ்செய்ய இந்த வானமாவை யுள்ளடக்கிச் சிவன் பிரகாசித்து நிற்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

ஆன்மாவை யரனுடையபரிசு மஞ்செழுத்தா லறிந்திட்டு - கசிந்ததொண்டினொடு உளத்தவன்முனிறகலப்பாலே சோகமெனப் பாவித்தற்கா ஞனமாவுஞ் சிவமு மங்ஙனமுடைமையு முடையானுமாய் நிற்கும் பரிசை யைந்தெழுத்தோது முறைமையினவைத் துணர்ந்து,— ஆனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்டு - ஆதிமபடிகேள் எனவும் சேர்க்குந் துடிசிகரம் எனவும் ஓதியவாறே யவன்றிருமேனி ஐந்தெழுத்தா லமைநத பரிசுமுணாந்து,—அங்ககரநியாச மஞ்செழுததாற் பண்ணி-அம்முறைமே அங்கநியாசம் கரநியாசங்களு மவ்வைந்தெழுத்தாற் செய்துகொண்டு,—இதயததுக் குண்டலியி னிணைவரிய கோதண்டம்-இதய முந்தி யிணைதற்கரியபுருவநடுவென்னு மூன்றும்,—ஐஞ்செழுத்தா லான்மாவி லர்ச்சித் தஞ்செழுத்தாலனலேயோம்பி யடைந்தருளின வழிநின றஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க-முறைமே பூசைத்தான மோமத்தானந் தியானத்தானமாகக் கற்பித்துக்கொண்டுஅங்ஙனம் வழிபட்டு நின்றுகொண்டவைநதெழுததை விதிப்படியேமாறி நெஞ்சழுத்தி யுச்சரித்தல் செய்க. இவ்வாறு சிவோகம்பாவனையுந் திருவஞ்செழுத்து மந்திரமும் அங்கிரியாகக் கிரியையுமெனனு மிம்மூன்றுமொருவழிப்படநின்றுகொண்டு அதனைக் கணிக்கப்பெறுவார்க்கு,—மதிபருக்க னிணையரவம்போல் - நவக்கோள்களுள் ஏனைஏழும்

போலக் காண்டல் செல்லாது ராகு கேதுக்க ளுபராகத்திற் ச
ந்திராதித்தர் மாட்டுக் காணப்படுமாறுபோல,—ஆன்மாவிலா
ணவேற்றானும்-முப்பொருள்களுள் யானிதனையறிந்தே னறிகின்றி
லேனென்னு மறிவுக்கு விடயமாய்த்தோனறு மேனைப் பசுபாச
ங்கள்போலப் புலனாகாசவழிப் பதிப்பொருளவ் வுச்சரிப்பிலா
ன்மா வின்மாட்டு விளங்கித் தோன்றும்.

இதனானே ஆணவைக்கு வேண்டப்படும் மந்திரமுங் கிரி
யையும் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



முதற்கட் டொகுத்துக்கூறியதன்றி வேறோர்விதி பி
ருதிவி முதற் சிவமீறான தத்துவங்களோதியா
னிக்கு முறைமை யுணர்த்துகின்றார்.

நாட்டிய தயந்தானு நாபிதனிலடியாய் ஞாலமு
தற் றத்துவத்தா லெண்விரலுளத்தாய், மூட்டுமோகி
னிசுத்த வித்தைமலமெட்டாய் முறைவிதமெட் டக்க
ரங்கண் முறைமையினி லுடைத்தாய்க், காட்டுகம
லாசனமே லீசர் சதாசிவமுங் கலாமூர்த்த மாமிவற்றி
ன் கண்ணாகுஞ்சத்தி, வீட்டையருள் சிவமூர்த்தி மா
ஞெகிச்சத்தி மேலாகி நிற்பனிந்த விளைவயிந்துபோ
ற்றே. (௯)

(இ-ள்.) நாட்டிய — சிவனைப் பூசித்தற்குக் கற்பிக்கு மிருதய கம
தயந்தா — லத்துக்கு நாபிதானமே யடியாகச் சொல்
னு நாபித — லும்.
னிலடியாய்

ஞாலமுதற்ற மாணிக்க நிறம்போன்றிருக்கிற கிழங்கே
த்துவத்தா லெ பிரதுவிதத்துவமாய், அப்புமுதல் மாயையீ
ணவிர ளுளத ருகக் கிழங்கின மேலே நீலநிறம்போன றெ
தாய் ட்டங்குல வுயரத்தை யுடைய நாளத்தினடி
வே நவதத்துவாரத்தையும் பவளம்போன்ற
முள்ளினையும் பொருந்தி,

மூட்டு மோகி அந்தநாளத்தி னுனியிலே பூவினடியிலே
னி பொருந்திய முடிச்சு மாயையாகவும்,

சுத்த வித்தை சுத்தவித்தியா தத்துவமே யெட்டிதழ்த்
மலரெட்டாய் தாமரைப் பூவாய் அஃதெச்சிறப்பை யுடைய
தெனில் சுவேத நிறத்தினை யுடைய வெட்டி
தழினையும் பன்னிரண்டங்குல விரிவினையு முடைய கமலத்து நா
ப்பண் ணோரங்குல வுயரத்தினையும் விரிவினையும் அதிலேம்பத்
தோரெழுத்தை விதையாகவும் ஓடவைத்த பொன்போனற க
ர்ணிகையினையு மதனைச் சூழ அங்கிரம்போன்ற அறுபத்துநாலு
கேசரங்களையு மதனுனியிலே முத்துப்போலவு மிப்படியிருக்கிற
பதுமத்தில்.

முழுவித மெழ கிழக்குமுதலாகப் பிரதானமான வெட்டி
ட்டகரங்கண் தழிலும் அடைவே ஓம்சிவாய நமோநம வே
முறைமையினி வக்கரங்க ளெட்டினையும் பொருந்தி இவ்வெ
லுடைத்தாய் ட்டிதழினையு மட்டவித்யேசுர ரதிட்டித்
திருப்பர்கள்.

காட்டுகமலா இப்படிச் சொல்லப்பட்ட பதுமத்தின்
சனமேலீசர் மே லீஸ்வர தத்துவத்திலிருக்கு மகேஸ்வ
ரராகவும்,

சதாசிவமு சதாசிவதத்துவத்திற் சனியாதி யா
ங் கலா மூர்த்த கிய சத்திகள் முப்பத்தெட்டுக் கலைகளையும்
மாம் வடிவாகவுடைய சதாசிவ மூர்த்தியும்,

| | |
|---|---|
| இவற்றின் கண்ணுகுஞ்சத்தி | இவைக ளிருக்கிறதத்துக்குஞ் சத்தித்தத்துவத்தி லிருக்குஞ சத்தி, |
| வீட்டையருள் சிவன் மூர்த்தி மாஞுகிச் சத்தி மேலாகி நிற்பன் | சத்திக்கு மேலாகி வீட்டையருள் சிவன் மூர்த்திமாஞுகி நிற்பன. எனப்பதமாறுக. முற்கூறிப சத்திதத்துவததுக்கு மேலாகிய சர்வான்மாக்களுக்கு மோட்சத்தைக் கொடாநிற்கிற சிவதத்துவ மெல்லாத்துக்கு மேலாகிநிற்கும். |

ஈண்டுச் சத்தியென்பது நாலாம்வேற்றுமை, குல்வென்ஞுருபு தொக்கது.

| | |
|---|---|
| இந்த விவேவறிந்து போற்றே | இப்படி மண்முதல் சிவதத்துவமீருக வாதனமும் மூர்ததிமானுமாய் நிற்கு முறைமையினை யறிந்து சிவனை யாராதனை செய்வாயாக. எ-று. |

முழுவிதழெனச் சிறப்பித்தமையா லுபதள மூளதென்றதாயிற்று.

சதாசிவமுமென்ற வும்மையா லீசுர தத்துவமுங் கூறியதாயிற்று.

சிவன் எழுவாய், நிற்கும் பயனிலே.

நீ முன்னிலேத்தொகை எழுவாய்.

போற்று பயனிலே.

இதையபதுமம் வாழைப்பூப்போல அதோமுசமாய் நாலங்குலந் தாழ்ந்திருக்கும். தாழ்ந்திருக்குமென வேறுஇிருக்க அக்கமலத்திற் பூசிக்கச் சொல்லிய தெனனெனில்? அதனே யுத்தம பீஜ மந்திரத்தாற் பண்ணி யலர்ந்ததாகப் பாவித்து அதிற் பூஜையென்றது.

இதற்குக் காமிகம் சுப்பிரபேதம் நிசுவாசம் சூதசங்கிதை காலோத்தரம் கிரணத்து மறிக. (௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலந்தர்யசனக்கிரமங் கூறுகின்றது.

நாட்டுமிகயந்தானும் - இருதய கமலங்களிலே நிரூபிக்கப்
பட்டதுதான். உம்மை சிறப்பும்மை,—நாபியினிலடியாய் ஞான
முதற்றத்துவத்தா லெண்விரனுளத்தாய் - மூலாதாரத்திலே
கூர்மம். கூர்மத்துக்கு நடுவிலே ஆதாரசத்தி. கூர்மத்தின்மேல் அ
னந்தனுக்கு பத்மாசனம். அதன்மேலேயநந்தன் நாபிமட்டாய்.
அனந்தனுடைய சிரசிலே பிருதிவி, தாமரைக்கிழங்கு. அப்புத
த்துவ முதலாகக் காரிய மாயாதத்துவ மளவு முப்பது தத்து
வங்களும் எட்டங்குல நாளம். பஞ்சாசற்பாவமுந் தாமரைத்
தண்டினூல்கள் நாளத்தின் முள்ளுகள் நூற்றுத் தொண்ணூற்
றொரு புவனங்கள்.—மூட்டுமோகினி - தண்டுக்கு மிதழுக்கும்
நடுவிசைதலையதோமாயை. அதன்மேல்,— சுத்தவித்தை மல
ரெட்டாய் - சுத்தவித்தியா தத்துவ மெட்டிதழாய்,—முழுவி
தமெட்டக்கரங்கள் முறைமையினி லுடைத்தாய் - இந்திராதி
திக்கு பாலருடைய பீசமான அஷ்டாக்ஷரத்தைக் கிரமத்திலே
யுடைத்தாய். கிரமமாவது யகாராதி ஹகாராந்தமெட்டும் வாயு
அக்நி இந்திரன் வருணன் யமன குபேரன் நிருதி ஈசானன். திக்
குதனங்கள்,—ஈசர் சதாசிவங்கள் - அனந்தாதி மகேஶ்வரர் வ
சிப்பதான வீஶ்வர தத்துவங்கள் கேசரங்கள். சதாசிவர் வசி
க்குஞ் சாதாக்கிய தத்துவங் * கர்ணிகை.—காட்டு-காட்டாகி
ய சூரிய சோமாக்நி மண்டலங்கள் மூன்றும் தளாக்கிர விர்த்
தத்திலும் கேசராக்கிர விர்த்தத்திலும் கர்ணிகா விர்த்தத்திலு
ம். இவையிற்றுக்களுக்கு அதிபதிக ளடைவே பிரம விஷ்ணு ரு
த்திரர்கள். இவ்வாறுள்ள,—கமலாசன மேல்-என்றதனாற் கர்
ணிகையின் மேற் சதிமயமாகிய விமலாசனத்திலே யெனக்

கொள்க,—கலாமூர்த்தமாமிவற்றின் கண்ணுகுஞ்சத்தி வீட்டை யருள்சிவன மூர்த்திமானுகிச் சத்தி மேலாகிநிற்பன்-ஈசாநாதி பஞ்சபிரம மந்திரங்களின் கலைகள் முப்பத்தெட்டும் சதாசிவமூர்த்தியாம். இந்தக் கலைகளை சசிநியாதி முப்பத்தெட்டு சத்தியு மதிட்டித்திருக்கும். இனி முத்தியைக் கொடுக்கும் பரமசிவ னிந்தச சத்திகளாலாகிய தேகத்துக்குப் பிராணனுமா யிந்தச் சத்திகளுக்கு அதீத நிலையாகிய நிர்விகற்ப ஞானுநந்த ஸ்வரூபியாகநிற்பன்.—இந்தவிளைவறிந்து போற்றே-இந்த விளைவாவது பராயாதி பஞ்சசத்திகளுஞ் சுத்தமாயையிலே பதிய வதனுற் சிவசாதாககியம் அமூர்த்தி சாதாக்கியம் மூர்த்தி சாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியம் கன்மசாதாக்கியம் எனவைந்து பேதமாயொன்றையொன் றாஸ்ரயித்துக்கொண்டிருக்கும். இந்தமுறைமையை யறிந்து கன்மசாதாக்கியத்தைப் பூஜைபண்ணவென் றிதன்பொருள்.

இதன் விஸ்தாரங் கிரியா தீபிகையிலே சொன்னோங் கண்டுகொள்க.

* கர்ணிகை - தாமரைக்காய்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இதயத் தர்ச்சனுப் பிரகார மறைகின்றுர்.

நாட்டு மிதயந்தானும் - இருதய கமலமும்,—நாபியினில் அடியாய் - கந்தமாய்,— ஞாலமுதற் றத்துவத்தா லெண்விர லுளத்தாய்,—மூட்டு மோகினி - புறவிதழ் முடிச்சு மாயை,—சுத்த வித்தைமலர் - சுத்த வித்தியா தத்துவ முட்பது மாசனம். ஈசுவர தத்துவ மாகிய,—முழுவித ழெட்டாய்,—ஓம் நமசிவாயநம வென்னும்,—எட் டக்கரங்கள் முறைமையினி லு

டைத்தாய் காட்டு கமலாசனமேல் - காண்பிக்கப் பட்ட பது மாசனப் பொருட்டில், சாந்தியாதி நிவிர்த்தி யந்த சதுஷ் கலாசத்தி மண்டலத்திற் சாந்தி யதீத கலாரூப சிவமண்டல மந்தர்ப்பவிக்கு மாதலால்.—ஈசர் சதாசியங்கள் - அனந்தாதி யதிஷ்டிதாக் கலாஞ் சம்புவீசுரர்கள் உருத்திர சதாசிவரொருவருமே யிலிங்கத்திற் பூச்சிய ராதலாற் கலேசுர சதாசிவ முதற் சதாசிவாகளு மாசனத் தந்தாப் பவிப்பார்கள்.—அவற்றின் கண்ணுருஞ் சத்தி - சிவாசனத் திடத் துச் சாந்தி யதீத கலாக் கொழுந்தா மிந்திகாதி நாத கலா சமஷ்டி லிங்கா திஷ்டாயக ஈசானி முதல் மூர்த்தி யீருகுஞ் சத்தி சமஷ்டிக் குறிச் சத்தி,—கலாமூர்த்தமாம் - அஷ்டத் திரிம்சத் கலாகர்ப்பித சதாசிவ தேகமாம்.—விட்டையருள் சிவன - அதிகாரா வஸ்தாரூட பரசிவம்,—மூர்த்திமானுகி - தேகியாகி,—சத்திமேலாகி - தேகத்துச்சூட் சிவனாய்,—நிற்பன - இருப்பன.—இந்த விளை வறிந்து போற்றே - இச்செய்தி புணர்ந்து பூசிப்பாயாக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இசயத் தர்ச்சிதசற்கு, நிலமுதற் சத்தி தத்துவ மீருகிய முப்பதனைந்தினையுங் கிழங்கு முதற் பீ-மீருகிய அவயவங்களாக வுடைய் இதய கமலம் ஆசனமும், அதன்மேற் சத்தி மூர்த்தியுட், சிவன மூர்த்திமானுமா மெனபதாம்.

சிவதத்துவஞ் சத்தி தத்துவங்கட்குத தம்முள் வேறுபாடு சிறிதாதல் பற்றிச் சிவதத்துவத்தை வேறெண்ணுது சத்தி தத்துவத்து ளடக்கிக் கூறினுர்.

சத்தி மேலாகி யென்றதனுற் சத்தி மூர்த்தி யென்பதூஉம் பெறப்பட்டது.

அற்றேல், மேல் ஐந்தெழுத்தா லமைந்த வுருவெனக் கூறி
அதனையின ஆன்மாவி லர்ச்சித் தெனவுங் கூறி ஈண்டுச் சத்திமூ
ர்த்தி யென்றன் மலைவாம் போலு மெனின்? ஆகாது. அம்மூ
ன்றும் முதல்வனுக்கு முறையே தூலவடிவுஞ் சூக்கும வடிவும்
அதிசூக்கும வடிவுமெனக் கோடலா மென்பது.

அண்டமோரணுவான் பெருமை கொண்டு கரணங்களெ
ல்லாங் கடந்து நின்ற வவ்விறைவனே அணுவோ ரண்டமாஞ் சி
றுமை கொண்டு ஆன்மாக்க ளுய்தற் பொருட்டு உடம்பினுள்ளு
மவ்வாறு நிற்கின்றான், அதனை யறிந்து செய்யாதவழிப் பூசையா
ற் பயனில்லை யென்பார் இந்த விளைவறிந்து போற்றே யென்
றார்.

தன்னின முடித்தலால் ஓமித்தல் தியானித்தல்களினும்
இவ்வாறே யுணர்ந்து செய்யப்படு மெனக் கொள்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

இத்தன்மை கூடாதவர்களுக்குச் சிவனை யுள்ளே பூஜித்து
அதினாலே ஆன்மசுத்தி யுண்டாகுமுறைமை யருளிச்செய்கிறார்.

நாட்டிதயந் தானு நாபியி னடியாய் - சொல்லப்பட்ட
விதயமாகிய தாமரைப்பூத் தனக்குக் கிழங்கு நாபித்தானமா
ய், — நாலமுதல் தத்துவத்தா லெண்விரனாளத்தாய் - பிருதிவி
முதல் கலையந்தமாகவுள்ள முப்பத்தொரு தத்துவத்தாலே அந்
தப் பூவுக்குத் தண்டு எட்டங்குல நீளத்தை யுடையதாய், — மூ
ட்டுமோகினி - நாளமும் பூவும் பொருந்தின மூட்டு அதோமா
யையாய், — சுத்தவித்தைமலர் - தாமரைப்பூச் சுத்தவித்தையா
ய், — எட்டாய் முழுவித ழெட்டக்கரங்கள் - எட்டு அக்கரங்களு
ம் பூவுக்கு நிறைந்தவித ழெட்டாய், — முறைமையினை யுடைத்

தாய்க் காட்டு கமலாசனம் - முன்சொன்ன கிழங்குமுதல் இத ழ்முடிவான முறைமையினை யுடைய பிரமாசனமாயிருக்கிற மு ப்பத்திரண்டு தத்துவத்துக்கும் நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை யெனகிற கலைகள் வடிவாம்.—மேலீசர் சதாசிவங்கள் கலாமூர் த்தமாம் - இந்த வாதனத்துக்குமேலீசுரத்துவமும் சாதாக்கி ய தத்துவமும் நடுவிற் கரணிகையாம். இவையிரண்டுக்கும் சா ந்தியும் சாந்தியாதீதமும் வடிவாம்.—இவற்றின் கண்ணதுஞ் சத்தி - சத்திதத்துவம் இந்த கர்ணிகையிற் கண்ணான விந்து க்களாம்,—வீட்டையருள் சிவன்மூர்த்திமானாகிச் சத்திமேலாகி நிற்பன் - மோக்ஷத்தைத் தருகிற அந்த நாதம் அதற்குப் பிரா ணனுமாய் மேனிரந்தரமுமாய்ச் சத்தி தத்துவத்துக்கு மேலு மாய் இந்தப் பூவுக்குச் சுந்தமுமாய் நிற்பன் —அந்தச் சிவனை இந்த விலைவறிந்து போற்றே - இப்படி பூசித்தாலுண்டாகிய பயனை யறிந்து அந்தச் சிவனுமென்று சோகம்பாவஞ் செய்கி றதுதானே அந்தரியாக பூஜையாம்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம்,கூ-சூ, அ- வெ, "மண்முதருள மலர்வித்தை கலாரூப, மெண்ணரியவீசர் ச தாசிவமு—நண்ணிற், கலையுருவா நாதமாஞ் சத்திபதன சண் ணு, நிலையதிலா மச்சிவன்மு னோர். எனனுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, அத்துவா சோதனைசெய்து சிவ னைக் கூடுகிற வந்தரியாகத்தின் முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

நாபியினில் - உந்தியில்,—ஞாலமடியாய் - பிருதிவிதத்துவ ம் கிழங்காகவும்,—முதற்றத்துவத்தா லெண்விரனுளத்தாய - பிருதிவியை முதலாகவுடைய ஏனை யப்பு முதலிய இருபத்துமூ

ன்று தத்துவங்களு மெண்விரலளவைத்தாயுள்ள நாளவடிவமாகவும்,—மூட்டுமோகினி சுத்தவித்தை மலரெட்டாய்-அசுத்தமாயையின் காரியமாகிய வித்தியாதத்துவங்க ளேழுஞ் சுத்தவிதையுமென்றும் எட்டுதத்துவங்களு மெட்டிதழ் வடிவாகவும்,—முழுவித மெழுட்டக்கரங்கள் முறைமையினி லுடைத்தாய் - அவ்விதமெழுட்டிற்கு முறையே அக்கரங்களை யுடையதாகவும்,—ஈசர்சதாசிவமும் கலாமூர்த்தமாம் - ஈசவரஞ் சதாசிவமென்னுமிரண்டு தத்துவமும் அறுபத்து நான்செனப்படும் கேசரவடிவமாகவும் பொகுட்டு வடிவமாகவும்,—சத்தியிவற்றின் கண்ணுகும் - சததிதத்துவம் பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொருபீஜவடிவமாகவும் உடைய,—நாட்டு மிதயந்தானுங் காட்டு கமலாசனம்-நாட்டப்படு மிதயம கமலாசனமும்,—மேல்சத்திமேலாகி-அதன்மேற் சததிமூர்த்தியும்,—வீட்டையருள் சிவன்மூர்த்திமாகி நிற்பன் - வீட்டினை யருளுகின்ற சிவன் மூர்த்திமானாகியு நிற்பனாதலின்,—இந்த விளை வறிந்து போற்றே.

இம்முறையை யறிந் தர்ச்சிப்பாயாக வென்பதாம்.

---

மறைஞானதேசிகர் உரை.



முற்கூறிய வந்தரிபாகத்துக்கு வேண்டு முபகரணங்களு மதனாற் பிரயோஜனங்களு முணர்த்துகின்றார்.

அந்தரியா கந்தன்னை முத்திசாதனமா யறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தியாகும், கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாகக் கண்டனவெல் லாமனத்தாற் கருதிக்கொண்டு, சிந்தையினிற் பூசித்துச் சிவனைஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தற்பணத்தை

விளக்க, வந்திடுமவ் வொளிபோல மருவியரனுளத்
தே வரவரவந் திடுவன்பின் மலமானதறுமே. (௧0)

(இ - ள்.) அந்தரியாகந் தன்னை முத்தி சாதனமா யறைந்திடுவர் — ஞாதாக்க ளிந்த அந்தரியாகபூசை ஞானயோகமாதலா லிதுவே பரமமான மோக்ஷத்துக் கேதுவென்று சொல்லுவர்கள். அஃதெக்காரணத்தாலெனில்?

அதுதானு மான்மசுத்தியாகும் — அந்த வந்தரியாகந்தானு நாடோறு மியற்றவே யான்மாவுக்குச் சுத்தியாம். அஃதியற்றுமாறெங்ஙனமெனில்?

சந்தம் — சந்தனம். அஃதாவது, போகத்திற் பற்றில்லாமையால் வைராக்கியமாகிறதே சந்தனம்.

மலர் — அட்டபுஷ்பம். அஃதாவது, கொல்லாமை. யிந்திரிய நிக்கிரகம். அஃதாவது, புறக்கருவியின் வழி போகாதிருத்தல்.

சாந்தி — அஃதாவது, உட்கருவி யடக்கல். தயை ஞானம் சத்தியவசனம் பேசுகை. தவம் பாவம். அஃதாவது, மனவழுக்கற் றிருத்தல். என வெட்டினையு மறிக.

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார்.
என்று ராதலி னறிக.

புகை — தூமம். அஃதறிந்து, பிராணாயாமம் போக்குவரவுடனே கூடியிருக்கிற மணமாகிற பாத்திரத்திலே பிராணனாகிற அக்கினியை யிட்டு கர்வமென்பதொரு தூபங்கொடுக்கை.

ஒளி — ஞானதீபம். அஃதாவது, புத்தியெல்லாத்தையும் பிரகாசிப்பிக்கையால் ஞானமே தீபமாயிற்று.

மஞ்சனம் — திருமஞ்சனம் நிறை.

அமுதமுதலாக — பிரத்தியாகாரமாகிற அம்ருதமே நைவேத்தியம். அஃதாவது, இந்திரியத் தவாரங்களிலே பற்றினமனதை யந்த விந்திரிய விஷயார்த்தங்களிலே செல்லாமற் றிரும்பக்கொண்டு போய்ப் பலகாலு மிதயத்திருத்தல்.

கண்டனவெல்லாமனத்தாற் கருதிக்கொண்டு — இவைமுதலிய வெல்லாத்தையு மிந்தப்பாவனைகளுடனே பாவித் துபசாரங்களைக் கொடுத்து

சிந்தையினிற் பூசித்துச் சிவனை ஞானத்தால் — சிவனை ஞானத்தாற் சிந்தையினிற் பூசித்து எனப் பதமாறுக. சர்வ வியாபியாயிருக்கிற சிவனை ஞானவிதியா லான்மாவினிடத்திலே யிப்படிப் பாவகத்துடன் பொருந்திப் பூசிக்க.

சிந்திக்கச் சிந்திக்கத கற்பணத்தைவிளக்க வந்திடுமவ் வொளிபோல — கண்ணுடியை விளக்கவிளக்க எப்படி மலினம்போய்ப் பிரகாச மதிகமா மதுபோல இவனு மான்மாவின் கண் பலகாலும் பலகாலும் நினைக்க நினைக்க ஞானம் பிரகாசியாநிற்கும்.

மருவியரனுளத்தே வரவரவந்திடுவன் — அனவரதமும் நினைக்க நினைக்கச் சிவனுமானமாவைப் பொருந்தி யிரண்டறநிற்கிற சிவன் பிரகாசியா நிற்பன்.

பின் மலமானதுமே. — சிவப்பிரகாச முண்டானவாறே யிவனிடத் துண்டாய மலங்களும் விட்டு நீங்கும். எ-று.

சிந்திக்கச் சிந்திக்க எ - து. வரவரஎன. விரகூட்டுறக் கிளர்த்தலின் அஃதிரட்டைச் சொல்லெனவறிக.

அது - சுட்டு.

தான் - அசை.

உம்மை - எதிரது தழீஇயவெச்சம்.

அறிந்தோர் அறைவர், அரன் அறம் என, எழுவாய் பயனிலைக் கூட்டுக.

“உடம்பெனு மனையகத்தே யுள்ளமே தகளியாக, மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி, யிடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற், கடம்பமா காளைதாதை சழலடி காணலாமே.” எனவும். “காயமே கோயிலாக்கிக் கடிமன மடிமையாக, வாய்மையே தூய்மையாக மனமணி லிங்கமாக, நேயமே நெய்யும்பாலு நிறையவே யமையவாட்டிப், பூசைகொ ளீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.” எனவுமறிக.

இதற்குச் சிவதருமோத்தரம் சுப்ரபேதம் வாதுளம் மோக சுரோத்தரம் பூசாத்தவத்து மறிக.

இந்நிலை கைவாராதார் புறத்தியிற் பூசிக்கு மவைகளைப் பாவித்துப் பூசிக்கவென்பதூம் பெறும். (கா)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

மேலிதுவுமது.

அந்தரியாகந் தன்னை முத்திசாதனமா யறைந்திடுவ ரது தானு மான்மசுத்தியாகும் - இருதயத்துள்ளே சிவனைப் பூஜிப்பதை முத்திக் குபாயமாகப் பெரியோர்கள் சொல்லுவர்கள். அந்த வந்தரியாகந்தா னான்மசுத்தி யாகும் - ஆன்மசுத்தியாவது ஆணவ மாயை கன்மமென்கிறவழுக்கு நீங்குவது. அதுவே முத்தி.

மேல் பூஜைபண்ணு மடைவு,— கந்தமலர்ப் புகையொளிமஞ்ச
ன மமுது முதலாகக் கண்டனவெல்லா மனத்தாற் கருதிக்கொ
ண்டு - ஜலம் கந்தம் புஷ்பம் தூபதீப நைவேத்திய மாதியாக
வுண்டான வஸ்துக்க ளெல்லாத்தையு மனத்தினாலே யுண்டாக்
கிக்கொண்டு. உண்டாகும்வாறு, பிருதிவி பீஜத்தையுச்சரித்து அ
சாதாரண பிருதிவியிலே நின்றும் கந்தம் புஷ்பம் தூபம் வஸ்தி
ரம் உபவீதம் அன்னம் அபூபம் தாம்பூலமுத லநேக வஸ்துக்க
ளையும் அப்பு பீஜத்தை யுச்சரித்து அசாதாரணஅப்பு தத்துவத்
திலே நின்றுஞ் ஜலம் பால் தயிர் நெய் தேன் கருப்பஞ்சாறு மு
தலான நெகிழ்ச்சியான வஸ்துக்களையும் வன்னி பீஜத்தை யுச்ச
ரித்து அசாதாரண வன்னி தத்துவத்திலே நின்றும் தீபம் ரத்தி
னாபரணம் தர்ப்பணமுதலான பிரகாச வஸ்துக்களையும் வாயு
பீஜத்தை யுச்சரித்து அசாதாரண வாயு தத்துவத்திலே நின்று
ம் ஆலவட்டம்விசிறி சாமர முதலான சலன வஸ்துக்களையும் வி
யோம பீஜத்தை யுச்சரித்து அசாதாரண வியோம தத்துவத்தி
லே நின்றுங் கண்டாநாதம் வீணாநாத முதலான நாதங்களையு
மிப்படிச் ÷ சம்பாதிதமான வஸ்துக்களினாலே,—நினைதயினி
ற் பூசித்துச்சிவனை - ஆன்ம லிங்கத்தினாலே சிவனைப் பூஜித்து
மேல்,— ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தைவி
ளக்கவந்திடு மவ்வொளிபோல் மருவியரனுளத்தே வரவரவந்
திடுவன்பின மலமாலதறுமே - சிவனை யென்பது நடுநிலைத்தீ
பம். சிவனை யவனது ஞானத்தினாலே சிவபாவனையை மேன்மே
லும் பண்ணக் கண்ணாடியை விளக்க விளக்க முன்னப்பிரகா
சமா யிருந்த வொளியே பிரகாசமானதுபோல அநாதியே யா
ன்மாவிலே பிரிவறப் பொருந்தி யிருக்கிற சிவன் சிவ பாவனை
கைவரக் கைவரச் சிவனு மதிகமாகப் பிரகாசித்துப் பிரகாசி
த்து வருவன். தத்னுகுணமாக வாணவமலமும் நீங்கி நீங்கி வந்

து சிவன் பூரணமாகப் பிரகாசிக்க மலம் நிச்சேஷமாகப் போ மென் றிதனபொருள்.

÷ சம்பாதிதம் - சம்பாதிக்கப்பட்டது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இவ் வந்தரியாகமும் ஒருவழி யான்ம சுத்திமுன்னாகப் பின் பண்ணப்பட்டுச் சாலம்ப சிவயோக மூலமாதலாற் சாலம்ப சிவயோக மார்க்கத்தாற் சமனுந்தம் போய்ச் சமனுந்த முற்றுப் பாச முத்தி நிராலம்ப சிவயோக பாதநிர சின்மாததிரான்ம சிகதிக் குறி யான ம சுத்தியாமதனுற் சாலம்ப சிவயோக மவலம்பித் தந்தத்து நிராலம்பித்து நிராலம்ப சிவயோகம் பண்ணப் பரமுத்தியா மெனறு பகர்கின்றார்.

ஞானத்தால் - முனசொல்லியபடி இருதயத்திருந்து நிராலம்பிதமுப் பண்ணும் நிராலம்ப சிவத்தியானத்தால்,—சிந்திக்கச் சிந்திக்க - தியானிக்கத தியானிக்கத் தியானமுற்றுஞ் சிவ சமாதியால்,—மருவி யரனுளத்தே வரவர - சிவன் ஆனமசிற் சத்தியினகண் சாநித்தியனுகச் சாநித்தியனுக,—மலமானதறுமே - மலமுததிவருமே.—பின தருப்பணத்தை விளகக வந்தடுமவ்வொளிபோல் ஆனமா,—வந்திடுவன - சிவத்துவாபி வியத்த்திமானுவன் —வந்திடு மவ்வொளிபோல ஒளி வரவர மருவியரன் வந்திடுவன,—மலமான தறுமென வுரையுரைத்தாற் காரியமுந்துதலும் காரணம் பிந்துதலுமாய வியத்தி முந்துதலும் முததி பிந்துதலுமாய் முறைமைத் தட்புவரும். வந்திடு மவ்வொளிபோல மருவியரன் வநதிடுவ னெனறுலும் திஷ்டாந்த விரோதமா மாதலாலு மப்படி யுரைப்பதன்று.

மற்றைய வெளிப்பொருள.

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

கண்ணாடிக்குப் பொடியிட்டு விளக்க விளக்க ஒளி மேலிட்டு மாசு நீங்குமாறு போல, ஆன்மாவி லெவ்வாறு ஞானத்தா லர்ச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலுஞ் செய்யச் செய்ய ஆண்டுச் சிவம் மேலிட்டு மேலிட்டு வந்து விளங்கித் தோன்றும். தோன்றவே ஆணவமலந் தேய்ந்து தேய்ந்து பற்றறக் கழியும். அங்ஙன மான்ம சுத்திக்கு ஏதுவாகலான் அவ்வந்தரியாகம் ஒருதலையான் வேண்டப்படும் முத்திசாதனமென் றறிக வென்பதாம்.

அதுதானு மான்ம சுத்தியாகுமென ஒற்றுமை பற்றிக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார்.

உம்மை சிறப்பு.

கந்தமலர் புகையொளி மஞ்சனமமுது முதலாக் கண்டன வெலா மனத்தாற் கருதிக் கொண்[illegible]ங்கைதனி லர்ச்சிக்க வெனவே, அவற்றை யங்ஙனங் கற்பி[illegible]க் கோடலு மனுவாதத்தாற் பெற்றாம்.

மனத்தாற் கருதுமாறு "காயமே கோயிலாகக் கடிமனமடிமையாக" என்பது முதலிய திருவாக்குக்களானு மறிக.

ஞானத்தா லென்பதனை அர்ச்சிக்க வென்பதனோடுங் கூட்டுக.

சிந்திக்க வென்றது முன்னையது ஓமித்தன் மேற்று.

இவையிரண்டு செய்யுளானும் அந்தரியாகஞ் செய்யுமாறும் அஃதான்மைக் கொருதலையான் வேண்டப் படுவதென்பதூஉங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படியுட் பூசையாகச் சொல்லப்பட்ட அந்தரியாகத்துக்குப்பயனெப்படியென்ற மாணாக்கனை நோக்கியருளிச் செய்கிறார்.

அந்தரியாகந்தன்னை முத்திசாதனமாயறைந்திடுவர் - இப்படி பூசிக்கிற உட்பூசையாகிய அந்தரியாகத்தை மோக்ஷயேதுவென்றே சொல்லுவர்களறிவாலுயர்ந்தோர்.—அதுதானுமான்மசுத்தியாகும் - அந்த வந்தரியாகந்தான உயிர்க்கு விளக்கமுமாம். இந்தப் பூஜைக்குண்டான வுட்கரணங்களேதெனில்?—கந்தமலர்ப்புகையொளிமஞ்சன மமுதமுதலாகக் கண்டனவெல்லாமனத்தாற கருதிக்கொண்டு - கந்தபுஷ்ப தூபதீப மஞ்சனந் திருவமுது முதலாக நூல்களிற் சொல்லப்பட்டனவெல்லா மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு,—சிந்தையினிற் பூசித்துச் சிவனை - தனக்குப் பிராணனாய் நிற்கிற பரமேசுவரனைத் தன்னுடைய விதயத்திலே பூஜித்து,—ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்க - சிவஞானத்தாலே அவனைச் சந்ததமும நினைக்க நினைக்க,—தற்பணத்தை விளக்க வந்திடுமவ்வொளிபோல் - கண்ணாடியை விளக்கவே மேலேயுண்டாகிற பிரகாசம்போல,—மருவியருளத்தே வரவரவந்திடுமவை - சிவன் ஆன்மாவைப் பொருந்தி நின்று மேலேமேலே பிரகாசிப்பாய்நிற்பன. அங்ஙனம் பிரகாசிக்கவே,—பின்மலமானதறுமே - முன்ன அநாதியே மறைத்துக்கொண்டு நின்ற ஆணவமலமாகிய வந்த வந்தகாரம் இப்பொழுதிந்தச் சிவப்பிரகாசத்தாலே நீங்கும்.

இதனாற் சொல்லியது பூசைக்கு வேண்டத்தக்க வுபகர

ணங்களெல்லா மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு ஞானத்தாலே யுள்ளே பூசிக்கிற பூசை ஆனமசுத்தியென்றும் அப்படி பூசிக்கவே இவனுக்குச் சிவப்பிரகாச முண்டாமென்றும் அந்த சிவப்பிரகாசத்தினாலே பாசமானது நீங்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

---

தற்பணத்தை விளக்கவந்திடு மவ்வொளிபோல் - கண்ணாடிக்குப் பொடியிட்டு விளக்கவிளக்க ஒளிமேலிட்டு மாசுநீங்கு மாறுபோல,—சிந்தையினிற்சிவனை-ஆன்மாவிற்சிவனை —கந்தமலர்ப்புகையொளிமஞ்சன மமுதுமுதலாகக்கண்டனவெலாம்-சந்தனம் புட்பம் தீபம் தூபம் திருமஞ்சன மன்னமுதலிய பூஜாத் திரவியங்களெல்லாம்,—மனத்தாற் கருதிக்கொண்டு ஞானத்தால்பூசித்துச் சிந்திக்கச் சிந்திக்க-மனத்தாற் கற்பித்துக் கொண்டு ஞானத்தா லர்ச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலுஞ் செய்யச்செய்ய,— மருவியரனானதே வரவர வந்திடுவன - ஆண்டுப்பொருந்திய சிவம் உள்ளத்தின் கண்ணே மேலிட்டு மேலிட்டு வந்துவிளங்கித் தோன்றும்.தோன்றவே,—பின்மலமானது றுமே - பின் ஆணவமலம் தேய்ந்துதேய்ந்து பற்றறக்கழியும்,— அதுதானுமானம சுத்தியாகு மந்தரியாகந்தனை முத்திசாதனமா யறிந்திடுவர்-அங்ஙன மானமசுத்திக்கேதுவாகலா னவ்வந்தரியாகம் ஒருதலையான் வேண்டப்படு முத்திசாதன மென்றறிக.

இவையிரண்டு செய்யுளானு மந்தரியாகஞ் செய்யுமாறும் அஃதாண்மைக்கு ஒருதலையான வேண்டப்படுவ தெனபதுங் கூறப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை.



அந்நிட்டையைப் பிரிந்தகாலத்திற் புறப்பூசை
யில் விருப்பமுண்டாகி லொப்பின மு
டிக்கதலாக வுணர்த்துகின்றார்.

புறம்பேயு மரன்கழல்கள் பூசிக்கவேண்டிற் பூம
ரத்தின் கீழிருந்த போதுகளுங்கொண்டு, சிறந்தாரு
ஞ் சிர்சிவனை ஞானத்தாலங்குச் சிந்திக்கும் படியிங்கு
ச் சிந்தித்துப்போற்றி, யரம்பாவங் கட்குநா மென்க
டவோமெங்கு மாண்டவனைக் கண்டக்கா லகம்புற மெ
ன்றேதே, திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றோ
சிரடியார் தம்முடைய செய்திதானே. (கக)

(இ-ள்.) புறம்பேயு மரன்கழலகள் பூசிக்க வேண்டில் — புறப்பூசையுஞ் செய்யவேண்டிற்றாயின தனைப் பூசிக்க. அஃதெவ்வாற்றா னெனின்?

பூமரத்தின் கீழிருந்த போதுகளுங் கொண்டு — பாதிரி கோங்கு அலரிமுதலிய கோட்டினின்று முதிர்ந்த பூமுதலியவற்றாற் பூசை செய்க.

இது மலையிலக்காதலால் புறத்துஞ் சிவபூசை பூவாற் புரி வார்க கரத்தினமலையிலக் கேயாம். எனவறிக.

சிறந்தாருஞ் சீர்சிவனை ஞானத்தா லிங்குச் சிந்திக்கும் படியங்குச்சிந் தித்துப் போற்றி — சர்வஞ்ஞனா யெவ்விடத்து நிறைந்துநிற்கின்ற அழகிய சிவனை யந்தரியாகம் பண்ணுமுறைபோ லிவ்விடத்து மப்படியே கருதிய பூசிப்பதுஞ் செய்து தோத்திரஞ்செய்து

அறம்பாவங்கட்கு நாமெனக்கடவோம் — யாமே யிவ்விடத்துச் செய்யும் புண்ணிய பாவங்கட்குத் தலைவனுதலா லவற்றி னைச் செய்ய வெமக்கென்ன றிவின்மையா லி வற்றினைக் கைவாறனு நுகர்வோமென்று, க ருதி யென்னவே யானமசமாபடணைவ கூறிய தாயிற்று

எங்குமாண்டவனைக் கண்டக்கா லகப்புறமென்னாதே — சாவவியாபியா யிருக்கிற சிவனை யிப்படி த் தரிசித்தவிடத் தகப்பூசை புறப்பூசை யென விகற்பித்துக் கருதலின்றிப் பூரணத் தைவிட்டு நீங்காது

திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றோ சீரடியார் தமமுடைய செய்திதானே. — சிறப்பினையுடைய ஞானிகள் இந்த நி லையிற் பிரியாது தாங்கள் தோன்றின கணமே யவன் பணியேயென்று பிறழாமல் வழிபா டுசெய்து நிற்கும். எ-று.

செய்து-எழுவாய்.

நிற்கை-பயனிலை

புறம்பேயு மென்னு முழமை யிழிவுசிறப்பு

ஏகார மெதிர்மறை.

இதற்கு தேவிகாலோத்திரம் சிவதந்திரம் இரகசியசா ரத்து மறிக. (௪௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

புறம்பேயு மரனைக்கழு பூசிக்கவேண்டில்-முன்சொன்ன வ ந்தரியசனத்திலே மன கலமபிறவாமற் புத்தியிலும் பூசிக்கவே ணுமென் றிச்சையுடைத்தாமாகில்,— பூமரத்தினைக் முதிராத

போதுகளுங்கொண்டு - சிவனுக்குச் சாத்தவுரித்தாகிய பூவையு டைய மரத்தின்கீழுதிர்ந்த வந்தப்புஷ்பங்களையும் முறைமையி னாலே திருமஞ்சன முதலானவையிற்றையுங் கூட்டிவைத்துக் கொண்டு,—சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தாலங்குச் சிந்திக் கும்படி யிங்குஞ் சிந்தித்துப்போற்றி-எவ்வுயிருக்குஞ் சிறப்புயி ராய்ப் பொருந்தி யழகுபெற்றிருக்குஞ் சிவனை ஞானத்தினாலே முதல் இருதயகமலத்திலே பாவித்தபடி யாசனமூர்த்தி மூர் த்திமானைப் புறத்தியிலே க்ஷணிகலிங்கத்திலே யாகுதல் ஆசா ரியர் கொடுத்த வாண லிங்கத்திலே யாகுதல் பூசைபண்ணி,— அறப்பாவங்கட்குநா மென் கடவோமென்று - இந்தப்பூசை ப ண்ணுகிறவிடத்திலே ÷ நூநாதிகங்களினாலும் மந்திரக்கிரியா பாவனைத் திரவியங்களினுடைய +சாங்கத்தினாலும் *வைகல்வி யத்தினாலுண்டான புண்ணிய பாவங்களுக்கு நமக்குமெனப் போகாது சிவன கூட்டின கரணங்களையுங் கொடுத்த திரவிய ங்களையுங்கொண் டேவினபடியே செய்தோமென்று பணிபற் றின்று. உம்மை சிறப்பும்மை,—ஆண்டவனைக் கண்டக்கா லகம் புறமென்னுதே திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றே சீரடி யார்தம்முடைய செய்திதானே - பதியாகிய சிவனை யெண்ணி றந்தகால மறியாம லிருந்தும் ஆசாரிய ருபதேசத்தினாலே சிவ ன் சுவாமியென்றும் நாமடிமை யென்றும் அறிந்தபின் புள்ளு ம் புறம் பென்னும லெவ்விடத்துஞ் சிவனுக்கடிமைத் தொ ழிற் செய்வதன்றே வழுகிய சிவனடியார் தொழிலாவதென் றிதன்பொருள்.

எட்டாஞ்சூத்திரத்தில் 'புதியவிரைப்போது' என்றுசொல் லி யிவ்விடத்துப் பூமரத்தின் கிழுதிருந்த தென்றது விரோத மென்னில் அஃதன்று எட்டாஞ்சூத்திரத்திற் சொன்னது கிரக ஸ்தவிஷயம்,இவ்விடத்துச் சொன்னது சந்யாசிவிஷயம்.சந்யா

சிக்கு 'புஷ்பாணஞ்ச நிகுந்தனம் என்றும் யவ்யதம் பதிதபுஷ்பம் ஸகுர்த்தவ்யம் யதிபூஜநம்' என்னு மாகம வசனத்திஞல் விதியாகையால்.

÷ நூனாதிகம் குறைச்சல், + சாங்கம்-நிறைவு, * வைகல்யம்-குறைவு.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சதா சமாதி நிஷ்டனுக்குச் சமாதி குலைந்து மனச் சஞ்சலம் வந்தகாலத்துப் புறப்பூசையும் பூசிகக வேண்டியதென்று புகல்கின்ருர்.

ஞானத்தால் - நிராலம்ப சிவத்தியானத்தால்,— அங்கு - நிராலம்ப சிவயோகத்தில்,—இங்கு- முன் சொல்லிய கலாமூர்த்தமாகக் கற்பிக்கப்பட்ட சிவலிங்கத்திலும்,—நிராகாரமா யுயிர்க்குயிராயச், சிந்தித்துப்போற்றி - தியானித்துப் பூசித்து,—ஆண்டவனை என்றது பூசாகாலத்திற் பூச்சிய பூசகத் தன்மையா லுரைத்தது. சமாதிகாலத்திற் சுவதந்திரமா யொப்பாக வொப்பிக்கும் நிராலம்ப சிவதியானத்தின் முளைக்குஞ் சமாதியிற் சாற்றப்படாது.

> " நாஸ்திபூஜாநமஸ்காரோ நஜபோத்யாநமேவச
> கேவலம்ஞேயமித்யுக்தம் வேதிதவ்யம் நகிஞ்சந."

என்று தேவிகாலோத்தரத் திருத்தலால்,
மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அகத்தாதல் புறத்தாதல் ஒருகுறியின்க ணிறைவனைக் காணப்பெறின், அகம்புறமென் றிரண்டா லர்ச்சனை புரியு மிந்தச் ச

கம் போலப் புண்ணிய பாவங்களைக் குறித்தலின்றி அதுவே றி துவே றெனப் பிரித்துக் காண்டலுமின்றி யாண்டு மொருபெற்றியராய் இட்டபணி செய்து நிற்றலே மெய்யடியார்செய்தி யாகலான், அகத்தே காணும்படி புறத்தேயு மொரு குறியிற் கண்டு அரன்கழல் பூசிக்கற் பாற்று. அதற் குபகரணம் வேண்டுமாயின், முயன்று வருந்துதலு மாகாமையான்; மரத்தின்கீ ழுதிர்ந்த பூக்களும் ஆறுகுள முதலியவற்றி னுள்ளதாகிய நீரும் அயாசகமாய் வந்த அமுது முதலாயினவுமே ஆண்டைக் கமையு மென்பதாம்.

போற்றிப் பூசிக்கவென விடையும்.
புறம்பேயு மென வும்மை இறந்தது தழீஇ இயிற்று.
போதுகளு மென்ற வும்மை எதிரது தழீஇ இயது
இதனானே புறப் பூசையும் ஆண்டைக்கு அங்கமாதல் கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

ஞானவான்களுக்கு இந்த வுட்பூஜை யொழிந்து புறப்பூஜை வேண்டுமோ வென்ற மாணாக்கனை நோக்கிப் புறப்பூஜை பூஜிக்கவேண்டினும் அந்த ஞானத்தினாலே பூஜிப்பர்களென றருளிச் செய்கிறார்.

புறம்பேயுமரன்கழல்கள் பூசிக்கவேண்டில்-உட்பூஜை யொழிந்து புறத்திலும் பரமேஸ்வரனுடைய சீர்பாதங்களை யர்ச்சிக்கவேண்டியிருந்தா லதனாலே,—பூமரத்தின்கீழுதிர்ந்தபோது களுங்கொண்டு- பூவுள்ள மரத்தினகீழே யுதிரப்பட்ட புஷ்பங்கள் திருமஞ்சனம் திருவமுது முதலான திரவியங்களுந் தேடிக்கொண்டு,—சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தாலே சிந்திக்கு

ம்படி யங்கு சிந்தித்துப்போற்றி- சிறப்புப்பொருந்திய வழங்கிய பரமேஸ்வரனை சிவஞானத்தாலே யங் குட்பூஜையிலே தரிசித்து இரண்டற நிற்கிற முறைமைபோல இவ்விடத்திலும் அப்படியே கண்டர்ச்சித்துத் தோத்திரமுஞ் செய்வது. இந்த முறைமையிலே நிற்கையினாலே,—அறம்பாவங்கட்கு நாமென் கடவோம்- பிராரத்தகன்மந் துலையுமளவுந் தேகத்திலேநின்று சுகதுக்கங்களைப் புசித்தாலும் விருப்பு வெறுப்புகளுக்கும் நமக்குந் தொந்தனை யுண்டாகாது. நாம்ஞானமாய் நிற்கையினாலே,—எங்குமாண்டவனைக் கண்டக்கால் - எவ்விடத்திலும் நம்மை யடிமைகொள்— பரமேஸ்வரனைக் கண்டவிடத்து,—அகப்புறமென்னாதே-உள்ளென்றும் புறம்பென்றும் நினையாதே உள்ளும் புறம்பு மொருநீர்மையாகக் கண்டு,—திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றோ சீரடியார்தம்முடைய செய்திதானே- இந்தநிலை திரியாமல் எங்கு மவன் பரிபூரணனாய் நிற்கையால் எவ்விடத்திலும் வழிபாடுசெய்து நிற்பதல்லோ திருவுளத்துக் குவந்த வடியார்க்குள்ள செயல்கள்.

இதனாற் சொல்லியது, ஞானவான்களுக்கு உட்பூஜை யையுமென்று புறப்பூஜை வேண்டினாலும் அந்த உட்பூஜையைப்போல வர்ச்சிக்கவேணுமென்றும் பரமேஸ்வரனை வழிபடுமிடத்து எங்கும் பூரணமாய் நிற்கிற முறைமை யறிந்து உள்ளும் புறம்பு மொருநீர்மையாக வழிபாடு செய்யவேணு மென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

அகப்புறமென்னாதே யாண்டவனைக் கண்டக்கால் - அகத்துந்தல் புறத்தாத லொருகுறியின்க ணிறைவனைக் காணப்பெறி

ல்,—அறம்பாவங்கட்கு நாமென்கடவே மென்றும் - அகம்புற
மெனவிரண்டா லர்ச்சனைபுரியு மிந்தச்சகம்போல புண்ணிய பா
வங்களைக் குறித்தலின்றி,—அறம்பாகே பணிசெய்து நிற்கைய
ன்றோ-அதுவே றிதுவே றெனப் பிறித்துக் காண்டலுமின்றி யா
ண்டுமொரு பெற்றியரா யிட்டபணிசெய்து நிற்றலே.—சீரடியா
ர் தம்முடைய செய்திதானே - மெய்யடியார் செய்தியாகலா
ன்,—சிறந்தாருஞ் சீரச்சிவனை - அகத்தே காணும்படி சிறந்து
விளங்குகின்ற முதல்வனை,—ஞானத்தாலங்குச் சிந்திக்கும்படி-
ஞானத்தா லுள்ளேகண்டாற்போல,—புறம்பேயு மிங்குஞ் சிந்
தித்து - புறத்தேயு மொருகுறியிற்கண்டு,—அரன்கழல்கள் போ
ற்றிப்பூசிக்க - அரனைகழல்கள் பூசிக்கற்பாற்று.—வேணடிற் பூ
மரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு பூசிக்க - அதற்கு
பகரணம் வேண்டுமாயின், முயனறு வருந்துதலும பிறவுயிர்
களை வருத்துதலு மாகாமையின் மரத்தின்கீழுதிர்ந்த பூக்களு
மாறு குளமுதலியவற்றி னுளவாகிய நீரும் அயாசகமாய் வந்
த அமுதமுதலாயினவுமே யாண்டைக் கமையும்.

இதனானே புறப்பூசையு மாண்டைக் கங்கமாதல் கூறப்ப
ட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

சர்வ வியாபித்துவத்தை யறிந்து வழிபட்ட
வான்மாக்களுக் கவன் கொடுக்கும் வரி
சை யீதென் றுணர்த்துகின்றார்.

இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தினிரத மெ
ள்ளினெண்ணெய்போ லெங்குமுளனிறைவன்,—
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு மல

மறுப்போ ரான்மாவின் மலரடிஞானத்தாற், 'சிந்தனை
செய் தர்ச்சிக்கிற் சிவனுளத்தேதோன்றித் தீயிரும்
பைச் செய்வதுபோற் சீவன்றன்னைப், பந்தனையை ய
றுத்துத்தா னாக்கித்தன்னுருவப் பரப்பையெல்லாங்
கொடுபுகுந்து பதிப்பனிவன்பாலே. (கஉ)

(இ-ள்.) இந்தன த்தினெரி — மரத்தின்கணக்கினி யடிதொடுத்து நுனி யளவாக வியாபித்து நிற்குமாறுபோலவும்

பாலினெய் — பாலின்கணெய் யெங்கும் வ்யாபித்து நிற்குமாறுபோலவும்

பழத்தினிரதம் — பழத்தின்கணிரதம் வ்யாபித்து நிற்குமாறுபோலவும்

எள்ளின்கணெண்ணெயும் போல் — எள்ளினிடத்துத் தைலம் வியாபித்து நிற்குமாறு போலவும்

எங்குமுளனிறைவன — இறைவனெங்குமுளனெனப் பதமாறுக. சிவனு மிப்படிச் சர்வவ்யாபியா யிருப்பன்.

வந்தனை செய்தவ் விடத்தும் வழிபடவே யருளும் — அகப்பூசை புறப்பூசையெனக் கூறியவற்றொன்றால் வழிபடவே யகதச்சிவன் றானே சாந்நித்தியமாய் நின்றுனமாக்களுக் கனுக்கிரகத்தைச் செய்வன.

மலமறுப்போரான்மாவின் மலரடி ஞானத்தாற் சிந்தனைசெய் தர்ச்சிக்கில் — மலரடி ஞானத்தாற் சிந்தனைசெய் தர்ச்சிக்கி லான்மாவின்மல மறுப்போனெனப் பதமாறுக. மலர்போன்ற அவனது திருவடிகளை யடையக் கருதும் ஞானத்தாலே விருப்பத்துடன் பாவித்துப் பூசிக்கி லங்கவானமாவினகண் ணுதியே பொருந்தின ஆணவாதி குற்றம் போம்படி.

சிவ னுளத்தே தோன்றி — தன்னை வழிபடாநின்ற வான்மாக்களிடத்தி லுண்டாகிய கிருபையினாலே யவரிடத்திலே பிரகாசியாநிற்பன். ஓரிடத்திலே பிரகாசிப்ப னென்பீராகில் அவ னேகதேசியாய் விடானோவெனில்? சிவனது வியாபகந் தடைபடாதாகையா லதற்கானியில்லை.

தீயிரும்பைச் செய்வது போற் சீவன் றன்னைப் பந்தனையை யறுத்துத் தானுக்கி — அககினியானது தனனைச் சேர்நத விரும்பை யெப்படித் தற்சொரூபமாக்கிறது, அது போல இந்தச் சீவனுந் தன்னைப் பொருந்தின வான்மாக்களுடைய ஆணவாதிமைப் போக்கி யவர்க ளறிவை விளக்கித் தற்சொரூபமே யாக்கி

தன்னுருவப் பரப்பை யெலாங் கொடுபுகுந்து பதிப்ப னிவன்பாலே. — தன்னைப்போலச் சர்வஞ்ஞத்துவாதி குணங்களையு மிச்சாஞானக் கிரிகைகளையு மிந்த வான்மாவிடத்திலே கொண்டுவந்து பதியாநிற்பன். எ-று.

ஆன்மா விச்சாஞானக் கிரியாசொரூப னென்று முன்னேயிருக்க இப்பொழுது கொடுப்பனென்ற தென்னைபோவென்னி லது பாசத்துடன் கூடினபோது விருத்திகாரியமாகச் சீவிக்கும், ஈண்டு நிச்சயரூபமாகவே சீவிக்கு மதனையே யிப்பொழுது கொடுத்ததெனக் கூறியதெனவறிக.

இறைவன் - எழுவாய்.

எங்குமுளான் - பயனிலை.

அந்த விறைவனே பதிப்பனென்பதும் பயனிலை.

ஓரெழுவாயு மிரண்டுபயனிலையுங் கொண்ட தெனவறிக.

இதற்குச் சர்வஞானோத்தரம் ஆக்கினேய புராணமது மறிக. (௫௨.)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலுமதற்கே புறநடை.

இறைவ னிந்தனத்தினெரி பாலினெய் பழத்தினிரத மெள்ளி னெண்ணெயும்போ லெங்குமுள னெவ்விடத்தும் வந்தனை செய்து வழிபடவேயருளும் -போல் எனபது கடைநிலைத்தீபம், பதந்தோறு மொட்டிப் பொருளுரைக்க. சகதகர்த்தாவாகிய சிவன் சராசராத்மகமாகிப் பிரபஞ்சமெங்குங் காஷ்டமு மக்கினியும் போலவும் பழமுஞ் சுவையும் போலவும் எள்ளுமெண்ணெயுர்போலவும் பிரிவறனின்றுளன். ஆதலால் சராசரப் பேதங்களிலே எந்தமூர்த்தியிலே சிவபாவனைப் பண்ணிப் பூசித்து வழிபடினும் அதற்கதற்கேற்றபலங்களைப் பூமியாதிபத்தியம் சுவர்க்கமுதலாக சிவசாமீப்ய பரியந்தமும் போகங்களை யெல்லாங் கொடுப்பன். இவ்விடத் தனேக திட்டாந்தங்களினுலேஅதனைவ தம் திடம்பண்ணினது.—மலமறுப்போ ரான்மாவின் மலமடி ஞானததாற் சிந்தனைசெய் தர்ச்சிக்க- போகமானது அசத்தியமும் பந்தமுமாதலான மோக்ஷமே வேணுமென் றிச்சித்தப்போர் ஆன்மாவி னிடத்திலே சிவஞானத்தினுலே சிவதரிசனத்தைப் பண்ணிச் சிவ ஞானமாவிடத்திலே வேறற நின்றமையாமல நானே சிவனுகப் பாவித்து ஞானபூசையைப் பண்ண,—சிவனுளத்தே சோனறி பந்தனையை யறுத்துத் தீயிரும்பைச் செய்வதுபோற் சிவனறனைத் தானுக்கித் தன்னுருவப் பரப்பை யெலாங் கொடுபுகுந்து பதிப்ப னிவன்பாலே-முன்சொன்னவாறு ஞானபூசை பண்ணவே சிவ ஞானமாவிலே பிரகாசித் தாணவாதி பாசங்களையறுத்து அக்கினி யிரும்பிலே பொருந்தி யிரும்புடைய நிறத்தையுஞ் சுடுந்தொழிலையுங் காட்டியதுபோல ஆனமாவைத் தானுகச்செய்து, தானுகச் செய்த வான்மாவினுடைய

கிஞ்சிஞ்ஞதையும் பாரதந்திரியத்தையு மொழித்துத்தனதாகிய சர்வஞ்ஞ சர்வ கர்த்திருத்துவத்தைப் பிரகாசிப்பித்து அகருல் கிருத்தியங்களைப் பண்ணிவிப்பது. இவ்வாறு சீவன்முத்தி யவஸ்தையிலே செலுத்திப் பரமமுத்தியிலே தனனுடைய ஸ்வரூபமாய்ச் சத்திய ஞானுந் தங்களைக் குறைவற விந்தப்பரமமுத்தஸ்தானத்திலே ஸ்தாபிப்பனென் றிதன்பொருள்.

கொடுவென்றது ஆன்மாவை தம்மைக்கிரகித்தெனவும் புகுந்தென்றதுஆன்மாவுக்குத் தம்மைக் கொடுத்தெனவு மறிக. இதற்குச் சம்மதி திருவாசகம் "தந்ததுன் றனைக் கொண்டதென் றன்னைச் சங்கரா. ஏகார மீற்றசை.

× பாரதந்திரியம் - உட்பட்டிருக்கை,

சிவாக்கிரயோகிபண்ணின சிவஞானசித்தி
ஒன்பதாஞ் சூத்திர வியாக்கியான
சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

தேவிகா லோத்தரத் துரைத்த ஞானசார முற்று முற்று முலோகாசாரப் பற்று முற்று மற்றவர்க்கே பஞ்சாக்ஷர மாத்திரத்தா லங்கநிபாச மதனு லந்தரியாக மதனுற் பூமரத்தின் கீழ் விழுந்த பூப் புறப் பூசை, இம் முக்குறி பொறிக்குஞ் சிற்குறி ஞான பூசை, உலோகாசாரமு ஞானசாரமு மொத்து மேறியுங் குறைந்து மிருக்கு மவர்கரு பத்தசிப் படிக்குப் பலகுறிக் கிரியா பூசை, சிவத்தியான வுயிரியர்சைச் சிவஞான பூசையினுற் சிவன சீக்கரஞ் சாநித்ய மாய்ச் சிவத்துவாபிவியத்தி செய்வ னென்று செப்புகின்ருர்.

இந்தனத்தி னெரி யென்பது முதல் உவமை முற்றுவமை யன்று பிரபஞ்ச மாத்திரத்தி லேகதேச வுவமை. முற்றுவமையாக்கிப் பொருளுரைக்கில், இந்தனத்தி னெரி யென்பதனாற் காஷ்டத்தி னவயவமாய்க் காஷ்டத் திருக்குமக்கினிப் பரமாணு வுக்கும். அப்படி யிருக்கும் பிருதிவிப் பரமாணு அப்புப் பரமாணு வாயுப் பரமாணுக்களுக்கும் சம்யோகசம்பந்தம். அந்த இந்தனத்துக்கு மெல்லாப் பரமாணுக்களுக்குஞ் சமவாய சம்பந்தம்.

அக்கினிப் பரமாணுவுக்கு மெரிக்கும் சம்யோக சம்பந்தம். சொல்லப்படும்.—

பாலினெய் யென்பதினாலும் எள்ளின்க ணெண்ணெ யென்பதனாலு மப்படியூகித்துச் சம்யோகசம்பந்தமும் சொல்லப்படும்.—

பழத்திலிரத மெனபதனாற் கேவலஞ் சமவாய சம்பந்தஞ் சாற்றப்படு மாதலாற் பிரபஞ்சத்திற்குஞ் சிவனுக்கும் மிச்சம்பந்த மெல்லாஞ் சாற்றப்பட்டுச் சிவன் விகாரியாய்ச் சடமாயுமேகான மவாததிற் கிருப்பு மாவன். ஆதலா லிச் சம்பந்தங்களை விட்டுச் சித்த சித்தப் பிரபஞ்ச முற்றும் வியாபித்து,—

எங்குமுள னிறைவனென - அதனாலே எவ்விடத்தும் இலிங்க சித்தி யாதியில்,—

வந்தனை செய்து வழிபடவே - கிரியாபூசை நமஸ்காரங்கள் செய்து போற்ற,—

அருளும்- பதமுத்தி கொடுத்துப் பரபோகந் துய்ப்பித்து மகாப் பிரளயத்திற் பரமுத்தியும் பலிப்பிக்கும். திரிகாலத்திற் பரமுத்தி நல்லபமானாலும்,—

மலமறுப்போர் - உத்தரோத்தர சுத்த போக மாத்திர முற்று நடுவே கீழ்நழுவாதபடி ஒத்தமல பரிபாகத்தால் மகாப்

பிராயத்து மதிதுல்லபமாய்வரு மிருந்த மலபரிபாகதார தம்மியத்தால் நிரதிகரண சிவதீக்ஷை சாதிகரண சத்தியோ நிருவாண சிவ தீக்ஷை யிரண்டிற்கு மருகர் சிலர் தவிர வசத்யோ நிருவாண தீக்ஷை மாத்திரத் தருகராய்த் தானங்களிற் றங்காது சரீராந்தத்துச் சிவத்துவந் தடையின்றி யடையும் பொருட்டுத் தீக்ஷையிற் பிராரத்த கன்ம போகந் தகைந்த சிஷ்ட மலமுத்தி விரும்புவோர்.

ஆன்மாவின் மலரடி ஞானத்தால் - சிவசத்தி விளக்கில் விளங்கிய சிற் சத்தியால,—

சிந்தனை செய் தர்ச்சிக்க -சிவோகம் பாவனுத்தியான பூசை பண்ண,—

சிவனுளத்தே தோன்றி - ஆன்மாவில் மலக்ஷய காசங்கற்ப சாநித்தியனாய்ச் சீவன் முத்தி சிவ சாக்ஷாத்காரநதான பரமுத்தி சிவ சாக்ஷாத்காரகோடி பரிசிக்கு முத்தம சிவ சமாதி மாத்திரந்தா னுதிக்கப் பண்ணிச் சரீராந் தத்தில்,—

தீயிரும்பைச் செய்வது போல - முற்றுவமையன் றிதுவும். ஏத்த சிவத்துவப் பிரகாச மாத்திரத்தி லேக தேச திஷ்டாந்தம். முற்றுவமை யுன்னில் சிவாவேச காபால மதமாம், அது சித்தாந் மன்று; தடத்த லக்ஷண மாதலால். அதைச் சொரூப லக்ஷண மோக்ஷ சுருதி தாத்தும். ஆகையா லவ்வள வொப்பினுல்,—

சீவன் றனைப் பந்தனையை யறுத்துத் தானுக்கி - அச் சேவித்த மலத்தினை மாற்றித் தன்னைப் போற் றற்பொருளிவிற் சிவனுக்கி,—

தன்னுருவப் பரப்பை யெல்லாங் கொடு புகுந்து யதிப்பளிக்கும் பாலே - இவ்விடத்தும் லக்ஷணையாற் பொருளுரையா திரு

க்கபடி யுரைத்தாற் சங்கிராந்தவாதி பாசுபதி மதமாம். அது சித்தாந்த மன்று, தரணப் பொருளைக் கொடுபுகுந்து பதிப்ப னென்பது கூடாது. சிவனாகிய ஆன்மாவிலே தனது சத்திக் கொத்த பிறப்பொரு ளறிவுச் சிற்சத்திக்குறிச் சிவத்துவ தரண முற்றும் பிரகாசிப் பிப்பன். சிவப் பிரகாச முதற் சிவ சாத் திரங்களிலே திரிமலமு மகல வுயிருள் சேர்முத்தி யென்பது முதல் வசனங்களுக்கு மிலக்ஷணையினாற் பொரு ளிப்படித்தா னே பண்ணவேண்டும். சொற்பொருளிருந்தபடி பொருளுரை க்கிற் பாசுபதி முதலோர் மதமாம். அதுசிவசித்தாந்த மனறெ ன்று செப்பி யப்பொருள் தள்ளிய தாகையா லிப்பொருள் நற் பொருள்.

---

## சிவஞானயோகிகளுரை வருமாறு.

இறைவன் அகம்புறமென்னும் பிரிவின்றி யாங்கணு முளனாு கலான், மேற்கூறியபடி அகத்ததாதல் புறத்ததாதல் யாண்டு வழி படினும் அனுக்கிரகிக்குமென்பதே தேற்றம். அங்ஙனமாயினும் ஆன்மாவின் கண்ணதாகிய வாதனாமல நீக்கலுறுவார்க்கு அக ப்பூசையா லவ்வாறு வழிபடுத லொருதலையான் வேண்டும். இ றைவன் விளங்கித் தோன்றி வாசனையைப் பற்றறத் துடைத்த ற்குந் தன்வண்ணமாக்கித் தனது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுவதும் அவனதாகச் செய்தற்கும் உரிமையுடைய விசேடவி யைபு ஆண்டையதாகலா னென்பதாம்.

இங்ஙனந்தினொரி உலகத்தார்க்குச் சிறிதுந் தோன்றுதவா று மறைந்து உடனாய் நிற்றற்கும், பாவினைய் மந்ததரமலபாக முடையார்க்கு ஒருவாற்றாற் றோன்றியுந் தோன்றுதும் மறைந்-

து உடனாய் நிற்றற்கும், பழத்தினிரதம் மந்தமலபாகமுடை
யார்க்கு உய்த்துணரும்வழி விளங்கித் தோன்றுவதாய் உடனா
ய் நிற்றற்கும், எள்ளின்க ணெண்ணெய் தீவிரமலபாக முடை
யார்க்கு இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப்படாது உ
டனாய் நிற்றற்கும் உவமையாயின.

எங்குமுள னிறைவனென்றது எவவிடத்தும் வழிபடவே
யருளுதற்குரிய வியைபு விளங்குதற்கும், மலமறுப்போரென்ற
துந் தோன்றி யறுத்தாக்கிப் பதிப்பனெனறதும் ஆன்மாவிற்
சிந்தனைசெய் தர்ச்சித்தற்குரிய விசேடவியைபு விளங்குதற்கு
ம், ஏதுவாய் நின்றன.

தன்னுருவப் பரப்பெல்லா மிவன்பாலே பதிதலாவது, தீ
இருர்பைச் செய்வதுபோல இறைவனுக்குரிய முற்றுணர்வு முத
லிய எண்குணங்களும் படிகம்போலச சார்ந்ததின் வண்ண
மியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவிதவியை
பானே இவன்மாட்டு விளங்கித் தோன்றுதல்.

அதுவே சிவானந்த மேலிடுத லென்பது.

அர்ச்சிக்கவென்றது வியங்கோள். முடிபு வேறாகலிற் பா
ல் வழுவின்மையுணர்க.

அர்ச்சிக்கவென்பதனை எச்சமாகக்கொண்டு பாடமோது
வார் பால்வழுவாதலையும் நோக்கிற்றிலர் போலும்.

மேல் அந்தரியாகந் தன்னையென்ற செய்யுளிற் பெறப்பட்
டதனை ஈண்டுங் கூறுதல் கூறியது கூறலாம் போலுமென மலைய
ற்க, வேண்டாது கூறி வேண்டியது முடித்தற்கெழுந்த விச்செ
ய்யுளாகலின்.

இதனானே யப்புறப்பூசையி லகப்பூசை விசேடமுடைத்
தென அதன்பெருமை கூறப்பட்டது.

இவையாறு செய்யுளானும் மூனறாங்கூற்றின் பொருளைத் தெரித் துணர்த்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

உட்பூசை மகத்தாக வருளிச்செய்ததென் னம்பு என்ற மாணுக்கனை நோக்கி மேலு மருளிச்செய்கிருர்.

இந்தனததினெரிபாலினெய் பழத்தினிரதம் எள்ளின்கணெண்ணெயும்போ லெங்குமுளனிறைவனை-காட்டத்தி லக்கினிபோலவும் பாலி னெய்யைப்போலவும் பழததின் சுவைபோலவும் எள்ளினிடத்துண்டாகிய எண்ணெடைப்போலவும் பரமேசுவரனும் சடசித்துக்களா யெவ்விடத்திலும் வியாபியா யிருப்பன்,—வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவேயருளும்- ஆகையாலே பரமேசுவரனும் தன்னை யாதோரிடத்திலே நமஸ்கரித்து வழிபாடுசெய்யவே அவரவர் கருத்துக்குத் தக்கதாக வனுக்கிரகியா நிற்பன்,—அத்தன்மையொழிந்து மலமறுப்போரான்மாவின்- ஆன்மாவுக் கநாதியேயுள்ள மலத்தைத் திருவருளினலேபோக்க விசாரிக்கிறவர்கள்,—மலரடிஞானததாற் சிந்தனைசெய்தர்ச்சிக்க-எவ்விடத்திலும் விட்டு விளங்காநின்ற சீர்பாதமாகிய ஞானத்தாலே சிவனை யறிந்து தன்னுடைய விருதய கமலத்திலே யர்ச்சிக்க,—சிவனுளத்தேதோன்றி- அநாதியே தோன்றுமல் நின்றசிவன் ஆன்மாவிலே பிரகாசித்து,—தீயிரும்பைச்செய்வதுபோற் சிவன்றன்னைப்பந்தனையை யறுத்துத்தானுக்கி - அக்கினியானது தன்னைக் கூடின விரும்பை யிரும்பின்றன்மையை மறைத்துத் தானுக்கின முறைமைபோல சிவனுந் தன்னைப் பொருந்தின வான்மாவை அவனுடைய பாசசம்பந்தங்க-

ளையும் விடுவித்துத் தன்னைப்போல நின்மலனாக்கி அப்படி வருப
மாக்கினது மன்றி'—தன்னுருவப் பரப்பையெலாங் கொடுபுகுத்
து பதிப்பனிவன்பாலே- தன்னுடைய சுகசொரூபத்தின் வியா
த்தியெல்லா மிவனுக்கு ப்ராணனாய் நின்றநிலையிலே காட்டி
யனுபவித்தது அசைவறநின்று பிரகாசியாநிற்பன்.

இதனாற் சொல்லியது, எவ்விடத்திலும் வியாத்தமாயு
ள்ள பரமேஸ்வரனை ஞானவானகளா யுள்ளவர்கள் தங்கள்
தங்களுக்குப் பிராணனாய்நிற்கிற முறைமையைச் சிவஞானத்
தாலே யறிந்து யுள்ளே பூசிக்கத் தங்களுக் குண்டான மலச
ம்பந்தமும் நீங்கிச் சிவனைப் பெறுவர்களென்னு முறைமை றிய
வித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

இறைவ னிந்தனத்தினெரி - இறைவ னகம்புறமென்னும்
பிரிவின்றி யுலகத்தார்க்குச் சிறிதுந் தோன்றாதவாறு மறைந்து
டனாய் நிற்கும் விறகிற்றீப்போலவும்,—பாலினெய் - மந்தர
மலபாகமுடையார்க்கு ஒருவாற்றாற் றோன்றியுந் தோன்றாது ம
றைந்துடனாய் நிற்கும் பால்னெய்போலவும்,—பழத்தினிரதம்-
மந்தமலபாக முடையார்க் குய்த்துணரும்வழி விளங்கித் தோ
ன்றுவதாய் உடனாய் நிற்கும் பழத்திரசம் போலவும்,—எள்ளி
ன்க ணெண்ணெயும்போ லெங்குமுளன் - தீவிரமலபாக முடை
யார்க்கு இனிது விளங்கித் தோன்றினும் பிரித் தறியப்படா து
டனாய்நிற்கு மெள்ளி னெண்ணெய் போலவும் யாண்டுமுளனாத
லான்,—வெவ்விடத்தும் வந்தனை செய்து வழிபடவே யருளும்-
மேற்கூறியபடி அகத்தாதல் புறத்தாதல் யாண்டும்வந்தித்து வழி

படிறு மநுக்கிரகிக்கு மென்பதே தேற்றம்.—ஆன்மாவின் மல மறுப்போர் - அங்ஙனமாயினு மான்மாவின கண்ணதாகிய வாதனுமல நீக்கலுறுவார்க்கு,—மலரடி ஞானத்தாற் சிந்தனை செய் தர்ச்சிக்க - அகப்பூசையா லவ்வாறு வழிபடுதல் ஒருதலையான் வேண்டும்.—சிவனுளதகேதோன்றிப் பந்தனையையறுத்து - இறைவ னுள்ளே விளங்கித்தோன்றி வாசனையைப் பற்றறத் துடைத்தற்கும்,— தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன்றனைத்தானுக்கி - தீயிரும்பைச் செய்வதுபோல வுயிரைத தன் வண்ணமாக்கி,—தன்னுருவப் பரப்பையெலாங் கொடுபுகுந்து மிவன்பாலேபதிப்பன் - இறைவனுக்குரிய முற்றுணர்வு முதலிய வெண்குணங்களும் படிகம்போல சார்ந்ததின்வண்ணமா மியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவித இயைபானே இவனமாட்டு விளங்கித் தோன்றுதலாகிய தனதுபோரனந்தப் பெருஞ்செல்வ முழுவது மிவனதாகச் செய்தற்கு முரிமையுடைய விசேட விடைபு ஆண்டையை தாகலான்.

இதனுனே புறப்பூசையி லகப்பூசை விசேடமுடைத்தென அதன்பெருமை கூறப்பட்டது.

இவை ஆறுசெய்யுளானும் மூனரும் கூற்றுப் பொருளைத் தெரித் துணர்தியவாறு.

—•—*—•—

☞ கூ-ரு, ௬-ம், அதிகரண முடிந்தது.

ஒன்பதாம் சூத்திரம் முற்றிற்று.

—•—

"ஈராறு ஏற"

ஒன்பதாஞ் சூத்திரம்

பன்னிரண்டு முடிந்தது.

சிவமயம்.

# சிவஞான சித்தியார் சுபக்ஷம்.



## ௧0—வது, மலமோசன இலக்கணம்.



## மறைஞானதேசிகர் உரை.



*இனிப் பத்தாஞ்சூத்திர மென்னுதலுற்றோவெனின்?*
*முற்கூறிய பாசவாதனை நீங்கிச் சீவன்முத்தர்*
*நிற்கு நிலைமை கூறுத னுதலிற்று.*

*இத் தலைச்செய்யுள் என்னுதலிற்றோ வெனின் ? இசசீவன் முத்தர்க காகாமிய மேறுதபடிக்குக் காரணங் காட்டி யுணர் த்துத னுதலிற்று.*

இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதம
கித மிவனுக்குச் செய்தார்பாலிமையு, மவனிவனுய நி
ன்றமுறை யேகனுகி யரன்பணியி னின்றிடவு மகலுங்
குற்றஞ், சிவனுமிவன் செய்தியெலா மென்செய்தி
யென்றுஞ் செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்
றும்,பவமகல வுடனுகி நின்றுகொள்வன்பரிவாற் பா
தகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. (௧)

(இ-ள்.) இவனுல இந்தச் சீவன்முத்தர் இந்த வுலகத்தின்
கி லிதமகித கண்ணே செய்த புண்ணியபாவங்க ளவர்க
ஞ் செய்த ளிடத்திலே ஆகாமியமாய் வந்தேறுது. ஆகி

வெல்லா மிதமகி தமிவனுக்குச் செய்தார்பா லியையும்

தெங்கே சென்றடையுமென்ன, சிவனவர்களுக கிதமகிதஞ் செய்தவர்க ளிடத்திலே தானே சென்றடையும்படி திருவுளஞ் செய்வன். அஃதெககாரணத்தா லெனில்?

அவனிவனுய் நின்றமுறை யேகனாகியரன பணிபினின்றிடவுமகலுமகுற்றம்

காட்டத்தி லக்கினியானதுபோல ஐக்கிய முற்றுக் கூறுகையா லந்த வைக்கியத்தின முறைமையிலே யிவன் செய்கிற செயல்களெல்லாஞ் சிவனேவலெனக் கருதிப் பணியறுதது கொண்டு நிற்கவே யிவனுக் காகாமிய மேருமலிவனுக்குச் செய்தவர்க ளிடத்திலே தானே யவ்வினைகள் போயடையும்

"யாதே செய்யினு நாமல்லோ நீயெனி, லாதே செய்யுமளவில் பெருமையன, மாதே வாகிய வாய்மூர் மருகனூர், போதே யென்று புகுந்தும் போய்கொலோ." எனவறிக.

இச்சிறப்பினையுடைய ஞதலாலே.

சிவனுமிவன செய்தியெலாமென செய்தியென்றும்

பரமேசுரனும் இந்த உலகத்தின்கட் சீவனமுததனு யிருக்கிறவன செய்கிற விருவினைப் பலங்க ளனைத்தினையு மிவன செய்தானெனக் கருதாதவைக ளெல்லா நாமே செய்ததெனக கருதி

செய்ததெனக் கிவனுக்குச் செய்ததெனறும்

யாதாமொருவ ரிககச் சீவன் முத்தனுக்குச் செய்யப்பட்ட நல்வினை தீவினைக ளனைத்துஞ் சிவனுக்கே செய்ததென்று

பூவமகல வுடனுகி நின்றுகொள்வன

இந்த ஞானவானகள் சுத்தராகையாற் சனன மெடாதபடியாலே சிவனு மவர்களுடன கூடி யொன்றுபட்டு நின்றுகொள்வன்

பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாகிவிடுமே.

சிவனிடத்திலே நேசத்தாலே இவன் சண்டாளனைப்போல மகத்தாகிய பாவங்களைச் செய்தானேயாகிலும் இவனுமவனுங் கூடியிருக்கிற வைக்கியத்தினாலே யக்குற்றமுநன்மையாய்விடும். எ-று.

ஏகார மீற்றசை.

இதற்குத் தேவிகாலோத்தரம் சிவஞானபோதம்.

"சொன்ன ஞானித் தினைதாநிதத் தாரவர், முன்னஞ் செய்யற மூற்று மடைவர்க, ளின்னல் சொன்னவ ரேயவர் வன்பவ, மனுவாரசைவிஞ்ஞானஞ் சேர்வரே" எ-ம் அருத்துகவமலனறன்னை யகத்துணர்ந்தவரையன்னங், கருததிருந்தவர்க்குச் செய்த பூசனைகடவுள் கொள்வ, ரொருத்தருக் குபசாரங்களுடலிடையுலகர்செய்வர், பிரித்துட லுயிரைப்பேணும பெற்றியையாரே பெற்றார்." என்றோதினா ரெமதுகுறவர். (௯)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

ஞானநெறி சொல்லி மேல்பத்தாஞ் சூத்திரத்தில் பிரபத்திநெறி கூறுகினறது. பிரபத்தியாவது மார்ஜ்ஜால சிசுவைப்போலத் தனசெயலறச் சிவன்வழித்தாய் நிற்கை.

அவனியனு யேகனாகி நின்றமுறையினாலே பரன்பணியினின்றிடவு மகலுங்குற்றம் - அவன்-சிவன், இவன்-ஆன்மா, என்பது லோகப்ரசித்தம். சிவ னான்மாவிலே யபிவியத்தியாய் ஆனமாதானாக வொன்றுபட்டு நின்றமுறைமையினாலே ¶ பிரபஞ்சனை வனெல்லாச் செயலுஞ் சிவனதாகவே செய்துநிற்கையால் புண்ணிய பாபங்களென்கிற குற்ற மிவனைப் பொருந்தாது. இவன் சிவன் செயலென்று பாவிக்கிற மாத்திறமனையு

ம்,— சிவனுமிவன் செய்தியெலா மென்செய்தி யென்று மிவனு க்குச் செய்த தெனக்குச் செய்த தென்றும் பவமகலவுடனுகி நி ன்றுகொள்வன் பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாக் கிவிடுமே-சிவனு மிந்த பிரபன்னன் கோபப் பிரசாதங்களினுலே பண்ணின நிக்கிரகானுக் கிரகமெல்லாம் நாம்பண்ணினதேயெ ன்றும் இவனுக்கொருத்தர் பண்ணின உபகா ரபகாரங்களெல் லாம் நமக்குப் பண்ணினதென்று மிவனுக்கு சனனத்துக் கே துவான வாகாமியகன்ம மேருமலொழியும்படி வேறறநின்றி வினைத் தானுகவே யங்கீகரித்துக் கொள்வன். இவ்வாறு பெற் ற பிரபன்னன் புத்திபூர்வமாக மகாபாதகங்களைப் பண்ணினு னுகிலும் அதுதமதேவலாயாக்கிக் கன்மத்தை யொழித்துவிடும். ஏகார மீற்றசை. விடுவனென்னுது விடுமென்றது வினைமுற்று.

நாவஸ்யம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஸதைரபி।

என்னும் வாக்கியத்தினுலே பண்ணின கன்மமானது பலத்தை க்கொடாதே போகாதே யென்னின்? மெய். ஒருவன்பண்ணின கிருஷியினுலுண்டாகிய தானியம் அவன்புசியாமல அந்நியராலு ம் புசிக்கப்படுமே! அதுபோல வெனபதற்கு,—இவனுலகிலிதம கிதஞ் செய்ததெல்லா மிதமகிதமிவனுக்குச் செய்தார்பா லிசையு ம்-பிரபன்னனவன் சனங்களுக்குப் பண்ணின நன்மைக டிமை கள் விதியுத் தாசாரங்கள் அநாசாரங்க ளாசாரங்க ளிவையிற் றின் பலங்கள் எல்லா மிவனுக் கிதம்பண்ணினவர்க ளிடத்தி னும் பொருந்தும்.

ததாசோக்தம்—ஸுஹ்ருதஸ் ஸாதுக்ருத்யம் துஷ்க்ருத்யம் த்விஷந்த இதி। அந்யதாப கல்பகோடிஷ்வபி விநாஸோ நாஸ்தி॥

## ஞானப்பிரகாசருணா வருமாறு.

—o—

இப்படி யெட்டாஞ் சூத்திரத்து மொன்பதாஞ் சூத்திரத்து முத்தி சாதன சிவயோக மநேகம் பிரகாரமா யறைந்து சிவயோகபல சிவபோக சிவ சாக்ஷாத்காரமுஞ் சிறிது சிறிது நடுவே செப்பி, வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற்றனே செப்பியிருத்தலாற் சிவ சாத்திர மாத்திர சாதநிய சிவ யோகாங்கக் குறித் திரிபதார்த்த சிவத்துவபசுதத்துவ விவேக பரோக்ஷ போத ஞானமுஞ் சிவபோக சாதன சிவயோகம் பாவக சிவ சமாதிக்குறிச் சிவயோகமுஞ் சிவயோகபல வபரோக்ஷ சாக்ஷாத்காரச் சிறப்பு ஞானக்குறிச் சிவபோகமும் சிவயோகி மகிமையுஞ் செப்புகின்றரா யொன்பதாஞ் சூத்திரத் தந்தத் துரைத்த சமாதிமான மகிமை சாற்றுகின்றர்.

இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லாம் - பூமியின் கண்ணிச் சமாதிமான செய்யு மிதமகித முன்னுகப் புத்தியின் முளைக்கும் புண்ணிய பாவங்கள் முற்று மூவர்த்கரையில் விதைத்த வித்துப்போற் பலியாது,—இதமகித மிவனுக்குச் செய்தார்பாலிசையும்-இவனுக்குச் செய்த விதமகித முன்னுகம் புண்ணியபாவங்கள் செய்தவர்கள் புத்தியிற் பொள்ளெனப் பெரிதாய் முளைக்கும். அதுகொண் டவை வருமென் றுபசரிக்கப்பட்டது. அதுவன்றி யவைவருமென் றுரைத்தால் முத்தான்மாவிற் சிவசத்தி சங்கிராந்திக்கும், திஷ்டாந்த மில்லாமற் றேடும் சங்கிராந்தவாதி திருஷ்டாந்தமாகப் பண்ணிச் சித்தாந்தியைச் சயிப்பன். ஒருவனது புண்ணிய பாவ மொருவனிடத்திற் போகாது. அவனைக் குறித்துப் பண்ணிணு லவனது புத்தியின் முளைக்கும்,—அவனிவனுய் நின்றமுறை யேகனுகி - சோகம்பாவித் திருப்ப

துபோலொத்த சிவக்குறி யுள்ளாகிப் புன்னிச் சிவன் முன்னாக
ப பின்னாமென்று சிந்தித்து-அரன்பணியி னின்றிடவும்,—

“ஸமாதி ஸமதாவஸ்தா ஜீவாத்மா பரமாத்மனோ”

எனனுஞ் சிவ வசனத்தால் சிவசம சிவாவஸ்தாவேச வச
னாகிச் சீவித்திருக்க, அப்படிச் சிவன விதித்த சிவ சமாதி யனு
ஷ்டானத்தில் நிற்கத் தானவனாதலால், சமயி பண்ணுந் தா
சானுஷ் டானத்தினின்று தற்செயலற்றுத் தான் கெட்டு நிற்
கவென்று பொருளுரைப்பது நன்றன்று. சமாதியினும் நானெ
னபது அகங்கார விர்த்தி யுபாதி விர்த்தி மாத்திரம விட்டு ஸ்வ
தநதிர புத்தியோடு தோற்றமற் றேறறி நிற்கு மாதலால்,—
அகலுங்குற்றம-பாச முத்தி சிவத்துவாபி வியத்தி பலிக்கும்.—
பணிபாக்கி விடுமே - நிஷித்தானுஷ்டான மானாலுஞ் சண்
டேச்சுரன முதலோர்க்குப் போல விதிதானுஷ்டான மாகி
விடும்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இங்ஙனம் வேண்டுஞ் செய்திமுறைமைகளை மூன்றுசூத்தி
ரத்தால் வகுத்தோதிய வாசிரியர், நிறுத்தமுறையானே அச
சாதனத்தாற் பெறப்படும் பெத்தநீக்கமும முத்திப் பேறுமாகி
ய பயனியல்பு மூன்றுசூத்திரத்தாற் கூறுவான் றொடங்கினார்.
அவ்விருவகைப் பயனுள் அப்பெத்த நீக்கமாமாறு கூறுதற்கெழு
ந்தது பத்தாஞ்சூத்திரம.

பதிஞானத்தாலிங்ஙனங் காணப்பட்ட விறைவன் பெத்
தநிலையி லுடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மா,

வேயா யொற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழிநின்ற முறைமை போல, ஈண்டான்மா அம்முதல்வனோ டொன்றாய் நின்றறியினுந் தானென வேறு காணப்படாதவாறு அவனோ டொற்றுமைப் பற்றி அவனிறைபணியின் வழுவாது நிற்கப்பெறின், அங்ஙன மேகனாகி நிற்றலான் யானெனதென்னுஞ் செருக்கறுதலின் அவ்விறைவனும் இவன் செய்யுமிதமகிதங்க ளெல்லாம் யான் செய்யு மிதமகிதங்களென உடனாய்நின்று ஏன்றுகொள்வன். அரன்பணியினிற்றலான் இந்திரியங்களின் வசமாய்நிற்கும் பாசஞ திரிய மொழிதலின், அவ்விறைவனும் இவனுக்கின்பதுன்ப நுகர்ச்சியாமாறு பிறர்செய்யு மிதமகிதங்க ளெல்லாம் எனக்கு நுகர்ச்சியாமாறு செய்தனவேயாமென உடனாய்நின்று ஏன்றுகொள்வன். இவ்விருதிறத்தானும் முறையே, இவன்செய்யு மிதமகிதங்கள் இவனுக்குப் பணியாய் முடியும். இவனுக்கு இதமகிதஞ் செய்தார்மாட்டு அவ்விதமகிதங்கள் அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு முறையே துணைக்காரணமாயினையும். இங்ஙனம் ஆர்ச்சிப்பும் நுகர்ச்சியும் இவனைப் பந்தியாதொழியவே, ஏனைச் சஞ்சிதவினையு மாயையு மாணவமுமாகிய குற்றங்கண் மூன்றும் இவனைப் பந்திக்கமாட்டாவாய் விண்டொழியு மென்பதாம்.

நின்றிடவென்பதனை ஈரிடத்துங் கூட்டி நிரனிறையாக வைத்து, ஏன்றென்னு மெச்சங்களைக் கொள்வனென்பதனோடுந் தனித்தனிகூட்டி, இவனுலகிலென்னு முதலடியைப் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமேயென்றதன் பின்னாக வைத்துரைத்துக்கொள்க.

நின்றிடவுமென்றவும்மை சிறப்பு.

பாதகத்தைச் செய்திடினுமென்ற வும்மையாற் புண்ணியத்தைச் செய்திடிற் பணியாக்கிவிடுதல் கூறவேண்டாவாயிற்று.

அவை மிகுதிப்படுதற்குத் துணைக்காரணமாயினையுமென்பது ஆற்றலாற் பெற்றாம்.

அது அவர்தாஞ் செய்தவினை தன்னோ னலமுடனே பிறர் செய்வினை யூட்டி யொழிப்பானெனெ முன் வருகின்ற வாற்றானறிக,

அச்செய்யுளின் கருத்துணராது இவன்செய்த இதமகிதங்களை இவன்மாட்டுச் செய்தார்கண்மையுமென்றுரைப்பின், இவனமாட்டுச் செய்தவருடைய இதமகிதங்கள் வேறென்னாய் முடியுமெனக் கடாயினார்க்கு விடையின்மையும், நியதி தப்புதலும் சிவஞானச் செயலுடையோர் கையிற்றனந் திலமளவே செப்பிடினு மத்தானமே நிலமலைப்போற் றிகழுமென்றாற்போல்வனவற்றோடு முரணுதலுமாகிய குற்றங்களுளவாமாறுணர்க.

உலகத்தார் பார்வைக்கு இவன் செய்தனவாகவும் அச்செயல் இதமகிதமாகவுந் தோன்றப்படுவன மாத்திரையேயன்றிப் பிறிதில்லையென்பார் உலகிலென்றார்.

அவனென்பதும் இவனென்பதும் மகாவாக்கிய வழக்கு.

இவ்வாறன்றி, நின்றிடவெனனுமெச்சத்தை அகலுமெனபதனோடு முடியவைத்துரைப்பார்க்கு, ஏனையன தம்முளவாய் நின்று ஒருபொருண்மேல் வருவனவல்லவாய் முடிதலின் முதனூலோடொத்து ஒருபொருணுதலிய சூத்திரமாதற் கேலாமை யறிக.

இச்செய்யுளிற் கூறப்படும் மூக்கூற்றுள், ஒருவாற்றானின்றி வலியுறுக்கப்படு மிறுதிக்கூறு பதினோராஞ் சூத்திரத்தில் இயைபுபற்றி யெடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதிக்க நின்றமையின், முனையிருகூறுமே வெறெடுத்துக்கொண் டோதப்படுவனவெனக் கொள்க.

## ௧௦—சூத்திரம். மலமோசன இலக்கணம். உதாகவி

## திரம்பவழகியருளா வருமாறு.

—o—

மேலிப்படி யுள்ளே கண்டு பூசித்து வருகிறேனென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதமகிதமிவனுக்குச் செய்தார்பாலிசையு மவனிவனாய் நின்றமுறை யேகனாகி - ஆன்னவய், பெத்தத்தில் சிவன் ரோற்றமின்றி யிருந்த வான்மாவாய் நின்ற முறைமைபோல இவனுந் தன்றோற்றமின்றி சிவனிடத் தேகனாய் நில்லாமல் நானுந் தனியே ஒரு முதல், சிவனுந் தனியே ஒரு முதலென்று இப்படி யிரண்டாக விசாரிக்கிறவர்களுக்கு விசாரிக்கிற நினைவு கிடைக்கையினாலே சிவன்றானொரு முதலில்லை யெனனும்படி யந்த வான்மாவேயாய் நிற்பன்; ஆகையால் சிவனைக் கூடுகை யுண்டாகாது. இப்படித் தற்றோற்றமற்றுச்சிவனாகிநின்ற விவன் இந்தப் பிரபஞ்சத்தில்சுகதுக்கங்களைப்புசிக்கிறவிடத் துண்டாகிய பிரியாப்பிரியங்களெல்லாம் இந்த ஜீவன் முத்தனா யுள்ளவனுக்கு முனபுள்ள புண்ணியபாவமெல்லாம் இல்லையாய்ப் போனபடியாலே இவனுக்கு விருப்பு வெறுப்புக்கள் செய்தவர்களிடத்லே சென்று பொருந்தாநிற்கும். இத்தன்மை கூடாதொழியில் மேலு மோ ருபாய மருளிச்செய்கிறார்.—அரனபணியினின்றிடவு மகலுங்குற்றம் - அப்படி நிற்கக்கூடாதபொழுது சிவனுடைய வேலையென்றும் சிவனுடைய நியதியென்றும் நிற்கவு மலமாயா கன்மமாகிய குற்றங்கணீங்கும்.—சிவனுமிவன்செய்திெயலா மென்செய்தியென்று - இப்படி தன்செயலற்று நிற்பனேயாகில் கர்த்தாவும் இவனாலே செய்யப்பட்டதெல்லாந் தன்னுடைய செயலென்றும்,—செய்ததெனக்கிவனுக்குச் செய்ததெனறும்-இவனுக்குச் செய்த நன்மைதீமையெல்லாம் நமக்குச் செய்ததா யிருக்குமென்றும்- பவமகலவுட

ளுகி நின்றுகொள்வன் - இவனுக் குண்டான ஜனனங்களெல்லாம் விட்டுப்போம்படி ஆன்மா வென்பதொரு முதலற ஆன்மா தானேயாய் ஒன்றுபட்டு அசைவறநில்லா நிற்பன்,—பரிவாற்பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே - முன்சொன்ன முறைமையிலே நினறவிவன் சிவனளவி லுண்டாகிய பத்தியினாலே கொலைமுதலாக வுண்டாகிய பாதகங்களைச் செய்தானேயாயினும் பரமேசுவரனு மிவனை விட்டு நீங்காமல் நின்ற கலப்பாலே அதுவுந் தன்னுடைய பணிவிடையாக்கி விடுவன்.

இதற்குப் பிரமாணம் திருத்தோணோக்கம், "தீதில்லைமாணிச் சிவகருமஞ் சிதைத்தானைச், சாதியும்வேதியன தாதைதனைத்தாளிரண்டும், சேதிப்பவீசன் றிருவருளாற் றேவர்தொழப், பாதகமேசோறு பற்றினவாதோணோக்கம்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பெத்தத்தில் பரமேசுவரன் ஆன்மாவாய் நின்ற முறைமைபோல விந்தவான்மாவு மிப்பொழுது தற்றோற்றமறச் சிவமாய் நிற்கவே மலமாயா கன்மங்க ணீங்குமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அவனிவனாய் நின்றமுறை - பதிஞானத்தா லங்ஙனங் காணபபட்ட விறைவன் பெத்தநிலையி லுடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி யான்மாவேயா யொற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழி நின்றமுறைபோல,—ஏகனாகி யரன்பணியி னினறிடவும் - ஈண் டான்மா அம்முதல்வனோ டொனாய் நின்றநிலையினுந் தானென வேறு காணப்படாதவா றவனோ டொற்றுமைப்

பற்றி அவ் விறைபணியின் வழுவாது நிற்கப்பெறின்,— பவமக ல-அங்ஙன மேகனாகிநிற்றலான் யானெனதென்னுஞ் செறுக்க றுதலின்,— சிவனுமியன செய்தியெலா மென்செய்தி யெ ன்றா முடனாகி நின்றென்று கொள்வன்- அவ்விறைவனு மிவன்செ ய்யு மிதமகிதங்களெல்லாம் யான் செய்யு மிதமகிதங்களென உட னாய்நின் றேன்றுகொள்வன்,—இவனுக்குச் செய்த தெனக்கு ச்செய்த தென்று முடனாகிநின றேன்றுகொள்வன் - அரன்ப ணியி னிற்றலா னிந்திரியங்களின் வசமாய் நிற்கும் பரதந்திரி ய மொழிதலின் அவ்விறைவனு மிவனுக் கின்பத்துன்ப நுகர்ச் சியாமாறு பிறர் செய்யு மிதமகிதங்களெல்லா மெனக்கு நுகர் ச்சியாமாறு செய்தனவே யாமென வுடனாய்நின் றேன்று கொ ள்வன்,—பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே-இவ்விருதிறததானு முறையே யிவன் செய்யு மிதமகிதங் க ளிவனுச்கும் பணியாய் முடியும்— இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதமகித மிவனுச்குச் செய்தார்பா லிசையும் - இவனுக்கு இதமகிதஞ் செய்தார்மாட்டு அவ்விதமகிதங்கள அ வ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு முறையே துணைக்காரணமாக வியையும்.—குற்றமகலும் - இங்ஙன மார்ச்சிப்பு நுகர்ச்சியு மி வனைப் பந்தியா தொழியவே யேனைச் சஞ்சிதவினையு மாயையு மாணவமுமாகிய குற்றங்கண் மூன்று மிவனைப் பந்திக்க மாட் டாவாய் விண்டொழியும்.

இச்செய்யுளிற் கூறப்படு முக்கூற்றுள் ஒருவாற்று னீண்டு வலியுறுக்கப்படு மிறுதிக்கூறு பதினோராஞ்சூத்திரத் தி னிவை யுபற்றி யெடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதிக்க நின்ற மையின், முன்னை யிருகூறுமே வேறெடுத்துக்கொண் டோதப் படுவன வெனக்கொள்க.

## மறைஞானதேசிகர் உரை.



இந்நிலைமை யானென வென்னுஞ் செருக்கற்றதனால் ஞானம் பிரகாசித்தார்க் குண்டென்பதூஉ மஃதில்லாதார்க் குண்டாகாதென்பதூஉ முணர்த்துகின்றார்.

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியானெ
ன்று, மிக்கோணை ஞானவெரி யால்வெதுப்பிநிமிர்த்து
த், தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்றானேரே த
னையளித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும்,
நான்செய்தே னெனுமவக்குத் தானங்கின்றி நண்ணு
விக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங்கன்ம, மூன்செ
ய்யா ஞானந்தா னுதிப்பினல்லா லொருவர்க்கு மியா
னெனதிங் கொழியாதன்றே. (௨)

(இ-ள்) யான்செய்தேன் பிறர் செய்தாரென்னதியானென்னு மிக்கோணை — நானேயிவனுக்கு நன்மைசெய்தோன் ஒருவராலுஞ் சாதிததுக் கெடாத காரியத்தை நானே நிறைவேற்றிக் கொடுத்தேன் என்றும் பிறரேயெனக் கிந்தத்தீமை செய்தாரென் றகங்கரித்து நின்றும், எனதென்று மபிமானமும் யானென்று மபிமானத்திணையுமுடையவர்களுக் காகாமியங்களேறுங் குற்றம். அஃதென்போல வென்னின.

ஒருவன் வீட்டி லூர்க்குருவியுங் கோழியும் வளர்த் தக்காலதனைப் பூனை பிடித்தவிடத் தப்பொழு ததனிடத் தபிமானம் பண்ணுதபடியாலே துக்கங்கண்டிலம், கோழியை நரிபிடி

த்தகதென்னு மபிமானத்தை யதனிட்த்து வைக்கையா லத்தை
கரிபிடித்தவிடத் தென்னுடையது போய்த்தென்னுந் துக்கமுற்
ருற்போல யானெனதெனனும் பந்தத்துக்கு மிஃதேகாரண மா
தலா லெனவறிக.

ஞானவெரியால் வெதுப்பிநிமிர்த்து — அதனைஞானமாகிய அக்கினியிலே வெது
ப்பிநிமிர்த்து

தான்செவ்வே நின்றிட — அந்த பந்த தசையைக் கருதாது முத்திதசையை யுடையோன் சிவனே யெல்லாதக்கும் பிரேரகனெனக் கருதி யவன்வழித்தாய் நிற்பர், அப்பொழுது

அந்தத்தவன் றனேரே தனைய ளித்து முன்னிற் கும்வினைபொளி ததிட்டோடும் — அந்தவுண்மைப் பொருளாகிய சிவனிடத்திற்றனே பிரகாசியாநிற்கவே யிவனிடத்தேறின வினைகளெல்லா மொளித்தோடிப் போம். ஒளித்தல்-வலிகெடுதல்.

நான் செய்தேனெனு மவர்க்குத் தானங்கின்றி — நானென்னுஞ் சுட்டுப்போதத்தைப் பொருந்தி யகங்கரித்து நிற்குமான்மாக்களுடன் சிவன் கலந்து நின்றனேயாயினும் அவர்களுக்குப் பிரகாசியாமல் நிற்பன். அஃதின்மையால்?

நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம் — பண்ணுவிக்குங் கன்ம நண்ணுவிக்கும் போகத்தை யெனப்பதமாறுக. இப்படியேறின வாகாமியகன்மம் வேறொரு சரீரத்தை யெடுக்கப்பண்ணுவிக்கும். அந்தச்சரீரம் போகத்தைப் புசிக்க விருப்பத்தை யுண்டாக்கும்.

இவ்வாறு சநந மரணத்துற்றுத் திரிகிறதே சுபாவமாய் விடுங்காண்.

ஊன் செய்யா ஞானந்தானுதிப்பினல்லா லொருவர்க்கும் யானெனதிங்கொழியாதன்றே. ஆன்மாக்களுக்குக் குற்றத்தைப் போக்குவதாயுள்ள சிவஞானமானது பிரகாசியாதவிடத் தொருவர்க்கும் யானெனதென்னுமிடம்பை யொழியாது எ-று.

" யானென தென்னுஞ் செருக் கறுப்பான் வானோர்க்-குயர்ந்த வுலகம் புகும்" எனவறிக.

ததுவன் முன்னிற்கும் என எழுவாயும் பயனிலையுமறிக.

இதற்குக் காலோத்தரம் மதங்கம் சிவதரு மோத்தரம் எனவறிக. (௨)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.



மேலிதனையே விளங்கக் கூறுகின்றது.

யான்செய்தேன் பிறர் செய்தா ரென்ன தியானென்று மிக்கொணை ஞானவெரியால்வெதுப்பி நிமிர்த்துத் தானசெவ்வே நிறுட வத்தத்துவன்று னேரே தனை யளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்-யானொருதருமத்தைப் பண்ணினேனை ஒருத்தருக் குபகாரம் பண்ணினேன் அபகாரம்பண்ணினேன் பிறரெனக்குபகாரம்பண்ணிஞர்கள் அபகாரம் பண்ணிஞர்களென்றுதனக்கும் பிறருக்கும் ஸ்வதந்திரமுண்டாகவும் வீடு மாடு பெண்டுபிள்ளை முதலானபொருள்களைச் சிவனென்னிடத்திற் கூட்டினுரெனதென்னும் இல்லதே யென்னும் தேகேந்த்ரியாக்

த்தக்கரணவிர்த்தி ஞான மிலைகளை யெனக் கன்னியமென் றுணரா மல் யானேயென்னு நினைவும் வச்சிரமாகிய மாயாசன்னிய ஞானத்தைச் சிவஞானமாகிற அக்கினியினாலே காச்சி யந்தக் கோட்டத்தைத் தீர்த்துத் தான சிவனுக்கு அபிமுகயாக நிற்கும் போதில், முந்தின திருவிருத்தத்திலே சொல்லப்பட்ட சத்தியமாகியசிவனறன்னுடைய ஆநந்தஸ்வரூபத்தை யிவனுக்களித்து பந்தத்திலே சிவனைத தெரியாம லான மாமுன்னாச நின்றதுபோல வானமாவைமறைத்துச் சிவனே முன்னாக நிற்பன். இவ்வாறு சிவன் முன்னாக நிற்கவே புண்ணிய பாவமான இவனைக் கிட்டாம லிவனுக்கு இதமகிதஞ் செய்தவரிடத்திலே விரைந்து போய்நிற்கும். நிற்பனென்பதற்கு நிற்குமென்றது வினைமுற்று.— நான் செய்தே னெனுமவர்க்குந் தானங்கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம் - முன்சொன்ன யானசெய்தே னென்பதாதியான நினைவையுடையவர்க்குக்குச் சிவனவ்விடத்திற் பிரகாசிப்பதின்றி யவர்களபண்ணின புண்ணிய பாவங்களுக்கேற்ற சுகதுக்கங்களைப் புசிப்பிக்கும். புசிப்பிக்குமிடத்து மேலும் புண்ணிய பாவங்களைப் பண்ணுவிக்கும். இவ்வாறாகில் யானெனதெனப தொழிவ தெவ்வாறென்னில்?—ஊன்செய்யா ஞானந்தா னுதிப்பினல்லா லொருவர்க்கு மியானெனதிங்கொழியாதன றே-மாயாகரணங்களைப் பொருந்தியறிகிற சிற்றறிவன்றிப் பெரிதாகிய சிவஞானம் பிரகாசிக்கி லல்லது பிரமாதி களுக்கும் யானெனதென்னு மகங்கார மமகாரங்க ணீங்காதென் றிதன் பொருள்.

அன்றென் கிளவியா மெனத் தகுமே.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

சிவபோகஞ் சிவயோகத்தாற் சேருமென்றுசெப்பிகின்றார்.

யான் செய்தேன் பிறர் செய்தா ரென்ன தியானென்னுமி க்கோணை - உபகாரபகாராபி மானத் திருக்காகு மஞ்ஞானத்தை,—ஞான வெரியால் - சிவசாத்திர மாத்திர சாத்திய சிவாதித் திரிபதார்த்த சிவத்துவ பசுத்துவ விவேக பரோக்ஷ பொத ஞானக்கினியால்,— வெதுப்பி நிமிர்த்து - வாட்டி மேலறிவை நீட்டி,—தான் செவ்வே நின்றிட - சிவயோகி யானவன் தியான சமாதிக் குறிச் சிவ யோகத் திருக்க,— தத்துவன் றானேரே - சிவனெதிராய்,— தனையளித்து முன்னிற்கும் - விரைவிலே திரிகாலக் குறிப்பு மொழிதன்னைச் சிவ யோகியைக் கொண்டு சாக்ஷாத் கரிப்பிக்கச் சத்தி சங்கற்ப சாந்நித்திய னுவன்,— வினையொளித்திட்டோமும் - முதநி முந்தி வியத்தி பிந்தி வருதல் முறைமை யாதலால் முன் பாச முத்தியாம் பின் சாக்ஷாத் காரக் குறிச் சிவத்துவ வியத்தியாம்,— ஊன் செய்யா ஞானம் - சிறப்பு ஞானச் சிவ யோகத்துக்கு மூலமாய் முன் சொல்லிய பொது ஞானம்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

யானென தென்னுஞ் செருக் கற்றாலன்றி, இறைவ னுடனுய் நின்று கோடலும் அதுபற்றி வினை நுகர்ச்சியு மார்ச்சிப்பும் இவனுக் கில்லாததாலும், அதுபற்றிக் குற்றமகலுதலுமாகிய வினை முறையே நிகழ்தல் செல்லாமையால், அச்செருக் கறுதியைப் பயப்ப தூஉம் அவனிவனுய் நின்ற முறை யேகனுகி நிற்கு ஞானமொன்றே யன்றிப் பிறிதின்மையின், அச்செருக் கறுதியின் பொருட்டு அவ்வாறு நிற்கு ஞானம் ஒருதலையான் வேண்டற்பாற் றென்பதாம்.

வலியுறுத்தற் பொருட்டு உடம்பாட்டு முகத்தானு மெதி ர்மறை முகத்தானுங் கூறினார்.

உருவகஞ் செய்ததும் அதனை யின்றி யமையாமை விளக்கு தற் பொருட்டு.

ஞான மென்றது ஈண் டேற் புழிக் கோடலால் ஏகனாகி நி ர்கு ஞானத்தினமேற றாயிற்று.

இதனானே, மேலைச் சூத்திரத் தோதிய வாறு ஞாதிருவு ஞானமு ஞேயமுமாக நின்று காணுங் காட்சியே யனையும் அத னமேலு மேகனாகி நிற்ற லெற்றுக் கெனபாரை நோக்கி, அவ்வா றுநின்றாலன்றி யாமென தெனனுஞ் செருக்கறுதன முதலிய ன முறையே நிகழ்ந்து முத்தியைத் தலைக் கூடுதல் செல்லாதெ ன முதற்கூறு வலி யுறுத்தப் பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இயா னெனதெனனுஞ் செருக்கற்றவர்களுக் கொழிந்து ஞானப்பிரகாச முண்டாகாதென்று அருளிச்செய்கிறார்.

இயான்செய்தேன பிறர்செய்தா ரெனனதியானெனனுமிக் கோணைஞானவெரிபால் வெதுப்பிநிமிர்த்து - நான பிறருக்கொ ன்றைச் செய்தேனென்றும் பிறர் தனக்கொன்றைச் செய்தார்க ளென்றும் யானென்றும் என்னுடைய பதார்த்தமொன்றும் பிற ரொன்றும் பிறருடைய பதார்த்தமென்றும்சொல்லுகிற அஞ்ஞா னமாகிய முட்டினது திருக்கை ஞானருக்னியினாலே வெதுப்பி நனருக நிமிர்த்து,—தான்செவ்வே நின்றிட - தானத் தவ ஞானமாகிய குற்றத்தைவிட்டு ஞானத்துடனேகூடி ' ஞானத் தினவழித்தாய் நற்கவே,—அத்தத்துவத்தா னேநாதனை யளித்

து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும் - அந்த ஞானத்து
க்கு மேலாயிருக்கிற சிவன்றானே புலப்படத் தன்னை யிவன்வச
த்திலே கொடுத்து ஆன்மாவென் றொன்றில்லை யென்னும்படி
தான் பிரகாசியா நிற்பன். அப்படி நிற்கவே யிவனுக்குண்டா
ன பிராரத்தமும் அது புசிக்கச்செய்தே யேறுகிற வாகாமிய
மும் ஆதித்தன் சன்னதியில் அந்தகாரம்போலத் தோன்றாம
லோடிப் போகாநிற்கும்,— நான்செய்தே னெனு மவர்க்குத்
தானங்கின்றி - தன்றாலே செய்யப்பட்டதென்று அகங்கரித்து
நிற்கிற பேதான்மாக்களுக்குக் கர்த்தா வவர்களுடனே பொரு
ந்தி நிற்கச்செய்தேயும் தோன்றாமல் நின்று,—நண்ணுவிக்கும்
போகத்தைப் பண்ணுவிக்குங்கன்மம் - அவர்கள் முன் ஜனன
ங்களிற்செய் கன்மதனுக் கிடாகச் சுகதுக்கங்களையும் புசிப்பி
த்து அது புசிக்கிற வவசரத்திலே இதாவகிதங்களாகிய வாகா
மியத்தை யுண்டாக்கா நிற்பன். இப்படிச் சொல்லுகிற யானெ
னது போம்படி யெங்ஙனே யெனில்?—ஊன்செய்யா ஞான
ந்தா னுதிப்பினல்லால் - சர்வர்க்கும் அனுக்கிரகத்தைச் செய்
கிற சிவஞானம் பிரகாசியாதபொழுது,—ஒருவர்க்கு மியானெ
னதிங் கொழியாதன்றே - சர்வான்மாக்களுக்கு மியானென
தென்று சங்கற்பித்துக் கொண்டு நிற்கிற பசுஞானம் விட்டு
நீங்காது.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். ௧௰-சூ,௧-வெ.
“நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளமுண்டாதல், தானெ
னவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன், றில்லெ
ன்றுதானே யெனுமவனைத்தன்னடிவைத், தில்லொன்று தானாமி
றை.” என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, யானென்னுஞ் சங்கற்பத்தா லுண்
டாகிய வஞ்ஞானத்தை சிவ ஞானத்தாலே நீக்கி அந்தஞான

த்தின் வழித்தாய் நின்றவர்க்கு ஜனன முண்டாகாதென்று
ம் யானெனதென்றும் சங்கற்பத்தோடே கூடி அஞ்ஞானமே
யாய் நின்றவர்களுக்கு ஜனனம் ஒழியாதென்றும் சர்வான்
மாக்களுக்கும் சிவஞான முதயமானா லொழிந்து இந்தவஞ்
ஞானம் போகாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

யான்செய்தேன் பிறர்செய்தார் - யானிதனைச் செய்தேன்
பிறரிதனைச் செய்தார் என்கின்ற,— என்னது யானென்னுமிக்
கோணை - மமகார வகங்காரமாகிய செருக்கு விளைதற் சேது
வாகிய மலக்கோணை,— ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்து -
ஞானாக்கினியால் காய்ச்சி யக்கோணைத்தீர்த்து,— தான்செய்
வே நின்றிட - தான்முதல்வன் வழித்தாய் நிற்கவே,— அத்த
த்துவன்றானோ தனையளித்து முன்னிற்கும் - அம்முதல்வ
ன் றற்சொரூபத்தை விளக்கி வெளிப்பட்டுத் தோன்றுமாகலி
ன்,— வினையொளித்திட் டோடும் - புண்ணியபாவமாகிய வினை
களிவனைப் பொருந்தாம லிவனுக்கு இதமகிதம் செய்தார்பால்
விரைந்து செல்லும்,— நான்செய்தே னென்னு மவர்க்கு - முன
சொன்ன யான் செய்தேனென்பது முதலிய நினைவுடையார்க்
கு,— தானங்கின்றிப் போகத்தை நண்ணுவிக்கும் - முதல்வன்
விளங்கித் தோன்றுதலின்றிக் கன்மானுகூலமாகப் போகத்
தைப் புசிப்பிக்கும்,— கன்மம் பண்ணுவிக்கும் - புசிக்குமிடத்
தாகாமிய வினையை யேறச் செய்யுமாகலின,— ஊன்செய்யா.
ஞானந்தானுதிப்பினல்லால் - மாயாகருவிகளைப் பொருந்தியறி
கிற சிற்றறிவி னின்று நீங்கி யேகனாகி நிற்கப்பெற்றாலன்றி,—

ஒருவர்க்கும் யானெனதிங் கொழியாதன்றே - யாவர்க்கும் யா னெனதென்னுஞ் செருக்கொழியா தன்றே. எ-ம்.

இதனானே மேலைச்சூத்திரத்து ஓதியவாறு ஞாதுரு ஞா னமு ஞேயமுமாக நின்று காணுங்காட்சியே யனையும் அதன்மே லும் ஏகனாகிநிற்றல் எற்றுக்கென்பாரை நோக்கி யவ்வாறு நி ன்றாலன்றி யானெனதெனனுஞ் செருக்கறுதன் முதலியன மு றையே நிகழ்ந்து முத்தியைத் தலைக்கூடுதல் செல்லாதென மு தற்கூறு வலியுறுத்தப் பட்டது.

☞ ௧o-சூ, ௧-ம், அதிகரண முடிந்தது.

## மறைஞானதேசிகர் உரை.

இம்முறையி னிற்கவொட்டாம லிந்திரியாதி தன்வ சத்தாகி லதற்கோ ருபாய முணர்த்துகின்றார்.

இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென்வசத்தி னிசையாதே தன்வசத்தே யெனையீர்ப்பதிவற்றைத், தந்தவன்ற னிணைவழி நின்றிடலா லென்றுந் தானறி ந்திட் டவற்றினொடுந் தனையுடையான்றாள்கள், வந்த னைசெய் திவற்றின்வலி யருளினல்வாட்டி வாட்டமி ன்றி யிருந்திடவும் வருஞ்செயல்களுண்டேன், முந்த றுடைச் செயலென்று முடிந்தெழுகவினைகண் மூளா வங் காளாகி மீளானன்றே. (௯)

(இ-ள்.) இந்திரி இந்திரியங்களானவை யென்னுடன் கூடி ய மெனைப் பிருந்த மனை யென்வசம் வாராம லென் பற்றி நின் னையுந் தன்வழித் தாக்கிக்கொண் டிழுத்து றேயென் வசத் க்கொள்ளுகிற முறைமையினையும்

தி விசையாதே தன் வசத்தே யெனையீர்ப் பதி வற்றை தந்தவன்று ணைவழி நின்றிட லாமென்றுந் தானறிந்திட்டு

அவை சடமாதலாற் றன்வழித்தன் றவையிற்றைச் சிருட்டித்து நிறுத்தின கர்த்தாவினது வழியானுந் தானுமென் றுணர்ந்து நின் றவைநடக்கையிலே யிதனை யறிந்துகொண்டு

அவற்றினொடு ந் தனையுடையான் றாள்கள் வந்தனை செய்து

அவைகளுடன் கூடின தன்னையு மிவ்விந்திரியங்களையும் சுதந்தரமாகவுடைய சிவனுடைய சீர்பாதகமலங்களை வணங்கி

இவற்றின் வலி யருளினால்வாட்டி

அவைகளால் வருத்தம் வந்தவிடத் தந்தப் பலத்தை யருளினால் கெடுத்து

வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்களுண்டேல்

இம்முறைமையிலதன் வலிமைக் கெடுத்து நின்ற வாதையுறும லிருக்கையிலுஞ் சன்மாந்திரத்தி லார்ச்சித்த பிராரத்த வசத்தாலே யதன்வழி யிழுத்துத் தீவினையைப் பண்ணிற்றாயினும்

முந்தனுடைச் செயலென்று முடிந்தெழுக

இனி நாமிதற்கு வேறொன்றுஞ் செய்வதில்லை நாமுன்னே யார்ச்சித்த கன்மத்துக்குண்டாகச் சிவனே செய்ததெனக் கருதி, இதுவு மவன்செயலென்று அதன்வழியே செல்க. இப்படி யதன்வழித்தென்றே பணியறுத்து நிற்பானாகில்

| | |
|---|---|
| வினைகண் மூளா | இவனுக் கொருக்காலு மாகாமிய கன்ம மேறப்பெறு. |
| அங் காளாகி மீளாதனறே. | அஃது தண்டாகாதபடியாலே மற்றொரு சனனத்தை யெடுப்பித்துப் பலத்தை யெப்படி கொடுக்கப் போகின்றது. எ-று. |

ஒடு உடனிகழ்ச்சி.

உம்மை யசை.

இவன் கிரியையற்றவ னாதலாலே அஃது தண்டாகாதென்பதாயிற்று.

இதற்குச் சிந்தியாகமம் சிவதருமோத்தரத்து மறிக.

"ஐவரா லலைக்கப்பட்டுக் கழியிடைத் தோணிபோன்றேன்" எனவும்.

"நாணிலா ஐவரோடு மிட்டெனை யிரவிவைத்தா ராணலாற் பெண்ணுமல்லா ரதிகைவீ ரட்டனாரே." எனவுமறிக (௩)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலும் பிரபத்தி யுபாயங் கூறுகின்றது.

இந்திரியமெனைப்பற்றி நின்றேயென்வசத்தி னிசையாதேதன் வசத்தேயெனையீர்ப்பது-சோத்திராதி இந்திரியங்களானது அந்தக்கரண விர்த்தியான வென்னுடைய வறிவைப்பற்றி நின்றேயென வழித்தாகாமல் தன்வழித்தாக விழுக்கையா லெவ்வாறு விஷயங்களை நீங்குவதென்னு மாணுக்கன்வினவ உத்தரம்.—இவற்றைத் தந்தவன்றா னிணைவழிநின்றிடலா னென்றுந் தானறிந்திட்டு டிவற்றினொடுந் தனையுடையான்றாள்கள் வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி - இந்த இந்திரியங்களை யான்மாவுக்குக் காரணங்களாகக் கூட்டின சிவனுடைய வாஞ்ஞாசத்

தி வழித்தாய்க் கூட்டினபொழுது கூடியும் பிரித்தபொழுது பிரிந்தும் எக்காலமும் நிற்கையாலே இந்தவிந்திரியங்களை யுடைமையாகவுந் தன்னையடிமையாகவு முடையவன் சிவனெனவுமறிந் தவனுடையபாதத்தை வணங்கி யிந்தவிஷயங்களிலே யடியேன்கருத்துச் செல்லாம னிறுத்தவேணுமென்று வேண்டிக்கொண்டவனருளினாலே யிந்திரியங்களுடைய சத்தியைக்கெடுத்துச் சிவன்வழித்தாய தானியையாமனிற்க,—வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன்-இந்திரியத்தின் வலியைக்கெடுத்துத் தன்வலிகெடாம லிருக்கச் சிலேயும் பிரபல பிராரத்தத்தினாலே விஷயத்தினுடைய விச்சையானது மேலிட்டுவரில்.—முங்களுடைச் செயலொன்று முடிக்கொழுகவினைகண் மூனாவங்காளாகி மீளானன்றே-இவ்வாறு விஷயவிச்சை மேலிட்டு வருவது கர்த்தாவினுடைய பிரேரகமே, இதை நம்மால் மீறப்போகா தவனேவினபடி செய்கிறோமென்றுநீர்வரக்கிலே கோரையொழுங்கினாற்போல விஷயத்தைக் கூடினும் ஆகாமிய கன்மமான துண்டாகாதாகையால் மோக்ஷத்துக் குரித்தா யிவ்விடத்து சனனத்தை யெடுக்கத் திரும்பிவாரார்களென் றிதன்பொருள்.

பிரபல பிராரத்தமென்ற தேதென்னில் பிராரத்தமானது தீவிரமென்று மந்தமென்றும் × சுப்தமென்றும் மூன்றுவிதமாம்.

இதில் சுப்தமானது சிவதரும பாராயணனாய் நடக்கிறவனுக் கில்லையாம்.

மந்தமானது சிவஞானிக்கில்லையாம்.

தீவ்ரமான தாருக்கும் நீங்காது.

தீவ்ரபிராரத்தை பிரபலபிராரத்த மென்றதெனவறிக.

× சுபத்தம்-தூங்கினது.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவனைச் சிந்தித்துச் சிவ சத்தி தனைச் சிற்சத்திப் பிரத்தியாகார வியாபாரததா லிந்திரியங்களை விஷய விமுகங்களாக்ப் பண்ணிச் சமாதிபண்ணித் தான் செய்யுங் கிருத்தியங்களைச் சிவாதீன மாக்கி நிற்கப் பாசமுத்தி சிவத்துவ வியத்தி பலிக்குமென்று படிக்கின்றார்.

ஆனாகி - சர்வஞ்ஞத்துவஞ் சர்வ கர்த்திருத்துவ முற்றுச் சமர்த்தனு கிதாசனுகி யென றுரையுரைப்பதன்று, அதிமோகமென்று முன் மறுத்திருத்தலால்.

மற்றைய வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

உலகத்துப் பாடி காவல ராயினுர் பிழைசெய் தள்ளாரைத் தம்முளாடக்கித் தாமீர்த்தவா றெல்லாம் பரதந்திரமாய்க் கிடப்பச் செய்வது தம்மை யவ்வாறு செய்விக்கு மரசன தாணைவழி நிற்கு மவ்வாற்றல் கொண்டன்றிப் பிறிதின்மையின், அதனை யறிந்து அப்பாடி காவலர்க்குந் தமக்கு மிறைவனுகிய வவ்வரசனைத் தலைக் கூடப்பெற்று அவன் கருத்தின்வழி யொழுகவல்லராயவழி, அவ ரப்பரதந்திர நீங்கி யரசனருளாற் பாடிகாவலரையுந் தம்மாணைவழி நிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரராவர். அதுபோல, வினை செய்தமைபற்றி இந்திரியங்களொன்னைத் தம்முளடக்கி யீர்த்தவழி யெல்லாம் பரதந்திரப் பட்டுக்கிடப்பச் செய்வதும் அவற்றை யவ்வாறு செய்விக்கு முதல்வனதாணைவழி யவைநிற்றலான், அவ்வாற்றல் கொண்டன்றிப் பிறி

தில்லையென் றிவ்வாறுணர்ந்து அவ்விந்திரியங்களையுந் தன்னையு
முடையனாகி யம்முதல்வனை யுள்களைத் தலைக்கூடப்பெற்று அ
வன் பணியினின் றொழுக வொருவனை பெறுமாகின், அவனை அ
ம்முதல்வன திருவருளால் அவ் விந்திரியங்களைத் தனதாணை வ
ழி நிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரனாவன். அவ்வாறு முதல்
வன்வழியி னுறைத்து நிற்புழியும் பயிற்சிபற்றி யொரோவழி ய
வ் விந்திரியங்களின் குறும்பு நிகழுமாயின், இந்திரியங் களுக்கு
மெனக்கு மொரு சுதந்திர மின்மையின் அதுவும் முதல்வன் செ
யலே யென்று வரைசெய்து பணியின் வழுவா தொழுகவே, அ
துவாயிலாகப் புகுந்து கூடித் துடக்க வல்ல வினைகள் அங்ஙன
மாகமாட்டாவாய் மடங்கி யொழியு மாகலான், அவ்வாறடி
மைத்திறத்தி னின்றோன் மறித்துப் பொறிகளின வழிப்பட்டு
ப் பரதந்திரனாவானல்ல னென்பதாம்.

குறிப்புருவகய்.

ஏகனாகி நிற்றலே யமையும் அதன்மேலு மரன்பணியி னிற்
றலெற்றுக் கென்பாரை நோக்கி, ஏகனாகி நிற்பினுந் தன்பணி
மடங்கினா லன்றி வினைத் துடக் குறுதற் கேதுவாய் இந்திரிய
ங்களின் வழிப்பட்டுச் செல்லும் பரதந்திர நீங்காமையின், அ
து நீங்குமாறு தான் பணியை நீத்தற் பொருட்டு அரன்பணியி
னிற்றலு மொருதலையான் வேண்டப்படுமென றுணர்த்திய
வாறு.

நின்றிடலா லீர்ப்பதென் றறிந்திட்டென வியையும்.

தான் அசை.

ஈர்ப்பதென்பது அத்தொழின்மே னின்றது.

என்று மென்னு மும்மை அவ்வீர்த்தலை மாற்றுதற்கு உபா
யமாவது யாமு மவ்வாணைவழி நிற்றலென்று மறிந்தென எதி
ரது தழீஇயிற்று.

இவற்றி னொடுங் கனையுடையா னென்றது குறிப்பேதுவா ய் நின்றபெயர்.

வந்தனை செய்தல் ஈண்டு அரன்பணியி னிற்றன் மேற்று.

வருஞ் செயல்க ளுண்டே லென்பது ஒருமைப் பன்மை ம யக்கம்.

வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல் ளுண்டேன் மு ந்தனுடைச் செயலென முடித் தொழுகுதல், "யானுமதுவே வேண்டினல்லால வேண்டும்பரிசொன் றுண்டென்னி னதுவுமு ன்றன் விருபன்றே" என்ற திருவாக்கினுமறிக.

அவ்வாறு முடித்தொழுகவும் வருஞ்செயல்க ளுளவாம் போலுமென்பாரை நோக்கி அங்ஙனம் வரம்பின்றி அநவத்தை யாதலில்லை யென்பார், ஆளாகிமீளா ரென்றுங் கூறினார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இந்தத் தன்மை கூடாதவர்களுக்கு மேலுமோ ருபாய ம ருளிச்செய்கிறார்.

இந்திரியமென்னைப்பற்றி நின்றேபென்வசத்தி னிசையாதே தன்வசத்தே யென்னையீர்ப்ப- பஞ்சேந்திரியங்களினு மியான் முத ன்மையாயிருக்க அவை யென்னைப் பற்றிக்கொண்டு நிற்கச்செய் தேயும் என்னுடைய வசத்திலேலே பொருந்திவாராமல் இவை யென்னைத் தன்னுடைய வசத்திலே வலித்துக்கொள்ளுகிற வி னையிற்றை,—இவற்றைத் தங்கவன் றன் னுணைவழி நின்றிடலா மென்றுந் தானறிந்திட்டு - இந்திரியங்களை யெனக்குக்கூட்டின பரமேஸ்வரனுடைய வாக்கினைவழியிலே எப்பொழுதும் நிற்கி றதென்றும் இவையிற்றுக் கொருசெய லில்லையென்றுந் தானறி ந்து,—இவற்றினொடுங் கனையுடையான் றுள்கள் வந்தனை செ

ய்து - இந்த விந்திரியங்களோடுந் தன்னை யடிமையாக வுடைய பரமேஶ்வரனது சீர்பாதங்களிலே தன்செயலற்று அவன்செயலான முறைமையை யறிந்து வணங்கி,—இவற்றின்வலியருளினால்வாட்டி - இந்தப் பஞ்சேந்திரியங்களினது பலத்தைத் தம்பிரானுருடைய வருளினாலொழிந்து வாராதென் றறிந்து அவை யிற்றைக்கெடுத்து,—வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்களுண்டேல் - இவையிற்றை நீக்கி மயக்க விகற்பங்கள் கூடாமலிருககலாம். அப்படியிருக்கவே மீண்டு மிந்திரிய வியாபாரங்கள் வந்துகூடில்,—முந்தனுடைச் செயலென்று முடிநதொழுக - கர்த்தாவினுடைய செயலொழிந்து விந்திரியங்கள் தானாக வந்துகூடாதென் றறுதியிட்டு நிற்கவே,—வினைகள் மூளாது-இநத முறைமையிலே நின்று பிராரத்தம் புசிக்கிற விவர்களுக்கு ஆகாமிய மேருது.—அங்காளாகி மீளாவனறே - அந்தப் பரமேஶ்வரனுக் கடிமையா யவனைவிட்டு நீங்காமல் நிற்பன்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், கO-சூ, ௨-வெ, "நாமல்லவிநதிரிய நம்வழியினல்லவழி, நாமல்லநாமு மரனுடைமை—யாமென்னி, னெததனுவினின்று மிறைபணியாற்கில்லைவினை, முற்செய்வினை யுந்தருவான் முன்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, இவனாலுள்ள செயல்களெல்லாம் சிவனுடைய செயல்களென்று காணவே ஆகாமிய மேருதென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(உலகத்துப் பாடிகாவலராயினார் பிழைசெய் துள்ளாரைத் தம்முள்ளடக்கித் தாமீர்த்தவர றெல்லாம் பரதந்திரமாய்த்

கிடப்பச்செய்வதுதம்மையவ்வாறுசெய்விக்கு மரசனதாணைவழி
நிற்கு மவ்வாற்றல் கொண்டன்றிப்பிறிதின்மையின், தனையறிந்து
அப்பாடிகாவலர்க்கும் தமக்கு மிறைவனாகிய அவ்வரசனைத் தலை
க்கூடப்பெற் றவன் கருத்தின்வழி யொழுகவல்லாராயவழி ய
ஃ ரப்பரதந்திரநீங்கி யரசனருளாற் பாடிகாவலரையும் தம்மா
ணைவழியி னிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரராவர். அதுபோ
ல) இந்திரியமெனைப்பற்றி நின்றே யென்வசத்தினிலையாதே த
ன்வசத்தினெனை யீர்ப்பது - வினைசெய்தமைபற்றி யிந்திரியங்
களெனைத் தம்முள்ளடக்கி யீர்த்தவழி யெல்லாம் பரதந்திரப்
பட்டுக் கிடப்பச் செய்வதூஉம், — இவற்றைத தந்தவன்றன
ணைவழி நின்றிட்டலால்-அவற்றை யவ்வாறு செய்விக்கு முதல்வ
னதாணைவழி அவை நிற்றலால், — என்றுந்தானறிந்திட் டிவற்
றினொடுந் தனையுடையான் றாள்கள் வந்தனைசெய்து - அவ்வாற்
றல் கொண்டன்றிப் பிறிதில்லையென் றிவ்வா றுணர்ந் தவ்விந்தி
ரியங்களையுந் தன்னையு முடையானாகிய அம்முதல்வன றாள்களை
த் தலைக்கூடப்பெற் றவன்பணியினின்றொழுக ஒருவன பெறு
மாயின், — அருளினாலிவற்றின் வலிவாட்டி வாட்டமின்றி யிருந்
திடவும்-அவ னம்முதல்வன திருவருளால் அவ்விந்திரியங்களைத்
தன்னாணைவழி நிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரனாவன். அவ்
வாறு முதல்வன்வழியி னுறைத்து நிற்புழியும், — வருஞ்செயல்க
ளுண்டேனு முந்தனுடைச் செயலென்று முடிக்கொழுக, — பயி
ற்சிபற்றி யொரோவழி யவ்விந்திரியங்களின் குறும்பு நிகழுமா
யி னிந்திரியங்கட்கு மெனக்கு மொருசுதந்திர மின்மையி னதுவு
முதல்வன செயலேயென்று வரைசெய்து பணியின்வழுவாதொ
ழுகவே, — வினைகண்மூளா-அதுவாயிலாகப் புகுந்துகூடித் துட
க்கவல்ல வினைக ளங்ஙனமாக மாட்டாவாய் மடங்கியொழியு
மாகலான, — அங்காளாகி மீளானன்றே- அவ்வா றடிமைத் திற

த்தினின்றான் மறித்துப் பொறிகளின் வழிப்பட்டுப் பரதந்திரனுவா னல்லன்.

## மறைஞானதேசிகர் உரை



தன்னை யடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலைப்பாயவர் தன்கடனாவது, தானென்னுந் திருவாக்குண்டாகையாற் றன்கைம்மாறு கருதா தனுக்கிரகஞ் செய்வது சிவனுக்குச் சுவபாவமெனா றுணர்த்துகின்றார்.

சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத் தானாக்கித் தலைவனவர் தாஞ்செய்வினைதன்னை, னலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப்பானாய் நணுகாமல் வினையவனை நாடிக்காப்ப, னுலகினிலென் செயலெல்லா முன்னிதியேநீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாயென்று, நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலேயென்று நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந்தானே. (௪)

(இ-ள்.) சலமிலனாய் ஞானத்தாற்றனையடைந்தார் தம்மைத் தானாக்கித் தலைவனவர் தாஞ்செய் வினைதன்னை, னலமுடனே பிறர்செய்வி — தலைவன் சலமிலனாய் நலமுடனே யாவர் தாஞ் செய்வினை தன்னைப் பிறர்செய்வினை யூட்டி யொழிப்பானாய் ஞானத்தாற் றனை யடைந்தார்தம்மைத் தானாக்கியவனா வினை நணுகாமல் நாடிக் காப்பன். இதனைப் பொருள் கோளாக்கிப் பொருள் கொள்க. சிவன் றானவன் றனக் கொருவ ரிடத்திலும் விருப்பு வெறுப்பின்மையாற் சர்வான்மாக்க ளிடத்திலும் நன்மைவைக்கப்பட்ட

னை யூட்டி பொழிப்பானாய் நணுகாமல் வினையவளை நாடிக் காப்பன்

வனும் அவரவர் செய்த கன்மபேத மெல்லாதனையும் நம்மாலே நாம் செய்தோமென்று கருதி நிற்கிறவர்களுக் கவர்களவர்கள் செய்த கன்மபலங்களை யேறுமற் குறையாம லவரவர்களுக்குக கொடுத்துப் புசிப்பித்துத் தொலைப்பிப்பானுமாய்க் கன்மங்களைச் செய்யுமிடத் தான்மாக்களுக் கொருசெயலு மின்மையா லிஃதெல்லாஞ் சிவன்செயலெனக் கருதிநிற்கிற ஞானத்தினா லிஃதெல்லாஞ் சிவாக்கினையின் வழியென் றிவர்களிப்படி நிற்கவே தமது செயல்களெல்லாஞ் சிவன் செயல்களெனக்கருதி நிற்கையாலுஞ் சிவபாவனை யுடன் கூடிநிற்கையாலு மவர்கள் கன்மபலத்தைப் பொருந்தாமற் காப்பன.

இப்படி சீவன் முத்தர்களா நிற்கையினாலே.

உலகினி லென் செயலெல்லா முன விதியே

கன்மம் பிரகிருதி சம்மந்தமா யிருக்கையா லதற்குச் சுதந்தரமில்லை.

இப் பிரபஞ்சத்தின்கண் யான் செய்யும் வியாபாரமெல்லாம் தேவரீர் கற்பித்தபடியே! அஃதெக் காரணத்தாலெனில்?

நீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாய்

எனக்கெனச் சுதந்திர மில்லாமையால் நீர்தாமே யெனனுள்ளே நின்று மிவையெல்லாவற்றையுஞ் செய்கின்றாய், உண்ணின்று மென்ற வும்மையாற் புறம்பேநின்று மெனக் கூறியதாயிற்று.

என்று நிலவுவதோர் செயலெனக்கின்றுன் செயலே

எப்பொழுதும் யானேவப்படுகிறவனாதலா லென்னுடைய சுதந்திரத்தாற் செய்யுஞ் செயல்களின்று. இஃதெல்லா மும்முடைய வியாபாரமேயெனப் பணியறுத்து

| | |
|---|---|
| எனறுநினைவார்கரு | எப்பொழுது மெதுவந்தாலு மிந்தப்படி கருதியிருக்கிற ஞாதாககளுக்கு |
| வினைக ளெல்லா நீங்குந் தானே. | இந்தப்படி நிற்கிறவர்களிடத் துண்டாகிய ஆகாமிய கன்மங்களெல்லாம் பொருநதாது. எ-று. |

தலைவன் - எழுவாய்.

காப்பன - பயனிலை.

நினைவார்க்கென்பதனைப் பெயராக்கி நீங்குமென்பதனைப் பயநிலையாக்குக.

தான் - அசை.

ஏகாரம் - ஈற்றசை.

இதற்குச் சர்வஞானோத்தரத்து மறிக. (௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



அந்தத் தீவ்ரமாகிய பிராரத்தகன்மபலத்தைப் புசிக்குமிடத்து ராகத துவேஷமுண்டாய்ப் பிறர்க்கு இதாகிதங்களைச் செய்யினும் ஹீனகிருத்தியங்களைப் பண்ணினும பிரபஞ்சதையினுலே ஆகாமிய புண்ணியபாவ மேறுதென்பது கூறுகினறது.

தலைவன்ஞானத்காற் றனையடைந்தார்தம்மை தானாகிய வர் தானுசெய்வினைதனனுல் நலமுடனே பிறர்செய்வினை யுடடிபொழிப்பானாய் நாடிச் சலமிலனாய் வினையிவரை நணுகாமற்காபபண-கர்த்தாவானவன றனது ஞானத்தினுலே தனனை வேறறநினறபெயரைத் தானேயாகப்பண்ணிச் செய்தவாகள பிராரத்தகனம வசத்தினுலே செய்துள்ள புண்ணிய பாவஙகளைக கொண்டு பிறர்அவாகளுக்கு நனமை தீமைகளைப் பண்ணினவ

ர்களைப் புசிப்பித்தது தலைப்பவனுக்கன்றி அந்தப்புண்ணிய பாவங்கள் சிவன் முத்தரைப் பொருந்தாதபடி வஞ்சனையில் லாதவனுகவே பாதுகாப்பன். ஆதலால்,— உலகினிலென்செய லெல்லா முனவிதிபே நீயேயுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய் கின்றுயென்று நிலவுவதோர் செயலெனக்கின் றனசெயலேயெ னறு நினைவார்க்கு வினைகளெல்லாம் தானே நீங்கும் - உலகத் தின்கண் மனவாக்குக் காயங்களினாலே நான்செய்யப்பட்ட பு ண்ணிய பாவங்களெல்லா முன்னாலசற்பிக்கபட்டதே! நீயே யாக தரியாமியாக வெனனிடத்திலேநின் றிச்சையாதிச் செலுத்தி ஞானேந்திரியங்களினாலே விஷயங்களைப்பற்றுவித்துங் கனமே ந்திரியங்களினாலே தொழில்களைச் செய்வித்துஞ் செய்கிறுயெ னறும் ஆதலாலென்னாற் செய்யுங் கிரியையொன்றுமில்லை யுன னுடைய கிரியாசத்தியே செய்விப்பதென்று வெவ்விடத்து மெச் செயலுஞ் சிவன்செயலென்று எண்ணுமவர்களுக்குப் பிராயச்சி த்தத்தினாலே யாதல் புசித்தாலன்றிக் கன்மங்கள் பொருந்தா மற் றுமேனே போமெனறிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

கன்மங் கன்மபலனக ளிரண்டினையுஞ் சிவனிடத்திற் சம ர்ப்பித்துச் சமபுத்தியாய் நிருவிகற்ப சமாதியாய்ச் சிவனைச் சி ந்தியாது சிந்தித்திருப்பவர்க் கிருவினை யிசையாதென றிசைக் கின்றர்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நீயே எனக்குண்ணின்று செய்கின்றாயாகலின் என்றாற் செய்யப்படு மிதமகிதமெல்லாம் நீசெய்யுஞ் செயலேயென்றும், நீயே பிறரைக்கொண்டு செய்வித்துஞ் செய்கின்றாயாகலிற் பிறரா லெனக்குவரு மிதமகிதங்களும் நீ செய்யுஞ் செயலே பிறிதில்லையென்றும், இங்ஙனம் அவனருளையல்லது ஒன்றனையுங் கருதாராய்த் தம்மை யிழந்து நிற்கப்பெறுவார்மாட்டு, அஞ்ஞானகன்மம் பிரவேசிக்கமாட்டாதா யொழிந்துவிடுமாகலான், அப்பெற்றித்தாகிய மெய்யுணர்வான் அடைக்கலம் புக்காரைத் தன்னைப்போலச் சுத்தராகச் செய்து பாதுகாத்தலும், மந்திரவலியானடங்கி இரை நுகரப்பெறாது கிடக்கும் பாந்தள் யாதானுமோரிலக்குவந்து வாய்த்துழி வறிதுகிடவாதவாறுபோல, அவர்மாட்டெழுந்தும் அவரைச் சாரமாட்டா தொழிந்து கிடந்த வவ்வாகாமிய வினை அவர்க்கு இதமகிதங்களைச் செய்வார் பிறருளராயவழி அவ்வினையுபற்றி ஆண்டவ்வித மகிதங்களுக்குத் துணையாய்த் தலைக்கூடற்பால தாகலின் அதனை யவ்வாறு செலுத்திப் பிறர் செய்யு மவ்விதமகிதங்களை மிகுவித்து நுகர்வித்தொழிதலுஞ் செய்வனாகலான் அதுபற்றி யிறைவன் சலமுடையனாவானல்லனென்பதாம்.

ஆக்கிக் காப்பனென வினையும்.

பிறரை யூட்டி யொழித்தலே யவரை வினை நணுகாமற் காப்பதெனக் கொள்க.

பிறரை யங்ஙன மூட்டுதலுங் கருணையேயாமென்பார், ஊட்டியென் றொழியாது ஒழிப்பானா யென்றும் நலமுடனே யென்றுங் கூறினார்.

உலகினி லென்செயலெல்லா முன்விதியே நீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றுயென்று நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று நினைவார்க்கென்றதனால் அவன் பணியி னின்றிடலாவது இதுவெனத் தெரித்துக் கூறியதூஉ மாயிற்று.

இறைபணியினிற்கு மிவன் பாதகத்தைச் செய்திடினும் பணியாசகிவிட்டு இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதமகித மிவனுகருச் செய்தார்பா லிசையச் செய்தல் இறைவனுக்குச் சலமாய் முடியும் போலுமென்பாரை நோக்கி, அதனைத் தெரித்துணர்த்திச் சலமின்மை காட்டியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிச் சிலரை யிரட்சித்தானென்னிற் பட்சவாதி யாகானுே வென்ற வவிகாரவாதியை நோக்கி யருளிச்செய்கிறுர்.

சலமிலனுய்ஞானத்தாற் றனையடைந்தார்தம்மைத் தானுக்கித்தலைவன் - அன்னுவயம். சிவஞானத்தாலே தன்னை யடைந்தவர்களை இரட்சித்துத் தனைப்போலே யாக்கிக்கொள்ளுகிறவிது கர்த்தாவுக்குள்ள தாகையாலே தனையடைந்தவர்களை யிரட்சிக்கச் செய்தேயும் பிறரோடு வெறுப்பில்லை இப்படிச் சிவனைப் பெறறவர்கள் இந்திரிய வியாபாரதோடு கூடியிருந்தால மிளவு மாகமிய மேறுதொ வென்னில்?—அவர்தாஞ்செய்வினைதன்னு னலமுடனேபிறர்செய்வினை யூட்டியொழிப்பானுய் - தன்னையடைந்த வடியாரைச் சிவன்றனுக்கி யிருக்கச்செய்தேயும் இந்திரிய வியாபாரங்களுடனே கூடியிருந்தார்களாயினும் அவர்கள முன்புசெய்த கன்மத்துக் கிடாகப் பிறராற் பலி

க்கிற பலன்களும் இவர்கள் பிறருக்குப் பலிக்கிற பலன்களும் இவையெல்லாஞ் சிவனுடைய செயலென்று காணவே சிவனும் புசிப்புமாத்திரம் புசிப்பித்துத் தலைப்பிப்பனாய் நின்று,—நணுகாமல்வினையவனை நாடிக்காப்பன் - அப்படித் தன்செயலற்று நின்றவர்களுக்கு ஆகாமியமேறுமற் றிருவுள்ளம்பற்றிப் பாதுகாத்துக்கொள்ளுவன. இந்த வுண்மையைப் பெற்றவர்கள் நிற்குமுறைமை யருளிச்செய்கிறார்.— உலகினி லெனசெயலெல்லா மூன்விதியேநீயே யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கினறுமெனறும்- பிரபஞ்சத்திலே நான்செய்கிற தொழில்களெல்லாம் நீ நியமித்ததே! நீதானே யெனக்குள்ளே நின்று மிவையெல்லாஞ் செய்கிறாயுஞ் செய்விக்கிறாயும் என்றும்,—நிலவுவதோர் செயலெனக்கின றுன்செயலேயென்று - எனக்கிப்பொழுது பொருந்தப்பட்ட தியாதொரு செயல்களெல்லா முன்னுடைய செயலேயென்றும்,—நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந்தானே - இங்ஙனஞ் சொல்லப்பட்ட முறைமையை சிவனுடைய சிவஞானத்தாற் கண்டு நிற்பார்க் கெல்லாக் கன்மங்களும் விட்டு நீங்காநிற்கும்.

இதற்குப் பிரமாணம், தேவாரம். "முன்னம்மடியேனறியாமையினான்முனிந் தென்னைநலிந்து முடக்கியிடப், பின்னையடியே னுமக்காளும்பட்டேன் சுடுகின்றது சூலைதவிர்த்தருளீர், தன்னையடைந்தார் வினைதீர்ப்பதன்றோ தலையானவர்தங்கடனாவதுதா, னனனடையா ரதிகைக்கெடில வீரட்டானத்துறையம்மானே." சிவஞானபோதம், க0-சூ, ந-வெ, "சார்ந்தாரைக்காற்றல் தலைவர்கடனாகல், சார்ந்தாரைககாத்துஞ் சலமிலனாய்—சார்ந்தடியார், தாந்தானாய் செய்துபிறர் தங்கள் வினைதாங்கொடுத்த, லாய்ந்தார்முன் செய்வினையு மங்கு" என்னுமதுங் கண்டுகொள்க,

இதனாற் சொல்லியது, பக்குவான்மாக்களை இரட்சிக்கையினால் சிவன பக்ஷவாதி யல்லனென்றும் சிவனைப் பெற்றவர்கள் பிராரத்தம் புசிக்குமிடத் துண்டாகிய செயல்களெல்லாஞ் சிவனுடைய செயலேயென்றுங் காணவே அவர்களுக்கு ஆகாமிய மேறாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

நீயே யுண்ணின்றுஞ் செய்கின்றாய்-நீயேயெனக் குண்ணின்றுஞ் செய்கின்றாயாகலின்,—உலகினி லென்செயலெல்லா முன்விதியேயென்றும் - உலகினி லென்னாற்செய்யப்படு மிதமகிதமெல்லா நீ செய்யுஞ் செயலே யென்றும்,—செப்பித்து நிலவுவதோர் செயலெனக்கின் றுன செயலேயென்றும் - நீயே பிறனாக்கொடு செய்வித்தும் செய்கின்றாயாகலின் பிறரா லெனக்குவரு மிதமகிதங்களு நீ செய்யுஞ்செயலே. பிறிதில்லை,—என்றும் நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந்தானே-இங்ஙன மவனருளையல்ல தொன்றினையுங் கருதாராய்த் தம்மையிழந்து நிற்கப்பெறுவார்மாட் டஞ்ஞானகன்மம் பிரவேசிக்க மாட்டாதா யொழிந்துவிடு மாகலான்,—ஆபஞானத்தாற் றனையடைந்தார் தம்மை - அப்பெற்றிக தாகிய மெய்யுணர்வா னடைக்கலம் புக்காரை,—தானாக்கிக்காப்பன் - தன்னைப்போலச் சுத்தராகச்செய்து பாதுகாத்தலும்,—அவரை நாடிநணுகாமல்வினை- மந்திரவலியா னடங்கி யிரைநுகரப்பெறாது கிடக்கும் பாந்தள் யாதானு மோரிலக்கு வந்துவாய்த்தழி வறிது கிடவாத வாறுபோலவவர்மாட் டெழுந்து அவரைச் சாரமாட்டா தொழிந்து கிடந்த வவ் வாகாமியவினை,—அவர்தாஞ் செய்வினைதன்னனவமுடனே பிற செய்வினை யூட்டி யொழிப்பானாய் - அவர்க் கிதமகித

ங்களைச் செய்வார் பிறருளராய்வழி யவ்வினையைபுபற்றி யாண்டை வ்வித மகிதங்கட்குத் துணையாய்த தலைக்கூடற் பாலதாகலி னதனை யவ்வாறு செலுத்திப பிறர் செய்யு மவ்விதமகிதங் களை மிகுவித்த நுகர்வித்து ஒழித்தலுஞ்செய்வானாகலான்,— தலைவனைசலமிலன் - அதுபற்றி யிறைவன் சலமுடையனுவன ல்லன்.

---

## மறைஞானதேசிகர் உரை.

இஃதில்லாதார் சிறப்பின்மையு மிஃதுள்ளார் சிறப்புண்மையு முணர்த்துகின்றார்.

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து நாக முழைபுக்கிருந்துந் தாகமுத றவிர்ந்தும், நீடுபல கால நுகணித்தறு மிருந்து நின்மலஞா னத்தையிலார் நிக ழுந்திடுவர் பிறப்பி, லேடுதரு மலர்க்குழலார் முலைத்த லைக்கே யிடைக்கே யெறிவிழியின் படுகடைக்கே கிடந் துமிறை ஞானம், கூடுமவர் கூடரிய வீடுங் கூட்டிக் கு ஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர். (௫)

(இ - ள்.) நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்தும் நீடுபல காலங்கணித் நின்மலனது ஞானம் நின்மலஞானம். அதனை யில்லாதோர் பூமிப் பிரதக்கிணமாகத் திரிந்தாலும் புறப்பற்றை யற்று மிருகங்க ளைப்போல வனத்திற் சஞ்சரித்துச் சருகு புசித் திருந்தாலும் புலிகளைப்போல மலைப்பா ழிகளுட் புக்கு போகத்தைச் சாதித்திருந் தாலும் பாம்புபோல வாயுவைப் புசித்துத் தாகங்களைத் தீர்ந்திருந்தாலும் யோகிகளை

தருயிருந்து நின்மலஞானத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில் ப்போல நாளெண்டுங்காலம் நித்தியத்துவம் பெற்றிருக்கவென்று கருதித் திருட்டபலமாகிய விரசாயனங்களைக் கற்பப்படி கூட்டிக்கொண்டிருப்பினு மஃதில்லாதோ ரித்தனை வருத்தமுற்றுச் சாதிததார்களோ யாயினு மிறுதிக்கட் பூமியிலே வந்து பிறப்பார்கள். அஃதுள்ளாற் பெறும்பலம் யாதெனில்?

ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெறிவிழியின் பிகடைக்கே கிடந்துமிறைஞானங் கூடுமவர் சிவஞானத்தைப் பொருந்தினவர்கள் ஏடுந்தோடும் பூவினிதழே எனபதனாற் பூவினிதழைப் பொருந்தின குழலையுடைய மாதர் முலையினுடைய குசுமமாகிற நுனியிலேயும் அல்குற் றலத்திலும் அம்புபோலக் கொடிதாகிய விழிகளினது கடைக்கட் பார்வைகளிலேயும் அகப்பட்டு முயங்கிக் கிடந்தார்களேயாயினு மந்த விடயங்களின் வசமாகார்கள். அஃதென்போல வென்னில்? தண்ணீரிலே யநவரதமுங் கூடியிருக்கிற காமரையானது எப்படி யதனைப் பற்றுமலிருக்கும் அப்படிப்போல ஞானிகளும் பொருந்தார்கள். ஆதலா லெத்துடன் பொருந்தியிருப்பர்க ளென்னில்?

கூடரியவீடுங் கூடிக்கு ஞசித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர். யாவராலும் பெறுதற்கரிய பரமமான முத்தியைப் பொருந்திப் பரமாநந்தத் தாண்டவத்தைப் புரியாநின்றோன றாக்கிய சீர்பாதத்தையே யநவரதமு மனுசந்தானம் பண்ணிக்கொண் டிருப்பார்கள். எ-று.

நின்மலஞானத்தை யிலார் நடுநிலைத் தீபகம்.

விமலமுமாய் சர்வதோமுகமா யிருக்கிற சிவஞானம் பிரகாசியாவிடத்து முத்தியடையப் பெறுதெனபது கருத்து.

சேவடியுமென்றவும்மை சிறப்பின்கண் வந்தது.

ஞானத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில் எனவும், இறை ஞானங் கூடுமவர் இருப்பரெனவும், இரண்டெழுவாயும் இரண்டு பயனிலையுங் கூட்டுக.

இதற்குப் பத்திரகிரியினும் சர்வஞானோத்தரத்தும் இரத்தினத்திரயத்து மறிக. (ரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் கிரியா யோகங்களினாலே முத்தியில்லை ஞானத்தினாலே யல்ல தென்பது கூறுகின்றது.

நின்மலஞானத்தை யிலார் நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற்சரித்தும் நாகமுழைப்புக்கிருந்துந் தாகமுதற்றவிர்ந்தும் நீடுபல காலங்க ளிருதராயிருந்தும் நிகழ்ந்திடுவர் பிறப்பில்,— சிவஞானமில்லாத பெயர் புண்ணியபூமிகளிலே சஞ்சரித்தும் புண்ணிய தீர்த்தங்களை யாடிப் பிரயாசைப்பட்டும் வனத்திலே சாகமூலபலங்களைப் புசித்துஞ் சஞ்சரித்தும் மலைமுழைஞ்சிலே புகுந்தும் ஸ்திராசனததிலே யிருந்தும் அப்பியாசவசத்தினாலே பசிதண்ணீர்தாகத்தை யடக்கியும் நெடிதாகிய பலயுகங்கள் மரணமில்லாம லிருந்துங் காலாந்தரத்திலே சனனத்திலே வந்து தோன்றுவார்கள்,— இறைஞானங் கூடுமவரோடு தருமலர்க் குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெறிவிழியின படைக்கே கிடந்தும்÷ குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே கூட்டரிய வீடுங் கூடியிருப்பர் -பதியினது பிரசத்தி பதிதலையுள்ளபேர் அழகுபொருந்திய மடந்தையருடைய வெல்லாவவயங்களையுங் கோய்ந்திருக்கச் சிவேயுஞ் சிவனது குஞ்சித பாதமாகிய வருட் சத்தியையும் பிரியாத வணக்கத்துடனே நி

ன்று முன்சொன்ன தபோயோகங்களினாலுங் கூடப்போகா த மோக்ஷத்தையுங்கூடிச் சிவமேயாயிருப்பரென நிதன்பொருள்.

கூடுமவரென்றது இறந்தகாலந் தருந்தொழி லிடைநிலையாய்க் கூடினவரெனப் பொருளுரைத்தது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவசாக்ஷாத்கார சித்தியினாற் சித்த சிவ யோகிக்குஞ் சிவப்பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரராத் துன்முக சிவசமாதி சித்தியினாற் சித்த சமாதி சாத்திய சிவயோகிக்குஞ் சிவப்பிரத்தியக்ஷ விஷய விருப்ப மிருந்தாலு மவர்கள் சரீராந்தத்திற் பாசமூத்தியடைந்து மல சத்திவிர்த்தி விரியாது குவித்த சிவசத்தி கர்ப்ப சிற்சத்தியை விரித்துச் சிவனைச் சாக்ஷாத்கரிப்பார்களென றுஞ் சரீர மிருக்குங் காலத்து மாகாமிய மேருதென் றும் பிராரத்த சன்மமும் பலங்குன்றி வாசனைமாத்திரமாய்த் தாக்காமற் றுக்கும் போகம் புசிப்பிக்குமென்று மிருதிரு விருத்தத்தாலிசைகக்னறார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஏனைப் பெரும்பேறெல்லாங் கொடுக்க வல்லனவாய எத்துனை நன்மைகளும், இங்ஙனம் அரன்பணியி னிற்றலாகிய மெய்த் தொண்டு செய்யும் ஞானத்தாற் றரப்படும் பேற்றைக் கொடுக்க

வல்லுவனவல்ல. எல்லாப் பெரும்பேற்றையுங் கெடுக்கவல்லன வாய எதுத்துணைத் தீமைகளும், இதனாற்றரப்படும் பெரும்பேற்றை க் கெடுக்க வல்லனவுமல்ல; அத்துணைப் பெரியதோர்சிறப்பிற்று இவ்விறைபணிநிற்கு ஞானமென்பதாம்.

அரன்பணி நிற்றலது ஆற்றல் கூறியவாறு.

'சாக்கிரத்தே யதீதத்தை யென்னுஞ்செய்யுளில், சாக்கிரத் தே யதீதத்தைப் புரிந்தவர்கள் சாக்கிரத்தி னின்றவொப்புமை மாத்திரையேபற்றி அவரை யெல்லாரோடு மொப்பவைத் திக ழற்கவென வவரது பெருமை யுணர்த்துவார், ஆக்குமுடி கவித் தரசாண்டு நுங்கிடாவேயென ஆண்டுக் கூறினார்;அத்தனையே அர னபணியி னிற்றலா னசற்பாலதன்கண் மற்றொனறுஞ் செய்யக் கடவ தொன்றில்லையென அத்தொண்டின் பெருமையுணர்த்து வார், ஈண்டுமெடுத தோதினார்.

இங்ஙனங் கருத்துவகையாற் பொருள் வேறுபாடின்மையி ற் கூறியது கூறலாகாமை கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

பிரபஞ்ச வியாபாரங்களை விட்டு நீங்கி அரிய தபசுகளைப் ப ண்ணினாலும் சருவமுஞ் சிவனுடைய செயலென் றறியாதவர்க ளுக்கு சனனம் நீங்காதென்றும் சருவமுஞ சிவன்செயலென் றறிநதவர்களுக்கு சனனம் நீங்குமென்றும் மே லருளிச்செய் கிறார்.

நாடுகளிற் புக்குழன்றும்- பூப்பிரதட்சண முதலாக வெல் லா விராச்சியங்களும் புக்குத் தடுமாறித் திரிந்தும்,—காடுக ளிற் சரித்தும் - வனசரிதராய்த் திருந்தும்,—நாகமுழைபுக்கிரு

ந்தும் - மலை முழைஞ்சுகளிலே யிருந்து தவசு பண்ணியும்,—தாக முதல் தவிர்ந்தும் - ஆகாரம் நித்திரை பய மைதுன மென்னு மூடற்குணங்களை விட்டும்,—நீடிய காலங்கள் நித்தராயிருந் தும் - எண்ணிறந்த நெடுங்காலங்களெல்லாந் தவம் பெற்றிரு ந்தும்,—நின்மல ஞானத்தை யிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பி ல் - சிவனுடைய ஞானத்தைப் பெறாதவர்களுக்கு சனன முண் டாகாநிற்கும். இத்தன்மையன்றி,—ஏடுதரு மலர்க்குழலார் மு லைத்தலைக்கே யிடைக்கே வெறிவிழியின் படுசடைக்கே கிடந் து மிறைஞானங்கூடுமவர் கூடரிடவிடுங் கூடிக் குஞ்சித்த சேவ டியுங் கும்பிட்டேயிருப்பர்-இதழ்பொருந்தின மலரையுடைய கூ ந்தலார்களுடைய முலைமுகத்திலே யவர்கள் மருங்குலிலே கா மதுறை யிலக்காகாம லம்பினுங் கடிதாகப்பட்டுப் பறியப்பாற் கிற கொடிய கடைக்கண்களிலே கிடந்தார்களாயினும் பரமேஸ் வரனுடைய ஞானத்தைக் கூடினவர்கள் யாவராலுங் கூடுத ற்கரிய மோக்ஷத்தையும் பொருந்தி குனிப்பையுடைய சீர்பாதத் தையுந் தொழுதுகொண் டிருப்பார்கள்.

இதற்குப் பிரமாணம் திருக்களிற்றுப்படியார், ௬௩-வெ, “வீட்டிலே நின்று வினையொழிந்து நின்றிடலென், நாட்டிலே நல்வினைகள் செய்திடலென்—கூட்டிலவாட், சாத்திபே நின் றிலையேற் றக்கனார் வேள்விசெய்த, மாத்திரமே யாங்கண்டா ய் வந்து”. என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பிரபஞ்ச வியாபாரங்களை விட்டு அரிய தபசுகளைப் பண்ணினாலும் சர்வமும் சிவனுடைய செயலெ ன் றறியாதவர்களுக்கு ஜனனம் நீங்காதென்றும் சர்வமும் சிவனுடைய செயலென் றறிந்தவர்களுக்கு இந்திரிய வியாபார த்தோடுங் கூடியிருந்தாலுஞ் ஜனனம் நீங்குமென்னு முறைமை யு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருண்ர வருமாறு.

———o———

நாடுகளிற் புக்குழன்றும்-புண்ணிய தேசங்களிற் சென்று புண்ணியதலம் புண்ணிய தீர்த்தங்களைத் தரிசித்தாடியும்,—சாடுகளிற் சரித்தும் - வனத்திலே சென்று கந்தமூல பலாதிகளை யயின்றும்,—நாகமுழை புக்கிருந்தும் - மலையிலுள்ள குகையின் யோகத்திருந்தும்,—தாகமுத றவிர்ந்தும் - யோகாப்பியாச பலத்தினாலே பசிதண்ணீர் தாகமுதலியவற்றிற் குணவுகளொழிந்தும்,—நீடுபலகாலங்கள் நித்தராயிருந்தும் - நெடுங்காலமரணமில்லாமலிருந்தும்,—நின்மல ஞானத்தை யிலார் - நிருமலமாகிய சிவஞான மில்லாதார்,—பிறப்பி னிகழ்ந்திடுவர் - ஜனனத்துட்படுவர்,—ஏடுதரு மலர்க்குழலார் மூலைத்தலைக்கே யிடைக்கே பெறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் - இதழை யுடைய மலர்மாலை யணிந்த கூந்தலையுடைய மங்கையர் கொங்கை யல்குல் விழிக்கடை முதலிய அவயவங்களைத் தோயப் பெறினும்,—இறைஞானங் கூடுமவர்-சிவஞானத்தைப் பெற்றோர் கூடரிய வீடுங்கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டேயிருப்பர் - பெறுதற்கரிய வீட்டினையும் பொருந்தித் திருவடிக்கணீங்காதே நிற்பர்.

---

## மறைஞானதேசிகர் உரை.

———

இத்தன்மையினை யுடைய ஜீவன்முத்தர் வாதனையினாலே
கன்மங்கள் செய்தார்களேயாயினு மதனையுறார்களாத
லாலாகாமியமுமேறுதெனை றுணர்த்துகிறார்.

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடாதாகு மௌஷதமந் திரமுடையார்க் கருவிடங்களேறா, வெங்கித்

தைக் கன்மமெலாஞ் செய்தாலுஞானிக் கிருவினைகள் சென்றணையா முற்செய்வினையிங்குத், தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினைதவிர்ந்த சக்கரமுங் கந்தித்துச் சுழலுமாபோல், மங்கிப்போய் வாதனையாலு முலவிக்குமெல்லா மலங்களும்பின் காயமொடு மாயுமன்றே. (௬)

(இ-ள்.) அங்கித் தம்பனைவல்லார்க் கனல்சுடாதாகும் — அக்னித்தம்பனை வல்லவனை அனலானது சுடாதவாறுபோலவும்

ஔடத மந்திரமுடையார்க் கருவிடங்களேறு — ஔஷத மந்திர பலத்தினையுடைய சித்த புருஷர்களானவர்களை விடச் சத்தியானது வாதைபண்ணாதவாறுபோலவும். ஔஷத மந்திரமென்பதனை யிருபாலுங் கூட்டுக.

கன்மமெல்லாரையும் வாதியாதோ வென்னில்? அநேக ஜனங்கள் நடுவே அக்நித்தம்பனை வல்லவனையே சுடாதுபோலெனவறிக.

எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலுஞானிக் கிருவினைகள் சென்றணையா — ஞானவான்களொன்றெந்தக் கன்மங்களைக் செய்தார்களேயாயினும் அந்தந்தக் கனம பலங்களைப் பொருந்து வாதையுறார்கள்.

முற்செய்வினையிங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினைதவிர்ந்த சக்க — பூர்வத்திலுண்டான கன்மாநுகுணமான சரீரத்திலுண்டான பிராரத்தகன்ம வாதனை சிறிதிருந்து சுகதுக்கங்களை யுறுவிக்கினுஞ் சிறி தழலப்பண்ணும். அஃதென்போல வென்னில்?

ரமுங் கந்தித்து
ச்சுழலு மாபோ
ன்மங்கிப்போய்
வாதனையாலுழல்
விக்கும்

பெருங்காய மிருந்த பாண்டமானது அஃது தொன்றொழிந்து போயிருக்கினு மந்தப் பாண்ட மந்தப் பெருங்காய நாற்ற முண்டாயிருக்கும். இங்ஙன முண்டாயிருந்து மேலதனு லொரு பிரயோசன மில்லாதது போலவும் குயவன் றிகிரியி லேற்றி னமண்கடத்தை யுண்டாக்கினபின்னு மந்த வாதனைதானே நின்று மெல்லமெல்லச் சுத்தித் தானேயொழிந்ததுபோ மதுபோலவும். இந்த வாதனையோ டிருக்கவு மோருடலை யுண்டாக்குமோ வென்னில்? அக்நியைச் சேர்ந்த வித்தானது பினபு முளையாத வாறு போலென வறிக.

எல்லாமலங்க இந்த வான்மாச் சரீரத்தை விட்டு முதநிலும் பின் காய யை யடையும்பொழுது முற்கூறிய வாசனைத்மொடு மாயுமன் மகமாகிய கன்மமு மாயையு மாணவமுங் றே தான் கெடாமற் றன் சத்தியினது வலிகெட்டு நிற்கவே தடைபடாமல் முத்தியை யடைவன். எ-று.

கந்தித்துச் சுழலுமென்பதனை நிரைநிரையாக்கிப் பொருளுரைக்க.

பலவெழுவாயும் பலபயநிலையும்
உம்மை எதிர்மறை.

மாயு மென்றது சுத்தமாக் கெடுமென்றதன்று, அஃது திருந்தும் வாதை பண்ணுதென்பது கருத்தாயிற்று.

"உக்கொளியா தொளிக்குமிரு ளுதயகதி ரொளிமுன்னே, பக்குவத்திற் பசுபாச வலியடங்கும் பரமசிவன, நகசனு

யிர்க் கருள்புரியநசித்த்ததலவசித்ததல,நெய்க்கணநீங்குதலென்ன மாயைநிலை தொலையுமன்றே” என்று ரொமதுகுறவர்.

இதற்குச் சிவதருமோத்தரம் கிரணம் சுப்ரபேதத்து மறிக. (௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் சிவஞானிக்குக் கன்மமேறாதென்பது கூறுகின்றது.

ஞானிக்கு எங்கித்தை கன்மமெலாஞ் செய்தாலு மிருவினைகள் சென்றணையா - சீவன்முத்த னெவ்விடத் தெவ் வினைகளெல்லாஞ் செய்யினும் ஞானபலத்தினாலே யவைகள் பலமாகப பொருந்தாது. அதெவ்வாறெனனில்—அங்கித் தம்பனைவல்லார்க் கனல்சுடாதாகும்-அக்கினித் தம்பனையை யுடையவன் அக்நியை யெடுக்கிலு மணையினு மவனுக்குச் சுடாது.—அவுடத மந்திரமுடையார்க் கருவிடங்களேறா - மந்திர ஔஷத சித்தனுக்குக் கடித்தவிஷமுங் குடித்தவிஷமுந தாக்காது ஆகும். இவவாறும் பிராரத்தகன்மபலம் புசிக்கும்போது மாயையும் ஆணவமுங் கூடிநின்றே புசிக்கவேணும். மும்மலமிருக்கையினாலே சிவஞானிபாவ தெப்படியெனனில்?—முனசெய்வினை யெல்லா மலங்களு மங்கிப்போய வாதனையா லுழலவிக்கும்-அநாதியேதொன்று தொட்டுவரப்பட்ட கனம மாயை யாணவமெல்லா மலங்களுக்குஞ் சததிகள்கெட்டு வாதனையினாலே தேகமுள்ளளவும் விஷயங்களிலே யுழலுதலைச் செய்விக்கும்.—பினகாடமொடு மாயுமன்றே-பிராரததகனம மற்றபின் தேகத்தோடே வாதனையும் நசிப்பதாம். இவ்வாறு வாதனையினாலே பண்ணுங்கிரிகை பலத்தைக் கொடாது. அதெனபோல வெனனில்?—இங்குத் தங்கிப் போம் பாத்திரமுங் குலாலன விணைத்தவிரந்த சக்கரமுங் கந்திரதுச் சு

ழலுமாயோல-பெருங்காயம் வைத்தெடுத்துப்போட்ட பாண்டங் குயவன் றண்டுகொண்டு சுழற்றுதலை யொழிந்த திகிரியையு மடைவே மணப்பதையுஞ் சுழலதலையுஞ் செய்யினு மவையிற்றி னொலொருபயனு மில்லாததுபோலவென் றிதனபொருள்.

அனறென்ப தாமென்கிளவி.

சிவாக்ரயோகி பண்ணின சிவஞானசித்தி

பத்தாஞ் சூத்திர வியாக்கியானம்

சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பிராரத்தம், சுபத்தமென்றும் மந்தமென்றும் தீவிரமென்றும் மூன்றுவிதம். அவற்றுள் சுபத்தஞ் சிவதனமத தொருப்பட்டிருப்பவரை வாதியாது. மந்தஞ் சிவ ஞானிகளை வாதியாது. தீவிர மெல்லாரையும் வாதிக்கு மாலுலும் சிவஞானிகளை மிகுதியும் வாதியாது, ஆகாமியமு மேறாது.

பதப்பொருள் வெளிப்பொருள்.

இப்பத்தாஞ் சூத்திரத்து முன்பின் சில விடங்களிலேயு மிருந்து கூறியது கூறலைக் குறித்துந் திரிபதார்த்தஞ் சூக்குமஸ்வரூப பரீக்ஷை பண்ணுது லோகச் சொற் சுட்டு மட்டுக் கட்டுவிட்டு முட்டத் தொட்டுப் பரீக்ஷை பண்ணுதலாலும் உரை விரித்துரையாத துணர்ந்து கொள்க.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சுடுதற் கேதுவாகிய அங்கியைத் தம்பனஞ் செய்யவல்லார் அவ்வங்கியுண் முழுகிக்கிடப்பினும் அதுபற்றி யவர்மாட்டுச் சுடு

நிகழாதவாறும், கொலைத்தொழிற் கேதுவாகிய விடங்களைத் தடுக்கவல்ல மந்திரமருந்துகளைப் பெற்றுடையார் அவ்விடங்களை யெல்லாம் நிறையப்பருகினும் அதுபற்றி யவர்மாட்டுக் கொலைத்தொழி னிகழாத வாறுபோல, விருப்பு வெறுப்புக்க ணிகழ்தற் கேதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய முறையினானு தம் வழிப்படுத்த வல்ல ஞானிகள் எவ் விந்திரியங்களினின்று எத்தொழிலைச் செய்தார்களாயினும் அதுபற்றி யவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும், ஏனைப் பிராரத்தவினையுந் தற்பணி நீததவர்மாட்டுத தலைக்கூடமாட்டாத வெந்தபடம்போலச் சத்திகெட்டுப்போய் வாசனை மாத்திரையாய் நின்று சிறிதே தாக்குமவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லையாதல், காயமிருந்தொழிந்த பாத்திரத்தில் அவ்வாதனை கிடந்து கந்தித்தும் ஒருகறிக்குபயோக மாதலின்மையுங் குயவனுவான் குடத்தை வனையுமளவுஞ் சுழற்றிவிட்ட திகிரியில் அவ்வாதனை கிடந்து தன்வேகமுள்ளவளவு மதனை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்றனை வனைதற்கு உபயோக மாதலின்மையும் போலுமாகலானும், வாதனை மாத்திரைகளுத் துணையாய் நின்ற ஏனை மலவாதனைகளும் அவ்வுடம்பு மாயுங் காலத்து வேறொருபற்றின்மையான் அதனோடு மாய்ந்தொழியு மெனபதாம்.

இங்குத் தங்கிப்போம் பாத்திரம் தீவிரவாதனைக்கும், வினைதவிர்ந்த சக்கரம் மந்தவாதனைக்கு முவமையாயின.

எங்கென்பது எங்கித்தையென மரீஇயிற்று.

நின்றென்பது சொல்லெச்சம்.

கந்தித்தென்னும் வினையெச்சம் எச்சப்பொருடராது செவ்வென்மாத்திரையே குறித்து நின்றது. "பயந்துகாத் தழிக் குமர்றை மூவர்" என்றாற்போல.

மங்கி யொன்றொழியாது போயென்றார், வலியுறுத்து த ற்கு.

உவமை யெடுத்துக் காட்டியதும் அதனைத் தெளிவித்தற் பொருட்டு.

இதனானே மேல் ஒருவாற்றால் வலியுறுத்தப்பட்ட மூன் றுங் கூற்றை வருஞ்சூத்திரத்தி னியைபுபற்றி யெடுத்துக்கொ ண்டு தடைவிடைகளாற் சாதித்தற்பொருட்டு ஈண்டுத் தோற்று வாய்ச் செய்துகொள்ளு முகத்தானே, மேலைச் செய்யுளின 'எறி விழியின் படிகடைக்கே கிடந்தங் கும்பிட்டே யிருப்பர்' என்றத னை உவமைகளின் வைத்துணர்த்தி யினிது விளக்கியவாறு.

இவை நான்கு செய்யுளானும் இரண்டாங் கூற்றினைக் கட் படு மாறெல்லாம் வகுத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

இப்படிக்கொத்த ஞானவான்கள் இந்திரிய வியாபாரங் களோடு கூடி யிருக்கச்செய்தே அவையிற்றிற் றோயாமல் நின் றமுறைமை யெங்ஙனேயென்ற மாணுக்கனை நோக்கி யருளிச் செய்கிறார்.

அங்கித்தர்ப்பனவல்லார்க் கனல்சுடாதாகும் - அக்கினிக கட்டாகிய வுபதேச வல்லவர்களுக்கு அந்த வக்கினியிலே நடக் கச்செய்தே அந்த வக்கினி சுடாமல் அவர்கள் வசமாயிருந்தாற் போலவும்,—அவுடதமந்திர முடையார்க் கருவிடங்களேறு - ஔஷதப் பிரயோகம் மந்திரத் தியானமு முடைய விஷகாரிக ளைத் தீர்த்தற் கரிபதாகிய விஷங்கள் பொருந்தின லந்தவிஷ ங்க ளெல்லா மவர்கள் வசமாய்க் கிடந்தனைபோலவும்,—

எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக் கிருவினை
கள் சென்றணையா — முன்செய் வினை எல்லாக் கன்மங்களையும்
ஞானவான்களா யுள்ளவர்கள் செய்யார்கள், வாதனையாலே
செய்தார்க ளாயினும் திரிபதார்த்தத்தைத் தரிசித்துச் சிவனல
லொன்றும் நடவாது என்கிற விசாரத்தை யுறுதியாக வுடைய
சிவஞானிகள் சுகதுக்கங்களைப் புசிக்குமிடத்துண்டான விருப்பு
வெறுப்பு இவர்கள் வசமாவதொழிந்து இவர்க ளதின வசமா
கார்கள்: ஆகையால் ஆகாமியமானது சென்று பொருந்தாது. மு
ன்பு பிராரத்தம் புசிக்கச் செய்தே யல்லோ வாகாமிய மேறி
வந்தது, இப்போ பிராரத்தம் புசித்தாலுகில் மீளவு மாகாமிய
மேறாதோ வென்னில்? வாகாமிய மேறாமற் போகிறவழியை மே
லருளிச்செய்கிறார்.—இங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் குலா
லன்வினைதவிர்ந்த சக்கரமுங்கந்தித்துச் சுழலுமாபோல் — பெ
ருங்காயமிட்டிருந்த பாத்திரத்தி லுண்டாகிய பெருங்காயம்
போனாலும் பாத்திர மீளவும் நாறின தன்மைபோலவும் குலா
லன் திருகையை திரியாமல் கைவிட்டாலும் முன்பு திரித்தவி
சை யுள்ளளவும் சுழன்றாற்போலவும்—முனபுள்ள பிராரத்த கன
மமும்,—மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கும் — ஆசாரியன்
செய்த அத்துவா சோதனையாலே தீரப்போ யிருக்கச்செய்தே
யும் வாதனா மாத்திரத்தாலே ஞானவான்களிடத்துப் பிராரத்த
கன்மந் தேகத்தோடேகூடி ஜீவியாநிற்கும், அப்படி ஜீவிப்பித்த
தாமாயினும் பின்னையொரு ஜனனத்துக் கேதுவாகாது. அதெ
ங்ஙனே யென்னில்?—எல்லா மலங்களும் பின்காயமொழி மாயு
மன்றே—அப்படி பிராரத்தம் புசிக்கச்செய்தேயும் ஏறின வாகா
மியமுமங்கக் கன்மத்துக்கிடாக வெடுக்கிற மாயாதேகமு முண்
டாகாது. அந்த ஞானவான் தற்போதஞ் ஜீவியாமல் அந்த
ஞானமாய் நிற்கிற கோட்பாட்டாலே ஆணவ மாயை காமிய

மென்கிற மலங்களெல்லாம் வாதனையாலே சரீர முள்ளமட்டு நின்று பின் டந்தச்சரீரத்தோடேமாயும்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௰-சூ, ௫-வெ, "நன்னனல்வேவாத நற்றவர்தம்மினும், பண்ணமர்மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி, யரனடியோர்பவ னைம்புலனிற் சென்று, மவர்திறம் நீங்காரதற்கு" என்றும், ஷை ௪ - வெ, "இங்குளிவாங்குங் கலம்போல ஞானிபால், முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை, மாயையுட னில்லாது மற்றவனருள் மெய்ப்பொருளே, யாயவதினாலுணரு மச்சு" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது, சிவனைப் பெற்றவர்க ளிந்திரியங்களோடு கூடியிருந்தார்க ளாமாயினு மந்த யிந்திரியங்க ளிவர்கள் வசமாயிருக்கும தொழிந்து இவர்க ளதன்வச மாகார்க ளாகையா லவர்களுக் காகாமிய மேறுதென்றும் பெருங்காய மிட்ட பாத்திரம்போல பிராரத்த கன்ம வாதனை மார்க்கத்தாலே கூடிவந்ததாயினும் அதிலேறின வாகாமியத்தினால் மேலொரு சரீர தொந்தனை யுண்டாகாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

அங்கித் தம்பனைவல்லார்க் கனல்சுடாதாகும் - சுடுதற்கேதுவாகிய அங்கியைத் தம்பனஞ்செய்ய வல்லார் அவ்வங்கியுள் மூழ்கிக் கிடப்பினு மதுபற்றி யவர்மாட்டுச் சூடு நிகழாதவாறும்,—அவுடத மந்திர முடையார்க் கருவிடங்களேறா - கொலைத்தொழிற் கேதுவாகிய விடங்களைத் தடுக்கவல்ல மந்திர மரு

ந்துகளைப் பெற்றுடையா ரவ்விடங்களை யெல்லா நிறைப் பரு
கினும் அதுபற்றி யவர்மாட்டுக் கொலைத்தொழி னிகழாதவாறு
போல,—ஞானிக் கெங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும்-வி
ருப்பு வெறுப்புக்க ணிகழ்தற் கேதுவாகிய விந்திரியங்களை மேற்
கூறிய முறையினின்று தம்வழிப்படுத்தவல்ல ஞானிகள் எவ்விந
திரியங்களினின்று எத்தொழிலைச் செய்தார்களாயினும்,—இருவி
னைகள் சென்றணையா - அதுபற்றி யவர்மாட்டு விருப்பு வெறுப்
பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும்,—முற்செ
ய்வினை - வாதனையா லுழல்விக்கும் ஏனைப் பிராரத்த வினையும்
தற்பணிந்தவர் மாட்டுத் தலைக்கூடமாட்டாது வெந்தபடம
போலச் சத்திகெட்டுப்போய் வாதனை மாத்திரையாய் நின்று
சிறிதே தாக்குமவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது
பிறிதில்லையாதல்,—இங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் காதித்
து-காயமிருந் தொழிந்த பாத்திரத்தி லவ்வாசனை கிடந்து கந்
தித்து மொருகறிக்கு குபயோகமாத லின்மையும்,—குலாலனைவி
னை தவிர்ந்த சக்கரமுஞ் சுழலுமாபோல-குலாலனவன் குடத்
தை வினையுமளவுஞ் சுழற்றிவிட்ட திகிரியி லவ்வாதனை கிடந்து
தன வேகமுள்ளளவு மதனை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்
றினை யனைதற் குபயோகமாத லின்மையும் போலுமாகலானு
ம்,—எல்லா மங்கப்போய் வாதனையா லுழல்விக்கும வினைமல
ங்களும் காயமொடு மாயுமன்றே - வாதனை மாத்திரைக்குத்
துணையாய் நின்ற ஏனை மவ்வாதனைகளு மவ்வுடம்பு மாயுங்கா
லத்து வேறொரு பற்றினையா னதனோடு மாய்ந்தொழியுமெ
ன்பதாம்.

இதனானே மேலொருவாற்றான் வலியுறுத்தப்பட்ட மூன்றாங்கூற்றை வருஞ் சூத்திரத்தினியைபு பற்றி யெடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதித்தற் பொருட்டு ஈண்டுதோற்றுவாய் செய்துகொள்ளு முகத்தானே மேலைச் செய்யுளின் 'எறிவிழியின படுக்கைக்கே கிடந்துங் குற்பிட்டே யிருப்பர்' என்றதனை யுவமைகளின் வைத்துணர்த்தி யினிது விளக்கியவாறு.

இவை நான்கு செய்யுளானும் இரண்டாங்கூற்றின்கட் படுமாறெல்லாம் வகுத்துக் கூறப்பட்டன.

☞ ௧0 - சூ, ௨-அதிகரண முடிந்தது.



பத்தாஞ் சூத்திரம் முற்றிற்று.

—0—

"கந்தன்முக மோராறும்"
என்ற பத்தாஞ் சூத்திரம்
ஆறு முற்றிற்று.

பாயிரமுட்பட - ௫௱௬.

—0—

உ

சிவமயம்.

# சிவஞான சித்தியார் சுபக்ஷம்.



## கக—வது பக்தியின் இலக்கணம்.



### மறைஞானதேசிகர் உரை.



மேற் பதினோராஞ் சூத்திர மென்னுதலிற்றோ வெனின்? இப்படிப் பந்தத்திலே கிலேசமுற்றுப் பந்தங்களை நீங்கின ஜீவன்முத்தர்க்குபகாரஞ்செய்த சிவனது திருவடியை யடைந் தவனிடத்திற் பத்திசெய்யுமா றுணர்த்துத னுதலிற்று. மேலித் தலைச் செய்யு ளென் னுதலிற்றோ வெனின்? எல்லாத்தையுங் காணுங் கண்ணுக்கு ஆன்மா காட்டாய் நின்றாற்போல ஆன்மாவுக்குச் சிவ னுபகரிக்கு முறைமை யுணர்த்துத னுதலிற்று.

காயமொழிந் தாற்சுத்த னுயிரான்மாக் காட்டக்கண் டிடுந்தன்மை யுடையகண்ணுக், கேயுமுயிர் காட்டிக் கண் டிடுமாபோல வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை, யாயுமறி வுடையனு யன்புசெய்ய வந்நிலைமை யிந்நிலையி னடைந்தமுறையாலே, மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீழிருப்பன் மாறாத சிவானுபவ மருவிக்கொண்டே. (க)

| | |
|---|---|
| (இ-ள்) காயமொழிந்தாற் சுத்தனாகி யான்மா | ஆன்மா காயம்போன வாறே மலங்கள் நீங்கிப் புடம்வைத்த பொன்போலச் சுத்தனாய் . |
| காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக்கு | ஒருவன் காட்டக்காணு மியல்பினை யுடைய கண்ணுக்கு |
| ஏயுமுயிர்காட்டிக் கண்டிடுமா போல | அது பொருந்தப்பட்ட கண்முதலிய விந்திரியங்களைக் கொண்டு தனது சைதன்னியமிடமாக வந்தரூபங்களையும் கண்ணையுங் கண்ட ஆன்மாவைப்போல |
| ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன் | சிவனானவன் தானாக வொரு விடயங்களையு மறியமாட்டாத வான்மாக்களுக்குத் தற்சொரூபத்தினையுங் காட்டித் தானெல்லாத்துக்கு மேலாய் நின்று சர்வான்மாக்கள் செய்யுங் கன்மங்களை யறிந்து பலங்களைக் கொடாநிற்பன். |
| இத்தையுமறிவுடையனு யவை செய்ய | இந்தச் சிவனாலே யல்லோ நமக்கு மலம் போய் நின்மலனானு மென்னுந் தன்மையை யாராய்ந் தறியத்தக்க அறிவுடையனு யந்தச் சிவனிடத்திற் பத்திசெய்ய |
| அந்நிலைமை யிந்நிலையி லடைந்தமுறையாலே | இப்படி யான்மா வானவ னுடோறுஞ் சோகம் பாவனைபண்ணி ஐக்கியமாயிருக்க வதன்பின்பு சிவனைப்போலத் தானும் நின்மலனு யிருக்குந் தன்மையையுடைய னுகையினுலே |
| மாயமெலாம் நீங்கியரன் மலர | இப்படி யவனை நாடோறுந் தியானஞ்செய்யவே மலத்தினுலே வரு மயக்க விகற்பங் |

டிக்கிழிருப்பன் கலை விட்டு நீங்கிச் சிவனது திருவடிப்புரத்
தின் கீழே யிராநிற்பன். அப்பொழு திந்த
வான்மா விருக்குந் தன்மை யாதெனில்?

மாருதசிவானு ஆன்மாக்கள் தங்களிடத் தனவரதமு
பவ மருவிக்கொ மொழியாதிருக்கிற சுவாநந்தானு பூதியாகி
ண்டே. ய ஆன்ம சத்தியினது யின்பத்தையே தினை
த் திருப்பார்கள். எ-று.

ஈசன் காட்டுவன். எ-ம் ஆன்மா இருப்பன, எ-ம் எழுவா
ய் பயனிலை கூட்டுக.

சுவாநுபவமென்பது தன்னிடத் துண்டாகிய அநுபவம்.

சுவானுபவம் இது வடமொழி

சுவானுபவமென்றது சிவானுபவமெனக் கூறுவர்கள், அ
ஃதிசையா.

மூலசூத்திரமாகிய சிவஞானபோதத்தில், 'சுவானுபூதிமா
ன்' என்றேதகையாலு மற்ற ஆகம புராணங்களிற் கூறுகையா
லு மெனவறிக.

இதனை எமது குரவர் பரமோபதேசமென ஒரு நூலாக்கி
விரித்துக் கூறினார், அதனை யாண்டுக் காண்க.

இதற்குச் சுப்பிரபேதம் சர்வஞானோத்தரம் சூதசங்கி
தையிற் ப்ரமகீதையினு மறிக. (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

ஆன்ம சகாயனாகிய சிவனிடத்திலே யந்தரங்க பக்திபண்
ணு முறைமை ஞானத்துக் கிரியை கூறுகின்றது.

காட்டக் கண்டிடுந் தன்மையையுடைய கண்ணுக் கேயுமு
யிர் காட்டிக் கண்டிடுமாபோல விசனுயிர்க்குக் காட்டிக் கண்டி

லெ னித்தை யாயுமறி வுடையனு யன்புசெய்பவன்னிலைமையின்
னிலையி னடைந்த முறைபாலே - சூரியாதிப் பிரகாசங்கள் து
ணையாகச் சைதன்னிய யோகத்தினுலே ரூபவத பதார்த்தங்க
ளைக் காணுமியல்பையுடைய கண்ணுக்கு இந்திரியங்களைப் பொ
ருந்திநின்ற சீவான்மாக் காட்டக் கண்டிடுமாபோலப் பரமேசு
வர னான்மாவுக்கு அறிவிக்க வறிவன். இந்தவுபகாரத்தைப் பெ
ரிதாக விசாரிக்கும் ஞானத்தை யுடையனும் சிவனிடத்தி னி
டையரு்த பத்திபண்ணவே எட்டாஞ் சூத்திரத்திலே 'ஞா
னஞேயமொடு ஞாதுருவு நாடாவண்ணம்' என்ற திலகூடு மா
கையாலே.— ஆன்மா காயமொழிந்தான் மாயமெல்லா நீங்
கிச் சுத்தனுகி யரன் மலரடிக்கீழ் மாருத சிவாநுபவ மருவி
க்கொண்டே யிருப்பன் - முன்சொன்னவாறு சிவனிடத்திலே
யிடையருத வந்தரங்கப் பத்தியைப் பண்ணிக்கொண் டிருந்த
ஆனமா தேகமொழிந்தவாறே ஆணவ மாயை மயக்கங்களை யெ
ல்லாம் விட்டுநீங்கி நின்மலனுகிய சிவனிடத் தொழிவற்ற சிவா
நந்தாநு பூதிபனுயிருப்பனென் றிதன்பொருள்.

ஐந்தாஞ் சூத்திரத்திலே யிந்திரியங்களுக்குத் தரிசிப்பி
க்கிற ஆன்மாவைப்போல ஆன்மாக்களுக்குத் தரிசிப்பிக்கிறவன்
சிவனென்று கூறியமொழிபே யிவ்விடத்தும் கூறியது புனருத்
தியென்னில்? அப்படியல்ல. அவ்விடத்துக் கூறியது சடரூபமாகி
ய பிரபஞ்சத்தைத் தரிசிப்பிக்கிறத் துக்குத் திட்டாந்தம், இ
வ்விடத்துக் கூறியது சித்துருபனுகிய சிவன ஸ்வரூபத்தை
த் தரிசிப்பிக்கிறதுக்குத் திஷ்டாந்தமாகையால் புனருத்திபி
ல்லை.

—

# ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவனதுபகார முணர்த்துகின்றார்.

காயமொழிந்தால் - பிராரத்தகன்மம் பிடித்திருத்தலுஞ் சரீரமதுமாயும். மாய்ந்தால் சரீராவதி மறைக்குஞ் சாமர்த்திய மாத்திரமாய் மாயத் திரும்பத் தீக்ஷையிற் சேஷிப்பித்தமலமு மாயாதுமாய்,—

சுதந்தரனாகி யான்மா-ஆன்மா மல்முத்தி மானாய்ச் சிவத்துவாருக சின்மாத்திரனாய் நிற்ப,—

காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்ணுக்கு - சடமாதலானுங் கண்காணுமெனப துபசாரோபசாரம், முத்தியில் மலமறைப்பு நீங்கினாற் காட்டு நாடாது ஸ்வதந்திரமாய்க் காணுந் தன்மையுடைய தானாலும் பெத்தத்தில் மலமறைப்பினால் காட்டக் கண்டிடுந் தன்மையுடைய சீயான்ம சிற்சத்திக்கு,—

ஏயுமுயிர் காட்டிக் கண்டிடுமாபோல - பொருந்திய வான்மா மனசையேவ மனசு கண்ணையேவக் கண் சிற்சத்தியை விளக்கச் சிற்சத்தி காண்பதுபோல,—

ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன் - பரிபூரணமாய்ப் பண்ணப்பட்டதற்குத் திரும்பப் பண்ணவேண்டுவது ரீதியில் நின்றுபார்த்தா லில்லையா மாதலால், காட்டுத் திரும்ப விரும்பாதபடி சிவத்துவாபி வியத்தி பண்ணத் தனக்குப் போசகபோக்கியமின்றி யுள்ளமை மாத்திரமாய்ப் பிறர்க்குப் போசக போக்கியமாய்ச் சாந்த சற்று சவிகற்ப விருவிகற்ப சாக்ஷாத்காரத்தாற் பதிமுதலிய முப்பதார்த்தங்களைச் சாக்ஷாத்கரிப்பன் -

இத்தை யாயுமறிவுடையனாய் - அப்போதுவரு மிச்செய்தியை யிப்போது சிவாகமக் கேள்வி சிந்தித்தலினால்வரும் தெளிவென் றுரைக்கும் பதிமுதல் முப்பதார்த்த சிவத்துவ பசுத்

துவ விவேக பரோக்ஷ ஞானமுடையனாய்ப் பின் னபரோக்ஷ
ம்போ லபிநயத் தியானவானாய்ச் சிவமாத்திர தேய ஞேயத் க
ழுந்திச் சூனியப் போலிச் சிந்தனைச் சமாதிமானுமாய்ச் சமாதி
சிவ சாக்ஷாத்கார மலஞ் சடுதி கொடுக்கும் பொருட்டு,—

அன்புசெய்ய - கூடிய மரியாதி சிவபூசை பண்ண,—

அந்நிலைமை யிந்நிலையி னடைந்த முறையாலே - சொல்லி
விதேக பரமுத்தி சிவ சாட்சாத்காரஞ் சதேக சீவன்முத்தியி
லொருபடி சார்ந்த செய்தியாலே,

அதுவன்றியும் அந்நிலைமை பிறர் பசிதாகம்போல் ஒருபிர
காரம் திருச்சியமானாலுஞ் சர்வதிருக் கர்த்திருரூபமா யது
சிவமென்றுவரு மாகம பரோக்ஷ ஞானத்தை,—

இந்நிலையினடைந்த முறையாலே - தன் பசிதாகம்போ லி
து சிவமென்று வரும் சீவன் முத்தி சிவ சாக்ஷாத்கார ரூபத்தி
னும் சார்ந்த தன்மையினாலே,—

மாயமெலா நீங்கி - மலமுதற் பாச மோசித்து,—

மாறுக சிவாநுபவ மருவிக்கொண்டே - தனது பிறப் பொ
ருளறிவுச் சிற்சத்தியில் விளங்கித் தோன்றிப் பிரிவற்ற பிரபஞ்ச
கர்ப்ப பிறப்பொருட் சிவ சாக்ஷாத்காரப் பூர்த்திக் கீர்த்திச்
சிவானந்தத்தைத் தனது தற்பொருளறிவுச் சிற்சத்தியில் விளக்
கித் தோற்றித் தற்பிரிவற்ற தற்பொருட் சிவ சாக்ஷாத்காரத்
தாற் சாக்ஷாத் தனுபவித்துக்கொண்டு,—

அரன் மலரடிக் கீழிருப்பன் - அப்படிப் புறப்பொருட் சி
வசத்திக்கொத்து விரிந்து சித் தசித்துப் பிரபஞ்சகர்ப்பப் பிறப்
பொருட் சிவனைத் திருச்சியப் பிரபஞ்ச விலக்ஷண திருக்குரூபப்
பிரபஞ்சலக்ஷண சர்வதிருக் கிருத்து ரூபமாய்ப் பராக்காய்ப் பா
ர்க்கும் பராக்குரூபப் பிறப்பொருட் பிறமாணரூப தற்பொருட்
பிரமேய ரூப பிறப் பொருளறிவுச் சிற்சக்திச் சீர்மையில் பிறத்

தியக் காய் வீழ்ந்த பதிமுதல் முப்பதார்த்தப் பிறப் பொருட் பிரமேய சீர்மையிற் றீண்டாத சிற்சத்தி மாத்திரத்தைப் பிரத்தியக் காய்ப் பார்க்கும் பிரத்தியக்கு ரூப பிறப்பொருட் பிரமாணரூப தற்பொருளறிவுச் சிற்சத்திக் குறிக் கிரமிகமாகச் சத்திமத்து ரூபியாயுஞ் சத்தி ரூபியாயுந் தற்பொருட் பிரமாதிரு ரூபசித்தரூப மாத்திரத்தாற் பொருளறிவனாகிய வந்தரான்மரூபசிற்சத்திக் குறிச் சிவ மாத்திர ரூபியாயு மிருப்பன்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

இங்ஙனம் பத்தாஞ் சூத்திரத்தாற் பெத்தத்தினின்று நீங்கப் பெற்றார்க்கு முத்திப்பயன் பெறுமாறு வகுத்துக் கூறுதற் கெழுந்தது பதினொராஞ் சூத்திரம். முத்தியென்றது ஈண்டுத் தலைமைபற்றிச் சிவப்பேற்றினையே யின்றது.

கண்ணிந்திரியம் ஓருருவத்தைக் காணும்படி உயிரத்துடனாய் நின்று காட்டுதன் மாத்திரையேயன்றி அக்கண்ணொளியோடு கூடச் சென்று அவ்வுருவத்தைக் காணுதலுஞ்செய் துபகரிக்குமதுபோல, உயிரொருவிடயத்தை யறியும்படி முதல்வனுடனின் றறிவித்தன மாத்திரையே யன்றி அவ்வுயி ருணர்வோடுகூட அத்துவிதமாய்ச் சென்று அவ்விடயத்தை யறிதலுஞ்செய் துபகரித்து வருமாகலான், எல்லாமலங்களும் பினகாயமொடு மாயுமென மேலைச் சூத்திரத் திறுதியிற் கூறியவாற்றாற் காயமொழிந்தான் மும்மலங்களு நீங்கப்பெற்றுச் சுத்தனாவோனாகிய வான்மா, முதல்வ னிங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகரித்து வருமுரிமையைக் கடைப்பிடித் தறிந்துகொண்டு நிற்கப்பெறின், அததொடர்புபற்றிய வம்முதல்வன் றிருவடிகளைத் தலைப்படுத றன் இச்சை யிடையறாது நிகழும்; அங்ஙன மறிவிச்சைக ளி

ரண்டும் பிறிதொன்றிற் சேறலின்றி அவ் வத்துவிதநிலை யொன்
றேபற்றி முதல்வன் றிருவடிக் கண்ணவாய் ஒருங்கு நிகழுவே,
காயமொழிந்தபின் மலநீங்கிச் சுத்தனாய் நிற்குமுறைமை காய
த்தோடு நிற்புழித் தானே கைகூடப் பெறுதலால், ஏனைக்கிரியை
யுமே எல்லாமலங்களையு மிம்மையே நீத்தொழித்து அவ்வறிவிச்
சைகளோடொப்ப வொருவழிக் கொண்டு அம்முதல்வனை றிருவ
டியைத் தலைக் கூடப்பெற்று, சிவானு பூதியே சுவானு பூதியாக
க் கொண்டு வாழ்வ னென்பாய்.

அத்துவிதநிலை விளக்குவதாகிய காணுமுபகார மாத்திரை
யே யீண்டுக் கூறப்புகுந்தார், இனிது விளங்குதற் பொருட்டு ஐ
ந்தாஞ் சூத்திரத்துட் கூறிப்போந்த காட்டுமுபகாரத்தையு ம
னுவதித்துடன் கூறினார்.

ஈண்டுக் காணுமுபகார மாத்திரையே கூறுதல் கருத்தெ
ன்பது முதனூலின் "உள்ளத்தைக் கண்டுகாட்டல்" என்பதற்கு
"அவனுமவற்றது விடயத்தை யுணருமென்றது" எனக் காணுமு
பகாரத்தையே வேறெடுத்துக்கொண்டுரைத்த கண்ணழிப்புரை
யானு முணர்க.

காட்டுமுபகார மாத்திரையேயன்றி அதன்பின்னாக வுட
னின்று காணு முபகாரமும் வேண்டப்படுமென்பது எவ்விடத்
தும்’ என்னுஞ் செய்யுளினை விளங்கக் காட்டுதும்; ஆண்டுக் காண்க.

காயமொழிந்தாற் சுத்தனாகி யான்மா இத்தையாயு மறிவு
டையனுமென வியையும்.

ஆகியென்றது பெயர்.

அந்நிலை யென்பதற்கு வேறுவே றுரைப்பாருமுளர்.

அகச்சுட்டு அடுக்க நின்றதனை யொழித்து வேறொன்றனை
ச் சுட்டுதல் செல்லாமையும் பிறவும் அவர் நோக்கிலர்.

இருவகைப் பயனு மொருங்கே சேரவைத்து விளக்குவா ராய், மேலைச்சூத்திரத்து வேறுகூறாக வையாது ஒருவாறு வலி யுறுக்கப்படு மூன்றாங் கூற்றைக் காயமொழிந்தாற் சுத்தனாகி யெனவும், அந்நிலைமை யிந்நிலையி லடைந்த முறையாலே மாய மெலா நீங்கியெனவும், அதனொழிபாக வெடுத்துக் கொண் டாராகலின், அதனோடொப்ப இச்செய்யுள் முக்கூற்றதாய வாறு கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இந்தச் சரீரசம்பந்தம் நீங்கினா லான்மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவது யெப்படி யென்ற மாணாக்கனை நோக் கி மேலருளிச்செய்கிறார்.

காயமொழிந்தாற்சுத்தனாகி யான்மாக் காட்டக்கண்டிடு ந் தன்மை யுடையகண்ணுக் கேயுயிர்காட்டிக் கண்டிடுமாபோல வீசனுயிர்க்குக்காட்டிக் கண்டிடுவி தனையாயு மறிவுடையனாய வன்புசெய்ப வனந்நிலைமை யின்னிலையி னடைந்தமுறையாலே மா யமெலாம்நீங்கி யரனடிக்கீழ் நிற்பன் மாறாதசிவானுபவ மருவி க்கொண்டே - அன்னுவயம். மாயமெலாம் நீங்கி காயமொழிந் தாற் சுத்தனாகி யான்மவென்று பொருட்கூட்டுக. காட்டக்கா ணுந் தன்மையினையுடைய கண்ணுக்குக் காட்டுகிற முறைமையி னையுடைய வான்மாக் காட்டக் காணுங் கண்ணைப்போல இவ் வான்மாக் காணும் பகுதிக்குள்ள கன்மத்தை சிவன் றிருவுள்ள த்திலே யறிந்து ஆன்மாவுக் கறிவிக்க வறிவன். இந்த உபதேச த்தினாலே யாராய்ந்தறிந்து மறவாமே பத்திபண்ணின் அந்தப் பத்தியினுடைய நிலை யேதுவாக இப்பொழுது சிவனைக் கூடுகிற முறைமையாலே மலமாயா கன்மங்க ளென்றாகிய மயக்கங்க

ளெல்லாம் விட்டு நீங்கியிருந்து பிராரத்தத் தொலேவிலே சரீர மொழிந்தா லான்மா சுத்தனாய் பரமேஶ்வரனுடைய தாமரை மலர்போன்ற சீர்பாதத்தின் கீழேயிருப்பன். இருக்கு மிடத்து மொழியாத சிவானுபவத்தைப் பொருந்திக்கொண் டிருப்பன்.

இதனாற் சொல்லியது, பெத்தத்தன்மையிற் பரமேஶ்வரனுபகரித்து நின்ற முறைமை யறிந்து மறவாமற் பத்திபண்ண அந்தப் பத்தி யேதுவாக வுண்டாகிய ஞானத்தினாலே பரமேஶ்வரனுடை சீர்பாதத்தை யணையுமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

காட்டக்கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக்கு - காட்டக் காணுந் தன்மையுடைய கண்ணிந்திரிய மோருருவத்தைக் காணும்படி,—ஏயுமுயிர் காட்டிக் கண்டிடுமாபோல - பொருந்திய வுயிரத்துடனாய் நின்று காட்டுதன் மாத்திரையேயன்றி யக் கண்ணொளியோடு கூடச்சென றவ்வுருவத்தைக் காணுதலுஞ்செய் துபகரிக்குமதுபோல,—உயிர்க் கீசன்காட்டிக் கண்டிடுவன் - உயிர் ஓர் விடயத்தை யறியும்படி முதல்வனுட னின் றறிவிதத ன் மாத்திரையே யன்றி யவ்வுயிர் உணர்வோடுகூட வத்துவித மாய்ச்சென் றவ்விடயத்தை யறிதலுஞ்செய் துபகரித்து வருமாதலான்,—காயமொழிந்தாற் சுத்தனாகியான்மா-எல்லா மலங்களும் பின்காயமொடு மாயுமென மேலைச் சூத்திரத்திறுதியிற் கூறியவாற்றாற் காயமொழிந்தால் மும்மலங்களு நீங்கப் பெற்றுச் சுத்தனாவோனாகிய ஆன்மா,—இதனை யாயுமறிவுடையனாய் - முதல்வ னிங்ஙன மத்துவிதமாய்நின் றுபகரித்து வரு முரிமையைக் கடைப்பிடித் தறிந்துகொண்டு நிற்கப்பெறின்,—அன்பு

செய்ய - அத்தொடர்பு பற்றிய அம்முதல்வன் றிருவடிகளைத் தலைப்படுதற்க ணிச்சை யிடைபடுறா நிகழும். அங்ஙனமன்றி விச்சைகளிரண்டும் பிறிதொன்றிற் சேரலின்றி யவ்வத்துவித நிலையொன்றே பற்றி முதல்வன் றிருவடிக் கண்ணவாய் ஒருங்கு நிகழவே,—அந்நிலைமை யிந்நிலையி னடைந்தமுறையாலே - காயமொழிந்தபின மலநீங்கச் சுத்தனாய் நிற்கு முறைமை காயத்தொடு நிற்புழித் தானே கைகூடப் பெறுதலால்,—மாயமெலா நீங்கி - ஏனைக்கிரியையுமே யெல்லாமலங்களையு மிம்மையே நீத்தொழிந்து அவ்வறிவிச்சைகளோ டொப்பவொருவழிக் கொண்டு,—அரன்மலரடிக்கீழ் மாறாத சுவானுபவ மருவிக்கொண்டேயிருப்பன் - அம்முதல்வன் றிருவடியைத் தலைக்கூடப் பெற்றுச் சிவானுபூதியே சுவானுபூதியாகக் கொண்டு வாழ்வன.

இதனானே இருவகைப் பயன்களையு மொருங்கே சேரவைத்து விளக்குவாராய் மேலைச் சூத்திரத்து வேறுகூறுக வையாது ஒருவாறு வலியுறுக்கப்படு மூன்றாங்கூற்றைக் காயமொழிந்தாற் சுத்தனாகி யெனவும் அந்நிலைமை யிந்நிலையி லடைந்த முறையாலே மாயமெலா நீங்கியெனவும் அதனொழிபாக வீண்டெடுத்துக் கொண்டா ராகலி னதனோடொளப்பட இச்செய்யுள் முக்கூற்ற தாயவாறு கண்டுகொள்க.

## மறைஞானதேசிகர் உரை

மே லந்த ஜீவன்முத்தர்க ளேயத்தழுந்து முறைமை யுணர்த்துகின்றார்.

பாஞானத் தாற்பரத்தைத் தரிசித்தார்பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்பார்க்க, வருஞான ம்பலஞான மஞ்ஞானம் விகற்பம் வாச்சியவா சகஞான

ம் வயிந்தவத்தின் கலக்கந், தருஞான போக ஞாதிரு ஞான ஞேயந் தங்கியஞானஞ் சங்கற்பனை ஞானமாகு ந், திருஞான மிவையெல்லாங் கடந்தசிவஞான மாத லாற் சீவன்முத்தர் சிவமேகண்டிருப்பர். (உ)

(இ-ள்) பரஞானததாற் பரத்தைத் தரிசித்தாற் பரமே பார்த்திருப்பர் — பரனது ஞானத்தினாலே பரத்தைத் தரிசித்த சிவஞானிகள் தேகாந்தமளவு மேலான பரப்பிரமத்தையே தரிசித்துக்கொண்டிருப்பர்கள்.

இப்படிப் பரத்தைப் பார்த்திருக்கிற ஞாதாக்கள் இந்த வுலகத்தினக ளுண்டாய மாயாபதார்த்தங்களைப் பார்த்திருப்பர்களோ வென்னில்?

பதார்த்தங்கள் பாரார் — இந்த விசுவவியற்கையைப் பொருந்தியிரார்கள். அஃதென்போல வென்னில்? அமிர்ததத்தைப் புசித்தவன் விடம்புசிக்க விரும்பாதவாறுபோல.

"உலகுளார் பெறுததுஞ்சு மொருபொருள் விழித்தயோகி, யுலகுளார் விழித்தபண்டத் தரங்குவ னுருவமாக, வுலகெலா மொன்றிவேறற் றுளிருமொப் பிலிதனேனொன்று, ளலர்தலைக் கணிந்தயோகிக் கவனலா னேயமியாதே" எனவறிக.

அதனைப் பார்த்திருக்கிற குற்றம் யாதெனின்?

பார்க்கவரு ஞானம் பலஞானமஞ்ஞானம் — விசுவத்தி னுண்டாகிய கடபடாதி ஞானங்களெல்லாம் பலவாதலானும் அவைகள் விகற்பமாக விசாரித்துப்பார்க்கி லதுவு மஞ்ஞானத்தா லுண்டான வாதலானும் வா

விகற்பம் வாச்சிய வாசகஞானம் — ய்வழக்காற் சொல்லப்படாநின்ற சத்தார்

வயிந்தவத்தின் கலக்கந் தருஞான போக ஞாதிருஞான ஞேயந் தங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகும்

த்த ஞானத்தா லுண்டாகிற ஞானங்களெல்லாம் விந்துவிற் றோற்றிய வைகரியாதி ஞானமும் பரமமான பந்தமாதலானும் இவைகளன்றி ஞாதிருஞான ஞேயங்களாகிய ஞானங்களு மான்மபோதத்தாற் சுட்டியறிகிற ஞானங்களெல்லாஞ் சங்கற்பஞான மாதலானு மிவைகளெல்லாங் கூடாது.

திருஞான மிவையெல்லாங் கடந்த சிவஞானம்

சம்யஞான மாவது அவைக ளெல்லாத்தையும் பற்ற விசிட்டமான சிவனைப் பிரகாசிப்பிக்குமதா யுள்ள மேலான சிவஞானமே!

ஆதலாற் சீவன் முத்தர் சிவமேகண்டிருப்பர்.

இதுவே சிறப்பாகையினாலே சீவன்முக்தர்களந்தஞானத்தாற் றானே பரமசிவனுடன் அநுசந்தானம் பண்ணிக்கொண் டிருப்பார்கள். எ-று.

ஏகாரந் தேற்றம்.

ஞீயாதே நேநேதிகரண வியுத்ப்பத்தியாலே ஞானமென்னும் பதமுண்டாயிற் றெனவறிக, இது வடமொழி.

இந்த ஞானம் பரம் அபரமென விருவிதம்.

வாச்சியவாசக ஞானம் அபரமாதலாற் றள்ளினார்.

பதிஞான மேலானதாகையா லிதுவே சிறப்புடைத் தென்பது.

அஃதெக் காரணத்தா லெனில்? அந்தஞானம் பிரத்தியக்ஷம் அனுமானம் ஆகமமாகிய இம்மூன்றினாலு மறியப்படாத படியாற் கூறிய தெனவறிக.

இதற்குச் சர்வஞானோத்தரம் சிவதருமோத்தரம் யோகசம் சித்தியம் மிருகேந்திரத்து மறிக. (உ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் சீவன் முத்தர் சர்வமுஞ் சிவாகாரமாகவே காண்பர்களென்பது கூறுகின்றது.

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க வருஞானம் பலஞான மஞ்ஞானம் விகற்பம் வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின கலக்கந்தரும் - பாசஞானத்துக்கும் பசுஞானத்துக்கும் மேலாயிருக்கிற பதிஞானத்தினாலே பாச பசுக்களுக்கு மேலாயிருக்கிற பதியை வேறறக்கண்டாரெவ்விடத்தும் பதியேகண்டிருப்பர், பதிக்கு அன்னியமாக வொருவஸ்துக்களையுங் காணார். வேறுவேறு வஸ்துக்களாகக் காணவருகிற ஞானமானது பலவாய மாயாவிகற்ப ஞானமாம். சொல்லும் பொருளுமாகிற ஞானம் விந்துவின கலங்கற் பிரதேசத்திலே யுண்டான ஞானமாம்,—போகஞான ஞாதுரு ஞான ஞேயங் தங்கியஞானஞ் சங்கற்பனை ஞானமாகுந் திருஞான மிவையெல்லாங் கடந்த சிவஞான மாதலாற் சீவன முத்தர் சிவமே கண்டிருப்பர் - போகத்துக்குக் காண்பானுங் காட்சியுங் காணப்படு பொருளுமாகிற திரிபுடி ஞானம் சங்கற்பஞானம். சிரீமத்தாகிய முன்சொன்ன சுத்தா சுத்த மாயாஜந்ய ஞானங்களுக்கும் திரிபுடி ஞானங்களுக்கு மப்பாலாகிய சிவஞானமாகையால் ஜீவன் முத்தரானவர்கள் விகற்பமாகிய பதார்த்த ஞானத்தைவிட்டு நிர்விகற்ப ஞானமாக வெல்லாஞ் சிவமாகவே கண்டிருப்பரென் றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அபரோக்ஷப் போலிப் பரோக்ஷமாய்ப் பாவிக்குஞ் சிவமாத்திர தேயநிர்விகற்ப சமாதியிற் சாதக மனோகங்கார புத்தி சங்கற்ப கர்வபோத சிற்றுச் சவிகற்ப நிர்விகற்ப சாத்த மாத்திர சர்வார்த்த சிவ சாக்ஷாத்காரத்திற் போலப் பதார்த்தங்கள் தோற்றா. தோற்றுமாறு லநதஞானம் பிறவி பெருக்கும் பிராகிருத மனோகங்கார புத்தி சங்கற்ப கர்வபோத தூல சவிகற்ப ஞானந் துஷ்டஞ் சுத்தமன்றென்று சொல்லுகின்றார்.

பதார்த்தங்கள் பாரா ரெனபது பரமுத்தியிலென்று சிலர் படித்துப் பேசுவார்கள். சர்வ பதார்த்த கர்ப்ப சிவ சாக்ஷாத்கார பூர்த்திப் பர முத்தியில் அவர்கள் தாழ்ந்த சமாதி நிலையைச் சாற்றுத லஞ்ஞானம். அதுவன்றித் 'தூரியனுஞ் சிவந் தோன்றுந் தானுந்தோன்றுந் தொல்லுலக மெல்லாந் தன்னுள்ளே தோன்றும்' என்பது முதலிய வசன விரோதமுமா மென்பதறிக.

வெளிப்படை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இத்தை யாயுமறிவெனப்பட்ட பரஞானத்தால் அதனைத் தெளிய நோக்கி அன்பு செய்யப்பெற்றார், அவ்வொன்றனையே யுணர்ந்துகொண்டு நிற்பதன்றி மேற்கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய ஏனைப் பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர். அவற்றைக் காண வருஞானங்களாவன? கருவிகளைப் பற்றி நின்றறியுங் காட்சியநுமான முறையெனம் பலவகைப்பட்ட அ

ளவைஞானங்கள். அவையெல்லாஞ் சுட்டுணர்வின் பேதமாகலானும், ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய சாத்திரஞானம் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விந்து ஞானமேயாகலானும், சிந்திதலுத் தெளிதற் கண்ணதாகிய பேதஞானமும் பாவனை ஞானமாதலேயன்றி அனுபூதி ஞானமாகாமையானும், இவையனைத்திற்கும் மேலாய் ஈண்டுக் கூறப்பட்ட விச் சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்க வாராத சிறப்புடைய ஞானமாகலான், இதனைப் பெற்ற சீவன் முத்தர் சிவமொன்றே கண்டிருப்பரன்றி ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்த வாதனையிற் படுவாரல்ல ரெனபதாம்.

சிவமே கண்டிருப்பரென்றது முடிந்தது முடித்தல்.

ஏகாரம் பிரிநிலை.

ஈண்டு அஞ்ஞானமென்றது சுட்டுணர்வின் மேற்று.

கலக்கம் ஐயம்.

கேட்டலறிவு மேற்சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைத்தல்பற்றி, அதனைக் கலககந்தரு ஞானமென்றார்.

போகத தங்கிய ஞானமெனறது அக்கலக்கந் தருஞானம் போம்படி யவ்வாறு தங்கிய ஞானமென்றவாறு.

சீவனமுத்தர் பிறிதொன்றனைப் பாராரென வற்புறுத்தோதிய விதனுனே, பிராரத்தவினை மங்கிப்போயவழியும் மங்காது நின்றுழல்விப்பதாகிய அதன் வாதனை பற்றறக் கழியுமாறு சாதிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

சரீரதொந்தனை நீங்கின் பரமுத்தியிலே சிவானுபூதியைப் பெறுமதொழிந்து சரீரத்தோடே கூடியிருக்க சிவானுபூதி யுஞ்

டாவ தெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் - மேலான சிவஞானத்தாலே அசத்தியதைத் தயசத்தியமென் றறிந்து நீங்கிச் சத்தியமாயுள்ள பரமேஸ்வரனைத் தரிசித்தவர்கள்,—பரமே பார்த்திருப்பர் - அந்தப் பரமேஸ்வரனை எவ்விடத்திலுங் கண்டிருப்பர்கள்,—பதார்த்தங்கள் பாரார் - வாதனா மார்க்கத்தாலே பிரபஞ்ச விஷயங்கள் மேலிட்டாலு மதிற்கூடார்கள்—பார்க்கவருஞானம் பலஞான மஞ்ஞானவிகற்பம் - அந்த விஷயங்களோடுங் கூடிநின்று பார்க்கவுண்டான வறிவு வெகுவிதமானவறிவு மாயா மயக்க விகற்பமுமா யிருக்குமதொழிந்து,—வாச்சிய வாசகஞானம் வைந்தவத்தின கலக்கந்தருஞானம் போகம் - வைந்தவமாகிய சுத்தமாயையி லுண்டான வாசகமாகிய சத்தமும் வாச்சியமாகிய வத்தமுமாயிருக்கிற வறிவு சத்தந்தான பிரமமெனறும் அத்தந்தான பிரமமென்று மயக்கத்தைத் தருகிற ஞானமா மவைநீங்க,—ஞாதிருஞான ஞேயங் கங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகும் - காண்பானுங் காட்டுவதுங் காணப்படுகிற பொருளுமாயிருக்கிற ஞானஞ் சங்கற்பிக்கதிகிற ஞானமாம். அவைநீங்கத்,—திருஞான மிவை யெல்லாங் கடந்த சிவஞானம் - அழகிய ஞானமாவது இவை யெல்லாத்துக்கு மப்பாற்பட்டு வாசகு மனோ கோசரமா யிருக்கிற சிவஞானமாயிருக்கும்.— ஆகலால்சீவன்முத்தர் சிவமேகண்டிருப்பர் - ஆகையினாலே ஜீவன் முத்தராயுள்ளவர்கள வாதனையாலும் அபுத்தி பூர்வத்தா லுண்டாகிய பிராரத்தம் புசித்தத் தாலேயும ளவும் கனவிலும் நனவிலு மந்தச் சிவத்தையே தரிசித்துகொண் டிருப்பார்கள்.

இதனாற் சொல்லியது, உபதேசக் கிரமத்திலே உண்மையைப் பெற்ற ஜீவன முத்தராயுள்ளவர்கள் பிரபஞ்ச விஷயங்க

ளையு மசத்தநும் சத்தமாயிருக்கிற வைந்தவ ஞானத்தையும் விட்டு ஞாதரு ஞானநேயங்களையும் கழன்று இவையிற்றுக்கு மேற்பட்டு சிவஞானத்தாலே சிவனைத் தரிசித்து அனவரதமு மந்தச் சிவமேயா யிருப்பர்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் - இத்தைகயாயு மறிவெனப்பட்ட பரஞானத்தா னதனைத் தெளியநோக்கி யனுபு செய்யப் பெற்றூர்,—பரமே பார்த்திருபபர் பதார்த்தங்கள் பாரார் - அவ்வொனறனையே யுணர்ந்துகொண்டு நிற்பரனறி மேற் கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய வேனைப் பதார்த்தங் களைச் சிறிதும் காண்பாரல்லர்,—பார்க்கவருஞானம் பலஞான ம் அஞ்ஞானவிகற்பம்-அவற்றைக் காண வருஞானங்களாவன? கருவிகளைப்பற்றி நின்றறியுங்காட்சியனுமான முறையெனப் பல வகைப்பட வளவை ஞானங்கள். அவையெல்லாம் சுட்டுணர்வி ன் பேதமாகலானும்,—வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின் கலக்கம் தருஞானம் - ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய சாத் திரஞானம் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விந்து ஞான மே யாகலானும்,—போக ஞாதரு ஞானஞேயந் தங்கிய ஞா னஞ் சங்கற்பனை ஞானமாகும் - சிந்தித்துச் தெளிதற் கண் ணதாகிய போகஞானமும் பாவனை ஞானமாதலே யன்றி யறுபூ திஞான மாகாமையானும்,—இவையெல்லாஞ்கடந்த சிவஞான ந்திருஞானம் - இவையனைத்திற்கு மேலா யீண்டுக் கூறப்பட்ட இச்சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப் புடைய ஞானம்,—ஆதலாற் சீவன் முத்தர் சிவமே கண்டிருப் பர்-ஆகலான் இதனைப் பெற்ற சீவன முத்தர் சிவமொன்றேகண்

டிருப்பரன்றி யேனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்தவா
தனையிற் படுவரல்லர்.

சீவன் முத்தர் பிறிதொன்றனைப் பாராரெனவற்புறுத்
தோதிய விதனானே பிராரத்தவினை மங்கிப்போய வழியும் மங்
காதுநின் றுழல்விப்பதாகிய அதன்வாதனைப் பற்றறக் கழியுமா
று சாதிக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் சிவசம்வாதி சரீர நீங்கி முத்திபெற வே
ணுமோ முத்தியினும் நித்தியத்துவம் பெ
ற்றிருக்கலாமோ வென்று வினவ
வுணர்த்துகின்றார்.

அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக் க
ன்மாலா யழிந்து வருதலினா லந்தமில்லைப், பினாதியரு
ள் பெற்றவர்க ணித்தவுருவத்தைப் பெற்றிருக்கை மு
த்தியெனிற் பெறும்பதமே யிதுவு, மினாதுநிலை யிது
தானுங் காயமுண்டே யிருங்கன்ம மாயமல மெல்லா
முண்டா, மநாதிதரு முடலாதி காரியத்தாலநாதி மல
மறுக்கு மருந்தற்றா லுடன்மாயுங் காணே. (௫)

(இ-ள்.) அநாதியுடல் — இச்சரீரமநாதி. அஃதெக் காரணத்தாலெனில்?

ஒன்றினைவிட் டொன்றுபற்றிக் — பழம் புடவையைப் போட்டுவேறோ புது
ப்புடவையை யெடுக்குமாறுபோலக் கன்ம
கன்மாலா யழிந் — த்துக் கீடாக வெடுத்த தூலவுடலை விட்டு

து வருதலினால் — வாசனாத்மகமாகிய சூக்குமவுடலைப் பற்றிப் பிறந்து மிறந்தும் ஜலப் பிரவாகம்போல ஜனனந் தோறுந் தொடர்ந்து அது பிரவாகனாதியாய் வருகையினாலே

அந்தமில்லை — உலவாக்கிழியான தெப்படி முடிவின்றி யிருக்கும், அதுபோல விந்தத் தேகத்துக்கு முடிவில்லை.

பினாதி — பினையொருகாலத்தின் மாயாகாரியமாகிய வடிவைவிடுத்து நாச மடைந்திருக்கையா லாதியென்று சொல்லவும் பெறும்.

அருள் பெற்றவர்கணித்த வுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் — அந்த வருளைப்பெற்ற முத்தான்மாக்களைப்போல நித்தியத்துவமே பெற்றிருப்பதே முத்தியென்று நீ சொல்லில்?

பெறும்பதமே யிதுவும் — இந்த நித்தியத்துவம் பெற்றிருப்பது மொரு பதப் பிராப்தியைப் பெற்றிருப்பதுகாண்.

இறுதில்லை யிதுதானும் — இந்த நித்தியத்துவம் பெற்ற சரீரந்தானும் பொல்லாததே, அஃதெதுகாரணத்தாலெனில்?

காயமுண்டேலிருங்கன்ம மாயை மலமெல்லா முண்டாம் — சரீரமென்ப தொன்றுண்டாகவே யதற்கேற்ற கன்மமுண்டாம் அஃதுண்டாகவே மாயையு மலமு மிவைகளெல்லா முண்டாய் விடுங்காண்.

மனாதிதரு முடலாதி — மனோவாக்குக் காயமாகிய மூவிதத்தானு மார்ச்சித்த கன்மமுண்டாகவே யதற்கேற்ற தனுகரண புவனபோக முண்டாமாதலா லிதுவு மாதியெனப் பெறும்.

| | |
|---|---|
| காரியத்தால நாதி | சநந்தோறுந் தொடர்ந்து தொடர்ந்து காரியப்பட்டு வருகையினாலே பிறவாகாநாதியெனப் பெறும். |
| மலமறுக்கு மருந்தற்று முடன் மாயுங் காணே. | வைத்தியனாகிய சிவன் மாயாகாரியமாகிய மருந்தைக் கொடுத்து மலவாதனையாகிற வியாதியைப் போக்கவே பின் பொருக்காலுஞ் சரீர முண்டாகாது. எ-று. |

இதனாலே கன்ம மநாதித்துவமு மாதித்துவமுங் கூறவே கன்மக்ஷயங் கூறியதாயிற்று.

இதற்குச் சிந்தியாகமம். (௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் வயிரவ தந்திரவாதிகள தேக நித்தியமாவதே முத்தியென்பதை மறுத்தல்.

உடலநாதியே யொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மாலாயழிந்து வருதலாலந்தமில்லைப் பினுநியருள் பெற்றவர்களித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் - ஆன்மாக்களுக்கநாதியே கன்மத்தினாலே யொரு தேகத்தைவிட் டொருதேகத்தைப்பற்றி யாயுமழிந்தும் வருகிற தியல்பாகையால் யாதேனுமொரு தேகமில்லாம லிருப்பதில்லை. ஆதலால் சரியை கிரியைகளைச் சாதித்தபின் யோகாப்பியாசத்தினாலே யாதியாகிய பரமேசுவரனுடைய வருளினாலே நித்திய வுருவத்தைப் பெற்று அவர்கள் சிவலோகத்திலே சித்தராயிருப்பதே முத்தியெனில்?—பெறும்பதமேயிதுவு மினுதநிலையிதுதானுங் காயமுண்டேயிருங்கன்ம மாயை மலமெல்லா முண்டாம் - நித்தியகாரியத்தைப் பெறுதல் மோக்ஷமென்னு மிதுவு முனை ஞுஞ்சொன்ன பு

துறக்கிறவே காயத்தோடே யிருப்பது. குற்றம்பொருந்தின நிலை மைய தெவவா றென்னில்? மாயாதேக முண்டான போதே பெரிதாகிய கன்மமு மாயையு மாணவமு மெல்லாப் பந்தமு முண்டு. ஆகில் * விதேக + கைவல்லிய முண்டாம்படி யெவ்வா றென்னில்?—அநாதிமல மறுக்கு முடலாதி மருந்து தருங்காரியத்தாலற்று லுடல்மாயுங்காணே - அநாதி கர்த்தாவாகிய சிவன் ஆன்மாவுக் கநாதி சம்பந்த மாகிய வாணவமலத்தை யறுக்குக் தேகாதி மருந்தைக் கொடுப்பன். அந்த தேகேந்திரியாந்தக்ரண வியாபாரமாகிய போகத்தினாலே ஆன்மா வியாபியாகிய வாணவமலம் பரிபக்குவமாய் நீங்கினால் ஔஷதமாகிய தேகாதிகள் பொருந்தாமல் நசிக்கும். ஆதலால் விதேக கைவல்லியமே பரம முத்தியென் றிதன்பொருள்.

ஏகார மீற்றசை.

* விதேக - தேகமில்லாத, + கைவல்லியம் - முத்தி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சாரூப முதலிய பதமுத்தி, பரமுத்தி யன்றென்பது படிக்கின்றார்.

அநாதிதருமுடல் - சிவனு மாமையுங் கொடுக்குஞ் சரீரம். மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உடம்பாவது அநாதியா யுயிரைப்பற்றி நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய் வருவதாகலான் அதற்கொரு முடிபு கூறுத

ல் பொருந்தாமையின், முத்தியினும் இவைபோலன்றி நித்தியசுத்த மங்களமயமான திப்பிய சரீரமுண்டென்னும் உருவசிவசமவாதிகண் மதமடாது. உடம்புளதாகவே அதற்குக் காரணமாகிய மாயையும் அதன்க ணிகழுமுண்டிவினைகட்கேதுவாகிய கன்மமும் அதனை யியைவிப்பதகிய வாணவமலமும் விட்டுநீங்குதலின்மையின் அதுவு மின்றுமையைப் பயக்கு நிலையேயாகலானும், ஆகவே யதனை முத்தியென்பதற்குத் தாற்பரியம் பதமுத்தி யென்பதேயாமாகலானும், மனமுதலிய புரியட்டக வுடம்பினின்றுந் தோன்றுவதாகிய வில்வுடம்பு அக்காரியப்பாட்டாலாதியாய் அநாதியாகிய மலநோய் தீர்த்தற்கு மருந்தாய்வரும், இஃது அக்காரண நீங்கியவழித் தானுமுடனீங்குவதன்றி நிற்றற்கோ ரியையின்மையான அந்தமாதற்க ணைசங்கையினமையானு மென்பதாம்.

இதனுனே மாயாமலம் பற்றறக் கழியுமாறு தடை விடைகளாற் சாதிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

சமவாதி சரீரம் நீங்கி முத்தியைப் பெறவேணுமென்ற தெப்படி, முத்தியிலுஞ் சரீரம் நித்த தத்துவத்தைப் பெற்றிருக்குமென்று சொல்ல; அவனை மறுத்து மேலருளிச் செய்கிறுர்.

அநாதியுடலொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மாலாயழிந்துவருதலாலந்தமில்லை - அநாதியே ஆன்மாக் கன்மத்துக் கீடாக ஒருதேகம்போக வொருதேக மெடுத்துக்கொண்டு உண்டாயு மில்லையாயும் வருகையாலே தேகத்துக் கொருக்காலு முடிவில்லை. இத்தன்மையொழிந்து,—பிறுதியருள் பெற்றவர்க

னித்தவுருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில்- இப்படிக் கன்மம் புசித்துத் தொலைந்தபின்பு வேட்டுவாளி யொன்று மறியாப் பச்சைப்புழுவை யெடுத்துத் தன்சொரூப மாக்கின தன்மைபோல, ஒன்று மறியாமற் கிடக்கிற வானமாவையுஞ் சிவனுடைய ஞானமெடுத்துத் தன் ஸ்வரூபமாக்க அந்த மாயாவுடலே நித்த தத்துவத்தைப் பெற்றிருக்கிறவர்கள் ஸ்வரூபத்தை நீங்கியும் பெற்றிருக்கிறது முத்தியென்று நீ சொல்லில் ?—பெறும்பதமேயிதுவும் - சரிதைகிரியா யோகங்களைச் செய்தவர்கள் பெறுகிற பதமுத்தி யொழிந்து சாயுச்சியமாகாது.—இறுதிநிலை யிதுகாறுங்காயமுண்டே லிருங்கன்மமாயை மலமெல்லாமுண்டாம் - இந்த முத்திதானும் பொல்லாததொன்று. அதெப்படி யென்னில்? ஒரு வடிவுண்டான பொழுதே வேறுவிதமான கன்மமும் அதனாலே மாயையும் இவ்விரண்டுக்குங் காரணமாயிருக்கிற மலமும் சருவமு முண்டாகா நிற்கும்.—மருவிதருமுடலாதி காரியத்தா லருதிமலமறுக்கு மருந்து - மனம் புத்தி ஆங்காரம் தன்மாத்திரையென்று சொல்லும் புரியட்டகதேகமுதலான தனுகரண புவன போகங்களென்று சொல்லு மருந்தைக்கொண்டே பரமேஸ்வரன் அநாதியே ஆன்மாக்களை மறைத்துக்கொண்டு நிற்கிற மலத்தைப் போக்கா நிற்பன.—அற்று வுடல் மாயுங் காணே - ஆகையா லந்த ஆணவமலம் போகவே நீமுத்தியிலழியாதென்ற மாயாசரீரமு மழிந்துபோமென் றறிவாயாக.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் சிவசம்வாதிமதம். "முனமேனொன்றனது முதிரொளிஞான - மறியாப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்த - வண்டெனவுயிரைக் கொண்டிடுமுயிரது-தன்னைநோக்கித் தானதுவாகி-பைவகைத்தொழிலு மெவ்வகையுணர்வும்-பிரியாவாறும்பெற்றுத் திரியாப்பெரியோர் திரட்சிசேர்க்கிடுமே" என்றும், அவன்மறுப்பு. "முத்தியுற்ற நற்றவரை

யிடை - சேர்வனொன்றனை சார்தருமுத்தி - சாலோக்கியமோசா யுச்சியமெனிற் - பந்தமுற்ற கந்தலகழிகத - வறிவோடறிவு பி றியாப்பெற்றி - வேண்டுமெனறதற் கேண்டிவரிவ்வா - றிருப்ப னொன்பதற் குருத்தானவேண்டும்” எனறும், “இச்சாரூப நச்சி னனொன்னில் - மும்மலத்தீத்து மின்மையதனறே” எனனுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சமவாதி யருளைப்பொருந்தின வா ன்மாக்களுடைய மாயாதேகந் தானே முத்தியிலநிதக தத்துவ த்தைப் பெற்றிருக்கு மெனறு சொல்ல அதுபசமுததியாவதொ ழிந்து சாயுச்சிய மாகாதென்றும் யாதொரு சரீர தொந்தனை யுள்ளமட்டும் மூன்று மலமும் நீங்காதென்றும் இந்த மாயாசரீர மலத்தைப் போக்க வந்ததென்றும் ஆகையால் இந்தமமலம் நீ ங்கினபோதே மாயாசரீரமும் நீங்குமெனனு முறையையு மறிவித் தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உடலனாதிபற்றி யொன்றினை விட்டொன்று கனமாலா யழிந்து வருதலா லந்தமில்லை - உடம்பாவ தனாதியா யுயிரைப் பற்றி நீரோட்டம்போலத் தொடர்ச்சியாய் கன்மத்திற் கேற்ப வாசியு மழிந்தும் வருவதாதலா னதற்கொரு முடிபுகூறுதல் பொருந்தாமையான்,—பினாதியருள் பெற்றவர்க ணித்த வுருவ த்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் - முதல்வ னருளைப் பெ ற்றவர்கள் முத்தியினு மிவைபோலன்றி நித்திய சுத்தமங்கள ம யமான திவ்வியசரீர முண்டென்னு முருவ சிவசமவாதிகள் ம தமடாது.—காயமுண்டேன் மாயை யிருங்கன்ம மலமெல்லா முண்டாம்-உடம்புளதாகவே யதற்குக் காரணமாகிய மாயை

யு மதன்க ணிகழு முண்டிவினைகட் கேதுவாகிய கன்மமு மத னை இயைவிப்பதாகிய ஆணவ மலமும் விட்டு நீங்குதலின் மையின்,—இந்தானு மிஞுதுநிலை-இதுவு மினஞுமையைப் பய க்கு நிலையேயாகலானும்,—இதுவும் பதமேபெறும்-ஆகவே யத னை முத்தியென்பதற்குத் தாற்பரியம் பதமுத்தியென்பதே யா மாகலானும்,—மஞுதிகருமுடல் காரியத்தா லாதி-மனமுதலிய புரியட்டக வுடம்பி னின்றுந் தோன்றுவதாகிய விவ்வுடம்பு அ க்காரிய வேறுபாட்டா லாதியாய்,—அநாதிமல மறுக்கு மருந் தற்று லுடன் மாயுங்காணே- அநாதியாகிய மலநோய் தீர்த்தற் கு மருந்தாய்வரும். இஃது அக்காரண நீங்கியவழித் தானுமுட னீங்குவதன்றி நிற்றற்கோ ரியைபின்மையா னந்தமாதற்க ணு சங்கையின்மையானும்.

இதனுனே மாயாமலம் பற்றறக் கழியுமாறு தடைவிடை களாற் சாதிக்கப் பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை



இந்தச் சீவன்முத்தர்க்கு முற்கூறிய மலவாதனை கெ ட்டு நிற்குமதற் குதாரணமிட் டுணர்த்துகின்றார்.

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தவாறே சிவம் பிரகா சிக்குமிங்கே சீவன்முத்தனுகு, முரியமல மௌ டதத்தாற் றடைப்புண்டவிடமு மொள்ளொளியி னுளி முன்ன ரிருளுந்தேற்றின், வருபால்சேர் நீர்மருவுங் க லங்கலும்போலாகி மாயாதே தன்சத்தி மாய்ந்துகாயந், திரியுமள வும்முளதாய் பின்புகாயஞ் சேராத வகைதா னுந்தேயுமன்றே. (ச)

| | |
|---|---|
| (இ-ள்.) தெரிவரிய மெய்ஞ் ஞானஞ் சேர்ந்தவாறே சிவம் பிரகாசிக்கும் | இவ் வான்மாவுக்கு யாவராலு மறிதற்கரிய வுண்மை ஞானங் கூடின விடத்து சிவம் பிரகாசியா நிற்கும். |
| இங்கே சீவன் முத்தனாகும் | இவ்விடத்திலே தானே ஜீவன் முத்தனாகும். அஃதாவது, பிரியாப்பிரிய முதலிய தின்றிச் சிவனுடனே கூடியிருக்கவும் தேகாபிமான மற்றிருந்தலென வறிக. |
| உரியமலம் | அவர்களை யெவ்விடத்தும் விட்டு நீங்காத வாணவமலம் அந்த தேசத்தி லெப்படியிருக்குமென்னில்? |
| ஒளட தத்தாற் றடுப்புண்டவிடமும் | பரமமுத்தியைப் பொருந்துமளவுஞ் சர்ப்பாதி விடங்களை யௌடத சத்தியானது எப்படி வாதையுறாமற் றடுக்கு மதுபோலவும், |
| ஒள்ளொளியின் முன்னிருள் னிருளும் | மிகுந்த வக்நிப் பிரகாசத்தின் முன்னந்தகாரத்தின் வலியானது கெட்டடங்கி நிற்குமாறுபோலவும், அந்த வலிகெட்டு நிற்குமதெங்ஙனமெனில்? |
| தேற்றின் வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும் போலாகி | தேற்றினக ளுண்டாக்கப் பட்ட விதத்தினாற் றேற்றப்பட்ட நீரினது கலங்கலான நீர் அந்த மண்ணைக் கீழ்ப்படுத்தி யது தோன்றாமற் றானே தெளிந்து மேற்பட்டு நின்றாற்போல |
| மாயாதே தன் சத்திமாய்ந்து | தான் கெடாமற் றனது சத்திகெட்டு, |

காயந்திரியமள வும் முளதாய் — இப்படியே தேகாந்த மளவு முண்டாய்.

பின்பு காயஞ் சேராதவகைதா னுந் தேயுமன்றே. — பின்பொரு சரீரமெடாதபடி பண்ணிநின் று தானும் போம். எ-று.

தானும் மெனனும் உம்மை மாயையுமென விரந்ததுதழீஇய வெச்சமாயிற்று.

இதற்குச் சுப்பிரபேதம கிரணகமம். (ச)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



ஆகில் தேகாந்தத்திலே யல்லது மோக்ஷமில்லையோ வென்னில்? இவ்விடத்து ஞானோதய காலத்திலே ஜீவன் முத்தி, தேகாந்தத்திலே பரமுத்தி யென்பது மேற்கூறுகின்றது.

மெஞ்ஞானஞ் சேர்ந்தவாறே தெரிவரிய சிவம்பிரகாசிக்குமிங்கே சீவன்முத்தனாகும் - சத்தியஞானமானது ஆன்மாவினிடத்திலே பிரகாசித்தவாறே பாசபசு ஞானங்களினாலே தெறிதற் கரிதாயிருந்த சச்சிதானந்த மயமான சிவம் ஆன்மாவுக்குவேறற அபிவியத்தியாம். அப்போதே யிந்தப் பூமியினகண் பிராகிருததேகத்திலேதானே ஜீவன் முத்தராம். ஜீவன்முத்திக்கும் விதேக கைவல்லியத்துக்கும் பேதமேதென்னில்?—உரியமலமாயாதே சத்திதான்மாய்ந்து காயந்திரியமளவு முளதாய்ப் பின்பு காயஞ் சேராதவகை தானுந்தேயுமன்றே - மல மென்றது மும்மலத்துக்குஞ் சாதி யொருமை. ஆன்மாவின் ஞானத்தை மறைத்து விஷயங்களிற் பொருந்திப் புசிப்பிக்கும் ஆணவ மாயை காமிக மூன்றும் சத்திகள் கெட்டுந் தாங்கெடாமல் பிராரத்ததேக முள்ளளவும் நின்று பிராரத்த தேகநாசத்துக்குப் பிற

கு தேகமுண்டாகாதவாறு மும்மலங்களுமுத்தனுக்கில்லையாம். மும்மலங்களுமிருந்த ஆன்மாவுக்கு சர்வஞ்ஞத்துவமில்லாமல் மாயாகரணங்களையும் பொருந்தி விஷயங்களையும் புசிப்பதுண்டாவதாகையால் பெத்தனேயென்னில் பந்தமில்லாத வகைக்குத் திட்டாந்தங்கூறுகின்றது,—ஒள்ளொளியி னொளிமுன்னரிருளுந் தேற்றின் வருபால்சேர் நீர்மருவுகலங்க லவுடதத்தாற் றடுப்புண்ட விடமும்போலாகி-உம்மை எண்ணும்மை. போலாகி யென்பது பதந்தோறு மொட்டிப் பொருளுரைக்க. நல்ல வத்திப்பிரகாசத்திலே சமீபத்திலேயிருளில்லாமல் தூரத்திலே நின்றாலும் சமீபத்திலேயிருந்தபேர்க்கு வஸ்துக்கள் தெரியதுபோல ஜீவன்முத்தனுக்கு சர்வஞ்ஞதை யில்லாதிருக்கினுஞ் சிவாநுபூதியுண்டாதலா லாணவமல பந்தமில்லை. தேற்றாவி னுண்டாகிய விரையை யுரைத்த தண்ணீர்தேறி மண்ணடியிலுந் தண்ணீர் மேலுமாகப் பிரிந்திருந் தொன்றினாலே கலங்கி மண்ணுந் தண்ணீருமுன்ன போலச் சேற்றுநீர்போ லிருந்துந் தானே தெளிவதுபோல் ஜீவன் முத்தன் வாதனையினாலே விஷயங்களுடனே கூடினாற்போலிருந்துந் தானே யந்தவிஷயங்களுக்கு வேறாய்நிற்பன ; ஆதலால் மாயாபந்தமில்லை. விடத்துக்குமாற்றான ஔடதத்தை யுள்ளேகொண்டு பாம்பினாலே கடிப்பித்துக் கொண்டாலந்த விடமேறுமாற் றடையானதுபோலச் சிவபாவனையைப் பண்ணிக்கொண்டு அநேக போகங்களைப் புசித்தாலுமதனாற் புண்ணிய பாபங்களேறாதாகையாற் கன்மமல பந்தமில்லையென்றிதன் பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

சமாதி சித்தித்தா லொருபிரகார மலம் நீங்கிச் ஜீவன்முத்தி சிவ சாக்ஷாத்காரஞ் சித்திக்கும். சித்திக்கப் பின்பு சரீரா

ந்தத்தின் மல மாவிர்த்தி நிவிர்த்திச் சுபாவமாயிருக்கு மழியா
தென றிசைக்கினுர்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவழியும், அதனுற் சிவப்பிரகாசித்தவழியும், அதனுற் சீவன் முத்தராயவழியும், முறையே தேற்றின் வருபரல்சேர் நீர்மருவுகலங்கள் முதலிய மூன்றும்போல ஆணவமலந் தனது சத்திகெட்டு வாதனைமாத் திரையா யவ்வுடம் புள்ளளவு நின்று, பற்றொரு பிறவிக்கு ஏதுவாதலின்றி அதனோடு கழிந்தொழியு மென்பதாம்.

தேற்றின் வருபரல்சேர் நீர்மருவுகலங்கல் பசஞானஞ் சேரப் பெற்றுர்மாட்டு மாய்ந்து கிடக்கு மலசத்தி ஒருகாரணத்தா ன மேற்படினு மொட்டின்றி யங்ஙனம் விண்டொழிதற்கும், சிவப்பிரகாசித்தார்மாட்டு ஒள்ளொளியி னெளிமுன் விருள் அஃ தான்மாட்டுச் சிறிதாயினும் இன்மையின்றியுஞ் செய்மைக்கண்ணு ள்ளதுபோலத் தோன்றுதற்கும், ஔடதத்தாற் றமிப்புண்ட விடம் சீவன் முத்தராகப் பெற்றுர்மாட்டு ஒருவாற்று மின்மையி ன்றியும் அங்ஙனேயின மெலிவு பார்த்திருத்தற்கும உவமையா யின.

எதிர்நிரனிரையாக வைத்துக் கண்டுகொள்க.

ஒளிநெறியென விசேடித்ததனுல் விளக்குமுதலிய அற்ப வெரியொளிகள் நீக்கப்பட்டன.

இதனுனே ஆணவமலம் பற்றறக்கழியுமாறு கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன்சொன்ன வாணவமலம் நீங்குவது எப்படி யென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தவரே சிவம்பிரகாசிக்கும் - ஆன்மாவுக் கநாதியேயுள்ள மலசம்பந்தத்தினாலே அறிதற்கரிய வுண்மைஞானஞ் சத்திநிபாதம் பிறந்து மலம் நீங்கி அந்தசிவஞானத்தைப் பொருந்தினபொழுதே சிவப்பிரகாச முள்ளவராக நிற்பார். இங்ஙனே,—சீவன்முத்தருக்கும்-அப்பொழுதே யிந்தச் சரீரத்தோடே யிருக்கச்சே ஜீவன்முத்தராய் விடுவர். மலங்கூடி நிற்கச்சே முத்தராவது எப்படி யென்னில்?—உரியமலம் - மற்ற மலங்களைப்போலவிட்டும் பற்றியும் நில்லாமல் எப்பொழுது மான்மாவுக்குச் சகசமாயிருக்கிறது ஆணவமலமானது,—அவுடதத்தாற் றடுப்புண்டவிடமும் - அவிழ்தத்தினாலே தடைபட்ட விஷமானது தான் கெடாமற் சத்திகெட்டு நிற்கிற முறைமைபோலவும்,—ஒள்ளொளியி னொளிமுன்ன ரிருளும்-நன்றாகவிட்டு விளங்காநின்ற வக்கினிப் பிரகாசத்தின் முன்னே தான் கெடாமற் கெட்டுநிற்கிற வந்தகாரம்போலவும்,—தேற்றினைவுருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போலாகி - தேற்றாம்விரையாலே தேற்றப்பட்ட நீர்க்கலங்கலானது தான் கெடாமற் கெட்டுநிற்கிற முறைமைபோலவும்,—மாயாதே தன்சத்திமாய்ந்து - அந்த மலமுந் தன்னுடைய நித்தத்துவங் கெடாமல் ஆன்மாவை மறைக்கிற சத்திகள் கெட்டு? அப்படிக்கெட்டும்,—காயந்திரியுமளவு முளதாய்-ஆன்ம தேகத்துடனே கூடித்திரியுமளவுமுண்டாய்,—பின்பு காயஞ்சேராதவகைதானுந் தேயுமன்றே - பின்பு ஒரு தேகம்வந்து கூடாதபடி இந்தத் தேகத்துடனே மாய்ந்து போகாநிற்கும்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், கக-சூ,சு-வெ, "பொன்வாண்முன் சொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத், தன்வாளே யெங்குமாந் தன்மைபோல்—முன்வாண், மலத்தின் மறைந்துள்ள 'மற்றுலகை யுண்ணு, மலந்திரித்துச் செல்லும் வரத்து." என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, அநாதியிலே இவனோடு கூடிநிற்கிற சிவனும் இவனுடைய மலசம்பந்தத்தாலே இவனுக்குப் பிரகாசியாது நின்ற முறைமையும் பின்பு மலநீங்கினவிடத்து சடக்கெனச் சிவம் பிரகாசிக்கு மென்கிற முறைமையினையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தவாறே - மேற்கூறிய மெஞ்ஞானத்தைப் பெற்றவழியும்,—சிவம் பிரகாசிக்கும் - அதனாற் சிவம் பிரகாசித்தவழியும்,—இங்கெசீவன் முத்தராகும்-சீவன்முத்தராயும் வழிமுறையே,—தேற்றின் வருபரல் சேர்நீர் மருவு கலங்கலும் - தேற்றான் மரத்தனாகிய விரையினாற்றேற்றப்பட்ட நீரினிடத்துப் பொருந்திய கலங்கன் மண்ணினைக் கீழ்ப்படுத்தியதுதோன்றுமாற் றனேதெளிந்து மேற்பட்டு நின்றாற்போலப் பரஞானஞ்சேரப்பெற்றார் மாட்டு மாய்ந்து கிடக்கு மலசத்தி யொருகாரணத்தால் மேற்படினு மொட்டின்றி யங்ஙனம் விண்டொழிதலும்,—ஒள்ளொளியி னொளிமுன்னிருளும் - மிக்கவக்கினிப் பிரகாசத்திற்கு முன்னிருளைக்கொண்டைக்குச் சிறிதாயினு மியையின்றிச் செய்மைச்சணுள்ளதுபோல சிவம்பிரகாசித்தார் மாட்டு ஒருவாற்றானு மியைபின்றியும்,— அவுடதத் தாற்றடுப்புண்டவிடமும் - அங்கிலையின் மெலிவுபார்த்திருத்தலும்போலாமாகலின்.—உரியமலமாயாதே தன்சத்திமாய்ந்து கா

யக்திரியுமளவு முளதாய்,—ஆணவமலந் தனதுசத்திகெட்டு வா
தனை மாத்திரையாய் அவ்வுடம்புள்ள அளவுநின்று,—பின்புகா
யஞ்சேராத வகைதானுந தேயுமன்றே-மற்றொரு பிறவிக் கேது
வாதலின்றி யதனோடு கூடும்.

இதனானே யாணவமலம் பற்றறக்கழியுமாறு கூறப்பட்
டது

## மறைஞானதேசிகர் உரை.

மேலு மவனந்த வாணவமலம் முத்தியிற்
கெடுமோயி ஞனமாவும் நாசமடையு
மென்ன மறுத் துணர்த்துகிறார்.

ஆணவந்தா னநாதியந்த மடையா தாகு மடையி
னந்த வான்மாவு மழியுமெனிற்செம்பிற், காணலுறு பு
களிம்பிரத குளிகைபரிசிக்கக் கழியுஞ்செம் புரு நிற்க
க் கண்டோமன்றே, தானுவின்றன் கழலிணையத் தவி
ருமலந்தவிர்ந்தாற் றன்சுத்த ஞயிருக்கை முத்தியரன்
றூளைப், பூணவேண் டுவதொன்று மில்லையெனினருக்க
ன் புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம்போ
மே. (ரு)

(இ-ள்.) ஆணவந் தானநாதி யந்த மடை யாதாகும் — ஆணவமாகிற பாச மநாதியானகையா லது தற்குத்தோற்றமு நாசமு மடையாது.

அடையி னந்த வானமாவு மழியு மெனில் — நித்தியமாயிருக்கு மதுதழிந்சக்கா லந்த வான்மாவுமழியுமென்று நீசொல்லில்? அதுவன்று.

செப்பிர்காண
ஹறுங் களிம்பிர
த குளிகைபரிசிக்
கக் கழியும்

செம்பினிடத்தி லெல்லாராலுங் காணப்
பட்ட காளிதமானது சகசமாயிருக்கவு மிர
தகுளிகையானது பரிசித்தவுடனே அக்கா
ளிதமானது போகக் கண்டோமே!

செப்புரு நிர்க
க்கண்டோம்

அப்போது அந்தச் செம்பழிய வேண்டா
அந்தச் செம்பினது ஸ்வரூபங் குறையக்க
ணடிலம்.

அன்றோ

அப்படியாமே.

தாளுவின்றன
கழலிணையத் தவி
ருமலம்

அதுபோலச் சிவனது சீர்பாத கமலத்
தை யடைந்த காலத்து மலநீங்கு மானமா
வு நாசமின்றி நிற்குங்காண். அஃதொக்கும்.

தவிர்நகார்ரு
ன் சுததனாயிருக்
கைமுத்தி

அந்த வான்மாவுக்கு அநாதி சமவாய ச
ம்பந்தமாய்க் கூடியிருந்தமல நீங்கினவிடத்
தந்த வானமாச் சுத்தனுவன் றனே! பிரதா
னனாயிருக்கும் அதுவேமுத்தி.

அரன்றாளைப்
பூணவேண்டுவ
தொனறுமில்
லையெனில்

இவனுஞ் சுத்தனுமாய்ப் பிரதானனுமாயி
ருக்கையாலே யிவனுக்குச் சிவனது சீர்பாதத்
தைக் கூடிநிற்க வேண்டுவதோர் டணியுமில்லை
யென்று சொல்லில்?

அருக்கன புகு
தவிருள்போம்

ஆதித்தப் பிரகாச முண்டானவிடத் தெ
ப்படி யந்தகாரம்போம், அதுபோல

அடியிற் பொரு
ந்த மலம்போமே.

இந்த வான்மாவும் பிரதானனா யிருந்
தால் முத்தி யடையப்படா னதலா லிவ
னுக்கு சிவனது சீர்பாதத்தைச் சார்ந்து நி
ற்கி லல்லது மலநீங்காது. எ-று.

இது பல எழுவாயும் பல பயனிலையும்.

இதற்குக் கிரணமும் ரௌரவமும் எனவறிக. (ரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பூர்வ சைவர் ஆணவ மான்மாவுக்கு அநாதி சையோகமாகையாற் கெடாதெனகை கெடுமுறைமை கூறுகின்றது

ஆணவந்தானுதிபந்த மடையாதாகு மடையிலந்தவான்மாவு மழியுமெனவில்-ஆணவமலமானது ஆன்மாவுக்கு அநாதி சையோகமாதலா லாணவங்கெடாது. கெடில்அம் மலத்தைச் சகசமாயுடைய ஆன்மாவுங் கெடுமென்னில்? அப்படியல்ல,—செம்பிற் காணலுறுங்களிம் பிரதகுளிகைபரிசிக்கக கழியுஞ்செம்புருநிற்கக் கண்டோமன்றே-செம்புக்குச் சகசமாய்க் காணப்பட்ட களிம்பான இரத குளிகையிற் பரிசத்தினாலே நீங்கிச் செம்புருவு பொன்னுருவாய் நிற்கக் கண்டோமே! அனறெனகிளவியாமெனத்தகுமே. ஆதலா லநாதிசம்பந்தமாகிய ஆணவமலம் நீங்கி யான்மா சிவனுடனே வேறறச் சுத்தனாய் நிற்பன். இதற்குச் சிவசமவாதி சொல்லும் வசனத்தை யனுவதித்து நிராகரித்தல்,—தாணுவினறன் சமூலணையத் தவிருமலந் தவிர்ந்தாற் முனசுத்தனா யிருக்கை முத்தியான்முளைப் பூணவேண்டுவ தொன்றுமில்லை யெனில்-சிவன் பூரணனாகையினாலே சலனமில்லை, சலனமின்று யிருக்கயினாலே தாணுவெனறு சொல்லப்பட்டது. தாணுவாகிய சிவனுடையசத்தி யான்மாவிலேபதிய மலமானது நீக்கும் நீங்கவே யான்மா நின்மலனாகிச் சிவனுக்குச்சமனாகவே யிருப்பதேமுத்தி. சிவனுடனே யிரண்டறச் கலந்துநிற்கவேணுமென்பதொன்றில்லை யென்னில்? உம்மைவினைமுற்று,—அருக்கன்புதக விருள்போ மடியிற் பொருந்தமலம் போமே - ஆதித்திய கிரணமுங் கண்ணொளியுங் கலந்தபோது கண்ணின் மறைப்புப் போம், சிவனுட னிரண்டறக் கலந்தபோ தாணவ நீங்கும் அல்லது நீங்காதென் றிதன்பொருள்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மலத்திற்கு ஆவிர்த்தி நிவிர்த்தித் திரிபுவருமாகி லான்மாவுக்கு மந்தவிகாரம் வருமென றறைப்மறுத் துணர்த்து கின்றார்

பாட்டின் முற்பாதி வெளிப்பொருள். அப்படியானவ மல மாவிர்த்தி நிவிர்த்தி ஸ்வபாவ லக்ஷணமாய்க் கெடாது நீங்கு மாகில்,— தானுவினறன கழலிணையத் தவிருமலம் - முத்தி கிர்த்திய தீக்ஷா கனமத்தில் விளங்கிச் சாக்ஷாத் தீக்ஷா நாமந்தரித்த சிவக்கிரியாசத்தி சங்கற்ப சம்பந்தியாக மலம் அப்படி நீங்கும்.— தவிர்ந்தால் - நீங்கினால்,—தானே சுத்தனா யிருக்கை முத்தி - தான நின்மலனாய் நிற்றல் மாத்திரமே மோக்ஷம்.—அரனருளைப் பூணவேண்டுவ தொன்று மில்லை யெனில் - திரும்ப அந்தத் தீக்ஷா லக்ஷண சிவசத்தி சங்கற்ப சம்பந்தஞ் சாரவேண்டுவதில்லை யென்று மலம்போமுத்தி வாதியாயிருந்து நீ சொல்லில்? மலமுத்திமாத்திர முத்தியன்று மலசிவத்துவங்களினது முத்தி வியத்தியிரண்டு மோக்ஷமென்று முந்தினோரு சொல்லுதலால்,—அருக்கன புகுத விருள்போம்-அப்படி,—அடியிற்பொருந்த மலம் போமே - வியத்தி கிர்த்திய தீக்ஷா கனமத்தில் விளங்கிய சிவக்கிரியாசத்தி சங்கற்பத்திற் சம்பந்திக்க முன்சொல்லிய முத்திகிர்த்திய தீக்ஷாகனமத்தில் விளங்கிய சிவக்கிரியா சத்திசங்கற்ப சம்பந்தத்தால்,—மலம் போயும் மகாமாயையில் மலம்வைத்த மலவாசனை சிவத்துவ தம்பனம் பண்ணிக்கொண்டு மாறுதிருக்கு மந்தமலவாசனை மகாமாயையி லயமாந்தானே.

நன்றி துவாகிலு மிதிறுனு முத்திபே சொல்லப்பட்டது, வியத்தி விளங்கச்சொல்லப்பட்டதில்லை. சத்தியமே சாற்றியது. மலவாசனுமுத்தி கிர்த்தியமே செவ்வரத்தம்பூச் சிவப்

புபாதியுற்ற படிகவெண்மை விளக்கம்போல, மல வாசனோபாதியுற்றுத் திரியின்றியிருந்தபடி யிருக்குஞ் சிவத்துவாபி வியத்தியை வியஞ்சகந் திரும்ப விரும்பாமல் விகிர்தி விட்டிருந்தபடி இருத்துஞ் சிவத்துவாபி வியத்தி கிர்த்தியம் விகாரம் வருமாதலால் வேறொன்றன்று.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—— o ——

இரதகுளிகை பரிசித்தமாத்திரையே செம்போடு சகசமாய் நின்ற களிம்பு நீங்கச் செய்புந வேறுநிற்றல் கண்டாமாகலின, அதுபோல மெய்ஞ்ஞானஞ் சார்ந்தமாத்திரையே உயிர் வேறாய்நிற்ப உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்குமென்றற்கோ ரிழுக்கின்மையான், முத்தியினுஞ் சகசமல நீங்குமாறில்லை யென்னும் பாடாணவாத சைவர் மதமும், அருக்கனொளி மேவினும் அருக்கனொடு கண்ணொளி கலந்தாலன்றி இருள் பற்றறக் கழியாதவாறுபோல மெய்ஞ்ஞானஞ் சேரினுஞ் சிவம் பிரகாசித்துத் திருவடியை உயிர் பொருந்தினாலன்றி ஆணவ மலம் பற்றறக் கழியுமாறின்மையின், மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தமாத்திரையே மலநீங்கப் பெறும், அதுவே முத்தி யாதலமையும், அதனமேலுந் திருவடியைக் கலத்தல் வேண்டா வென்னும் பேதவாத சைவர்மதமும் அடாவென்பதாம்.

இதனானே தடைவிடைகளான மேலது சாதிக்கப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—— ○ ——

இப்படி ஆணவமலம் முத்தியிற் கெடுமென்றதெப்படி யென்ற பேதவாதி மதமே லருளிச்செய்கிறார்.

ஆணவந்தா னாதி யந்த மடையாதாகும் - ஆணவமலமானது அநாதியே ஆன்மாவுள்ளவன்றே யுள்ளதாகையாலே அதற்கு நாசமுண்டாகாதென்று சொல்லில்? மலநாசமானா லொழிந்த ஞானமுண்டாகாது தானென்னில்?— அடையிலந்த ஆன்மாவு மழியுமெனில் - ஆணவமல மழியுமாகில் அநாதியான வான்மாவும் அழிய வேணும் என்கிறாயாகில்? ஆன்மாவுக் கழிவுண்டாகாது? பாசத்துக் கழிவுண்டு. அதெப்போலவென்னில்?— செம்பிற் காணுறுங் களிம்பிரத குளிகைபரிசிக்கக் கழியுஞ்செம்புருநிற்கக் கண்டோமன்றே-அநாதியே செம்பிலே பொருந்திநிற்கிற காளிதமானது இரத குளிகையினது சம்பவத்தாலே கழிந்துபோயும் செம்பினது சொரூப மழியாமல் நிற்கக் கண்டோமாகையால் ஆன்மாவு மழியுமென்கிறது கருத்தன்று. முத்தியிற் பாசமழியுமென்ற பேதவாதி மதம் மேலருளிச்செய்கிறார்.—தாணுவினறன் கழலிணையைத் தவிருமலம் - பரமேசுரனுடைய ஸ்ரீபாதத்தைச் சேரவே அப்பொழுதே மலம்போம்.—தவிர்ந்தாற் றன்சுத்த னாயிருக்கை முத்தி-அந்த மலப்போனால் ஆன்மா சுத்தனாயிருக்கிறதே மோட்சம்,—அரன்றனைப் பூணவேண்டுவதொன்று மில்லை எனில் - அதனைப் பெற்றபின்பு பரமேசுரன் ஸ்ரீபாதத்தைச் சற்றும் பொருந்தவேண்டுவதில்லையென்று நீர்சொல்லில் அதுகருத்தன்று. அதுவெப்படியென்னில்?— அருக்கன் புகுத விருட்போமடியிற் பொருந்த மலம்போமே- ஆதித்தன் வேற்ற வந்தகாரம் போனாற்போல அவனுடைய ஸ்ரீபாதத்தைப் பொருந்தினா லொழிந்து மலம் விட்டுப்போகாது.

முத்தியில் மலமழியாதென்றது பேதவாதி நிராகரணம் இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் "மறைக ளாகமந் துறைகண்மற் றெவையு - நாசமில் பதிபசு பாசமென் றுரைக்க-வுடர்ந்தோர் குளிகைச் சயத்தாற் றுயிரக் - காளித நாசம் பாசத் தெய்தல்-கூடாது" எனுமதுங் கண்டுகொள்க. முத்தியில் மலமழியு மெனறவன பேதவாதி இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். "ஈசனதருளாற் பாசத்தொருதி-செறவுறுசெம்பிற்களையறு களிப்பு குளிகை தாக்க வொளிபெற் றுங்கு-நித்தசுத்த முத்தனாக - வைத்தனருலகின் மறைவல்லோரே." என்றுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பாச மழியாதென்றும் அழியுமெனறுஞ் சொன்ன சமயிகளை வகுத்து முத்தியிற் பாசத்தின சத்திக ளொழியுமொழிந்து நித்திய மழியாதென்றும், சத்திகளழியுமிடத்தும் ஆதித்தன சன்னதியி லந்தகாரம் போனுற்போல் சிவனுடைய சீபாதத்தைப் பொருந்தி வேறற நின்று மலம் போமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.



ஆணவந்தா னநாதிடந்தமடையாதசகும்-முற்கூறப்பட்ட ஆணவமலம் அநாதி நித்தமாதலா னசமடைவதின்று,—அடையிலங்க ஆன்மாவு மழியுமெனவின்-நாசமுறுமெனி லான்மாவு மழியுமெனப்பட்டு நித்தமாதற் சிழுக்காய் முடியுமெனி னற்றன்று.—இரதகுளிகை பரிசிக்க-இரதகுளிகை பரிசித்த மாத்திரையே,—செம்பிற்காணுறுங் களிப்பு கழியும் - செம்பொடு சகசமாய் நின்றகளிம்பு நீங்க,—செம்புநிற்கக் கண்டோமன்றே - செம்பு வேறுநிற்றல் கண்டோமாகலினதுபோல,—தானுமின

றன்கழ லிணைய மலந்தவிரும் - மெய்ஞ்ஞானஞ் சார்ந்தமாத்தி ரையே யுயிர்வேறுப்நிற்ப வுயிரோடு சகசமாய்நின்ற ஆணவமல நசிக்கும்,—தவிர்ந்தாற் றன்சுத்தனுயிருக்கை முத்தி - நசித்த வழி யுயிர்வேறாய்நிற்றற் கோரிழுக்கின்மையான் முத்திநிலையினு ஞ் சகசமல நீங்குமா றில்லையென்னும் பாடாணவாத சைவர்ம தமும்,—அருக்கன புகுதவிருள்போம்-அருக்கனொளி மேவினும் அருக்கனொடு கண்ணொளி கலந்தாலன்றி யிருள் பற்றறக்கழிபா தவாறுபோல,—அடியிற்பொருந்த மலம்போமே-மெய்ஞ்ஞான ஞ்சேரினும் சிவம்பிரகாசித்துத் திருவடிசை யுயிர்பொருந்தினா லன்றி யாணவமலம் பற்றறக் கழியுமாறின்மையின,—அரன்று ளைப் பூணவேண்டுவ தொன்றுமில்லையெனில் - மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலநீங்கப் பெறுமதுவே முத்தியாதல மையும், அதன்மேலும் திருவடியைக் கலத்தல் வேண்டா வெ ன்னும் பேதவாத சைவர்மதமும் அடாவென்பதாம்.

இதனானே தடைவிடைகளான் மேலது சாதிக்கப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.

அந்த வாணவமும் முத்தான்மாக்களைப் பொருந்
தாமற் பெத்தான்மாக்களைப் பொருந்தி நிற்கு
மென் றுணர்த்துகிறார்

நெல்லினுக்குத் தவிடுமிக வனாதியாயு நெல்லை விட்டு நீங்கியவைநின்றநிலை நிகழ்த்திர், சொல்லிப்பிடிற் றுகளற்ற வரிசியின்பாலில்லை தொக்கிருந்து மற்றொ ருநெற் றோற்றிடாவா, மெல்லவிவை விடுமறவே யி வைபோலவனுவை மேவும்மல முடல்கன்ம மநாதிவிட்

டேநீங்கு, நல்லசிவ முத்தியின்கட் பெத்தான்மாவை
நணுகிநிற்கு மாதலின் றைசமுமின்றமே. (சு)

(இ-ள்.) நெல்லினுக்குத்தவிடுமிகளநாதியாயு நெல்லைவிட்டு நீங்கிடவை நின்றநிலை நிகழ்த்தீர் — நெல்லுக்குத் தவிடுமியு மநாதியாயிருக்கவு மந்த நெல்லைவிட்டு அவைகள் நிற்குமுறைமையினை யெனக்குச் சொல்லவேணுமென்கிறாயாகில்

சொல்லியிடிற்றுகளற்ற வரிசியின்பாலில்லை — நீயவற்றை யிப்படிச் சொல்லுவையாகில் அவ்வுமியுந் தவிடும் போசத தீட்டின அரிசியின்கணில்லை.

தொக்கிருந்து மற்றொரு நெற்றோற்றிடாவாம் — அதனாலவையிரண்டுடன்கூடி யிருந்தும் வேறேபொருநெல்லைச் சென்று பொருந்த மாட்டாது.

மெல்லவிவை விடுமறவே — இவையிரண்டு மநாதியாயிருக்க வோரவதரத்தின்மேலதனை விட்டுப்போகாநிற்கும்.

இவைபோல — இந்த முறைமைபோல

அணுவைமேவும் — சுத்தாணமாவைப் பொருந்தி நிற்கும்

மலமுடல்கன்ம மநாதிவிட்டுநீங்கும் — மலமாயா கன்மங்களினுடைய அநாதித்துவ மோரவதரத்திலே விட்டு நீங்கா நிற்கும். அதுக் கவதரம் யாதென்னில்?

நல்லசிவ முத்தியின்கண் — அந்தச் சுத்தான்மாக்கள் நன்றான சிவத்துடன்கூடி முத்தியைப் பொருந்தினவிடத்துப் போங்காண்.

பெத்தான்மா மற்றப் பெத்தான்மாக்களை யெப்பொழு
வை நணுகிநிற்கு தும் பொருந்திநிற்கும்.
ம்

ஆதலினூ ஞச ஆகையால் முத்தான்மாக்களிடத்து மல
மூமின்றுமே. மில்லை மற்றப் பெத்தான்மாக்களைக் குறித்
துக் காண்க. எ-று.

'தொக்கிருந்து மற்றொருநெற் றோற்றிடாவாம்' என்பதற்
குத் தீட்டின வரிசியுடனே தவிடுமுமியுங் கூடியிருந்தாலு மந்த
வரிசியை வாதித்து மற்றொரு நெல்லாக மாட்டாது எனபவும்
பெறும்.

உமி தவிடுபோன வரிசி சுபா வமாயிருக்குமோ வேறே
பெறு மொரு சனமாந்தரத்தை யடையுமோ வெனில் சன
மாந்தரத்தை யடையாது தன்மேலத்துவமு நாசமுமாகாது ப
ரிணாமமு மடையாது. இப்படி யான்மாவுக்குச் சுதந்தரமான
சொரூப மடையு மென்பது கருத்தென வறிக.

இதற்குப் பெரிய கிரணாகமம், சுப்பிரபேதத்து மறிக.(௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேலு மான்மாவுக் கநாதி சம்பந்தமாகிய ஆணவாதி பா
சம் நீங்கு முறைமையும் அது நித்தமுங் கெடாமுறைமையுங் கூ
றுகின்றார்.

அணுவையநாதி மேவுமல முடஙகன்ம மநாதிவிட்டே நீங்கு
ம் - ஆன்மாவை யநாதியே பொருந்திநிற்கும் ஆணவமலமுந் தே
காதிக்குக் காரணமாகிய மாயையுங் கன்மமு நன்மையாகிய சி
வானந்தத்தைப் பெறுமுத்தியிலே கத்தந் தொழிலைவிட்டு நீங்
கும். அநாதியான தந்தமில்லை மூன்று பொருளு நித்தியமெ

ன்று சொல்லுகையால். இவ்விடத்துப் பாசங் கெடுமென்றதெ வ்வாறெனனில்? பாசம் நித்தங் கெடாதென்பதற்கு,—பெத் தான்மாவை நணுகிநிற்குமாதலின்றுஞ் சமுமின்றமே - முத்த ரைவிட்டு நீங்கியும் பெத்தான்மாகக ளிடங்களிலே பொருந்தியு நிற்கையாற் பாசத்துக்கு நாசமில்லை. அநாதி சையோகத்து க்கு + வியோகமில்லை யென்பது கூடாது. அதெவ்வா றென் னில்?—நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதியாயே நெல்லைவிட்டுநீ ங்கும்வகை நினறநிலை நிகழ்த்தீர் - அநாதி சம்யோகத்திற்கு வியோகமில்லை யென்கிற புத்திமான்களே நெல்லுக்குத தவிடு மியும் அநாதி சம்யோகமாயிருந்து நெல்லைவிட்டுநீங்கின வகை யும் அவை நீங்க வரிசி, மூக்கற்று நின்ற நிலையையுஞ் சொல்லி க் காணீர்.—சொல்லிபிடிற் றுகளற்ற வரிசியினபாலில்லை மெல் லவ்வைவிடுமறவே - சொல்லுமிடத்திற் றுகளற்ற வரிசியினிட த்திலே உமியுந் தவிடுமில்லை, உமியுந் தவிடும் நீங்குவோரால் க் ரமத்திலே நீங்கும்,—தொக்கிருந்து மற்றொருநெற் றோற்றிட வாம் - இவைபோல் அந்தத் தோலாகிய உமி துகளற்ற அரி சி யுடனே கூடியிருந்தாலு மந்த வரிசி பின்னை யொருநெல்லா காது. இதுபோல பாசததை நீங்கின ஆன்மா விபுவாகையால் பாசத்திற்கு மான்மாவிற்கு மோரிடத்தாயினு முனபுபோல் மு த்தான்மா பசுவாகானென றிதனபொருள்.

+ வியோகம் பிரிவு.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அநாதி பாச பந்த மகலுமா றெப்படி யென்ன வுத்தர மு ரைக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அரியோடுஞ் சகசமாய் நின்ற முளைதவிடுமிகள் கெட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம், அவ்வரிசி முனைபோல வேறொரு நெல்லுத் தோன்றுதற்குக் காரணமாதல் செல்லாமையான் அவை யவ்வரிசியின்க ணடங்கி நிற்குமென்றற்கு ஓரியையின்மையின், அவை ஆண்டில்லையென்பதே தேற்றம். அவைபோல அநாதியே யுயிர்களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் முத்திநிலைக்கண் விண்டொழியுமென்றே கொள்க. ஆண்டு விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப்பொருளாதற்கும் இழுக்கில்லை யென்பதாம்.

இத்தைவிளைவித்தன் மலமென்பதூஉ மறிக.

மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் பற்றறகெடுமெனபாரையும் ஈண்டு மறுப்பார், மெல்ல வினை விடுமறவே யென்றுங் கூறினார்.

ஏகாரந தேற்றம்.

இனம்பற்றியும் உவமேயம்பற்றியும் முளையுமுடன்வைத் துரைக்கப்பட்டது.

இதனானே இரதகுளிகை பரிசித்த செம்பினுங் களிம்பு தொக்கிருக்குமெனக் கோடுமென்பாரை நோக்கித் தொக்கிருதல் செல்லாமை அநுபலத்தியேதுவின் வைத்துணர்த்தற்பொருட்டு, வேறுமோ ருவமைகூறுமுகத்தான் அம்மூன்றுமொருங்கேவலியுறுத்தப்பட்டன.

இவைஐந்துசெய்யுளும் மேலைச்சூத்திரத்தின் அகலுங்குற்றமென்ற இறுதிக்கூற்றினொழிபாய் இயைபுபற்றி யீண்டு வைக்கப்பட்டன.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

அநாதியாயிருக்கிற பாசங்கள் நீங்குமென்ற தெப்படியென்ற சமவாதிகளை நோக்கி நெல்லுக்குண்டான தவிடுமியு மநாதியா யிருக்கவு நீங்குகிற முறைமைபோலவென றருளிச்செய்கிறார்.

நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதியாயே நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலைநிகழ்த்தீர் - நெல்லுக்குண்டான தவிடுமியு மநாதியாயிருக்க அந்த நெல்லைவிட்டுப் போமபடியும் அதனிடத்திலே நிற்குமெனகிற முறைமையையும் எனக்குச் சொல்லவேணும்,—சொல்லியிடுற துகளற்றவரிசியினபாலில்லை - அதுவெனக்குச் சொல்லுமிடத்துச் சுத்தமான வரிசியிற் றவிடுமியு முண்டாகாது. அந்த வரிசியிலே உமியுந் தவிடுமிரண்டுமிவ்வுங்கூடிக் கிடந்தாலும் பொருந்துமோ வெனனில்?—தொக்கிருந்து மற்றொருநெற் றோற்றிடாவாம் - இவை யிரண்டுங் கூடியிருந்தும துகளற்ற வரிசி வேறொரு நெல்லுண்டாகைக் கங்குரியாது.—மெல்லவினை விடுமறவே - இவை யிரண்டு மநாதியா யிருக்கச் சேஷாவதாரத்திலே பெத்தன நேராக வில்லைபாய்ப் போகாநிற்கும் —அவைபோல அணுவைமேவு மலமுடலகன்ம மநாதிவிட்டேநீங்கும் - அந்த தவிடுமியு மோரவதாரத்திலே நீங்கின முறைமைபோல ஆனமாவைப் பொருந்தி நிற்கிற மலமாயாதி கன்மங்க ளிவனுடைய வநாதித்தத்துவ மொருகாலத்திலே விட்டு நீங்காநிற்கும். அதுக் குவகாரமேதென்னில்?—நல்லசிவ முத்தியினகண்-பொல்லாத வசத்தியத்தை யசத்தியமென றறிந்துநீங்கி நன்றான சத்தியத்தைச் சத்தியமென் றறிந்து சிவத்துடனிரண்டறக் கூடுகிற மோக்ஷத்தி லில்லையாம். அழிபாதென றதெப்படி யெனனில்?—பெத்தான்மாவை யணுகிநிற்கும்-இரிய

தார்த்த நிர்ணயத்தை யறிந்து மலத்தை நீங்காமல் மலசம்ப
ந்திகளாயிருக்கிற பெத்தான்மாக்களைப் பொருந்திநிற்கும்.— ஆ
தலினால் நாசமுமின்றாமே-ஆதலினால் முத்தான்மாக்களிடத்
து மலமில்லையாய்ப் பெத்தான்மாக்களிடத்து நிற்கையால் இந்
தமலங்கள் கெடுவதுமில்லை.

இதனாற் சொல்லியது, நெல்லுக்குத் தவிடுமியு மநாதியா
யிருந்தும் ஒரவதரத்திலே நீங்குந் தன்மைபோல ஆன்மாக்களு
க்கு மலமாயாதி கன்ம மநாதியாயிருந்து மோக்ஷத்தைப் பெற்
ற முத்தான்மாக்களிடத்து இல்லையா யிருக்குமென்றும் பெத்
தான்மாக்களைப் பொருந்தி நிற்கையால் நித்த தத்துவ மழியா
தென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

நெல்லினுக்குத் தவிடுமிக னநாதியாயே நெல்லைவிட்டு நீங்
கும்வகை நிலைநின்று நிகழ்ந்திர் - அரிசியொடு சகசமாய் நிறை
முளை தவிடுமிகள் கெட்டொழிய வரிசி கேடின்றி நிலைபெறுதல்
கண்டாம்,—தொகக்கிருந்த மற்றொரு நெற் றோன்றிடாவாம் -
அவ்வரிசி முன்போல வேறொரு நெறறோன்றுதற்குக் காரணமா
தல் செல்லாமையான,—சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின் பா
லில்லை மெல்லவிவையறவே விடுமவைபோல-அவைசொல்லுமி
டத்துக் குற்றமற்ற அரிசியின்கண் டங்கி நிற்குமெனறற் கோரி
யையின்மையின அவையாண்டில்லை யெனபதே தேற்றம். அவை
போல, அநாதியணுவை யேவுமல முடல்கன்ம நல்லசிவ முத்தியி
னகண் விட்டே நீங்கும். அநாதியே யுயிர்களோடு சகசமாய் நி
றை மலமாயை கன்மங்களாகிய மும்மலங்களு முத்திநிலைக்கண்
விண்டொழியு மெனறே கொள்க,—பெத்தான்மாவை நணுகி

நிற்குமாதலி னொருசமுநின்றமே,—ஆண்டு வின் டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலா லவைநித்தப் பொருளாதற் கிழுக்கில்லையென்பதாம்.

இதனானே இரசகுளிகை பரிசித்த செம்பினும் களிம்புதொக்கிருக்குமெனக் கோடுமென்பாரை நோக்கித் தொக்கிருத்தல் செல்லாமை யநுபவத்திபேதுவின் வைத்துணர்த்தற் பொருட்டு வேறு மோருவமை கூறுமுகத்தா னம்மூன்று மொருங்கே வலியுறுத்தப் பட்டன.

இவைஐந்து செய்யுளுமேலைச்சூத்திரத்தின் 'அகலுங் குற்றம்' என்ற விறுதிக்கூற்றி னொழிபா யீண்டு வைக்கப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலிந்தச் சுத்தான்மாக்கள் சிவனது திருவடியைக் கூடிநிற்கு முறைமை யெப்படியென்ற ஐக்கியவாதியைக் குறித்துச் சீவர் சிவனுடைய வைக்கிய மிதென் றுணர்த்துகின்றார்.

எவ்விடத்து மிறையடியை யின்றியமைந்தொன் றையமிந் தியற்றிடா வுயிர்க ளீசன்றானுஞ், செவ்வி தினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்துநிற்ப, னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றா திவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாநிற்கு, மவ்வுயிர்போ னின் றிடுவ னாதலானு மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே. (எ)

(இ-ள்.) எவ்விட உயிர்க ளிறையடியையின்றி யெவ்விடத்து மிறை னுமைந் தொன்றையுமிந் தியற்றிடாவெ

யடியை யின்றியமைந் தொனையறிந் தியற்றிடா வுயிர்கள்

னைப் பதமாற்றுக. ஆன்மாக்கள் சிவனது பிரேரகமின்றி யெல்லாவிடத்து மொன்றைப் பொருந்தி யறியவுஞ் செய்யவு மாட்டார்கள்.

ஈசன் றானுஞ் செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலாமுணர்ந்து

சிவனுஞ் சராசராத்மிகமாகிய ஆன்மாக்கடோறும் வ்யாபித்து நின் றவர்கள்செய்த புண்ணியபாவங்களை யுள்ளவாறுணர்ந்து

சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்

அவர்களவர்கள் செய்த கன்மத்துக்கீடாகச் செயற்படுத்திச் சர்வ வியாபியாய்ப் பிறிவின்றி நிற்பன்.

இவ்வுயிர்கடோற்றும்போதவனையின்றித்தோற்று

இந்த வான்மாக்கள் செய்த கன்மத்துக்கீடான வுடலை யெடுக்கும்பொழுது அவனது பிரேரகமின்றித் தோற்றமாட்டாதாதலா லவனாலே தானே சீவிக்கும். இவனொருவனாயிருந்து சர்வ ஆன்மாக்களிடத்தும் வ்யாபித்துநிற்கு மஃதென்போல வென்னில்?

இவற்றினுக் கம்முத லெழுத்துக் கெல்லாநிற்கு மவ் வுயிர்போனின றிடுவன்

சிவனு மான்மாவுங் கலந்துநிற்கு மதனையறியில், "மெய்யினியக்க மகரமொடு சிவணு-மெய்யொடியையினு முயிரிறிரியா" எனனு மிலக்கணத்தகான மெய்யெழுத் தானது தானே நடவாம லுயிரெழுத்தைப் பொருந்தியே நடந்ததாயி னப்பொழுது தன்னிலைமை திரியாதவாறுபோல, இந்த வான்மாக்களு மெல்லாத்துக்கும் பிராண நாயகனுகிய சிவனுடனகலந்து நின்று சீவியாநிற்கும்.

ஆதலானு மா, இத்தன்மையை யுடைய ஞானையினுலே னடியை யகன்று யா மவனுடைய திருவடியைவிட்டு நீங்கிநிற் நிற்பதெங்கேயா ப தோரிடமு மில்லைகாண். எ-று.
மே.

'ஒருநாழியப்பு மொருநாழியுப்பு, மிருநாழி யிந்த விருநாழி—யொருநாழி, யாமளவினீரு ளடங்கியிடு முப்புப்போ, லா முடனு மாவியடைந்து' என்று மொமதுருரவர்.

இதனை விரிக்கிற் பெருகும்.

இதற்குப் பெரிய கிரஞகமம். (எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

முத்தியிலே ஆன்மா சிவனைப்போலே யிருப்பதன்றி சிவனை வேறறக் கலந்து நிர்ப்பனென்பதை வேண்டா வெனலும் அஞ்ஞானியுடைய மூர்த்தாவிலே ‡ அசனிபாதமாக வெக்காலதனுஞ் சிவனைப் பிரிந்து நிர்க்குமுறைமை கூடாதென்பது கூறுகின்றது.

உயிர்க ளெவ்விடத்து மிறையடியையின்றி யமைந்தொன்றை யறிந்தியற்றிடா - ஆன்மாக்கள் தூலசூக்கும தேகங்களிலு மிந்திரியங்களிலுஞ் சிவனையன்றி யொன்றை யறி பவு மொருகிரியையைப் பண்ணவு மறியார்கள்.— ஈசன்றானுஞ் செவ்வியினிறைம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன் - இந்தப்பரமேஸ்வரனும் நேரே யான்மாக்களிடத்திலே பொருந்திநின் றவர்க ளவர்கள் பண்ணுங் கன்மங்களெல்லா மறிந் தந்தக் கன்மங்களுக் கீடாக வான்மாக்களை பிரவிருத்திபண்ணுவித் தெவவிடத்தும் பிரிவறக்கூடிநிற்பன்,— இவ்வுயிர்கடோற்றும்போ தவனையின்றித் தோற்று-

இவ்வான்மாக்கள் ஞானக்கிரியைக ளாணவத்தினாலே மறைந்து நின்று பிரகாசிக்கும்போ தந்தச் சிவனேயன்றிப் பிரகாசியா து,—அம் முதலெழுத்துக்கெல்லாமுதலா நிற்கு மவ்வுயிர்போ லிவற்றினுக் குயிராய் நின்றிடுவ னாதலால் நாமரனடியை யகன் று நிற்பதெங்கேயாமே-முதலெழுத்தாகிய அகார மெல்லா வெ ழுத்துக்கு முயிராய்நிறை வந்தவுயிரெழுத்துபோல ஆன்மாக்க ளுக்கெல்லாஞ் சிவ னுயிராகப்பொருந்தி நிற்பன், ஆகலானுஞ் சிவனைப் பிரிந்து தனித்துச் சிவனுக்குச் சமமாய நிற்போமெ ன்பதெவ்வாறு கூடும், கூடாதென றிதனபொருள்.

‡ அசனிபாதம்-இடிவிழுகை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

பெத்தான்மாக்களுக்கு சுவாதீனமே ஸ்வாதந்திரியமில்லை யென்று பேசுகின்றார.

முற்சுறியதிற் சிறிது கூட லோகப் பிரசித்திப் பொருளோதலால் வெளிப்பொருள்.

பெத்தான்மாவைக் குறித் துரைத்திருக்க விவ்விடத்துச் சிலர் முத்தான்மாவையுங் குறித் துரைத்ததென்று கொண்டு முத்தான்மாவுக்குச் சிவனோடொத்து வியாபித் தொருசிவசா தியாய் நிற்றலே சிவனோ டகலாமல் நிற்பனெனபதுங் கலப்பா ய் நிற்பதெனபதும் நாஞ்சொல்லுஞ் சுத்தாத்துவைத சிவசித் தாந்த மெனபதை யறியாமல் அரனடியையகன்று நிற்பதெங் கேயாமே எனபதற்குப் பிரிந்து நிற்பதென்று சொல்லுவார்க ளென் றெண்ணிக் கொண்டு விசிட்டாத்துவைதமாய் வேறறக் கலந்து நிற்பனென்று பரிகரித்தார்கள். அதுஅநாதிமுத்த சிவனு க்கு மான்வுக்குஞ் சமவியாபகத்துவ மிருக்கிற படியினாலே அப்

படிப் பிரிந்திருக்குமென்று சொல்லுவார்க ளில்லை, பிரியாதிருந் தாலும் அமூர்த்த வஸ்துவுக்குப் பரிசசலப் பென்பதில்லை.

ஸர்வவஸ்துஷ்வநுஸ்ஸூத மஸ்வயப்ஸர்வவஸ்தபி:
ஸர்வம்வ்யாப்பாவதிஷ்டேத நசஸம்யுஜ்யதேட்ரபு:

என்றுசிவாகம வசனமிருக்கையால் சிவசமவாதி சொல் லுஞ் சாமியத்துக்கு வேறாய் சித்தாந்தி சொல்லும் சிவாத்துவை த சிவசாமியம் சிவன சொன்னதாதலால் அதிற் சொல்லும் தூ ஷணம் சிவதூஷண மென்பதறியாமற் சிலர் சொன்னார்கள், அவர்க்குப் பிராயச்சித்தம் சிவனே பண்ணுவர்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஆன்மாவுக்கு அறிவுசெயல்கள் விளங்குதலும் விளங்கிய பி ன் விடயத்திற் சென்று பற்றுதலும் இறைவன் திருவடியையின் றி யமையமாட்டா. அதுபற்றி யிறைவனும், அக்கரங்களை யிய க்குதற் பொருட்டு அவற்றுடனிற்கும் அகரம்போல, அறிவுசெ யல்கள விளங்குதற்பொருட்டு உயிர்களோடுங் கலந்து நிற்பன். அங்ஙனம் விளங்கிய அறிவுசெயல்கள் பின் விடயத்திற் சென் று பற்றுதற்பொருட்டு அவ்வுயிர்களை யிட்டுத்துகொண்டு அ வை செல்லுமாறெல்லா மறிந்து செலுத்தி அவ்விடயங்களினு முடனாகக் கலந்து நிற்பனாகலான் ஆணவமலத்தினீங்கி வேறு நி ன்றவுயிர்கள் அதுபோல இறைவனைவிட்டுத் தனித்து நிற்றல் ஓரிடத்து மில்லையென்பதாம்.

எவ்விடத்தும் பெத்தமுத்தி யிரண்டினுமென்க.

— இதனுள் உயிர்களறிந் தியற்றிட வெனவும் இறைவனரு ளுஞ் செறிந்து நிற்பனெனவுங் கூறியது ஆன்மாவி னறிவுசெய

ல்கள் விடயித்தற்கட்படு மியல்பிற்கும், தோற்றும்போ தவனையின்றித் தோற்றுவெனவும் இறைவ னவ்வுயிர்போ லின்றிடுவனெனவுங் கூறியது அவை விளங்குதற்கட்படு மியல்பிற்குமெனக் கொள்க.

இவ்விருதிறத்துள் உயிரிற் கலந்துநின்று அறிவுசெயல்களை விலக்குதலே காட்டு முபகாரமெனவும், அவ்வுயிரை யதிட்டித்துக்கொண்டு சென்று விடயத்திற் கலந்து நிற்றலே காணுமுபகாரமெனவுங் கொள்க.

உயிர் ஒன்றனை விடயிக்கல் இறைவ னவ்விடயத்துமுடன் சென்று கலந்தாலன்றி உயிரிற்கலத்தன் மாத்திரையா லமையாதென்பது, கண்ணொளி விளக்கின் சோதியொடு கலந்தும், விளக்கொளி கலந்தவற்றையன்றிக் காண்டல் செல்லாமையினை வைத்துணர்ந்துகொள்க.

“அறிவானுந்தானே யறிவிப்பான்றானே” என்றபின் “அறிவா யறிகின்றான்றானே” என்ற அம்மைதிரு வந்தாதியுமிது.

இதனானே, அநாதியுடனின்ற வாணவமலத்தை விட்டுநீங்கி இறைவனொடு கூடுமாயின் அம்முறைபற்றி இறைவனையு மொரோவழி விட்டுநீங்கப் பெறும்போலு மென்னு மவ்வாதிகளை நோக்கி, அது கூடாமைக்கு ஏதுக் கூறுமுகத்தான் ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவனென்ற முதற்கூறு தெரித்துணர்த்தி வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

நீரும் நிழலும்போல நிர்விகாரியாயிருக்கிற சிவன் பக்குவான்மாக்களை யறிந்து அவர்கள் பாசத்தை நீக்கித் திருவடியிற் கூட்டிக்கொள்ளுவனென்றும் அபக்குவான்மாக்களுடைய பா

சத்தை நீக்கிக் கூட்டிக்கொள்ளா னென்றும் சொன்ன தெப்படி, ஆன்மாத்தா னறிவனல்லோ ஆகையாலே சிவனுடைய ஞானத்தினாலே பாசத்தை நீக்கிக் கொள்ளுவனென்ற அவிகாரவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

எவ்விடத்து மிறையடியையின்றி யமைந் தொன்றை யறிந்தியற்றிடாவுயிர்கள் - பெத்தமுத்தி யிரண்டிடத்திலும் தம்பிரானார் திருவருளையின்றி ஆன்மாக்கள் தாமாக வொருவிஷயத்தைப் பொருந்தி யறிந்தனுபவிக்கவும் அனுபவித்தே கன்மத்துக் கீடாக வொன்றைச் செய்யவும் யிவையாண்டிக்கு மாட்டார்கள்.—ஈசன் முன்றுஞ் செவ்வி தினினுளம்புகுந்து - ஆன்மாக்கள் தாமாகவொன்றையு மறியாததுகொண்டு பரமேஸ்வரனும் செவ்விதாக ஆன்மாவிலே யநாதியேபொருந்திநின்று,—செய்திபெலாமுணர்ந்து - ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாக வெழுந்திருந்தசெயல்களையெல்லாந் தனது திருவுளத்திலேகண்டு,—கூட்டிப்பித்து-அந்தந்த விஷயங்களைக் கூட்டிப் புசிப்பித்து,—எங்குமாய்ச்செறிந்துநிற்பன் - சடசித்துக்க ளிரண்டினும் பூரணமாய் விட்டு நீங்காமனிற்பன். இவையன்றியும்,—இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித்தோற்றாது - இவ்வான்மாக்களுக் குள்ள கன்மம் புசித்துத் தொலைந்து அந்தச் சரீரத்தைப்போட்டுக் கன்மத்துக் கீடாக வேறொருசரீர மெடுக்கு மிடத்தும் கர்த்தாவன்றித் தானாக வெடுக்கமாட்டாது,—இவற்றினுக்கம்முதலெழுத்துக் கெல்லாம் நிற்கு மவ்வுயிர்போல் நின்றிடுவன் - அகாரமென்கிற முதலுயிர் அக்கரங்களுக் கெல்லாம் பிராணனாய் நின்று அக்கரங்களைக் காரியப் படுத்தினாற்போல சிவனும் ஆன்மாக்களுக்குப் பிராணனாய்நின்று காரியப்படுத்துவன்,—அஃதலால் நாமரனடியை யகன்றுநிற்ப தெங்கேயாமே - ஆகையாலே பரமேஸ்வரனுடைய திருவடியை விட்டு நீங்கிநின்று தானாக வறியத்தக்கவிடமெவ்விடம், ஓரிடமுமில்லை.

என்னவே ஆன்மாவுக்குத் தான் அறிவிக்க வறியுமதொழி
ந்து தானாக வறியாதென்பது கருத்து. இதற்குப் பிரமாணம்.
சங்கற்ப நிராகரணம், அவிகாரவாதி நிராகரணம். "நீர்நிழல
லைய சீர்பெறுகடவுளைச் - சேர்ந்தவர்க்கின்பம் வாய்ந்திடுமெ
ன்றனை - பாதவமென்றுஞ் சேதனமின்மையி-னிழைத்தோர்வ
ம்மி னென்பதுந் துன்பம் - விளைத்தோர்தம்மில் வெறுப்புமொ
ன்றிலதே" என்றும், சிவஞானபோதம், ௧௧ - சூ, ௨ - வெ,
ஏகமாய்நின்றே யிணையடிக ளொன்றுணரப், போகமாய்த்தான
விளைக்கும் பொற்பினா—னேகமா, யுள்ளதின்கண் ணூனாங்கு
வாருள்கிற்றை, யுள்ளத்தாற் காணாதே வுற்று" என்னுமதுங்
கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவன் வேறறநின்று ஆன்மாக்கள்
கன்மத்துக் கீடாக விஷயங்களைக் கூட்டிப் புசிப்பிக்குமதொ
ழிந்து தானாக வறியாதென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உயிர்களமைந்து ஒன்றைபற்றிந் திபற்றியிடல் - ஆன்மாவுக்
கறிவு செயல்கள் விளங்குதலும் விளங்கியபின் விடயத்திற் செ
ன்று பற்றுதலும்,—எவ்விடத்து மிறையடியை யின்றியமை
யா - பெத்தமுத்தி யிரண்டினு மிறைவன் திருவடியை யின்றி
யமையமாட்டா,—ஈசன்றனும்-அதுபற்றி யிறைவனும்,—இவ்வு
யிர்கள் தோன்றும்போ தவனை யின்றித்தோன்றா - இவ்வா
ன்மாக்களுக்கு அறிவுசெயல்கள் முதல்வனை யின்றி விளங்
காமையின அவைவிளங்குதற் பொருட்டு,—அம்முதலெழுத்துங்
கெல்லாமாய் நிற்கு மவ்வுயிர்போ லியற்றினுக்கு நின்றிடுவன்-அ
க்கரங்களையியக்குதற் பொருட்டு அவற்றுடனிற்கும் அகரம்போ

ல் வுயிர்களோடுங் கலந்துநிற்பன்.—செவ்வி தினி னூம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்-அங்ஙனம் விளங்கிய அறிவுசெயல்கள் பினவிடயததிற் சென்று பற்றுதற் பொருட் டவ்வுயிர்களை யதிட்டித்துக் கொண் டவை செல்லுமாறெல்லா மறிந்து செலுத்தி யவவிடயங்களி னு மு—னாகக்கலந்து நிற்பன,—ஆகலானு மரனடிபை யகன்று நிற்பதெங்கேயாமே - ஆதலா னாணவமலத்தி னீங்கி வேறு நின் றவுயிர்கள் அதுபோல விறைவனை விட்டுத தனித்து நிற்றல் ஓரி டத்தினு மில்லையெனபதாம்.

இதனானே யனாதியுடனின்ற வாணவ மலத்தைவிட்டு நீங் கி யிறைவனொடு கூடுமாயின அம்முறைபற்றி யிறைவனையும் ஓரே வழிவிட்டு நீங்கப் பெறும்போதுமெனனும அவ்வாதிகளைநோ க்கி அதுகூடாமைக் கேதுகூறு முகத்தா னீச னுயிர்க்குக் காட் டிக கண்டிடுமெனற முதற்கூறு தெரித்துணர்த்தி வலியுறுத் தப் பட்டது.

---

கக-சூ, க-ம், அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலு மவன் சர்வவயாபி யாகிற் காணவேண்டா வோ வென்னப் பக்குவான்மாக்களுக் கொழி ந்து மற்றையவர்க்குக் காணப்படாதெ ன றுணர்த்துகின்றார்.

எங்குந்தா னிறைந்துசிவ னின்றானே லெல்லா ருங் காணவே வேண்டுந்தானென்னில், இங்குந்தா ன

ந்தகருக் கிரவியிருளாகு மீசனருட் கண்ணில்லார்க்
கொளியாயேயிருளாம், பங்கந்தா னெழும்பதுமம் பக்
குவத்தையடையப் பருதியலர்த் திடுவதுபோற் பரு
வஞ்சேருயிர்க்குத், துங்கவரன் ஞானக்கண் கொடுத்
தருளினாலே சோதிகருட் சோதியாய்த் தோன்றிடுவ
ன் காணே. (அ)

(இ-ள்.) எங்குநதா னிறைந்து சிவனின்றானாயி னெல்லாருங்காணவே வேண்டுந் தானென்னில்

சிவன் சர்வான்மாக்கட் குயிராய் நிறைந்து நின்றருளுகினு மவனை யெல்லாருங் காண வேணும்,காணுமையாற் கர்த்தா வல்லவென் று நீ சொல்லில்?

இங்குங்கா னந்தகருக் கிரவியிருளாகும்

இந்த வுலகத்திற்கண்ணிற்தனுனவ னைவ்விடத்தும் பரம்பிப் பிரகாசியாநிற்கையா லுங் கண்ணில்லாதோர்க் கிருளாயே தோன்று மாறுபோலத் தோன்றுநிற்கும்.

ஈசனருட்கண்ணில்லாற் கொளியாயேயிருளாம்

சிவனெவ்விடத்து நிறைந்து நின்றாலு மவன தருட்கண்ணையுடையார்க்குப் பிரகாசமாயே யிருப்பன. அஃதில்லாதோர்க்கு இருண் மயக்குற்றாற்போலத் தெரியாது நிற்பன காண். ஆனாற் சிவன பட்சபாதி யாகானோ வென்னில்?

பங்கந்தானெழும்பதுமம் பக்குவத்தை யடையப் பருதியலர்த்திடுவதுபோல்

சேற்றினமுளைத் தெழுகின்ற தாமரையின் கூட்டத்திலே சில முகையலரும், பக்குவமுடையதைப் பரிதியான தலர்த்து மாறுபோல

| | |
|---|---|
| பருவஞ்சேரு யிர்க்குத் தங்க வரன ஞானக்க ணை கொடுத்து | சிவசத்தியினுடைய பரிசனத்தினாலே சுத்தரான வான்மாக்களுக்கு மேலான சிவஞான திருஷ்டியைக் கொடுத்து அவர்கள் கண்டிருக்கும்படிக்கு |
| அருளினாலே | இவர்கள் காணுந் தன்மை யில்லாமையால் தனது காருண்ணியத்தினாலே |
| சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன காணே. | அறிவுக் கறிவாய் வந்துநின்று தோன்றுவன. எ-று. |

ஞானக்கண் கொடுத்ததெனப திவனுக்கு முன்பில்லாததைக் கொடுத்ததன்று, இவனுக குண்டான ஞானக் கிரியைகள் தடைப் பட்டதைச் சிவஞானத்தாலே போக்கிச் சிவாபிவியக்தியைப் பண்ணுமதைக் கொடுத்ததென்றும் கூறியதென வறிக.

இதற்கு நிசுவாசம் சிவதருமோத்தரம் மதங்கத்து மறிக.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலிவ்வா றெங்கும் பிரிவறச் சிவனிற்கில் எல்லாராலுங் காணவேண்டு மெனனிற்? அவன ஞான ஸ்வரூபி யாகையால் ஞானக்கண்ணினாலேயே காணவேணும். அந்த ஞானக்கண்ணும் பக்குவத்திலே சிவனருளா லுண்டாமென்னு முறைமையுங் கூறுகின்றது.

எங்குந்தா னிறைந்துசிவ னின்றானகி லெல்லாருங் காணவே வேணுமெனன்னில் - சிவ னெவ்விடத்தும் பிரிவற நிறைந்து நின்றானகி லெல்லாருங் காணப்பட வேணுமே! யவ்வாறு காணப்படாதே யிருப்பா னேனென்னில்?—இங்குந்தா னந்த கருக்

கிரவியிருளாகும் - இந்தப் பூமியினிடத்துக் குருடர்க் காதித்தி யனுங் காணப்படாதவனே! அவ்வாறே,—ஈசனருட் கண்ணிலா ர்க் கொளி பாயேயிருளாம் - சிவஞானமாகிய திருஷ்டியில்லா தபேர்க்குச் சிவன் ஞானப்பிரகாச ஸ்வரூபியாயிருந்துங் கா ணப்படான், காணு முறைமை யெவ்வா றுண்டாமெனனில்,— பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தையடையப் பரிதியலாத் திடுவதுபோற் பருவஞ்சேருயிர்க்குந் துங்கவரன் ஞானக்கண கொடுத்தருளினாலே சோதிக்குட்சோதியாய்த தோனறிடுவன காணே - சேற்றிலேநின் றுண்டான தாமரை முகையான தலர் தற்குப் பக்குவமானபோ தாதித்திய னலர்வித்தாற் போல மலபரிபாகத்தைப் பொருந்தின ஆனமாவுக்கு மாதேவனாகிய சிவன் சிவஞானமாகிய திருட்டியைக் கொடுத் ததனு லானம ஞான பிரகாசத்துக்கு வேறற வதிசப் பிரகாசமாக வேறறத் தோன்றுவனென வறியென் றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

அசிவ யோகிக்கு அப்ரத்தியக்ஷன் சிவ ததத சிவ சாக்ஷா த்கார நிஷ்கள நிராலம்ப சித்த சிவயோகிகளுக்குச் சிவன பி ரத்தியக்ஷனென்று பேசுகின்றார்.

கொடுத்து - விளக்கி,—சோதிக்குட் சோதியாய் - பராக் கு ரூப சத்திக்குட் பிரததியக்கு ரூப சத்திமானாய்.

மற்றைய வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

முதல்வன் அத்துவைக் கலப்புடையனு யெங்குஞ் செறிந் து நின்று உபகரித்துவரினும், அஃதருட்கண்ணுடையார்க்கனறி

அறியவாராது. அவ்வருட் கண்ணும் பக்குவமுடையார்க்கன்றிக் கிடைக்கப் பெறாது. அப்பேறும் முதல்வனையின்றி யமையாது. ஆகலான் அப்பெற்றித்தாகிய வருட் கண்ணை முதல்வன் பருவம் பார்த்திருந்து கொடுக்கப் பெற்றுடையார்க்கே அவனறிவுக்கறிவாய்நின்று அவ்வா றுபகரித்துவரு மத்துவிதநிலை இனிது விளங்குமென்பதாம்.

இத்தையாயு மறிவுடையனுதற்கு உரிமை கூறியவாறு.

பருவமெய்தாததூஉ மெய்தியதூஉம் ஓரி—த தொருங்கு காட்டுவார், பங்கந்தா னெழும்பதுமமென வேற்றுமை கூறினார்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

நிர்விகாரியா யெங்கு நிறைந்து நிற்கிற சிவ னனுக்கிரகஞ் செய்காராகி னெல்லார்க்குமொக்க வனுக்கிரகஞ் செய்யவேண்டாமோ வென்ற அவிகாரவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

எங்குந்தா னிறைந்துசிவன் நின்றானாகி லெல்லாருங்காணவே வேண்டுந்தானெனனில்-எல்லா வான்மாக்களிடத்தும் எல்லா வத்துவாக்களிடத்தும் சிவன் பூரணனாய் நிற்பானாகில் எல்லாருஞ் சிவனைக் காணவேணு மெனறு நீ சொல்லுகிறாயாகில்,—இங்குந்தா னந்தகருக் கிரவியிருளாகும் - இவ்விடத்துப் பிரபஞ்சமெங்கும் பிரகாசித்து நிற்கிற ஆதித்தப் பிரகாசந்தான் அந்தகராயுள்ளார்க் கிருளாயேயிரா நிற்கும். அதுபோல,—ஈசனருட்கண்ணில்லாற் கொளியாயேயிருளாம்-பரமேஶ்வரனுடைய திருவருளாகிய கண்ணில்லாத பாசபந்தியா யுள்ளவர்க்குச் சிவனொக்க நிற்கச்செய்தேயு மஞ்ஞானமே யொழிந்து தானொரு முதலிலையென்னும்படி நிற்பன்,—பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தையடையப் பருதியலர்ந்திடுவதுபோற் பருவஞ்சே

ருயிர்க்குத் தங்கவரன்ஞானக்கண் கொடுத்தருளினாலே சோதி சுருட்சோதியாய்த் தோன்றிடுவன்காணே - அன்னுவயம், தனை னளவிலே சினேகிதராய்த் தன்னை யறிந்து வழிபடுகிற பக்குவா ன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கி எல்லாத்துக்கு மேலாயிருக் கிற பரமேஶ்வரன தனனுடைய ஞான திருட்டியைக் கொடுத் து அந்த ஞானமாகிய காட்டாலே அவர்களுடைய பாசத்தை நீக்கி அந்தப் பாச ஞானமாய் நிற்கிற பக்குவான்மாக்களிடத்தி லே பிரகாசியாய் நிற்பனெனில் பட்சவாதி யாகானே வென னில்? சேற்றிலே எழுந்திருக்கப்பட்ட எண்ணிறந்த தாமரை களாதித்தனாலே அலர்த்தப்பட்ட பக்குவமான தாமரைபோ லுமெனா றறிவாய்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், கக-சூ.௩ வெ, "அருக்கனேர்நிற்பினு மல்லிருளேகாணார், கிருட்கண்ணே பாச த்தாற் சீச—னருட்கண்ணாற், பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல், நேசத்திற் றனனுணர்ந்தார் நேர்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆதித்தன் சன்னதியில் அந்தகனை ப்போல அபக்குவராயுள்ள பாசபந்திகளுக்குச சிவன பிரகாசி யானென்றும் பக்குவராயுள்ள முத்தானமாக்களுக்குச் சிவன பிரகாசியா நிற்பனென்னும் முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

சிவனெங்குந்தாணிறைந்துநின்றாலும்-முதல்வனைத்துணை க்கலப்புடையனாய் எங்குஞ் செறிந்துநின் றுபகரித்து வரினும்,— எல்லாருங்காணவே வேண்டுந்தானெனனில் - யாவரு மறியவே வேண்டுமெனில்?—இங்குந்தாணிரவி யந்தகருக்கிருளாகும் - அந்

து மிவ்விட்த்து அதிதத னந்தகருக்கு இருளாயே நின்றாற்போ
ல,—ஈசனருட்கணணில்லார்க்கு ஒளியாயேயிருளாம் - முதல்வ
னும் அருட்க ணுடையார்க் கன்றி யறியவாராது,— பங்கந்தா
னெழும்பதுமம் பக்குவத்தையடைய பருதியலர்த் திடுவதுபோ
ல- அவ்வருட்கணணுஞ் சேற்றிற்றோன்றிய பக்குவமுடைய தா
மரையை யாதித்தன அலரச்செய்வதுபோல,—பருவஞ்சேருயி
ர்க்கு - பக்குவமுடையார்க் கன்றிக் கிடைக்கப்பெறாது.—துங்
கவானருளினாலே ஞானக்கண்கொடுத்து- அப்பேறு முதல்வனை
யின்றி யமையாதாகலா னப்பெற்றித்தாகிய வருட்கண்ணை மு
தல்வன் பருவம் பார்த்திருந் து கொடுக்கப் பெற் றுடையார்க்
கே,—சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவனகாணே - அவ
னறிவுக் கறிவாய் நின்று உபகரித்து வரும் அத்துவிதநிலை யினி
துவிளங்கும்.

இத்தையாயு மறிவுடைய ராதற் குரிமை கூறியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.

முன்சொன்ன வுண்மையாலும் பின்சொன் வுபாயத்தாலும் சிவ
னுட னனமா கூடிநிற்கிற முறைமையைச் சமயிகள் கருத்
துக்களை வினவி யவர் மதங்களைமறுத் தருளிச் செய்கின்றார்.

சென்றணையு நிழல்போலச் சிவனிற்பனென்னிற்
சென்றணையு மவன்முதலி சிவத்தையணைந்தொன்றாய்,
நின்றதுயிர் கெட்டதென்னிற் கெட்டதணைவின்றாம் நி
ன்றதேற் கேடில்லை யணைந்துகெட்டதென்னிற், பொ
ன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார்புகனீ பொன்
றுகையே முத்தியெனிற் புருடனித்தனன்றாம், ஒன்றி

யிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போலென்னி லொருபொ
ருளா மதிபதியோ டுயிர்பொருளொன்றன்றே. (௬)

(இ-ள்.) சென்ற தேகாந்தத்தி லான்மாத் திருவடியைக் கூடுமிடத்து வேனிற்காலத்து உஷ்ணத்தால் வழிபோவார் வருத்த நீங்கச்சென்று சேரும் தண்ணிழலானது போலவே சிவனிற்பன்.
*[margin: ணையு நிழல் போலச் சிவனிற்ப னென்னின்]*

இந்த வான்மாவுஞ் ஜநநவிடாய் தீர்ந்து தானே யறிந்து கூடுவனென்று னவிகாரவாதி,

அறிவு செயலொன்று மில்லாத மரம்போலச் சிவனிற்க விந்த வான்மாச் சென்றுகூடுமாகி லிவனே கர்த்தாவாகும், திருவடியைக் கூடுமிடத்துச் சிவன் கர்த்தாவுமா யான்மா வடிமையாய்த் தநுகரண மிறந்து கூடுகிறவனுக் கிது கூடாது.
*[margin: சென்றணையும வன்முதலி]*

உயிர்கெட்டுச் சிவத்தையடைந் தொன்றாய் நின்றதெனறன்.
*[margin: சிவத்தையணைந் தொன்றாய்நின்றதுயிர் கெட்டதெனின்]*

கூடு முன்பாக நாசமானது பின்சென்று கூடுவதில்லையாம்.
*[margin: கெட்டதனைவினைறும்]*

கூடினபின் கெடாம னின்றதென்று லிவனுமொரு முதலாய் நிற்கவேண்டும், சாயுச்சிய மோக்ஷமாதலா லதுவு மடாது.
*[margin: நிறைதேற் கேடில்லை]*

கூடினபின்பு கெட்டது வென்றாயாயின்?
*[margin: அணைந்துகெட்டதென்னின]*

கூடினபோதே கெடுவனென்று யாயின் கிலேசநீங்கிப் பரமானந்த சௌக்கியமான முத்தியைப் பெற்றிருக்கிறவராார், எமக்குச் சொல்லுவாயாக நீ.
*[margin: பொனறினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகனீ]*

| | |
|---|---|
| பொன்றுகை யே முத்தியெனி ன | கர்த்தாவைக் கூடினபின்பு ஆன்ம நாசம் பிறக்கிறதே மோக்ஷமென்றுன |
| புருடனித்த னன்றும் | ஆன்மா நித்திய னென்கிறது மல்லவாய் முப்பொருளு நித்தியமென்ற வேதாகமங்கடகும் விரோதம் வரும். |
| ஒன்றியிருநீ ரொடுநீர் சேர்ந் தாற்போ லென னில் | கெட்டுப்போனதும் பிரிந்து நிற்பதுமன்றி நீருதகஞ் சேர்ந்தாற்போல முத்தியி லொன்றாய் விடுமென் றைக்கியவாதி சொன்னு ஞாயின், |
| ஒரு பொருளா மதிபதியோ டுயி ர்பொருளொன்ற ன்றே. | ஒப்பற்ற கர்த்தாவுடன் உயிர்கூடி பொருபொருளாகிறது ஒருண்மையாகச சொல்லப்பட்ட தல்ல. எ-று. |

நிசுவாசத்து மறிக. (௯)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் பரமத முத்திகளை நிராகரித்தல்.

ஈஸ்வரா விகாரவாதி ,சென்றணையு நிழல்போலச் சிவநிற்பனென்னில் சென்றணையு மவன்முதலி-சிவனே தம்புரியான், மலமரத்தி நிழல்போல நிற்க வான்மாவே யுபாயங்களினுலே சிவனைப் பொருந்துவனென்னில்? ஆன்மாவே கர்த்தாவாம், ஆகையா லதகூடாது. மேலான்ம லயவாதி,—உயிர்கெட்டுச் சிவத்தையணைந் தொன்றாய்நின்றதென்னிற் கெட்டதனைவினறும் - ஆன்மாகெட்டுச் சிவத்தைப் பொருந்தி யொன்றாய்நின்றதென்னில் கெட்டதற்குக் கூடுதலில்லையாம்.—நின்றதேற் கேடில்லை-

ஒன்றாய் நின்றதென்கையாற் கெட்டதுமல்ல,—அழிந்து கெட்டதென்னில் பொன்றினதேன் முத்தியின்பம் பெற்றவரார்நீபுகல்-சிவனுடனே பொருந்தினபின ஆன்மா கெட்டதென்னில்அப்பொழுது ஆன்மா நசித்ததென்று சொல்லும். நசித்ததாமாகில் மோக்ஷத்தி லுண்டாகிய சுகத்தைப் பெற்றவரார் நீ சொல்லு.—பொன்றுகையே முத்தியெனிற் புருடநித்தனனாம்-ஆன்மநாசந் தானே முத்தி,இன்பத்தைப் பெறவேண்டுவ தில்லையென்னில்? ஆன்மா நித்திய நல்லனாகவேணும். ஆகையா லசத்தே! பேலீம்வ னாக்கியவாதி,—நீரொடுநீர் சேர்ந்தாற்போலொன்றியிடுமென்னி லொருபொருளா மதிபதியோ டுயிர்பொருளானதன்றே - சிற்றேரி யுடைய வந்தநீர் பேரேரி நீரோடே கூடினாற்போல ஜீவான்மாவினுடைய பாசபந்தமறப் பரமான்மாவோடே கூடுமென்னில்? சிற்றேரிநீரும் பேரேரிநீரு மொருதன்மைத் தாதலால் ஜீவனுஞ் சிவனு மொரு தன்மைத்தல்ல. ஒரு தன்மைத்தாகி லொருபொருளாம். அப்பொழுது பதிபசுபாசமெனனு மூன்று பொருளுக் கொருபொருளின்றி யிருபொருளேயாம். ஆகையால் இவ்வாறு * ஆதிக்கியங் கூடாதென நிதன பொருள்.

நீருநீரும்போல ஆதிக்கியங் கூடாதெனனில்? "மூன்னோரீர் சிறைமுறி பழுடிகியோடி முன்னீர்சேர்ந் தன்னீராய்ப் பின்னீங்காமுறைபோல்" என்ற விருத்தத்துக்கு விரோதமெனனில்? அப்படியல்ல, மதுர ரசமாய ஆற்றிலேயிலே கட்டுப்பட்டிருந்தநீ ரினையுடைய லவணரசமான சமுத்திர ஜலத்துடனே கலந்து ஏகரச மானாற்போல ஏகீதசியும கிஞ்சிஞ்ஞனுமாயிருந்த ஆன்மா ஆணவாதி பாசங்கணீங்கச் சிவத்துடன கலந்து சர்வ வியாபித்துவ சர்வஞ்ஞத்துவத்தையும் பெற்று தசசமாசமாவதற்குச் சொன்ன திட்டாந்தமாகையால் விரோதமாகா. ஆகில்,

ததாஹி:— தயாஜஸம் ஜலேகூிப்தம் க்ஷீரே க்ஷீரே வ்யநெதவ்யதம்। கவிரேஷம் ஸமெத்து ஜாஜீவாத்து வ ஸாத்ரோதா: ॥

என்ற ஆகம வசனத்துக்குக் கதியேதென்னில்? ஜலேஜலம் ×க்ஷிப்தமென்பதற்கு முதலே கூறப்பட்டது. க்ஷிரே க்ஷீரங் கிருதே கிருதமென்பதற்கு ஓமகாலத்திலே ஓமதிரவியங்களிலே +கவ்வியமாயுள்ள, கிருதக்ஷீரம் ÷பரியாப்தமா யில்லாதளவில் வெள்ளாட்டு நெய்பால் கவ்வியத்துடனேகூட்டி சமஸ்காரம்பண்ணவது கிருத்யயோக்கிய மானாற்போல பாசவசத்தினாலே பேகதேசியுங் கிஞ்சிஞ்ஞனுமா யுள்ள பசு பசுத்துவ பாசநீங்கிப் பதியுடனே ¶மேளனமா யுள்ளவில் சர்வ வியாபித்துவ சர்வஞ்ஞத்து வான்மகமான பதிஸ்வரூபமாமென றிதன் பொருள். ஆகையால் விரோதமில்லை.

* ஆதிக்கியம்-மிகுதி, × க்ஷிப்தம் - போடப்பட்டது + கவ்யம்-பிதருக்களுக் குரியது, ÷பரியாப்தம் - போதுமானது, ¶ மேளனம் - சேருதல்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

வாதிகள் கருத்து மறுத்துணர்த்து கின்றார்.
விஞ வுத்தரம் மறுப்பு
பொருள் வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அரன் கொடுத்துத் தோன்றுவானெனல் வேண்டா, பதிகராற் சென்றணையப்படும் மரநிழல்போல முதல்வன் விகாரமி

னறி நிற்ப உயிர் தானே பருவஞ்சேர்ந்தவழி ஞானக்கண்ணைப் பெற்று அரனைத் தலைக்கூடுமென வமையுமென ஈசுரவவிகாரவாதி மதம்பற்றிக் கூறின், மரநிழலுக்குச் சுதந்திரமின்றிச் சென்றணைவாருக்கு அச்சுதந்திர மாமாறுபோல, முதல்வனுக்குச் சுதந்திரமில்லை, அவனைத் தலைக்கூடுவதாகிய வுயிர்க்கே சுதந்திரமெனப்பட்டு வழுவாம். இனிப் பரிணாமவாதிகள் உயிர் கெட்டுக் கூடி அரனடியி லொன்றாய்ப் போமென்பர். கெட்டாற் கூடுமாறின்மையானும், கெடாதுநின்று கூடுமெனின அவ்வாறு நின்று கூடியவழிக் கேடின்மையின் ஒன்றாதல் பெறப்படாமையானும், கூடியபின கெட்டதெனிற் கெட்டவழி முத்திபெறுவ தொன்றின்மையானும், கேடே முத்தியெனின் உயிர் நித்தமாதல் செல்லாமையானும், அதுவும் வழுவாம். இனி ஐக்கவாதிகள் நீரிலே நீர் சேர்ந்தாற்போல உயி ரரனடியைச்சேர்ந் தொன்றாமென பர். நீருநீரும்போல முதல்வனுமுயிருந் தம்முட் சமமாதல் செல்லாமையின அவர்மதமும் அடாதென்பதாம்.

அரன மலரடிக்கீ ழிருக்குமியல்பு வேறுவேறாகக்கூறு மவ்வ மதஙகளைப் பரிகரித்தவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முனசொன்ன உண்மையினாலும் பின்சொல்லிவந்த வுபாயங்களாலும் இந்த விரண்டு வகையாலும் சிவனைப் பெற்றவர்கள் சிவனோடு கூடிநிற்கு முறைமையைச் சமயிகள் கருத்துகளை வினவி அவரவர்கள் மதங்களை மறுத தருளிச்செய்கிறார்.

செனறணையும் நிழல்போலச் சிவநிற்பனெனனில்-நீரும்நிழலும்போலச் சிவன் விகாரமற நிற்பன், அந்த நீரிலும் நிழலிலும்

சென் றிளைப்பாறுகிற வான்மாவைப்போல ஆன்மா முத்தியிற்
சிவனைத் தானாக வறிந்து கூடுமென்று நீ சொல்லில்?—சென்ற
னையுமவன்முதலி - அந்த நீரையும் நிழலையு மறிந்துசென்று கூடு
கிற ஆன்மாக்கர்த்தாவாவன், ஆகையா லது கருத்தன்று.—
சிவத்தையணைந் தொன்றாய் நின்றதுயிர் கெட்டென்னில் - உப்
பளஞ்சேர்ந்த புற்பலாலம் உப்பாய்ப் போனதுபோலவும் அக்
கினியைச் சேர்ந்த விரும்பு அக்கினியானாற்போலவு மான்மாச்
சென்று சிவத்தைப் பொருந்தி ஆன்மாவென்கிற தன்மை கெட்
டுச் சிவமாய் நின்றதெனனில்?—கெட்டதனை யின்றாம்-ஆன்மா
வென்கிற தன்மைகெட்டால் சிவத்தைப் பொருந்தின் தன்மை
யில்லையாம், ஆகையா லதுகருத்தன்று.—நின்றதேற்கேடில்லை-
ஆன்மாவும் சிவமு முத்தியிலு மிரண்டாயிருக்குமென்று நீ சொ
ல்லில், இவன் தற்போதங்கெட்டுச் சிவனைக் கூடினதுமில்லையா
ய்ச் சிவனுக்குப் பூரணமுமில்லையாம், ஆகையா லது கருத்தன்
று.—அணைந்துகெட்ட தென்னில் - அநாதியிலே ஆன்மாவுஞ் சி
வமு மிரண்டு முதலாயிருந்து முத்தியி லான்மாச் சிவனைச்சென்
றுகூடி பொன்றாய்விடுமென்று கூறின்,—பொன்றினதேல் முத்
தியினைப் பெற்றவரார் புகல்நீ- கூடினபொழுதே ஆன்மாக் கெ
டுவதினால் மோக்ஷத்தைப் பெற்றவர்க ளின்னாரென்று எமக்கு
நீ சொல்லவேணும்.—பொன்றுகையே முத்தியெனிற் புருடனி
த்தனன்றாம்- ஆன்மாக் கெட்டுப்போகிறதுதானே மோட்சமெ
ன்று சொல்லில்,—ஆன்மா நித்தனுமல்லவாய் - நித்தமென்று
சொல்லுகிற வேதாகமங்களுக்கும் விரோதமா மாகையா லது
கருத்தன்று.—ஒன்றியிடும் நீரொடுநீர் சேர்ந்தாற்போ லென்
னில் ஒருபொருளா மதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே -
முத்தியிலே ஒருபொருளாய் நின்று பின்பு பதியென்றும் பசுவெ
ன்று மிரண்டாய் மீளவும் நீருநீருஞ்சேர்ந்த தன்மைபோல முத்

தியிலொன்றும் என்றுகூறின், பதியும் பசுவும் ஒரு முதலாக வெ ன்றும் அதிபதியாயிருக்கிற கர்த்தாவு மானமாவு மொருபொரு ளாகா தாகையா லது கருத்தன்று.

சென்றணையும் நிழல்போலச் சிவனிற்பனென்றவ னவிகார வாதி இதற்குப் பிரமாணம்சங்கற்பநிராகரணம் "நீர்நிழலனைய ச் சீர்பெறு கடவுளைச் - சலமிலனாகிச் சார்ந்தவர்க்கென்று - நலமிகநல்கு நாதனையணைந்து - பூமிவெம்மை பொருந்தாதுயர் ந்த - நீழல்வாழு நினவினர்போலத் - திருவடிநீழல் சேர்ந்து- கருவுறு துயரங் களைந்திருந்திடுமே" என்னுமதுங் கண்டுகொள்க. சென்றணையு மவன்முதலிபென்றது, அவனை மறுத்ததற்குப் பி ரமாணம். நீர்நிழலனைய சீர்பெறுகடவுளைச் - சேர்ந்தவர்கருன் பம் வாய்ந்திடுமென்றனை - பாதவமென்றுஞ் சேதனமின்மை யி-னிழைத்தோரவம்மி னென்பதுந துன்பம் - விளைத்தோர்தம் மில் வெறுப்பொன்றிலதேற் - பொடித்திடுகொப்புள் வெடி- த்திருசரணம் - வெய்யபூழியி னுள்ளுறவழுங்கி - யாற்றுதலின் றி யாறியங்கினர்முன்-றேற்றிடுமென்று சொல்லவுமிலதா - வி வ்வகைக்கடவுட் கியம்புதறவோ" என்னுமதுங் கண்டுகொள்க.

சிவத்தையணைந் தொன்றாய்நின்ற துயிர்கெட்டென்னில், என்றவன சங்கிராந்தவாதி. இதற்குப் பிரமாணம் சங்கற்பநி ராகரணம், "வேற்றோர்முகவொளி தோற்றுங்கலனெனத் - த லைவனதருளுயிர் நிலவிடுநிலவச் - காட்டத்தங்கி மாட்டத்தங் கிய - தனையுமளத்திற் புல்வையினீப்பும் - போனறதுவாகித் தோன்றிடுமதனாற் - பசுகரணங்கள் சிவகரணங்க - ளாகமாறி யறிவுறு [illegible]மசமாமுயிர் யானெனதின்றே" என்னுமதுங் கண்டு கொள்க. என்றுகேட்ட தவனை. இனருமென் றவனைமறுத்தற் குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம். "நோக்குமுகவொளி நீக்காதானெனக் - கவருந்தன்மை முகுரம்போலக்-கொடுத்தது

கோடற் கடுத்ததுண்டன்றே - காட்டத்தங்கி கூட்டக்கூடு-மிந்தனத்தியற்கை வெந்தழருங்காது - வுப்பளத்தடுத்த புற்பலாலங்கள் - சடத்தவேணுங் கொடுத்ததுகொள்ளுந் - தன்மையுண்டு ணைக் கின்மையதன்றே" என்னுமதுங் கண்டுகொள்க.

நின்றது என்றவன் சமவாதிமதம். இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். "முன்னொன்றனாது முதிரொளிஞான-மதிபாப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்த - வண்டெனவுயிரைக் கொண்டிடுமுயிரது - தன்னைநோக்கித் தானதுவாகி - ஐவகைத்தொழிலு மெய்வகையுணர்வும் - பிரியாவாறு பெற்றுத் - திரிபாப்பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே" என்றும், கேடில்லையென்றவனை மறுத்ததற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம். "முத்தியுற்ற நற்றவரவையிடை - சேர்வொன்றனைச் சார்கருமுத்தி-சாலோக்கியமோ சாயுச்சியமெனிற் - பந்தமுற்ற கந்தலகழித்த - வறிவினோடறிவு பிறியாப்பெற்றி-வேண்டுமென்றதற்கின்டிவரிவ்வா - றிருப்பபொன்பதற் குரித்தான்வேண்டு - மண்ணலதருளி னண்ணியிருப்பினுஞ் - சீவன்முத்தரென் றுருதின்றகன்று - நீங்கியுமுருவ நீங்காதாயி - னொங்கியமுத்தி யாவதென்னுரைக்க" என்னுமதுங் கண்டுகொள்க.

அணைந்துகெட்டதென்னிற் பொன்றினைதேன் முத்தியெனிற் பெற்றவரார்புகல்கீ பொன்றுகையே முத்தியென்றதுசைவர். இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். "கருவியுமலமும் பிரிவுறப்பிரியா - ஞானநல்கலுந் தானதுனொக்கித் - தன்னையுமதனையுந் தன்முதற்பொருளையு - மின்னவென்றறியா வீருவருமுயங்கி - யொன்றாயுறுபய னுவப்பு-மின்றாய் நிற்குமிதுசிவகதியே" என்றும், புருடனிதத நன்றும் என்றவனை மறுத்தற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "இருவருங்கூடி யொருபயனுய்ததென் - றருளினையிவ்வா றபேதிகணில்லையே" என்னுமதுங் கண்டுகொள்க.

ஒன்றியிடம் நீரொடுநீர் சேர்ந்தாற்போல என்றது ஐக்கவாதி இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். "சததினிபாத மூய்த்திறையருளா - லுருவுகொடுலகு தெரிவுறமருவி-மாசுறுந்தூசு தேசுறவிளங்குந் - தன்மையினுணர்த்தும் புன்மைகணிங்கி-நீருநீருஞ் சேருந்தகைமையி- னறிவுநோடறிவு செறிவுறப்பொருந்தி - யொன்றுமென்பதை யுலகோர் - நன்முமுத்தியெனநவின்றனரோ" என்னுமதுங் கண்டுகொள்க. ஒரு பொருளாமதிபதியோ டுயிர்பொருளொன்றன்றே என்றவனை நோக்கி மறுத்ததற்குப் பிரமாணம், சங்கற்ப நிராகரணம். "அறிவிற்கறிவு செறியவேண்டுமன்றே - யுண்மையிலிருமையு மொளிபேயெனிலொரு - தன்மையாகமுஞ் சாற்றினரிலரோ" என்னுமதுங் கண்டுகொள்க.

இந்த ஐக்கியவாதியை யொழித்து சங்கிராந்தவாதி பரிணாமவாதி சைவர் இவர்கள் முத்தியிலான்மாவுஞ் சிவமு மொன்றுயிருக்குமென்பர்களெனக் கொள்க.

இதனாற் சொல்லியது, ஆன்மாவுஞ் சிவமும் முத்தியிலிரண்டாயிருக்குமென்றும் அக்கினியைச் சேர்ந்த விரும்புபோலச் சிவத்தோடே கூடின வான்மாவுஞ் சிவமாமென்றும் பெத்தத்திலொழிந்து முத்தியிலுமிரண்டா யிருக்குமென்றும் அநாதியேயிரண்டாயிருந்து முத்தியி லொன்றுமென்றும் இப்படிச் சொன்ன சமயிகளை அவை யுத்த மல்லவென்று மறுத்த முறைமையறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

சென்றனையு நிழல்போலச் சிவனிற்பனென்னில் - அரன் கொடுத்துத் தோன்றுவானெனல் வேண்டா, பதிகராற் சென்

றனையப்படி மரநிழல்போல முதல்வன் விகாரமின்றிநிற்ப வுயி ர்தானே பருவஞ்சேர்ந்தவழி ஞானக்கண்ணைப் பெற்று அதனை த் தலைக்கூடுமென வமையுமென ஈஸ்வர அவிகாரவாதி மதம்ப ற்றிக்கூறின்,—சென்றணையு மவனமுதலி - மரநிழலுக்குச் சுதந் தரமின்றிச் சென்றணைவார்க்கு அச்சுதந்தர மாமாறுபோல மு தல்வனுக்குச் சுதந்தரமில்லை, யவனைத் தலைக்கூடுவதா யுள்ள உ யிர்களே சுதந்திரமெனப்பட்டு வழுவாம்.—உயிர்கெட்டுச் சிவ த்தையணைந்து ஒன்றாய் நின்றதெனில் - இனிப் பரிணாமவாதி கள் உயிர்கெட்டுக் கூடி யரனடியி லொன்றாய்ப் போமென்பரே னில்,—கெட்டதனை வினறும் - கெட்டாற் கூடுமாறு இன்மை யானும்,—நின்றதேல்-கெடாது நின்று கூடுமெனின்,—கேடில் லை-அவ்வாறுநின்று கூடியவழி கேடின்மையி னொன்றுதல் பெ றப்படாமையானும்,—அனைந்து கெட்டதென்னில் - கூடியபின் கெட்டதெனின,—பொனறினதேன் முத்தியினைப் பெற்றவரா ர்புகனீ - கெட்டவழி முத்திபெறுவ தொன்றின்மையானும்,— பொன்றுகையே முத்தியெனில்- கேடேமுத்தியெனின்,—புருட னித்தனன்றும்- உயிர்நித்தமாதல் செல்லாமையானு மதுவும் வ ழுவாம்,—ஒன்றியிடுநீரொடுநீர் சேர்ந்தாற்போல என்னில்-இனி யயிக்கவாதிகள் நீரிலே நீர்சேர்ந்தாற்போலே உயி ரரனடியைச் சேர்ந்தொன்று மென்பரெனின்,—ஒருபொருளா மதிபதிபோ டுயிர்பொரு ளொன்றனறே - நீரும் நீரும்போல முதல்வன் உயி ரும் தம்முட் சமமாதல் செல்லாமையின அவர்மதமும் அடாது.

அரன் மலரடிக்கீ ழிருக்கு மியல்பு வேறுவேறாகக்கூறு ம வ்வவர் மதங்களைப் பரிகரித்தவாறு.

## மறைஞானதேசிகர் உரை



செம்பிரசகுளிகை தாக்கினவிடத் துண்டாகிய தன்
மைபோல இந்தவானமாவுஞ் சிவனோடு கலந்தவி
டத் திருக்குமுறைமை யுணர்த்துகின்றார்.

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப்பொன்
னாய்ச் செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற்சீவன்,
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போலல்ல னற்குளி
கை போலவரனணுகிமலம்போக்கி, யம்பொனடிக் கீ
ழ்வைப்ப னருவகளங்க மறுக்கு மக்குளிகை யதுவும்
பொன் னாகாதாகு, மும்பர்பிரா னுற்பத்தி யாதிசெய
ற்குரிய னுயிரதுதானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு
முரித்தே. (௧௦)

(இ-ள்.) செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப்பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும் — செம்பொன விரதக்குளிகை தாக்கக் களிம்பற்றெப்படிப் பொன்னுடன் கூடும். அது போல

மலஞ் சிதைந்தாற்சீவனம்பனுடன் கூடுமெனில் — இந்தவானமாவுஞ் சிவஞானத்தினாலே மலம்போய்ச் சிவனைச் சேர்ந்தவிடத் திவனு மவனைப் போலப் பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்தற் குரித்தாவனென்று சிவ சமவாதி சொல்லில்? அஃதன்று.

பொன்போலல்ல னற்குளிகை — சிவனிந்தப் பொன்போல்வ னல்லனச்செம்பைப் பொன்னாக்குங் குளிகையைப் போ

போலவா னனு — ன்றவனுகி யான்மாக்களுடைய மலத்தைநீ
கிமலம் போக்கி — க்கி யழுக்கினையும் பொலிவினையு முடைய தி
யமபொனடிக்கீ — ருவடி நீழற் கீழேவைடபன.
ழ்வைபபன்

அருங் களங்க — அருமையாய்க் களங்கத்தைப் போக்கின
மறுககு மகளி — பொனனுனது தானவேறே யொரு செம்பி
கையதுவும் பொ — ற்களிம்பை போக்கமாட்டாது குளிகையே
னனுகாதாகும் — போககுமிது பொனனுகவே யிருககும், அத்
தன்மைபோல ?

உம்பர்பிரா னு — தேவர்களுக் கெல்லாஞ் சுவாமியாயிருக்
ற்பததிபாதி செ — கப்பட்ட சிவன் சிருட்டிமுதலிய பஞ்சகிரு
யற்குரியன — த்தியங்களையுஞ் செய்தற்குறியன.

உயிரது தான் — இப்படிச் சுத்தனுன வான்மாக்கடான்
சுவானுப மொன் — வேமொரு கிருததியங்களுஞ் செய்வதினறிச்
றினுக்கு முரித் — சுவானுபூதி யொன்றையமே தினைத்திருப்ப
தே. — தேயுரிமையுடையார் எ-று.

எனவே இவர்கள் பரமுத்தியைப் பெற்றிருந்தாற் கிருத்தி
ய கர்த்தாவாகார்கள்.

ஆன்மாக்க ளொருக்காலுங் கிருத்தியஞ் செய்யார்களோ
வெனில்? அபரமுத்தியை யடைந்த வதிகாரிகள் அவனனுமதி
யைபெற்றுக் கீழுள்ள கிருத்தியகர்த்தாக்களா யிருப்பர்களென
வறிக.

அந்தப்பரம முத்தர்களும் சிருட்டியாதியைப் பண்ணிற்
குற்றம் யாதெனில்? அநேகேசுர வாதமுண்டாகையாலும் சுத்
தமூவை யொன்றுகையாலும் சிருட்டியாதி கிருத்தியங்கள் செ
ய்யப்பெரு தெனவறிக.

இதற்குச் சர்வஞானோத்தரம் சர்வ மதோப நியாசம்
சிவதருமோத்தரம் மிருகேந்திரத்து மறிக.

போக்குமோ மற்றொரு செம்பிற்களிம்பைப்பொ-னீக்குவ ரோகீங்கினர் நோய்கீசு. படைப்பதுஞ் செய்யார் இளைப்பார் பற்றற்றுரீச-னடிக்கீழ்க த்தஞ்சத்தினி யின்பம்." "ஆதிமுத்தனி ன்பமு மநாதிமுத்த னின்பமுங்கே-ளோதும்விதித துபங்டத்த தும். என்றுரெமதுகுறவர்.

இதனைப் பரமோபதேசத்திற் கூறினு ராண்டுக்காண்க (௧௦)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலதர்க்கே புறநடை.

செம்பிரதகுளிகையினுற் களிம்பற்றுப்பொன்னுய்ச் செம் பொனுடன்சேருமலஞ் சிதைந்தாற் சீவன் நம்பனுடன் கூடுமெனி ல்-செம்பானதிரதகுளிகைப் பரிசதகினுலே களிம்பானதுபோய் ப் பொன்னும். அப்படியே சிவனுடையசத்தி ஸ்பரிசத்தினு லே ஆன்மாவினுடையவாணவாதி மலங்க ளீங்கவே சிவனு டே யொக்க வான்மாக்களும் பஞ்சகிருத்தியம் பண்ணுமென் னில்,—அரன் பொன்போலல்ல னற்குளிகைபோல-அரன் பொ ன்னைப்போலே யல்ல,செம்பைக்களிம்பறுததுப் பொனனுக்கும் ரசக்குளிகைபோலே செமபொன்னுடன் கூடும் ரசகுளிகையினு லே களிம்பறறபொன்னுனது முனனுள்ள பொனனே யொசகு மொழியக் குளிகையை யொவ்வாது,—அரனனுகி மலம்போக் கியம் பொனனடிக் கீழ்வைப்பன் - சிவன ஆன்மாவைப் பொரு ந்தின மலங்களை நீக்கி யான்மாவைத் தன்னிடத்து வேறற வை ப்பன்,—அருங்களங்கமறுக்கு மக்குளிகையதுவும் பொன்னுகா தாகும்-உலகத்தவர்க ளரிதிற்றேடும் பொன்னை டெளிகிலாக்கு மிரதகுளிகைபொன்னுகாது. இப்படிப்போல,—உம்பர்பிரா னற் டத்தியாதிகளுக்குரிய னுயிரதுதான சிவானுபவ மொனறினுக்கு

தே-தேவர்க்களுக்கெல்லாம் சுவாமியான சிவனே சிருஷ்டிமுத லைந்தொழில்களுக்குங் கர்த்தா, ஆன்மாவானது சிவாநந்தானு பவமொன்றினுக்குமே யுரியது.

இதனால் முத்தான்மாக்கள் சிவாநந்தானுபவிகளே யாவர் கள், கிர்த்திய கர்த்தாக்களாகார்களெனக்கூறியது.

அதிமுத்தரான அநந்தேஸ்வராதி விஸ்வாமித்திரர் பரியந் தம் சிருஷ்டியாதி கிருத்தியங்கள் பண்ணினதை யாகமபுராண ங்களிலே கேட்கப்பட்டது. இவ்விடத் தாசாரிய ரநுக்கிரக மாகிற கிருத்தியத்தைப் பண்ணக் காணப்பட்டதே யெனவில்? அதுமெய்; சிவனவ்விடத்து மெந்தக் கிருத்தியமு மவரவரை யதிஷ்டித்துத் தாமே பண்ணுவர், முக்தான்மாக்கள் பண்ணு வர்களெனபது இருப்பு சுடுவதென்பதுபோல வாதாரலக்ஷணை. இந்த விசாரமெல்லாஞ் ஜீவன்முத்தி யவத்தையிலேயே, பர மமுத்தியிலே சிவமென்று மான்மாவென்றும் பிரிந்து காணப் படுவ தொன்றில்லை. ஆகையால் முத்தான்மாக்கள் கிருத்தியம் பண்ணுவர்கள் பண்ணார்களென்னு ம விசாரத்துக் கவகாசமே யில்லை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

முத்தியினிற் சிவனு முத்தான்மாவும் பொன்னும் பொன்னு ம்போற் புணர்ந் தொருபொருளா யிருப்பார்களென்று சிவாத்து வைதிப் போலிப் புருஷனொருவன் புகல மறுத்துரைக்கின ார்

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச் செம் பொனுடன சேரும்-அப்படி,—மலஞ் சிதைந்தால்- முதநிமானா ய்,—சீவனம்பனுடன கூடுமெனில் - சிவனோ டயிக்கிய மாமென

று செப்பில் சிவன்,—பொன்போலல்லன் - பொன்னுக்குமொ
ருபொருள் போல்பவன். ஆகையால்,—நற்குளிகை போல்வன்-
சீவனுக்கு,—அரனணுகிபலம்போசகி-ஒருபுடையொப்புவமையா
தலால்,—அம்பொ னடிக்கீழ் வைப்பன்-குளிகையும்பொன்னும்
போற் றனக்கு வேற்றுச் சாதியாகாமற் குளிகை பொன்னொ
ளிப் பிரகாசம் பண்ணுவதுபோற் சிவத்துவப் பிரகாசஞ் செ
ய் தொதத சிவசாதியாக்கித் தனது சத்திக் கொத்து விரிந்து அ
ந்தச் சத்தி பதார்த்தம் பார்த் தொதுதுப் போய்ப் பராக்காய்
ப் பதிமுதற் பதார்த்தம் பார்க்கும் பராக்குரூப சீவசிற்சத்தி
யைப் பதிமுதற்பதார்த்தம் பாராது பிரத்தியக்காய்ப் பார்க்கு
ம் பிரத்தியக்கு ரூப சிற்சத்திக் குறிச் சிவனாகச் சீவனைப்பண்
ணுவன்.—அருங்களங்க மறுக்கு மக்குளிகை தானும பொன்னு
காதாகும் - குளிகையாக வுபமிக்கப்பட்ட சிவ னிப்பொன்னு
க வுபமிக்கப்பட்ட சீவனாகான். ஒரு பொருளல்லாதிருந்தாலு
மொரு சிவசாதியா யொதத பொருளாமென் றுரைத்தலால்
பஞ்சகிர்த்திய முத்தசிவன் பண்ண வேண்டுமென்பதற் குத்தர
ம்—உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன் - சிவன் சிருஷ்
டி முதலிய பஞ்சகிர்த்திய கிருபா கிர்த்தக் கருகன்,—உயிர்தா
ன்-முத்தசிவன தான,—சிவா நுபவ மொனநிலைக்கு முரிததே -
சிவ சங்கற்பத்திற்கு வேற்றுச் சங்கற்பம் வேற்றுப் பலம் வி
ட்ட பிரதக்கவர்ச்சநீய சங்கற்ப சம்சித்த பஞ்ச கிர்த்திய கிர்த்
தாவாலும் சிவன்போற் கிருபா சங்கற்ப சம்சித்த கிர்த்திய கிர்
த்தல்லாமையாற் றனது பராக்குரூப சிற்சத்தி விர்த்திக்குறி ச
ர்வார்த்த சிவசாக்ஷாத்கார பூர்த்திக் கீர்த்திச் சிவானந்த நாம
சிவபோகத்துக் கருக பிரத்தியக்குரூப சிற்சத்திலிங்கச் சிறப்பு
ச் சிதந்தரான்ம பொதுச் சித்துக்குறி கரண கர்த்திரு ரூப வநு
பவா நுபவி திருக்ஸ்வரூபி யாகாநிற்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

களிம்புள்ளளவுஞ் செம்பு பொன்னுடனொத்து ஒன்றுமா றில்லையாயினுங் களிம்பு நீங்கியவழி ஒத்தொன்றுதல் செல்லுமென்பது மடாது. உயிர்க்கு மலத்தை நீக்கு மாற்றலையுடைய முதல்வனைச் செம்பிற்குக் களிம்பு நீக்குமாற்றலுடைய இரசகுளிகையோ டொப்புறுத்துதலன்றி அவ்வாற்றலில்லாத பொன்னோ டொப்புறுத்துதல் ஈண்டைக்கேலாமையானும், மலநீங்கியவழியுஞ் சிவானுபவ மொன்றற்கே சுதந்திரமாயவுயிர் ஐந்தொழிலெல்லாவற்றிற்குஞ் சுதந்திரனாகிய முதல்வனோ டொத்தொன்றுதல் செல்லாமையானு மென்பது.

ஒன்றினுக்கு மெனவு மும்மை முற்றும்மை.

சிவானுபவ மொன்றினுக்கு முரித்தேயென்ற விதனானே, சிவானுபவத்திற்கு முரித்தன்றென்னுஞ் சுத்தசைவர்மதமு மறுக்கப்பட்டது.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

செம்பிற்களிம்பு குளிகைதாக்க நீங்கின தன்மைபோலச் சிவனுடைய வருளாலே ஆன்மாவுக்கு மலம்போய் முத்தியைப் பெறுமென்ற பேதவாதிமத மேலருளிச்செய்கிறார்.

செம்பிரதக் குளிகையினாற் களிம்பற்றுப்பொன்னாய்ச் செம்பொனுடன்சேரும் - செம்பொன் இரதகுளிகையினாலே காளிதம்போய் மாற்றெழுந்திருந்து கனகமாய்ச் சிவந்த பொன்னுடனே கூடாநிற்கும். அதுபோல,—மலஞ்சிதைந்தாற்சிவ னம்பனுடன்கூடுமெனில் - **மலமானது சிவனருளாலே நீங்கினால்**

ஆன்மாவுஞ் சிவனுடனே கூடுவன் என்று நீசொல்லில் அது திட்டாந்த விரோதம். அதெப்படி யென்னில்?— பொன்போலல்லனற் குளிகைபோல்வன்-பரமேஸ்வரனஞ் சப் பொனனைப்போலல்லன் நல்ல குளிகையைப்போல்பவன் ஆகையாலான்மாவுமன்றி,—அரனணுகிமலம்போக்கி யம்பொனடிக் கீழ்வைப்பன்-பரமேஸ்வரன் றனது திருவருளாலே யிவனை யநாதியே பொருந்தி நிற்கிற மலத்தினது சத்திகளை நீக்கி அழகிய பொலிவினையுடைய தனது திருவடியின்கீழே வைப்பனென்றதெப்படி. ஆன்மா வருளைப் பெறுகிறதே பயனென்றும் அந்தவருளுக்குள்ள தன்மையேயெல்லா மவனுக்குண்டாமெனறுஞ் சொல்லுகிற சமவாதியைப் பார்த்து மறுதது மேலருளிச்செய்கிறார்.—அருங்களங்கமறுக்கு மக்குளிகையதுவும் பொன்னாகாதாகும்-செம்பினது காளிதத்தைப்போக்கித் தேடுதற்கரிதாய்ப் பொன்னாக்கின வந்தக் குளிகையானதும் பொன்னாகாது, அந்தப் பொனுங் குளிகையாகாது, காளிதம் நீங்கினபொன் குளிகையாகாதாற்போல அருளைப்பெற்ற வானமாக்களும் அருளுக்குள்ள தன்மை யுண்டாகாது,—உம்பர்பிரா னற்பததியாதிகளுக்குரியன - ஆகையால் தேவர்களுக் கெல்லாங் கர்த்தாவாகிய பரமேஸ்வரன் சிருட்டிமுதலான கிருத்தியங்களுஞ் சர்வஞ்ஞபதது வமு மநாதியேயுடையன.—உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்குமுரித்தே - ஆன்மாத் தானு மருளைப் பெற்றாலுஞ் சிவனுக்குள்ள பஞ்சகிருத்தியமும் பேரறிவுமுண்டாகாது,—சிவானுபவ மொன்றையு மனுபவித்துக்கொண் டிருக்கிறதற் குரித்து.

செம்பிரதக்குளிகையினாற் களிம்பற்றுப்பொன்னாய்ச் செம்பொனுடன் சேருமதுஞ் சிதைந்தாற்சீவ னம்பொனுடன் கூடும், என்றவன் பேதவாதி. இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். “ ஈசனருளாற் பாசத்தொகுதி-செறிவுறுசெம்பிற் கறை

யுறுகளிப்பு - குளிகைதாக்க வொளிபெற்றங்கு - நித்தமுதத சுத்தநாக-வைத்தனருங்கின் மறைவல்லோ" என்றும் "பொனேபோலல்ல னற்குளிகைபோல்வான" என்று அவனை மறுதத தற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம். "மறைகளாகமத் துறைகண்மற்றெனவயு - நாசமில்பதிபசு பாசமென்றுரைக்க- வய த்தோர்குளிகை சயத்தாற்றுமிரக்- காளிதநாசம் பாசத்தேய்ந் தல் - கூடாதன்றியுங் குளிகைசேருண - நீடாதழித்த நிலைநில யாதலிற் - பேதவாத மோதுதல்பிழையே" என்னுமதுங் கண்டு கொள்க.

உயிர்காணுஞ்சிவானுபவ மொன்றினுக்குமுரித்தே என்றது ஆன்மாச் சிற்றறிவுடைமையா லச்சிவனுக்குள்ள கிருத்திய மெல் லா மிவனுக்குண்டாகாது, சிவானுபவ மொன்றினுக்கு முரித் தென்பது கருத்து. இங்ஙனஞ் சமவாதிகளை மறுததற்குப் பிர மாணம் சங்கற்பநிராகரணம் "அவனிவனாகி லிவனவன் செய் தி-யென்றுசெய்வா னெறியிமதத்தா - லெல்லாமறிதல் செ ல்லாதுயிர்கள் - சிற்றறிவெனுமிச் சொற்றவறுரூட்" என்னுமது ங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, செம்பிற் காளிதமானது இரதகு ளிகையினாலே நீங்கப் பொன்னான தன்மைபோல ஆன்மாவுக் குண்டான பாசமு மருளாலே நீங்கினாலு மருளுக்குள்ள முறை மை யான்மாவுக் குண்டாகாது, பொன்னானது குளிகை யாகா தாற்போல வென்றும் ஆகையா லீதருத்த மல்லவென்றும் ஆ ன்மா வருளோடு கூடினாலுஞ் சிவானுபவ மொன்று மொழிந் த பஞ்ச கிருத்திய முண்டாகாதென்னு முறைமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

செம்பிரத குளிகையினுல் களிம்பற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும் - களிம்புள்ளளவும் செம்பு பொன்னுடனொத் தொன்றுமா றில்லையாயினும் களிப்பு நீங்கியவழி யொத்து ஒன்றுதல் செல்லுமென்பது படாது,—மலஞ் சிதைந்தாற் சிவனம்பனுடன் கூடுமெனி னற்குளிகைபோல்வான் பொன் போலல்லன் - உயிர்க்கு மலத்தை நீக்குமாற்றலுடைய முதல்வனைச் செம்பிற்குக் களிம்பு நீக்குமாற்றலுடைய விரதகுளிகைக ளோடொப்புறுத்துதலன்றி யவ்வாற்றலில்லாத பொனனோ டொப்புறுத்துத லீண்டைக்கு ஏலாமையானும்,—அருங்களங்க மறுக்கு மகுளிகைதானும் பொனனாகாது -அரியகளிம்பினை நீக்கிய ரசகுளிகையும் பொன்னாகாது.—கணுகுமலம் போக்கி யம்பொ னடிக்கீழ்வைப்பன-பொருந்தியமலத்தை நீக்கித திருவடிக் கீழ் செலுத்துவனாயினும்,—சிவானுபவ மொன்றினுக்கு முரித்துயிர்தானும் - மலநீங்கியவழியும் சிவானுபவமொன்றற்கே சுதந்தரமாய வுயிர்,—உற்பத்தி யாதிகளுக் குரியன உம்பர் பிரானுகும் - ஐந்தொழி லெல்லாவற்றிற்குஞ் சுதந்திரனுகிய முதல்வனோடொத்து ஒன்றுதல் செல்லாமையானும்.

சிவானுபவம் ஒன்றினுக்கு முரித்தேயென்ற விதனுனே சிவாநுபவத்திற் குரித்தனறெனனுஞ் சுத்தசைவர் மதமும் மறுக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மீளவமல னன்மாவுஞ் சித்தச் சிவனுஞ்சித்து இந்தவிரண்டுங் கம்பிற்கூடி யொன்றுயிருக்கிறதே முத்தியென்று சொல்ல மறுத் துணர்த்து கின்றுர்.

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றுமென்னிற் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான், பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற் படியுஞ் சித் தறிவிக்கப் படுஞ்சித்துமிவன்றான், அவன்றானே யறியுஞ்சித் தாதலினு லிரண்டு மணைந்தாலு மொன்றுகா தநநியமாயிருக்கு, மிவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோபுத்தி யிதுவுமசித் தெனிலவனுக் கிவனுமசித்தாமே. (கக)

(இ-ள்.) சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில் — சிவனுஞ் சைதன்னிய ஸ்வரூபன் ஆன்மாவுஞ் சைதன்னிய ஸ்வரூபன் இவவிருவருஞ் சேதன ரூபியானபடியாலே முத்திகாலத்திலொரு முதலெனச் சொல்லில்? அஃதன்று.

சிவனருட்சித் திவனருளைச்சேருஞ் சித்து — சிவனனுக்கிரகத்தைச் செய்தற்குரிய சித்து இந்தவான்மாவும் அனுக்கிரகத்தைப் பெற்றிருக்கிற சித்துக்காண்

அவன்றான் பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ் சித்து — அந்தச் சிவ னிந்த வான்மாக்கள் சநநமரணத் துற்றதனாலே வருந்தமுற் றவனை யிளைப்பாற்றும் பொருட்டுப் பஞ்சகிருத்தியங்களையும் பண்ணிப் போகமொட்சங்களைக்கொடுக்குஞ் சித்து.

அவற்றிற் படியுஞ்சித் தறிவிகக ப் படுஞ் சித்துமிவன்றான் — இவன்றானவனாலே யாதொன்றை யறிவிக்கத் தானறிந் ததிலே யழுந்த வழுந்துகிற சித்து.

அவன்றானேயறியுஞ்சித்து — அந்தச்சிவன் சர்வஞ்ஞனதலாற் சர்வத்ஞதயு மறிகிறசித்து.

| | |
|---|---|
| ஆதலினா லிரண்டு மணைந்தாலுமொன்றாகாத நியமா யிருக்கும் | இத்தன்மையை யுடைத் தாகையினாலே சிவனு மான்மாவுந் தம்மிற் கலப்புண்டாய் வேறற நின்றாலுமொன்றாவதில்லை. அஃதென்போல வென்னில் ? |
| இயன்றாம் புத்தியுஞ்சித்த திவனாமோ | இந்தவானமாவுஞ்சித் திவனாலே காரியப்படும் புத்தியுஞ்சித் திவ்விரண்டுங் கூடியவிடத்து வேறற்றிருப்ப தொழிந்து ஏகபொருளாகாதவாறுபோல |
| இவன்றானும் புத்தியுஞ் சித்து | இந்த வானமாவுஞ்சேதனம் புத்தியுஞ் சேதனம் இவ்விரண்டுஞ் சேதனமாயிருக்கும். |
| இவனாமோ புத்தி | இந்த வான்மாவாகாது புத்தி. |
| இதுவு மசித் தெனில் | இந்தவான்மாவினுண்மையை விசாரித்துப்பார்க்கி லந்தபுத்தி யவனுக் கசித்தாயிருக்கும். அதுபோல, |
| அவனுக் கிவனு மசித்தாமே. | சிவனுடைய வுண்மையை விசாரித்துப்பார்க்கி லந்தச் சிவனுக் கான்மாவினது சித்து மசித்தாம் எ-று. |

சிவனைக்குறித்துச் சொல்லும்போ தான்மாவுக் கிஃ தவதரப் பெயரென வறிக; முக்யமன்று. (௪௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் ஜீவசைதன்னியத்திற்குஞ் சிவ சைதன்னியத்திற்கும் பேதங் கூறுகின்றது.

சிவனசீவனென்றிரண்டுஞ் சித்தொன்றென்னில் - சிவனு மான்மாவும் இரண்டும் சித்துருபமாகையா லான்மஞானக் கிரி

யைகளுக்குத் தடையாய்நின்ற ஆணவமல நீங்கில் சிவனைப்போ லே கிருத்திய கர்த்தா வாவனென்னில்?—சிவனருட்சித் திவன ருளைச் சேருஞ்சித்து - சிவன் ஆனந்தப் * ப்ரதாபியானசித்து, ஆன்மா வந்த வாநந்தத்தை யனுபவிக்குஞ் சித்து,—அவன்றன் பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்படியுஞ்சித்து - சிவன்றன் ஜநந மரண போகமோக்ஷங்களை யுண்டாக்கும் ஞா னஸ்வரூபி, ஆன்மா வினையிற்றுக்களை யடையும் ஞானஸ்வரூ பி,—அறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றன் - ஆன்மா சிவனறிவி க்க வறிகிற ஞானஸ்வரூபி,—அவன்றனை யறியுஞ்சித்து - சிவ ன் றனையறியு ஞானஸ்வரூபி,—ஆதலி னுவிரண்டு மணைந்தாலு மொன்றாகா தகநியமாயிருக்கும் - இவ்வாறு ஜீவனுக்குஞ் சிவ னுக்கும் ஞானக்கிரியை வேறுபாடுண் டாதலான் முத்தியிலு மொன்றுவதில்லை, பிரிவற்ற வத்வைதமாயிருக்கும். அதெவ்வா றென்னில் ?—இவன்றனும் புத்தியுஞ்சித் தவனுமோபுத்தி-ஆன் மாவும் புத்திதத்துவமுஞ் சித்தென்று சொல்லப்படுகையால் புத்தி ஆன்மாவோவென்னில் ?—இது அசித்தென்றிடில் அவனு க் கிவனுமசித்தாமே - புத்தி அசித்துருபமாகையால் சித்துருபி யான ஆன்மாவாகா தென்னில்? எக்காலமு மெல்லாத்தையு முள்ளபடி யோர் துணையுமின்றி யறியுஞ் சிவனைக்குறித்துப் பந் தத்திலே சிவன் மாயாகாரணங்களைக் கூட்டி யறிவித்தபொழு தறிந்து மிவ்வாறறியாதபொழுது ஜடத்தோடுந் தன்றோடும் பேதமற நிற்கையால் ஆன்மா அசித்தென்று சொல்லுவதற்குப் போதுமென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவனும் சீவனுஞ் சித் தொருசாதி யிருசித்துப் பொருளா

யிருக்குமென்ப திசையா தொருசித்துப் பொருளென் றுரைக்க மறுத் துணர்த்துகின்றார்.

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்து - சிற்பொருள் விடிப் பொருளு மாதலால் ஒன்றை விட் டொன்றிருக்குந் தானமுமில் லை. அதனால்,—ஒன்றும்-ஐக்கியமாம்,—எனனில்- அமூர்த்தவி புப் பொருளொன்றுக் கொன்று தட்டா துள்ளும்புறம்பு மொ த்திருக்கும். இஃதிருக்க அந்தச் சீவ சிவைக்கியம் ஆதியானுன் நித்தியம், அநாதியானல் வேற்றுமைக்குறி விளம்பப்படாது. வேற்றுமைக்குறி கண்டோங் கேட்டோமாகி யிருவர்க்கும் வை க்கப்படும். அந்த வேற்றுமைக்குறி யாதோ வென்னில்;—சிவன ருட்சித்து - சிவனுக்குப் பாமுத்தி வியத்திக் குறியனுக்கிரகம் பண்ணுஞ் சித்து,—இவன் சிவனருளைச் சேருஞ் சித்து - அந்த ச் சிவானுக்கிரகத்தைச் சிவனிடத்தினின்றும் பெறுஞ்சித்து,— அவன்றன் - சிவன்றன்,—பவந் கெடு புத்தி முத்தி பண்ணுஞ் சித்து - சிருட்டி திதி சங்கார திரோபாவ பத முத்தி யனுக் கிர கங்களைப் பண்ணுஞ் சித்து,—அவற்றிற் படியுஞ் சித்து - அந்த ப் பஞ்சகிர்த்திய பாதந்திரத்தி லகப்பட்டுக் கட்டுண்ணுஞ் சித் து,—அறிவிக்கப்படுஞ் சித்துமிவன்றன் - புத்தி முத்திக் கிரமத் திற் சாபேட்ச சிற்றறிவு நிரபேட்ச பேரறிவுகளினு லுணர்த்து விக்க யோக்கியமாகுஞ் சித்துஞ் சீவன்றன்,—அவன்றனே ய றியுஞ் சித்து- சிவன் சுவதந்தர அறிவன,—ஆதலினுலிரண்டும ணைந்தாலும் - முத்தியிற் சாயுச்சியமானுலும்,—ஒன்றுகாது - ஒரு பொருளாகாது,—அநந்யமா யிருக்கும் - அநந்ய சாயுச் சிய முதற் சம்பந்தச்சொ லிவ்விடத்துச் சாதிர்ச்சியப் பொ ருட் சொல்லாதலா லொத்திருக்கும். பந்தத்தில்,—இவன் றனு ஞ் சித்து புத்தியுஞ் சித்து,—சித்தெனும் வசன மாத்திரத்தி னுலே சித்தை விளக்குதலால், சிதசென் றுபசரிக்கப்படும்,—

புத்தியிவனுமோ - ஆகாது.—இது வசித்தென்றிடில் - புத்திசட மென்னில்,—அவனுக்கு - சிவனுக்கு,— இவனும் - சீவனும்,— அசித்தாமே - ஏகாரத் தெடுப்பினாலே யுபாதி தள்ளி ஸ்வரூப லக்ஷணத்தினாலே சிவனுக் கொத்த சித்துத் தானே அசித்த ன்று.

ஸ்வரூப லக்ஷணத்தினால் சித்துப்புத்தி தடத்த லக்ஷண த்தினாற் சித்தென் றுபசரிக்கப் பட்டதுபோலப் பசுத்துவமி ருத்தலாற் றடத்த லக்ஷணத்தினாலே யசித்தென் றுபசரிக்கப் பட்டது, முத்தியிலொத்த சித்தே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இருபொருளுஞ் சித்தேயாகலான் ஒத்தொன்றுமென்றலே யமைவுடைத்தன்றி, உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்குமு ரித்தேயென வேற்றுமைப்படுத்துக் கூறுதல் ஆண்டைக்கமையா தாலெனின்? அற்றன்று. ஒளியென்னும் பொதுமையால் ஒத் தொன்றுமாயினும் வியஞ்சகத்தையின்றி யமையாதா யதுவது வாய் முந்திக் காணுங்கண்ணொளிக்கும் அதுபோலத் தனக்கொ ரு வியஞ்சகம் வேண்டாது தானே வியஞ்சகமாய் எல்லாவ ற்றையு மொருங்கே விளங்கிநிற்கு ஞாயிற்றினொளிக்குந் தம்மு ள் வேற்றுமை பெரிதாயினாற்போல, சித்திரண்டற்குந் தம்மு ளந்தரங்கவேற்றுமை பெரிதுமுண்மையான், அவ்விருபொருளு ந் தம்முட் கூடியவழியும் அத்துவிதமாய் நிற்றலேயன்றி ஒன்றா ய்ப் போமாறில்லையென்பதாம்.

நீருநீரும்போல ஒத்தொன்றாய் நிற்குமென்னும் ஐக்யவாதி களை மறுத்தற்கெழுந்த விவ்விரண்டுசெய்யுளும், ஒத்து வேறாய்

நிற்குமென்னும் அருவசிவசமவாதிகளை மறுத்தற்கு முரியவாறு காண்க.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

சிவனுடன்கூடி யான்மா சிவானுபவத்தை யனுபவித்திருக்குமென்ற தெப்படி? ஆன்மசித்துஞ் சிவசித்துந் தனனிற்கூடி யொன்றாய் விடுகிறதே முத்தியென்ற வைக்கவாதியை நோக்கி மறுத் தருளிச்செய்கின்றார்.

சிவன்சீய னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னில்- சிவனென்று சொல்லப்பட்ட முதலு மானமாவென்று சொல்லப்பட்ட முதலுமிரண்டுஞ் சேதனமாயிருக்கையா லொருமுதலென்று நீசொல்லிலது கருததன்று அதென்னெனில்?—சிவனருட்சித் திவனருளைச்சேருஞ்சித்து - சிவனொன்றிலுந் தாக்காம லெல்லாத்துக்குந தாரகமாய் நிற்கிற ஞானமாகிய வறிவு, இந்த வான்மா வந்தவருளைப் பொருந்தி யதிற் றானாய்நிற்கிற வறிவு.—அவனன்றே பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித்து-அந்தப் பரமேஸ்வரனானமாக்களுடைய ஜநநங்களைப் போக்குகைப் பொருட்டாகப் புசிப்புக்களை யுண்டாக்கி யவற்றையுங் கன்மத்துக்கீடாகப் புசிப்பித்துத தொலைத்தவாறே மோக்ஷத்தையுங் கொடுக்கிற வறிவு,—அவற்றிற்படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்துமிவன்றான் - அந்த ஜநந மரணங்களிலே பொருந்தி வருகிற வறிவுமாய்ப் பரமேஸ்வர னறிவிக்க வறியுமதொழிந்து தானாக வறிகிற வறிவுமல்லவா யிருப்ப னிந்தவான்மா,—அவனன்றே யறியுஞ்சித்து - அந்தப் பரமேஸ்வரனேககாலத்திலே தானாக வறிகிற வறிவாகவிருப்பன்.—ஆதலினு லிரண்டு மணைந்தாலு மொன்றாகா - ஆகையாற் சிவனுமான்மாவுங்கூடினாலு முத்தி

யினு மொன்ருவதில்லே. ஆனுற் சிவனு மான்மாவுந் தன்னில் வேருயிருக்குமோ வென்னில? அப்படி வேருயிராது,— அநன்ய மாயிருக்கும்- ஆனுலுந் தன்னில் வேறற்றிருக்கும். இரண்டு சித்துமாய்த் தன்னில் வேறற்றிருந்தாற் றனியொவ்வாதோ வென்னில்? ஒவ்வாது. அதெங்ஙனே யென்னில்?—இவன்ருனும் புத்தியுஞ்சித்து - இந்த வான்மாவு மிவனுடையபுத்தியு மிரண்டுஞ் சேதனமாயிருக்கும். அப்படியிருந்தாலும்,—இவனுமோ புத்தி- அசேதனமாகிய புத்தி சேதனமாகிய வான்மாவாகாது.—இது வசித்தென்றிடில் - ஆன்மா வறிவுக்கறிவாயிருக்கிற புத்தி அசேதனமாமென்னில் ?—அவனுக்கிவனு மசித்தாமே - முன்சொன்ன வான்மாவுக்குப் புத்தி யசேதனமான முறைமைபோல அந்தச் சிவனுக்கிந்த வான்மாவுஞ் சேதனனுயினு மசேதனனேய யிருப்பன்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் ஐக்கியவாதி மறுப்பு "அறிவிற்கறிவு செறியவேண்டின்றே - யுண்மையிலிருமையு மொளியேயெனிலொரு - தன்மையாகமுன் சாற்றினரில்லோ" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது, சிவனுமான்மாவு மறிவாயிருந்தாலும் பலபிரகாரத்தாலும் ஒன்ருகாதென்றும், அப்படியொன்ருகாம லிருந்தாலும் வேறறறிருக்கு மென்றும், ஆன்மாவும் புத்தியுமறிவாயிருந்தாலும் ஆன்மாவுக்குப் புத்தி யசேதனமாயிருக்குமென்றும், அத்தன்மைபோலச் சிவனுக்கு மான்மா வசேதனமா யிருக்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

# சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

சிவனசீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மெனில்-சிவன் சீவனென்கிற விருபொருளும் சித்தேயாகலான் ஒத்து ஒன்று மென்றலே யமைவுடைத்தன்றி, உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தேயென வேற்றுமைப் படுத்துக் கூறுதல் ஆண்டைக் கமையாதா லெனில்? அற்றன்று,—சிவனருட்சித்து இவனருளைச் சேருஞ்சித்து-சிவ னருளாகியசித்தாம், சீவனவ்வருளைச் சேருஞ்சித்தாம்,—அவன்பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ் சித்து அவற்றிற்படியுஞ்சித்து-அம்முதல்வன பவத்தினைக் கெடுத்துப் புத்திமுத்தியினை யளிக்குஞ் சித்தாம்,உயி ரவைகளிலழுந்துஞ்சித்தாம்.—அவன்றானே யறியுஞ்சித்து இவன்றா னறிவிக்கப்படுஞ்சித்து - முதல்வன்றானே யறியுஞ்சித்தாம் உயிர் அறிவிக்க அறியுஞ்சித்தாம்,—ஆதலினாலிரண்டு மணைந்தாலு மொன்றுகாது அனனியமாயிருக்கும்-ஒளியென்னும் பொதுமையா லொத்து ஒன்றுமாயினும் வியஞ்சகத்தையின்றி யமையாதா யது வதுவாய் முந்திக்காணும் கண்ணொளிக்கும் அதுபோலத் தனகோர்வியஞ்சகம் வேண்டாது தானேவியஞ்சகமாய் எல்லாவற்றையு மொருங்கே விளக்கிநிற்கு ஞாயிற்றி னொளிக்குந் தம்முள்வேற்றுமை பெரிதாயினாற்போலச் சித்துஇரண்டற்குந் தம்முள் அந்தரங்கவேற்றுமை பெரிதுமுண்மையா னவ்விருபொருளுந் தம்முட்கூடிய வழியும் அத்துவிதமாய் நிற்றலேயன்றி யொன்றாய்ப்போமா றில்லை யாதலான்,— இவன்றனும புத்தியுஞ்சித் திவ னாமோபுத்தி - உயிரும் புத்திதத்வமும் சித்தெனக் கூறப்படினும் புத்திதத்வமும் உயிராதலில்லை,—இது அசித்தென்றிடிலவனுக் கிவனுமசித்தாமே - புத்திதத்துவஞ் சடமெனறிடி னே,

லை ததுதவங்களைநோக்க வுயிர் சித்தேயாயினும் முதல்வனை நோக்க வுயிர் அசித்தேயாம்.

நீரும் நீரும்போல வொத்தொன்றாய் நிற்குமென்னு மயிக்யவாதிகளை மறுத்தற்கெழுந்த விவ்விரண்டு செய்யுளும் ஒத்து வேறாய் நிற்குமெனனும் அருவசிவ சமவாதிகளை மறுத்தற்கெழுரிபவாறு காண்க

## மறைஞானதேசிகர் உரை.



இதற்கு மேலவுமவ ஞன்மாவையே சித்தென்பீராகின் முத்தியிற் சிவனாற் பிரயோசனமில்லை யென்று சொல்ல அதற்குதாரணமுகத்தா லுணர்த்து கின்றார்.

இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லியைந்தங்குபிரை யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத் தானாக்கி, யரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து,விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி மேனித்துத் தானெல்லாம் வேதிப்பானாகிக், கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற்கலந்தே. (கஉ)

(இ-ள்) இரும்பைக்காந்தம் வலித்தாற்போ லியைந்தங்குயிரை தானாகப்பற்றுந் தன்மையில்லாத விரும்பைக் காந்தந் தன்னகத்து வலித்துக் கொள்வதுபோல அமலனு மிங்கவான்மாவைத் தன்வசத் தாக்கிக்கொண்டு. இது சிவனிவனைத் தன்வசத்தாக்குத லென்பதற் குதாரணம்.

எரியிரும்பைச் செய்வதுபோ லிவனை தாளுக்கி — அங்கியானது தன்னைவந்தடைந்த விரும்பானதை எப்படித் தன் செய்தியாக்கிக் கொண்டாற்போலச் சிவனுந் தன்னை வந்தடைந்த வானமாவைத் தற்சொரூபமாக்கிக் கொண்டதென வுவமித்தது.

அரும்பித்திக்கனத்தையனலழிப்பது போன் மலத்தை யறுத்தமலன் — அக்கினியானது தன்னைத்தெரியாமல் மறைத்துநிற்கிற காட்டத்தின்கண் ணுதிக்கவு மந்தவச்னிதானே காட்டமென்னும் பெயரையழித்து நின்றமுறைமைபோல. நின்மலஞானசிவனுடனை கூடினவான்மா மாயாகாரியமாகிய மலத்தாற் றனுவாதியை யெடுத்துக் கொண்டு தன்னைத் தெரியவொட்டாமல் மறைத்திருக்கிற மலங்களையகற்றியதற்குதாரணம்.

அப்பணைந்தவுட்பேபோலணைந்து — உப்புக்கட்டியானது சலத்துடன் கூடினபொழு தெப்படி யுப்பென்னுந் தன்மை கெடாமல் வேறறக்கலந்திருக்கு மதற்குதாரணங் கூறியதாயிற்று.

விரும்பிப் பொன்னினைக்குளிகை பொளிப்பதுபோ லடக்கி — யாவராலும் விரும்பப்பட்ட விரதகுளிகையான தெப்படி பொன்னினுடைய விய ல்பைக் காண்டொட்டாமல் குளிகைதானே வியாபித்துத் தானே மேலிட்டு நிற்குமாறுபோல. சிவனு மிந்த வான்மாவையுந் தன்வசத்தாக்கித் தானே மேற்பட்டு நிற்குமதற் குவமித்தது.

மேளித்துத் தானெல்லாம் வேதிப்பாளுகி — இத்தன்மையை யுடையவுளு யானந்தத்தைப் பொருந்தித் தானெல்லாவற்றையு மறிவிக்குந்தன்மையையுடைய முத்தியின்கண்.

கரும்பைத்தே னைப்பாலைக் கனி யமுதைக் கண்டைக் கட்டியை யொத திருப்ப னந்தமுத தியினி ற்கலந்தே.

கருப்பஞ்சாறுமுதலிய விரதத்தையொத் திருக்கு மினபத்தை யான்மாவானவ னந்த முத்தியைப் பொருந்தியிருப்பனகாண் எ-று. (௪௨)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் ஜீவன்முத்தி யேழுவிதமுங் கூறுகின்றது.

சிவன,இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லிமைபந்தங் குயினை-சிவன் பிரபந்தனுன ஆன்மாவைக் காந்தமிரும்பை விகாரமன்றியிலே தன்வசத்தாக்கிக் கொண்டதுபோல பிரபந்தனுன ஆனமாவை விகாரமன்றித் தன்வசத்தாக்கிக்கொண்டவனுக் கோரிச்சையுந் தொழிலுமன்றி யெல்லாந் தனது செயலேயாக நிற்பன் —எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தனுக்கி-ஆனமா தத்தரிசனமாய் மேலொரு செயலுமின்றிச் சிவஞானத்தினுலே ஆன்மசுத்திபாய் நின்றவனை யிரும்பிலே அக்கியதிஷ்டித்துச் சுடுதல்முதலான தொழில்களைச் செய்வதுபோலச் சிவன அதிஷ்டித்துத் தனது கிருத்தியமான ஐந்தொழில்களையுஞ் செய்வன. அப்பொழுது இரும்பு சுடுகிறதென்றதுபோல ஜீவன்முத்தரா யிருக்கிற வின்னு ரின்னகிருத்தியத்தைச் செய்கிறுரென்று. சொல்லப்படும்.—அரும்பித திங்கனைதனை யனலூட்டுவதுபோல் மலத்தை யமலனறுத்து-ஆன்ம சுத்திகுமேல் சிவதரிசனப்பட்ட வானமாவி னிடத்திலே காஷ்டத்திலே முன் மறைந்திருந்த வக்கியானது பிரகாசித்துக் காஷ்டத்தினு

டைய தன்மையைக் கெடுத் தக்கினியாய் நின்றதுபோலச் சிவன் பிரகாசித்துப் பசுத்துவத்தைக் கெடுத்துத் தனதுமயமாக்கி நிற்பன்.—அப்பணைந்த வுப்பேபோ லணைந்து - சிவதரிசனாநந்தரம் சிவயோகத்தை யடைந்த ஆன்மாவைச் சலத்தினுடனே கூடின வுப்பானது சலத்தினுடைய ருசியையடக்கித் தனது ருசியாய் நின்றதுபோலச் சிவனு மான்மாவைத் தனது தன்மையுளடக்கித் தானாக நிற்பன,— விருப்பிப் பொன்னினைக் குளிகை யொளிப்பதுபோ லடக்கி - சிவபோகமாகநின்ற ஆன்மாவை, மிகவுஞ் சந்தோஷித் துருக்கிக் கொடுத்தபொன்னை ரசகுளிகை பருகி பொன்கெடாமலிருக்க அதுநிறத்தை மறைத்துத் தனிறமாகவே காட்டிநின்றதுபோல் சிவானந்த மான்மாவுக்கு அநந்நியானுபவமாகவே செய்து காட்டாசவுங் காண்பதாகவுமாயிருக்கிற ஞானத்தையடக்கி,—மேலளித்து-காட்சியிறந்து நின்ற ஆன்மாவைப் புரைவறக்கலந்து,—தானெல்லாம் வேதிப்பானாகி - ஞாதருஞானஞேய மூன்றும் நழுவ ஆனந்த பரவசனாகிய ஆன்மா தானேயாகநிற்பன். இவ்வாறுமுத்தி பேழுபேதமாகில் சிவாநந் தானுபவ மொருபடித்தோ பேதமுண்டோ வெனில்? பேதமுண்டெனபது,—கரும்பைக் கனியைப் பாலைத் தேனைக் கண்டைக் கட்டியை யமுதை யொததிருப்பனந்த முத்தியினிற்கலந்தே - இந்தச்சொன்ன வேழுபேத பதார்த்தமு மதுர ரசமேயாயிருக்கவும் பேதமுள்ளதுபோலச் சிவாநந்தமும் பேத முண்டு. அவைவறுமாரு,—கரும்பிலே கடினமாகிய கோதும் அற்ப மதுரமான சாறும் போலச் சீவபாவமதிகமுஞ் சிவபாவ மற்பமும் அதனால் விஷயானுபவ காலமதிகமுஞ் சிவானந்தானுபவகால மற்பமும், பழத்திலே கொட்டையுந் தோலு மதிகமும் சாறு அற்பமும்போல சீவபாவ மதிகமுஞ் சிவபாவ மற்பமுமாய்க் கரும்பிற் கடினமில்லை, பாலிலே தண்ணீர்ப்பங்கு மூ

ன்று பாலினுடைய பக்கொன்று கடினமேயில்லை, தேன் தித்தி
ட்டும் புளிப்பு மிருவகைரசம், கண்டசருக்கு ரசமும் ரூபமும் மொ
ன்றே கடின முண்டு, கட்டி மதுர ரூபமேயாகிக் கடினமன
றி யுடனேகளையும், அமிருத முன்சொன்ன தியாச்சிய கடினரசா
ந்தர ரசங்க ளில்லாமல் ஏகதமதுரமாயிருக்கும், அப்படியே ய
ந்த முத்திபெனபது. முடிவான வேறுமுகதி யதிலே யமிருத
மென்றும மதுரமென்றும் பேதமில்லாததுபோல சிவஞானமா
னைப் புணரவற விரைவி நிற்பன, இவயிற்றுக்களை யனுபவத்தி
னாலே யறிவதன்றி வாச்சிய வாசகத்தினாலே யறிவதனறெனற
றிதன்பொருள்.

தீக்ஷ்ணம் உதஞ்சை — பாக்ஷஸ்யபத்யகாரணாயம் வி
ஷாதேஷு நா பவந்தி கதா: | ஸஹஸ்ரஸக: பாஸ்ய
க்ஷ: காயகாரண ஸஞ்ஜிதா: ||

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவன் சீவனுக்குப் பரமுத்தி பண்ணும் பரிசு பகர்கின்றார்.

நல்ல துமதாசாரிடர் படல பாடன வாசனை மார்ச்சன மா
த்திரத்தினால் வைத்தியனாகிய நிமித்த கர்த்தா வால் கண்ணொளி
விளங்குவதுபோல மல பாடன வாசனை மார்ச்சன மாத்திரத்
தினாற் சிவனாகிய நிமித்த சர்த்தாவாற் சிவத்துவம் விளங்கு
மென்று பிறர் மதம் பிடிக்குமொரு சுத்தாத்துவைத சித்தாந்த
திருட்டாந்த வார்த்தை செப்பாது பிறர் மத திருட்டாந்தப்
பேச்சுப் பேசிய தேது? அஃதாவது.

இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லிசைந்தங்குயிரை

என்றது முத்தியிலுஞ் சுதந்தரிய மில்லை யெனும் பிரயோச்சிய கர்த்திருத்துவ வாதி மததிருட்டாந்தமாம்,—

எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத் தானாக்கி - என்றது சிவாவேசஞ் செப்புங் காபாலமத திருட்டாந்தமாம்,—

அருப்பித் திந்தனத்தை யனலழிப்பது போல் மலத்தை யழித்து-என்றது காட்டத்தால் மறைப்புண்டு கடைய முகிழ்த்தெரியிந்தனத்தை யெரித்தழித்தலால் மலமழிக்குஞ் சிவனுக்கு மறைப்பில்லாமைபாற் கடையவனுக் கொப்புச் சிவன், காட்டத்தில் மறைந்திருந் துதித்த வன்னி போல் மலத்தில் மறைந்திருந்ததிக்கு முயிர் சிவத்துவ மாகையால் விஷம திருட்டாந்தமாம். அல்லது தான்மா ஞானத்தால் முத்தியை முயலும் விவர்த்த வேதாந்திமதம் மலம்போ முத்திவாதிமத மிருவர் மததிருட்டாந்தமாம்,—

அமலன அப்பனைந்த வுப்பேபோலணைந்து-என்றது விசிட்டாத்துவைதம் விளம்பும் ராமாநுஜமத திருட்டாந்தமாம்,—

விரும்பிப் பொன்னினைக் குளிகை யொளிப்பதுபோ லடக்கி-என்றது நாராயணைப் பிரகிருதி யிலயவாதி பாஞ்சராத்திரிமததிருட்டாந்தமாம்,—

சேர்த்தது தானெல்லாம் வேதிப்பானாகி -என்றது சிவகுண சங்கிராந்தி சொல்லும் பாசுபத மததிருட்டாந்த தாபாசமாம்,—

கரும்பைத் தேனைப் பாகைக் கனி யமுதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பன-என்றது சாங்கியதேசி சத்துவ சமபோகவாதி மததிருட்டாந்தமாம்,—

முத்தியினிற் கலந்தே-என்றது கண்டைக் கட்டியை யொத்தெனபதை யிங்கு மிசைத்துக் கலந்தே யிருப்ப னென்பர், பரிணாத வேதாந்தமத திருட்டாந்தமாம். இப்படியிருக்க எப்படிச்

சிவ சித்தாந்தப் பொருளுரை நீருரைப்பீர்? சத்தியம் நீ சாற்றி யது. நமதாசாரியர் முற்றுவமை யுணலிச் சொன்னவரன்று; ஒருபுடை யொப்புநவகம் கருதி யுரைத்தாராதலால். மலவசமாகி மயங்கு முயிரைத் தன்வசமாக்கி மலமுதத பண்ணிச் சிவத்துவாபி வியத்தி விளைத்துத் தனக்கொப்புவித் தேவுத லியற்றுதற் றனைமைச் சம்மந்தஞ் சற்று முற்றிராது முற்றுமறுத்துச் சித்துச் சிவசாதிபாக்கி பொத் தொருமித் திரசித்துச் சிவசாதிய் கலப்பாயிருப்பானென நிசைய வினிதாய்ப் பொரு ளிசைவிப்போம்.

குளிகை-பொன்னைத் தனக்குட் கரக்கு மிரத குளிகை,—மேளித்து - மிச்சிரமித்து,—வேதிப்பாளுகி - தனமய மாக்குவாளுகி.

மற்றைய வெளிப்பொருள்.

இதனாற் கரும்பைத் தேனை யென்பன முதலியவும் மதங்கத்திற் சொல்லிய வெழுவகை முத்திக்குத திருட்டாந்தமாமென்றுஞ் சீவனுக் கியற்கையாய்ச் சிவத்துவ மில்லை சிவ வியத்திக் கலப்பினாற் செயற்கைச் சிவத்துவஞ் சித்திக்குமென்று முறையுரைக்குஞ் சிலர் மதந் திக்கற்றுப்போயின.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

காந்தம் விகாரமின்றி நின்றே இரும்பை வலிப்பவுங் கண்டாம், அதுபோல இறைவனும் விகாரமின்றியே உயிரைத் தன்வழிப்படுத்த நிற்பனுகலாற் சென்றணையு நிழல்போலச் சிவனில்லாமைபற்றிச் சிவன நிருவிகாரியாதற் கிழுக்கில்லை. எரி இரும்பைக் கெடுத்தலின்றித் தன்வண்ணமாக்கித் தனவண்ணமாக்குதற் குரித்தாகாது இவ்விரும்பின்கணுடன் றேன்றிநிற்கும்

களைமாத்திரங் கெடச் செய்யும், அதுபோல இறைவனும் உயிரைத் தன்வண்ணமாகச் செய்து தன்வண்ணமாக்குதற் குரித்தாகாது அவ்வுயிரின்கண்ணுடன்றோன்றி நிற்கு மலமாத்திரங் கெடச் செய்யுமாகலால், பொன்றுகை முதலியாகாமைபற்றி பொன்றுதற் கிழுக்கில்லை. நீரோடு சேர்ந்தவுப்புத் தன் சுவை முழுவது மந் நீர்க்காக்கித் தன்னோடொப்பச் சமஞ்செய்து நிற்கும், அதுபோல உயிரைச் சேர்ந்தவிறைவனுந் தனக்குரிய எண்குணங்களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னோடொப்பச்செய்து நிற்பனாகலான், நீரொடுநீர் சேர்ந்தாற்போலல்லாமைபற்றிச் சிவசமமாதற் கிழுக்கில்லை. இரதகுளிகை செம்பையுருக்கித் தன்னோடு கூட்டி வேதித்துப் பொன்னாகச் செய்தும் பொன்னியல்பைக் காட்டாது தன்னுளடக்கி நிற்குமாறுபோல இறைவன் உயிரையவ்வாறெல்லாஞ் செய்தும் அதனியல்பு சிறிதுந் தோன்றுதறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துளடக்கி நிற்குமாகலான், அப்பணைந்த வுப்பேபோலணைந்து ஒப்பச் செய்தமைபற்றி உம்பர்பிரானொருவனே உற்பத்தியாதிகளுக் குரியனாதற் கிழுக்கில்லை. கருப்பஞ்சாறு முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்றாகக் கலந்தவழி யுளதாகிய சுவை இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராமைபோல, இறைவனு முயிரினகணக்குணங் கலந்தவழி இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராத அனந்தசொரூபமாய் நிற்பன்; ஆகலான் அறிவிறந்து நிற்றல்பற்றி உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தாதற்கு இழுக்கில்லை யென்பதாம்.

சென்றணையு நிழல்போலச் சிவனிற்பனென்பது முதலாகக்கூறு மவ்வாதிகளை மேலோறுத்தவழி அவர்கூறு மாசங்கைகளை மறையேபரிகரித்துச் சித்தாந்தம் வலியுறுத்தற் பொருட்டு இங்ஙனம் வெவ்வேறுவமைகளின் வைத்துக் காட்டி ஒருங்கு கூறியவாறு.

8 - ஞ

மலரடிக்கீழ் வைப்பனெனவும், பாதநிழற்கீழ் நிற்கவெனவும், ஏக்கற்று நின்றிடவெனவும், அரன்மலரடிக்கீழிருப்பனெனவுங் கூறிய இந்நான்கு சூத்திரங்கட்குந் தம்முட் பொருள் வேற்றுமையில்லைப்போலுமென மயங்காமைப் பொருட்டு இறுதிக்கண் அவற்றைத் தொகுத்தெடுத்துக்கொண்டு சிவஞானமுதலிய நான்காக வகுத்து வைத்துணர்த்திய வாறுமாம்.

நின்மலசாக்கிரமுதலிய ஐந்தவத்தையுந் தெரித்துக் கூறிய வாறெனவுரைப்பாரு முளர்.

மதங்கத்துட் கூறப்படும் நால்வகை முத்திகளைவகுத்துக் கூறியதென உரைப்பாருமுளர்.

இத்தரும் பிந்தனமெனவும் ஆகியடக்கியெனவும் கலந்தொத்தெனவு மியையும்

இதனெனபுழி அன்சாரியையும் இல்லுருபும் விகாரத்தாற் றொக்கன.

அனலானழிக்கப்படுதலொப்புமைபற்றி இரும்பின் களிம்பை இந்தனமாக வுருவகஞ்செய்தார்.

அணைந்தெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

மேனித்தல் சுட்டுதல்.

ஆகியமெனச் சிறப்பும்மை விரித்துரைக்க.

கலந்தவழியெனபது கலந்தெனத் திரிந்து நின்றது.

அரும்பித்திந்தனத்தை அனலழிப்பதுபோலெனபதற்கு இவ்வாறுரைகக வறியாது விறகின்மேல் வைத்து உரைப்பாருமுளர்.

விரகையழிக்கற்கட்படும் விசேடமின்மையானும், ஏனையபோல உபிரோடிபைபுடைத்தாதற்குரிய வுவமையின்மையானும், அரும்பித்தென வொருசொல் லின்மையானும், அவ்வுரை போலியெனறொழிக.

அல்லதூஉம், தீஇரும்பைச் செய்வதுபோற் சீவன்றன்னைப் பந்தனையை யறுத்துத் தானாக்கியென அறுத்தல் ஆக்குதலிரண்டும் இரும்பினமேல் வைத்தே மேற்கூறிய வாசிரியர்க்கு ஈண்டுமதுவே கருத்தாதலுணர்ந்துகொள்க.

மேளித்துக தானெல்லாம் வேதிப்பானாகி என்றதனை அடக்கியென்பதனோடியையாது வேறுவைத்துரைப்பின், ஏனையவற்றிற்கெல்லாம் உவமை தனித்தனியெடுத்துக்காட்டி இதுமாத்திரைக் குவமை கூறாமை குன்றக்கூறலாய் முடியுமெனவுணர்க.

இவையைந்து செய்யுளானும் இரண்டாங் கூற்றிற்கு அவ்வமதம் பற்றி நிகழுமாசங்கைகளைப் பரிகரிக்குமுகத்தாற் சித்தாந்தங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

இப்படி முன் சொல்லிவந்த பலபிரகாரத்தாலுஞ் சிவனது திருவடியைப் பொருந்துகிற பக்குவான்மாக்களைத் தனது திருவடியிலே கூட்டிக்கொள்ளுகிற முறைமையு மவ்விடத்தி லுண்டாகிய கலப்பு மெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச் செய்கின்றார்.

இரும்பைக்காந்தம் வலித்தாற்போ லிசைந்தங்குயிரை—காந்தமானது ஒரு பணியாகிநின்று தன்வசத்திலே யிரும்பை வலித்துக் கொண்டாற்போலத் தன்னை வழிபடுகிறவர்களைச் சிவனுந் தனது திருவடியிலே கூட்டிக்கொண்டு,—எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தானாக்கி—அக்கினியைச் சேர்ந்த விரும்பையக்நி தானாகின்றாற்போலத் தன்னைப்பொருந்தின வான்மாவை

யுஞ் சிவனுந் தானாக்கி,— அரும்பித் திந்தனத்தை யனலழிப்பது போல் - காட்டத்திலக்நி தோன்றி அந்த அக்நிதானே காட்ட மென்கிற பெயரை யழித்துப்போட்ட முறைமைபோல,—மலத்தையறுக்கமலன் - ஆன்மாவினிடத்திலே பிரகாசித்து அந்த நிமலனாகிய சிவனானே ஆன்மாவினுடைய மலங்களைப் போக்கி,—அப்பணைந்த வுப்பேபோலணைந்து-நீரோடுகூடின வுப்பென விஞ்சிக்கமாட்டாம லந்த நீரிலே கூடானாக கிடக்கத தற்சொரூபந தோன்றாமல் நின்ற தன்மைபோல வான்மாவையுஞ் சிவன் சாயுச்சியத்திற் றன்னுடன் கூட்டிக்கொண்டு,—விரும்பிப் பொன்னினைக் குளிகையொளிப்பதுபோ லடக்கி - விருப்பத்துடனே குளிகையானது பொன்னினைத் தொன்றாகாம லப்பொன்னைக் கிரகித்துக்கொள்ளுகிற முறைமைபோ லான்மாவையுஞ் சிவன் சிநேகத்துடனே தன்னிடத்திலே கிரகித்துக்கொண்டு,—மேளித்துத் தானெல்லாம் வேதிப்பானாகி - இங்ஙனஞ் சொல்லப்பட்ட முறைமைகளெல்லாத்தாலுஞ் சிவனான்மாவை மேற்படுத்தித தற்போதத்தையும் போக்கிச் சிவபோதமேயாக்கித் தன்னிடத்திலே யொன்றுபடுத்திக்,—கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பனந்த முத்தியினிற்கலந்தே - கரும்பையுந் தேனையும் பாலையும் பழத்தையும் அமுதத்தையுங் கற்கண்டையுங் கருப்புக் கட்டியையும் புசித்தவர்களுக்குள்ள சுகத்தையொத்த முடிந்த முத்தியாகிய சாயுச்சியத்தைப் பெற்றுச் சிவஞானிக ளனுபவிக்கும்படியவர்களிடத்து வேறற்றுச் சுகஸ்வரூபியாயிருப்ப னந்தச்சிவன்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். ௧௧-சூ, ௪-வெ, "மென்னுயிருளமதிதுறந்த வாறனபின, மன்னு மரனே மலந்துறந்து—தன்னின், வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல், சலிப்பில் விகாரியலன்றான்" என்றும், "அப்பணைந்தவுப்

பினாமமிணைந்து சேடமாங்-கப்பின்று மீசன்கழல்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவ ஞான்மாக்களைத் தன்னிடத்திலே கூட்டிக்கொள்ளு மிடத்துத் தனக்கொரு விகாரமற நிற்கிறது இரும்புங் காந்தமும்போல வென்றும், தானாகிறதுக் குவமை அக்நியு மிரும்பும்போல வென்றும், மலத்தைப் போக்கிறதற் குவமை காட்டத்திற் றோன்றின நெருப்பு காட்டத்தைச் சுடுகிற தன்மைபோலவும், அளவு விஞ்சாமலான்மாச் சிவனாய் நிற்கிற முறைமை அப்பைச் சேர்ந்த வுப்புப்போலவும், இவனை யுள்ளடக்கிக்கொண்டு நிற்கிற முறைமை பொன்னைக் குளிகையான தன்னுள் ளடக்கிக்கொண்டு நின்ற முறைமைபோலவும், இங்ஙனஞ் சொல்லப்பட்ட முறைமைகளாலே யிவனைத் தானாக்கிக் கரும்பு முதலான சுவைகளைப்போல சாயுச்சியத்தி லான்மா வுடனே யிரண்டறக் கலந்து சுகஸ்வரூபியா யிருப்பனென்னு முறைமையு மறிவித்தது

———○———

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———○———

காந்தம் இரும்பை வலித்தாற்போ லங்குயிரை யீர்ந்து- சாந்தம்விகாரமின்றி நின்றே யிரும்பை வலிப்பவும் கண்டாம், அதுபோல விறைவனும் விகாரமின்றியே யுயிரைத் தன்வழிப்படுத்து நிற்பனாகலாற் சென்றணையு நிழற்போலச் சிவனில்லாமை பற்றிச் சிவனிருவிகாரியாதற் கிழுக்கில்லை,— எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தானாக்கி யரும்பித் திங்கணத்தை யனலழிப்பதுபோல் மலத்தை யறுத்து - எரியிரும்பைக் கெடுத்தலின்றித் தன்வண்ண மாக்கித் தன்வண்ணமாக்குதற் குரித்தாகாது இவ்விரும்பின்கணுடன் றோன்றி நிற்கும் கறைமாத்திரங்

கெடச்செய்யு மதுபோல விறைவனு முயிரைத் தன்வண்ண மா
கச்செய்து தன்வண்ண மாக்குதற் குரித்தாகா தவ்வுயிரின்க ணு
டன ரொன்றிநிற்கு மலமாத்திரம் கெடச்செய்யு மாகலான்
பொன்றுகை முதலியாகாமைப்பற்றி யொன்றாதற் கிழுக்கில்
லை,—அப்பணைந்த வுப்புப்போல விரும்பி யமலனணைந்து-நீரொ
டு சேர்ந்த உப்புத் தன்சுவைமுழுவது மந்நீர்க்காக்கித் தன்னோ
டொப்பச் சமனசெய்து நிற்குமதுபோல வுயிரைச்சேர்ந்த இ
றைவனும் தனக்குரிய எண்குணங்களையு மவ் வுயிரின்கட் பதிப்பி
த்துத் தன்னோடொப்பச் செய்து நிற்பனாகலான் நீரொடுநீர்சே
ர்ந்தாற்போலல்லாமைப்பற்றிச் சிவசமமாதற் கிழுக்கில்லை,—கு
ளிகையொளித்துப் பொன்னினை யடக்கி யொளிப்பதுபோல் கா
னெல்லாம் வேதிப்பானாகி-இரதகுளிகை செம்பையுருக்கித் தன்
னொடுகூட்டி வேதித்துப் பொன்னாகச்செய்தும் பொன்னியல்
பைக்காட்டாது தன்னு ளடக்கி நிற்குமாறுபோல இறைவ னுயி
ரை யவ்வாறெல்லாஞ் செய்து மதனியல்பு சிறிதுந் தோன்றாது
அறிவிறந்து நிற்குமாறு தனதுவியாபகத்து ளடக்கி நிற்கு மாக
லா னப்பணைந்த உப்பேபோ லணைந்து ஒப்புமை செய்தமைப்ப
ற்றி உம்பர்பிரா னொருவனே யுற்பத்திபாதிகளுக் குரியனாதற்
கிழுக்கில்லை,—கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டை
க் கட்டியைபொத்து முத்தியினிற்கலந்து இருப்பன் - கருப்ப
ஞ்சாறு தேன் பால் கனி அமுது கற்கண்டு சருக்கரை முத
லிய சுவைப்பொருளெல்லா மொன்றாகக் கலந்தவழிப்புளதாகிய
சுவை யிவ்வியல்பிற் றெனப் பிரித்தறிய வாராமைபோல இறை
வனு முயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி யிவ்வியல்பிற் றெனப்
பிரித்தறியவாராத ஆநந்த சொரூபமாய் நிற்பனாதலின அறிவிற
ந்து நிற்றல்பற்றி யுயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கு முரித்
தாதற் கிழுக்கில்லை யென்பதாம்.

சென்றணையு நிழல்போலச் சிவனிற்பன் என்பது முதலாகக்கூறு மவ்வாதிகளை மேலே மறுத்தவழி யவர்கூறு மாசங்கைகளை முறையே பரிகரித்து சித்தாந்தம் வலியுறுத்தற் பொருட்டு இங்ஙனம் வெவ்வேறு உவமைகளினை வைத்துக்காட்டி யொருங்கு கூறியவாறு.

இவை ஐந்துசெய்யுளானும் இரண்டாங்கூற்றிற் சவ்வமதம்பற்றி நிகழு மாசங்கைகளைப் பரிகரிக்குமுகத்தாற் சித்தாந்தம் கூறப்பட்டது.

☞ கக-ரூ, உ-ம், அதிகரண முடிந்தது.



பதினோராஞ் சூத்திரம் முற்றிற்று.



" காமங்கோறும்"
என்ற பதினோராஞ் சூத்திரம்

பன்னிரண்டு முற்றிற்று.



பாயிரமுட்பட ௲உக.

சிவமயம்.

# சிவஞான சித்தியார் சுபக்ஷம்.



## கஉ—வது, அடியவர் இலக்கணம்.



### மறைஞானதேசிகர் உரை



மேற்பன்னிரண்டாஞ் சூத்திர மென்னுதலிற்றோ வெனின்? முன்சொன்ன வுண்மையானு மதனபின சொன்ன வுபயாத்தானுஞ் சிவனை யுணர்ந்த ஞாதாக்கள் தமது முதலெனக் கருதிநிற்கு முறைமை யுணர்த்துத னுதலிற்று.

மேல் இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ வெனில் பிரமா முதலாயினோரால் சிந்திக்கப்படாத பதியை யிந்தச் சீவன்முத்தர் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதனுதலிற்று.

செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்க ளறுத்திச னேசரொடுஞ்செறிந்திட், டங்கவர்தந் திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி, யெங்குமியாமொருவர்க்கு மெளியோமல்லோ மியாவர்க்கு மேலானோ மென்றிருமாப் பெய்தித், திங்கண்முடி யாரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே. (க)

(இ-ள்.) செங்கம — செங்கமலம்போன்ற சிவனது சீர்பாதலத் தாளி — மாகிய வாநந்தமாகிய சுவானந்தானு பூதி

ணைகள்சேர வொட்டாத் திரிமலங்க ளறுத்து

யைப் பருகவொட்டாது மும்மலங்களையு நீக்கி

ஈசனேசரோ டுஞ்செறிந்திட்டு

சிவனிடத்தி லெண்வகைப் பத்தியைச்செய்யுஞ் சிவபத்தர்களுடன் கூடியிருந்து

அங்கவர் தந்திருவேட மாலயங்க ளெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி

அவ்விடத்தவர்களினது திருவேடத்தையு மதற்குச் சமானமான சிவாலயங்களையுங் கண்டவிடங்களெல்லாஞ் சிவனே சாந்நித்தியமா யிருப்பனெனக் கருதி வணங்கிநின்று தோத்திரத்துடன் கூத்துமாடி,

எங்குமியா மொருவர்க்கு மெளியோமல் லோ மியாவர்க்கு மேலானோமென் றிருமாப் பெய்தி

எவ்விடத்தும் யாமே நிறைந்து நிற்கிறோமதனாலே யாவர்க்கு மெளிமையாக அவர்களவசவிருத்தி யாரோம், யாவர்க்கு மேலாயிருப்போமென்று பெருமிதமெய்தி,

திங்கண் முடியா ரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே.

இங்ஙனம் பாசநீங்கிச் சிவஞானச் செயலே மேலிட்டிருக்கப்பட்டா நிறை வறிவினையுடைய ஞாதாக்கள் சந்திரனைத் திருச்சடாமுடியிலே தரியாநின்ற சிவனுக் கடிமையோமென்று கருதிச் சஞ்சரியாநிற்பார்கள் எ-று.

தூலலிங்கமாகிய வாலயமெனவே சூக்குமமாகிய சிவலிங்கமெனப்பெறும்.

சிவஞானச் செய்தி யுணர்ந்தோரே யென்பது எழுவாய், திரிந்திடுவரென்பது பயனிலை.

இதற்குச் சிவஞானபோதம் மதங்கம் பரமேசுரத்து மதிக. (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் சிவஞான சரிதையாகிய பாசுபபததி கூறுகின்றது.

செங்கமலத்தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்களறத்து - சிவாநந்தத்தை யநந்பாநுபவமாகப் பொருந்துவதற்குத் தடையாயிருக்கிற மூன்று மலத்தையு மொழித்து.

ஒழிக்குமாறியாதோவென்னில்? ஆணவமல சத்தியானது, மோகம் மதம் ராகம் * விஷாதம் தாபம் ÷ சோஷம் ‡ வைசித்திரியம் எனவேழுபேதமாம். இந்த வேழின வசமாகாதிருக்கையாணவ மலத்தை நீங்குதல்.

அவையிற்றுக்களைப் பொருந்தில் வருவன, மோகமானது § வநிதையர் முதலான விஷயங்களிலே வித்நிஷேதம விசாரியாமற் பொருந்துதல்.

மதமாவது முனசொன்ன வநிதையாதி கிட்டினவிடத்திலே இந்த வநிதையைப்போல வொருத்தருமில்லை இவளே தேவவனிதையென் றபிமானம் பண்ணுவது.

ராகமாவது அந்த விஷயத்திலே மேன்மே லாசையைப் பெருக்குதல்.

விஷாதமாவது அந்த விஷய விரகத்திலே மெத்தவுந் துக்கப்பட்டழுந்தல்.

தாபமாவது மனது தபிக்க வாற்றுதல்.

சோஷமாவது விரகாதிக்கியத்தினாலே தேகத்தில் ஜ்வரமும் பொறுக்கப்போகாத தாபமுமாவது.

வைசித்திரியமாவது இந்த ஸ்திரீ யிந்தவுரவின்முறையார் இதமாய்ப் புசிக்கு மன்னமுதலான பொருள்கள் பூமி இதெல்

லா முண்டாச்சுது, ஆகலா லொருகுறையு மில்லோம், இவைக ளெல்லாத் துடனுங்கூட வென்னை ரக்ஷிக்கிறவர்களாலொன் றிது முதலான பல சிந்தனைகளைப் பண்ணுவது வைசித்திரியம்.

மாயை பொய்யை மெய்யெனும்படி மயக்கறிவைப் பண்ணுவது. தேகாதி பிரபஞ்சமெல்லாம் பொய்யென றதி லபிமானம்விட்டுச் சிவனிடத்தி லபிமானம்பண்ணுதல் மாயை நீங்குதல். தனக்கும் பிறர்க்கும் ஸ்வதந்திரமில்லை சர்வான்மாகளுக்கு மீஸ்வராபரதந்திரரா யான்செய்தார் பிறர்செய்தா ரென்னுஞ் சுட்டுத லொழிதல் கன்மம் நீங்குதல். இதற்குச் சம்மதி

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஈசனேசரோடுஞ்செறிந்து - இவ்வாறு மும்மல சம்பந்தங்களை நீங்கின சிவபத்தருடனேகூடி,—

அங்கவர்தந்திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி - சிவபத்தர்களுடனே கூடினவிடத்து அவர்களுடைய ஜாதியையுங் குணத்தையும் விசாரியாமல் சிவனுடையாளமாகிய விபூதி ருத்திராக்ஷந் தரித்தபேர்களைக் கண்டமாத்திரத்திலே அஞ்ஞானத்தையறுக்கு மரனிவர்களென்று பாவித்துஞ் சிவனுக்காலயமாகிய சிவலிங்கங்களைச் சிவனென்று பாவித்தும். அடைவே தொழுதிறைஞ்சி என்றது சத்த + புனருத்திவாராமல் சொன்னது. இருவகையையுந் தண்டனிட்டேனென்றிதன்பொருள்.—

பாடியாடி-சிவாநந்த மேலீட்டினால் சிவன்புகழைப் பண்ணுடனேபாடிக் கைகொட்டிக் கூத்தாடி,—

எங்குமியா மொருவர்க்குமெளியோமல்லோ மியாவர்க்கு மேலானோமென் றிருமாப்பெய்தி - பூலோக முதலாய்ப் பிரமலோக பரியந்தத்திலும் மனிதர்முதலாக பிரமா வீறானபேர்க்குள்ளே பொருவர்க்கு மிபாந் தாழ்ச்சியுடையோ மல்லோம் முன்சொன்ன பேர்கெல்லாம் முயர்ச்சியை யுடையோமென்று தலையெடுப்புடைத்தாய் இவ்வாறுபெற்றும்,—

திங்கண்முடி யாரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே - சந்திரசேகரருடைய வடியார்க்

கடியோமென் றவர்களேவின பணிசெய்து சஞ்சரிப்பார்கள் சிவஞான சரிதையுடைய பெரியோர்களென் றிதன்பொருள்.

* விஷாதம்-விசனம், ÷ சோஷம்-உலருதல், ‡ வைசித்திரியம்-ஆச்சரியம், § வநிதை - மடந்தை, + புனருக்தி - இரட்டித்துச் சொல்லல்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சமாதி கூடியிருக்குஞ் சமயத்துச் சிவோகம்பாவனை புரிந்து பண்ணிப் பூசாநமஸ்கார காரிய புத்தி பண்ணுதிருந்தாலுஞ் சமாதி சலனம் வந்தகாலத்துச் சரியானுட்டானந் தாக்கித் தூக்கிச் சமாதிநிலை சாரவேணுமென்று பனிரண்டாஞ் சூத்திரத்திற் படுத்திச் சரியை படித்து முடிக்கின்றார்.

செங்கமலத் தாளிணைகள் - ஞானக் கிரியா சத்திக்குறிச் சிவத்துவத்தை,— திரிமலங்க ளறுத்து - தேசத்தி னிமித்தஞ் சிறிது சேஷித்து நிற்கத் தீட்சா சுத்தி பண்ணிக் கொண்டு,— சிவஞானச் செய்தியுடையோர் - நிர் விகற்ப சமாதி நீங்கிச் சவிகற்ப சமாதி சேர்ந்தோர்.

மற்றறைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வாறு பத்தாஞ்சூத்திரத்தானும் பதினொராஞ்சூத்திரத்தானும் முறையே பாசநீக்கமுஞ் சிவப்பேறுமாகிய பயன் பெற்றார்க்குச் சீவன்முத்திநிலைக்கணிகழுமியல்பு வகுத்துக் கூறுதற்கெழுந்தது பன்னிரண்டாஞ் சூத்திரம்.

பற்றறக் கழிந்த மும்மலங்கள், விளக்கற்றம்பார்க்கு மிருள்போல, அறிவற்றம் பார்த்து நிற்பனவாகலான், அவற்றை யஞ்சிப் பரிகரித்தலும், பரிகரித்தற்குத் துணையாகிய மெய்யன் பரோடு பயிறலும், பயிற்சி நிலைபெறும்படி அவரது திருவேடத் தையுஞ் சிவாலயத்தையும் அரனெனக் கண்டு வழிபடுதலுமுடை யராய், இப்பேறு பெறமாட்டாரது சிறுமையும் பெற்றுறது பெருமையும் நோக்கிக் களித்துவாழ்தல், சீவன்முத்தர்க்குரிய வியல்பெனபதாம்.

ஓட்டாவென்னும் பெயரெச்ச மறை ஏதுப்பெயர் கொண்டு முடிந்தது.

இச்செய்யுள் முசனூல் பன்னிரண்டாஞ் சூத்திரம்போல முக்கூற்றதாமாறு கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

முன் சொன்ன வுண்மையாலும் பின் சொல்லிவந்த வுபாயங்களாலும் சிவனைப்பெற்ற ஜீவன் முத்தராயுள்ளவர்கள் பிராரத்தம் புசித்துப் பின்பு பரமமுத்தி யடையுமவர்களிருந்த தேகத்தோடு கூடிநிற்கிற முறைமை மேலருளிச்செய்கிறார்.

செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்களறுத்து - சிவக்க தாமரை மலர்போன்ற சிவனுடைய சீபாதங்களைச் சென்று பொருந்தவொட்டாத ஆணவ மாயை காமியமென்னு மும்மலங்களையு மறுத்து,—ஈசனேசரோடுஞ் செறிந்திட்டு - பரமேசுவரனளவிலே மிகுந்த பத்தியையுடைய சிவபத்தர்களுடனே கூடி,—அங்கவர்தந்திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி - அப்படிச் சிவனி

டத்திலே கிருபையுடையவர்கள் திருவேடத்தையுந் திருக்கோயில்களையும் பரமேஶ்வரனென்றே கண்டு கும்பிட்டுத் தண்டனைபண்ணிச் சந்நதியிலே கூத்துமாடிப் பாட்டும்பாடி,—எங்குமியா மொருவர்க்கு மெளியோமல்லோம் - சுவர்க்கம் நரகம் பூமியென்று சொல்லப்பட்ட எவ்விடத்திலு முள்ளவர்க ளொருவர்க்கு நாம்பயப்படுவோ மல்லோம்,—யாவர்க்குமேலானோம் - சர்வர்க்கு மேலான சிவனுக் கடிமைப்பட்டுச் சர்வர்க்குமேலானோம்,—என்றிறுமாப்பெய்தி - இந்த வழிபாட்டினாலே பிழைத்தோமென்கிற விறுமாப்பைப் பொருந்தி,—திங்கண்முடியாரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோரே - சந்திரசேகர னுடைய வடியாருடைய வடியோமென்கிற இந்தத் தலைமையை மகத்தாகச் சொல்லிக்கொண்டெங்கும் வியாபரியா நிற்பர்கள் சிவஞானமாய் நிற்கிறவர்கள்.

இதனாற் சொல்லியது, ஜீவன்முத்தராயுள்ள சிவஞானிகளுக்கு முனபு மலத்திரயங்களோடுகூடி வந்த வாதனைகளாகாதென்றும் மனத்தினாற் சிந்திக்க வொண்ணாத சிவனை மனவாக்குக் காயங்களினாலே சிந்தித்து வழிபடுமுண்றமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்க ளறுத்து - செந்தாமரை மலர்போல் விரிந்து விளங்கிய திருவடிகளை யணையவொட்டா தயர்த்தலைச் செய்விக்கும் பற்றறக் கழிந்த மும்மலங்கள் விளக்கற்றம் பார்க்கு மிருள்போல அறிவற்றம் பார்த்துநிற்பன ஆகலா னவற்றை யஞ்சிப் பரிகரித்தலும்,—ஈசனேசரோடுஞ் செறிந்து - பரிகரித்தற்குத் துணையாகிய மெய்

யன்பரோடு பயிறலும்,—அங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம் - பயிற்சி நிலைபெறும்படி யவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும்,— அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி - அரனெனவேகண்டு வழிபா டியற்றி யானந்த மேலீட் டா லாடல் பாடல்களைச் செய்தலு முடையராய்,—எங்குமியா மொருவர்க்கு மெளியோமல்லோம் யாவர்க்கு மேலானோ மெ ன்றிறுமாப் பெய்தி -இப்பேறு பெறமாட்டாரது சிறுமையை நோக்கி யெவ்விடத்துள்ளார்க்கும் யாமெளியராதலின்றி யத திருவடியைத் தலைக்கூடப் பெற்றமையா லியாவர்க்கு மேலா னோ மெனக்களித்தலும்,—திங்கண் முடியா ரடியா ரடியோ மென்று திரிந்திடுவர் - திருவடியைத் தலைக்கூடப் பெற்றவரது பெருமையைநோக்கி யவர்க்கடிமையென வாழ்தலும்,—சிவஞா னச் செய்தியுடையோரே - சீவன் முத்தர்க்குரிய விலக்கணம்.

இச்செய்யுண் முதனூல் பனிரண்டாஞ் சூத்திரம்போல முக்கூற்றதாமாறு கண்டுகொள்க.

---

கஉ-சூ, க-ம், அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

சிவன் சர்வவியாபியா யிருத்தலாற் சிவபத்தர்களிடத் தனபு செய்யு முறைமை யுணர்த்துகின்றார்.

ஈசனுக் கன்பில்லா ரடியவர்க் கன்பில்லா ரெவ்வு யிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார், பேசுவதெ ன்னறிவிலாப் பிணங்களைநா மிணங்கிற் பிறப்பினொடு மிறப்பினொடும் பிணங்கிடுவர் விடுநீ, யாசையொடு மா

னடியா ரடியாரை யடைந்திட் டவர்கரும முன்கரும
மாகச்செய்து, கூசிமொழிந் தருண்ஞானக் குறியினின்
று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. (௨)

(இ-ள்.) ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார் — சிவனிடத்திலே நிறைந்த பத்தியில்லாதவர்களவனதடியார்களிடத்திலும் பக்தியற்றவர்களே! அஃதென்போலவென்னில்? யாதாமொருவர் மனைவியிடத்தின் மிகுந்த விருப்ப முண்டாகில் அவள் பிள்ளையிடத்து மிகுந்தவிருப்ப முண்டாம், அவளிடத் தாசையில்லாவிடத் தப்பிள்ளையிடத் தாசையில்லாத வாறுபோல.

எவ்வுயிர்க்குமன்பில்லார் தமக்குமன்பில்லார் — எல்லாப் பிராணிகளிடத்துங் கிருபையற்றவர்கள் தம்மளவிலு மன்பற்றவர்களே!

பேசுவதென்னறிவில்லாப் பிணங்களைநாம் — சிவன் சர்வான்மாக்களிடத்தும் வியாபித்து நிற்கிறானெனக் கருதி யவர்களிடத் தயைபுசெய்யாத பிணங்களுக்கு நாமென்னபுத்தி சொல்லப்போகிறோம்.

இணங்கிற்பிறப்பினொடு மிறப்பினொடும்பிணங்கிடுவர் விடுநீ — இவர்களறிவில்லாத மூடராதலாலவர்களைச் சேர்ந்தால் ஜனன மரணங்களிலே வீழ்த்தி விடுவர்களாதலா லவர்களிணக்கத்தை யாகாதென் றுவர்த்து நீவிடுவாயாக.

ஆசையொடுமரனடியாரடியாரை யடைந்திட்டவர்கருமமுன்கருமமாகச்செய்து — விருப்பத்துடனே மெய்யன்பைப் பொருந்திச் சிவனடியா ரெப்பொழுது மந்தப்பரத்தைவிட்டு நீங்காதிருப்பர்களாதலாலவர்களடியாரைக்கூடி யவர்கள் கருமத்தை யுன்னுடைய கருமமெனக் கருதிப் பணியிட்டுக்கொண்ட வடிமையைப்போல அவர்க

ளேவுதற்கு முன்னே யறிந் ததனைச் செய்து முடித்து,

கூசிமொழிந்து — நாமிவர்க் கிந்தக் காரியத்தைச் செய்யலாமோ வென்று மனதிற் சழக்கையறுத்து,

அருண்ஞானக் குறியினின்று — அந்த ஆசிரியராலே யுணர்த்தப்பட்ட நிட்டையைப் பொருந்திநின்று,

கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. — எவ்விடத்துஞ் சர்வ வியாபியாய் நின்ற பொருளைக் குறித்துக் களித்துப் பரமமான ஆனந்தத்துடன் பொருந்திக் கும்பிட்டுத் தண்டமிட்டுக் கூத்தாடித் திரிவாயாக. எ-று.

தமக் கன்பில்லாரென்பது, தாமுப்புநெறி கருதாமைபற்றியது.

அடியார் - சிவஞானிகள். சிவஞானிகளடியாரென்றது பொதுமைபற்றிச் சிவபத்த ஜநங்களைக் கூறியது.

இதற்கு மதங்கம் ஞானரத்நாவலி சிந்திய விசுவத்துமறிக. (உ.)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேலிதனையே திடம்பெறக் கூறுதல்.

அடியவர்க் கன்பில்லா ரீசனுக்கன்பில்லார் - சிவனடியாரிடத்தில் பத்தியில்லாதபேர் சிவனிடத்திலும் பத்தியில்லாதபேர்களே! சிவனடியாரிடத்தில் பத்திபண்ணாமல் சிவாலயத்திலே பத்திபோலச் சிலர் செய்தாலு மது வயிறுவளப்பின் பொருட்டான ÷ காபட்டியமான பத்தியே மாகேசுவரரிடத்திலே யவமானம்பண்ணிச் சிவலிங்கத்திலே பூசைபண்ணினுறு் பயனில்லை.—

ததாஹ:—ஹிம்ஸாம் த்விஷோதவ்யாதம் சமஞ்சா சமசிர
வசு ஜம்ஸஹிவஸ்யா வஸாரெநந ஸ்வாவரம் நிஷ்டம்ஹரெவசு॥

எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்கு மன்பிலார் - எல்லாச் சீவனிடத்திலுந் தயை யுண்டாயத் தம்மைபோல் விசாரித்தபேர்களே சனன மரணமாகிய கடலிலே நின்றுங் கரையேற வன்புடையவர்கள், இதில்லாதபேர்கள் தன்னிடத்திலே யன்பில்லாதபேர்களே,— பேசுவதென் - அவர்களை நான்சொல்லுவதென்ன,—அறிவில்லாப் பிணங்களை நாமிணங்கிற் பிறப்பிறொடு மிறப்பிறொடும் பிணங்கிடுவர்விடு - அறிவில்லாதபடியினாற் பிணங்களுக் கொத்த பேர்களுடனே நாங்கூடிப் பிறப்பிறப்புக் கேதுவான தர்மங்களைப் பண்ணும்படிக்குச் சொல்லிக் கலகம் பண்ணுவார்களாகையா லவர்களுடனே கூட்டரவை நீதவிர்க்கக் கடவை.—ஆசைசேபோடு மரனடியா ரடியாரை யடைந்திட்டவர் கரும முன்கருமமாகச் செய்து கூசிமொழிந் தருண்ஞானக் குறியினின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே - மிக்கநேசத்துடனே சிவனடியாரையு மவர்க்கேவற் செய்வாரையுஞ் சேர்ந் தவர்க்கு வேண்டுங்கருமமே யுனக்கு வேண்டுங் கருமமாகச்செய் தவர்களுடனே பேசுங்காலத்து மவர்களைச் சொல்லும் பூச்சியவசனமு முனனைச்சொல்லும் நைச்சியவசனமும் முனனைச் சொல்லும் ÷ நைச்சியவசனமும் தப்புதோவென்றுங் கூச்சத்துடனேபேசி யாசாரிய ரருளிச்செய்த ஞானநிஷ்டையிலே நின்று மெவ்விடத்திலுஞ் சிவமேகண்டு தண்டனிட்டு கைகொட்டிக் குணலைக் கூத்து நடித்திவ்வாறு சஞ்சரிப்பாயாகவென் றிதன்பொருள்.

÷ காபட்யம்-வஞ்சனை, + நைச்சியம்-அடக்கம்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

இதவுமது.

ஞானக் குறியினின்று தாசோகம் பாவனை தாங் கச்சரி யை சரிக்குமிடத்துஞ் சிவோகம் பாவனை ஞானந் தரித்துச் சரிப்பவரொன்று தாற்பரியம்.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

கழிகாமத்தராயினோர்க்கு, அத்தொடர்புடையார தியைக்கம் அக்காமப்பைங்கூழ் வளர்க்கு நீராதல்பற்றி அதன்கட் கழிபேருவகையும், அல்லாரதிணக்கம் அதனைப் பாறச்செய்யுங் களையாதல்பற்றி அதனகண் வெறுப்புமிகுதியும் உளவாமாறுபோல, மாறுத சிவானுபவ மருவிக்கொண்டு அரன்மலரடிக்கீழிருக்கப்பெற்றோர்க்கு, அதனை வளர்க்கு நீர்மையராகிய வத்தொடர்புடையாரோ டிணங்குதற்கண் உவகைமிகுதியும், அதனைக் கெடுக்கு நீர்மையராகிய பிறரோ டிணங்குதற்கண் வெறுப்புமிகுதியும், இயல்பா னுளவாமென்பதாம்.

விதிமுகத்தாற் கூறினோர், சுவைப்பொருட் டுண்ணப்படும் பால் மருந்துமாமாறுபோலச் சாதனமுமாமா றுணர்த்துதற்கு.

முன் வருவனவற்றிற்கு மிஃதொக்கும்.

காமுகனுவாநெருவன் ஒரு வனிதையிடத் தன்புடைய னென்பது அவளோக்கலைக் கண்டுழி நிகழு மன்பினளவு பற்றியே தெளியப்படும். அதுபோல ஈசனுக்கன்புடைமை அவனடி-

யவரைக் கண்டுழி நிகழு மன்பினளவுபற்றியே தெளிடப்படுமாக லான் அடியவர்க் கன்பில்வழி ஈசனுக் கன்புடையார்போலொ ழுகுதல் நாடகமாத்திரையே பிறிதிலையெனபார் அடியவர்க் கன்பில்லா ரீசனுக் கன்பில்லாரென்றும், எவ்வுயிர்க்கணு முள ளாகிய வீசனிடத்து அன்புடையார்க்கே அத்தொடர்பு பற்றி எவ்வுயிர்க்கு மன்புடையராதல் கூடுமென்பார் ஈசனுக்கன்பில் லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லாரென்றும், இவ்விடங்களி லன்பி ல்லாதார் தம்முயிர்க் குறுதி செய்துகொள்வா ரல்லரென்பார் தமக்கு மன்பில்லாரென்றுங் கூறினார்.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்" என்புழித் தம்மென் றது உடம்பை நோக்கியாகலின், அஃதீண்டைக்கு முரணாமை யறிக.

இதனெதிர்மறை முகத்தால் அடியவர்க் கன்புடையாரது பெருமையுங் கண்டுகொள்க.

அவர்கரும முன்கருமமாகச் செய்தலுந் தற்போத முனைத் துநின்று செய்யிற் குற்றமாமென்பார், அருண்ஞானக் குறியி னென்றார்.

கூசுதல் அவருயர்வும் தன்னிழிபும் நோக்கி நிகழ்வது.

கும்பிடுதலுந் தட்டமிடுதலுங் கூத்தாடுதலும் உவகைமிகு தியி னிகழு மெய்ப்பாடு.

இதனானே இரண்டாங்கூறு தெரித் துணர்த்தப் பட்டது.

முதற்கூறு செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் தி ரிமலங்களென ஆண்டே யுடம்போடு புணர்த்தோதி வலியுறுத் தமையின, வேறு கூறிற்றிலர்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

ஜீவன்முத்தரா யுள்ளவர்கள் சிவபத்த ரல்லாதவருடன்

கூடலாகாதென்றுஞ் சிவபத்தர்களுடனே கூடவேண்டுமென்று மருளிச்செய்கிறார்.

ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார் - பரமேஸ்வரனிடத்துப் பத்தியில்லாதவர்கள் சிவனுடைய வடியாரிடத்திலும் பத்தியில்லாதவர்களாயிருப்பார்கள். இதன்றியும்,—எவ்வுயிர்க்கு மன்பில்லார்-சர்வான்மாக்களிடத்திலு மனம் இரக்கமு மவர்களிடத்திலுண்டாகாது,—தமக்குமன்பில்லார்-முன்சொன்ன விடங்களி லன்புடையராகிற் றங்களுக்கும் பிழைக்கலாம், அது வில்லாததுகொண்டு தங்களுக்குந் தாமுங் கிருபையில்லாதவர்கள்.—பேசுவதென் னறிவில்லாப்பிணங்களை - இப்படிக்கொத்த அறிவுகெட்ட பிணங்களை யென்னென்று சொல்லுவோம்.—நாயினைக்கிற் பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர்விடுநீ - நாமவர்களுடனே கூடில் நமக்குப் பிராணனுய்கிற்கிற சத்தியத்தைத் தரிசியாத வண்ணமயக்கத்தைச் செய்து ஜநநத்திலு மரணத்திலு மாறிமாறி வருகிற துக்கத்தை யுண்டாக்குகிற புத்திர மித்திர களத்திராதிகளோடுங் கூடுதலை நீவிட்டு நீங்கி,—ஆசையொடு மரனடியா ரடியாரையடைந்திட்டு - விருப்பத்துடனே கனவிலு நனவிலுஞ் சிவனை யல்லது மற்றொன்றையு மறியாத சிவனுடைய வடியார்களுடைய வடியார் திரட்சியிலே கூடிக்கொண்டு,—அவர்கரும முன்கரும மாகச்செய்து - அவர்க ளருளிச்செய்த பணிவிடையை யுன்னுடைய காரியமென்கிற பிரியத்துடனே செய்து,—கூசிமொழிந் தருள்ஞானக் குறியினின்று - அப்படிச் செய்தே யான்செய்தேனென்னனுஞ் சுதந்தரமற்று அந்தச் சிவபத்தர்களைப்போல நீயுஞ் சிவனுடைய காருண்ணியமாகி சிவஞானத்தாலே சத்தியத்தைத் தரிசித்து அந்த நிலையிலே நின்று,—கும்பிட்டுக்கட்டமிட்டுக் கூத்தாடித்திரியே - அந்தச் சிவபத்தர்கள் திருக்கூட்டத்தைத் தண்டன்பண்ணிக்

கையுங்கொட்டிக் கூத்துமாடித்திரி, அப்படிச் செய்தாலார்ச் சிதமான கன்மம் பொருந்தா.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். ௧௨-சூ, உ-வெ. "மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்குஞ்,சிறப்பில்லார் தந திறத்துச் சேவை—யறப்பித்துப், பத்தரினத்தாய்ப் பரனுணர் வி னாலுணரு, மெய்த்தவரை மேவா வினை" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஞானவான்களாயுள்ள சிவபத்தர் களோடுகூடி பிரபஞ்சத்தாருடனே முன்புகூடி வந்த வாதனை யொழியவே ஆகாமிய மிவர்களுக் கேருதென்னு முறைமை யறி வித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

காமுகனாவா னொருவன் ஒரு வனிதையினிடத்து அன்பு டையனென வ தவளோகக்லேகண்டுழி நிகழு மனபினளவுபற்றி யே தெளிபப்படும்,அதுபோல ஈசனடியவரைக் கண்டுழி நிகழு மனபுடைமை பற்றியே,ஈசனுக் கனபுடைமை தெளியப்படுமாக லான்,— அடியவர்க் கன்பில்லா ரீசனுக் கன்பில்லார் - அடிய வர்க்கன்பில்வழி யீசனுக் கன்புடையார்போ லொழுகுதல் நா டகமாத்திரையே பிறிதில்லை,— எவ்வுயிக்கு மன்பில்லார் - எ வ்வுயிர்க்கண்ணு முளனாகிய ஈசனிடத்து அன்புடையார்க்கே யத்தொடர்புபற்றி எவ்வுயிர்க்கு மன்புடையராதல் கூடும்,— தமக்கு மன்பில்லார் நாம்பேசுவதென் - இவ்விடங்களி னன பில்லார் தம்முயிர்க் குறுதிசெய்து கொள்ளுவா ரல்லராக வி னதனை நாஞ்சொல்லுவ தென்னை, கழிகாமத்தா ராயினா ரத் தொடர்புடையார திணக்கம் அக்காமப் பைங்கூழை வளர்க்

கு நீராதல்பற்றி அதன்கட் கழிபே ருவகையாமாறுபோல அரனடியாரடியாரை யடைந்திட் டவர்கரும முன்கருமமாக ஆசையுடன்செய்து - மாறாதசிவாநுபவ மருவிக்கொண் டரன்மலரடிக்கீ ழிருக்கப் பெற்றார்க்கு அதனைவளர்க்கு நீர்மையராகிய வத்தொடர் புடையாரோ டிணங்கி யவர்பணியை யுன்பணியாகவே தற்போத முனைத்தலின்றி விருப்பத்துடன் செய்தற்கண் உவகை மிகுதியும் காமுகரல்லாதார திணக்க மதனைப்பாரச் செய்யும் கலையாதல்பற்றி யதன்கண் வெறுப்பு மிகுதியாமாறுபோல,—அறிவிலாப்பிணங்கலையிணங்கிற்பிறப்பினு மிறப்பினும் பிணங்கிடுவர் விடுநீ - அதனைக்கெடுக்கு நீர்மையராகிய அறிவில்லரோ டிணங்கிற் பிறப்பிறப்பிற் படுத்துவராதலி னதனைகண் வெறுப்பு மிகுதியும் உளவாம், அதனைவிட்டு நீங்கிநீ,—கூசிமொழிச் தருண்ஞானக்குறியினின்று - அடியாரதுயர்வு முனதிழிவு நோக்கிக் கூசி நயமொழி கூறிச் சிவஞானத்தா லிரண்டறவத்துவித நிலையினின்று,—கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே - அவ்வுவகை மிகுதியாற் கும்பிட்டுக் கைகொட்டிக் கூத்துமாடித் திரிவாயாக வென்பதாம்.

இதனானே இரண்டாங்கூறு தெரித்துணர்த்தப் பட்டது. முதற்கூறு செங்கமலத் தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்களென வாண்டே யுடம்பொடு புணர்த்து ஓதி வலியுறுத்தமையின வேறு கூறிற்றிலர்.

☞ கஉ-சூ, உ-அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

சிவன் திருவேடத்தாரை யுண்டாக்கிச் சர்வான்மாக்களையு மீடேற்றுகையின்பொருட் டோர் சிறப்புவிதி யுணர்த்துகின்றார்.

அறிவரியான் ரனையறிய வாக்கையாக்கி யங்கங்கே
யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்,செறிதலினாற் றி
ருவேடஞ் சிவனுருவே யாகுஞ் சிவோகம்பா விக்கு
மத்தாற் சிவனுமாவர், குறியதனை விதயத்தே யரனைக்
கூடுங் கொள்கையினா லவனவர் குறியொடுதா மழியு,
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றோ னேசத்
தாற் றொழுதெழுமின் பாசத்தாள் விடவே. (௯)

(இ-ள்.) அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி — ஆன்மாக்களுடைய மனோவாக்குக் கெட்டாத சிவன் றனது காருண்ணியத்தாலே யாவருந் தன்னை யுணர்ந்து வழிபடுதற்பொருட்டு மாயாகாரிய மாகிய வுடலை யெடுப்பித்து,

அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்து — எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்க டோறு மவ்விடத் தவ்விடத்திலே யான்மாக்க டோறு முயிர்க்குயிராய்நின் றதற்கதற்கேற்ற ஞானத்தைப் பிரகாசிப்பித்து நிற்றலால்

அருளாற் செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவேயாகும் — சிவன் றன தருளா லவ்விடங்கடோறும் வியாபித்து நிற்கிறதினாலே யவனது வேடமாகிய திருநீறு முருத்திராக்கமுந் தரித்திருக்கு மடியாரகளையுஞ் சிவனுடைய திருமேனியெனறே கொள்ளப்படும். அன்றியும்,

சிவோகம் பாவிக்குமத்தாற் சிவனுமாவர் — சோகம் பாவனை பண்ணும்பொழுது அத்துவிதமாகப் பாவிக்குமதனாலே இந்த ஞானவானகளைச் சிவனென்று சொல்லப்படும். அன்றியும்,

**குறியதனாலி நயத்தே யரனைக் கூடுங்கொள்கையினா லவனாவர்**

ஆசாரியன் காட்டின குறிவழியே நின்று தத்த மிருதயங்களிலே சிவனை யந்தரியாகமாகப் பூசித்து முடிவின்கட் கோதண்டத் தானத்திலேகீபாவம் பிறப்பித்துக் கொண்டிருந்த கோட்பாட்டினாலும் சிவனாகியே நிற்பார்கள்.

**குறியொடுதா மழியு நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவர்**

இப்படிப் பலவாகத் தாங் குறித்துக்கொண்டு நின்ற குறிப்புகளுங் குறித்தறியும் புத்தியாதிகளும் சேர விலயத்தைப் பொருந்தினவிடத்து நிட்டையைப் பொருந்தி நிற்கிற வழிபாட்டினாலும் சிவமேயாய் விடுவர்.

**என்றால்**

இப்படி யேதுக்கள் பலவாகக் காட்டுகையினாற் றிருவேடத்தாரையே பேணுக. அஃதெக்காரணத்தாலெனில்?

**நேசத்தாற் றொழுதெழுமின் பாசத்தாள் விடவே.**

பாசத்தாள் விடவே நேசத்தாற் றொழுதெழுமின் எனப் பதமாறுக. யாதாமொருவரொருவன் வீட்டிற் களவுகொள்ளக் கருதுமவனை அவன் வீட்டுத் தாளுக்குப் பொடிப்போட்டுதி யதனை விடுவிக்குமாறுபோல, இந்த வான்மாக்களையுஞ் சிவன் முத்தி யடைவிக்கையின் பொருட்டு இவர்களை வணக்கஞ்செய்யவே யுன்னைவிட்டு நீங்கவொட்டாம லிருக்கிற அஞ்ஞானமாகிற கபாடத்தைப் பந்தித்திருக்கிற பாசமாகிற தாள் கழன்று நீங்கி யதுபோகவே பிரகாசமுனக் குண்டாம். எ-று.

இரண்டாமுருபு நாலாமுருபாய் மயங்கிற்றெனவறிக.

இதற்குக் காமிகமெனவறிக. (௩)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலந்தச் சிவபத்தர்க ளிற்கு நிலைமையாற் சிவனையே வழிபடுகவென்று கூறுகின்றது.

அறிவரியான் றனையறிய வாக்கையாக்கி யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற் செறிதலினாற் றிருவேடஞ் சிவனுருவேயாகும் - பாசவறிவாலும் பசுவறிவாலு மறிதற்கரிதாகிய சிவன் றனை யுணருமாறு தவம்பண்ணும் தேகத்தையும் தபோவேஷத்தையுங் கொடுத் தந்த தேகத்தில் ஜீவான்மாக்களிடத்திலே பரமான்மாவாக நின்று சிவஞானத்தைப் பிரகாசிப்பித்துக் கருணையினாலே பிரிவறப் பொருந்துகையினால் சிவனுடைய வேஷத்தைத் தரித்த தேகம் சிவனுடைய திருமேனியேயாம். இதுஞானசரிதைபண்ணு மவரைச் சொன்னது.—சிவோகம் பாவிகருமத்தாற் சிவனுமாவர் - பூதசுத்தியானந்தரம் சீகண்டாதி மாதிருகை பஞ்சம்பிரம ஷடங் காஷ்டத்திரும்சத் கலா ன்யாசங்களைப் பண்ணிச் சிவோகமென்று பாவனைபண்ணுமததாற் சிவபாவனையும், உண்மையினாற் ஜீவபாவனையு முடையவர்களாவர்கள். இது ஞானத்திற் க்ரியாவானைச் சொன்னது.—குறியதனாலிதயத்தே யரனைக்கூடுங் கொள்கையினா லவனுவர் - அஷ்டகலாப் + பிராசாதத்தை இருதயாதியாகப் பிரம்மாதிகாரணத் தியாகக்கிரமத்திலே துவாதசாந்தமாகிய உன்மனீசத்தி சகிதரான ÷ அநாசிருதரை வேறறப் பொருந்து முறைமையினா லந்தப் பரமசிவனாம். இது சிவஞானயோகியைச் சொன்னது.—குறியொடு தாமழியு நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவர் - ஞாதுரு ஞானஞேயமென்னு மூன்றும் நழுவநின்றோர் சத்தி சிவான்மா வெனனும் பேதமறச் சிவமேயாவர். ஏகாரந் தேற்றம். தேற்றமாவது, சிவனேயல்லது ஜீவபாவஞ் சற்றுமில்

லை யென்றது,—என்றால் - இவ்வாறு ஜீவன்முத்தரான பேர்க ள் சிவனேயென்று வேதாகமங்கள் சொல்லுகையினாலே,—நேசத்தாற்றொழுதிடு நீ பாசத்தார்விடவே - சிவனைப் பணாமித்ததவனையினாலே நீ வணங்கி வழிபடு, உனைப் பந்தித்திருக்கும் பாசங்களானது நீங்கிவிட.

பாசத்தா ரென்றது இழிவின் வந்த உயர்திணை வாய்ப்பாடு.

ஏகார மீற்றசை.

+ ப்ராசாதம்-உப்பரிகை, ÷ அநாசிருதர்-ஒன்றைப்பொருந்தாதவர்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவோகம் பாவனை பண்ணுமவர்க்குத் தாசோகம் பாவனை சத்துருவானாலும் பராக்குற்ற பொது பாவனை பலிக்கு முபாயம் பண்ணலாமென்று படிக்கின்றார்.

சிவோகம் பாவிக்குமத்தால் - அறியாமை யறிவகற்றியெனும் திருவிருத்த முதலியவற்றிற் செப்பியபடி சிவோகம் பாவனை பண்ணுதலால் பாவனா சாமர்த்திய மில்லாத போது,—குறியதனாலிதயத்தே யரனைக் கூடுங் கொள்கையினால் - இருதய கமலத்திற் றீபா கிருதி நாதா கிருதி சதாசிவா கிருதி முதற் சகள நிட்கள சகள சாகாரத் தன்மையினாற் சிவனைத் தியானிக்குஞ் செய்தியினாலே,—அவனாவர் - சிவ சமான சாதிச் சியனாவா,—நெறியொடு தாமழியும் நெறியதனால்- நிராகார சிவ சமாதியில்,—சிவனேயாய் நின்றிடுவர்-சிவனைப் போற் சிவனாவர்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

வேடத்தானும பாவனையானுஞ் செயலானுந் தன்மையானு
ந் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாதல் தெளியக்கிட
த்தலின, அதுபற்றி யவரை அரனெனவே தேறி வழிபடுக, ஏனை
ய பாசப்பற்றுடையாரது பற்று, விட்டொழிதற் பொருட்டெ
ன்பதாம்.

சிவமாதல் தெளிந்துகோடற்கு வேடமுதலியவற்று ளொ
ன்றேயமையுமென்பார், சிவமாதலை யவற்றோடு தனித்தனி கூட்
டிக் கூறினார்.

அவ் வேடமுடையாரென் றெடுத்துக்கொண் டுரைக்க.

பாசத்தார் ஆகுபெயர்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சிவபத்தர்களது திருவேடத்தைப் பரமேஶ்வரனெ
னக் கண்டு வழிபடுகவென றருளிச்செய்கிறார்.

அறிவரியான் றனையறிய யாக்கையாக்கி - ஆன்மபோதத்
தா லியாவராலு மறிதற்கரிய பரமேஶ்வரன் தன்னை யறியு நிமி
த்தமாகத் தன்னுடைய பத்தர்களுக்குத் திருவேடமாகிய தன
து திருமேனியைக் கொடுத்து,—அங்கங்கே யுயிர்க்குயிரா யறி
வுகொடுத்து - தன்னை யிவர்களறியும்படிக் கிடாக அவரவ ரிருத
யத்திலே யவர்களுக்குப் பிராணனாய் நின்ற முறைமையாலே
ஞானத்தையும் பிரகாசிப்பித்து,—அருளாற் செறிதலினாற் றிரு
வேடஞ் சிவனுருவேயாகும் - தனது காருண்ணியத்தினாலே இ
வர்களிடத்திலே தான் பொருந்தி நிற்கையா லிங்கத் திருவுருவ
ஞ் சிவனுடைய திருமேனியென்றே கொள்ளப்படும்.—சிவோக

ம்பாவிக்குமத்தாற் சிவனுமாவர் - நானென்பொருரு முதலில்லை சர்வமுஞ் சிவனென்று திபாவிக்கையா லிவர்களைச் சிவனென்று சொல்லப்படும்,—குறியதனு லிதயத்தே யரனைக்கூடுங் கொள்கையினாலவனாவர் -. ஆசாரியன் தரிசிப்பித்த வந்தத் தியானத்தினாலேநின்று தங்க ளிருதயங்களிலே பரமேஸ்வரனை ஏகிபாவம் பிரப்பித்துசகொள்ளுகிற கோட்பாடுகளாலே சிவனாகியே நிற்பர்கள்.—குறியொடு தாமழியுனெறி யதனாற் சிவமேயாட்நின்றிடுவர் - தாமிப்படி கொள்ளுகிற தியானங்களுந் திபாவித்துநிற்கிற தங்களுடைய ஆன்மபோதங்களும் பினபு சேரவழிந்துபோகிற முறைமையாலே ஆன்மபோதஞ் ஜீவியாம லந்தச் சிவமேபாய் நின்றுவிடுவார்கள். எனவே யிவர்களிடத்திலே பரமேஸ்வர னிப்படிப் பிரகாசிப்பன், அல்லாதவிடத்தில் நிற்கச்சேயுந் தோனறுமனிற்பன்,—எனறால் - வேதாகமங்க ளிப்படியென்று சொல்லுகையால்,—நேசத்தாற்றொழுதிடுநீ பாசந்தார்விடவே - உன்னுடைய பாசமானது விட்டுப் போம்படி இப்படிச் சொல்லப்பட்ட மயேஸ்வரர்களைச் சிநேகத்தாலே பணிவாயாக.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். ௧௨-சூ, ௩-வெ, "தன்னுணர வேண்டித் தனதுருவைத தான்கொடுத்துத், தனனுணர்த்தம்மு ளிருத்தலாற்—றன்னுணரு, நேசத்தர் தம்-ா நிகழுந் ததிநெய்போற், பாசந்தார்க் கினறும்பதி" என்னுமதுகண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, மயேஸ்வர ரிடத்திலே சிவன் பிரகாசியா நிற்பனென்றும் அல்லா விடங்களி லப்பிரகாசனாய் நிற்பனென்றும் ஆகையால் மயேஸ்வரரைச் சிவனாகக் கண்டு வழிபாடுசெய்யவே யிவனுக் குண்டான பாசம்விட்டு நீங்குமென்னு முறைமையு மறிவித்தது,

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அறிவறியான் - அசிந்திதனாய்நின்ற பரம்பொருள்,—தனை யறிய - உலகத்துள்ளார் தன்னை யறிதற்பொருட்டு,—யாக்கை யாக்கி - திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தன்வடிவத்தைத் தன் அன்பர்க் களித்து,—அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்து - யாங்கணு முயிர்க்குயிரா யறிவினைவிளக்கி,—அருளாற்செறிதலினால் - அருளாற் கலத்தலால்,—திருவேடஞ் சிவனுருவேயாகும் - அத்திருவேடத்தானுஞ் சிவமேயாதல் தெளியக் கிடத்தலானும்,—சிவோகம் பாவிக்குமத்தால் - சிவோகம்பாவனையானும்,—சிவனுமாவர் - சிவமேயாத றெளியக்கிடத்தலானும்,—இதயத்தே குறிபதனா லரனைக்கூடும் கொள்கையினால் - இருதயத்தானத்தி லொரு குறியின்கண் வைத்து முதல்வனைக் கூடும் செயலானும்,—அரனாவர்,—சிவமேயாதல் தெளியக்கிடத்தலானும்,—குறியொடு தாமழியுநெறிபதனால் - குறியுடனே தாமென்ப தொன்றின்றாகிய தன்மையானும்,—சிவமேயாய்நின்றிடுவரொன்றால் நேசத்தானீ தொழுதிடு - சிவமேயாதறெளியக கிடத்தலானும,அதுபற்றி யவரை யானென்னவேதேறி நீ வழிபடுக,— பாசத்தார்விடவே - ஏனைப் பாசப்பற் றுடையாரதுபற்று விடடொழிதற் பொருட்டெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை

சிவன் சர்வ வியாபியாயிருந்தாலுந் தன்னிடத்
தன புடையார்க்குச் சாந்நித்திய மாகு
முறைமை புணர்த்துகின்றார்.

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே, யு
ருக்கோலி மந்திரத்தா லேநினையு மவர்க்கு முளனங்கு
மெங்குமில னிங்குளனென் பார்க்கு, விருப்பாய வடி
வாகி யிந்தனத்தி னெரிபோன் மந்திரத்தின் வந்துதி
ப்ப னிருஞ்சுரபிக் கெங்கு, முருக்காண வொண்ணுத
பான்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்
பட் டருளுவ னன்பர்க்கே. (ச)

(இ-ள்) திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே — சிவாலயத்துக் குள்ளெழுந்தருளி யிருக்கிற சிவலிங்கத்தி னிடத்திலே சதாசிவனென்று கருதுமவர்க் கவ்விடத்திற் சாந்நித்தியமாகாநிற்பன். திருக்கோயில் தூலலிங்கமாயிருக்க அதனைக் கூறாமற் றிருமேனியெனக் கூறிய தென்னையெனில்?

கோயில் தேகமும் அதிலிருக்குஞ் சிவலிங்கந் தேகியுமாதலாற் கூறியதென வறிக.

சிவனெனவே யென்று தேற்றங் கூறுகையா லந்த மூர்த்தியிடத்திலே வியாபித்திருக்கும் பரமசிவனைக் கூறியதாயிற்று. வியாப்பிய வியாபக பாவத்தினாலே தேகத்துக்குந் தேகிக்கும் பேதமில்லை யெனவறிக.

உருக்கோலி மந்திரத்தாலே நினையுமவர்க்கு முளன் அங்கு — வியத்தலிங்கம் வியத்தாவியத்த லிங்கம் அவ்வியத்த லிங்கமென மூவிதமாகக் கூறிய திருமேனியை யதிட்டா சுத்தமாதலாற் சுத்தனுக்கு மாயேயம் பொருந்தா தாகையாற் சுத்தமான மந்திரமே திருமேனியாத

லால் முப்பத்தெட்டுக் கலைமுதலியவற்றாற் றிருமேனியாக்கித் தியானஞ் செய்யுமவர்க்கு அந்தக் குறியிடமாகத் தானே பிரகாசியாநிற்பன்.

**எங்குமில னிங்குளனென்பார்க்கு விருப்பாய வடிவாகி** — பரிபூரணமா யெங்கும் வியாபித்திருக்கின்ற சிவனெவ்விடத்து மில்லை சாலம்பமுதலிய ஆவாகனாதி கிருத்தியங்களைப் பண்ணுகையா லிங்கேதானே யுளனென் றறுதியிட்டவர்களுக் கவ்விடத்திற்றானே யருச்சித்துப் பிரகாசியாநிற்கும். அஃதென்போ லென்னில்?

**இந்தனத்தினெரிபோல்** — தாபரமான வேர்முதல் நுனியீறாக மரத்தின்கண் வியாபித்து நிற்கிற அக்கினியானது, அரணியைக் கட்டையிலேற்றிக கடைந்தவிடத் தக்கினியானது பிரகாசித்தாற்போலவும்,

**மந்திரத்தின் வந்துதிப்பன்** — பிராசாத மந்திரோச் சாரணத்தினாலே அவ்விடத்துப் பிரகாசியா நிற்பன்.

**இருஞ்சுரபிக் கெங்குமுருக்காணொணாத பால் முலைப்பால் விம்மி பொழுகுவது போல வெளிப்பட்டருளுவ னென்பார்க்கே.** — பெரிய சுரபியின்கட் கொம்புமுதற் குளம்பீறாகப் பாலானது வியாபித்திருக்கவு மவ்விடத்திற் றோன்றாமற் கன்றுக்கிரங்கித் தானே முலைக்கண்ணிலே யிறங்கி விம்மித்தோன்றி யொழுகுமாறுபோல அந்தச் சிவனு மன்பர்க்கே யுருகி நிட்களமானவன்றானே மூர்த்தீகரிக்கு முறைமையு மித்தன்மை. எ-று.

இதனாற் றாபர சங்கமங்களிடத்தில் வியாபித்து நிற்கு முறைமை கூறியதாயிற்று. இதற்குச் சூக்குமத்தும் நிசுவாசதத்தும் சுப்பிரபேதத்து மறிக. (௯)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் சிவலிங்கத்தை வழிபடு முறைமை கூறுகின்றது.

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதனைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கு-திருக்கோயி லுள்ளிருக்குஞ் சிவலிங்கமே சிவனென்று பாவித்து வழிபடுமவர்க் கந்தச் சிவலிங்கத்தி னிடத்திலே சாந்நித்தியம் பண்ணுவன்,—அங்கே மந்திரத்தாலுருக்கோலி யுளனென்ன நினையுமவர்க்குமுளன-அந்தச் சிவலிங்கத்தி னிடத்திலே பஞ்சப்பிரம ஷடங்கமந்திரங்களினாலே யுளனென்று பாவித்த பேர்க்கு மவ்வாறு மந்திரமூர்த்தியாக சாந்நித்தியம் பண்ணுவன்,—எங்குமில னிங்குளனெனபாக்கு விருப்பாயவடிவாகி யிந்தனத்தினெரிபோன் மந்திரத்தின் வந்துதிப்பன்- சிவ னகண்ட பரிபூரணனென் றறியாமல் மந்தமதிகளா யெங்குமில்லை, இந்த மூர்த்தியிலேயே தனக்குத் தனக்கிஷ்டமான விக்கிரகத்திலே மந்திர நியாசங்களைப்பண்ணி வழிபடக் காஷ்டத்திலே வன்னிபோல வந்த மந்திரத்திலே சாந்நித்தியமாவன். இவ்வாறு பாவிக்கவே,—இருஞ்சுரபிக்கெங்கு முருக்காணவொண்ணாத பான் முலைப்பால் விம்மியொழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவ னன்பர்க்கே - பாலானது பசுவினுடைய தேகமெல்லாம் வியாபித்திருந்தும் பின்னை யோரிடத்தில் காணப்படாமற் றன்னுடைய கன்றைக் கண்டபொழுது முலையிலே விம்மி யொழுகுவதுபோல ஆறாத்த வாவினுஞ் சிவனிறைந் திருந்தானேயாயினு மந்திராத்த வாவிலே பிரகாசித்துப் பத்தர்கள் வேண்டியது கொடுத்தருளுவனென் றிதன் பொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

யோக சாமர்த்திய மில்லார்க்குத் தியானோ பாய முரைக்கின்றார்.

ஸ்ரீகண்ட தேகியால் தரிசனங் கொடுப்ப னென்று சித்தாந்தம்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

பகுத் துணர்தலின்றிச் சிவலிங்கமுதலிய திருமேனியே சிவமெனக் கண்டு வழிபடுஞ் சரியையாவார்க்குச் சிவன் ஆண்டு வெளிப் படாது நின்று அருள்செய்வன். அருவப்பொருளாகிய சிவனை ஈசானுதி மந்திரங்களாற் சிவலிங்கமுதலிய திருவுருக் கோவிலுனெனக் கருதி மந்திரநியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும்,யோகிகளுள்ள மெங்கணு மில்லமாக வாழுஞ் சிவன் இத்திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருளுவனெனக் கருதிச் சாத்தியமந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும், கடைந்தவழித் தோன்றுமெரியுங் கறந்தவழித் தோன்றும் பாலும்போல் அவ்வமந்திரங்களா லவரவர் விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றிநின்று அருள்செய்வன். அவர்போலேகதேசமாய்க் குறித்தலின்றி அன்புமாத்திரையா னுண்டு வழிபடு ஞானிகட்கு, கன்றை நினைந்த புனிற்றுவின் முலைப்பால் போல, கருணை மிகுதியால் அவ்வன்பே தாளுய் எய்யோது மாண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வன்; ஆகலான் அர்ச்சித்து வழிபடுக வெனபதாம்.

ஆகலானஃதறிந்து வழிபடுகவென்பது குறிப்பெச்சம்.

அங்கேயென்பது யாண்டுஞ் சென்றியையும்.

மந்திரத்தா லுருக்கோலி யெனமாறுக.

கோலியென்பது பெயர்.

உளன் உள்ளம்.

இலனென்பது இல்லெனு மிடப்பெயரடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று.

இங்குமென்னுமும்மை இறந்தது தழீஇயிற்று.

அனபர்க்கு விம்மி யொழுகுவதுபோ லெனவே யோகிகட்குக் கறக்கவொழுகும் பால்போலென்பது பெறப்பட்டது.

அன்பரென்றது ஈண்டு ஞானிகண்மேற்று, "அன்பரொடு மரீஇ" என்புழிப்போல.

திருவேடஞ் சிவனெனத் தெளியுமாறு தொழப்படுவாரது கருத்துவகைபற்றிக் கூறினர், சிவாலயத்தைச் சிவனெனத் தெளியுமாறு தொழுவாரது கருத்துவகைபற்றிக் கூறினரெனவுமுணர்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மேற் சிவலிங்கப் பெருமானிடத்திலே சிவன் விசேஷமாகப் பிரகாசித்துநிற்கிற முறைமை யருளிச்செய்கிறுர்.

திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனிதன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவனங்கே - அழகிய சிவாலயத்துக் குள்ளே எழுந்தருளி யிருக்கிற சிவலிங்கப்பெருமான் றன்னைச் சிவனென்றே யுபதேசத்தினுலே யறிந்தவர்களுக்கு மவ்விடத்திற் சிவன் பிரகாசித்து நிற்பன்,—உருக்கொலி மந்திரத்தா

லே நினையுமவர்க்கு முளன் - அந்தந்தத் திருமேனியிலே மந்தி ரங்களாலே திருமேனியாகக் கொண்டவர்களுக்கு மங்கே பிர காசியாநிற்பன,—எங்குமிலனிங்குள னெனபார்க்கு விருப்பாய வடிவாகி - காணப்பட்ட வெல்லாவுருவங்களுந் தானாயிருக்க ச்செய்தே தற்சொரூபந் தோன்றாம னிற்பன். இந்தச் சிவலிங் கப் பெருமானிடத்திற் றோன்றி நிற்பனென்கிறவர்களுக்கு வி ருப்பத்துடனே யந்தத் திருமேனியி லெப்பொழுது மிருப் பன். அதெங்ஙனென்னில்?—இந்தனத்தி னெரிபோல மந்திர த்தின் வந்துதித்து - காட்டத்தி லுண்டான வக்கினியானது மு ன்பு காணப்படாமனின்று பின பிவனாலறியப்பட்ட தோருபா யத்தினா லந்தக் காட்டத்தி லுண்டானாற்போலத் தோன்றி,— இருஞ்சுரபிக் கெங்குமுருக் காணவொண்ணாத பான் முலைப்பால் விம்மி யொழுகுவதுபோல வெளிப்பட் டருளுவனன்பர்க்கே - பெரிய சுரபிக்குக் கொம்புமுதல் குளம்பீறாக வெவ்விடத்திலும் பால் வியாபகமாய் நிற்பினு மவ்விடங்களிற் பாலினது ஸ்வ ரூபந் தோன்றாமனின்று முலைக்கண்ணிலே விம்மித் தோன்றித் தாரையாகப் பொழியுமதுபோலச் சிவலிங்கத்திலே பிரகாசியா நிற்பன் அவ்விடத்திலே வழிபடுகிற பத்தர்களுக்கு.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம். ௪௨-சூ, ௪-வெ, "கண்டவொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே, றுண்ட ல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத், தானதுவா யன் றானன் தானதுவாய்த் தோன்றானோ, தானதுவாய்க் காணுந் தவர்க்கு" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, காட்டத்தி லக்கினியானது முன்பு தோன்றாமனின்று ஒருத்த ரரணிகொண்டு கடைய வவ்விடத் திலக்கி தோன்றிய தன்மைபோல எவ்விடத்திலும் தோன்றாம னின்ற சிவனும் பெரியோர்கள் சிவலிங்கப் பெருமானிடத்திலே

கண்டு வழிபட, அவ்விடத்திற் பிரகாசியா நிற்பனென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனிதன்னை - பகுத்துணர்தலின்றி ஆலயத்து ளெழுந்தருளியிருக்கும் சிவலிங்கமுதலிய திருமேனியே,—சிவனெனவே கண்டவாக்கு - சிவமெனக் கண்டுவழிபடுஞ் சரியையாளர்க்கு,—சிவனங்கேயுறைவன்- சிவனாண்டு வெளிப்படாது நின்று அருள்செய்வன,—மந்திரத்தா லக்கோயிலுளனென நினையுமவர்க்கும்-அருவப் பொருளாகிய சிவனை ஈசானாதி மந்திரங்களாற் சிவலிங்க முதலிய திருவுருக் கோயிலுளனெனக்கருதி மந்திரநியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும்,—உளனெங்கு மிலனிங்கே யுளனெனப் பார்க்கும்-யோகிகளுள னெங்கணுமில்லமாகவாழும் சிவனித்திருமேனியிலு மிருந்து பூசைகொண்டருளுவ னெனக்கருதிச் சாத்தியமந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும்,—இந்தனத்தி னெரிபோல் பான்முலைப்பால் கறக்க ஒழுகுவதுபோல் மந்திரத்தில் விருப்பாய வடிவாகி வந்துதித்தும் - கடைந்தவழித் தோன்றுமெரியும் கறந்தவழித் தோன்றும் பாலும்போல அவ்வம்மந்திரங்களா லவரவர் விரும்பிய வடிவாய்த் திருமேனிகளி லப்போதப்போது தோன்றி நின்றருள்செய்வன,—அன்பர்க்கு-அவர்போலச்சதேசமாய்க் குறிக்கலின்றி யன்புமாத்திரை யாண்டுவழிபடும் ஞானிகட்கு,—மிருஞ் சுரபிகெக்கு முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மிபொழுகுவதுபோல வெளிப்பட்டருளுவன - கன்றை நினைந்த புனிற்றாவின முலைப்பால்போல அக்கருணை மிகுதியால் அவ்வவர்பொருட்டாய் எப்போது மாண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வானாகலா னஃதறிந்து வழிபடுக வென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



*இங்ஙன மிலிங்கத்தினையுந் திருவேடத்தாரையும் வழிபடும் வழிபாடு முணர்த்தி ஞானாசாரியனைச் சிவனெனவே வழிபாடுசெய்யு முறைமையு மூன்று திருவிருத்தத்தா லுணர்த்துகின்றார்.*

ஞானயோ கக்கிரியா சரியைநாலு நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரியன், ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன் யோகிகிரியா வான்றொண் கிரியை யாதி, யானவிரண் டிறுக்குரியன் சரியையினி னின்றோ னச்சரியைக் கேயுரிய னாதலினாலியார்க்கு, மீனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே யீசனிவன் றொன்று மிறைஞ்சி யேத்தே. (௩)

| | |
|---|---|
| (இ - ள்) ஞானயோ கக்கிரியா சரியை நாலு நாதன் றன்பணி | சிருட்டி காலத்திற் பரமேசுரன் இவ்வியாகமங்களை நாலு பாதமாகப் பிரித் ததிகாரானு குணமாக வருளிச்செய்ததுஞ் சிவன் கற்பித்த தொழில்களே! |
| ஞானி நாலினுக்கு முரியன | மேலான பாதத்தின் வழிநின் றனுட்டித்த ஞானி ஞானம் யோகம் கிரியை சரியையென்க்கூறிய நாலுபாதத்துக்கு முரியவன், |
| ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்யோகி | யோக பாதத்தின் வழிநின் றட்டாங்க யோகத்தை யனுட்டித்த யோகி குற்றமில்லாத யோகபாத முதலிய மூன்று பாதத்தின் வழிநின் றனுட்டித்தற் குரியவன், |

கிரியாவான் றொன்கிரியை யாதியான விரண்டினுக் குரியன்

கிரியா பாதத்தின வழிநின் றனுட்டிக்கு மவன்றான் கிரியை சரியையாகிய விரண்டினையு மனுட்டித்தற் குரியவன்,

சரியையினி னின்றோ னச்சரி யைக்கேயுரியன்

சரியைத் தொழிலிலேனின் றனுட்டித்தவ னந்தச் சரியைமாத்திரமே யனுட்டித்தற் குரியவன், இவ்வாறு பேதித்துக் கூறிய தெனனெனில்?

உபாத்தியாய ரானவர் மாணக்கர் பக்குவத்துக் கீடாகக் கற்பிக்குமாறு போலச் சிவனு மான்மாக்களுடைய பக்குவத்துக் கீடாக நாலு பாதங்களாகப் பிரித்துக் கூறியதென வறிக.

ஆதலினா லிபார்சகு மீனமிலா ஞான குருவே குருவு மிவனே

ஒவ்வொருவ ரொவ்வொரு பாதத்தினவழி நின்றனுட்டித்தற் குரித்தாதலால் எல்லாப் பாதமு மனுட்டித்தற் குரிய மேலான ஞானசாரியனு மிவனென வறிக.

ஈசனிவன் றொன்று மிறைஞ்சி யேத்தே.

இந்த ஞானசாரியனே சிவனெனக் கருதி வணங்கித் துதியுஞ் செய்க. எ-று.

ஏகாரந் தேற்றம்.

இதற்குக் கிரணாகமம் வாயவ்விய சங்கிதையினு மறிக (௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் மகேஸ்வரரை யின்னாரை யின்னார் வழிபடுகவென்னு முறைமை கூறுகின்றது.

ஞானயோக கிரியாசரியை நாலும் நாதன்றன் பணி-திர்பதார்த்தத்தையும் ஞான முதலாகிய நாலுபாதத்தையு முபதேசிக்கிறது சிவனுடைய கிருத்தியம்,—ஞானிநாலினுக்கு முரியன்-

ஞானாசாரிய னந்தச்சிவனே யாகையால் திரிபதார்த்தத்தையும் ஞானமுதலாகிய நாலுபாதத்தினையு முபதேசிக்கச் சுவதந்திரன,—ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கு முரியன்யோகி - யோகாசாரியன் அடயோகமல்லாத சிவயோகமாகிய யோக முதலான மூன்றுபாதத்தினையு முபதேசிக்க கர்த்தன்,—கிரியாவான்ற னொண்கிரியையாதி யானவிரண்டினுக்கு முரியன் - கிரியாசாரியனானவன் கிரியைசரிதை யிரண்டுபாதமு முபதேசிக்கக் கர்த்தன்,—சரிதையினின்றோனச்சரிதைக்கே யுரியன் - சரியாபாதத்தை யனுஷ்டிக்கிறவ னந்தச் சரியாபாதத்தைத் தானனுஷ்டிக்கவே கர்த்தன, பிறர்க்குபதேசம்பண்ணக் கர்த்தனல்ல,—ஆதலினாலெவர்க்கு மீனமிலா ஞானகுருவே குருவு மிவனே யீசனிவன்றானென்று மிறைஞ்சியேத்தே - ஆதலினாலே சரிதையைப்பண்ணுகிறவன் கிரியையைப் பண்ணுகிறவன் யோகத்தைப் பண்ணுகிறவ னிவ்வகை மூவர்க்கும் பாசபசுஞானமின்றிச் சிவஞானமூர்த்தியாயுள்ள ஞானாசாரியனே யாசாரியன? இவனே ஈஸ்வரனென்று நமஸ்கரித்துத் தோத்திரம்பண்ணி வழிபடுக வென்றிதன்பொருள்.

இதனாற் சரியாவான் கிரியாவானையும் யோகியையும் ஞானவானையும் கிரியாவான் யோகியையும் ஞானவானையும் வர்ணாசிரமானுகுணமாக வணங்கி வழிபடுகவென்றிதன்பொருள்.

இவர்களில் ஞானிக்கு வர்ணாசிரம மில்லையெல்லாராலும் பூச்சியனென்று சர்வசாத்திரசித்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

ஆகையால் நிராலம்ப சிவயோக சமாதிமானாகிய ஞானி நிராலம்ப சிவயோகமாகு ஞானநுட்டானத்தோடு சாலம்ப சிவ

யோகமாகும் யோகக்கிரியா சரியானுட்டான மூன்றிற் குரியன்; மற்றையர் மூவருந் தங்கள் தங்கள் மரியாதிக்குரிய ரென்று மக ளுல் நிராலம்ப சிவயோககுருவே குருவென்று நிகழ்த்து கின் றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மேலைச் செய்யுளிற் கூறிய நால்வகைக்கருத்தும் அவரவர் மாத்திரைக்கேயுரித்தாயிருக்கச் சரியையாளரைப்போல ஞானி வழிபடுத லெற்றுக்கெனின்? நாலுபாதத்தி னிகழும் கிரியையெ ல்லாங் கத்தாவின துண்மைப்பணியாகலால், உலகின் மருவாத வின்பத்துள் வைத்த குருவினுபகாரத்தைக் கருதி நால்வகைத் தொழிலும் ஞானி செய்தலே கடப்பாடென்பது உட்டொழில் செய்வார் புறத்தொழிற்கு முரியரென்னு முறைபற்றியும், ஏனை யோர் தத்தந் தொழிற்கேயுரியரென்பது புறத்தொழில் செய் வார் உட்டொழிற் குரியரல்லரென்னு முறைபற்றியு முணர்ந்து கொள்ளப்படுவன. இனி மந்நால்வகைப் பாதத்தினிற்கு மாணு க்கர்க்கு ஆசிரியன்மார் உபதேசித்தற்கட்படு முறைமையும் இவ்வா றே வைத்துணர்ந்து, எல்லார்க்கு முபதேசித்தற்குரிய ஞானகு ருவே தலையாய குருவென்றும், ஈண்டுக் கூறிய தாபரசங்கமங்க ளும் இக்குருவடிவின் வேறல்லவென்றுந் தேறி, அவ்விரண்டினு ம் வழிபடுக வென்பதாம்.

மேற்கூறிய நால்வகைக்கருத்தர்க்கு முரியராவாரைக் கூ றுவார், அவற்றையுள்ளடக்கி நிற்கும் ஞான முதலியவற்றை யுடையாரது இயல்பின்மேல் வைத்துக் கூறினார்.

சொற்பல்காத மாட்டேற்றின்மேல்வைத் துணர்ந்து கோ
டற்பொருட்டு, ஆகலினுலிறைஞ்சி யேத்தே யென்பதனையும் ஈ
ண் டுடன்கூறினார்.

திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறை
ஞ்சுதற்கட்படும் விசேடங் கூறியவாறு.

ஈசனிவனென்புழி இவனென்பது பகுதிப்பொருள் விகுதி.

ஈண்டு ஈசனென்றது திருக்கோயிலுள்ளிருக்குந் திருமே
னியை.

என்றுமென்னு மும்மையை எதிரது தழீஇயிற்றுக்கித் திரு
வேடமு மிவனேயென் றிறைஞ்சியேத்தெனவு முறைந்துக்கொ
ள்க.

இவைமூன்று செய்யுளானும் மூன்றாங்கூறு தெரித்துணர்
த்தி வலியுறுத்தப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

ஆசாரியனை வழிபடுகிற முறைமை மேலருளிச் செய்கிறார்.

ஞானயோகக் கிரியாசரியைநாலு நாதனறன் பணி - ஞான
மும் யோகமும் கிரியையும் சரியையும் இவை நாலும் பக்குவான்
மாக்களை யிரட்சிக்கைப் பொருட்டாகப் பரமேஸ்வரன் கற்பித்
தருளின பணிவிடை, முன் சொல்லிவந்த நாலு பாதத்திலும்
நிற்கிற நாலுபேருக்கு மறிவொத் திருக்குமோ வென்ற மாணாக்
கனை நோக்கி ஒத்திராதென் றருளிச் செய்கிறார்.—ஞானிநாலி
னுக்குமுரியன் - ஞானபாதத்திலே நிற்கிறவ னிந்த நாலு பாத
த்துக்கு முரித்தா யிருப்பன்,—ஊனமிலாயோக முதன்மூன்றி
னுக்குமுரியன் யோகி - யோகபாதத்திலே நின்றவன் குற்றமில்

வாத யோகமுதல் மூன்றினுக்கு முரித்தா யிருப்பன்,—கிரியா
வான்றானென் கிரியையாதியான விரண்டினுக்கு முரியன -கிரி
யாவிதிபானவனா னழகிய கிரியையாதி யான விரண்டினுக்கு
முரித்தாயிருப்பன்,—சரியையி னினன்றானென்சரியைகளே யுரி
யன - சரியையிலே நின்றவன சரியை யொன்றினுக்குமே யுரித்
தாயிருப்பன்,—ஆதலினு லியார்க்கு மீனமிலா ஞானகுருவே கு
ருவும்-தான் நாலுபாதத்துக்குங் கர்த்தனாயிருந்து இங்ஙனஞ்
சொல்லிவந்தவர்கட்கு நாலுபாதத்தையுங் கொடுக்கிறவனுகை
யாலே குற்றமில்லாத ஞானுசாரியனே ஆசாரியனும்—இவனே
ஈசனிவன்றானெனு மிறைஞ்சியேத்தே-பரமேஸ்வரன் றானு மி
ந்த ஞானுசாரியன்றானேயென்று அட்டாங்க பஞ்சாங்க மாகத்
தண்டன்பண்ணித் தோத்திரங்களுஞ் செய்து வழிபடுவாயாக.

இதனுற் சொல்லியது, ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்
கதாக ஞானயோக கிரியா சரியையென்கிற நாலு பாதத்திலு
நிறுத்தி அதற்குத்தக்க முத்தியையுங் கொடுக்கிறவன் ஞானு
சாரியனென்று மிவனே சிவனென்றும் ஞானவான்களுக்கு ஞா
னம் பிரகாசித்தாலுங் குரு வழிபாடு செய்யவேண்டு மெனனு
முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஞானயோகக் கிரியாசரியை நான்கு நாதன்றன்பணி - ஞா
னயோகக் கிரியா சரியையென்னு நானகுபாதத்தி னிகழும் கிரி
யையெல்லாம் கர்த்தாவினது உண்மைப் பணியாகலான்,—ஞா
னி நாலினுக்கு முரியன் - ஞானி ஞானமுத னன்கினுக்குமுரிய
ன்,—ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்யோகி -
யோகி அழிவில்லாத யோகமுதன்மூன் றிற்கு முரியன்,—கிரியா

வான்று ஞெண்சிரியை யாதியான விரண்டினுக்கு முரியன் - கிரியாவா னொன்றிய கிரியை முதலிய விரண்டினுக்கு முரிய ன,—சரியையி னின்றோ னச்சரியைக் கேயுரியன - சரியாவா னச் சரியை யொன்றிற்கே யுரியன்,—ஆதலினும் யார்க்கு மீ னமிலா ஞானகுருவே குருவும்-ஆகலினு மெல்லார்க்கு முபதே சித்தற்குரிய ஞானகுருவே தலையாய குருவென்றார்,—இவனே யீச னிவனன்றோ னென்றும் இறைஞ்சியேத்தே-ஈண்டுக் கூறிய தா பரசங்கமங்களும் இக்குருவடிவின் வேறல்லவென்றுந் தேறி யவ்விரண்டினும் வழிபடுக வென்பதாம்.

இவை மூன்று செய்யுளானும் மூன்றுங்கூறு தெரித்துணர் த்தி வலியுறுத்தப் பட்டது.

---

☞ கஉ - சூ, ௩-ம், அதிகரணமுடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்தவாசாரியனைச் சிவனெனப் பாவிப்ப தெவற்றிற்கோ வெனி ல் இந்தப்பாவனை யில்லாவிடத் தவனுபதேசித்த மந்திர முதலானவை பலியாதாதலா லாசாரியனை வழிபாடுணர் த்தியதென் றுணர்த்துகின்றார்.

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தயோ கத்தா ன் மணிபிரத குளிகையினான் மற்று மற்றுந், தந்திரத் தே சொன்னபடி செய்யவேத சகலகலை ஞானங்க டிரி கால் ஞான,மந்தமிலா வணிமாதி ஞானங்க ளெல்லா ம டைந்திடுமா சானருளா லடிசேர் ஞானம், வந்திடுமற் றொன்றாலும் வாரா தாகு மற்றவையு மிவனருளால் மருவு மன்றே. (௬)

(இ-ள்.) மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்த யோகத்தால் மணியிரத குளிகையினான் மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னபடி செய்ய

மந்திரங்களாலு மௌஷதங்களாலுங் கனக்குச் சித்தித்த யோகங்களாலும் ஒளியையுடைய விரசகுளிகையாலும் வேறுவேறு சாத்திரங்களினாலே சொன்னபடியேசெய்தால்

வேதசகலகலை ஞானங்கடிரிகால்ஞான மந்தமிலா வணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடும்

நாலுவேதமுஞ் சகலகலை ஞானமும் பரகாயப்பிரவேச முதலியவற்றா லுண்டாகிய திரிகாலஞானமும் பைசாச முதலாயினார்க்கு மேன்மேல் விசிட்டமான அணிமாதியான வெட்டுச் சித்திகளுமிவையெல்லா முண்டாகாநிற்கும்.

ஆசானருளாலடிசேர்ஞானம் வந்திடுமேற்றொன்றாலும் வாராதாகும்

ஆசாரியன சடாக்ஷத்தாற் றிருவடிஞானமுண்டாம், இதனையொழிந்த இவை வேறொருவராலும் வேறொன்றினாலும் உண்டாகமாட்டா.

மற்றவையுமிவனருளால் மருவுமன்றே.

முன்பு சொன்னவைகளெல்லாமிந்த வாசாரியன் பிரசாதத்தினாலுண்டாகாநிற்கும். எ-று.

மற்றுமென்பதனால் தீர்த்தத்தினிடத்துந் தேவனிடத்துங் காலவிதானஞ் சொல்லுஞ் சோதிடரிடத்தும் பிராமாணியபுத்தி பண்ணவேணுமெனக் கூறியது.

வாய்த்தயோகமென்பது ‘‘வாயுரைச் செயித்த செய்க வாய்த்ததற் கடையாளங்க, ளாயுராரோக்கியாதி யவற்றைய

வ்வுடலங்காட்டு, மாயமுமனத்தினில்லை வசமுறும் புலன்களெல்லாங், காயத்தின் மலநீர்மற்று நொய்தெனக் கழியுமன்றே”
என்கையா லறிக.

இதற்குக் கந்தகாலோத்தரமும் பிரவு மூளவெனவறிக (சு)

---

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

——o——

மேலிரண்டு விருத்தத்தினாலே அந்த ஞானாசாரியனே சித்திமுதலிக் கொடுப்பவனாதலா லவனையே வணங்கி வழிபடுக வெனனு முறைமை கூறுகின்றது.

மந்திரத்தால் மருந்துகளால் வாய்த்தயோகத்தால் மணியிரத குளிகைகளால் மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னபடி செய்ய வேதசகலகலைஞானங்க டிரிகாலஞான மந்தமிலாவணிமாதி ஞானங்களெல்லா மடைந்திடும்-இது வெளிப்பொருள்,—

ஆசா னருளா லடிசேர்ஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாராதாகும்- ஞானாசாரிய னனுக்கிரகத்தினாலே சிவசாயுச்சியத்தை யடையும் சிவஞானமான துண்டாம், வேறோருபாயங்களினாலு முண்டாகாது,—

மற்றவையு மவரனருளால் மருவுமன்றே - முன்மந்திராதியுபாயங்களினாலே வேதாதியானவித்தைகளும் அணிமாதி அஷ்டமகா சித்திகளும் அந்தஞானாசாரியனுடைய கருணையினாலே பொருந்துவதா மென் றிதன்பொருள்.

“அன்றென்கிளவி யாமெனத்தகுமே”

ஏகாரம் - ஈற்றசை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மந்திரத்தாற் சாலம்பயோக முதலிய தந்திரத்தாற் சாவதிச் சுவாவதித் திரிகால ஞான முதலிய பல முண்டாம், நிராலம்ப சிவயோக குரூப தேசத்தாற் சிவத்துவம் பொருந்தும், நிராலம்ப சிவயோகப் பொருட் சித்தாந்த மகா வாக்கிய ஞானம் வரும், மற்றொன்றால் வாராதென் றுரைக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஏனை ஞானங்களெல்லாம் ஆசிரியனையின்றியு மமையும், திருவடிஞானம் ஒருவாற்றானு மாசிரியனை யின்றி யமையாது, ஆகலால் இவனேயீச னிவன்றானென்று மிறைஞ்சி யேத்தென்பதாம்.

ஆகலாலிவனேயீச னிவன்றானென்று மிறைஞ்சியேத் தென்பது குறிப்பெச்சம்.

அவ்வாறேத்துதற்குரிய பெருமை கூறியவாறு.

மற்றவையு மவனருளான் மருவுமென்றது இயைபின்மை நீக்குதற் பொருட்டு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

எல்லா ஞானங்களுஞ் சாத்திரஞ்சொன்ன முறைமையிலே செய்யவுண்டாம் சிவஞானத்திலே சத்தியத்தைத் தரி

சித்துச் சிவானுபவத்தைத யனுபவிக்கிற சாயுச்சியம் ஞர்ஞசாரிய
னாலொழிந் துண்டாகாதென்று மே லருளிச்செய்கிறார்.

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தயோகத்தான் ம
ணியிரத குளிகைகளான் மற்றுமற்றுந் தந்திரத்தே சொன்னப
டி செய்ய-இன்னவின்ன மந்திரங்களாலே யின்னதின்ன துண்
டாமென்று சொல்லுகிற மந்திரங்களாலும், இன்னவின்ன ஔ
ஷதங்களாலே யின்னதின்ன துண்டாமென்கிற ஔஷதங்க
ளாலும், பிராணாயாம முதலாகச் சொல்லப்பட்ட நல்லயோக
ங்களாலும், ஒளியுடைய விரதகுளிகையினாலும், இவையொழிந்
தும் வேறும் வேதசாஸ்திரங்களிலே சொன்னபடி செய்தா
ல்,—வேத சகலகலை ஞானங்கள் திரிகாலஞான மந்தமிலாவனி
மாதி ஞானங்களெல்லா மடைந்திடும் - நாலு வேதத்தையும்
பல கலைஞானத்தையும் அறிபத்தக்க வறிவுகளும் செல்காலம்
வருங்காலம் நிகழ்கால மென்கிற மூன்றையு மறியுமறிவும் மு
டிவில்லாத அணிமா மகிமா லகிமா கரிமா பிராத்தி பிரகாமியம்
ஈசத்துவம் ஆக விவை யெட்டுமாக விங்ஙனஞ் சொல்லப்பட்ட
வறிவுகளெல்லா முண்டாகாநிற்கும். சிவ ஞான மிவற்றினாலு
ண்டாகாது. அந்த ஞான முண்டாம்படி எப்படியென்னில்?—
ஆசானருளா லடிசேர் ஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாரா
தாகும் - ஆசாரியனுடைய கடாட்சத்தினாலே சிவனுடைய சீ
பாதத்திலே பொருந்தி யிரண்டறக் கலந்திருக்கிற ஞானம் பிர
காசிக்கும்; இப்படி யொழிந்து வேறொன்றினா லுண்டாகாது.
இந்த ஞான மொழிந்து,—மற்றவையு மவனருளான் மருவுமன
றே - முன்பு சொன்னவைதானு மிந்த வாசாரியனுடைய வனுக்
கிரகத்தினாலே யுண்டாம்.

இதனாற் சொல்லியது, சாஸ்திரங்கள் சொன்ன முறை
மையிலே மந்திர முதலானவற்றினாலே வழுவறச் செய்தாலவ

ரவர்க்கு வேண்டின ஞானங்க ளுண்டாமென்றுஞ் சிவஞானங் குருகடாட்சத்தா லொழிந் துண்டாகா தெனனு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மந்திரத்தால் - மந்திரங்களாலும்,—மருந்துகளால் - மருந்துகளாலும்,—வாய்த்த யோகத்தலால் - பொருந்திய யோகத்தாலும்,—மணிபிரச குளிகையினால் - இரசக குளிகையினால்,—மற்றுமற்றுந் தந்திரத்தே சொனன முறைசெய்ய - வேறுவேறு சாஸ்திரங்களிலே சொன்னபடி செய்தற்கும்,—வேத சகலகலை ஞானங்கள் - வேதாகம முதலிய கலைஞானங்கள்,—திரிகால ஞானம் - திரிகால ஞானங்கள்,—அந்தமிலா வணிமாதி ஞானங்களெல்லாம - முடிவில்லாத அணிமாதிமுதலிய ஞானங்களெல்லா வற்றிற்கும்,—ஆசானருளா னடைந்திடும் - ஆசாரியனையின்றி யடையும,— அடிசேரஞானம் வந்திடு மற்றொன்றாலும் வாராதாகும் - திருவடிஞானம் ஒருவாற்றானு மாசிரியனை யின்றி யடையாது ஆகலான,—அவனருளான மற்றவையு மருவுமன்றே - குருவருளா னெல்லா மருவப்பெறு மாகலி னிவனே யீசனிவனன்றோ னென்றுமிறைஞ்சியேத்தே

---

## மறைஞானதேசிகர் உரை.

அந்தப்பாவனா பலத்தா லாசாரியனைப் பரம
சிவனெனக் கருதினோர்க் கனுக்கிரகஞ்செய
யுமுறைமை யுணர்த்துகின்றார்.

பரம்பிரமமிவனென்றும் பரசிவன்றானென்றும்
பரஞானமிவனென்றும் பராபரன்றானென்று, மரன்

றருசீர் நிலையெல்லா மிவனே யென்று மருட்குருவை வழிபட்டே யவனிவன்றாயே, யிரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்தவைதா னாக்குமாபோற் சிவமே யாக்கும் பரிசித்தும் சிந்தித்தும் பார்த்துந் தானே. (எ)

| | |
|---|---|
| (இ-ள்.) பரம்பிரம மிவனென்றும் | இந்த ஞானசாரியனே பரப்பிரம சுரூபனென்றும் |
| பரசிவன்றானென்றும் | பரமமான சிவனென்றும் |
| பரஞான மிவனென்றும் | மேலானசிவஞான மிவனேயென்றும். |
| பராபரன்றானென்றும் | இவனேபராபர வத்துவென்றும் |
| அரன தருசீர் நிலையெல்லாமிவனே யென்றும் | இவனு மவனும் பேதமறவிருக்கிற வைக்கியத்தினாலே யவனுக்குண்டாய சிறப்பியாதொன்றதுவெல்லா மிவனுக்கே யென்றும் |
| அருட்குருவை வழிபட்டே யவனிவன் றானேயே | இப்படிப் புத்திபண்ணிக கிருபையே வடிவாயிருக்கிற ஞானசாரியனை நாடோறும் வழிபட்டே யந்தச்சிவ னிந்த வாசாரிய மூர்த்தியைப் பேதமற வதிட்டித்துக்கொண்டு |
| இரங்கிய வாரண மாமை மீனண்டஞ் சினையை யியல்பினொடும் பரிசித்தும் நினைந்தும்பார்த்தும் | கோழியான திரக்கத்தா லண்டத்தைப் பரிசித்துக் கொண்டிருந்தும் ஆமையானது அதனையே நினைத்துக் கொண்டிருந்தும். முட்டையானத்தை யிருபாலுங் கூட்டுக. மீனானது சினையைப் பார்த்துக்கொண்டிருந்தும் |

| | |
|---|---|
| பரிந்திவைதா ரூக்குமாபோல் | சினைகத்துடனே யிவையிற்றைச் சொல்லிய முறையே தற்சொரூப மாக்குமாறு போல |
| சிவமே யாக்கும் பரிசித்துஞ் சிந்தித்துப் பார்த்துந்தானே. | ஞானசாரியனு மாணுக்கருட் சிலரைப் பரிசதீக்ஷையைச் செய்தும் சிலரை வாசக தீக்கையைச் செய்தும் சிலரைத் திருநோக்கென்னுந் தீக்கையைச் செய்தும் சர்வக்ஞனுக்குச் சமமானரூபத்தை யுண்டாக்குவன் எ-று. |

ஏகாரந் தேற்றம்.

சிவம் பிரமத்துக்கு பரமாதலாற் பரப்பிரம மென்றார்.

முத்தான்மாக்களுக்கும் சிவத்வ முண்டாதலாற் பரசிவமெனறார்.

அபரஞானத்துக்கு வேறுதலாற் பரஞானமென்றார்.

பரமாபகுண்டலிக்கு மேலாய்நிற்றலாற் பராபர மென்றார்.

இதற்கு விசுவசாரோத்தரம். (எ)

பன்னிருபனுவலும் பண்ணிப்பதப்பொரு - ளுன்னித் திரிவற வுணர்ந்தபெருமைய - ரன்னியமற்ற வமலனடிக்கீழ் - அழியாவின்பத் தனுபவரவரே - இழியாருலகினங் கியற்றார் தொழிலுந் - தீண்டிக்குளிகை செம்பு தன்களிம்பு - மாண்டறக்கனக மாமதுதனக்கே - மற்றொருசெம்பிற் களிம்பினைமாற்றும் - பெற்றியுங் களிம்பினைப் பெறுதலுமின்றே - யன்னநிலையா மமலனை யடைந்தா - ரன்னியமற்று மடைபவர்தாமே - திருத்துறையூர்ச் சைவன் திருந்துமறையூர் - விரித்துரைக்கும் வேதியன் மெய்கண்டான் - கருத்தி, னருணந்தி தேவ னருள்மொழியாய்ந்தே - யிருணந் தம்பாற் கண்டிலேமே.

சிவஞான சித்தியார் சுபக்ஷத்திற்
கோர்வகை யானே காண்டிகை முற்றும்.

மாசிலுபசார மஞ்சனம்பூ கந்த, நேசமிகு தூபமொளி நீர முத—தூசடைக்கா, யாடிகுடைசுவரி யாலவட்டம் விசிறி, யாடலொடு வாச்சியமீ ரெட்டாகும்.

நிலையடைய வணுதினமு நினையெனது மனமே, தொலைவிலரு டருமகனு மலமுமுறுதுயரு, மலைவுடைய யுணதுமட மதியுடையவருளு, முலைவின்மறை ஞானமுனி யுரைசெய்திரு மொழியே.

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

பரம்பிரம்ம மிவனென்றும் பரசிவன்றானென்றும் பரஞான மிவனென்றும் பராபரன்றானென்று மரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று மருட்குருவை வழிபடவே - சிவனுக்குச் சத்தியினாலும் விந்துவினாலும் அஞ்சவத்தை யுண்டு, அந்த அஞ்சவத்தையி னின்ற நிலைகளெல்லாம் இந்த வாசாரியனே என்று வழிபடுக. அவைகளாவன: குண நாமக் கிரியைகளொன்று மின்றி நிர்விகற்ப ஞானஸ்வரூபமாகப் பெரிதாய்நிறைந்து பரம்பிரமம், பின்பு பஞ்சசத்தி தோன்றிச் சிவனென நின்ற நாலுசத்திகளுந் தன்னிடத்தி லுண்டாகச் சுத்தமாக நின்றவவசரம் பரசிவன், ஞானசத்திமூர்த்திமானா யான்மாக்களுடைய கன்மங்களையு மதின் பக்குவங்களையும் பாரதந்திரியங்களையுங் கண்டு நிற்கு மவசரம் பரஞானம், பரமாகிய சுத்தாசுத்தமாயைக்கு மேலாய்க் கிரியாசத்தி மூர்த்திமானாய்ச் சுத்த மாயையில் காரியங்களை யுண்டாக்கு மவசரம் பராபரம், சதாசிவன் மகேசுவரன் ருத்திரனென்னு நாமங்களை யுடைத்தாய் சுத்தாத்துவ மிசிராத்துவ அசுத்தாத்துவ கிருத்தியங்களைப் பண்ணுவது அரன்றருஞ் சீர்நிலை. இவ்வாறு பஞ்சாவஸ் * தாருச்யூதனாய் நின்ற சிவ மிந்த வாசாரியனேயென்று கருணையினாலே கொண்ட குருமூர்த்தி சித்தத்தின் வழித்தாய் நடக்க

வே,—அவனிவன்றானாயே யிரங்கி - அந்தப் பரசிவ னிந்த வாசாரியனே யாகிக் கருணைபூர்த்து,—வாரண மாமை மீனண்டஞ் சினையை யியல்பினாலும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் பரிந்தவைதா னாக்குமாபோற் சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தானே - கோழியு மாமையு மீனும், முட்டையையுஞ் சினையையும் பரிவினாலே யணைத்தும் நினைந்தும் பார்த்து முதலிருந்து ஆவரணங்க ணீங்கத் தனது ஸ்வரூபமாக்கிக் கொண்டவைபோல வாசாரியனும் பரிசதீக்ஷையினாலே மாயையையும் மானச தீக்ஷையினாலே கன்மத்தையும் + சாட்சுஷ தீக்ஷையினாலே யாணவமலத்தையும் நீக்கிச் சிவமே யாக்குவன.

ஏகாரத்தினாலே சிவகுண சங்கிராந்தி சமுற்பத்தி சமாவேச சிவசமமென்னு மூர்த்திக ளல்லாமல் சிவதாதாத்மியமென்றதெனவறிக.

ஆக்குவனென்பதற்கு ஆக்குமென்பது வினைமுற்று.

* அநுச்யூதன - கலந்தவன, + சாட்சுஷம் - கண்ணினது.

ஒருமலமு மிருவினையுங் குணங்கள் மூன்று
முட்கரண மோர்நான்கும் புலன்க ளைந்தும்
வருபகைக ளோராறும் பவங்க ளேழு
மாய்ந்திடப்பே ரின்பமெட்டு மவ்வகைய தாகத்
தருவதுவாய்ப் பரஞான மூர்த்தி தானே
தாரணிமேற் குருவுருவந் தரித்து வந்தோன்
திருவருளாற் சிவஞான சித்தி யென்னுந்
தொன்னூலுக் குரைவிரித்தோன் றெரிந்த வாறே.

இரவியெழுந் திருளதனை நீக்குவபோ லென்று
மிறைஞ்சுமடி யவர்மனத்தி னிருளதனை நீக்கக்
கருணைபொறை தவந்தருமங் கல்விசிவ ஞானங்
காசினியி லொருவடிவாய்க் காட்டியபோற் றோன்றிப்

பரசமய கோடார்மே லின்றநெறி கொண்டு
பலகலையு முணர்ந்தசைவ பரிபால னாகித்
திரமருவு சிவஞான சித்திகரு பொருளைத்
தெளிந்திடவே விரித்துரைத்தான் சிவாக்கிர தேசிகனே.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

குருவினது பெருமை கூறுகின்றார்.

பரம் - சுத்த சிவன்றானென்றும்,—பிரமம் - சுத்தசிவ மத்திய நிர்த்தசிவம்,—இவன்றானென்றும்,—பரசிவன்றானென றும்-இருபர சிவனெனு மிலய சிவன்றானென்றும்,—பராபரன் றானென்றும் - அநாகத சிவ னென்னும் போக சிவன்றானென் றும்,—பரஞான மிவ னென்றும் - ஞானக் கிரியாப் பிரவிர்த்தி மானாகிய சதாசிவ னென்னு மதிகார சிவன்றானென்றும்,— அரன் றருஞ் சீர் நிலை யெல்லாம் - மகேசுரன உருத்திரன் மால் பிரமன முதற் சிவபேத மனைத்தும்,— இவன்றானென்றும்,—ஆரோபித சிவாத்து விதகதிறனாலே,—அருட்குருவை வழிபடவே - அந்தச்சிவ னிந்தக் குருதேகத்தி லாவேசித் திந்தக் குருவாயே கிருபா சமுத்திரனாகிய தேசிகனைப் பாவனைபண்ண,—அவனிவன்றானேயே - அந்தச் சிவன இந்தக் குருதேகத்தில் ஆவேசித் திந்தக் குருவாய்.

இரங்கி வாரணமுதற் பதப்பொருள் வெளிப்பொருள்.

இம் முத்திருட்டாந்த தாட்டாந்திகப் பொருளுணர்ந் தனைக்கு மிடத் துயிர்க்கியற்கையாய் மலத்தின் மறைந்த சிவத் துவஞ் சிவனால் விளங்குமென்னும் பொருள் விளங்கிற்று.

சொல்லி னவிற் றரிசறுஞ் சோத்திரத்
தொல்லு மேற்சிவ ஞான முதித்திடுஞ்

செல்லு மெய்யரு ணந்திசெய்சித் திக்கு
நல்ல ஞான ப்ரகாச னவிற்றுரை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

சிவபேதமனைத்துங் குருமூர்த்தமேயெனத் தேறி ஞானா
சாரியனை வழிபடுக, அங்ஙனம் வழிபடப்பெறின் சிவன் இக்
குருவை யாவேசித்து நின்று நாடோறுஞ் செய்யும் பரிசமுதலி
யமூன்றானும் அவ்வுயிரைத் தன்வண்ணமாகச் செய்தருளுவ
னென்பது.

அவ்வாறேத்தினார்க்கு வரும் பயன் கூறியவாறு.

பரம்பிரமமென்றது சொரூப சிவத்தையெனவும், பரசிவ
னென்றது தடத்த சிவத்தையெனவும், பரஞானமென்றது அரு
பெயரான் அதனையுடையாரை யெனவும், பராபரனென்றது ஏ
னைத்தாபர மூர்த்தத்தையெனவும், அரனுருஞ்சீர் நிலையென்ற
து அறுபத்துமும்மை நாயனமார் முதலிய சிவபத்தர் பொருட்
டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்கள்
எல்லாவற்றினையு மெனவும் கொள்க.

பரஞான மிவனென்றும் பராபரன்றானென்றும் வழிபடு
த லதிகாரப் பட்டமையின் ஏனையவு முடன்கூறினார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு:

——0——

சிவனே யாசாரியனென்றும் ஆசாரியனை வழிபாடுசெய்யப்
பரமேஶ்வர னிவனைத் தானாக்குவ னென்று மே லருளிச்செய்
கிறார்.

பரம்பிரமமிவனென்றும் - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற
பர மிந்த வாசாரியனென்றும்,—பரசிவனானென்றும்-எல்லால்

த்தற்கு மேலான சிவ னிந்தவாசாரியனென்றும்,—பரஞானமி வனென்றும் - மேலானஞானமு மிந்த வாசாரியனே யென்றும்,—பராபரன்றானென்றும் - எங்கும் பரிபூரண ஞான பரமசிவனே இந்த வாசாரியனே யென்றும்,—அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனேயென்றும் - பரமேஸ்வரனுக் குண்டாகப்பட்ட சிறப்டையுடைய நிலைமைக ளெல்லா மிந்த வாசாரியனே யென்றும்,—அருட்குருவை வழிபடவே யவனிவன்றானேயே யிரங்கி - ஞானாசாரியனை வழிபடவே அந்தப் பரமேஸ்வர னிந்தவாசாரியன்றானேயாய் கிருபை ஜனித்து,—வாரண மாமைமீ னண்டஞ் சினையை யியல்பினொடும் பரிசித்தும் நினைந்தும்பார்த்தும்- நிரைநிறை - கோழியு மாமையு மீனு முட்டையுஞ் சினையையு முறைமையாக, கோழி தன்னுடைய முட்டையைப் பரிசித்தும், ஆமை தன்னுடைய முட்டையைத் தூரதேச கிடந்து நினைத்தும், மீனானது சினையைப்பார்த்தும்,—பரிச்திலைதானுக்குமாபோல - முன் சொன்ன மூன்றும் பிரிப்பட்டு, கோழிமுட்டையைக் கோழியாக்கின தன்மைபோலவும், ஆமை முட்டையை யாமையாக்கின தன்மைபோலவும், மீன் சினையை மீனாக்கின தன்மைபோலவும்,—சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தானே-ஸ்ரீபாதங்களாலே பரிசித்தும், திருவுளம்பற்றியும், திருக்கண்சாத்தியும் இந்த வான்மாவை யந்தச் சிவமேயாக்குவ னிந்த வாசாரியன்.

ஞானயோகத்தால் பரம் பிரமமென்கிற திருவிருத்த மூன்றுக்கும் பிரமாணம் சிவஞானபோதம், கஉ-சூ, எ-வெ, “ தன்னை யறிவித்துத் தான்றானாச், செய்தானைப், பின்னைமறத்தல் பிழைபலது—முன்னவனே, தானேதானாச்செய்துந் தைவமென்றுந் தைவமே, மானே தொழுகை வலி” எனனுமது கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, அந்த உண்மையைத் தரிசித்த ஜீவன்முத்தராயுள்ளவர்கள் பரப்பிரமமுதலான திருமேனிகளெல்லாமிந்த வாசாரியன் றானேயென்று தேகாந்தமுள்ளளவுங் குரு வழிபாடுசெய்து வரக்கடவர்களென்றும் அப்படி செய்யவே கோழியு மாமையு மீனு மண்டத்தையுஞ் சினையையும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானாக்கின முறைமைபோல விந்த வான்மாவையும் ஆசாரியர் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தற் சொரூபமாகிய சிவமே யாக்குவனென்னு முறைமையையு மறிவித்தது.

சத்து மசத்துஞ் சதசத்துஞ் சத்திய மாகிநிற்குஞ்
சித்தன் றிருவம் பலவாண னென்னுளஞ் சேர்ந்தனனாற்
சுத்தம் பயின்ற பதிபசுபாசத்தைச் சொல்லுஞ் சதத
மத்த மதற்கு ளறுபோகங் காண்டற் சரிதல்லவே.

செய்ய சிவஞான சித்திக் கடற் பொருட்கு, உய்யு நெறி தோன்ற வுளங்கொண்டு—மெய்யுயிரை, யூட்டுநெறி தோன்ற வுரைபகர்ந்தான் ஞானவழி, காட்டு நிரம்ப வழகன.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

பரம்பிரம மிவனென்றும் - சொரூபசிவமே யிவனென்றும்,—பரசிவன்றானென்றும் - தடத்தசிவமே யிவனென்றும்,—பரஞானமிவனென்றும் - பரஞானத்தையுடையா னிவனென்றும்,—பராபரன்றானென்றும் - ஏனைத் தாபரமூர்த்தங்களே யிவனென்றும்,—அரன்றருசீர் நிலையெல்லா மிவனேயென்றும் - அறுபத்துமூன்று நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையு மூர்த்தங்களெல்லா மாகிய சிவபேதமனைத்தும் குருவெனத்தேறி,—அருட்குருவை வழிபடவே - ஞானாசாரியனை வழிபடுக. அங்ஙனம் வழிபடப் பெறில்,—அவனியன்றானேயே - சிவன் இக்குருவை யாவேசித்து

நின்று,—இரங்கிய வாரணமாமை மீனண்டஞ் சினையை - இரக்க்முற்ற கோழி ஆமை மீன் முறையே முட்டையினை,— இயல்பிறொடும் பரிச்சித்து நினைந்தும் பார்த்தும் பரிந்திவைதா ஞக்குமாபோல்-இயல்பாகவே தீண்டியும் கருதியும் நோக்கியும் பரிவுற்றுத் தன்வண்ணமாகச் செய்யுமாறுபோல,—தானேபரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்தும் சிவமேயாக்கும் - தா ஞடோறும் செய்யும் பரிசமுதலிய மூன்றும் அவ்வுயிரைத் தனவண்ணமாகச் செய்தருளுவன் என்பதாம்.

அவ்வாறேத்தினர்க்கு வரும்பயன் கூறியவாறு.

இன்னுமிந் நூலின்கண் விரித்துக் குருமுகமாய்க்கேட்டறிதற் பாலன அநேகமுள,அவை கைலாய பரம்பரை மெய்கண்டசந்ததித் திருவாவடுதுறை நமச்சிவாய மூர்த்தி மரபிலெழுந்தருளி விளங்குகின்ற அம்பலவாண தேசிகர் திருவடியைப்பெற்ற அநுபவமுடையவர்களை முறையில் வழிபட்டுக் கேட்டறிக.

☞ கஉ - சூ, புறநடை முடிந்தது.

☞ பன்னிரண்டாஞ் சூத்திர முற்றிற்று.

"கருதிடுவங் கணபதி கைங்கரமு மிருபதமும்"
என்ற பன்னிரண்டாஞ் சூத்திரம்
ஏழும் முற்றிற்று.

"சிந்தையிவை மூவொன்பதொடு மூந் நூறுஞ்
சிவஞான சித்திசுவ பக்கமெனத் தெளிமே"
என்னும் சிவஞான சித்தியார் சுபக்ஷத்
திருவிருத்த முன்னூற்றிருபத்தேழும்
உரையுடன் முற்றுப் பெற்றது.

ஆக பாயிரமுட்பட - கூஉஎ.

உ

சிவமயம்.

# சிவஞான சித்தியார் சுபக்ஷம்

## பாயிர முதல், ௧௨-ஞ் சூத்திரவரைச் செய்யுளகராதி.



| அ | ப | சூ | செ. |
|---|---|---|---|
| அகலியை | ௯௮௨ | ௨ | ௪௪ |
| அங்கி | ௨௪௩௧ | ௧௰ | ௬ |
| அசித்தரு | ௧௫௯௭ | ௪ | ௨௰ |
| அசித்தெனி | ௧௫௬௫ | ௪ | ௧௪ |
| அஞ்செழுத் | ௨௩௪௩ | ௯ | ௮ |
| அண்டசஞ் | ௧௩௩௰ | ௨ | ௮௯ |
| அத்துவா | ௬௩௬ | ௧ | ௫௬ |
| அநாதியுட | ௨௪௬௧ | ௧௧ | ௩ |
| அநாதியே | ௨௰௬ | அள | ௧௩ |
| அந்தரி | ௨௩௬௨ | ௯ | ௧௰ |
| அயனரி | ௧௫௧௪ | ௪ | ௪ |
| அயன்றனை | ௬௬௩ | ௧ | ௬௰ |
| அரசனுஞ் | ௯௧௮ | ௨ | ௩௨ |
| அரனடி | ௯௰௨ | ௨ | ௨௯ |
| அரன்விதி | ௧௰௨௰ | ௨ | ௫௧ |
| அரிசனம் | ௧௪௫௯ | ௨ | ௯௫ |
| அருந்தின்ப | ௧௬௧ | அள | ௭ |
| அருமறை | ௨௰௪௰ | ௮ | ௧௪ |
| அருவமோ | ௫௩௪ | ௧ | ௩௮ |
| அருவவிகா | ௧௫௬௨ | ௪ | ௧௩ |

| | ட | சூ | செ. |
|---|---|---|---|
| அருவினி | ௪௬௰ | ௧ | ௨௭ |
| அருவுருவீ | ௪௬௮ | ௧ | ௨௮ |
| அருவுருவெ | ௧௫௫௨ | ௪ | ௧௧ |
| அருளது | ௧௭௮௭ | ௫ | ௯ |
| அருளினலா | ௮௩ | பா | ௫ |
| அருளினு | ௯௨௪ | ௨ | ௩௩ |
| அவ்வவ | ௯௯௧ | ௨ | ௪௬ |
| அவ்வுட | ௧௫௰௭ | ௪ | ௩ |
| அழிந்தபி | ௩௬௰ | ௧ | ௧௧ |
| அழிப்பிளைப் | ௫௨௮ | ௧ | ௩௭ |
| அழிவிலா | ௧௯௬௪ | ௮ | ௬ |
| அளவை | ௯௩ | அள | ௧ |
| அறிகரு | ௧௬௮௫ | ௪ | ௩௫ |
| அறிந்திடுமோ | ௧௭௫௩ | ௫ | ௩ |
| அறிந்திடும்பி | ௧௪௮௩ | ௩ | ௪ |
| அறிபொரு | ௧௮௨௬ | ௬ | ௬ |
| அறியாமை | ௨௧௮௪ | ௮ | ௩௰ |
| அறிவதைம் | ௧௪௭௫ | ௩ | ௩ |
| அறிவரிய | ௨௫௬௨ | ௧௨ | ௩ |
| அறிவிக்க | ௧௮௭௮ | ௭ | ௪ |
| அறிவிச்சை | ௧௫௨௭ | ௪ | ௬ |

| | ப—கு-செ, | | | | ப—கு-செ. | | |
|---|---|---|---|---|---|---|---|
| உயிரினை | ௧௫௭௦ | ௬ | ௧௫ | என்னையிப் | ௯௧ | பா | ௨ |
| உயிரிரேறு | ௧௬௬ | அள | ௯ | ஏ | | | |
| உயிரொன | ௧௬௯௫ | ௩ | ௧ | ஏதுமுன் | ௧௮௧ | அள | ௧௦ |
| உருமேனி | ௯௩௦ | ௧ | ௫௫ | ஐ | | | |
| உருவருள் | ௫௮௬ | ௧ | ௬௭ | ஐந்துசாக | ௧௯௭௫ | ௬ | ௩௬ |
| உருவினி | ௧௫௮௦ | ௬ | ௧௭ | ஐந்துசுத்த | ௧௧௮௫ | ௨ | ௭௦ |
| உருவினை | ௧௭௦௯ | ௬ | ௩௯ | ஒ | | | |
| உருவுயி | ௧௫௬௬ | ௬ | ௯ | ஒருகோட்டன் | ௪௯ | பா | ௦ |
| உருவொடு | ௭௯௫ | ௨ | ௩ | ஒருபுல | ௪௩௫௧ | ௨ | ௯௪ |
| உரைதரு | ௪௮௯௫ | ௮ | ௨ | ஒருபொரு | ௩௩௭ | ௧ | ௭ |
| உரைத்த | ௫௦௬ | ௧ | ௩௬ | ஒருவனே | ௭௧௨ | ௧ | ௯௭ |
| உலகமே | ௧௭௭௫ | ௫ | ௭ | ஒருவனோ | ௨௮௯ | ௧ | ௧ |
| உலகினிற் | ௫௯௦ | ௧ | ௬௩ | ஒழுக்க | ௮௯௯ | ௨ | ௨௩ |
| உலகினை | ௫௯௫ | ௧ | ௬௮ | ஒன்றதாய் | ௪௨௭௩ | ௨ | ௮௦ |
| உலகுடல் | ௮௯௨ | ௨ | ௨௨ | ஒன்றதாயிச் | ௯௮௬ | ௧ | ௯௩ |
| உலகெலா | ௭௪௧ | ௨ | ௧ | ஒன்றெனெ | ௭௫௫ | ௨ | ௨ |
| உள்ளது | ௩௩௨ | ௧ | ௯ | ஒன்றேனு | ௪௮௬௫ | ௯ | ௯ |
| உள்ளுணர் | ௬௨௩ | ௧ | ௨௧ | ஒன்றொடொ | ௯௦௯ | ௧ | ௫௧ |
| எ | | | | ஓ | | | |
| எங்குந்தானி | ௨௬௯௭ | ௧௧ | ௮ | ஓசைநற் | ௧௧௬௫ | ௨ | ௯௪ |
| எங்குந்தானெ | ௨௨௯௮ | ௮ | ௩௮ | ஓதியுணர் | ௧௯௬௩ | ௮ | ௫ |
| எங்குந்தான | | | | ஓதுசமய | ௨௦௩௨ | ௮ | ௧௩ |
| வியாபி | ௧௫௮௫ | ௬ | ௧௮ | ஓரிடம் | ௩௪௯ | ௧ | ௯ |
| எல்லாமாய் | ௧௨௯௮ | ௨ | ௭௯ | க | | | |
| எவ்விடத்து | ௨௬௮௯ | ௧௧ | ௭ | கண்டபொரு | ௪௨௩ | அள | ௩ |
| எழுமுடல் | ௧௦௨௯ | ௨ | ௫௨ | கண்டவிவை | ௨௩௩௨ | ௯ | ௭ |
| என்னுடல் | ௧௯௨௫ | ௬ | ௨௫ | கண்டிடுங் | ௨௩௧௯ | ௯ | ௫ |

சிந்தியார் சுபக்ஷ

அகராதி முற்றும்

முற்றிற்று.

———○———

இதிலுள்ள குறிப்பெழுத்துக்கள்.

ப—பக்கம்

சூ—சூத்திரம்

செ—செய்யுள்

பா—பாயிரம்

அள—அளவை